## பதினேழாம் வார்த்தை

a எங்களாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே அம்மங்கியம்மாள் சென்று தண்டனிட்டு, 'அடியேனுக்கு b த₃ர்ஶநமிருக்கும்படி அருளிச்செய்ய வேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய; எங்களாழ்வானும், c த₃ர்ஶநாந்தரிகளை நிரஸிக்கவோ ?, ஸ்வ b த₃ர்ஶநஸ்த₂ாபநம் பண்ணவோ?, b த₃ர்ஶநமிருக்கும்படி கேட்கவோ ? என்று அருளிச்செய்ய ; இவரும், "c த₃ர்ஶ நாந்திரிகளை நிரஸிக்கவும் ஸ்வ b த₃ர்ஶநஸ்த₂ாபநம் பண்ணவும் தேவரீர் எழுந்தருளியிருந்தீர் ; அடியேனுக்கு b த₃ர்ஶநமிருக்கும்படி அருளிச்செய்யவேணும்" என்ன; எங்களாழ்வான், அம்மங்கியம்மாளுக்கு அருளிச்செய்த ஸாரார்த்த₂சதுஷ்டயம்;—

எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிருக்கும் நம் பூர்வாசார்யர்கள், தங்களுக்குத் d தஞ்சமாகவும் e உத்தாரகமாகவும் போ₄க்₃யமாகவும் அநுஸந்தி₄த்தும். உபதே₃ஶித்தும் போருவது f நாலிரண்டு அர்த்த₂முண்டு. அவையாவன-ஸ்வரூபஜ்ஞாநமென்றும், ஸ்வரூப யாத₂ாத்ம்யஜ்ஞாநமென்றும், விரோதி₄ஜ்ஞாநமென்றும், விரோதி₄யாத₂ாத்ம்யஜ்ஞாநமென்றும், ப₂லஜ்ஞாநமென்றும், பலயாத₂ாத்ம்ய ஜ்ஞாநமென்றும், உபாயஜ்ஞாநமென்றும், உபாயயாத₂ாத்ம்ய ஜ்ஞாநமென்றும்

---

**பதினேழாம் வார்த்தை**

a எங்களாழ்வான் - திருவெள்ளறையில் பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் அவதரித்தவராய், அஸ்மத்குலகூடஸ்த₂ராய், 'விஷ்ணுசித்தர்' என்னும் திருநாமமுடையவராய், எம்பெருமானாராலே 'எங்களாழ்வான்' என்று ஆழ்வானுக்குத் துல்யராக அபி₄மானிக்கப்பெற்று, 74 ஸிம்ஹாஸநாதி₄பதிகளில் ஒருவராக நியமிக்கப்பெற்றவராய், 'தினவுகெடச் சொல்லுவர் திருவெள்ளறைச் சோழியர்' என்று புகழ்பெற்றவர். b த₃ர்ஶனம் - மதம். c த₃ர்ஶநாந்தரிகள் - பிற மதங்களைச் சேர்ந்தவர்கள். d தஞ்சம்-இங்கிருக்கும் நாள் காலக்ஷேபத்துக்கு உறுப்பானது. e உத்தாரகம்-பரமபுருஷார்த்த₂த்தை அளித்து உய்விப்பது. f நாலிரண்டு அர்த்த₂ம்-நாலு ஜ்ஞானங்களும் நாலு யாத₂ாத்ம்ய ஜ்ஞானங்களுமாக எட்டு அர்த்த₂ங்கள்.

இதில், ஸ்வரூபஜ்ஞாநமாவது - ஜ்ஞாநாநந்த₃ங்களும் g புற விதழ் என்னும்படி ப₄க₃வத₃நந்யார்ஹ ஶேஷத்வமே ஸ்வரூப மென்றிருக்கை. ஸ்வரூபயாத₂ாத்ம்யஜ்ஞாநமாவது - ப₄க₃வச் சே₂ஷத்வமும் புறவிதழ் என்னும்படி ப₄ாக₃வதஶேஷத்வமே ஸ்வரூபமென்றிருக்கை. விரோதி₄ஜ்ஞாநமாவது - பரமப₄ாக₃வத h விஶ்லேஷத்திலே நெஞ்சழியாத நினைவு. விரோதி₄யாத₂ாத்ம்ய ஜ்ஞாநமாவது - வருந்தி ஒரு ப₄ாக₃வதனோடே i ஸம்ஶ்லே ஷிக்கத்தொடங்கி, அவன்பக்கல் j தோ₃ஷத₃ர்ஶநம் பண்ணுகை. k ப₂லஜ்ஞாநமாவது - ஒரு ப₄ாக₃வதன் நியமநத்தை வெறுத்தல் * பொறுத்தல் செய்கையன்றிக்கே, விஷய ப்ரவணனுக்குப் படுக்கைத்தலையில் விஷயபாருஷ்யம் போ₄க்₃யமாமாபோலே யாகிலும் போ₄க்₃யமென்றிருக்கை. l ப₂லயாத₂ாத்ம்யஜ்ஞாந மாவது - ஆர்த்தப்ரபத்தியைப் பண்ணி அக்கரைப்பட ஒருப் பட்டிருக்கச்செய்தே, மாதாபிதாக்களுங்கூட அநாத₃ரிக்கும்

g புறவிதழ் - ஒரு மலருக்கு வெளியிலிருக்கும் இதழ்கள்போலே ப₃ஹிரங்க₃மாயிருப்பவை ; ஶேஷத்வம் உள்ளிதழ்போல் இருப்பது; ஜ்ஞாநாநந்த₃ங்களைக்காட்டிலும் அந்தரங்க₃மாயிருப்பது என்று கருத்து. h விஶ்லேஷம் - பிரிவு. i ஸம்ஶ்லேஷிக்க - உறவாட. j தோ₃ஷத₃ர்ஶனம் பண்ணுகை - குற்றங்களைக் காண்கை. k ப₂ல ஜ்ஞானமாவது...போ₄க்₃யமென்றிருக்கை-l ஒரு பரமப₄ாக₃வதர் நமக்கு ஒரு நியமனத்தைச் செய்தால், அது நம் மனத்துக்கு ஏற்காமை யாலே அந்த நியமனத்தை நாம் வெறுத்து அதை வெளிக்காட்டுவ துண்டு. வெறுப்பை உள்ளேயே அடக்கிக்கொண்டு பொறுத்திருப் பதுமுண்டு. ப₂லஜ்ஞானமுள்ளவன் இவ்விரண்டையும் செய்ய மாட்டான்; காதலியோடு புணரும்போது அதில் பல தாழ்ச்சிகள் இருந்தபோதிலும் அவற்றைப் பொறுத்துக்கொண்டு, அவற்றை இனியவையாகவும் நினைப்பதுபோலேயாவது தம் மனத்துக்கு ஏற்காத அந்த ப₄ாக₃வத நியமனத்தை இனியது என்றிருப்பான் என்று கருத்து. l ப₂லயாத₂ாத்ம்யஜ்ஞானமாவது...ஒருப்படுகை - ஸம்ஸாரத் தில் பொருந்தாமையாலே " கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ " [திருவாய் 6-9-9] என்று ஆழ்வாரைப்போலே ஆர்த்தி விளைந்து உடனே எம்பெருமானைப் பெறவேணும் என்று ஆர்த்த ப்ரபத்தி செய்ய ஸித்₃த₄மாயிருக்கும்போதும், தாய்தந்தையராலும்

 * (பா) பெருத்தல்.

படியான ஆர்த்தியையுடைய ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டால், அவர்களுடைய ரக்ஷணத்துக்கு உறுப்பாக இங்கேயிருக்கையிலே ஒருப்படுகை. உபாயஜ்ஞாநமாவது - ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநம்; ஸம்₃பந்த₄ஜ்ஞாநந்தான் - ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநமென்றும், ஸம்ப₃ந்த₄ யாத₂ாத்ம்யஜ்ஞாநமென்றும், ஸம்ப₃ந்த₄ ஸ்வரூப ஜ்ஞாநமென்றும், ஸம்ப₃ந்த₄ஸ்வரூப யாத₂ாத்ம்யஜ்ஞாநமென்றும் நாலு வகையாயிருக்கும். இதில் ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநமாவது - அவனுடைய m நிருபாதி₄கஶேஷித்வத்தையும், தன்னுடைய நிருபாதி₄க ஶேஷத்வத்தையும் தெளிய அறிகை. n ஸம்ப₃ந்த₄ யாத₂ாத்ம்ய ஜ்ஞாநமாவது - அவனுடைய நிருபாதி₄கஶரீரித்வத்தையும், தன்னுடைய நிருபாதி₄க ஶரீரத்வத்தையும் தெளிய அறிகை. o ஸம்ப₃ந்த₄ ஸ்வரூபஜ்ஞாநமாவது - அவனுடைய நிருபாதி₄க த₄ர்மித்வத்தையும், தன்னுடைய நிருபாதி₄க த₄ர்மத்வத்தையும் தெளிய அறிகை. p ஸம்ப₃ந்த₄ ஸ்வரூப யாத₂ாத்ம்ய ஜ்ஞாநமாவது - த₄ர்மி த₄ர்மங்களினுடைய

கைவிடப்பட்ட அநாத₂ர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டால் மோக்ஷமடையவேண்டும் என்னும் பேரார்வமும் அடங்கப்பெற்று, அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை ரக்ஷிப்பதற்காகத் தனக்குப் பொருந்தாத இந்த ஸம்ஸாரத்திலேயே இருக்க உறுதிகொள்பவன் ப₂ல யாத₂ாத்ம்யஜ்ஞானம் (ப₂லத்தைப்பற்றிய உண்மையறிவு) உடையவன் என்று கருத்து. ப₄க₃வத₃நுப₄வ கைங்கர்யங்களைக் காட்டிலும் பா₄க₃வதாநுப₄வ கைங்கர்யங்களே பரமப்ராப்யம் என்றபடி. m நிருபாதி₄க - ஒரு காரணத்தை முன்னிடாத; அதாவது-இயல்வான என்றபடி. n ஸம்ப₃ந்த₄யாத₂ாத்ம்யஜ்ஞானம் - எம்பெருமான் இயல்வான ஶரீரியாயிருந்துகொண்டு ஶேஷியாயிருப்பவன் என்றும், தான் இயல்வான ஶரீரமாயிருந்துகொண்டு ஶேஷமாயிருப்பவன் என்றும் தெளிவாக அறிவது உறவை உள்ளபடி அறிவதாகும். o ஸம்ப₃ந்த₄ ஸ்வரூபஜ்ஞானம் - நம்முடைய ஶரீரம் நமக்கு ஶரீரமாயிருந்தபோதிலும், என்றும் நம்மைவிட்டுப் பிரிக்கமுடியாத த₄ர்மமாய் (ப்ரகாரமாய்) இராது. நாமும் அதற்கு த₄ர்மியாய் (ப்ரகாரியாய்) இல்லை. நமக்கும் எம்பெருமானுக்குமுள்ள ஸம்ப₃ந்த₄ஸ்வரூபம் இத்தகைய ஶரீர ஶரீரிகள்போலிருப்பது மாத்திரமல்லாமல், த₄ர்மத₄ர்மிகளைப்போலும் இருப்பது என்றறிவது - ஸம்ப₃ந்த₄ஸ்வரூபஜ்ஞானம் என்று கருத்து. p ஸம்ப₃ந்த₄ ஸ்வரூப யாத₂ாத்ம்யஜ்ஞானம் - உலகில் த₄ர்மங்கள்

ஐக்யத்தைத் தெளிய அறிகை; அதாவது - விஶிஷ்ட வேஷத்திலே அவனொருவனுமேயாய், தான் இல்லையென்னலாம்படியிருக்கை. q உபாயயாதா₂த்ம்ய ஜ்ஞாநமாவது - தந்நிஷ்டை₂. அதாவது - ஶேஷத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும், போ₄க்த்ருத்வத்தில் கர்த்ருத்வ நிவ்ருத்தியும் பிறக்கை. ஶேஷத்வத்தில் கர்த்ருத்வமாவது - r ராஜாஶ்ரயத்தையிட்டு ஜக₃த்தைப் பீடி₃க்கும் மந்த்ரிகளைப்போலே, s ப₄க₃வத₃ாஸத்தியையிட்டு t ஸதா₃சாரத்தை நெகிழ்கை; அதாவது - ஶப்₃த₃ாதி₃விஷயஸ்பர்ஶத்தில் அச்சமும், ப₄க₃வத்₃ப₄ாக₃வதகைங்கர்ய விஶ்லேஷத்தில் ஆர்த்தியும் விளையாதொழிகை; தந்நிவ்ருத்தியாவது - u ப்ராமாதி₃கமான விஷயத்திலே அச்சமும், ப்ராமாதி₃கமான கைங்கர்யவிஶ்லேஷத்தில் ஆர்த்தியும் விளைகை. ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது - நாம் ஜ்ஞாதாவாகையாலேயன்றோ நம்மை அவன் அங்கீ₃கரித்தது

---

த₄ர்மியைவிட்டுப் பிரிக்கமுடியாவிடிலும், த₄ர்மியைக் காட்டிலும் தனித்து அறியலாம்படியிருக்கும். உதா₃ஹரணமாக வெண்மை நிறம் வஸ்த்ரத்தைவிட்டுப் பிரியாத த₄ர்மமாயினும், பால் முதலான மற்றைப் பொருள்களிலும் அது இருக்கையாலே, த₄ர்மியாகிற வஸ்த்ரத்தைவிட்டுப் பிரித்து அறியலாம்படியிருக்கும். இங்கு எம்பெருமானுக்கு ப்ரகாரமான நாம், வேறொன்றுக்கும் ப்ரகாரமாயில்லாமையாலே, உலகிலுள்ள ப்ரகாரங்களைப்போலே அவனைவிட்டுப் பிரித்தறியக் கூடியவர்களல்ல. ஆகையால் 'விஶிஷ்டவேஷத்திலே அவனொருவனே இருக்கிறான். அவனைப் பிரிந்து நமக்கு நிலையில்லை' என்றறிவது ஸம்ப₃ந்த₄ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவது என்று கருத்து. ஆக, இத்துடன் உபாயமான எம்பெருமானைப் பற்றிய ஜ்ஞானத்தில் நாலு வகை விளக்கப்பட்டது. q உபாய யாதா₂த்ம்யஜ்ஞானமாவது - முற்கூறிய உபாயமான எம்பெருமானை உட்புகுந்து அறிவது. r ராஜாஶ்ரயம் - அரசனை அண்டைகொண்ட ப₃லம். s ப₄க₃வத₃ாஸத்தி - ப₄க₃வானை அண்டைகொண்ட ப₃லம். t ஸதா₃சாரம் - நல்லோர்களின் ஒழுக்கம்; அதாவது - ஶப்₃த₃ம் முதலான விஷயங்களோடு தொடர்பு ஏற்பட்டால் ப₄யப்படுவதும், ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யமில்லாமற்போனால் வருந்துவதும். u ப்ராமாதி₃கமான விஷயத்திலே - கவனக்குறைவினால் ஶப்₃த₃ாதி₃

என்று தன் ஜ்ஞாநத்தையிட்டு v இறுமாக்கை; தந்நிவ்ருத்தி யாவது - தே₃ஹாத்மாபி₄மாநிகளிலும் கடையாய், w அசித் கல்பனாய், x முதலழித்துக்கொண்டு அஸத்கல்பனாய்க்கிடந்த என்னை, இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே, y கருந் தறையிலேபுகுந்து, ஆத்மஜ்ஞாநத்தைப் பிறப்பித்து அங்கீ₃கரிப் பதே! என்று க்ருதஜ்ஞனாய்ப்போருகை. கர்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது - நாம் நிஷித்₃த₄ங்களை விட்டு விஹிதங்களைப் பற்றுகையாலேயன்றோ நம்மை அவன் அங்கீ₃கரித்தான் என்று தன் ப்ரவ்ருத்திநிவ்ருத்தியையிட்டு இறுமாக்கை; தந்நிவ் ருத்தியாவது - நம் வ்யாபாரங்கள் ஒன்றுமில்லை, மரப்பாவையை ஆட்டுவாரைப்போலே, தானே நிஷித்₃த₄ங்களினின்றும் விடு வித்து விஹிதங்களைப் பற்றுவித்தான் என்றிருக்கை. போ₄க்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது - நாம் அவனுக்கு அடிமை செய்கிறோம் என்றிருக்கை; தந்நிவ்ருத்தியாவது- z தன் கையாலே தன் மயிரை வகுத்தால் அந்யோந்யம் உபகார ஸ்ம்ருதி பண்ணாதாப்போலே, அவயவபூ₄தனான ஆத்மா அவயவியான எம்பெருமானுக்கு அடிமைசெய்கிறான் என் றிருக்கை. இவ்வர்த்த₂ங்கள் ஓராசார்யன் அங்கீ₃கரித்த முமுக்ஷுவுக்கு ஜ்ஞாதவ்யம்.

## பதினெட்டாம் வார்த்தை

a பரஸ்வரூபமிருக்கும்படியென்?, பரஸ்வரூபயாதா₂த்ம்ய மிருக்கும்படியென்?, ஸ்வஸ்வரூபமிருக்கும்படியென்?, ஸ்வஸ்வ

---

விஷயஸ்பர்ஶம் ஏற்படும்போது. v இறுமாக்கை-க₃ர்வங்கொள்ளுகை. w அசித்கல்பன் - ஏறக்குறைய அசேதனத்தையொத்தவன். x முத லழித்துக்கொண்டு - ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டு. y கருந்தரை- தரிசுநிலம்; (இங்கு) ஜ்ஞானம் வெளிப்படாத ஆத்மஸ்வரூபம். z தன் கையாலே ..பண்ணாதாப்போலே - ஒரு மனிதன் தன் கையாலே தன் மயிரை வாரிவிட்டால் அந்தக் கைக்கு அவனோ, அவனுக்கு அந்தக் கையோ, கைக்கு மயிரோ நன்றி காட்டவேண்டிய அவஶ்ய மில்லாததுபோலே, எம்பெருமான் தனக்கு கைங்கர்யம் செய்யும் சேதனனுக்கு நன்றி காட்டவேண்டிய அவஶ்யமில்லை என்று கருத்து.

ரூபயாதா₂த்ம்யமிருக்கும்படியென் ?, ஸ்வரூபாநுரூபமான ப₂லஸ்வரூபமிருக்கும்படியென் ?, ப₂லஸ்வரூபயாதா₂த்ம்யமிருக்கும்படியென் ?, தத்₃விரோதி₄ஸ்வரூபமிருக்கும்படியென் ?, விரோதி₄ஸ்வரூபயாதா₂த்ம்யமிருக்கும்படியென் ?, தந்நிவ்ருத்திக்கும் ப₂லஸித்₃தி₄க்கும் உபாய ஸ்வரூபமிருக்கும்படியென்?, உபாயஸ்வரூபயாதா₂த்ம்யமிருக்கும்படியென் ? என்னில் ;— b பரஸ்வரூபம் - சேதநாசேதநாத்மகமான உப₄யவிபூ₄திக்கும் நியந்தாவாயிருக்கும் நியந்த்ருத்வம் ; பரஸ்வரூப யாதா₂த்ம்யம் "அது நமது விதிவகை" என்கிறபடியே அர்ச்சாவதார பர்யந்தமான ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் ; இனி, பரஸ்வரூப c ப்ரதிஸம்ப₃ந்தி₄யான d ஸ்வஸ்வரூபமாவது - ப்ரக்ருதே:பரம், ஜ்ஞாநாநந்த₃லக்ஷணம், நித்யம், ஏகரூபம், ஜ்ஞாநகு₃ணகம், ஸ்வயம்ப்ரகாஶம், ஈஶ்வரஶேஷம், அநந்யார்ஹம், ஸ்வ

---

பதினெட்டாம் வார்த்தை

a அர்த்த₂பஞ்சகத்தின் ஸ்வரூபமும், அர்த்த₂பஞ்சகத்தின் ஸ்வரூபயாதா₂த்ம்யமும் ( வடிக்கட்டின நிலையும் ) இவ்வார்த்தையில் விவரிக்கப்படுகிறது. b பரஸ்வரூபம்...பாரதந்த்ர்யம் - உப₄யவிபூ₄திக்கும் நியந்தாவாயிருக்கை பரஸ்வரூபம். அதன் யாதா₂த்ம்யம் ( எல்லைநிலம் ) — தன்னுடைய எல்லா நிலைகளும் அர்ச்சகபராதீ₄னமாயிருக்கும் அர்ச்சாவதாரத்தில் நிறைந்து விளங்கும் ஆஶ்ரித பாரதந்த்ர்யம். இப்பாரதந்த்ர்யம் ஸ்வாதந்த்ர்யத்தின் எல்லை நிலமாகிறது ; " அது நமது விதிவகையே " [திருவாய் 10-6-1] என்கிற பாசுரத்தில் ஸர்வநியந்தாவான ஸர்வேஶ்வரன் தம் விதி₄யை (நியமனத்தை) எதிர்பார்த்து நிற்கிறான் என்று ஆழ்வார் அருளிச்செய்தாரன்றோ. c ப்ரதிஸம்ப₃ந்தி₄ - எதிர்த்தலை. d ஸ்வஸ்வரூபமாவது - (1) ப்ரக்ருதியைக் காட்டிலும் மேற்பட்டிருக்கை ; (2) ஜ்ஞானத்தையும் ஆநந்த₃த்தையும் ஸ்வரூபமாக உடைத்தாயிருக்கை ; (3) என்றுமிருக்கை ; (4) எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கை ; (5) அறிவை கு₃ணமாகவும் கொண்டிருக்கை ; (6) தானே ப்ரகாஶிப்பதாயிருக்கை ; (7) ஈஶ்வரனுக்கு அடிமைப்பட்டிருக்கை ; (8) மற்றவர்களுக்கு உரியவனல்லாதவனாயிருக்கை ; (9) தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்வதற்குத் தகுதியில்லாதபடி அசித்தைப் போலே பரதந்த்ரனாயிருக்கை ; இந்த ஒன்பதும் ஸ்வஸ்வரூபமா

ரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யம் ; e இதினுடைய யாதா₂த்ம்யமாவது - "அருள்பெறுவாரடியார்தம்மடியனேற்கு" என்றும், "அடிகளடியே நினையும் அடியவர்கள்தம் அடியான்" என்றும், "மெய்ம்மையை மிகவுணர்ந்து" என்றும் சொல்லுகிறபடியே ததீ₃யசேஷத்வ பர்யந்தமாயிருக்கை ; இனி, ஸ்வரூபாநுரூபமான f ப₂லஸ்வரூபமாவது - ப₄க₃வத் ஸ்வரூபரூபகு₃ணநுப₄வஜநிதப்ரீதிகாரித கைங்கர்யம்; g இதினுடைய யாதா₂த்ம்யமிருக்கும்படி - " ப்ரஹர்ஷயிஷ்யாமி " என்கிறபடியே இந்தக்கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யான சேஷியினுடைய ஹர்ஷம் ; h தத்₃விரோதி₄ஸ்வரூபமாவது - தே₃ஹத்தில் ஆத்மபு₃த்₃தி₄யும், தே₃ஹாநுப₃ந்தி₄யான பதா₃ர்த்த₂ங்களில் மமதாபு₃த்₃தி₄யும், தே₃ஹாத்பரனை ஆத்மாவின் பக்கலிலே ஸ்வதந்த்ரபு₃த்₂தி₄பண்ணுகையும் ; i இதினுடைய யாதா₂த்ம்யமாவது - ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யாந்தர்க₃தமான

---

யிருக்கும். e ஸ்வஸ்வரூபயாதா₂த்ம்யமாவது - " அருள்பெறுவார் அடியார்தம் அடியேனேற்கு " [திருவாய் 10-6-1] என்றும், "அடிகளடியே நினையும் அடியவர்கள்தம்மடியான் " [பெரியதிருமொழி 2-6-10] என்றும், "மெய்ம்மையை மிகவுணர்ந்து" [திருமாலை 38] என்றும் பலவிடங்களில் சொல்லப்பட்ட ப₄ாக₃வதசேஷத்வத்தின் சரம பர்வம் வரையில் ஊன்றியிருக்கை. f பலஸ்வருபமாவது - எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும், ரூபங்களையும், கு₃ணங்களையும் அநுப₄வித்ததனால் ஏற்பட்ட உகப்பினால் தூண்டப்பட்ட கைங்கர்யமே ப₂லஸ்வருபமாகும். g ப₂லஸ்வருபயாதா₂த்ம்யம் - " ப்ரஹர்ஷயிஷ்யாமி " [ஸ்தோத்ரரத்னம்-46] [உகப்பிக்கப்போகிறேன்] என்று ஆளவந்தார் அருளிச்செய்தபடியே, கைங்கர்யத்தைக் கொள்பவனான எம்பெருமானுடைய உகப்பே உத்₃தே₃ஶ்யமாயிருக்கை. h தத்₃விரோதி₄ஸ்வருபமாவது - (1) தே₃ஹமே ஆத்மா என்னும் நினைவு. (2) தே₃ஹத்தோடு தொடர்புள்ள உற்றார், உறவினர், செல்வம் முதலானவற்றில் என்னுடையவை என்னும் நினைவு (3)தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாயிருந்தபோதிலும், ஆத்மா ஸ்வதந்த்ரன் (எவர்க்கும் அடிமைப்படாமல் தன்னைத் தானே ஆள்பவன்) என்னும் நினைவு ஆகிற இம்மூன்றும் விரோதி₄ஸ்வருபமாகும். i விரோதி₄ஸ்வருபயாதா₂த்ம்யமாவது - ஸ்வரூபத்துக்குத் தகுந்த ப₄க₃வத்கைங்கர்

அஹங்காரமமகாரங்கள் ; j தந்நிவ்ருத்திக்கும் புருஷார்த்த2 ஸித்3தி4க்கும் உபாயமாவது - ஸித்3த4ஸ்வரூபனாய், ஸௌலப்4 யாதி3 கு3ணவிஶிஷ்டனாயிருந்துள்ள ஈஶ்வரன்திருவடிகள் ; k இதினுடைய யாதா2த்ம்யமாவது - அதி4காரிவிஶேஷணத்தை யும் ஸஹியாதபடியான ஸஹகாரி நைரபேக்ஷ்யம்.

## பத்தொன்பதாம் வார்த்தை

a போ4க3விரோதி4-விஷயப்ராவண்யம்; b ப்ராப்யவிரோதி4 - மமதை ; c ஸாத4நவிரோதி4 - அஜ்ஞாந கர்த்ருத்வம் ;

---

யத்தைச் செய்யும்போதும் "இதை நான் செய்தேன்" என்னும் அஹங்காரமும், "இதனால் எனக்கு ஆநந்த3மேற்படுகிறது" என்னும் மமகாரமும் ஏற்படுகை. j அநிஷ்டமான விரோதி4யின் நிவ்ருத்திக்கும், இஷ்டமான புருஷார்த்த2த்தின் ஸித்3தி4க்கும் உபாயமாவது - ஸாத்4யோபாயங்களைப்போலே ஸாதி4க்கப்படவேண்டாதபடி ஸித்3த4மாய், ஸௌலப்4யம், ஸௌஶீல்யம், வாத்ஸல்யம், ஸ்வாமித்வம் என்னும் ஆஶ்ரயணஸௌகர்யாபாத3ககு3ணங்களோடும், ஜ்ஞானம், ஶக்தி, ப்ராப்தி (ஸர்வஸ்வாமித்வம்), பூர்த்தி (அவாப்தஸமஸ்தகாமத்வம்), கருணை என்கிற ஆஶ்ரிதகார்யாபாத3க கு3ணங்களோடும் கூடியிருக்கும் ஸர்வேஶ்வரனுடைய திருவடிகள். k உபாயயாதா2த்ம்யமாவது - "மாம் ஏகம்" என்று சரமஶ்லோகத்தில் சொன்னபடியே, அதி4காரிவிஶேஷணமான ஶரணாக3தியிலும் உபாயத்வத்தைப் பொறுக்காதபடியான ஸஹகாரிநைரபேக்ஷ்யம் (துணையை வேண்டாதவனாயிருக்கை).

### பத்தொன்பதாம் வார்த்தை

a போ4க3விரோதி4 விஷயப்ராவண்யம் - ஜீவன் எம்பெருமானை அநுப4விப்பதற்கும், எம்பெருமான் ஜீவனை அநுப4விப்பதற்கும் விரோதி4யாயிருப்பது ஜீவனுடைய விஷயப்ராவண்யம் (ஶப்3தா3தி3 விஷயங்களிலே மண்டி நிற்கை). b ப்ராப்யவிரோதி4 மமதை - ப்ராப்யமான ப4க3வத3நுப4வ கைங்கர்யங்களுக்குக் களையாயிருப்பது அவற்றாலுண்டாகும் ஆநந்த3ம் ஈஶ்வரனுடையது என்றிராமல், தன்னுடையது என்று இருக்கை. c ஸாத4னவிரோதி4 அஜ்ஞானகர்த்ருத்வம் - ஸித்3தோ4பாயமான எம்பெருமான் செயல்படுவதற்குத் தடையாயிருப்பது - ஜீவன் அறியாமையாலே தன் ரக்ஷணத்தில் ஈடு

d த்ரிவித$_4$விரோதி$_4$க்கும் காரணம் - அஹங்காரம் ; e கைங்கர்ய விரோதி$_4$ - ஸ்வாதந்த்ர்யம் ; f ருசிவிரோதி$_4$ - ஶப்$_3$த$_3$ாதி$_3$கள் ; g ஸமாஶ்ரயணவிரோதி$_4$ - தே$_3$வதாந்தரம்; h ஜ்ஞாநவிரோதி$_4$- அஜ்ஞாநம்; i ஶேஷத்வவிரோதி$_4$-தே$_3$வதாந்தரம்; j ஶரணாக$_3$தி விரோதி$_4$ - உபாயாந்தரம் ; k ஸ்வரூபவிரோதி$_4$ - ப$_4$ாக$_3$வதாப சாரம் ; l புருஷார்த்த$_2$விரோதி$_4$ - விஷயப்ராவண்யம் என்று m பிள்ளையருளிச்செய்வர்.

---

படுகை. d த்ரிவித$_4$விரோதி$_4$க்கும் காரணம் அஹங்காரம்-முற்கூறிய மூன்று தடைகளுக்கும் காரணமாயிருப்பது - ஜீவன் தன் ஆநந்த$_3$த்தைத் தான் விரும்புகையாகிற அஹங்காரம். e கைங்கர்ய விரோதி$_4$ ஸ்வாதந்த்ர்யம் - ஸ்வதந்த்ரன் (தனக்குத் தானே தலைவன்) என்னும் நினைவு, ஜீவனை ப$_4$க$_3$வத்$_3$ ப$_4$ாக$_3$வத கைங்கர்யங்களைச் செய்யாமல் தடுத்து விடுகிறது. f ருசிவிரோதி$_4$ ஶப்$_3$த$_3$ாதி$_3$கள் - ஶப்$_3$த$_3$ம் முதலான ப்ராக்ருத விஷயங்கள் ஜீவனுக்கு ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ருசி ஏற்படாமல் தடுத்துவிடுகின்றன. g ஸமாஶ்ரயண விரோதி$_4$ தே$_3$வதாந்தரம் - மற்ற தெய்வங்கள் ஜீவன் எம்பெருமானை அடையாதபடி தடுத்துவிடுகின்றன. h ஜ்ஞானவிரோதி$_4$ அஜ்ஞானம்- அஜ்ஞானம் (ப்ராக்ருதவிஷயஜ்ஞானம்) ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் ஜ்ஞானத்தைத் தடுத்து விடுகிறது. i ஶேஷத்வவிரோதி$_4$ தே$_3$வதாந்தரம் - மற்ற தெய்வங்கள் ஆத்மாவின் இயல்பான ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வம் வெளிப்படாதபடி தடுத்துவிடுகின்றன. j ஶரணாக$_3$திவிரோதி$_4$ உபாயாந்தரம் - ''சரணாகதி மற்றோர் சாதனத்தைப்பற்றில் அரணாகாது அஞ்சனைதன் சேயை முரணழியப் பற்றியது வேற்றோர் கயிறுகொண்டு ஆர்ப்பதன்முன் விட்டபடைபோல விடும்'' [ஞானஸாரம்-28] என்று அருளாளப்பெருமாள் எம்பெருமானார் அருளிச்செய்தபடி, தன் முயற்சியாயிருக்கும் உபாயாந்தரங்களால், ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூபமான (தன்முயற்சியினின்றும் நீங்குதலாயிருக்கும்) ஶரணாக$_3$தி சணற்கயிறு கண்ட ப்$_3$ரஹ்மாஸ்த்ரம்போலே தடைபட்டுவிடும். k ஸ்வரூபவிரோதி$_4$ ப$_4$ாக$_3$வதாபசாரம் - ப$_4$ாக$_3$வதர்கள்திறத்தில் செய்யும் அபசாரம் ப$_4$ாக$_3$வதஶேஷத்வமாகிற ஸ்வரூபத்தைத் தடைசெய்துவிடும். l புருஷார்த்த$_2$விரோதி$_4$ விஷயப்ராவண்யம் - ஶப்$_3$த$_3$ம் முதலான விஷயங்களில் ஈடுபாடு, பரமபுருஷார்த்த$_2$மான கைங்கர்யத்தில் ஈடுபாட்டைத் தடைசெய்துவிடும். m பிள்ளை - நம்பிள்ளை.

# இருபதாம் வார்த்தை

திருக்கோட்டியூர்நம்பி உடையவருக்கு அருளிச்செய்த வார்த்தை—ப்ரபந்நனுக்குப் பரிஹார்யம் ஆறு; அவையாவன - ஆஶ்ரயணவிரோதி₄, ஶ்ரவணவிரோதி₄, அநுப₄வவிரோதி₄, ஸ்வரூபவிரோதி₄, பரத்வவிரோதி₄, ப்ராப்திவிரோதி₄ என்று. இவற்றில், a ஆஶ்ரயணவிரோதி₄யாவது - அஹங்காரமமகாரங்களும், ப₂லாபி₄ஸந்தி₄யும், புருஷகாரத்தை இகழ்கையும், பேற்றில் ஸம்ஶயமும்; b ஶ்ரவணவிரோதி₄யாவது - தே₃வதாந்தரகத₂ாவிஷயங்களிலே அவஶமாகச் செவிதாழ்க்கை; c அநுப₄வவிரோதி₄யாவது - போ₄ககத்₃ரவ்யங்கொண்டு புக்கு ஸ்நாநத்₃ரவ்யங்கொண்டு புறப்படுகிற விஷயாநுப₄வேச்சை₂; d ஸ்வரூபவிரோதி₄யாவது-பரதந்த்ரனாக இசையாதே ஸ்வதந்த்ரனாய்க் கைவிஞ்சுகை. e பரத்வவிரோதி₄யாவது – முற்றல்

---

## இருபதாம் வார்த்தை

a ஆஶ்ரயண விரோதி₄யாவது...பேற்றில் ஸம்ஶயமும் - நான் எனது என்னும் அஹங்கார மமகாரங்களும், ப்ராக்ருத ப₂லங்களில் விருப்பமும், புருஷகாரமான பிராட்டியையும் ஆசார்யர்களையும் அவமதிப்பதும், ப₄க₃வத் ப்ராப்தி கிடைக்குமோ கிடைக்காதோ என்னும் ஐயமும் ஒரு ஜீவனை எம்பெருமானை ஆஶ்ரயிக்காதபடி தடுத்துவிடும் என்று கருத்து. b ஶ்ரவண விரோதி₄யாவது...செவி தாழ்க்கை - தன்னை மறந்து மற்ற தெய்வங்களைப் பற்றிய கதை₂களைக் கேட்பது, எம்பெருமானைப் பற்றிய பெருமைகளைக் கேட்பதைத் தடுத்துவிடும் என்று கருத்து. c அநுப₄வ விரோதி₄யாவது...விஷயாநுப₄வேச்சை₂ - சந்த₃னம் புஷ்பங்கள் முதலான போ₄க₃த்₃ரவ்யங்களைத் துணைகொண்டு அநுப₄விக்கப்படுவதாய், அநுப₄வித்தபின் ஶுத்₃தி₄ ஏற்படுவதற்குக் குளிக்கவேண்டியிருக்கும் ஸ்த்ரீபுருஷஸம்போ₄க₃ம் (ஆண்பெண் கலவி) ப்ராக்ருத விஷயங்களில் பற்றை விளைப்பதன்மூலம் ப₄க₃வத₃நுப₄வத்தைத் தடுத்துவிடுமென்று கருத்து. d ஸ்வரூபவிரோதி₄யாவது ...... கைவிஞ்சுகை - எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாயிருக்க இசையாமல், தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்து அவன் ஆணையை மீறுவது ப₄க₃வத்பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்தை ஜீவன் அறியாதபடி தடுத்துவிடும் என்று கருத்து. e பரத்வவிரோதி₄யாவது...

க்ஷேத்ரஜ்ஞரான ப்₃ரஹ்மருத்₂ராதி₃களை ஈஶ்வரராக ப்₄ரமிக்கை; f ப்ராப்திவிரோதி₄யாவது - கேவலரோட்டைச் சேர்த்தி.

## இருபத்தோராம் வார்த்தை

a ப₄க₃வத₃நுவர்த்தநத்துக்கு ப்ரதிப₃ந்த₄கம் – ஶரீரம் ; ஆசார்யாநுவர்த்தநத்துக்கு ப்ரதிப₃ந்த₄கம் - புத்ரமித்ராதி₃கள்; ஸ்ரீவைஷ்ணவர்களநுவர்த்தநத்துக்கு ப்ரதிப₃ந்த₄கம் - b இதர ஸஹவாஸம் ; c உபாயாத்₄யவஸாயத்துக்கு ப்ரதிப₃ந்த₄கம் - அர்த்த₂ப்ராவண்யம் ; உபேய ருசிக்கு ப்ரதிப₃ந்த₄கம் - விஷய ப்ராவண்யம். d இவற்றுக்கு ஒன்றுக்கு ஒன்றிலே தாத்பர்யம் என்று திருநகரிப்பிள்ளை வார்த்தை.

---

ப்₄ரமிக்கை - ஜ்ஞான ஶக்திகளில் நம்மைக் காட்டிலும் சிறிது விஞ்சினவர்களாயிருந்தபோதிலும் ஜீவர்களேயான பிரமன் உருத்திரன் முதலான தெய்வங்களை ஸர்வேஶ்வரராக மயங்குவது எம்பெருமானுடைய பரத்வத்தை அறியாதபடி தடுத்துவிடும் என்று கருத்து. f ப்ராப்தி விரோதி₄யாவது கேவலரோட்டைச் சேர்த்தி - எம்பெருமானை இனியவனாக நினையாமல், தம்முடைய ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தைக் கழித்துத்தரும் பாவனனாக மாத்திரம் நினைக்கும் கைவல்யநிஷ்ட₂ரோடு சேருவது, எம்பெருமானைப் பரமபோ₄க்₃யனாக நினைப்பவர்க்கே எளிதான ப₄க₃வத் ப்ராப்தியைத் தடுத்துவிடும் என்று கருத்து.

### இருபத்தோராம் வார்த்தை

a ப₄க₃வத₃நுவர்த்தனம்-எம்பெருமானுடைய ஆணைப்படி நடத்தல். b இதர ஸஹவாஸம் - அவைஷ்ணவர்களோடு ஸஹவாஸம். c உபாயாத்₄யவஸாயத்துக்கு ப்ரதிப₃ந்த₄கம் அர்த்த₂ப்ராவண்யம் - த₄நத்தில் மிகவும் ஈடுபட்டிருப்பவன் அதைப் பெறுவதற்காக உபாயாந்தரங்களில் ஈடுபட்டுவிடுவானாகையாலே, எம்பெருமானே உபாயம் என்னும் உறுதிக்குப் பணத்தாசையே முக்கியமான தடை என்று கருத்து. d இவற்றுக்கு ஒன்றுக்கு ஒன்றிலே தாத்பர்யம் - ஶரீரம் முதலாக விஷயப்ராவண்யமீறாக இவ்வைந்தும் ப₄க₃வத₃நுவர்த்தனம் முதலான ஐந்துக்குமே தடையாயிருந்தபோதிலும், ஶரீரம் முதலான ஒவ்வொன்று முறையே ப₄க₃வத₃நுவர்த்தனம் முதலானதுக்கு முக்₂யமான தடை என்று கருத்து.

திருநகரிப்பிள்ளை ;—

e ஸ்வரூபவிரோதி₄யாவது – ஸ்வரக்ஷணம், ஸ்வஸ்வாதந்த்ர்யம், அந்யஶேஷத்வம், தே₃ஹாத்மாபி₄மாநம், மமதை என்கிற இவை; அவன் ரக்ஷகனாகையாலே - ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லை; அவன் ஶேஷியாகையாலே-ஸ்வஸ்வாதந்த்ர்யத்தில் ப்ராப்தியில்லை ; அவன் பராத்பரனாகையாலே - அந்யஶேஷத்வத்தில் ப்ராப்தியில்லை ; இவன் ஜ்ஞாநாநந்தி₃யாகையாலே-தே₃ஹாத்மாபி₄மாநத்தில் ப்ராப்தியில்லை; ஈஶ்வரவிபூ₄தியாகையாலே-மமதையில் ப்ராப்தியில்லை.

---

e ஸ்வரூபவிரோதி₄யாவது...மமதையில் ப்ராப்தியில்லை - தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்வது, திருமந்த்ரத்தில் நம: என்ற ஶப்₃த₃த்தில் சொல்லப்பட்ட அநந்யஶரணத்வமாகிற ஸ்வரூபத்துக்கு விரோதி₄. ப்ரணவத்தில் அகாரத்தில் காட்டப்பட்ட எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யத்துக்கும், லுப்தசதுர்த்தி₂யில் காட்டப்பட்ட ஜீவனுடைய பாரதந்த்ர்யத்துக்கும் ஸ்வஸ்வாதந்த்ர்யம் விரோதி₄. ப்ரணவத்தில் உகாரத்தினால் காட்டப்பட்ட அநந்யார்ஹ ஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்கு அந்யஶேஷத்வம் விரோதி₄. ப்ரணவத்தில் மகாரத்தினால் காட்டப்பட்ட ஜ்ஞானமும் ஆநந்த₃முமாகிற ஸ்வரூபத்துக்கு விரோதி₄யாயிருப்பவை தே₃ஹத்தையே ஆத்மாவாக நினைக்கையாகிற தே₃ஹாத்மாபி₄மானமும், தே₃ஹத்தைச் சேர்ந்தவையைத் தன்னுடையவையாக நினைக்கையாகிற மமதையுமாகும். அகாரத்தில் சொல்லப்பட்ட ஸர்வேஶ்வரனுடைய ரக்ஷகத்வத்தை அநுஸந்தி₄த்தால் தன்னைத்தான் ரக்ஷித்துக் கொள்வதில் இழிய இடமில்லை. அகாரத்திலும் நாராயண பத₃த்திலும் சொல்லப்பட்ட ஶேஷித்வத்தை அநுஸந்தி₄த்தால் தன்னை ஸ்வதந்த்ரனாக நினைக்க இடமில்லை. ப்ரணவத்தில் சொல்லப்பட்ட எம்பெருமானுடைய பரத்வத்தையும், ஜீவனுடைய அநந்யார்ஹ ஶேஷத்வத்தையும் அநுஸந்தி₄த்தால் பிறர்க்கு அடிமைப்பட்டவனாகத் தன்னை நினைக்க இடமில்லை. மகாரத்தில் ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபனாக ஜீவனைச் சொல்லியிருப்பதை அநுஸந்தி₄த்தால் ஜீவன் தன் தே₃ஹத்தையே ஆத்மா என்று நினைக்க இடமில்லை. எல்லாமே எம்பெருமானுடைய செல்வமென்று ப்ரணவத்தில் சொல்லியிருப்பதை அநுஸந்தி₄த்தால் ஜீவன் எதையும் தன்னுடையதாக நினைக்க இடமில்லை.

f உபாயவிரோதி4யாவது-ஸாத4நாந்தரம், ஸ்வயோக்3யதை, அர்த்த2ம், அதி4காரிவிஶேஷணம், அபி4மதம். அதாவது-ஶரீரவத் ஶேஷமாகையாலே-ஸாத4நாந்தரங்களில் ப்ராப்தியில்லை ; ப3த்3த4ாத்மாவாகையாலே ஸ்வயோக்3யதைக்கு ப்ராப்தியில்லை ; அசேதநமாகையாலே அர்த்த2ம், இஷ்டாநிஷ்டங்கள் அறிகைக்கு யோக்3யதையில்லாமையாலே - ஸாத4நத்தில் ப்ராப்தியில்லை ; அதி4காரிவிஶேஷணம் சைதந்ய கார்யமாகையாலே-ஸாத4நத்

---

f உபாயவிரோதி4யாவது......இவனபி4மதத்துக்கு ஸாத4னத்தில் ப்ராப்தியில்லை-1. ஜீவன் தன் ஶரீரம் தனக்குப் பரதந்த்ரமாயிருப்பது போல் எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாகையால், இவன் தன் ரக்ஷணத்துக்கு ஒரு ஸாத4னத்தை அநுஷ்டி2ப்பது தகாது. அப்படி அநுஷ்டி2த்தால், அந்த ஸாத4னாந்தரம் உபாயமாகிற எம்பெருமான் கார்யம் செய்வதற்குத் தடையாகையாலே உபாய விரோதி4யாகும். 2. இந்த ஜீவன் ஸம்ஸாரத்தில் கட்டுண்டவனாகையாலே, ஜ்ஞானம் ஶக்தி முதலானவற்றில் மிகக்குறைவு பட்டவன் ஆகவே ஸாத4நாந்தரங்களை அநுஷ்டி2க்க இவனுக்குத் தகுதியில்லை. தகுதியிருப்பதாக நினைத்து இவன் அநுஷ்டி2த்தானாகில் அது உபாயமான எம்பெருமான் கார்யம் செய்வதற்குத் தடையாகுமாகையாலே ஸ்வயோக்3யதையும் உபாயவிரோதி4யாகிறது. 3. உலகில் அர்த்த2த்தைக்கொண்டு ப்ராக்ருத ஸுக2ங்களை ஸாதி4ப்பது கொண்டு, அது மோக்ஷஸாத4னமுமாகுமோ என்று எண்ணினால் அது சரியல்ல. இவனுடைய இஷ்டத்தை அறிந்து அதை ஸாதி4த்துக் கொடுக்கவும், அநிஷ்டத்தை அறிந்து அதைத் தவிர்த்துத்தரவும் வல்லது எதுவோ அதுவே மோக்ஷ ஸாத4னமாகும். அறிவற்றதான அர்த்த2ம் (பொருள்) இஷ்டாநிஷ்டங்களை அறியவே வல்லமையற்றதாகையாலே அது மோக்ஷஸாத4னமாக இடமேயில்லை. ப்ராக்ருத ஸுக2ஸாத4னமாயிருப்பதுகொண்டு அர்த்த2த்தை மோக்ஷஸாத4னமாக ஒருவன் நினைத்தானாகில், அதுவும் உபாயமான எம்பெருமான் கார்யம் செய்வதற்குத் தடையாகி உபாயவிரோதி4யாகும். 4 ப்ரபந்நனாகிற அதி4காரிக்கு விஶேஷணமாயிருக்கும் 'எம்பெருமானே உபாயம்' என்னும் நினைவு இவனுக்கு எம்பெருமான் அளித்திருக்கும் அறிவினால் ஏற்படுவதாகையாலே, அதை இவன் கையிலுள்ள ஸாத4னமாக நினைக்க இடமில்லை. அப்படி நினைத்தால், அந்நினைவு எம்பெருமான் பரார்த்த2 கைங்கர்யத்தை நிர்ஹேதுகமாக அளிப்பதற்குத் தடையாயிருப்பதன்மூலம் உபாயவிரோதி4யாகிறது. 5. ஸித்3தோ4பாயமான

தில் ப்ராப்தியில்லை; ஸித்₃த₄ஸாத₄நம் ஸஹாயாந்தரத்தை ஸஹியாமையாலே இவனபி₄மதத்துக்கு ஸாத₄நத்தில் ப்ராப்தியில்லை.

ச ப்ராப்தி விரோதி₄யாவது - தே₃ஹத்தில் போ₄க்₃ய பு₃த்₃தி₄யும், தே₃ஹத்தைப்பற்றிவருமவற்றில் புருஷார்த்த₂ பு₃த்₃தி₄யும், ஸ்வர்க்கைச₂்வர்யத்தில் புருஷார்த்த₂பு₃த்₃தி₄யும், ப்₃ரஹ்மலோக ப்ராப்தியில் புருஷார்த்த₂பு₃த்₃தி₄யும், கைவல்யத்தில் புருஷார்த்த₂பு₃த்₃தி₄யும். அதாவது - தே₃ஹம் ஸ்வப₄ாவ து₃ர்க்க₃ந்த₄மாகையாலே புருஷார்த்த₂மாகமாட்டாது; தே₃ஹத்தைப்பற்றிவருமவை தனக்கல்லாமையாலே - புருஷார்த்த₂மாக மாட்டாது; ஸ்வர்க்கைச₂்வர்யம் "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விச₂ந்தி" என்கையாலே-புருஷார்த்த₂மாகமாட்டாது ; ப்₃ரஹ்ம லோகப்ராப்தியும் க்ஷுத்பிபாஸையாலே இஹலோகத்திலே வந்து ச₂்வ(ஸ்வ ?)மாம்ஸப₄க்ஷணம் பண்ணிப்போருமென்று

---

எம்பெருமான் மற்றொரு சேதனவஸ்துவைத் தனக்கு உதவியாகப் பொறுக்காத நிரபேக்ஷோபாயமாகையாலே, எம்பெருமானுக்கு அபி₄மதையான பிராட்டிக்கு உபாயத்வத்தில் அந்வயமில்லாமல் புருஷகாரத்வத்திலேயே அந்வயமுண்டு. எம்பெருமானுக்கு அபி₄மதவிஷயமான பிராட்டியை உபாயமாக நினைப்பதும் இவ்வண்ணமாக உபாய விரோதி₄யாகிறது.

ச ப்ராப்திவிரோதி₄யாவது......புருஷார்த்த₂மாவது - 1. தே₃ஹம் இயல்பாகவே து₃ர்க₃ந்த₄ம் முதலியவற்றையுடைய அல்பபுருஷார்த்த₂மாகவும், அஸ்தி₂ரபுருஷார்த்த₂மாகவும் இருக்கையாலே, அதை இனிதாக நினைப்பது அநந்தஸ்தி₂ரப₂லமான ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விரோதி₄யாகிறது. 2. தே₃ஹத்தோடு தொடர்புகொண்டவற்றால் வரும் ஸுக₂ம் தே₃ஹத்துக்கேயாய் ஆத்மாவுக்கில்லாமையாலே அவற்றைப் புருஷார்த்த₂மாக நினைப்பது முற்கூறிய ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விரோதி₄யாகிறது. 3. பூ₄லோக ஸுக₂த்தைக்காட்டிலும் சிறந்ததான ஸ்வர்க்க₃ஸுக₂மும் "ஸ்வர்க்க₃த்துக்குக் காரணமான புண்யம் கழிந்தவுடன் ஸ்வர்க்க₃த்திலிருந்து பூ₄மிக்கு வருகிறார்கள்" [கீ₃தை 9.21] என்கிற ப்ரமாணத்தின்படி நிலையில்லாததாகையாலே, அதைப் புருஷார்த்த₂மாக நினைப்பதும் முற்கூறிய ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விரோதி₄யாகிறது. இந்த ஸ்வர்க்க₃த்தைக் காட்டிலும் சிறந்த ஸுக₂த்தையளிப்பதான பிரமனின் உலகத்தையடைந்தவர்களுக்கும் பசி தாகம் ஏற்பட்டு இவ்வுலகத்துக்கு வந்து நாய் (தன் ?) மாம்ஸத்தையும்

சொல்லுகையாலே ஸுக₂மாகமாட்டாது; கைவல்யமும் வித₄வாலங்காரம்போலே ஸ்வாநுப₄வமாகையாலும், சிற்றின்பமாகையாலும் புருஷார்த்த₂மாகமாட்டாது; அல்பமன்றியிலே, அஸ்தி₂ரமன்றியிலே, அபே₄াக்₃யமன்றியிலே அப்ராப்தமன்றியிலேயிருக்குமதிறே - ஸ்வரூப ப்ரயுக்தமான புருஷார்த்த₂மாவது.

## இருபத்திரண்டாம் வார்த்தை

ஶரீரம்-ஜட₃மாயிருக்கும் ; ஆத்மா-ஜ்ஞாநமயமாயிருக்கும். து₃:க்க₂ாத்மகமாயிருக்கும்; ஆநந்த₃மயமாயிருக்கும். அழுக்காயிருக்கும் ; நிர்மலமாயிருக்கும். அழியுமதாயிருக்கும் ; நித்யமாயிருக்கும். பரிணாமியாயிருக்கும் ; ஏகரூபமாயிருக்கும். உ விபு₄வாயிருக்கும் ; அணுவாயிருக்கும். இருளாயிருக்கும் ;

---

ரக்தத்தையும் உண்டு தங்கள் பசிதாகங்களைத் தீர்த்துக்கொள்வதாக இதிஹாஸபுராணங்களில் சொல்லுகையால் ஸுக₂மாகமாட்டாத அதைப் புருஷார்த்த₂மாக நினைப்பதும் முற்கூறிய ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விரோதி₄யாகும். 5. ப்ரக்ருதிமண்ட₃லத்தைத் தாண்டிச்சென்று ஸூக்ஷ்ம ஶரீரமும் கழியப்பெற்றுத் தன் ஆத்மாவை மாத்திரம் அநுப₄விப்பதாகிற கைவல்யமோக்ஷமும், ப₄ர்த்தாவான எம்பெருமானின் அநுப₄வமில்லாமையாலே, கைம்பெண் ஒருத்தி தன்னைத் தானே அலங்கரித்துக்கொண்டு தன் அழகைக் கண்ணாடியில் பார்த்து ஆநந்தி₃ப்பதுபோலே, தன்னைத்தானே அநுப₄விக்கும் சிற்றின்பமாகையாலே பரமபுருஷார்த்த₂மாகாது. இதைப் புருஷார்த்த₂மாக நினைப்பதும் முற்கூறிய ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விரோதி₄யாகும். தே₃ஹம் முதலான முதல் நான்கும் அல்பமாகவும் (தாழ்ந்ததாகவும்), அஸ்தி₂ரமாகவும் (நிலைநில்லாததாகவும்), அபே₄াக்₃யமாகவும் (இனிமையற்றதாகவும்), அப்ராப்தமாகவும் (ஸ்வரூபத்துக்குத் தகாததாகவும்) இருப்பவை. கைவல்யம் ஸ்தி₂ரமான (நித்யமான) புருஷார்த்த₂மானாலும், அதுவும் அல்பமாகவும், அபே₄াக்₃யமாகவும், ஸ்வரூபத்துக்குத் தகாததாகவுமிருக்கும். இந்த தோ₃ஷமொன்றுமில்லாததாய், ஶேஷத்வஸ்வரூபத்துக்குத் தகுந்ததான ப₄க₃வத₃நுப₄வ கைங்கர்யங்களே புருஷார்த்த₂மாகும்.

### இருபத்திரண்டாம் வார்த்தை

உ விபு₄வாயிருக்கும் - ஶரீரத்துக்குக் காரணமான மூலப்ரக்ருதி கீழெல்லை இல்லாமலிருப்பதை நோக்கி ஶரீரம் விபு₄வாயிருக்கும்

ஔியாயிருக்கும். b நித்₃ரையாயிருக்கும்; உணர்ச்சியாயிருக்கும். கோபமாயிருக்கும்; க்ஷமையாயிருக்கும். அஶுத்₃த₄மாயிருக்கும்; ஶுத்₃த₄மாயிருக்கும். c ஈஶ்வரன், ரக்ஷகனுயிருக்கும்; ஶேஷியாயிருக்கும்; காரணமாயிருக்கும்; ஶரீரியாயிருக்கும்; த₄ாரகனுயிருக்கும்; வ்யாபகனுயிருக்கும்; நியந்தாவாயிருக்கும்; ஸ்வதந்த்ரனுயிருக்கும்; ஶரண்யனுயிருக்கும்; ஸேவ்யனுயிருக்கும்; பலசொல்லியென்? நாயகனுயிருக்கும். ஆத்மா, ரக்ஷ்யமாயிருக்கும்; ஶேஷமாயிருக்கும்; d கார்யமாயிருக்கும்; ஶரீரமாயிருக்கும்; த₄ார்யமாயிருக்கும்; வ்யாப்யனுயிருக்கும்; நியாம்யனுயிருக்கும்; பரதந்த்ரனுயிருக்கும்; ஶரணாக₃தனுயிருக்கும்; ஸேவகனுயிருக்கும்; பலசொல்லியென்? அடியனுயிருக்கும்.

## இருபத்துமூன்றும் வார்த்தை

a கரணங்களை ஆத்மாவென்பார்; இந்த்₃ரியங்களை ஆத்மாவென்பார்; மநஸ்ஸை ஆத்மாவென்பார்; ப்ராணனை ஆத்மாவென்பார்; இவை தனித்தனியே ஆத்மாவென்பார்; இதினுடைய ஸமுதா₃யம் ஆத்மாவென்பார்; ப்ரக்ருதியை ஆத்மாவென்பார்; இதுக்கு வேறுபட்டிருக்கும் ஆத்மா என்று கொள்ளச்செய்தேயும் b ஜட₃ம் ஆத்மாவென்பார்; c க்ஷணிகம்

---

என்கிருர். b நித்₃ரையாயிருக்கும் - நித்₃ரைக்குக் காரணமாயிருக்கும். c இதுவரை ஶரீரத்தைக் காட்டிலும் ஆத்மாவின் சிறப்பு சொல்லப்பட்டது; இனி, அவ்வாத்மாவைக் காட்டிலும் ஈஶ்வரனின் சிறப்பு சொல்லப்படுகிறது. d கார்யமாயிருக்கும் - காரணமான எம்பெருமான் நித்யமான ஆத்மாவுக்கு ஶரீரஸம்ப₃ந்த₄த்தைக் கொடுத்துப் பிறப்பிக்கையை நோக்கிக் கார்யமாயிருக்கும் என்கிருர்.

**இருபத்துமூன்றும் வார்த்தை**

a கரணங்களை - கைகால் முதலான ஸ்தூ₂ல ஶரீரத்தின் அவயவங்களை. b ஜட₃ம் ஆத்மா - ஆத்மா கல் முதலானவற்றைப்போலே தானே ப்ரகாஶியாதிருப்பது; அதுக்கு ஸம்ஸாரத₃ஶையில் உண்டானது அறிவு. அவ்வறிவு அழிந்து ஆத்மா ஜட₃மாவதே மோக்ஷம் என்னும் நையாயிக பக்ஷத்தை நினைக்கிருர். c க்ஷணிகம் ஆத்மா -

மநஸ்ஸு-ஜடமாகையாலே ஆத்மாவாகமாட்டாது; ப்ராணன்-வாயு விசேஷமாகையாலே ஆத்மாவாகமாட்டாது; k₂ ஒருகரணத்துக்கு வந்த க்லேஶத்தாலே, மற்றைக் கரணங்களும் க்லேஶிக்கக் காண்கையாலே-தனித்தனியே ஆத்மாவாகமாட்டாது; இவற்றினுடைய ஸமுதாயமான ஶரீரம் ஆத்மாவாகமாட்டாது; எங்ஙனேயென்னில்;—'உன்னுடைய கால்' 'என்னுடைய கை' 'எனக்கு ஶரீரம் விதேயமாய்த்து' என்கையாலும், மாதா பிதாக்கள் செத்த அநந்தரம் காண்கிற ஶரீரத்தில் ஒன்றும் முகம்மாறிப் போகாமேகிடக்க, 'அப்பா! எங்குப்போனாய்?' 'அம்மா! எங்குப்போனாய்?' என்று, முன்னாள் ஆதரித்துப் போந்த ஶரீரந்தன்னை, அரைநாழிகை அகத்தில்கிடக்கவும் பொறுதே "ஶவம்"என்று பேரிட்டு, தர்ஶித்த தோஷத்துக்கு நெய்யும் நெருப்புங்கொண்டு குளிக்கையாலும், அஜ்ஞருங்கூட ஶவ ஶரீரத்தில் ஆத்மபுத்தி பண்ணுமையாலே - ஶரீரம் ஆத்மாவாகமாட்டாது; இவனிருந்தபோது ஜ்ஞாநம் நடையாடுகையாலே - ஜடம் ஆத்மாவாகமாட்டாது; முன்புசெய்த கார்யம் சொல்லுகையாலே - க்ஷணிகம் ஆத்மாவாகமாட்டாது; l 'நான் இத்தைச் செய்யாநின்றேன்' என்கையாலே-ஜ்ஞாநம் ஆத்மாவாகமாட்டாது; ஆத்மா ஶரீரத்தில்நின்றும் புறப்பட்டுப் போம்போது சுற்றிலிருந்தார்க்குத் தெரியாமையாலே - m விபு ஆத்மாவாகமாட்டாது; 'போன ஜந்மம் சில தர்மங்களைச் செய்கையாலே இஜ்ஜந்மம் ஸுகமாயிருந்தோம்; இஜ்ஜந்மமும் சில ஸுக்ருதங்களைச் செய்தால், வருகிற ஜந்மமும் ஸுகமாயிருக்கலாம்' என்று செய்யக் காண்கையாலும், ஶரீரத்தைவிட்டுப்

---

k₂ இவ்விஷயம் — 'த்வக்' என்னும், ஸ்பர்ஶத்தை உணரும் இந்த்ரிய விஷயத்தில் தெளிவாக விளங்கும். l நான் இத்தை ... ஆத்மாவாகமாட்டாது – 'நான் இத்தைச் செய்கிறேன்' என்று ஒன்றையறிந்து செய்வதாகக் கூறுகையாலே, ஆத்மா ஜ்ஞாதா என்றும், கர்த்தா என்றும் விளங்குகிறது. ஆகையால் ஆத்மா ஜ்ஞான மாத்திரம் ஆகமாட்டாது. m விபு ஆத்மா - கண்ணுக்குத் தோற்றும் பரிமாணத்தையுடையது ஆத்மா என்னும் பக்ஷத்தை

போய் ஸ்வர்க்க₃ாத்₃யநுப₄வம் பண்ணுவதாக ஜ்யோதிஷ்டோமாதி₃ ஸாத₄நத்திலே இழிகையாலும், ஆத்மா அநித்யமாக மாட்டாது; ஒரு சேதநன் ஸுகி₂க்க, ஒரு சேதநன் து₃:க்கி₂க்க, ஒரு சேதநன் நலிய, ஒரு சேதநன் நலிவுபடக் காண்கை யாலும் ஏகாத்மாவாகமாட்டாது ; பிறந்தவன்று சாகிற ப்ரஜை யினுடைய ஆத்மாவோடு, நூறுவயஸ்ஸுப்புக்கு சாகிறவனுடைய ஆத்மாவோடு வாசியறக் கண்ணுக்குத் தெரியாமையாலே, பரிணமி ஆத்மாவாகமாட்டாது; தனக்கு அநிஷ்டமான து₃:க்க₂த் தைப் போக்கிக்கொள்ளமாட்டாமையாலும், இஷ்டமான ஸுக₂த்தை அழைத்துக்கொள்ளமாட்டாமையாலும், தான் செய்கிறேன் என்ற கார்யத்தைச் செய்து தலைக்கட்டமாட்டாமை யாலும், ஸ்வதந்த்ரம் ஆத்மாவாகமாட்டாது.

n கர்மத்துக்குப் பரதந்த்ரனாகமாட்டான் - அது அசேதந மாகையாலே; இவனுடைய ஆபந்நிவாரணம்பண்ணமாட்டாமை யாலே-மாதா பிதாக்களுக்குப் பரதந்த்ரனாகமாட்டான்; ரக்ஷகத்வ மில்லாமையாலே-பித்ருக்களுக்குப் பரதந்த்ரனாகமாட்டான்; இப் படியாகையாலே-க்₃ரு(ர?)ஹங்களுக்குப் பரதந்த்ரனாகமாட்டான்; அசித்தாகையாலும், தன்னைப் பிறர் ரக்ஷிக்கவேண்டுகையாலும், o ஆஶ்ரயாஶியாகையாலும், அக்₃நிக்குப் பரதந்த்ரனாகமாட்டான்; p ஶாபோபஹததனாகையாலும், தன்னுடைய ராஜ்யத்தைப் பிறர் கையிலே பறிகொடுத்து க்லேஶிக்கையாலும்-இந்த்₃ரனுக்குப் பரதந்த்ரனாகமாட்டான் ; மது₄கைடப₄ர்கையிலே வேத₃த்தைப் பறிகொடுக்கையாலும், ருத்₃ரனாலே நலியப்படுகையாலும் – ப்₃ரஹ்மாவுக்குப் பரதந்த்ரனாகமாட்டான் ; தான் அபி₄மாநித்த ப₃ாணனைக்காட்டிக்கொடுத்துத் தன்னைக்கொண்டு † நெகிழ

நினைக்கிறார். n கர்மம் - ஜீவன் செய்யும் புண்யபாபச்செயல்கள். o ஆஶ்ரயாஶி - தனக்கு இருப்பிடமான விறகு முதலானவற்றை அழிப்பதையே இயல்வாகக்கொண்டது அக்₃னி என்று கருத்து. p ஶாபோபஹதன் - கௌ₃தம ஶாபத்தால் பீடிக்கப்பட்டவன் இந்த்₃ரன் என்பதை நினைக்கிறார்.

† (பா) “நழுவ”

நிற்கையாலும், ப்₃ரஹ்மஶிரஸ்ஸு தன் கையிலே ஒட்டிக் கிடக்க, ஸர்வேஶ்வரன்பக்கலிலே சென்று "என் ஆபத்தைப் போக்கியருளவேணும்" என்று / நோக்கிக்கொள்ளுகையாலும்-ருத்₃ரனுக்குப் பரதந்த்ரனாகமாட்டான்; § "திருமாலே! நானு முனக்குப் பழவடியேன்" என்கையாலே - ஏகாயந எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாகமாட்டான்; இனி, இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஶேஷத்வம்—|| "நின் திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றதும் உன்னடியார்க் கடிமை" என்கையாலே ததீ₃ய ஶேஷத்வமேயாகக் கடவது.

## இருபத்துநான்காம் வார்த்தை

a தத்வத்ரயம்; அதில் b ஆத்மதத்வத்ரயம்; அதில் c ப₃த்₃த₄ாத்மாக்கள் த்ரயம்; அதில் d ஶேஷத்வ ஜ்ஞாநமுடையார் த்ரயம்; அதில் e ப₄க₃வச்சே₂ஷத்வ ஜ்ஞாநமுடையார் த்ரயம், f ஆத்மப்ராப்தி காமர் த்ரயம்; அதில் g ப்ரபந்நாதி₄காரிகள் த்ரயம்.

---

### இருபத்துநாலாம் வார்த்தை

a தத்வத்ரயம்-சித், அசித், ஈஶ்வரன் என்று தத்வங்கள் மூன்று. b ஆத்ம தத்வத்ரயம் - ப₃த்₃த₄ர், முக்தர், நித்யர் என்று, சித்தாகிற ஆத்மாக்கள் மூவகைப்படுவர். c ப₃த்₃த₄ாத்மாக்கள் த்ரயம்-(1) அர்த்த₂ காமபரர், (2) த₄ர்மபரர், (3) மோக்ஷபரர் என்று ப₃த்₃த₄ாத்மாக்கள் மூவகைப்படுவர். d ஶேஷத்வ ஜ்ஞானமுடையார் த்ரயம்-(1) கண்ணால் காணப்படும் அரசன் முதலானார்க்கு ஶேஷம், (2) காணப்படாத தே₃வதைகளுக்கு ஶேஷம், (3) ப₄க₃வானுக்கு ஶேஷம் என்று ஶேஷத்வ ஜ்ஞானத்தையுடையார் மூவகைப்பட்டவர். e ப₄க₃வச்சே₂ஷத்வ ஜ்ஞானமுடையார் த்ரயம்-ப₄க₃வானுக்கு அடிமைப்பட்டது இவ்வாத்மா என்னும் அறிவுடையவர்களும் (1) ஐஶ்வர்யார்த்தி₂கள், (2) கைவல்யார்த்தி₂கள், (3) எம்பெருமானையே அடையவிரும்புமவர்கள் என்று மூவகைப்பட்டவர். f ஆத்மப்ராப்திகாமர் த்ரயம் - ஆத்மாவை அநுப₄விக்க விரும்புகிறவர்கள் — (1) அசிந்மிஶ்ரமான (அசித்தோடு கலந்த) ஆத்மாவை அநுப₄விக்க விரும்புகிறவர்கள்,

---

/ (பா) "போக்கி" § திருப்பல்லாண்டு-11.
|| பெரியதிருமொழி (8-10-3)

## இருபத்தஞ்சாம் வார்த்தை

a ரக்ஷகத்வத்தை அழித்தான்; b ஶேஷத்வத்தை அழித்தான் ; c பரத்வத்தை அழித்தான் ; d விக்3ரஹத்தை அழித்

---

(2) அசித்திலிருந்து நீங்கிய கேவலாத்மாவை அநுப4விக்க விரும்பும் கைவல்யநிஷ்டர். (3) ப்3ரஹ்மாத்மகமாகத் தம் ஆத்மாவை அநுப4விக்க விரும்பும் பஞ்சாக்3நிவித்3யாநிஷ்டர் என்று மூவகைப்படுவர். இதில், (1) முதல் வகைப்பட்டவருக்கு த்4ருவநக்ஷத்ரத்துக்குமேலே ஆகாஶ க3ங்கை3யின் உத்பத்திஸ்த2ானத்தை அநுப4வஸ்த2ானமாக எங்களாழ்வான் ஸ்ரீவிஷ்ணுபுராண [2-8-98...100] வ்யாக்2யானத்தில் அருளிச்செய்துள்ளார். (2) இரண்டாவது வகைப்பட்டவருக்கு விரஜாநதி3க்கும், ஸ்ரீவைகுண்ட2 நக3ரத்துக்கும் இடைப்பட்ட ஸ்தானத்தை அநுப4வஸ்த2ானமாக, ஸஹஸ்ரநாம பா4ஷ்யத்திலே பட்டர் ''முக்தாநாம் பரமா கதி:'' என்னும் திருநாமத்தை வ்யாக்2யானம் செய்யும் போது அருளிச்செய்தார். பாத்3மபுராணம் உத்தரக2ண்ட3ம் 256-ம் அத்தியாயத்திலும் இவ்விஷயம் உள்ளது. (3) இதில் மூன்ருவது வகைப்பட்டவர்களுக்கு 'ஸ ஏநாந் ப்3ரஹ்ம க3மயதி'' என்னும் உபநிஷத்3 வாக்யத்தின்படி அர்ச்சிராதி3க3தியும் ப்3ரஹ்ம ப்ராப்தியும் சொல்லப்பட்டிருக்கையால், ஸ்ரீவைகுண்ட2 தி3வ்யநக3ரமே இவர்களுக்கு அநுப4வஸ்த2ானமாகும். இவ்விஷயம் கார்யாதி4கரண ஸ்ரீபா4ஷ்யத்திலும் கீ3தாபா4ஷ்யத்திலும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. g ப்ரபந்நாதி4காரிகள் த்ரயம் - (1) அஜ்ஞானத்தாலே ப்ரபந்நரான நம்மைப் போன்றவர்கள், (2) ஸ்வரூபயாதா2த்ம்ய ஜ்ஞானத்தாலே ப்ரபந்நரான பூர்வாசார்யர்களைப் போன்றவர்கள், (3) ப4க்திபாரவஶ்யத்தாலே ப்ரபந்நரான ஆழ்வார்களைப் போன்றவர்கள் என்று ப்ரபந்நாதி4காரிகள் மூவகைப்படுவர். இவ்விஷயம் ஸ்ரீவசனபூ4ஷண [43] ஸூத்ரத்திலும் அதன் வ்யாக்2யானத்திலும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

### இருபத்தைந்தாம் வார்த்தை

a...i அநாதி3காலமாக ஸம்ஸாரி சேதனன் நிற்கும் நிலையைக் கூறுகின்றன. j இதற்குப் பரிஹாரமான உய்வுபாயமிருக்கும்படியைச் சொல்லுகிறது. a ரக்ஷகத்வத்தையழித்தான் - எம்பெருமானையொழிந்த பிறரையும், தன்னையும் தனக்கு ரக்ஷகர்களாக அபி4மானிப்பதன்மூலம் எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை அழித்தான். b ஶேஷத்வத்தை அழித்தான் - எம்பெருமானுக்கு ஶேஷமான (அடிமைப்பட்ட) ஆத்மவஸ்துவை ஸ்வதந்த்ரமாகவோ, பிறர்க்கு

தான் ; e அருளை அழித்தான் ; f அடியாரை அழித்தான் ; g விபூ₄தியை அழித்தான் ; h ப₃ந்த₄த்தை அழித்தான் ; i வ்ருத்தியை அழித்தான் ; j தன்னை ஶரீரியாக ப்ரதிபத்தி பண்ணி அநர்த்த₂ப்படுதல், தன்னை ஶரீரமாக ப்ரதிபத்திபண்ணி உஜ்ஜீவித்தல் செய்யுமத்தனை—என்று பிள்ளையருளிச்செய்தார்.

---

ஶேஷமாகவோ நினைப்பதன்மூலம் தன் ஸ்வரூபமான ஶேஷத்வத்தை அழித்தான். c பரத்வத்தை அழித்தான்-ஸகல சேதநாசேதனங்களைக் காட்டிலும் எம்பெருமான் உயர்ந்தவனாயிருக்க, மற்றொரு தெய்வத்தை அவனுக்கு ஸமமாகவோ, அவனைக் காட்டிலும் உயர்ந்ததாகவோ நினைப்பதன்மூலம் எம்பெருமானுடைய பரத்வத்தை அழித்தான். d விக்₃ரஹத்தை அழித்தான்-எம்பெருமானுடைய திருமேனி இந்த்₃ர ஜாலம்போலே பொய்யானது என்று கூறுவதன்மூலம் அவனுடைய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தை அழித்தான். e அருளையழித்தான் - எம் பெருமானுடைய அருளே இயல்வான மோக்ஷோபாயமாயிருக்க, மற்ற தெய்வங்களின் அருளையும், தன் முயற்சியையும் உபாயமாகக் கருது வதன்மூலம் அருளை அழித்தான். f அடியாரை அழித்தான்-எம்பெரு மானுடைய அடியார்கள் அவனுடைய நடமாடும் கோவில்களாயிருக்க, அவர்களைத் தனக்கு ஸமமாகவோ, தன்னிலும் தாழ்ந்தவர்களாகவோ நினைப்பதன்மூலம் அடியார்களை அழித்தான். g விபூ₄தியை அழித் தான் - நித்யவிபூ₄தியான பரமபத₃த்தையும், லீலாவிபூ₄தியான இவ் வுலகையும் பொய்யென்று கருதுவதன்மூலம் உப₄யவிபூ₄தியையும் அழித்தான். h ப₃ந்த₄த்தை அழித்தான் - எம்பெருமான் இயல் வாகவே எல்லா உறவுமுறையுமாயிருக்க, ஸாம்ஸாரிகப₃ந்து₄க்களை உறவாக நினைப்பதன்மூலம் எம்பெருமானுடைய உறவை அழித் தான். i வ்ருத்தியை அழித்தான் - ப₄க₃வத்கைங்கர்யமே பரம புருஷார்த்த₂மாயிருக்க, ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைப் புருஷார்த்த₂மாக நினைப்பதன்மூலம் வ்ருத்தியாகிற கைங்கர்யத்தை அழித்தான். இந்த எல்லாவிடங்களிலும் "அழித்தான்" என்றது இல்லை செய்தான் (தானும் இல்லையென்று நினைத்து, பிரசாரத்தின்மூலம் பிறரும் இல்லை யென்று நம்பும்படி செய்தான்.) என்று பொருள்படும். j தன்னை... செய்யுமத்தனை-இவ்வளவு தவறான கார்யங்களையும் இவன் செய்து அநர்த்த₂ப்படுவதற்குக் காரணம்-தன்னை எம்பெருமானுக்கு ஶரீரமாக அறியாமல், தன்னை ஸ்வதந்த்ர ஶரீரியாக (ஶரீரத்தை உடையவனாக) அநாதி₃காலமாக எண்ணியதேயாகும். எம்பெருமானுக்கு ஶரீரமாகத் தன்னை எண்ணுவதே இவ்வநர்த்த₂ பரிஹாரமான உய்வுபாயமாகும்.

## இருபத்தாறும் வார்த்தை

a பௌருஷத்தை ஏறிட்டுக்கொள்ளுகை-பாரதந்த்ர்யத்தை அழிக்கை; b வ்யாபாரத்தை ஏறிட்டுக்கொள்ளுகை-c வ்யவஸா யத்தையழிக்கை ; விஷயாந்தரங்களிலே அந்வயிக்கை- d வ்ருத்தியை அழிக்கை என்று ஆச்சான்பிள்ளை.

## இருபத்தேழாம் வார்த்தை

a ஜ்ஞாநம் ஜ்ஞாநத்தை விநியோகங்கொள்ளும்படி யென்னென்னில் ;—இவன் கரணத்வாரா விநியோகப்படும் ; அவன் விக்ரஹத்வாரா விநியோகம் கொள்ளும். b ஜ்ஞாநம் ஜ்ஞாநத்துக்கு சேஷமானபடியென்னென்னில்;—யாதொன்றி னுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி யாதொன்றிலே

---

### இருபத்தாறும் வார்த்தை

a பௌருஷத்தை ஏறிட்டுக்கொள்ளுகை - தன்னை ஸ்வதந்த்ரனாக நினைக்கை. b வ்யாபாரத்தை ஏறிட்டுக்கொள்ளுகை - தன்னை ரக்ஷித் துக்கொள்ளத் தன்முயற்சியில் ஈடுபடுதல். c வ்யவஸாயத்தை அழிக்கை - எம்பெருமானே உபாயம் என்ற உறுதியை அழிக்கை. d வ்ருத்தி-கைங்கர்யம்.

### இருபத்தேழாம் வார்த்தை

இதில் பல வாக்யங்கள் துருஹமாயும் ஸ்கலிதயம் உள்ளவை போலும் காண்கின்றன. அறிந்தவரை அரும்பதவுரை எழுதுகிறோம். a ஜ்ஞானம்......விநியோகங்கொள்ளும் - ஜ்ஞானஸ்வரூபனான ஜீவன் ஜ்ஞான ஸ்வரூபனான எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதும், எம்பெருமான் ஜீவனிடம் கைங்கர்யம் கொள்வதும் எப்படிப்பொருந் தும் ? எனில் — ஜீவன் தன் கை கால் முதலான அவயவங்களாலே சாமரம் வீசுவது போன்ற கைங்கர்யங்களைச் செய்யக்கூடும். அவனும் திவ்யமங்களவிக்ரஹத்தோடு கூடியவனாய் அக்கைங்கர்யங்களை ஏற்கக்கூடும். "சென்றால் குடையாம்" [முதல்திரு 53] முதலான பாசுரங்களை நினைப்பது. b ஜ்ஞாநம் ...... சேஷியாகத்தட்டில்லை - ஜீவேச்வரஸ்வரூபங்கள் இரண்டும் ஜ்ஞானமயமாயிருக்க, ஈச்வர ஸ்வரூபம் சேஷி என்றும், ஜீவஸ்வரூபம் சேஷமென்றும் எப்படிக் கொள்வது ? எனில், ஜீவனுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஈச்வராதீனமாயிருக்கையாலே, ஈச்வரனை சேஷியாக

கிடக்கிறது அது ஶேஷியாகத்தட்டில்லை c இப்படியிருக்கிற ஜ்ஞாநத்தை அவித்₃யை மூடினபடி எங்ஙனேயென்னில் ;— ஜ்ஞாநாஶ்ரயமாகையாலே ; d கல்லு கலங்காதே ; நீர் கலங்கு மித்தனையிறே ; ஜ்ஞாநத்₃ரவ்யமிறே ; எப்போதுமொக்கக் கலங்கியல்லது இராதே; அப்ராப்தத்திலே கலங்குதல், ப்ராப்தத் திலே கலங்குதலிறே. e ஸ்தூ₂லத்தில் ஸூக்ஷ்மமிருக்கும்படி எங்ஙனேயென்னில் ; — ஜ்ஞாநேந்த்₃ரியங்களிலே வ்யாபித் திருக்கும். ஸ்தூ₂லம் கழியும்போது " வாயுர்க்க₃ந்த₄ாநிவ " என்கிறபடியே, வாயு க₃ந்த₄த்தைக் கொய்துகொண்டுபோமா

---

வும் ஜீவனை ஶேஷனாகவும் கொள்ளத்தட்டில்லை. c இப்படியிருக்கிற ஜ்ஞானத்தை......ஜ்ஞாநாஶ்ரயமாகையாலே - ஜ்ஞானமயமான ஜீவ ஸ்வரூபத்தைக் கர்மமாகிற அவித்₃யை மூடுவதாவது என்ன ? எனில், ஜ்ஞானஸ்வரூபமாயிருக்கும் ஆத்மா த₄ர்மபூ₄தஜ்ஞானத்துக்கு இருப் பிடமாயுமிருக்கையாலே, ஸூர்யனுடைய ஒளியை மேக₄ம் மறைப் பதுபோலே ஜீவனுடைய த₄ர்மபூ₄தஜ்ஞானத்தை அவித்₃யை (கர்மம்) மறைக்கலாமென்று கண்டுகொள்வது. d கல்லு......கலங்குதலிறே - ஜீவனுடைய த₄ர்மிஸ்வரூபம் அணுவாய் ஜ்ஞானமாயிருக்கையாலே, கல்லைப்போலே கலங்காமல் (விகாரமற்றதாய்) இருக்கும். விபு₄வாய் விகாரமுடையதான த₄ர்மபூ₄தஜ்ஞானம் நீர்போலே கலங்கிக் கொண்டேயிருக்கும். த₄ர்மிஸ்வரூபம் கு₃ணாஶ்ரயமாக மாத்திர மிருப்பதால் த்₃ரவ்யமாகிறது. த₄ர்மபூ₄தஜ்ஞானம் க்ரியாஶ்ரய மாகவுமிருப்பதால் த்₃ரவ்யமாகிறது. அதற்கு லீலாவிபூ₄தியிலும் நித்யவிபூ₄தியிலும் கலக்கமுண்டு. லீலாவிபூ₄தியில் ஞானம் கனிந்த நலமான ப்ரேமம் பிறப்பதற்கு முன்பு, கர்மம் காரணமாக ஸ்வ ரூபத்துக்குத் தகாத ப்ராக்ருத விஷயங்களைக் கண்டு கலங்கும் அது. இவ்விபூ₄தியில் அத்தகைய ப்ரேமம் பிறந்த பின்பும், நித்யவிபூ₄தி யிலும் எம்பெருமானின் வைலக்ஷண்யம் (சிறப்பு) காரணமாக ஸ்வ ரூபத்துக்குத் தக்கபடி, அவன் விஷயமாக 'என் வருகிறதோ' என்று கலங்கிப் பல்லாண்டுபாடும் அது. e ஸ்தூ₂லத்திலே...ஸாரவத் தையாம் - ஸ்தூ₂ல ஶரீரத்தில் ஸூக்ஷ்ம ஶரீரமிருப்பது எப்படி ? எனில் : ஸூக்ஷ்மமான ஜ்ஞானேந்த்₃ரியங்களிலே ஸூக்ஷ்ம ஶரீரம் ஒன்றியிருக்கும். மரணத்தாலே ஸ்தூ₂ல ஶரீரம் கழியும்போது, " ஶரீரம் யத₃வாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: | க்₃ருஹீத் வைதாநி ஸம்யாதி வாயுர்க₃ந்த₄ாநிவாஶயாத் ||" [கீ₃தை 15·8]

போலே, இந்த்₃ரியங்கள் ஸாரவத்தையாம். † அருசி, அவி ஶ்வாஸமடியாகப்புகும். ‡ ஸ்தூ₂லம் விட்டபோதே ஸூக்ஷ்மம் விடாதொழிவானென் ? என்னில்; — ப்ராக்ருததே₃ஶத்திலே அப்ராக்ருத ஶரீரமில்லாமையாலே, இது யாதொரு தே₃ஶத்திலே விட்டது, அது அப்ராக்ருத தே₃ஶமாமித்தனை. இது க₃மநஸாத₄நமாகையாலும், போகிற வழியிலுள்ள தே₃வஜாதிகள் ஸத்கரித்து ஸ்வரூபம் பெறுகைக்கும்,

---

[ஶரீரத்தை நியமிப்பவனான ஜீவன், யாதொரு ஶரீரத்தையடைந்திருந்து அந்த ஶரீரத்திலிருந்து கிளம்புகிறானோ, அப்போது இந்த இந்த்₃ரியங்களை ஸூக்ஷ்ம ஶரீரத்தோடுகூட, வாயுவானது மாலை, சந்த₃னம், கஸ்தூரி முதலானவற்றிலிருந்து அவைற்றிலுள்ள மணத்தை ஸூக்ஷ்மாவயவங்களோடுகூட எடுத்துச்செல்வதுபோலே எடுத்துச்செல்கிறான்.] என்கிறபடியே வாயு மணமுடையவற்றிலிருந்து மணத்தைஅவற்றின்ஆஶ்ரயமான ஸூக்ஷ்மாவயவங்களோடு கொய்துகொண்டுபோவதுபோலே, ஜீவனும் ஸாரமான இந்த்₃ரியங்களை ஸூக்ஷ்ம ஶரீரத்தோடுகூட எடுத்துக்கொண்டு செல்கிறான். ஆக ஸ்தூ₂லத்திலே ஸூக்ஷ்மம் மலரில் மணம்போலவும், பாலில் நெய்போலவும் ஸாரமாயிருக்கிறது என்று கருத்து. † அருசி அவிஶ்வாஸமடியாகப் புகும் - ப₄க₃வத்₃ விஷயத்தில் ருசியின்மை அநாதி₃பாபவாஸனையாலே ஏற்பட்ட நம்பிக்கையின்மையினாலே உண்டாகும். ‡ ஸ்தூ₂லம் விட்டபோதே... இவன் விழிப்பது - ஸ்தூ₂லஶரீரம் விட்டவுடன் ஸூக்ஷ்மஶரீரம் ஏன் விடுவதில்லை ? எனில்: எல்லாக் கர்மங்களும் கழிந்தாலொழிய ஸூக்ஷ்ம ஶரீரம் விடாது. ப்ராக்ருதமான இந்த உலகத்தில் அப்ராக்ருதமான ஶரீரமில்லாமையாலே, முக்தி அடையும்போதும் எம்பெருமான் ப்ராக்ருதமான இந்த ஸூக்ஷ்ம ஶரீரத்தை க₃மனஸாத₄னமாக வைத்தே அப்ராக்ருத தே₃ஶத்துக்கு இந்த ஜீவனை அழைத்துச்செல்கிறான். ஆகையால் இது விடுமிடம் அப்ராக்ருததே₃ஶமாகவேவேண்டும். இது இல்லாமலே அப்ராக்ருத தே₃ஶத்துக்குப் போகக்கூடாதோ ? எனில்: அவயவமற்ற ஜீவன் அவயவமுள்ள ஶரீரமில்லாமல் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குப் போகமுடியாது. ஆகையால் இந்த ப்ராக்ருத ஶரீரம் அப்ராக்ருத தே₃ஶத்தின் கீழெல்லையான விரஜை வரையில் தொடர்கிறது. அத்துடன் அர்ச்சிராதி₃ க₃தியாலே போகிற வழியிலுள்ள தே₃வஜாதிகள் இந்த முக்தனுக்கு உபசாரங்கள்செய்து ஸ்வரூபம் பெறுவதற்கும் இவனுக்கு ஸூக்ஷ்மஶரீரம் வேணும்.

ஸௌக்ஷ்மம் விட்டால் பன்னிரண்டு கோடி ஆதி₃த்யர்களை அழலைக்கழற்றி ஒளியைத் தேக்கினாற்போலே தேஜஸ்ஸு புற வெள்ளப்பட்டால் தே₃வதே₃ஶங்களிலுள்ளார் எதிர்நின்று கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெறவொண்ணாமையாலே; இன்னம் ராஜமஹிஷி அந்த:புரத்துக்குப் போகும்போது தட்டுப்பாயிட்டுப் போகை ஸ்வரூபமிறே; அப்போது தே₃வஜாதிகளும் "இடர்கெட எம்மைப் போந்தளியாய்" என்றும், "நீணகர் நீளெரி வைத் தருளாய்" என்றும் சொல்லி, கருமம் தலைக்கட்டினால், எதிரம்பு கோக்கும் அஸத்துக்களாகையாலே, இப்படிப்பட்ட ஹேயர் கண்படாமல் போய் வைகுந்தத் திருவாசலிலே இழிந்து தட்டுப் பாய் வாங்குமித்தனை; அதாவது-விரஜையிலே இழியுமித்தனை.

---

ஶரீரமில்லாவிடிலும், இவனைத் தன் ஸங்கல்பத்தாலே பரமபத₃த்துக்கு இட்டுச் செல்லமுடியாதோ? எனில்: அப்படி ஶரீரத்தைக் கழித்து இட்டுச் சென்றாலும் ஜ்ஞாநாநந்த₃மயமான இந்த ஜீவஸ்வரூபம் ஸௌக்ஷ்மஶரீரம் விட்டவுடன் பன்னிரண்டுகோடி ஸௌர்யர்களுடைய உஷ்ணத்தை எடுத்துவிட்டு ஒளியை மாத்திரம் தேக்கினாற்போல் ஒளியுள்ளதாயிருக்கும். அந்த ஒளிவெள்ளத்துக்கு எதிர்நின்று தே₃வ ஜாதிகள் உபசாரம் செய்து ஸ்வரூபம் பெறமுடியாது. அதற்காக வும் எம்பெருமான் ஸௌக்ஷ்மஶரீரத்தோடேயே இவனை அழைத்துச் செல்கிறான். மேலும், ராஜமஹிஷியை அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்லும்போது பல்லக்கின்மேலே தட்டுப்பாயிட்டு, பிறர் கண் படாதபடி அழைத்துச்செல்வது வழக்கமன்றோ. தே₃வஜாதிகளும் "இடர்கெட எம்மைப் போந்தளியாய்" [திருவாய் 10-1-4] "நீணகர் நீள் எரி வைத்தருளாய்" [திருவிரு 92] என்று எம்பெருமானை ப்ரார்த்தி₂த்து அவனைக்கொண்டு தங்கள் ஶத்ருஸம்ஹாரத்தை ஸாதி₄த்துக்கொண்டபின் அந்த எம்பெருமான் மேலேயே எதிரம்பு கோக்கும் ரஜஸ்தமோகு₃ணமுள்ளவர்களாகையாலே, இவர்கள் ஜீவ ஸ்வரூபத்தை உள்ளபடி பார்க்கலாகாது என்னும் திருவுள்ளத்தாலே அந்த ஸ்வரூபத்தை மறைக்கும் தட்டுப்பாய்போலேயிருக்கும் ஸௌக்ஷ்மஶரீரத்தையிட்டு மறைத்து, தனக்கு மஹிஷிபோலிருக்கும் இந்த முக்தஜீவனை அழைத்துச்செல்கிறான் என்றும் கொள்ளலாம். இப்படி பிறர் கண்படாமல் ஸௌக்ஷ்மஶரீரத்தையிட்டு மறைத்து அப்ராக்ருத தே₃ஶம் புகும்வரையில் அழைத்துச்சென்று, அந்த தே₃ஶத்

திரைவாங்கினால் மதிமுகமடந்தையர் முகத்திலே விழிக்கு மித்தனை. "ஶதம் மாலாஹஸ்தா:" என்று ஸ்ரீவைகுண்ட₂ நாத₂னை ஒப்பிக்கக்கடவ அப்ஸரஸ்ஸுக்கள் இவனை ஒப்பிக்க வைத்தால் அவர்கள் முகத்திலேயிறே இவன் விழிப்பது. h ஸ்வரூபமிருக்கும்படி ஜ்ஞாநமாயிருக்கும், அவனுகப்பிலே பிறக்கையாலேயிறே; அதாவது-அவனுடைய ஜ்ஞாநாநந்த₃த் திலே இவன் ஸத்தை கிடக்கை. அவனுகப்பிலே பிறக் கையாலேயிறே இவனை "தண்ணீர் தண்ணீர்" என்னப் பண்ணுகிறது.

## இருபத்தெட்டாம் வார்த்தை

ரக்ஷ்யரக்ஷக ஸம்ப₃ந்த₄ம், பிதா புத்ர ஸம்ப₃ந்த₄ம், ஶேஷஶேஷி ஸம்ப₃ந்த₄ம், ப₄ர்த்ருப₄ார்யா ஸம்ப₃ந்த₄ம்,

---

தின் எல்லையிலேயுள்ள விரஜாநதி₃யிலிழிந்தவுடன் ஸூக்ஷ்ம ஶரீர மாகிற தட்டுப்பாயை வாங்கிவிடுகிறான் எம்பெருமான். அப்படித் திரைவாங்கினவுடன் "மதிமுகமடந்தையர்" [திருவாய் 10-9-10] என்று ஆழ்வாரால் அருளிச்செய்யப்பட்ட நித்யஸூரிகளின் முகத்தி லேயே முதலில் விழிக்கிறான் இந்த முக்த ஜீவன். "தம் பஞ்சஶதாந் யப்ஸரஸாம் ப்ரதித₄ாவந்தி ஶதம் மாலாஹஸ்தா:" என்று தொடங் கும் கௌஷீதகீ வாக்யத்தில் சொன்னபடியே ஸ்ரீ வைகுண்ட₂நாத₂ னுக்கு அலங்காரம் செய்ய ஏற்பட்ட நித்யஸூரிகள் கோ₃ஷ்டி₂யில் சேர்ந்த அப்ஸரஸ்ஸுக்கள் இவனுக்கும் அலங்காரம் செய்ய நிய மிக்கப்பட்டிருக்கிறார்களாகையாலே, முக்தனானவுடன் இவன் முதலில் அவர்கள் முக₂த்திலேயே விழிக்கிறான். h ஸ்வரூபமிருக்கும்படி......... என்னப்பண்ணுகிறது — எம்பெருமான் இந்த ஜீவஸ்வரூபத்தைத் தனக்குப் பரமபோ₄க்₃யமான உணவுபோலே உகந்திருக்கிறானாகை யாலே, இந்த ஜீவஸ்வரூபம் ஜ்ஞாநமயமாயிருக்கிறது. அதாவது அவனுடைய ஜ்ஞாநாநந்த₃த்தில் இவன் ஸத்தைபெறும்படி கிடக் கிறது. இப்படி அவன் உகப்புக்கு விஷயமாகையினாலேயே அநாதி₃ காலமாக ஸர்வேஸ்வரன்—விடாய்த்தவன் தண்ணீரைத் தேடியலைவது போலே இவனைத் தேடியலையும்படி பண்ணுகிறது.

### இருபத்தெட்டாம் வார்த்தை

"பிதா ச ரக்ஷகஶ் ஶேஷீ ப₄ர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: | ஸ்வாம் யாத₄ாரோ மமாத்மா ச போ₄க்தா சாऽऽத்₃யமநூதி₃த: ||" [தந்தையாக

ஜ்ஞாத்ருஜ்ஞேய ஸம்ப₃ந்த₄ம், ஸ்வஸ்வாமி ஸம்ப₃ந்த₄ம், ஶரீரஶரீரி ஸம்ப₃ந்த₄ம், ஆத₄ராதே₄ய ஸம்ப₃ந்த₄ம், போ₄க்த்ருபோ₄க்₃ய ஸம்ப₃ந்த₄ம்.

## இருபத்தொன்பதாம் வார்த்தை

a ப்ரணவத்தில் சதுர்த்தி₂யாலே — ஶேஷத்வத்தைச் சொல்லி, அகாரத்தாலே — ஶேஷத்வப்ரதிஸம்ப₃ந்தி₄யைச் சொல்லி, மகாரத்தாலே-ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயஞ்சொல்லி, அவதா₄ரணத்தாலே-ஶேஷத்வத்தினுடைய அநந்யார்ஹத்வம் சொல்லுகையாலே ஸ்வரூபம் சொல்லிற்று; b அகாரத்தாலே-ரக்ஷகனைச்சொல்லி, மகாரத்தாலே—ரக்ஷ்யவஸ்துவைச்சொல்லி,

---

வும், ரக்ஷகனுகவும்,ஶேஷியாகவும், ப₄ர்த்தாவாகவும், ஜ்ஞேயனுகவும், ஸ்வாமியாகவும், ஆத₄ாரனுகவும், ஆத்மாவாகவும், போ₄க்தாவாக வும் இப்படி எம்பெருமான் என்னோடு ஒன்பது உறவுடையவனுக முதல் ரஹஸ்யமான பெரியதிருமந்த்ரத்திலே சொல்லப்படுகிருன்] என்ற ப்ரமாணத்தில் காட்டப்பட்ட இந்த நவவித₄ ஸம்ப₃ந்த₄ங்களும் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த நவவித₄ ஸம்ப₃ந்த₄ம் என்னும் க்₃ரந்த₂த்தில் விவரிக்கப்பட்டன. பா₄ரதீய பூர்வஶிக₂ ஶ்ரீவைஷ்ணவ ஸபை₄யின் ஒன்பதாவது மகாநாட்டில் அக்₃ராஸன விஜ்ஞாபனத்தில் நம்மாலும் எளிய நடையில் விவரிக்கப்பட்டன.

### இருபத்தொன்பதாம் வார்த்தை

இவ்வார்த்தையில் முதலில் ப்ரணவம் ஸ்வரூபோபாய புருஷார்த்த₂ங்களைச் சொல்லும் விதமும், அதன்பிறகு திருவஷ்டாக்ஷரம் அர்த்த₂பஞ்சகத்தைச் சொல்லும் விதமும் விவரிக்கப்பட்டிருக்கிறது. a ப்ரணவத்தில் அகாரத்தை ஒட்டி மறைந்திருக்கும் நாலாம் வேற்றுமையாலே ஜீவனுடைய ஶேஷத்வம் சொல்லப்படுகிறது. அகாரத்தாலே ஶேஷத்வம் எம்பெருமானைக் குறித்தது என்று சொல்லப்படுகிறது. மகாரத்தாலே ஶேஷத்வத்தை உடையவன் ஜீவன் என்று சொல்லப்படுகிறது. ஏகாரப்பொருளையுடைய உகாரத்தாலே, இந்த ஶேஷத்வம் எம்பெருமானைத் தவிர வேறெவரையும் குறித்ததன்று என்று சொல்லப்படுகிறது. ஆக, இப்படி ப்ரணவத்தாலே ஜீவனுடைய ஸ்வரூபம் சொல்லப்பட்டது. b"அவ-ரக்ஷணே" என்ற தா₄துவிலிருந்து உண்டான அகாரத்தாலே எம்பெருமானே

சதுர்த்தி₂யாலே-ரக்ஷ்ய ரக்ஷக ப₄ாவத்துக்கு வேண்டும் உறவு சொல்லி, அவதா₄ரணத்தாலே — ரக்ஷ்ய ரக்ஷகங்களினுடைய லக்ஷ்யலக்ஷணஞ் சொல்லுகையாலே உபாயம் சொல்லிற்று. c அகாரத்தாலே-ப்ராப்யவஸ்துவைச் சொல்லி, மகாரத்தாலே-ப்ராப்தாவைச் சொல்லி, சதுர்த்தி₂யாலே - ப்ராப்திப₂லமான கைங்கர்யத்தைச் சொல்லி, அவதா₄ரணத்தாலே – கைங்கர்ய ப்ரகாரத்தைச் சொல்லுகையாலே ப்ராப்யம் சொல்லிற்று. d ப்ரணவத்தாலே — ஆத்மஸ்வரூபஞ்சொல்லிற்று; நாராயண பத₃த்தாலே – பரமாத்மஸ்வரூபம் சொல்லிற்று ; சதுர்த்தி₂

---

ரக்ஷகன் என்று சொல்லப்பட்டது. மகாரத்தாலே அவனால் ரக்ஷிக்கப்படுமவன் ஜ்ஞானமயனாய், ஜ்ஞாதாவாய், அணுவான ஜீவன் என்று சொல்லப்பட்டது. மறைந்து நிற்கும் நாலாம் வேற்றுமையால் அவன் ரக்ஷகனாவதற்கும், இவன் ரக்ஷிக்கப்படுமவனாவதற்கும் வேண்டியதான ஶேஷஶேஷி ப₄ாவமாகிற உறவு சொல்லப்பட்டது. ஶேஷத்வம் வேறொருவருக்கும் உரியதன்று என்று காட்டும் ஏகாரத்தாலே, எம்பெருமான் ஒருவனே இவனை ரக்ஷிப்பதற்கு உரியவன் என்று காட்டுகையாலே, ரக்ஷகனான எம்பெருமானுக்கு ஸர்வரக்ஷகத்வமாகிற லக்ஷணமும், ரக்ஷ்யனான ஜீவனுக்கு ப₄க₃வதே₃கரக்ஷ்யத்வமாகிற லக்ஷணமும் சொல்லப்பட்டது. இவ்விதமாக ஜீவனுக்கு உபாயமாக இருக்கத்தக்கவன் எம்பெருமானே என்று ப்ரணவத்தாலே சொல்லப்பட்டது. c அகாரத்தாலே 'அடையத்தக்கவன் எம்பெருமானே' என்று சொல்லப்பட்டது. மகாரத்தாலே 'ஜ்ஞாதாவான ஜீவன் அடைபவன்' என்று சொல்லப்பட்டது ஶேஷத்வத்தைச் சொல்லும் நாலாம் வேற்றுமையால் 'ஜீவன் எம்பெருமானை அடைந்து பெறும் ப₂லம் ஶேஷத்வப₂லமான கைங்கர்யமே' என்று உணர்த்தப்பட்டது. ஏகாரப்பொருளையுடைய உகாரத்தாலே 'அக்கைங்கர்யம் எம்பெருமானுக்கு உரியது' என்று சொல்லப்பட்டது. ஆக, இவ்வண்ணமாக ஜீவனுக்கு ப்ராப்யம் பரார்த்த₂ப₄க₃வத்கைங்கர்யமே என்று சொல்லப்பட்டது. ஆக, ப்ரணவம் ஸ்வரூபோபாய புருஷார்த்த₂ங்களைச் சொல்லுவதாகிறது. d திருவஷ்டாக்ஷரம் அர்த்த₂பஞ்சகத்தைச் சொல்லுகிறது என்று விவரிக்கப்படுகிறது. முற்கூறியபடி ப்ரணவத்தாலே அடைபவனான ஜீவனின் ஸ்வரூபம் சொல்லப்பட்டது. நாராயண பத₃த்தாலே அடையப்படுமவனான பரமாத்மாவின் ஸ்வரூபம் சொல்லப்பட்டது. கடைசியிலுள்ள 'ஆய' என்னும் நாலாம் வேற்றுமையாலே அடைந்து பெறும் புருஷார்த்த₂ம் சொல்

யாலே - புருஷார்த்த₂ஸ்வரூபம் சொல்லிற்று; "ம:" என்கிற இத்தாலே-விரோதி₄ஸ்வரூபம் சொல்லிற்று ; "நம:" என்கிற இத்தாலே-உபாயஸ்வரூபம் சொல்லிற்று; ஆகையாலே ஸகல வேதா₃ந்தப்ரதிபாத்₃யமான அர்த்த₂பஞ்சகம் சொல்லிற்று.

## முப்பதாம் வார்த்தை

ஆஶ்ரயியான ஶேஷத்வத்தை ப்ரத₂மத்திலே சொல்லி, ஆஶ்ரயமான ஜ்ஞாநாநந்த₃லக்ஷண வஸ்துவைப் பின்பு சொல்லுகைக்கு ஹேதுவென் ? என்னில் ; a அஹமர்த்த₂த்துக்கு ஜ்ஞாநாநந்த₃ங்களிலுங்காட்டில் ப்ரதா₄ந நிரூபகம் ஶேஷத்வமென்னுமிடம் தோற்றுகைக்காகவும், b தா₃ஸ்யரஸத்

---

லப்பட்டது. அஷ்டாக்ஷரத்தின் நடுவிலுள்ள 'நம:' எனும் ஶப்₃த₃த்தில் 'ம:' என்னும் பத₃ம் அஹங்காரம் மமகாரம் முதலான விரோதி₄களைக் குறிக்கையாலே ப்ராப்தி விரோதி₄ சொல்லப்பட்டது. நம: பத₃த்தாலே "என்னை ரக்ஷித்துக்கொள்வதற்கு என்னாலாகாது ; எம்பெருமானே ரக்ஷகன்" என்று உணர்த்துகையாலே 'அடைவதற்கு உபாயம் எம்பெருமானே' என்று சொல்லப்பட்டது. ஆக, இவ்வண்ணமாக எல்லா வேதா₃ந்தங்களிலும் சொல்லப்படும் அர்த்த₂பஞ்சகம் ஸகல வேதா₃ந்த ஸாரமான திருவஷ்டாக்ஷரத்தால் சொல்லப்பட்டதாயிற்று.

### முப்பதாம் வார்த்தை

இவ்வார்த்தையில் ஜீவனைப் பற்றிநிற்கும் ஶேஷத்வத்தை மறைந்து நிற்கும் நாலாம் வேற்றுமையாலே முதலில் சொல்லி, அந்த ஶேஷத்வத்துக்கு இருப்பிடமான ஜ்ஞாநாநந்த₃லக்ஷணமான ஆத்மாவை மகாரத்தாலே பிறகு சொல்லுவதற்குப் பின்வரும் காரணங்கள் காட்டப்படுகின்றன:— (a) அஹம் என்னும் பத₃த்துக்குப் பொருளான ஜீவனுக்கு மகாரத்தில் சொல்லப்பட்ட ஜ்ஞாநாநந்தங்களைக் காட்டிலும், மறைந்து நிற்கும் நாலாம் வேற்றுமையால் சொல்லப்பட்ட ஶேஷத்வமே முக்கிய நிரூபகம் என்று உணர்த்த வேண்டியது முதற்காரணம். (b) ஆத்மா ஜ்ஞாநாநந்த₃மயமானது என்று காட்டும் மகாரத்தை முதலில் சொன்னால் அந்த ஆத்மாவையே அநுப₄விப்பதாகிற கைவல்ய மோக்ஷத்தில் ருசி உண்டாகி தா₃ஸ்யரஸத்தில் ஈடுபட முடியாதபடி தடைசெய்துவிடுமாகையாலே,

தில் இழியவொட்டாத ஆத்மாநுப₄வமாத்ரத்திலே பர்யவஸிப்பதொரு அந்தராயமுண்டாகையாலே தத்பரிஹாரார்த்த₂மாகவும், c நெருப்பிலே புக்குச் சிலர் வேவாரைக் கண்டால், அவர்களை இன்னாரென்று பாராதே பற்றியெரிகிற நெருப்பை அவிக்கையிலே யத்நம் பண்ணுவாரோபாதி, அத₃ாஹ்யமான ஆத்மவஸ்துவை அநாதி₃காலம் பற்றி த₃ஹித்துப்போருகிற ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை அகற்றுவிக்கையிலே தாத்பர்யமாகையாலும், d புஷ்பத்துக்கு ஶ்லாக்₄யதை பரிமளத்தாலே ஆகிறவோபாதி ஸ்வரூபத்துக்கும் உபாதே₃யத்வம் இஸ்வப₄ாவ விஶேஷத்தாலே ஆகையாலும், இவ்வோ ப்ராத₄ாந்யத்தைப் பற்ற ப்ரத₂மத்திலே ஶேஷத்வத்தை உபாத₃ாநம் பண்ணிற்று.

## முப்பத்தோராம் வார்த்தை

இவ்வாத்மாவுக்கு எம்பெருமான் கட்டின மங்க₃ல்ய ஸூத்ரம் திருமந்த்ரம் என்று பிள்ளை திருநறையூரறையர் அருளிச்செய்வர்.

---

இந்த அபாயத்தைத் தவிர்ப்பதற்காக த₃ாஸ்ய ரஸத்தைக் காட்டும் ஶேஷத்வத்தை நாலாம் வேற்றுமையாலே முதலில் சொல்லிற்று என்பது இரண்டாவது காரணம். (c) நெருப்பிலே அகப்பட்டுச் சிலர் வெந்துகொண்டிருப்பதைக் கண்டால், அவர்களை இன்னாரென்று ஆராயாமல் பற்றியெரிகிற நெருப்பை அணைப்பது நல்லோர்களின் இயல்பு; அதுபோலே, எரிக்கவொண்ணாத ஆத்மவஸ்துவையும் அநாதி₃காலமாகப் பற்றி எரித்துக்கொண்டிருக்கும் ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை அகற்றவேண்டியதே முதலில் செய்யவேண்டியது என்னும் கருத்தாலே ஶேஷத்வத்தை முதலில் சொல்லிற்று என்பது மூன்றாவது காரணம். (d) மணமானது மலரைப் பற்றிநிற்கும் த₄ர்மமாகவேயிருந்தாலும் மணத்தைக்கொண்டே மலருக்குப் பெருமை உண்டாவதுபோலே, ஶேஷத்வத்தைக்கொண்டே ஜீவஸ்வரூபத்துக்குச் சிறப்புண்டாகிறதாகையாலே அதை முதலில் சொல்லிற்று என்பது நாலாவது காரணம். இப்படி நாலு காரணங்களாலே ஶேஷத்வத்துக்கு இருப்பிடமான ஜீவனை மகாரத்தாலே சொல்லுவதற்கு முன்பே அவனிடமிருக்கும் ஶேஷத்வ த₄ர்மத்தை முதலில் சொல்லிற்று.

## முப்பத்திரண்டாம் வார்த்தை

a ஸம்ஸாரவர்த்தகமாயிருக்கும் தாலிக்கயிறு பதிஞறிழை யாய் இரண்டு சரடாயிருக்கும்; கைங்கர்யவர்த்தகமான மங்கல்யஸூத்ரம் எட்டிழையாய் மூன்று சரடாயிருக்கும்; b ஸ்வரூபத்தின் உணர்த்தியைப் பற்றியிருப்பது ஒரு சரடும், ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியைப் பற்றியிருப்பது ஒரு சரடும், ஸ்வரூபத்தின் உணர்த்தியாலும் ஸ்வரக்ஷணத்தில் அஶக்தி யாலும் பலித்த ஈஶ்வரனை நாம் பேணுகையை வெளியிட்டி ருப்பது ஒரு சரடுமாயிருக்கும்.

---

### முப்பத்தோராம் வார்த்தை

"பர்த்தாவான எம்பெருமான் தனது பார்யையான ஜீவாத்மா வுக்குக் கட்டின மங்கள ஸூத்ரம்போலே இருப்பது திருமந்த்ரம்" என்று பிள்ளைதிருநறையூர் அறையர் அருளிச்செய்வர் என்பது இவ் வார்த்தை. அடுத்த வார்த்தையிலும், "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே திருமந்த்ரம்" [113] என்னும் முமுக்ஷுப்படி வாக்யத்திலும் இது விவரிக்கப்பட்டது.

### முப்பத்திரண்டாம் வார்த்தை

a ஸம்ஸாரத்தை வளர்ப்பதற்குறுப்பான பெண்கள் அணியும் தாலிக்கயிறு பதினறு இழையாய் இரண்டு சரடாயிருக்கும். கைங் கர்யத்தை வளர்ப்பதற்கு உறுப்பாய், பரமாத்மாவுக்கு பார்யை களாகிற ஜீவாத்மாக்கள் அணிகிற திருமந்த்ரமோவெனில், எட்டு அக்ஷரங்களையுடையதாகையாலே எட்டு இழையுடையதாய், மூன்று பதங்களை உடையதாகையாலே மூன்று சரடுகளை உடையதாயிருக் கும். b அதில் முதற்சரடான ப்ரணவம் ஜீவனின் ஸ்வரூபமான அநந்யார்ஹஶேஷத்வத்தைச் சொல்லுவது. இரண்டாவது சரடான 'நம:' பதமும் தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு ஶக்தியின்மையைச் சொல்லுவது. மூன்ருவது சரடான 'நாராயணாய' என்னும் பதமும் முற் கூறிய ஸ்வரூபஜ்ஞானத்தாலும் தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் அஶக்தியாலும் உண்டாவதாய், எம்பெருமான் உகப்புக்கேயானதான கைங்கர்யத்தை வெளியிடுவதாயிருக்கும்.

### முப்பத்துமூன்ரும் வார்த்தை

a 'எம்பெருமானுக்கு நாம் அடிமை' என்னும் அறிவு இல்லாத வர்களுக்கு ப்ரணவத்தின் பொருள் விளங்கவில்லை. 'தேஹமே ஆத்மா' என்று நினைத்திருப்பவர்களுக்கு நடுப்பதமான நமஸ்ஸின்

## முப்பத்துமூன்றும் வார்த்தை

a ஶேஷத்வஜ்ஞாநமில்லாதார்க்கு ப்ரணவத்தில் அந்வய மில்லை; தே₃ஹாத்மாபி₄மாநிகளுக்கு நமஸ்ஸில் அந்வயமில்லை; கைங்கர்ய ருசியில்லாதார்க்கு நாராயணபத₃த்தில் அந்வய மில்லை. b ஶேஷத்வ ஜ்ஞாநமிருக்கும்படியை இளையபெருமாள் ஆசரித்துக்காட்டினார்; எங்ஙனேயென்னில்; —பெருமாள்“நில்” என்ன, பிராட்டியை முன்னிட்டுக்கொண்டு பெருமாள் ஸ்வாதந்த்ர்யத்தையழித்து பெருமாளுக்கும் பிராட்டிக்கும் அடிமை செய்கையாலும், எல்லை நிலத்திலே பிராட்டியைப் பிரிந்து பத்து மாஸம் ஆறியிருந்த பெருமாள், இளையபெருமாளைப் பிரிந்து பகல் அமுதுசெய்யாதே“நான் உன்னையன்றியிலேன் கண்டாய்” என்று பின்தொடர்ந்த இளையபெருமாளை, “நீயென்னை யன்றியிலை” என்று பின்தொடரும்படியாயிருக்கையாலும்;

---

பொருள் விளங்கவில்லை. ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யத்தில் ருசியில்லாதவர்களுக்குக் கடைசிப் பத₃மான நாராயணபத₃த்தின் பொருள் விளங்கவில்லை. b ப₄க₃வச்சே₂ஷத்வ ஜ்ஞானம் எத்தகையது என்பதை இளையபெருமாள் தன் நடத்தையாலே காட்டினார். எப்படியெனில்: பெருமாள் இளையபெருமாளை “காட்டுக்கு என்னோடு வராதே இங்கேயே இரு” என்று சொல்ல, பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு பெருமாளுடைய ஸ்வாதந்த்ர்யத்தைப் போக்கிப் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் அடிமை செய்வதன்மூலம் நடந்து காட்டினார். அஶோகவனத்திலேயிருந்தபோது பிராட்டியைப் பிரிந்து பத்துமாஸம் பொறுத்திருந்தார் பெருமாள். ஆனால், “நான் உன்னையன்றியிலேன் கண்டாய்” [நான்திருவ 7] “ந சாஹமபி ராக₄வ” [ரா-அ 53-31] [ராக₄வ! உன்னைப்பிரிந்து நான் உயிர் த₄ரிக்கமாட்டேன்] என்று பெருமாளைப் பின்தொடர்ந்த இளைய பெருமாள் கடைசியில் பெருமாளை விட்டுப்பிரிந்தபோது அன்று பகல் அமுது செய்யாமல் “நீயென்னையன்றியிலை” [நான்திருவ 7] என்கிற ரீதியில், “அத்₃யைவாஹம் க₃மிஷ்யாமி லக்ஷ்மணேந க₃தாம் க₃திம்” [ரா-உ 107-3] [லக்ஷ்மணன் சென்ற வழியிலே இன்றே பின்செல்லுவேன்] என்று பெருமாள் பின்தொடரும்படியிருப்பது இளையபெருமாளுடைய ஶேஷத்வாசரணம். ஆக, இத்தால் ப்ரணவார்த்த₂மறிந்ததனால் ஏற்படும் ஶேஷத்வஜ்ஞானமிருக்கும் படியை இளையபெருமாள் நடந்துகாட்டினது நிரூபிக்கப்பட்டது.

c ஸ்வரக்ஷணத்தில் அந்வயமில்லாத அத்யந்த பாரதந்த்ர்யத்தை ஸ்ரீப₄ரதாழ்வான் ஆசரித்துக்காட்டினார்; எங்ஙனேயென்னில்; — ''என்மகன் * மோவாயெழவேணும்'' என்ற கைகேயியாகிற காளராத்ரியினுடைய பாபப்பட்டோலையைச் சுட்டு ''ந மந்த₂ராயா ந ச மாதுரஸ்யா தோ₃ஷோ ந ராஜ்ஞோ ந ச ராக₄வஸ்ய। மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத் வநப்ரவேஶே ரகு₄நந்த₃நஸ்ய ॥'', ''விலலாப ஸபா₄மத்₄யே ஜக₃ர்ஹே ச புரோஹிதம்'' ''ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய த₄ர்மம் வக்துமிஹார்ஹஸி'' புனைந்த ஜடையும், உடுத்த மரவுரியும், புழுதியார்ந்த வடிவும், தளர்ந்த நடையுமாய், ஸ்வரூபஹாநியை விளைப்பித்துப் பிணந்தின்னியிருந்த தே₃ஶத்தை விட்டு, ''எனக்கு'' என்ற கைகேயி வயிற்றில் பிறப்பு பின்னேதள்ள, பெருமாளருள் முன்னேநடத்த, ஒரு நடையிலே ஒன்பது நடை

c இனி நம:பத₃த்தின் பொருளை அறிந்ததனாலேற்படும் அத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞானத்தினால் தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு அந்வயமில்லாமலிருக்கும்படியை ஸ்ரீப₄ரதாழ்வான் நடந்து காட்டினது நிரூபிக்கப்படுகிறது. எப்படியெனில்: ப்ரளயகாலராத்ரிபோலே கொடியவளான கைகேயி ''என்மகன் ஸ்வாதந்த்ர்யத்தை உடையவனாகவேணும் (அரசனாகவேணும்)'' என்று த₃ஶரத₂னிடமிருந்து வாங்கியிருந்த பாபவரத்தைச் சுட்டு எரித்து. ''ராமபிரான் காடு சென்றதற்கு—கூனி, என் தாயான இந்தக் கைகேயி, அரசனான த₃ஶரத₂ன், ஸ்ரீராமபிரான் ஆகிய எவருடைய குற்றமும் காரணமன்று; என் பாபமே இதற்குக் காரணம்'' ''ஸபை₄யின் நடுவிலே ப₄ரதன் அழுதான்; புரோஹிதரான வஸிஷ்ட₂ரை இகழ்ந்தான்'' [ரா-அ 82-10] ''ராஜ்யமும் நானும் ராமனுடைய உடைமைகள்; (அப்படியிருக்கும்போது எனக்கு அரசாள உரிமையுண்டா என்னும்) த₄ர்மத்தை நீர் இங்கு சொல்லவேண்டும்'' [ரா-அ82-12] என்று தன்னை நொந்து, புலம்பி, நீதிகேட்டு, புனைந்த சடையும் உடுத்தமரவுரியும் புழுதிபடிந்த பொன்மேனியும் தளர்ந்தநடையுமுடையவனாகி, ஸ்வரூபஹாநியை விளையச்செய்த பிணந்தின்னிக் கழுகுபோன்ற கைகேயியிருந்த தே₃ஶத்தை விட்டு, ''என்மகன் அரசாளவேணும்'' என்ற கைகேயி வயிற்றில் பிறப்பு பின்னிருந்து தள்ள, பெருமாளுடைய அருள் முன்னிருந்து இழுக்க, ஒன்றுக்கு ஒன்பது மடங்கு வேக₃த்

* மோவாயெழுதல்-தாடி மீசை முளைத்தல்;
(இங்கு) புருஷனுக்குரிய ஸ்வாதந்த்ர்யம் எழுதல்.

நடந்து, எழுந்தருளியிருந்த சித்ரகூடத்திலே சென்று, வகுத்த திருவடிகளைப்பெற்று விடைகொண்டு, பின்பு அவத்₃யம் விளைக்கும் படைவீட்டிற் புகாதே புறப்படை வீட்டிலே—"ராமாக₃மநகாங்க்ஷை"யோடே பதினாலாட்டைநாள் இருந்த படியாலும். d ஈஶ்வரனைப் பேணுகையை ஶ்ரீஶத்ருக்₄நாழ்வான் ஆசரித்துக்காட்டினார்; எங்ஙனேயென்னில்;—பெருமாளல்லதறியாத ஶ்ரீப₄ரதாழ்வானை யல்லதறியாதே, பெருமாளுகப்பின் எல்லைநிலத்திலே அடிமைசெய்கையாலும். e இம்மூன்று அர்த்த₂த்தையும் பிராட்டி ஆசரித்துக்காட்டினாள்; எங்ஙனேயென்னில்; — கைகேயிவரவ்யாஜத்தாலே பெருமாள் வநத்துக்கு எழுந்தருளுகிறபோது பிரியாதே பின்தொடர்ந்த உணர்த்தியாலும், பெருமாளைப் பிரிந்து தனியிருந்தவன்று தனியிறுப்பு மாறத் தான் துரும்பு நறுக்காத ஸ்வரக்ஷணத்தில்

தோடு நடந்து பெருமாள் இருந்த சித்ரகூடத்துக்குச் சென்று. ஸ்வரூபத்துக்கு வகுத்ததான பெருமாள் பாது₃கைகளைப்பெற்று விடைகொண்டு, திரும்பிவந்தபின்பும், அரசபே₄ாக₃மாகிற குற்றத்தை விளைக்கக்கூடிய அயோத்திநகரில் புகாமல், அந்நகருக்கு வெளியேயிருந்த நந்தி₃க்₃ராமத்திலேயே 'ராமன் வருவான்' என்று எதிர் பார்த்துக்கொண்டு பதினாலாண்டுகள் இருந்தபடியாலே அத்யந்த பாரதந்த்ர்யத்தால் ஏற்படும் ஸ்வரக்ஷணத்தில் ஸ்வாந்வயமில்லாமையை நடத்திக் காட்டினான் ப₄ரதன். d இனி மூன்றுவது பத₃மான 'நாராயணாய' என்னும் பத₃த்தில் சொல்லப்படும் எம் பெருமானுகப்புக்கேயான அடிமையை ஶத்ருக்₄னன் நடத்திக் காட்டினான். எப்படியெனில்: பெருமாளையல்லது அறியாத ப₄ரதனையல்லது அறியாது இருப்பதன்மூலம் பெருமாளுக்கு உகப்பின் எல்லை நிலத்தை விளைக்கும் ப₄ாக₃வத கைங்கர்யத்தைச் செய்வதன்மூலம் நடத்திக்காட்டினான் என்கை. e இம்மூன்று அர்த்த₂த்தையும் பிராட்டி நடத்திக்காட்டியபடி விவரிக்கப்படுகிறது இனி. எப்படியெனில்: கைகேயியின்வரம் என்னும் வ்யாஜத்தையிட்டுப் பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிறபோது அவரைப் பிரியாமல் பின்தொடர்ந்த தன்மூலம் ப்ரணவார்த்த₂மான ஶேஷத்வத்தின் ஜ்ஞானம் காட்டப் பட்டது. பெருமாளைப் பிரிந்து அஶோகவநத்தில் பத்துமாஸம் தனியாயிருந்தபோது அந்தத் தனியிருப்பு மாறுவதற்காகத் தான் துரும்பு நறுக்குவதுபோன்ற அல்பமுயற்சியையும் செய்யாமல், ஸ்வ

அஶக்தியாலும், பரிகரமாய் வந்த திருவடிவாலிலே கொளுத்தின நெருப்பை "ஶீதோ ப₄வ" என்று அவித்து ஈஶ்வரனைப் பேணுகையாலும். f இவ்வர்த்த₂த்தைப் பரமாசார்ய ரான நம்மாழ்வாரும் ஆசரித்துக்காட்டினார்; எங்ஙனே யென்னில்; — "கண்கள்சிவந்து," "கருமாணிக்கமாலை," "நெடுமாற்கடிமை" என்று மூன்றுதிருவாய்மொழியிலே.

## முப்பத்துநான்காம் வார்த்தை

a ஈஶ்வர ஶேஷபூ₄தனென்றும், அந்யஶேஷத்வ நிவ்ருத்தனென்றும், தத்₃விலக்ஷண லக்ஷணநிரூபகனென்றும், அஹங்கார நிவ்ருத்தனென்றும், தத்ஸம்ப₃ந்த₄ யுக்தனென்றும், இங்கரஸ்வப₄ாவனென்றும் தன்னை அநுஸந்தி₄ப்பது.

---

ரக்ஷணத்தில் அஶக்தியாகிற நம:பத₃ார்த்த₂த்தை நடத்திக் காட்டினாள். எம்பெருமானுடைய ஆளாயிருந்த அநுமனின் வாலிலே அரக்கர்கள் கொளுத்தின நெருப்பை "அக்₃நியே! அநுமனுக்குக் குளிர்ந்திருப்பாயாக" [ரா-ஸு 53-29] என்று அவித்து எம்பெருமான் உகந்த அடிமையைச் செய்கையால், 'நாராயணாய' பத₃த்தின் பொருளை நடத்திக் காட்டினாள். f இம்மூன்று அர்த்த₃ங்களைப் பரமாசார்யரான நம்மாழ்வார் மூன்று திருவாய்மொழிகளில் நடத்திக் காட்டினார். எப்படியெனில்: "கண்கள் சிவந்து" [8-8] திருவாய்மொழியிலே ப்ரணவார்த்த₂மான ப₄க₃வச்சேஷத்வத்தையும், "கருமாணிக்கமலை" [8-9] திருவாய்மொழியில் தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தனக்கு அந்வயமில்லாமையாகிற நம:பத₃ார்த்த₂த்தையும், "நெடுமாற்கடிமை" [8-10] திருவாய்மொழியிலே நாராயணாய பத₃ார்த்த₂த்தின் முடிந்த பொருளான ப₄ாக₃வதகைங்கர்யத்தையும் நடத்திக்காட்டினாரன்றோ.

### முப்பத்துநான்காம் வார்த்தை

a ஈஶ்வரனுக்கு அடிமைப்பட்டிருப்பவன் என்றும், மற்றவர்களுக்கு அடிமைப்பட்டிருப்பதிலிருந்து மீண்டவன் என்றும், இத்தகைய அநந்யார்ஹஶேஷத்வ ரூபமான லக்ஷணத்தையே நிரூபகமாகக் கொண்டவன் என்றும், 'தே₃ஹமே ஆத்மா' என்று அபி₄மானிக்கையாகிறஅஹங்காரத்தினின்றும் மீண்டவன் என்றும் எம்பெருமானுடன் உறவு உடையவன் என்றும், அவனுக்கும் அவனடியார்களுக்கும் அடிமைப்படுகையையே இயல்வாக உடையவன் என்றும்—சேதனன் தன்னைப்பற்றி அநுஸந்தி₄க்கவேண்டும்.

## முப்பத்தஞ்சாம் வார்த்தை

ப்ரமாணப்ரமேயப்ரமாதாக்களைச் சேர அநுஸந்தி₄க்கும் படி;—a ஆத்மாவுக்கு ஸ்வரூபம்—அநந்யார்ஹ ஶேஷத்வம்; ஏதத்ப்ரகாஶகம்—ப்ரணவம்; அநந்யார்ஹ ஶேஷத்வப்ரதிஸம்ப₃ந்தி₄—பெருமாள் பொருந்தவிட்ட திருவடிகள் b ஆத்மாவுக்கு ஸ்வரூபம்—அநந்யஶரணத்வம்; ஏதத்ப்ரகாஶகம்—நமஸ்ஸு; அநந்யஶரணத்வப்ரதிஸம்ப₃ந்தி₄ — பெருமாள் அணைத்த திருக்கை. c ஆத்மாவுக்கு ஸ்வரூபம்—அநந்யபோ₄க்₃யத்வம்; ஏதத்ப்ரகாஶகம்—நாராயணபத₃ம்; அநந்யபோ₄க₃த்வப்ரதிஸம் ப₃ந்தி₄—பெருமாள் திருமுறுவல். d இதுக்குக் கருத்து—தானறுகை; சைதந்யமறுகை; ஸாத₄நா(ஸாத்₄யா?)ந்தரமறுகை. அதாவது-வேரறுகை, வ்யாபாராந்தரமறுகை, விஷயாந்தர மறுகை.

---

### முப்பத்தஞ்சாம் வார்த்தை

திருவஷ்டாக்ஷரத்தில் மூன்று பத₃ங்களிலும் ப்ரமாண ப்ரமேய ப்ரமாதாக்களைச் சேர்த்து அநுஸந்தி₄க்கும்படியை விவரிக்கிறது இவ்வார்த்தை. a ஆத்மாவுக்கு ஸ்வரூபம் அநந்யார்ஹஶேஷத்வம். இது ப்ரமேயம். இதைச் சொல்லும் ப்ரமாணம் ப்ரணவம். இதை அநுப₄விக்கும் ப்ரமாதாவான பெருமாளுடைய பொருந்தவிட்ட திருவடிகள் முற்கூறிய ப்ரமேயமான அநந்யார்ஹஶேஷத்வம் சென்று சேருமிடமாகும். b ஆத்மாவுக்கு ஸ்வரூபம் அநந்யஶரணத்வம். இது ப்ரமேயம். இதைச் சொல்லும் ப்ரமாணம் நடுப்பத₃மான நம:பத₃ம். ப்ரமாதாவான பெருமாளுடைய அஞ்சலென்ற திருக்கை முற்கூறிய அநந்யஶரணத்வம் சென்று சேருமிடமாகும். c ஆத்மாவுக்கு ஸ்வரூபம் அநந்யபோ₄க₃த்வம். இது ப்ரமேயம். இதைச்சொல்லும் ப்ரமாணம் மூன்றுவது பத₃மான நாராயணாய பத₃ம். ப்ரமாதாவான பெருமாளுடைய திருமுறுவல் அநந்யபோ₄க₃த்வம் சென்று சேருமிடமாகும். d முதல் பத₃மான ப்ரணவத்தின் அர்த்த₂த்தை முற்கூறியபடி அறிந்தால், சேதனன் தன்னையறிந்து அநாதி₃காலமாகத் தன்னையறிவதற்கு மூலவிரோதி₄யாயிருந்த அசித்ஸம்ப₃ந்த₄ம் வேரறுக்கப்பெறுவன். நம: பத₃ார்த்த₂த்தை முற்கூறியபடி அறிந்தால், ஜ்ஞாநஶக்திகளின் மிகுதியாலே ப₄க்தி முதலான உபாயங்களை அநுஷ்டி₂த்துத் தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தான் முயல்வது அறுந்துவிடும். மூன்றுவதான நாராயணாய பத₃ார்த்த₂த்தை முற்கூறியபடி அறிந்தால், ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற மற்ற ஸாத்₄யங்களில் பற்றறுந்து, ஶப்₃த₃ம் தொடக்கமாய், ஆத்மா ஈருன மற்ற விஷயங்களில் பற்றும் அறுந்துவிடும்.

## முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறதென்று திருக்குருகைப்பிரான்பிள்ளான் அநுஸந்தி₄த்தருளுவர்; திருமந்த்ரம் ப்ராப்யம் சொல்லுகிறது என்று பிள்ளைதிருநறையூரரையர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய அநந்யார்ஹத்வம் சொல்லுகிறதென்று நஞ்சீயர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய பாரதந்த்ர்யம் சொல்லுகிறதென்று எம்பார் அநுஸந்தி₄த்தருளுவர்; b திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—ஜ்ஞாந வைராக்₃ய ப₄க்திகளை வெளியிடுகிறதென்று முதலியார் அநுஸந்தி₄த்தருளுவர்; c திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—அபி₄ஜந வித்₃யா வ்ருத்தங்களை வெளியிடுகிறதென்று ஆளவந்தார் அநுஸந்தி₄த்தருளுவர்; d திருமந்த்ரம் அர்த்த₂ பஞ்சகத்தையும் சொல்லுகிறதென்று நம்பிள்ளை அநுஸந்தி₄த்தருளுவர்; e பாணிக்₃ரஹணமும் உடன்மண

---

### முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம்—ஜீவபரஸ்வரூபத்தையும், ப்ராப்யத்தையும், ஜீவனுடைய அநந்யார்ஹத்வத்தையும், பாரதந்த்ர்யத்தையும் சொல்லுவதாலும், இவற்றில் ஒவ்வொன்றே அதில் சொல்லப்படும் அர்த்த₂ங்களில் முக்₂யமானது என்பது ஒவ்வொரு ஆசார்யருக்குக் கருத்து. b திருமந்த்ரத்தில் ப்ரணவம் ஜீவபரஸ்வரூபஜ்ஞானத்தையும், நம: பத₃ம் மற்ற உபாயங்களில் வைராக்₃யத்தையும், மூன்றுவதான நாராயணாயபத₃ம் கைங்கர்யத்துக்குக் காரணமான ப₄க்தியையும் ஜீவனுக்கு விளக்கிறது என்பது பெரியமுதலியாரான நாத₂முனிகளுடைய நிர்வாஹம். c திருமந்த்ரத்தில் முதல் பத₃மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானத்தை விளக்கையாலே ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄மாகிற ராஜகுலத்தையும், நம:பத₃ம் உபாயாந்தரஸம்ந்யதையை விளக்கையாலே ப்ரபத்திவித்₃யாநிஷ்டை₂யையும், மூன்றுவது பத₃மான நாராயணாயபத₃ம் கைங்கர்யத்தைக் காட்டுகையாலே ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தையும் ஜீவனுக்கு விளக்கிறது என்று ஆளவந்தாருடைய நிர்வாஹம். d திருமந்த்ரம் அர்த்த₂பஞ்சகத்தைச் சொல்லுகிறது என்பது நம்பிள்ளையினுடைய நிர்வாஹம். இவ்விஷயம் 29-ம் வார்த்தை d பிரிவில் [ப52] விளக்கப்பட்டது. e ஜீவபரவிவாஹத்தைக் குறிக்கும் திருமந்த்ரத்தில் ப்ரண

நீரும் சதுர்த்தி₂ கலவியும் சொல்லுகிறதென்று பிள்ளையுறங்கா வில்லிதா₃ஸர் அநுஸந்தி₄த்தருளுவர்; † ஸ்வரூபத்தில் உணர்த் தியையும், ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியையும், எம்பெரு மானைப் பேணுகையையுஞ் சொல்லுகிறதென்று முதலியாண் டான் அநுஸந்தி₄த்தருளுவர்.

## முப்பத்தேழாம் வார்த்தை

பரக்ருதே:பரத்வம், ப்ரக்ருதே:பரனுடைய ஶேஷத்வம், ஶேஷத்வத்தினுடைய அநந்யார்ஹதை, ஶேஷபூ₄தனு

---

வம் ' ஜீவாத்மா எம்பெருமானுக்கே உரியவன் ' என்று கூறுகை யாலே ஜீவபரவிவாஹத்தில் பாணிக்₃ரஹணஸ்தா₂னத்தில் இருக் கிறது. நம:பத₃ம் உபாயாந்தரமற்றிருக்கையாகிற ஶுத்₃தி₄யை விளக்கையாலே, '' மணநீர் அங்கவனோடுமுடன்சென்று அங்கானை மேல் மஞ்சனமாட்ட '' [நாச்-திரு 6-10] என்று நாச்சியார் அருளிச் செய்த உடன் மணநீரின் ஸ்தா₂னத்தில் இருக்கிறது. மூன்றும் பத₃த்தில் நாலாம் வேற்றுமை ப₄க₃வத் கைங்கர்யபே₄க₃த்தைச் சொல்லுகையாலே, பதிபத்நீபே₄க₃மாகிற கலவியின் ஸ்தா₂னத்தி லிருக்கிறது என்பது பிள்ளையுறங்காவில்லிதா₃ஸரின் நிர்வாஹம்.

முதற்பத₃மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானமுடைமையையும், இரண்டாம் பத₃மான நம:பத₃ம் தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு அஶக்தியையும், மூன்றும் பத₃மான நாராயணாயபத₃ம் எம்பெருமானுக்குப் பரிந்து கைங்கர்யம் செய்வதையும் சொல்லு கிறது என்பது முதலியாண்டான் நிர்வாஹம்.

### முப்பத்தேழாம் வார்த்தை

இவ்வார்த்தை திருமந்த்ரத்தில் சொல்லப்பட்ட எல்லா அர்த் த₂ங்களையும் சேர்த்துக் காட்டுகிறது. அதாவது — ப்ரணவத்தில் மகாரம்—ஜீவனை ஜ்ஞானமயனாகவும், ஜ்ஞாதாவாகவும் காட்டுகை யாலே, ஜீவன் அசேதனமான ப்ரக்ருதியைக் காட்டிலும் மேற்பட்ட வன் என்று சொல்லுகிறது. அகாரத்தில் மறைந்திருக்கும் நாலாம் வேற்றுமை—தே₃ஹத்தைக் காட்டிலும் மேற்பட்ட ஜீவன் எம்பெருமா னுக்கு அடிமைப்பட்டவன் என்று சொல்லுகிறது. உகாரம்—இப்படி அடிமைப்பட்டிருக்கும்போது பிறர்க்கு உரியனல்லாதபடி அடிமைப் பட்டிருக்கிறான் என்று காட்டுகிறது. இரண்டாம் பத₃மான நம:

# முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறதென்று திருக்குருகைப்பிரான்பிள்ளான் அநுஸந்தி₄த்தருளுவர்; திருமந்த்ரம் ப்ராப்யம் சொல்லுகிறது என்று பிள்ளைதிருநறையூரரையர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய அநந்யார்ஹத்வம் சொல்லுகிறதென்று நஞ்சீயர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய பாரதந்த்ர்யம் சொல்லுகிறதென்று எம்பார் அநுஸந்தி₄த்தருளுவர்; b திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—ஜ்ஞாந வைராக்₃ய ப₄க்திகளை வெளியிடுகிறதென்று முதலியார் அநுஸந்தி₄த்தருளுவர்; c திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—அபி₄ஜந வித்₃யா வ்ருத்தங்களை வெளியிடுகிறதென்று ஆளவந்தார் அநுஸந்தி₄த்தருளுவர்; d திருமந்த்ரம் அர்த்த₂ பஞ்சகத்தையும் சொல்லுகிறதென்று நம்பிள்ளை அநுஸந்தி₄த்தருளுவர்; e பாணிக்₃ரஹணமும் உடன்மண

---

## முப்பத்தாறும் வார்த்தை

a *திருமந்த்ரம்*—ஜீவபரஸ்வரூபத்தையும், ப்ராப்யத்தையும், ஜீவனுடைய அநந்யார்ஹத்வத்தையும், பாரதந்த்ர்யத்தையும் சொல்லுவதாலும், இவற்றில் ஒவ்வொன்றே அதில் சொல்லப்படும் அர்த்த₂ங்களில் முக்₂யமானது என்பது ஒவ்வொரு ஆசார்யருக்குக் கருத்து. b *திருமந்த்ரத்தில்* ப்ரணவம் ஜீவபரஸ்வரூபஜ்ஞானத்தையும், நம: பத₃ம் மற்ற உபாயங்களில் வைராக்₃யத்தையும், மூன்றுவதான நாராயணாயபத₃ம் கைங்கர்யத்துக்குக் காரணமான ப₄க்தியையும் ஜீவனுக்கு விளக்கிறது என்பது பெரியமுதலியாரான நாத₂முனிகளுடைய நிர்வாஹம். c *திருமந்த்ரத்தில்* முதல் பத₃மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானத்தை விளக்கையாலே ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄மாகிற ராஜகுலத்தையும், நம:பத₃ம் உபாயாந்தரஸந்யதையை விளக்கையாலே ப்ரபத்திவித்₃யாநிஷ்டை₂யையும், மூன்றுவது பத₃மான நாராயணாயபத₃ம் கைங்கர்யத்தைக் காட்டுகையாலே ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தையும் ஜீவனுக்கு விளக்கிறது என்று ஆளவந்தாருடைய நிர்வாஹம். d *திருமந்த்ரம்* அர்த்த₂பஞ்சகத்தைச் சொல்லுகிறது என்பது நம்பிள்ளையினுடைய நிர்வாஹம். இவ்விஷயம் 29-ம் வார்த்தை d பிரிவில் [ப52] விளக்கப்பட்டது. e ஜீவபரவிவாஹத்தைக் குறிக்கும் திருமந்த்ரத்தில் ப்ரண

எங்஡னேயென்னில்;-a ப₃ஹு ᵃவிரோதி₄ பீ₃ஜமான ஸ்வாதந்த்ர்யம் மேலிட்டால், "ப₄க₃வத் பரதந்த்ரரல்லோமோ, நமக்கு ஸ்வாதந்த்ர்யம் கடவதோ?" என்று, அகாரார்த்த₂த்தை அநுஸந்தி₄த்து மீளுவான்;

b அஸேவ்யஸேவைகள் வந்து மேலிட்டால், "நாம் அந்யர்க்கு ஶேஷமோ, ப₄க₃வத₃நந்யார்ஹஶேஷபூ₄தரல்லோமோ?" என்று உகாரார்த்த₂த்தை அநுஸந்தி₄த்து மீளுவான்.

c ஶரீரத்திலே கார்ஶ்யஸ்தௌ₂ல்யாதி₃கள் மேலிட்டால், "நாம் ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபரல்லோமோ, நித்யரல்லோமோ, ஏகரூபரல்லோமோ, நாம் ஸ்வயம்ப்ரகாஶமன்றோ?" என்று, மகாரார்த்த₂த்தை அநுஸந்தி₄த்து மீளுவான்.

---

a பலவிதமான ஸ்வரூபோபாய புருஷார்த்த₂விரோதி₄களுக்கு மூலகாரணமான ஸ்வாதந்த்ர்யம் மேலிட்டால் "நாம் எம்பெருமானுக்குப் பரதந்த்ரரல்லோமோ? நமக்கு ஸ்வாதந்த்ர்யம் தகுமோ?" என்று ஸர்வஜக₃த்காரணனாகவும், ஸர்வரக்ஷகனாகவும், (இதனாலேயே) ஸ்வதந்த்ரனாகவும் எம்பெருமானைச் சொல்லும் அகாரத்தின் பொருளை அநுஸந்தி₄த்து ஸ்வாதந்த்ர்யம் நீங்கப்பெறவேணும். "ஸ்வாதந்த்ர்யாந்தே₄ா யதி₃ ஸ்யாத் ப்ரத₂மம்" என்றதின் விவரணம் இது.

b தொண்டுசெய்யத் தகாதவர்களுக்குத் தொண்டுசெய்யும்படி நேர்ந்துவிட்டால் "நாம் வேறொருவருக்கு அடிமைப்பட்டவரோ? பிறர்க்குரியரல்லாதபடி எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவரல்லோமோ?" என்று அநந்யார்ஹ ஶேஷத்வத்தைக் காட்டும் உகாரத்தின் பொருளை அநுஸந்தி₄த்து அத்தொண்டிலிருந்து மீளவேண்டும். "இதர ஶேஷத்வதீ₄ஶ்சேத் த்₃விதீயம்" என்றதின் விவரணம் இது.

c நமது ஶரீரமானது மெலிந்திருப்பதையோ பருத்திருப்பதையோ, அழகுடன் இருப்பதையோ, அழகில்லாமலிருப்பதையோ கண்டு தே₃ஹாத்மாபி₄மானத்தாலே இன்பதுன்பங்களோ, க₃ர்வநிர்வேத₃ங்களோ ஏற்பட்டால் "நாம் ஜ்ஞாநாநந்த₃ங்களையே ஸ்வரூபமாக உடையோமல்லோமோ? நித்யரல்லோமோ? ஒருபடிப்பட்டிருப்பவரல்லோமோ? தானே ப்ரகாஶிக்கும் பொருளல்லோமோ? இப்பெருமைக்கெல்லாம் எதிர்த்தட்டாயிருப்பதன்றோ இந்த ஶரீரம்?" என்று ஜீவஸ்வரூபத்தைத் தெளிவாகச் சொல்லும் மகாரத்தின் பொருளை அறிந்து, முற்கூறிய இன்பதுன்பங்களிலிருந்தும் க₃ர்வநிர்வேத₃ங்களிலிருந்தும் மீளவேண்டும். (நிர்வேத₃ம்—மனவருத்தம்) "தே₃ஹாஸக்தாத்மபு₃த்₃தி₄ர் யதி₃ ப₄வதி பத₃ம் ஸாது₄ வித்₃யாத் த்ருதீயம்" என்றதின் விவரணம் இது.

## முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறதென்று திருக்குருகைப்பிரான்பிள்ளான் அநுஸந்தி₄த்தருளுவர்; திருமந்த்ரம் ப்ராப்யம் சொல்லுகிறது என்று பிள்ளைதிருநறையூரரையர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய அநந்யார்ஹத்வம் சொல்லுகிறதென்று நஞ்சீயர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய பாரதந்த்ர்யம் சொல்லுகிறதென்று எம்பார் அநுஸந்தி₄த்தருளுவர்; b திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்— ஜ்ஞாந வைராக்₃ய ப₄க்திகளை வெளியிடுகிறதென்று முதலியார் அநுஸந்தி₄த்தருளுவர்; c திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—அபி₄ஜந வித்₃யா வ்ருத்தங்களை வெளியிடுகிறதென்று ஆளவந்தார் அநுஸந்தி₄த்தருளுவர்; d திருமந்த்ரம் அர்த்த₂ பஞ்சகத்தையும் சொல்லுகிறதென்று நம்பிள்ளை அநுஸந்தி₄த்தருளுவர்; e பாணிக்₃ரஹணமும் உடன்மண

---

### முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம்—ஜீவபரஸ்வரூபத்தையும், ப்ராப்யத்தையும், ஜீவனுடைய அநந்யார்ஹத்வத்தையும், பாரதந்த்ர்யத்தையும் சொல்லுவதானாலும், இவற்றில் ஒவ்வொன்றே அதில் சொல்லப்படும் அர்த்த₂ங்களில் முக்₂யமானது என்பது ஒவ்வொரு ஆசார்யருக்குக் கருத்து. b திருமந்த்ரத்தில் ப்ரணவம் ஜீவபரஸ்வரூபஜ்ஞானத்தையும், நம: பத₃ம் மற்ற உபாயங்களில் வைராக்₃யத்தையும், மூன்றாவதான நாராயணாயபத₃ம் கைங்கர்யத்துக்குக் காரணமான ப₄க்தியையும் ஜீவனுக்கு விளக்கிறது என்பது பெரியமுதலியாரான நாத₂முனிகளுடைய நிர்வாஹம். c திருமந்த்ரத்தில் முதல் பத₃மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானத்தை விளக்கையாலே ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄மாகிற ராஜகுலத்தையும், நம:பத₃ம் உபாயாந்தரஸூந்யதையை விளக்கையாலே ப்ரபத்திவித்₃யாநிஷ்டை₂யையும், மூன்றாவது பத₃மான நாராயணாயபத₃ம் கைங்கர்யத்தைக் காட்டுகையாலே ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தையும் ஜீவனுக்கு விளக்கிறது என்று ஆளவந்தாருடைய நிர்வாஹம். d திருமந்த்ரம் அர்த்த₂பஞ்சகத்தைச் சொல்லுகிறது என்பது நம்பிள்ளையினுடைய நிர்வாஹம். இவ்விஷயம் 29-ம் வார்த்தை d பிரிவில் [ப52] விளக்கப்பட்டது. e ஜீவபரவிவாஹத்தைக் குறிக்கும் திருமந்த்ரத்தில் ப்ரண

தீர்ந்த இடமன்றோ; ஒன்றிலொரு குறைவற்ற இடமன்றோ; அநுப₄வ்யமெல்லாம் நாரஸப்₃த₃ாந்தர்க்க₃தமன்றோ'' என்று நாராயணபத₃த்தை அநுஸந்தி₄த்து மீளுவான்;

f ஸ்வரூபத்தோடு சேராத இதரபரிமாற்றங்கள் மேலிட்டால், ''ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி கைங்கர்யமன்றோ''என்று சதுர்த்தி₂யில் அர்த்த₂த்தை அநுஸந்தி₄த்து மீளுவான்;

g இப்படி பரிஹரித்துக்கொள்ளாதபோது, 'பிறர்க்கு உபதே₃ஶிக்கிறதுக்கும், இதில் தனக்குப் பிறந்த ஜ்ஞாநத்துக்கும் என்ன ப்ரயோஜநமுண்டு ?' என்று அநுஸந்தி₄ப்பான்;

---

ஆகிய இடங்களில் உள்ள ஸௌலப்₄யஸௌஶீல்யாதி₃கள் இன்மையாகிற குறைகள் தீர்ந்தவிடமன்றோ இந்த அர்ச்சாவதாரம். 'ஸர்வம் பூர்ணம்' [த்₃வயோபநிஷத்] என்கிறபடியே, ஒரு கு₃ணங்கூடக் குறையாமல் எல்லா கு₃ணங்களும் நிறைந்திருக்குமிடமன்றோ; இப்படி அநுப₄விக்கப்படும் எல்லா கு₃ணங்களும் நாரஶப்₃த₃த்தால் சொல்லப்படுகின்றனவன்றோ'' என்று நாராயணபத₃த்தின் பொருளை அநுஸந்தி₄த்து, அக்குறையைக் குறையாக நினைப்பதினின்றும் மீளவேண்டும். அர்ச்சாவதாரத்திற்கே உரியதாய், எல்லா அபசாரங்களையும் பொறுத்துக்கொள்ளுகையாகிற ஸர்வஸஹிஷ்ணுத்வமென்னும் நிறைகு₃ணமாகவே கொள்ளவேண்டுமென்று கருத்து. அஷ்டஶ்லோகியில் நாராயணபத₃ார்த்த₂த்தின் அநுஸந்த₄ானம் வேறுவிதமாக நிரூபிக்கப்பட்டது. இவ்வார்த்தையின் கடைசியில் அதைக் காணலாம்.

f ஸ்வரூபத்துக்குப் பொருந்தாத விஷயாநுப₄வங்கள் தன்னை வஶப்படுத்தினால், ''ஸ்வரூபத்துக்குத் தகுந்த பரமரஸமான தொழில் ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யமன்றோ'' என்று 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையின் அர்த்த₂த்தை அநுஸந்தி₄த்து, அந்த விஷயாநுப₄வத்தில் நின்றும் மீளவேண்டும். ''விஷயசபலதீ₄ஶ்சேத் சதுர்த்தீ₂ம்'' என்றதின் விவரணம் இது.

g இப்படித் தான் இவற்றில் நின்றும் மீளாதபோது ''பிறர்க்கு நாம் இதை உபதே₃ஶிப்பதற்கும், நமக்கு இதில் பிறந்த அநுஷ்ட₂ானமில்லாத ஜ்ஞானத்துக்கும் என்ன பயனுண்டு? நாம் அநுஷ்டி₂க்காத விஷயத்தைப் பிறர்க்குச் சொன்னால் அவர்கள் அநுஷ்டி₂ப்பார்களா?'' என்று நினைக்கவேண்டும்.

## முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம் ஸ்வரூபம் சொல்லுகிறதென்று திருக்குருகைப்பிரான்பிள்ளான் அநுஸந்தி₄த்தருளுவர்; திருமந்த்ரம் ப்ராப்யம் சொல்லுகிறது என்று பிள்ளைதிருநறையூரரையர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய அநந்யார்ஹத்வம் சொல்லுகிறதென்று நஞ்சீயர் அநுஸந்தி₄த்தருளுவர்; இவ்வாத்மாவினுடைய பாரதந்த்ர்யம் சொல்லுகிறதென்று எம்பார் அநுஸந்தி₄த்தருளுவர்; b திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—ஜ்ஞாந வைராக்₃ய ப₄க்திகளை வெளியிடுகிறதென்று முதலியார் அநுஸந்தி₄த்தருளுவர்; c திருமந்த்ரம் மூன்று பத₃த்தாலும்—அபி₄ஜந வித்₃யா வ்ருத்தங்களை வெளியிடுகிறதென்று ஆளவந்தார் அநுஸந்தி₄த்தருளுவர்; d திருமந்த்ரம் அர்த்த₂ பஞ்சகத்தையும் சொல்லுகிறதென்று நம்பிள்ளை அநுஸந்தி₄த்தருளுவர்; e பாணிக்₃ரஹணமும் உடன்மண

---

### முப்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரம்—ஜீவபரஸ்வரூபத்தையும், ப்ராப்யத்தையும், ஜீவனுடைய அநந்யார்ஹத்வத்தையும், பாரதந்த்ர்யத்தையும் சொல்லுவதாலும், இவற்றில் ஒவ்வொன்றே அதில் சொல்லப்படும் அர்த்த₂ங்களில் முக்₂யமானது என்பது ஒவ்வொரு ஆசார்யருக்குக் கருத்து. b திருமந்த்ரத்தில் ப்ரணவம் ஜீவபரஸ்வரூபஜ்ஞானத்தையும், நம: பத₃ம் மற்ற உபாயங்களில் வைராக்₃யத்தையும், மூன்றுவதான நாராயணயபத₃ம் கைங்கர்யத்துக்குக் காரணமான ப₄க்தியையும் ஜீவனுக்கு விளக்கிறது என்பது பெரியமுதலியாரான நாத₂முனிகளுடைய நிர்வாஹம். c திருமந்த்ரத்தில் முதல் பத₃மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானத்தை விளக்கையாலே ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄மாகிற ராஜகுலத்தையும், நம:பத₃ம் உபாயாந்தரஸம்ந்யதையை விளக்கையாலே ப்ரபத்திவித்₃யாநிஷ்டை₂யையும், மூன்றுவது பத₃மான நாராயணயபத₃ம் கைங்கர்யத்தைக் காட்டுகையாலே ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தையும் ஜீவனுக்கு விளக்கிறது என்று ஆளவந்தாருடைய நிர்வாஹம். d திருமந்த்ரம் அர்த்த₂பஞ்சகத்தைச் சொல்லுகிறது என்பது நம்பிள்ளையினுடைய நிர்வாஹம். இவ்விஷயம் 29-ம் வார்த்தை d பிரிவில் [ப52] விளக்கப்பட்டது. e ஜீவபரவிவாஹத்தைக் குறிக்கும் திருமந்த்ரத்தில் ப்ரண

ஶ்வர்யம் நடுவாக கைவல்யம் முடிவாக உண்டானவற்றில் புருஷார்த்த₂பு₃த்₃தி₄ பிறந்ததாகில், சதுர்த்தி₂யில் அர்த்த₂த்தை அநுஸந்தி₄த்து மீளுவான்.

## முப்பத்தொன்பதாம் வார்த்தை

"ஸ்த்ரீ ஶூத்₃ராதி₃களுக்கு திருமந்த்ர பாட₂த்தில் அதி₄காரமில்லை, அர்த்த₂த்திலே அதி₄காரமுள்ளது" என்று நம்பிள்ளை அருளிச்செய்ய; அத்ருப்தரைப் போலே, திருக்குருகூர்தா₃ஸர் இருந்தவாறே, 'இவர்க்குப் புருஷார்த்த₂

---

செல்வங்களிலும், கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷத்திலும் "இவையும் அடையத்தக்க பயன்களே" என்னும் எண்ணம் ஏற்பட்டதாகில், கைங்கர்யத்தின் சிறப்பை விளக்கும் 'ஆய' எனும் நான்காம் வேற்றுமையின் பொருளை அநுஸந்தி₄த்து அவ்வெண்ணத்திலிருந்து மீளவேண்டும். திருமந்த்ரஜ்ஞானமுண்டானபின்பு இப்படிப்பட்ட எண்ணங்கள் உண்டாகுமோ? எனில்: அந்த ஜ்ஞானம் பிறந்தாலும் பாபம் நிறைந்த இவ்வுலகில் இருப்பவனாகையாலே, அநாதி₃ பாப வாஸனையாலும், ஸஹவாஸதோ₃ஷத்தாலும், ஸ்வரூபத்துக்குப் பொருந்தாத இந்த எண்ணங்கள் ஏற்படக்கூடும். அப்போது திருமந்த்ரத்தின் பொருளை முற்கூறியபடி திருப்பித்திருப்பி அநுஸந்தி₄த்து அந்த எண்ணங்களிலிருந்து ப்ரபந்நனானவன் மீளவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு மீள்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு இவனுடைய ப்ரபத்திநிஷ்டை₂ உறுதிபெறும் என்று கருத்து. அஷ்டஶ்லோகியின் நாலாம் ஶ்லோகத்தின் கடைசியில் 'ப்ரபந்ந:' என்று அருளியதின் கருத்து இதுவேயாகும்.

### முப்பத்தொன்பதாம் வார்த்தை

"ஸ்த்ரீ, ஶூத்₃ரர் முதலானோருக்குத் திருமந்த்ரத்தின் ஜபம், ஹோமம் முதலானவற்றைச் செய்வதில் அதி₄காரமில்லை, அதினுடைய அர்த்த₂த்தை அநுஸந்தி₄ப்பதிலேயே அதி₄காரமுண்டு" என்று ஒருநாள் நம்பிள்ளை, உபந்யாஸத்தின்போது அருளிச்செய்தார். அப்போது கோ₃ஷ்டி₂யிலெழுந்தருளியிருந்த திருக்குருகூர் தா₃ஸர் என்னும் பா₄க₃வதர், "நமக்குத் திருமந்த்ரஜபத்தில் அதி₄காரமில்லை என்று கூறுகிறாரே" என்று சிறிது அத்ருப்திதோன்ற எழுந்தருளியிருந்தார். அப்போது நம்பிள்ளை, "திருமந்த்ரத்தை ஜபம் ஹோமம் முதலானவற்றைச் செய்து ஸ்வப்ரவ்ருத்திகளில் ஈடுபடுவதால் தாழ்ந்த பயன்களே

ஷித்₃தி₄க்குறுப்பான அர்த்த₂த்தில் அதி₄காரமுண்டாகில் அப்ரயோஜகமான பாட₂த்தில் அதி₄காரமில்லை; ஆகவித்தால்-இவருக்கு வருமதென்?' என்று அருளிச்செய்தார்.

## நாற்பதாம் வார்த்தை

௧ திருமந்த்ரத்தாலே-ரக்ஷகத்வ ப்ரதிஸம்ப₃ந்தி₄பூர்வகமான ரக்ஷ்யத்வம் சொல்லி, அந்யஶேஷத்வ நிவ்ருத்தி பூர்வகமான அநந்யார்ஹ ஶேஷத்வம் சொல்லி, அசேதந வ்யாவ்ருத்தி பூர்வகமான சேதந வைலக்ஷண்யம் சொல்லி, அஹங்கார மமகாரநிவ்ருத்தி பூர்வகமான ஸ்வரூபபாரதந்த்ர்யத்தினுடைய எல்லைசொல்லி, ஔபாதி₄கநிவ்ருத்தி பூர்வகமான நிரு பாதி₄க ப₃ந்து₄த்வஞ் சொல்லி, அபுருஷார்த்த₂ நிவ்ருத்தி பூர்வகமான புருஷார்த்த₂ ஸ்வரூபஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது.

---

கிடைக்கும். அதினுடைய அர்த்த₂ாநுஸந்த₄ானத்தில் ஈடுபடுவதால் தலைசிறந்த பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யரூபமானமோக்ஷமே கிடைக்கும். ஆகத்தலை சிறந்த மோக்ஷத்துக்குறுப்பான அர்த்த₂ாநுஸந்த₄ானத்தில் அதி₄காரமிருக்கும்போது, தாழ்ந்த பலங்களில் ஈடுபாட்டை விளைத்து அநர்த்த₂த்தை விளைக்கக்கூடிய ஜபஹோமாதி₃களில் அதி₄கார மில்லாதது நன்மையே தவிரத் தீமையில்லையே; ஆகையால் த்ருப்தி யடையவேண்டிய விஷயத்தில் அத்ருப்தியடையத் தேவையில்லையே" என்று நம்பிள்ளை அருளிச்செய்தார்.

### நாற்பதாம் வார்த்தை

௧ திருமந்த்ரத்தில் அகாரத்தாலும் மகாரத்தாலும் முறையே—'ரக்ஷிப்பவன் எம்பெருமானே' என்றும் 'ரக்ஷிக்கப்படுமவன் ஜீவன்' என்றும் சொல்லி, உகாரத்தாலே மற்றவர்க்கு அடிமைப்பட்டிருப்பதி லிருந்து நீங்கி எம்பெருமானுக்கே அடிமைப்பட்டிருக்கையாகிற அநந்யார்ஹஶேஷத்வம் சொல்லி, மகாரத்தாலே—அறிவற்றதாய், விகாரமுடையதாய், அநித்யமான அசேதனத்தைக் காட்டிலும் வேறு பட்டவனாய், அறிவுள்ளவனாய், விகாரமற்றவனாய், நித்யனான சேதனனுடைய பெருமையைச் சொல்லி, நமஶ்ஶப்₃த₃த்தாலே அஹங்காரமமகாரங்கள் நீங்கின ஸ்வரூபத்தின் பாரதந்த்ர்யத்தின் எல்லை நிலமான ப₄ாக₃வதஶேஷத்வ பாரதந்த்ர்யங்களைச் சொல்லி, நாராயணஶப்₃த₃த்தாலே கர்மம் காரணமாக ஏற்பட்ட உறவினர்க ளிடம் பற்றறுத்து, இயற்கையுறவினனான எம்பெருமானிடம் பற்று

b விஶேஷண ப்ரதா₄நம் - ஆஶ்ரயணம்; c விஶேஷ்ய ப்ரதா₄நம் - உபாயம் ; d உப₄யப்ரதா₄நம் - உபேயம். e ரக்ஷகனாய் ஶேஷியாயிருக்குமிருப்பை உணருகை - ஈஶ்வர ஸ்வரூபம் ; ரக்ஷ்யமாய் ஶேஷமாயிருக்குமிருப்பை உணருகை - ஆத்மஸ்வரூபம் ; f ரக்ஷகத்வஸ்வாமித்வங்கள் வ்யவஸ்தி₂தமானாற்போலே ஶ்ரிய:பதித்வமும் வ்யவஸ்தி₂தம்; g ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தபதா₃ர்த்த₂ங்களும் ப₄க₃வதபி₄மாநத்திலே கிடக்கிறது; புறம்புள்ளார் இப்படி சொல்லாநிற்கச்செய்தே தாங்கள் அபி₄மாநியாநிற்பர்கள்.

---

ஏற்படுவதைச் சொல்லி, நாலாம் வேற்றுமையாலே தகாத பயன்களிலிருந்து மீண்டு தக்க பயனாகிற ப₄க₃வத்₃பா₄க₃வதகைங்கர்யம் ஏற்படுவதைச் சொல்லுகிறது.

b த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃த்தில் சொல்லப்படும் ப₄க₃வதா₃ஶ்ரயணம் விஶேஷணபூ₄தையாய், புருஷகாரமான பிராட்டியை ப்ரதா₄னமாகக்கொண்டது. பிராட்டியின் புருஷகாரமில்லாவிடில் எம்பெருமானை ஆஶ்ரயிப்பது இயலாது என்பது கருத்து. c த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃த்தில் ஶரணஶப்₃த₃த்தால் சொல்லப்படும் மோக்ஷோபாயம், விஶேஷ்யமான எம்பெருமானை ப்ரதா₄னமாகக்கொண்டது. அவனுக்கு விஶேஷணமான கு₃ணங்களுக்கும் தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்துக்கும் அப்ரதா₄னமான உபாயத்வமே உண்டு என்று கருத்து. d த்₃வயத்தின் உத்தரக₂ண்ட₃த்தில் சொல்லப்படும் உபேயம் விஶேஷ்யமான எம்பெருமானையும், விஶேஷணமான பிராட்டி, கு₃ணங்கள், தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹம், நித்யமுக்தர்களாகிய அந்தமில் பேரின்பத்தடியார்கள் முதலானவர்களையும் ப்ரதா₄னமாகக் கொண்டது. e ஈஶ்வரன் ரக்ஷகனாய் ஶேஷியாகவும், ஆத்மா ரக்ஷ்யமாய் ஶேஷமாகவுமிருக்கும் என்று கருத்து. f உபாயத்வமும், ஸர்வஸ்வாமித்வமும் எம்பெருமானொருவனிடத்திலேயே இருப்பதுபோல், ஶ்ரீதே₃வியின் பதியாயிருக்கும் தன்மையும் எம்பெருமானொருவனிடத்திலேயே உள்ளது. g எம்பெருமானையொழிந்த எல்லாப் பொருள்களும் அவனுடைய அபி₄மானத்திலே ஒதுக்கி நிற்கின்றன. விஶிஷ்டாத்₃வைத ஶ்ரீவைஷ்ணவர்களல்லாத அத்₃வைதிகள் முதலானாரும் இப்படி எம்பெருமானுடைய பரத்வத்தைச் சொல்லிக்கொண்டிருந்தும், தாங்களே ஸ்வதந்த்ரர்களென்றும் அபி₄மானிக்கிறார்கள்.

h தாய்மடியிலே கிடந்து உறங்குகிற ப்ரஜை ஸ்வப்நத்திலே புலியின் கையிலே அகப்பட்டுக் கூப்பிடுமாபோலே தன்னை உணர்ந்த த₃ஶை; i கண்ணை விழித்துத் தாய் முகத்தைப்பார்த்து நிர்ப்ப₄யனாயிருக்குமாபோலே - எம்பெருமானை உணர்ந்த த₃ஶை; j உபாயத₃ஶையில் எம்பெருமானாலே எம்பெருமானைப் பெறுமித்தனையொழிய, தந்தாம் நன்மைகொண்டு பெறநினையார்-ஸ்வரூபஜ்ஞாநமுடையார்.

k இந்த ஸ்வாதந்த்ர்யம் தலையெடுத்தால் அகாரத்துக்கு அர்ஹனல்லன்; l ஒருவனுடைய வ்ருத்தத்தை இட்டாதல், ஜந்மத்தையிட்டாதல் தண்ணியதாக நினைக்கில் மகாரத்துக்கு அர்ஹனல்லன்; m பிறர் தனக்கு ரக்ஷகரென்றிருந்தானாகில் உகாரத்துக்கு அர்ஹனல்லன்; n தனக்குத்தான் ரக்ஷகனென்று நினைத்தபோது நமஸ்ஸுக்கு அர்ஹனல்லன்;

---

h ஜீவன் தன்னை எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாக உணர்ந்தானாகில் ஶரீரஸம்ப₃ந்த₄த்தைக் கண்டு நடுங்கி, தாய் மடியில் கிடந்து உறங்குகிற குழந்தை கனவிலே புலியின் கையிலே அகப்பட்டுக் கதறுவதுபோலே கதறுவான். i எம்பெருமான் தனக்கு ரக்ஷகன் என்று உணர்ந்தானாகில், அக்குழந்தை கண்விழித்ததும் தாயின் முகத்தைப் பார்த்து ப₄யம் கெட்டிருப்பதுபோல் ப₄யங்கெட்டிருப்பான். j தம்முடைய அத்யந்த பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தை உணர்ந்தவர்கள்—இவன் கையில் எதையும் எதிர்பாராத இயல்பான உபாயமான எம்பெருமானாலே எம்பெருமானைப் பெற நினைப்பார்களேயொழிய, உபாயாந்தரங்களையோ, தாம் எம்பெருமானைப் பற்றுவதாகிற உபாயஸ்வீகாரத்தையோகொண்டு புருஷார்த்த₂த்தைப் பெற நினையார்கள்.

k ஜீவன் தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்தால், ஸர்வஜக₃த்காரணனாகவும், ஸர்வரக்ஷகனாகவும் எம்பெருமானைச் சொல்லும் அகாரத்தின் பொருளைப் புரிந்துகொள்ளாதவனாவான். l ஒருவனுடைய நடத்தையையோ பிறப்பையோ பார்த்து அவனுடைய ஸ்வரூபமே தாழ்ந்தது என நினைத்தானாகில், எல்லா ஜீவர்களையும் ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபர்களாய் ஒருபடிப்பட்டவர்களாகச் சொல்லும் மகாரத்தின் பொருளைப் புரிந்துகொள்ளாதவனாவான். m பிறர் தமக்கு ரக்ஷகர் என்று நினைத்திருந்தானாகில், எம்பெருமானையே ரக்ஷகனாகச் சொல்லும் உகாரத்தின் பொருளைப் புரிந்து கொள்ளாதவனாவான். n தனக்குத் தானே ரக்ஷகனென்று நினைத்தானாகில், தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தனக்குத் தகுதியில்லை என்று காட்டும் நமஸ்ஸின் பொருளைப்

o தன் கார்யத்துக்குத் தான் கடவனென்று நினைத்தபோது நாராயணபத₃த்துக்கு அர்ஹனல்லன்; p செய்ததொரு கைங் கர்யத்தைத் தானுகத்தல் பிறருகத்தல் செய்யில் சதுர்த்தி₂க்கு அர்ஹனல்லன்; q இவ்வர்த்த₂ம் ஒரு அதி₄காரி அறிந்து தவிர்ந்தபோது திருமந்த்ரார்த்த₂ம் கைப்புகுந்ததாகக்கடவது; அல்லாதபோது திருமந்த்ரத்தோட்டை ஸம்ப₃ந்த₄ம ஸந்தே₃ஹ மாமித்தனை என்று ப₄ட்டர் அருளிச்செய்தார்.

## நாற்பத்தோராம் வார்த்தை

ஸ்வஸ்வாதந்த்ர்யம் மேலிட்டதாகில், ப்ரணவத்தில் ப்ரத₂மபத₃ார்த்த₂த்தை அநுஸந்தி₄ப்பான்; இதரர்பக்கல் ஶேஷித்வ ப்ரதிபத்தி நடையாடிற்றுகில், உகாரார்த்த₂த்தை அநு ஸந்தி₄ப்பான்; தே₃வோऽஹம்'' என்றிருந்தானுகில், மகாரார்த் த₂த்தை அநுஸந்தி₄ப்பான்; ஸ்வ ரக்ஷண விஷயத்தில் கரைந்தானுகில், நமஶ்ஶப்₃த₃ார்த்த₂த்தை அநுஸந்தி₄ப்பான்; ஈஶ்வர விபூ₄திகளோடே ''காறு காறு'' என்றுனுகில், நார ஶப்₃த₃ார்த்த₂த்தை அநுஸந்தி₄ப்பான்; ஶப்₃த₃ாதி₃ விஷயங் களிலே போ₄க்₃யபு₃த்₃தி₄ பிறந்ததாகில் ஆயஶப்₃த₃ார்த் த₂த்தை அநுஸதி₄ப்பான்.

---

புரிந்து கொள்ளாதவனுவான். o தனக்கு ஹிதத்தைத் தானே செய்துகொள்ளவேண்டுமென்று நினைத்தானுகில், நரஸமூஹங்க ளாகிற எல்லா ஜீவர்களுக்கும் உபாயம் எம்பெருமானே என்று காட்டும் நாராயண ஶப்₃த₃த்தின் பொருளைப் புரிந்துகொள்ளாதவ னுவான். p எம்பெருமானுக்குச் செய்த கைங்கர்யம் அவனுடைய உகப்புக்கும் அவனடியார்களுடைய உகப்புக்குமே உறுப்பு என்று உணராமல், தன் உகப்புக்கும் மற்ற ப்ராக்ருதர்களுடைய உகப்புக் கும் உறுப்பு என்று நினைத்தானுகில், எம்பெருமானுடைய உகப் புக்கே கைங்கர்யம் செய்யவேணும் என்ற பொருளைக் காட்டும் நாலாம் வேற்றுமைப்பொருளைப் புரிந்துகொள்ளாதவனுவான். q இவ் வர்த்த₂ங்களை ஓர் அதி₄காரி நன்குணர்ந்து முற்கூறிய நினைவுகளைத் தவிர்ந்தபோது திருமந்த்ரார்த்த₂த்தை நன்கு உணர்ந்தவனுவான். அப்படியில்லாவிடில் அவன் திருமந்த்ரார்த்த₂த்தை நன்குணர்ந்தவனு என்பது ஸந்தே₃ஹமே என்று இவ்வளவும் ப₄ட்டர் அருளிச்செய்த வார்த்தை.

### நாற்பத்தோராம் வார்த்தை

முப்பத்தெட்டாம் வார்த்தை முதலானவிடங்களில் இவ்வார்த்தை யின் பொருள் அடங்கியுள்ளது.

## நாற்பத்திரண்டாம் வார்த்தை

a ப்ரமாணம் - பத3த்ரயாத்மகமாயிருக்கும்; b ப்ரமேயம் - பர்வத்ரயாத்மகமாயிருக்கும் ; அதி4காரி—ஆகாரத்ரயாத்மகமாயிருக்கும். ப்ரமாணம் பத3த்ரயாத்மகமாகையாவது - ப்ரத2மபத3ம், மத்4யமபத3ம், த்ருதீயபத3ம். ப்ரமேயம் பர்வத்ரயாத்மகமாகையாவது - பொருந்த விட்ட திருவடிகளும், அஞ்சலென்ற திருக்கையும், சிவந்த திருமுகமண்ட3லமும். அதி4காரி ஆகாரத்ரயாத்மகமாகையாவது - அநந்யார்ஹஶேஷபூ4தனாய், அநந்யஶரணனாய், அநந்யபோ4க்3யனாயிருக்கை. ப்ரத2மபத3ம் அநந்யார்ஹ ஶேஷத்வப்ரகாஶகம்; பொருந்த விட்ட திருவடிகள் அநந்யார்ஹதைக்கு ப்ரதிஸம்ப3ந்தி4யாயிருக்கும் ;. மத்4யமபத3ம் அநந்யஶரணத்வ ப்ரகாஶகமாயிருக்கும்; அஞ்சலென்ற திருக்கை அநந்யஶரணத்வத்துக்கு ப்ரதிஸம்ப3ந்தி4யாயிருக்கும்; த்ருதீயபத3ம் அநந்யபோ4க்3யத்வப்ரகாஶகமாயிருக்கும்; சிவந்த திருமுகமண்ட3லம் அநந்யபோ4க்3யத்வப்ரதிஸம்ப3ந்தி4யாயிருக்கும் — என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்வர்,

## நாற்பத்துமூன்றும் வார்த்தை

a வாத்ஸல்யாதி3 கு3ண விஶிஷ்டவஸ்து - ஆஶ்ரயணீயம்; ஜ்ஞாந ஶக்த்யாதி3 கு3ணவிஶிஷ்டவஸ்து - உபாயம்; ஸமஸ்த

---

**நாற்பத்திரண்டாம் வார்த்தை**

a ப்ரமாணம் — திருமந்த்ரம், b ப்ரமேயம் — அர்ச்சாவதாரத் திருமேனி.

**நாற்பத்துமூன்றும் வார்த்தை**

a வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌஶீல்யம், ஸௌலப்4யம் என்னும் — ஆஶ்ரயண ஸௌகர்யத்தை விளைக்கும் கு3ணங்களோடு கூடிய எம்பெருமான் ஆஶ்ரயிக்கத்தக்கவனாவான். ஜ்ஞானம், ஶக்தி, ஸர்வஸ்வாமித்வமாகிற ப்ராப்தி, அவாப்தஸமஸ்தகாமத்வமாகிற பூர்த்தி, க்ருபை என்னும் — ஆஶ்ரயித்தவனுக்குக் கார்யங்களைச் செய்துதரும் கு3ணங்களோடு கூடிய எம்பெருமான் உபாயமாவான். எல்லாக் கல்யாணகு3ணங்களோடு கூடிய எம்பெருமான் அநுப4விக்கத்

கல்யாண குு₃ணவிஶிஷ்டவஸ்து - பே₄ாக்₃யம் ; b ஆஶ்ரயண ப்ரதிஸம்ப₃ந்தி₄ - ஒரு மிது₂நம் ; ஶேஷத்வப்ரதிஸம்ப₃ந்தி₄ - ஒரு மிது₂நம் ; கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄ - ஒரு மிது₂நம். ப்ரமாணம் - "நாளும் நம் திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி" என்றும், "திருமாலே ! நானுமுனக்குப் பழவடியேன்" என்றும், "அடிமைசெய்வர் திருமாலுக்கு" என்றும்.

## நாற்பத்துநான்காம் வார்த்தை

ஸர்வரக்ஷகத்வமும், ஸர்வஸ்மாத்பரத்வமும், ஶ்ரிய:பதித்வமும், ஸர்வஶேஷித்வமும், ஸர்வஜ்ஞத்வமும், ஸர்வஶக்தித்வமும், ஸமஸ்த கல்யாண குு₃ணாத்மகத்வமும், இவை - அகாரார்த்த₂ங்கள்; அந்யஶேஷத்வ நிவ்ருத்தியும், அநந்யார்ஹ ஶேஷத்வமும் - உகாரார்த்த₂ம் ; ஜ்ஞாநாநந்த₃ லக்ஷணத்வமும், ஜ்ஞாநகுு₃ணகத்வமும், a ஏகரூபத்வமும், ஸ்வயம்ப்ரகாஶத்வமும் இவை - மகாரார்த்த₂ம். ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியும், b ஸ்வரூபாநுரூபமான உபாயமும், c உபாயத்துக்கு எல்லைநிலமான அத்யந்த பாரதந்த்ர்யமும், பாரதந்த்ர்ய பராகாஷ்டை₂யான ததீ₃யஶேஷத்வமும் இவை-

---

தக்கவனுவான். b பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலேயே ஆஶ்ரயிக்கவேணும் என்பதை "நாளும் நம் திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி" [திருவாய் 1.3 8] என்று ஆழ்வார் அருளினர். பெருமாளும் பிராட்டியுமான ஒரு மிது₂னமே நமக்கு ஶேஷியாயிருப்பது என்பதை "திருமாலே ! நானுமுனக்குப் பழவடியேன்" [திருப்பல்லாண்டு 11] என்று பெரியாழ்வார் அருளிச்செய்தார். பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலேயே நாம் அடிமைசெய்யவேணும் என்பதை "அடிமைசெய்வர் திருமாலுக்கே" [திருவாய் 6 5.11] என்று ஆழ்வார் அருளிச்செய்தார்.

### நாற்பத்துநான்காம் வார்த்தை

a ஏகரூபத்வம்-ஒருபடிப்பட்டதாயிருக்கை. b ஸ்வரூபாநுரூபமான உபாயம் - எம்பெருமான். c உபாயத்துக்கு..........பாரதந்த்ர்யமும்— இங்கு எம்பெருமானுகிற உபாயத்தைப் பற்றிய அதி₄காரியின் விஶேஷணமான அநந்யஶரணத்வத்தை உபாயஶப்₃த₃த்தாலே சொல்லுகிறது. அதுக்கு எல்லைநிலம் அசேதனத்தைப்போலே மிகவும்

நமஶ்ஶப்₃த₃ார்த்த₂ம் ; d சேதநாசேதநங்களினுடைய நித்யத்வமும், ஸமூஹத்வமும், அஸங்க்₂யாதத்வமும் இவை-நாரஶப்₃த₃ார்த்த₂ம்; ஸர்வவித₄ப₃ந்து₄த்வமும், உப₄யவிபூ₄தி நாத₂த்வமும், ஆத₄ாரத்வமும், காரணத்வமும், நியந்த்ருத்வமும், இவை-அயநஶப்₃த₃ார்த்த₂ம்; நித்யகைங்கர்யம்-சதுர்த்₂யர்த்த₂ம்.

## நாற்பத்தஞ்சாம் வார்த்தை

ஸ்வரூபம் ஸ்வரூபாந்தரத்தைப் பொருது; ஸாத₄நம் ஸாத₄நாந்தரத்தைப் பொருது; ப்ரயோஜநம் ப்ரயோஜநாந்தரத்தைப் பொருது.

## நாற்பத்தாறும் வார்த்தை

ப₄ட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாகத் திருவீதியிலே எழுந்தருளியிருக்கச் செய்தே, விளையாடிக்கொண்டு வருகிற பிள்ளைகளைப் பார்த்து, “பிள்ளைகாள்! a திருமந்த்ரத்திலே பிறந்தாற்

---

பரதந்த்ரமாயிருக்கை என்று கருத்து. d “ரிங் - க்ஷயே” என்னும் த₄ாதுவிலிருந்து ‘ந ரிஷ்யதி இதி நர:’ என்னும் வ்யுத்பத்தியால் தோன்றிய நரஶப்₃த₃த்தாலே சேதநாசேதனங்களுடைய நித்யத்வமும், அந்த ஶப்₃த₃த்தின் மேலே ஸமூஹார்த்த₂த்தில் அண் ப்ரத்யயம் ஏறி உண்டான நாரஶப்₃த₃த்தாலே அவை ஸமூஹமாயிருக்கின்றன என்பதும், நாரா: என்ற பன்மையாலே அந்த ஸமூஹங்கள் கணக்கற்றவை என்பதும் காட்டப்படுகின்றன என்று கருத்து.

### நாற்பத்தஞ்சாம் வார்த்தை

அநந்யார்ஹஶேஷத்வமாகிற ஸ்வரூபம்—அந்யஶேஷத்வமாகிற ஸ்வரூபாந்தரத்தைப் பொருது. ஸாத₄னமாகிற எம்பெருமான்—சணற்கயிறுகண்ட ப்₃ரஹ்மாஸ்த்ரம்போலே மற்றொரு ஸாத₄னத்தைப்பற்றுவதைப் பொறுக்கமாட்டான். அவனுக்கே ஆட்செய்கையாகிற ப்ரயோஜனம்—ஶப்₃த₃ாதி₃விஷயங்கள் தொடக்கமாக, ஸ்வார்த்த₂ கைங்கர்யமீருகவுள்ள மற்ற ப்ரயோஜனங்களைப் பொறுக்காது என்று கருத்து.

### நாற்பத்தாறும் வார்த்தை

a திருமந்த்ரமானது “பெற்ற தாயினுமாயினசெய்யும்” [பெரிய திரு 1-1-9] என்கிறபடியே தாயாகவும், அதை அளித்த ஆசார்யன் தந்தையாகவும் சொல்லப்படுகிறபடியால் ஓர் ஆசார்யனிடமிருந்து

போலே உங்களுக்கு இத்தனை செருக்கென்?" என்று அருளிச் செய்தார்.

## நாற்பத்தேழாம் வார்த்தை

திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிச்செய்த வார்த்தை; ப்ரணவத்தில் மத்₄யமாக்ஷரத்தை ஶிக்ஷித்துவைத்தும் ராஜ த்₃வாரங்களிலே நுழையாநின்றார்கள் ; மத்₄யமபத₃த்தை ஶிக்ஷித்துவைத்தும் இடைவேலிக்குப் பிணங்கிநின்றார்கள்; த்ருதீயபத₃த்தை ஶிக்ஷித்துவைத்தும் தாம் தாம் போ₄க்தாக்க ளாகாநின்றார்கள்.

## நாற்பத்தெட்டாம் வார்த்தை

ஆச்சான்பிள்ளையை ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் "பாரதந்த்ர்ய மிருக்கும்படியென் ?" என்று கேட்க;—௧ ஸ்வஶக்தி நிவ்ருத்தி பூர்வகமாக ஸர்வஶக்தியை அண்டைகொண்டு, உபாயத்தில்

---

திருமந்த்ரோபதே₃ஶம் பெற்றவன் திருமந்த்ரத்திலே பிறந்தவன் என்று கூறப்படுகிறான். அவனுக்கு ஸம்ஸாரப₄யம் இல்லாமையாலே ப₄யங் கெட்டுச் செருக்குடன் வாழ்கிறான் என்று கருத்து.

**நாற்பத்தேழாம் வார்த்தை**

ப்ரணவத்தில் நடுஅக்ஷரமான உகாரம் அநந்யார்ஹஶேஷத்வத் தைச் சொல்லியிருக்கிறது என்று அறிந்தும், ராஜஸேவைக்கு ஆசைப்பட்டு ராஜத்₃வாரங்களிலே நுழைகின்றார்கள் பலர். மத்₄யம பத₃மான 'நமஸ்ஸு' மமகாரத்தை அடியோடு அறுக்கிறது என்று உணர்ந்தும், தன் நிலத்துக்கும் அண்டை நிலத்துக்கும் இடையிலுள்ள வேலியைப்பற்றிய வழக்கில் பலர் ஈடுபடுகிறார்கள். நாராயணனே போ₄க்தா என்பதை உணர்த்தும் மூன்றாவது பத₃த்தைக் கற்றறிந்த பின்பும், பலர் தம்மையே போ₄க்தாக்களாக அபி₄மானித்து வாழ்க்கை நடத்துகிறார்கள் என்று கருத்து.

**நாற்பத்தெட்டாம் வார்த்தை**

௧ உபாயாந்தரங்களை அநுஷ்டி₂ப்பதற்குத் தன்னிடமுள்ள ஶக்தியை அடியோடு விட்டு, ஸர்வஶக்தியான எம்பெருமானை உபாயமாகக் கொண்டு, அவனைத் தான் பற்றிய பற்றையும் உபாயமாக நினையாமல், உபேயமாகிற ப₄க₃வத்₃பா₄க₃வதகைங்கர்யத்தை அடை

கந்தல் அற்று, உபேயத்தில் த்வரை விஞ்சியிருக்கை - பார தந்த்ர்யம் என்று அருளிச்செய்தார்.

## நாற்பத்தொன்பதாம் வார்த்தை

பொன்னைப் புடமிடப் புடமிட உருச் சிறுகி ஒளி விஞ்சி மாற்று எழுமாபோலே, ஸங்கோசமற்று ஜ்ஞாநவிகாஸ முண்டானவாறே நாய்ச்சிமாருடனே ஸாம்யம் சொல்லலாயிறே யிருப்பது இவ்வாத்மாவுக்கு என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

## ஐம்பதாம் வார்த்தை

அழுக்கடைந்த மாணிக்கத்தை நேர்சாணையிலே ஏறிட்டுக் கடைந்தால் பளபளக்கை வடிவாயிருக்குமாபோலே, அஜ்ஞனை சேதநனுக்கு, திரோத₄ாந நிவ்ருத்தியிலே அடியேனென்கை வடிவாயிருக்கும் என்று முதலியாண்டான்.

---

வதில் த்வரையெனப்படும் தீவ்ரமான ஆசை உடையவனுயிருக்கையே பாரதந்த்ர்யம் என்று கருத்து.

### நாற்பத்தொன்பதாம் வார்த்தை

ஜீவாத்ம ஸ்வரூபம் பொன்போலே குற்றமற்றது. தே₃ஹ ஸம்ப₃ந்த₄த்தாலே அழுக்கேறின பொன்போல் உள்ளது. பொன்னை அக்₃னியிலிட்டுப் பலகால் புடமிட்டால் அழுக்குக்கழன்று உருச்சிறுகி னுலும், ஒளிவிஞ்சி மாற்று அதி₄கமாகிறது. அதுபோலவே ஜீவாத்மா வாகிற பொன் ரஹஸ்யத்ரயஜ்ஞானமாகிற அக்₃னியிலே புடமிடப் பட்டால், தே₃ஹஸம்ப₃ந்த₄த்தால் ஏற்பட்ட அழுக்குகள் நீங்கி முக்தி த₃ஶையில் த₄ர்மபூ₄தஜ்ஞானம் முழுமலர்ச்சி பெற்றவுடன் பிராட்டி மாருடன் — (1) அநந்யார்ஹஶேஷத்வம், (2) அநந்யஶரணத்வம், (3) அநந்யபோ₄க்₃யத்வம், (4) ஸம்ஶ்லேஷத்தில் (கூடினல்) த₄ரிப்பது, (5) விஶ்லேஷத்தில் (பிரிந்தால்) த₄ரியாமை, (6) ததே₃கநிர்வாஹ்யத்வம் (எம்பெருமானிட்ட வழக்காயிருக்கை)என்னும் ஆறுவகைகளிலே ஜீவனுக்கு ஸாம்யமுண்டாகிறது என்று கருத்து.

### ஐம்பதாம் வார்த்தை

ரஹஸ்யத்ரயஜ்ஞானமாகிற சாணையிலிட்டுக்கடைவதாலே—ஶரீர ஸம்ப₃ந்த₄த்தால் ஏற்பட்ட அஜ்ஞானம், கர்மம், வாஸனை, ருசி முதலானவை கழிந்தால், ஜீவனுகிற ரத்னத்துக்கு ப₄க₃வச்சே₂ஷத்வ மாகிற ஒளி ப்ரகாஶிக்கும் என்று கருத்து.

## ஐம்பத்தோராம் வார்த்தை

"அஹங்காரமாகிற ஆர்ப்பைத் துடைத்தால் ஆத்மாவுக்கு அழியாத பேர் 'அடியான்' என்றிறே" என்று வடக்குத் திருவீதிப்பிள்ளை.

## ஐம்பத்திரண்டாம் வார்த்தை

a உத்பத்தியையும், உடைமையையும், உடைமைக்குண்டான ஊற்றத்தையும், உடைமைக்கு உடைமையில்லாமையையும், உத்பத்தியான (வைகளை)? உடையவனுடைய உயர்நிலையையும், உடைமைக்கும் உடையவனுக்குமுண்டான உறவையும் சொல்லுகிறது-திருமந்த்ரம் b த₄ர்மத்தையும், த₄ர்மத்தில் களையறுப்பையும், கண்ணனையும், கண்ணன் கருத்தையும், க₃தியையும், பற்றும்படியையும், பரனையும், பற்றுமவனையும், பாபத்தையும்,

---

### ஐம்பத்தோராம் வார்த்தை

இது ஸ்ரீவசநபூஷணம் (77) சூர்ணையாயுள்ளது. அங்கு வ்யாக்₂யானத்தை ஸேவிப்பது

### ஐம்பத்திரண்டாம் வார்த்தை

a *திருமந்த்ரத்தில்* — *காரணனைச்* சொல்லும் அகாரம் - மற்ற பொருள்கள் அவனிடமிருந்து உண்டானவை என்று சொல்லுகிறது. மறைந்திருக்கும் நாலாம் வேற்றுமையும் மகாரமும் - அவை அவனுக்கு உடைமை என்று சொல்லுகிறது. உகாரம் - அவ்வுடைமை பிறர்க்கு உரியதல்லாததாயிருக்கும் ஊற்றத்தைச் சொல்லுகிறது. நமஸ்ஸப்₃த₃ம்-எம்பெருமானுடைய உடைமையான ஜீவனுக்கு ஓர் உடைமையில்லாமையைச் சொல்லுகிறது. நாரஸப்₃த₃ம்-எம்பெருமானிடமிருந்துண்டான எல்லாப் பொருள்களையும் உடையவனை எம்பெருமானுடைய ஶேஷித்வம் முதலான உயர்வுகளைச் சொல்லுகிறது. அயநஸப்₃த₃ம் - உடைமைக்கும்உடையவனுக்கும் உண்டான அநாதி₃யான உறவைச்சொல்லுகிறது என்று கருத்து. b சரமஶ்லோகத்தில் — "ஸர்வத₄ர்மாந்" என்று உபாயாந்தரங்களையும், "பரித்யஜ்ய" என்று அவற்றில் உபாயபு₃த்₃தி₄யை அடியோடு விடுகையையும், "மாம்" என்று கண்ணனையும், "ஏகம்" என்று உபாயஸ்வீகாரத்திலும் உபாயபு₃த்₃தி₄ கூடாது என்கிற கண்ணன் திருவுள்ளத்தையும், "ஶரணம்" என்று உபாயத்தையும், "வ்ரஜ" என்று அவ்வுபாயத்தைப் பற்றுவதையும், "அஹம்"என்று ஜ்ஞானம் ஶக்தி முதலான கு₃ணங்களோடு கூடிய பரனையும், "த்வா" என்று அவனை உபாயமாகப்பற்றும் ஜீவனையும்,

மாபத்தில் பற்றறுகையையும் சொல்லுகிறது - சரம ஶ்லோகம். c பெரிய பிராட்டியாரையும், பெருமாளையும், இவர்களுக்குப் பிரிவில்லாமையையும், பெருமாளுடைய பொருளையும், அருள்சுரக்கும் திருவடியையும், திருவடிகள் ஶரணும்படியையும், அரணும் திருவடிகளை அடையும்படியை யும், அடைந்தாரநுப₄வத்தையும், அருளுடையவனுக்கத்தை யும், அநுப₄வத்தில் உகப்பையும், அநுப₄வத்தில் அழுக் கறுக்கையையும் சொல்லுகிறது - த்₃வயம்.

d திருமந்த்ரத்தாலே - திருவபி₄ஷேகத்தை அநுஸந்தி₄ப் பான்; சரம ஶ்லோகத்தாலே-திருமார்பில் நாய்ச்சிமாரோட்டைச் சேர்த்தியை அநுஸந்தி₄ப்பான்; த்₃வயத்தாலே - திருவடிகளை அநுஸந்தி₄ப்பான்.

---

''ஸர்வபாபேப்₄ய:'' என்று அந்த ஜீவனுக்கு அநிஷ்டமான பாபங்க ளையும், ''மோக்ஷயிஷ்யாமி'' என்று ஜீவனுக்குப் பாபஸம்ப₃ந்த₄ம் தானே விட்டுப்போவதையும் சொல்லுகிறது என்று கருத்து. c த்₃வயத்தில்—''ஸ்ரீ'' என்று பெரியபிராட்டியாரையும், ''நாராயண'' என்று எம்பெருமானையும், மதுப்ப்ரத்யயத்தாலே இவர்களுக்கு என்றும் பிரிவில்லாமையையும், நாரஶப்₃த₃த்தாலே எம்பெருமானுக்குச் செல்வமான வாத்ஸல்யம் முதலான கு₃ணங்களையும், ''சரணௌ'' என்று அருள்சுரக்கும் அவனது இரு திருவடிகளையும், ''ஶரணம்'' என்று அத்திருவடிகள் உபாயமாம்படியையும், ''ப்ரபத்₃யே'' என்று உபாயமாகும் திருவடிகளை அடையும்படியையும், ''ஸ்ரீமதே'' என்று அப்படி அடைந்தவர்கள் அநுப₄விக்கும் மிதுனத்தையும், நாராயண ஶப்₃த₃த்தாலே அருளுடையவனை எம்பெருமானுடைய ஸ்வாமித்வம் முதலான பெருமைகளையும், ''ஆய'' என்று ஜீவனைப்பெற்று அநு ப₄விப்பதால் எம்பெருமான் அடையும் உகப்பையும், நமஶ்ஶப்₃த₃த் தாலே ஜீவனுக்குப் பராநுப₄வகைங்கர்யங்களில் ஸ்வதந்த்ரபே₄த₃ மாகிற அழுக்கை அறுக்கையையும் சொல்லுகிறது.

d எம்பெருமானுடைய ஸ்வாமித்வத்தை ப்ரத₄ானமாகச் சொல்லும் திருமந்த்ரத்தாலே, அவனுடைய ஸ்வாமித்வத்தைக் காட்டும் திரு முடியை அநுஸந்தி₄க்கவேணும். சரமஶ்லோகத்தாலே — ''மாம்'' என்று திருமார்பைத் தொட்டுக்காட்டுகையாலே திருமார்பில் எழுந் தருளியிருக்கும் பெரியபிராட்டியாரோடு சேர்ந்திருப்பதை அநு ஸந்தி₄க்கவேணும். ''ஸ்ரீமந்நாராயண சரணௌ'' என்று திருவடிகளை

## ஐம்பத்துமூன்றும் வார்த்தை

அர்த்த₂ பஞ்சகமும் ரஹஸ்யத்ரயத்தில் சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்;— திருமந்த்ரத்தில்—நாராயண பத₃த்தாலே - பரமாத்மஸ்வரூபம் சொல்லிற்று ; ப்ரணவத்தாலே - ஆத்மஸ்வரூபம் சொல்லிற்று ; சதுர்த்தி₂யாலே - புருஷார்த்த₂ ஸ்வரூபம் சொல்லிற்று; "நம:" என்று - உபாய ஸ்வரூபம் சொல்லிற்று; நமஶ்ஶப்₃த₃த்தில் ஷஷ்ட்₂யந்தமான மகாரத்தாலே – விரோதி₄ஸ்வரூபம் சொல்லிற்று.

சரமஶ்லோகத்தில்—" மாம், அஹம் " என்கிற பத₃ங்களாலே - பரமாத்மஸ்வரூபம் சொல்லிற்று; a"வ்ரஜ" என்கிற மத்₄யமனாலும், "த்வா, மாமேகம்" என்கிற பத₃ங்களாலும்— ஸ்வஸ்வரூபம் சொல்லிற்று; " ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி" என்கையாலே - அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமான புருஷார்த்த₂ம் சொல்லிற்று ; " ஸர்வபாபேப்₄ய: " என்று - விரோதி₄ஸ்வரூபம் சொல்லிற்று ; b ஏகபத₃த்தாலே - உபாய ஸ்வரூபம் சொல்லிற்று ;

---

உபாயமாகக்கூறும் த்₃வயத்தாலே திருவடியை அநுஸந்தி₄க்கவேணும் என்று கருத்து.

### ஐம்பத்துமூன்றும் வார்த்தை

a "வ்ரஜ" (உபாயமாக அடைவாய்) என்கிற முன்னிலை வினைச் சொல்லால்—எம்பெருமானே உபாயம் என்று உறுதிகொள்ளுகையாகிற அநந்யஶரணத்வமெனப்படும் ஸ்வரூபம் சொல்லிற்று. "அஹம்" என்பதற்கு எதிர்த்தட்டான "த்வா" என்னும் பத₃த்தாலே—ஜீவனுடைய அஜ்ஞானம் அஶக்தி முதலானவை காட்டப்படுவதன் மூலம் ஆகிஞ்சந்யம். அநந்யக₃தித்வம் முதலான ஸம்ப₄ாவித ஸ்வப₄ாவங்கள் (ப்ரபந்நனுக்குத் தன்னடையே ஏற்படும் தன்மைகள்) உணர்த்தப்பட்டன. "மாமேகம்" என்னும் பத₃த்தாலே—ஜீவனுக்கு இருக்கவேண்டிய மஹாவிஶ்வாஸம் உணர்த்தப்படுகிறது. ஆக, இப்படி சரமஶ்லோகத்தில் ஸ்வஸ்வரூபம் சொல்லப்பட்டதாயிற்று. b ஏகபத₃த்தாலே—ஜீவன் பரமனை உபாயமாகப் பற்றும் பற்றையும் உபாயமாக்கவொண்ணாதபடியான எம்பெருமானுடைய நிரபேக்ஷோபாயமாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டது.

c த்₃வயத்தில் ஸவிஶேஷணமான நாராயணபத₃த்தாலே - பரஸ்வரூபம் சொல்லிற்று ; " ப்ரபத்₃யே " என்கிற உத்தமனாலே - ஆத்ம ஸ்வரூபம் சொல்லிற்று; d சதுர்த்தி₂ நமஸ்ஸுக்களாலே - புருஷார்த்த₂ ஸ்வரூபம் சொல்லிற்று; நமஶ்ஶப்₃த₃த்தில் மகாரத்தாலே-விரோதி₄ ஸ்வரூபம் சொல்லிற்று; ஶரணஶப்₃த₃த்திலே-உபாயஸ்வரூபம் சொல்லிற்று.

e ஸ்வரூபஞ் சொல்லுகிறது - திருமந்த்ரம்; ஸ்வரூபாநுரூபமான உபாயத்தை விதி₄க்கிறது - சரமஶ்லோகம்; இவை இரண்டு அர்த்த₂த்திலும் ருசியுடையவனுடைய அநுஸந்தா₄நப்ரகாரம்-த்₃வயம் ; f ஶாஸ்த்ரருசிபரிக்₃ருஹீதம் - திருமந்த்ரம்; ஶரண்யருசி பரிக்₃ருஹீதம் - சரம ஶ்லோகம் ; ஆசார்யருசி பரிக்₃ருஹீதம் - த்₃வயம்;

---

c "ஸ்ரீமந்நாராயண" என்கிற பத₃த்தாலே, பிராட்டியை ஸ்வரூபநிரூபகையாகக்கொண்ட நாராயணனே பரமாத்மா என்று காட்டப்பட்டது. d "ஆய" என்னும் நாலாம் வேற்றுமையாலே, இருவருமான சேர்த்தியில் கைங்கர்யமே புருஷார்த்த₂மென்றும், 'நம:' என்னும் பத₃த்தாலே, அக்கைங்கர்யமும் தன் உகப்புக்காக அன்று என்றும் காட்டுகையாலே பரார்த்த₂கைங்கர்யமே புருஷார்த்த₂ம் என்று காட்டப்பட்டது.

e எல்லாவற்றிலும் எல்லாமே சொல்லப்பட்டபோதிலும்,திருமந்த்ரமானது—மூன்று பத₃ங்களாலும் முறையே அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம்,அநந்யபோ₄க்₃யத்வம் என்னும் ஜீவாத்மஸ்வரூபத்தைச் சொல்லுவதிலே நோக்குடையது. சரமஶ்லோகம்—கீழ்ச்சொன்ன ஸ்வரூபத்துக்குத் தகுந்த உபாயம் எம்பெருமானே என்று காட்டுவதில் நோக்குடையது. திருமந்த்ரத்தில் சொன்ன ஸ்வரூபத்திலும், சரமஶ்லோகத்தில் விதி₄க்கப்பட்ட உபாயத்திலும் ருசியுடையவனுடைய அநுஸந்தா₄னத்தைக் காட்டுகிறது த்₃வயம். f நாராயணோபநிஷத் முதலானவற்றில் விவரிக்கப்பட்டதாகையாலே, திருமந்த்ரம் ஶாஸ்த்ரத்தினால் ஆத₃ரிக்கப்பட்டது. கண்ணன் அருளிச்செய்த கீ₃தையில் உள்ளதாகையாலே, சரமஶ்லோகம் ஶரணமடையத்தக்க எம்பெருமானாலே ஆத₃ரிக்கப்பட்டது. நம் ஆசார்யர்களாலே எப்போதும் அநுஸந்தி₄க்கப்படுவதாகையாலே, த்₃வயம் ஆசார்யர்களால் ஆத₃ரிக்கப்பட்டது.

g ஆத்மயாத₂ாத்ம்ய ப்ரதிபாத₃நபரம் - திருமந்த்ரம் ; உபாயயாத₂ாத்ம்ய ப்ரதிபாத₃நபரம்-சரமஶ்லோகம் ; உபேய யாத₂ாத்ம்ய ப்ரதிபாத₃நபரம் - த்₃வயம்;

h ப்ராப்ய ப்ரத₄ாநம்-திருமந்த்ரம்; ப்ராபக ப்ரத₄ாநம்-சரம ஶ்லோகம்; புருஷகார ப்ரத₄ாநம் - த்₃வயம்.

## ஐம்பத்துநாலாம் வார்த்தை

ஆசார்யாங்கீ₃காரம் உடையவனுக்கு ஆசார்யன் இரங்கித் திருமந்த்ரத்தில் உபதே₃ஶித்த அர்த்த₂த்தைப் பத₃ஶ: அநு ஸந்தி₄க்கும்படி சொல்லுகிறது; - a ஈஶ்வரஶேஷபூ₄தன், அந்யஶேஷத்வ நிவ்ருத்தன், விலக்ஷணநிரூபகன், ததீ₃ய

---

g திருமந்த்ரம் மூன்று பத₃ங்களாலே ஜீவாத்மாவின் ஆகார த்ரயங்களையும் சொல்லுகையாலே, ஆத்மாவைப்பற்றிய உண்மையைத் தெரிவிப்பது. சரமஶ்லோகம் எம்பெருமானை நிரபேக்ஷமான உபாய மாகக் காட்டுகையாலே, உபாயத்தைப்பற்றிய உண்மையைத் தெரி விப்பது. இருவருமான சேர்த்தியிலே அவர்களுகந்த கைங்கர்யத்தைச் செய்யவேணும் என்று காட்டுகையாலே, த₃வயம உபேயத்தைப் பற்றிய உண்மையைத் தெரிவிப்பது.

h 'நாராயணாய நம:' என்று ப்ரணவத்தை விவரிக்கையாலே, திருமந்த்ரம் பரார்த்த₂கைங்கர்யமாகிற ப்ராப்யத்தை முக்₂யமாகச் சொல்லுவது. எம்பெருமானை நிரபேக்ஷமான உபாயமாக விதி₄க்கை யாலே, சரமஶ்லோகம் உபாயமென்றும் ஸாத₄னமென்றும் சொலலப் படும் ப்ராபகத்தை முக்₂யமாகச் சொல்லுவது. இவ்விரண்டு ரஹஸ்யங்களிலும் வெளிப்படையாகக் காட்டப்படாத பிராட்டியின் புருஷகாரத் தன்மையை வெளிப்படையாகக் காட்டுகையாலே த்₃வயம் புருஷகாரத்தை முக்₂யமாகச் சொல்லுவது.

### ஐம்பத்துநாலாம் வார்த்தை

a நாலாம் வேற்றுமையோடு கூடிய அகாரத்தாலே எம்பெருமா னுக்கு ஶேஷபூ₄தனாகவும், உகாரத்தாலே மற்றவர்களுக்கு அடிமைப் பட்டிருக்கையினின்றும் நீங்கினவனாகவும், மகாரத்தாலே மிகச்சிறந்த ஜ்ஞாநாநந்த₃ங்களை நிரூபகங்களாகக் கொண்டவனாகவும், நமஶ் ஶப்₃த₃த்தாலே அவனடியார்க்கு ஆட்பட்டவனாகவும், நாராயண ஶப்₃த₃த்தாலே எம்பெருமானோடு உறவுடையவனாகவும், நாலாம்

பரதந்த்ரன், தத்ஸம்ப₃ந்த₄யுக்தன், இங்கரஸ்வப₄ாவன் என்று தன்னை அநுஸந்தி₄ப்பது. b இத்தால் சொல்லிருய்த்து ; - ரக்ஷகத்வ ப்ரதிஸம்ப₃ந்தி₄ பூர்வகமான ரக்ஷ்யத்வஞ்சொல்லி, அந்யஶேஷத்வ ப்ரதிஸம்ப₃ந்தி₄ நிவ்ருத்தி பூர்வகமான அநந்யார்ஹத்வஞ் சொல்லி, அசேதந வ்யாவ்ருத்தி பூர்வகமான சேதநவைலக்ஷண்யஞ் சொல்லி, ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பூர்வகமான பாரதந்த்ர்யத்தினுடைய எல்லை சொல்லி, ஸோபாதி₄க ப₃ந்து₄நிவ்ருத்தி பூர்வகமான நிருபாதி₄க ஸம்ப₃ந்த₄ஞ் சொல்லி, அபுருஷார்த்த₂ நிவ்ருத்தி பூர்வகமான புருஷார்த்த₂ ப்ரகாரஞ் சொல்லித் தலைக்கட்டுகிறது.

## ஐம்பத்தஞ்சாம் வார்த்தை

நிருபாதி₄க தே₃வதா பரமாத்மா ; நிருபாதி₄க ஹவிராத்மா; ஜீவாத்மாக்கள் ஜீவாத்மாவுக்குச் செய்வதுண்டோ ?

---

வேற்றுமையாலே கைங்கர்யம் செய்வதையே இயல்வாகக் கொண்டவனாகவும் தன்னை அநுஸந்தி₄க்க வேண்டும் என்று கருத்து. b முற்கூறியதை இவ்வாக்யம் விவரிக்கிறது. ரக்ஷகத்வத்துக்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄யான (சேருமிடமான) ஜீவனை ரக்ஷ்யனென உணர்த்துகிறது அகாரம். அந்யஶேஷத்வத்துக்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄யான (சேருமிடமான) தே₃வதாந்தரங்கள் முதலானோரிடமிருந்து மீள்வதை முன்னிட்ட அநந்யார்ஹஶேஷத்வத்தைக் காட்டுகிறது உகாரம். ஜட₃மான அசேதனங்களைக்காட்டிலும் வேறுபாட்டை முன்னிட்டுக் கொண்டு. ஜீவனுக்கு ஜ்ஞானம் ஆநந்த₃ம் முதலான சிறப்பைக் காட்டுகிறது மகாரம். தன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்திலிருந்து மீள்வதை முன்னிட்டுக்கொண்டு ப₄க₃வத்பாரதந்த்ர்யத்தினுடைய எல்லை நிலமான ப₄ாக₃வதபாரதந்த்ர்யத்தைக் காட்டுகிறது நமஶ்ஶப்₃த₃ம். கர்மம் காரணமாக ஏற்பட்ட உறவினர்களிடமிருந்து மீள்வதை முன்னிட்டுக்கொண்டு, எம்பெருமானோடுள்ள இயற்கை உறவைச் சொல்லுகிறது நாராயணஶப்₃த₃ம். ஸ்வரூபத்துக்குத் தகாத புருஷார்த்த₂ங்களிலிருந்து மீள்வதை முன்னிட்டுக்கொண்டு, ஸ்வரூபத்துக்குத் தகுந்த பரார்த்த₂கைங்கர்யமாகிற புருஷார்த்த₂த்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது நாலாம் வேற்றுமை—என்று கருத்து.

### ஐம்பத்தஞ்சாம் வார்த்தை

"தே₃வதாமுத்₃தி₃ஶ்ய த்₃ரவ்யத்யாகோ₃ யாக₃:" [தே₃வதையை உத்₃தே₃ஶித்து ஒரு த்₃ரவ்யத்தை ஸமர்ப்பிப்பது யாக₃மாகும்] என்பது

நிருபாதி₄க மந்த்ரம் - ப்ரணவம்; நிருபாதி₄க யாக₃ம் - ஆத்ம யாக₃ம்; "தே₃வதாமுத்₃தி₃ஶ்ய த்₃ரவ்யத்யாகே₃ா யாக₃:."

## ஐம்பத்தாறும் வார்த்தை

திருநகரிப்பிள்ளை — ப்ரத₂மபத₃த்தில் - ஈஶ்வரனுடைய ஸர்வரக்ஷகத்வமும், ஸர்வஶேஷித்வமும், ஜக₃த்காரணத்வமும், ஶ்ரிய:பதித்வமும் சொல்லுகிறது; எங்ஙனேயென்னில்; - "ஆள்கின்றுனாழியான்" [திருவாய் 10-1-3] என்றும், "நல்கித் தான் காத்தளிக்கும் பொழிலேழும்" [திருவாய் 1-4-5] என்றும், "பொழிலேழுங் காவல்பூண்ட புகழானாய்" [திருநெடு 10] என்றும், "மூவுலகும் காவலோன்" [திருவாய் 2-8-5] என்றும் சொல்லுகையாலே - ஸர்வரக்ஷகத்வம் சொல்லிற்று;

"நெடியோய்க் கல்லது மடியதோவுலகு" [திருவாசிரியம் 5] என்றும், "உலகம் மூன்றுடன் வணங்கு" [திருவாசிரியம் 3] என்றும், "மூவுலகுந் தொழுதேத்தும் சீரடியான்" [திருவாய்

---

யாக₃லக்ஷணம். லோகவேத₃ங்களில் பல தெய்வங்கள் காணப்பட்டாலும், "ஸாக்ஷாத்₃தே₃வ: புராணோऽஸௌ" [புராணபுருஷனை இவ்வெம்பெருமானே நேரே தே₃வஶப்₃த₃த்துக்குப் பொருளாவன்] எனப்படும் எம்பெருமானே இயல்வான தே₃வனுவான். ஶாஸ்த்ரங்களில் பலவித₄மான ஹவிஸ்ஸுக்கள் சொல்லப்பட்டபோதிலும் இயல்வான தே₃வனான எம்பெருமானுக்குத்தக்க இயல்வான ஹவிஸ்ஸு ஜீவாத்மாவேயாகும். ஆகையால் நெய் முதலான ஹவிஸ்ஸுக்களைக்கொண்டு ஜீவாத்மாவானவன் ஜீவர்களான மற்ற தெய்வங்களுக்குச் செய்யும் யாக₃ங்கள் இயல்வான யாக₃ங்கள் ஆகமாட்டா. இயல்வான தே₃வனான எம்பெருமானைக் குறித்து ஜீவாத்மா இயல்வான ஹவிஸ்ஸான தன் ஆத்மாவை ஸமர்ப்பிக்கும் யாக₃மே இயல்வான யாக₃மாகும். இந்த யாக₃த்தைத் தெரிவிக்கும் ப்ரணவமே இயல்வான மந்த்ரமாகும் என்று கருத்து.

### ஐம்பத்தாறும் வார்த்தை

இந்த வார்த்தையிலுள்ள விஷயங்கள் முன் வார்த்தைகளில் விவரிக்கப்பட்டவையே. தி₃வ்யப்ரப₃ந்த₄ப்ரமாணங்களுக்கு அந்தந்த இடங்களில் வ்யாக்₂யானங்களைக் கண்டுகொள்வது. சில அரும்பத₃ங்களுக்கு மாத்திரம் விவரணம் செய்யப்படுகிறது

3-8-1] என்றும், "யாவரும் வந்தடிவணங்க அரங்கநகர்த் துயின்றவன்" [பெரு-திரு 8-10] என்றும் இத்யாதி₃களாலே- ஸர்வசேஷித்வம் சொல்லிற்று;

"நாவிக்கமல முதற்கிழங்கே" [திருவாய் 10-10-3] என்றும், "தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதல்" [திருவாய் 8-8-4] என்றும், "தேவருலகோடுயிர் படைத்தான்" [திருவாய் 4-10-1] என்றும், "நன்மைப் புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி" [திருவாய் 7-5-4] என்றும் இத்யாதி₃களாலே - ஜக₃த்காரணத்வம் சொல்லிற்று;

"திருநாரணன்" [திருவாய் 4-1-1] என்றும், "திருமகள் சேர்மார்பன்" [திருவாய் 7-2-9] என்றும், "திருமால்" [திருவாய் 8-3-9] என்றும் இத்யாதி₃களாலே-ஶ்ரிய:பதித்வம் சொல்லிற்று;

a தாத₃ர்த்₂யத்தாலே "பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டாய்" [திருவாய் 5-7-3] என்றும், "இன்றென்னைப் பொருளாக்கி" [திருவாய் 10-8-9] என்றும், "நாட்டினு யென்னை யுனக்கு முன் தொண்டாக" [பெரியதிரு 8-10-9] என்றும், "அடியேன் பிறந்தேன்" [பெரியதிரு 8-9-8] என்றும் இத்யாதி₃களாலே - சேஷத்வம் உதி₃த்தபடி சொல்லிற்று;

த்₃விதீயபத₃த்தாலே - ஆத்மாவினுடைய சேஷத்வாந்தர நிவ்ருத்தி பூர்வகமான அநந்யார்ஹ சேஷத்வத்தையும், ஈஶ்வரனுடைய b அநந்யார்ஹசேஷித்வத்தையும் சொல்லிற்று; எங்ஙனேயென்னில்; - "மற்றாரும் பற்றிலேன் ஆதலால் நின்னடைந்தேன்" [பெரியதிரு 8-10-5] என்றும், "தாழ்ச்சி மற்றெங்குந் தவிர்ந்து நின் தாளிணைக்கீழ் வாழ்ச்சி" [திருவாய் 3-2-4] என்றும், "மற்றோர் தெய்வ மெண்ணேன் உன்னை யென்மனத்து வைத்து" [பெரியதிரு 6-3-5] என்றும் இத்யாதி₃

---

a தாத₃ர்த்₂யம் - அகாரத்தின்மேல் ஏறிக்கழிந்த நாலாம் வேற்றுமை.
b அநந்யார்ஹசேஷித்வம் - வேறொருவர்க்கும் உரியதல்லாத ஸர்வ சேஷித்வம் அல்லது ஸ்வேதரஸமஸ்தவஸ்து சேஷித்வம் (தன்னை யொழிந்த மற்ற எல்லாப் பொருள்களுக்கும் சேஷியாயிருக்கை)ந

களாலே - அந்யஶேஷத்வ நிவ்ருத்தி பூர்வகமான அநந்யார்ஹ ஶேஷத்வம் சொல்லிற்று; "பேசநின்ற சிவனுக்கும் பிரமன் றனக்கும் பிறர்க்கும் நாயகனவன்" [திருவாய் 4-10-4] என்றும், "வானவர் தம்மையாளுமவன்" [திருவாய் 3-6-4] என்றும், "நான்முகனும் இந்திரனும் மற்றையமரரும் எல்லாம்" [திருவாய் 1-9-10] என்றும், "தாமோதரனுருவாகிய சிவற்கும் திசைமுகற்கும் ஆமோ தரமறிய" [திருவாய் 2-7-12] என்றும் இத்யாதி₃களாலே-ஈஶ்வரனுடைய b அநந்யார்ஹ ஶேஷித்வம் சொல்லிற்று.

த்ருதீய பத₃த்தாலே-ஆத்மாவினுடைய ஜ்ஞாநாநந்த₃த்வமும், ஜ்ஞாந கு₃ணகத்வமும், ப்ரக்ருதே:பரத்வமும், நித்யத்வமும் சொல்லுகிறது;

எங்ஙனேயென்னில்; - " என்மதிக்கு விண்ணெல்லாம் உண்டோ விலை " [நான்-திருவ 54] என்றும், " ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" [முதல்திருவ 67] என்றும், "யாதானு மோராக்கையிற் புக்கு" [திருவிரு 95] என்றும், " நின்றவொன்றை யுணர்ந்தேனுக்கு " [திருவாய் 8-8-5] என்றும் இத்யாதி₃களாலே - ஆத்மாவினுடைய ப்ரக்ருதே:பரத்வம் சொல்லிற்று ;

ஆக, ப்ரத₂ம பத₃ம் சொல்லிற்றுய்த்து.

மத்₄யமபத₃த்தாலே - ஆத்மாவினுடைய ஸாத₄நாந்தர நிவ்ருத்தியும், ஶரீரவத்ஶேஷத்வமும், ததீ₃யஶேஷத்வமும், பரதந்த்ரனுக்கு அநுரூபமான ஈஶ்வரனுடைய உபாயத்வமும் சொல்லுகிறது ;

எங்ஙனேயென்னில் ; - "வந்தெய்துமாறறியேன்"[திருவாய் 7-6-6] என்றும், "நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்" [திருவாய் 5-7-1] என்றும், " விரும்பி நின்றேத்தமாட்டேன் விதியிலேன் மதியொன்றில்லை " [திருமாலை 17] என்றும், "உன்னைக்காணும் மார்க்கமொன்றறியமாட்டா மனிசரில் துரிசனுய மூர்க்கனேன்" [திருமாலை 32] என்றும் இத்யாதி₃களாலே - ஸாத₄நாந்தர நிவ்ருத்தி சொல்லிற்று;

"உம்முயிர் வீடுடையான்" [திருவாய் 1-2-1] என்றும், "அடியேனுள்ளான்" [திருவாய் 8-8-2] என்றும், "ஆவியை யரங்கமாலை" [திருக்குறு 12] என்றும், "என்னுடை வாணாள்" [பெரியதிரு 1-1-6] என்றும் இத்யாதி₃களாலே - ஶரீரவத் ஶேஷத்வம் சொல்லிற்று;

"பயிலுந்திருவுடையார் யவரேலும்" [திருவாய் 3-7-1] என்றும், "எம்மையாளும் பரமர்" [திருவாய் 3-7-1] என்றும், "பணியுமவர் கண்டீர் எம்மையாளுடைநாதர்" [திருவாய் 3-7-2] என்றும், "தாள்தொழுவார்காண்மின் என்தலைமேலார்" [பெரிய திரு 7-4-1] என்றும், "கொண்டாடும் நெஞ்சுடையா ரவரெங்கள் குலதெய்வம்" [பெரியதிரு 2-6-4] என்றும் இத்யாதி₃களாலே - ததீ₃யஶேஷத்வம் சொல்லிற்று;

c "கணக்கில்கீர்த்தி வெள்ளக்கதிர்ஞான மூர்த்தியினாய்" [திருவாய்6-2-8]என்றும்,"செய்ய சூழ்சுடர்ஞானமாய்"[திருவாய் 3-6-7]என்றும்,"மழுங்காத ஞானமே படையாக"[திருவாய்3-1-9] என்றும்,"துக்கமில் ஞானச்சுடரொளிமூர்த்தி"[திருவாய் 3-10-9] என்றும் இத்யாதி₃களாலே-ஸர்வஜ்ஞத்வம் சொல்லிற்று;

"ஆளும்பணியு மடியேனைக் கொண்டான்" [பெரியதிரு 6-7-1] என்றும், "ஆட்கொள்ளவல்லான்" [பெரியதிரு 8-9-6] என்றும், "மருவித்தொழும் மனமே தந்தாய் வல்லைகாண்" [திருவாய் 2-7-7] என்றும், "அருளி அடிக்கீழிருத்தும்" [திருவாய் 8-8-11] என்றும் இத்யாதி₃களாலே - ஸர்வஶக்தித்வம் சொல்லிற்று;

"எல்லாவுலகுமுடைய வொருமூர்த்தி" [திருவாய் 5-8-4] என்றும், "தேவிமாராவார் திருமகள் பூமியேவ மற்றமரராட் செய்வார் மேவியவுலகம் மூன்றவை யாட்சி" [திருவாய் 8-1-1] என்றும், "பொங்கோதஞ்சூழ்ந்தபுவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்றவெம்பெருமான்" [நாச்-திரு 11-3] என்றும், "அடங்கெழில் சம்பத்தடங்கக்கண்டு ஈசனடங்

---

c உபாயத்துக்கு ஜ்ஞாந ஶக்தி பூர்த்தி ப்ராப்திகள் அவஶ்யமாகை யாலே, அவற்றை முறையே நாலு பாராக்களில் சொல்லுகிறது.

கெழிலஃது " [திருவாய் 1-2-7] என்றும் இத்யாதி₃களாலே - அவாப்தஸமஸ்தகாமத்வம் சொல்லிற்று;

"எந்நாளெம்பெருமானுன்றனுக்கடியோம்" [திருப்பல்10] என்றும், "உற்றெண்ணிலதுவுமற்றுங்கவன் றன்னது"[திருவாய் 7-9-10] என்றும், "நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு" [பெரியதிரு 2-8-9] என்றும், "உயிர்களெல்லா வுலகமுமுடைய வன்" [திருவாய் 3-2-11] என்றும், இத்யாதி₃யாலே-நிருபாதி₄க ஶேஷித்வம் சொல்லிற்று; ஆக இவற்றாலே - ஈஶ்வரனுடைய உபாயத்வம் சொல்லிற்று;

நாரஶப்₃த₃த்தாலே - சேதநாசேதநங்களுடைய நித்ய ஸமூஹங்களைச் சொல்லிற்று ; "நிற்கின்றதெல்லாம்" [நான் திருவ 54] என்கையாலே;

அயநஶப்₃த₃த்தாலே - ஈஶ்வரனுடைய ஸர்வஸ்வாமித்வ மும், ஸர்வவித₄ப₃ந்து₄த்வமும், ஸர்வாத₄ரத்வமும், ஸர்வ (வித₄) நியந்த்ருத்வமும் சொல்லிற்று;

எங்ஙனேயென்னில்; - "யவையும் யவருந் தன்னுள்ளே ஆகியு மாக்கியும் காக்கும்" [திருவாய் 1-9-1] என்றும், "தன் னுளனைத்துலகும் நிற்க நெறிமையால் தானு மவற்றுள் நிற்கும் பிரான்" [திருவாய் 9-6-4] என்றும், " அடியே னுள்ளான் உடலுள்ளான் அண்டத்தகத்தான் புறத்துள்ளான்" [திருவாய் 8-8-2] என்றும், " நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே! நீயென்னையன்றியிலை" [நான்-திருவ 7] என்றும் இத்யாதி₃களாலே - ஸர்வஸ்வாமித்வம் சொல்லிற்று;

"சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையுமவர்" [திருவாய் 5-1-8] என்றும், " தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் " [திருவாய் 7-8-1] என்றும், "எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றம் எனக்கரசு என்னுடைவாணாள்" [பெரியதிரு 1-1-6] என்றும், "தஞ்சமாகிய தந்தைதாயொடு தானுமாய் அவை யல்லனாய்" [திருவாய் 3-6-9] என்றும் இத்யாதி₃களாலே - ஸர்வவித₄ப₃ந்து₄த்வம் சொல்லிற்று;

"ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்" [திருவாய் 10-10-3] என்றும், "உன்னைவிட்டு-எங்ஙனே தரிக்கேன்" [திருவாய் 7-2-1] என்றும், "நாட்டினான் தெய்வமெங்கும்" [திருமாலை 10] என்றும், "நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வநாயகன் தானே" [திருவாய் 5-2-8] என்றும், இத்யாதி₃களாலே - ஸர்வாதா₄ரத்வம் சொல்லிற்று;

"செய்யேல் தீவினை என்றருள்செய்யும் என் கையார் சக்கரக் கண்ணபிரான்" [திருவாய் 2-9-3] என்றும், "நீ யோனிகளைப் படையென்று நிறைநான்முகனைப் படைத்தவன்" [திருவாய் 1-5-3] என்றும், "செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்த தேவதேவன்" [திருச்சந்தவிரு 109] என்றும், "அடிக்கீழமர்ந்து புகுந்தடியீர்! வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்" [திருவாய் 6-10-11] என்றும் இத்யாதி₃களாலே - ஸர்வநியந்த்ருத்வம் சொல்லிற்று.

இனி சதுர்த்தி₂யாலே-சேதநருடைய d தே₃ஶகாலாவஸ்த₂ாப்ரகாரோசித வ்ருத்த்யபேக்ஷை சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்;— "உள்ளவுலகளவும் யானுமுளனாவனென்கொலோ" [பெரியதிருவ 76] என்றும், "ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி" [திருவாய் 3-3-1] என்றும், "பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிட" [நாச்-திரு 4-1] என்றும், "உருவார் சக்கரம் சங்கு சுமந்து இங்கும்மோடு ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளன்" [திருவாய் 8-3-7] என்றும், "சென்றால் குடையாம்" [முதல்திருவ 53] என்றும், "மற்றைநங்காமங்கள் மாற்று" [திருப்பாவை 29] என்றும், "அடிமை செய்யவேண்டும் நாம்" [திருவாய் 3-3-1] என்றும், "கூவிப்பணிகொள்ளாய்" [திருவாய் 8-5-7] என்றும், "நல்கியாளென்னைக் கொண்டருளே" [பெரியதிரு 1-9-1] என்றும் இத்யாதி₃களாலே - வ்ருத்த்யபேக்ஷை சொல்லித் தலைக்கட்டுகிறது.

---

d தே₃ஶகாலாவஸ்த₂ாப்ரகாரோசித வ்ருத்த்யபேக்ஷை — "ஒழிவில் காலம்" [திருவாய் 3-3-1] முதலானவிடங்களில் சொல்லப்பட்டபடியே எல்லா தே₃ஶங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லா நிலை

"விடையேழன்றடர்த்து" [பெரியதிரு 8-9-3] என்கிற பாட்டை ப்ரணவார்த்த₂மாக அநுஸந்தி₄ப்பது; "யானே" [திருவாய் 2-9-9] என்கிற பாட்டை-மத்₄யமபத₃ார்த்த₂மாக அநுஸந்தி₄ப்பது; "எம்பிரானெந்தை" [பெரியதிரு 1-1-6] என்கிற பாட்டை - த்ருதீய பத₃ார்த்த₂மாக அநுஸந்தி₄ப்பது; "ஒழிவில் காலமெல்லாம்" [திருவாய் 3-3-1] என்கிற பாட்டை - சதுர்த்₂யர்த்த₂மாக அநுஸந்தி₄ப்பது. e"அகாரார்த்தே₂ா விஷ்ணுர் ஜக₃-து₃த₃யரக்ஷாப்ரளயக்ருந்மகாரார்த்தே₂ா ஜீவஸ்தது₃பகரணம் வைஷ்ணவமித₃ம்। உகாரோऽநந்யார்ஹம் நியமயதி ஸம்ப₃ந்த₄மநயோஸ்த்ரயீஸாரஸ்த்ர்யாத்மா ப்ரணவ இமமர்த்த₂ம் ஸமதி₃ஶத் ॥".

## ஐம்பத்தேழாம் வார்த்தை

a பிராட்டியை ஈஶ்வரனோடு ஸமானையென்பாரையும், சேதநரோடு ஸமானையென்பாரையும் வ்யாவர்த்திக்கிறது-"ஸ்ரீ"

---

களிலும் அவ்வவற்றுக்குத் தக்கபடி செய்யப்படும் எல்லாவித₄மான கைங்கர்யத்தையும் வேண்டுவது. e இது பட்டர் அருளிச்செய்த அஷ்டஶ்லோகியில் முதல் ஶ்லோகம். ப்ரணவத்தின் பொருளைச் சொல்லுவது. இதன் பொருளாவது:— உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் விஷ்ணுவானவர் அகாரத்தின் பொருளாவார். ஜீவன் மகாரத்தின் பொருளாவான். விஷ்ணுவின் உடைமையான இந்த அசேதனப் பொருள்—ஜீவனுக்கு ஶரீரம் இந்த்₃ரியம் முதலானவையாயிருந்துகொண்டு ப்ராக்ருத பே₄ாக₃ங்களை அநுப₄விப்பதற்கும், இஷ்டஸாத₄னங்களை அநுஷ்டி₂ப்பதற்கும் உபகரணமாயிருக்கிறது. இந்த ஜீவனுக்கும் பரமனுக்குமுள்ள ஶேஷஶேஷிபா₄வ ஸம்ப₃ந்த₄த்தை அநந்யார்ஹமாகக் காட்டுகிறது உகாரம். ருக்₃ யஜுஸ் ஸாமங்களாகிற மூன்று வேத₃ங்களின் ஸாரமாய், அகார உகார மகாரமென்கிற மூன்று பத₃ங்களைக் கொண்டதான ப்ரணவம் இந்த அர்த்த₂த்தை உணர்த்துகிறது.

### ஐம்பத்தேழாம் வார்த்தை

a ஶ்ரயதே இதி ஸ்ரீ: (எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கிறாளாகையாலே ஸ்ரீ: எனப்படுகிறாள்) என்கிற வ்யுத்பத்தியாலே எம்பெருமானுக்கு ஶேஷபூ₄தையாகப்பிராட்டியை ஸ்ரீஶப்₃த₃ம் காட்டுகையாலே

என்கிற ஸப்₃த₃த்தாலே; b ஆஶ்ரயணீயம் ஒரு மிது₂நமன்று என்பாரை வ்யாவர்த்திக்கிறது - மதுப்பாலே; c நிர்க்கு₃ண னென்பாரை வ்யாவர்த்திக்கிறது - நாராயண பத₃த்தாலே d நிர்விக்₃ரஹனென்பாரை வ்யாவர்த்திக்கிறது - " சரணௌ " என்கிற பத₃த்தாலே; e உபாயாந்தர நிஷ்ட₂ரை வ்யாவர்த்திக்கிறது - "ஶரணம்" என்கிற பத₃த்தாலே; f உபாயஸ்வீகாரத்தை உபாயமென்பாரை வ்யாவர்த்திக்கிறது-"ப்ரபத்₃யே" என்கிற பத₃த்தாலே; g ப்ராப்யம் ஒரு மிது₂நமன்று என்பாரை வ்யாவர்த்திக்கிறது — "ஸ்ரீமதே" என்கிற பத₃த்தாலே;

---

ஈஶ்வரனோடு எல்லாவித₄த்திலும் ஸமானமான பரப்₃ரஹ்மமாகவேயிருப்பவள் ஸ்ரீதே₃வி என்பவர்களுடைய பக்ஷத்தைத் தவிர்க்கிறது. "ஶ்ரீயதே இதி ஸ்ரீ:" [எல்லாச் சேதனராலும் ஆஶ்ரயிக்கப்படுகிறுளாகையாலே ஸ்ரீ: எனப்படுகிறுள்] என்கிற வ்யுத்பத்தியாலே ஈஶ்வரனையொழிந்த மற்ற சேதனர்கள் அனைவர்க்கும் ஶேஷியாகப் பிராட்டியைச் சொல்லுகையாலே, மற்ற ஜீவர்களோடு எல்லாவித₄த்திலும் ஸமானமாயிருப்பவள் ஸ்ரீதே₃வி என்று சொல்லும் ஏகாயநர் (த்₃வைதிகள்) பக்ஷத்தைத் தவிர்க்கிறது ஸ்ரீஸப்₃த₃ம். b எம்பெருமானோடு நித்யயோக₃த்தைக் காட்டும் மதுப்ப்ரத்யயத்தாலே புருஷகாரபூ₄தையான பிராட்டியோடு கூடிநின்று எம்பெருமான் உபாயமாகிறுன் என்பதை மறுக்கும் ஏகாயநர் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. c கல்யாண கு₃ணங்களோடு கூடியவனுக எம்பெருமானைக் காட்டும் நாராயண பத₃ம், "பரம்பொருள் கு₃ணமற்றது" என்று கூறும் அத்₃வைதிகள் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. d எம்பெருமான் திருமேனியுள்ளவன் என்று காட்டும் "சரணௌ" என்னும் பத₃ம் "பரம்பொருள் விக்₃ரஹ மற்றது" என்று கூறும் அத்₃வைதிகள் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. e "எம்பெருமானே இயல்வான உபாயம்" என்று காட்டும் "ஶரணம்" என்னும் பத₃ம், தமது முயற்சிகளான கர்மம், ஜ்ஞாநம், ப₄க்தி முதலான உபாயாந்தரங்களுக்கும் உபாயத்வம் கூறும் உபாயாந்தரநிஷ்ட₂ர் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. f எம்பெருமான் ஒருவனையே உபாயமாக உறுதிகொள்வதைக் காட்டும் "ப்ரபத்₃யே" என்னும் பத₃ம், அவனை உபாயமாகப்பற்றுவதாகிற ஸ்வக₃தஸ்வீகாரத்துக்கும் உபாயத்வம் உண்டு என்பவர்களுடைய பக்ஷத்தைத் தவிர்க்கிறது. g பெருமாளும் பிராட்டியுமான மிது₂னமே ப்ராப்யம் என்று காட்டும் "ஸ்ரீமதே" என்னும் பத₃ம், எம்பெருமானொருவனே

h த்ரிமூர்த்திஸாம்யதையை வ்யாவர்த்திக்கிறது - நாராயண பத₃த்தாலே ; i கைங்கர்யம் புருஷார்த்த₂மன்று என்பாரை வ்யாவர்த்திக்கிறது - சதுர்த்தி₂யாலே; j கைங்கர்யம் ஸ்வப்ர யோஜநம் என்பாரை வ்யாவர்த்திக்கிறது - நமஸ்ஸாலே.

## ஐம்பத்தெட்டாம் வார்த்தை

படல் கொட்டையப்பிள்ளை வார்த்தை;— a பூர்வக₂ண்ட₃ம்- அநந்யக₃தித்வம் சொல்லுகிறது ; உத்தரக₂ண்ட₃ம் - அநந்ய ப்ரயோஜநத்வம் சொல்லுகிறது ; b பூர்வக₂ண்ட₃ம் - ப₄க₃வத் க்ருபைக்கு வர்த்த₄கம் ; உத்தரக₂ண்ட₃ம் - ப₄க₃வத்ப்ரீதிக்கு வர்த்த₄கம் ; c அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் இரு

---

ப்ராப்யம் என்று கூறும் ஏகாயநர் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. h நார மப்₃த₃த்துக்குப் பொருளான ப்₃ரஹ்மருத்₃ரர்களுக்கும் த₄ாரகனாய், வ்யாபகனாய், ப்ராபகனாய், காரணனாய், ஶேஷியாய் இருப்பவன் எம்பெருமானே என்று காட்டும் நாராயணபத₃ம் "மும்மூர்த்திகளும் ஸமானமானவர்" என்பார் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. i கைங்கர் யத்தைப் புருஷார்த்த₂மாகக் காட்டும் நாலாம் வேற்றுமை "கைங் கர்யம் புருஷார்த்த₂மன்று" என்பார் பக்ஷத்தைத் தவிர்க்கிறது. j கைங்கர்யம் நம்முடைய உகப்புக்காகச் செய்யப்படுவதல்ல என்று காட்டும் நம:பத₃ம்—"கைங்கர்யத்தினால் விளையும் ஆநந்த₃த்தில் நமக்கும் பங்குண்டு" என்பார் பக்ஷத்தைத் தவிர்க்கிறது.

### ஐம்பத்தெட்டாம் வார்த்தை

த்₃வயத்தின் அர்த்த₂ங்களையும், பெருமையையும் விவரிக்கிறது இவ்வார்த்தை. a பிராட்டியால் புருஷகாரக்ருத்யம் செய்யப்பட்ட எம் பெருமானே உபாயம் என்று காட்டும் த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃ம், அவ்விருவரையொழிய நமக்கு வேறு க₃தியில்லை என்று காட்டுகிறது. இருவருமான சேர்த்தியில் கைங்கர்யத்தைச் சொல்லும் உத்தரக₂ண் ட₃ம் அதொழிய வேறு பயனில்லை என்று காட்டுகிறது. b எம்பெருமா னுடைய உபாயத்வத்தைக் கூறுகையாலே பூர்வக₂ண்ட₃த்தை அநு ஸந்தி₄ப்பது எம்பெருமானுடைய க்ருபையை வளர்க்கும் ; க்ருபா விஶிஷ்டனே உபாயமாகையாலே. எம்பெருமானுடைய உபேயத்வத் தைக் கூறும் உத்தரக₂ண்ட₃த்தின் அநுஸந்த₄ானம் அவனுடைய உகப்பை வளர்க்கும். உகப்போடு கூடிய எம்பெருமானே உபேய மாகையாலே. c ஜீவனுக்கு எல்லாப் பாபங்களும் நீங்குகையாகிற

வர்க்கும் ஒன்றுபோலே காணும்; d பூர்வக2ண்ட3ம் - அசித்3 வ்யாவ்ருத்தி; உத்தரக2ண்ட3ம்-ஈஶ்வரவ்யாவ்ருத்தி; "நானடியேன்" [பெரியதிரு 7-3-1] என்று நம் பூர்வாசார்யர்கள் ரஹஸ்ய த்ரயத்தையும் தங்களுக்குத் தஞ்சமென்று நினைத்துக்கொண்டு போராநிற்கச்செய்தேயும், ஆசார்யருசிபரிக்3ருஹீதமாகையாலே, த்3வயத்தை மிகவும் ஆத3ரித்துப் போருவர்கள்; இதினுடைய அருமையையும், பெருமையையும், சீர்மையையும் பாராதே, வந்தபடி வரச் சொல்லார்கள் நம் பூர்வாசார்யர்கள் என்று, அதி4காரி து3ர்லப4த்தாலே-இதினுடைய அருமை சொல்லிற்று; கர்ம ஜ்ஞாந ப4க்தி நிவ்ருத்தி பூர்வகமாகையாலே - இதினுடைய பெருமை சொல்லிற்று; e ரஹஸ்யத்ரயத்தில் வ்யாவ்ருத்தியுண்டாகையாலே - சீர்மை சொல்லிற்று.

## ஐம்பத்தொன்பதாம் வார்த்தை

a த்3வயத்தில் அர்த்த2ம் உபாயாந்தரங்களைப் பொறுது; b ஶப்3த3ம் ஸாத4நாந்தரங்களைப் பொறுது. c ப்ரபத்தியை

---

அநிஷ்டநிவ்ருத்தி ஏற்படும்போது, எம்பெருமானுக்கு இந்த ஜீவனை அநாதி3காலமாகப் பெருமலிருந்த அநிஷ்டத்தின் நிவ்ருத்தி ஏற்படுகிறது. ஜீவனுக்குப் பரமனுகந்த கைங்கர்யமாகிற இஷ்டப்ராப்தி ஏற்படும்போது, ஈஶ்வரனுக்கும் சேதன லாப4மாகிற இஷ்டப்ராப்தி ஏற்படுகிறது. ஆகையால் 'சேதனேஶ்வரர்கள் இருவருக்கும் அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் ஒன்று போலே' எனப்படுகிறது. d பாரதந்த்ர்யத்தில் அசித்தை ஒத்திருக்கும் ஜீவன், அறிவுடைமையில் அதைக்காட்டிலும் வேறுபட்டிருக்கையாலே எம்பெருமானை உபாயமாகப் பற்றவேணும் என்று காட்டுகிறது பூர்வக2ண்ட3ம். ஜீவனைக் கைங்கர்யம்செய்யும் ஶேஷபூ4தனாகவும், ஈஶ்வரனை ஶேஷியாகவும் காட்டுகையாலே ஜீவனுக்கு ஈஶ்வரனைக் காட்டிலும் வேறுபாட்டைக் காட்டுகிறது உத்தரக2ண்ட3ம். ஆக இவ்வண்ணமாக இரு க2ண்ட3ங்களும் ஜீவனுக்கு முறையே அசித்தைக் காட்டிலும் வேறுபாட்டையும், ஈஶ்வரனைக் காட்டிலும் வேறுபாட்டையும் காட்டுகின்றன. e ரஹஸ்யத்ரயத்தில் வ்யாவ்ருத்தி:— ரஹஸ்யத்ரயத்துக்குள் சிறப்பு.

### ஐம்பத்தொன்பதாம் வார்த்தை

a த்3வயத்துக்கு அர்த்த2மான எம்பெருமானாகிற ஸித்3தோ4பாயம் கர்ம ஜ்ஞான ப4க்திகளாகிற மற்ற உபாயங்களிலும் கை

ஸக்ருத்தென்பர் ஆழ்வான்; ஸதை₃ா என்பர் முதலியாண்டான்; ஸக்ருதே₃வ என்பர் ப₄ட்டர்; d ப₄க்தியிற்காட்டில் ப்ரபத்திக்கு

---

வைத்தால் தான் உபாயமாக மாட்டாது என்று கருத்து. b த்₃வயத்தின் ஶப்₃த₃ம், திருமந்த்ரம் முதலான மற்ற மந்த்ரங்களைப்போலே ஜபம் ஹோமம் முதலானவற்றாலே ஸாத₄நாந்தரங்களுக்குப் பயன் படாது என்று கருத்து. c பெரியவாச்சான்பிள்ளையின் தனிஶ்லோகத்தில் ''ஸக்ருதே₃வ'' [ரா-யு 18-33] என்னும் ஶ்லோகத்தின் வ்யாக்₂யானத் தொடக்கத்தில் வாக்யங்களோடு ஸமந்வயப்படுத்திப் பின்வருமாறு பொருள்கொள்ளவேணும். '' ஸஹஸா '' என்னும் ஶப்₃த₃த்துக்கு பதிலாக '' ஸக்ருத் '' என்னும் ஶப்₃த₃ம் வருவதுண்டாகையாலே, ஸக்ருத் என்றதை ஸஹஸா (உடனே) என்று பொருள் கொண்டு '' ஸக்ருதே₃வ ப்ரபந்நாய '' என்றது சடக்கென ஶரணம் புகுந்தவனைச் சொல்லுவதாகக் கொள்ளவேணும். அதாவது - தன்னுடைய தகுதியின்மையைப் பார்த்துத் தயங்காமல், எம்பெருமானுடைய கு₃ணத்தை நம்பிச் சடக்கென ப்ரபந்நனானேன் என்று கருத்து. இது கூரத்தாழ்வான் நிர்வாஹம். அப்படிக் கொள்ளாமல் '' ஸக்ருத் '' என்பதற்கு 'ஒரு தரம்' என்றே பொருள் கொண்டு ''இதற்கு முன் அநாதி₃காலம் ஸம்ஸாரக் கடலில் மூழ்கியிருந்தவன் இனிமேல் முடிவில்லாத காலம் ப₄க₃வத₃நுப₄வமாகிற ப₂லத்தை அநுப₄விக்கப்போகிறானாகையாலே, ஆயுள் உள்ளவரை எம்பெருமானை ஶரணம் புகுந்துகொண்டேயிருந்தாலும் ஒரு தடவைதான் என்று சொல்லலாமாகையாலே, நாம் எப்போதும் த்₃வயத்தை அநுஸந்தி₄ப்பதற்கும், ஸ்ரீராம சரமஶ்லோகத்தில் ஒரு தடவை என்று சொன்னதற்கும் முரண்பாடில்லை என்று முதலியாண்டான் நிர்வாஹம். எம்பார் நிர்வாஹமும் இதுவே என்பது தனிஶ்லோகம். இனி '' 'ஸக்ருதே₃வ' (ஒரு தடவையே) என்றது 'ஸர்வேஶ்வரன் இவனைக் கைக்கொள்வதற்கு, ஆசார்யன் உபதே₃ஶிக்க இவன் த்₃வயத்தை உச்சரிக்கும் காலத்தில் சொல்லும் ஒரு தடவையே போதுமானது' என்பதைக் காட்டுகிறது; த்₃வயத்தை ஆயுள் உள்ளவரை இடைவிடாமல் அநுஸந்தி₄ப்பது ஸித்₃தோ₄பாயத்தின் பெருமையை அநுஸந்தி₄ப்பதாலுண்டான இனிமையாலேயாகும். ஒருகால் சொன்னால் போராது என்ற நினைவாலேயன்று '' என்பது ப₄ட்டர் நிர்வாஹம். d ப₄க்தியிற்காட்டிலும் ப்ரபத்திக்கு ஏற்றங்கள் பின்வருமாறு:— (1) வேத₃த்தில் அதி₄காரமுள்ள முதல் மூன்று வர்ணத்தவர்களே அநுஷ்டி₂க்கக்கூடியது ஸாத₄நப₄க்தி; எல்லா வர்ணத்தவரும்,

வாசி; - அதி4க்ருதாதி4காரம் ஸர்வாதி4காரமாகையும், ஸாத்4யம் ஸித்3த4மாகையும், கர்மாவஸாநம் ശரீராவஸாநமாகையும், அந்திமஸ்ம்ருதியும் அவனதேயாகையும். ஆசார்யன் முன்னிலையாக எம்பெருமான் திருவடிகளிலே பண்ணின ப்ரபத்தியாகையாலே. ஒ பூர்வக2ண்ட3த்தில் அர்த்த2ம் ப2லாந்தரங்க

---

ஸ்த்ரீகளும், விலங்குகளுங்கூட பாரதந்த்ர்யஜ்ஞானமேற்பட்டால் அநுஷ்டி2க்கக்கூடியது ப்ரபத்தி. (2) அநுஷ்டி2ப்பவன் தன் முயற்சியாலே மிகவும் வருந்தி அநுஷ்டி2க்கவேண்டியது ப4க்தி. அநாதி3ஸித்3த4மான உபாயமான எம்பெருமானைப் பற்றுமதாகையாலே மிக எளிதானது ப்ரபத்தி. (3) ப4க்திநிஷ்டர்களுக்குப் பரார்த்த2தைக் குறுப்பான அத்யந்த பாரதந்த்ர்யஜ்ஞானமில்லாமையாலே, ப்ராரப்3த4 கர்மம் முடியும் வரையில் ശேஷத்வாநுஸந்த4ானம் முதலானவற்றோடு பல ஜன்மங்கள் ப4க்தியை அநுஷ்டி2க்க விதி4த்து, அவனுடைய ஸ்வார்த்த2தையைத் திருத்த முயல்கிறான் எம்பெருமான். அதனால் அவனுக்கு ப4க்தியால் மோக்ஷம் கிடைப்பதில் பல ஜன்மங்கள் காலதாமதமாகிறது. ப்ரபந்நன் அத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞானமுள்ளவனாகையாலே, ஸ்வார்த்த2தையற்றவனாயிருக்கும் அவனுக்கு எம்பெருமான் அந்த ஜன்மத்தின் கடைசியிலேயே அவன் விரும்பும் பரார்த்த2ாநுப4வ கைங்கர்யரூபமான மோக்ஷத்தை அருளுகிறான். ஆகையால் ப்ரபத்தியால் மோக்ஷம் விரைவில் கிடைக்கிறது. (4) ப4க்திநிஷ்டனுடைய ஸ்வார்த்த2தை அந்திமகாலத்திலாவது திருந்துமோ என்னும் நப்பாசையாலே, ശேஷத்வாநுஸந்த4ானத்தோடும் த்ரிவித4த்யாக3த்தோடும் கூடிய ப4க்தியை அந்திமகாலத்திலும் அநுஷ்டி2க்குப்படி விதி4க்கிறான் எம்பெருமான். ஆகையால் ப4க்தனுக்கு அந்திமஸ்ம்ருதி அவശ்யமாகிறது. அத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞானமுடைய ப்ரபந்நனுக்கு ஸ்வார்த்த2தையில்லாமையாலே, அந்திமஸ்ம்ருதி அவശ்யமில்லை என்றும், அந்திமகாலத்தில் தானே அவனை நினைப்பதாகவும் ''அஹம் ஸ்மராமி'' என்று வராஹ சரமശ்லோகத்திலே காட்டுகிறான் எம்பெருமான். ப4க்தியைப்போலல்லாமல் ப்ரபத்தியானது ஆசார்யன் முன்னிலையில் அநுஷ்டி2க்கப்படுகிறதாகையாலும், தன் முயற்சியான அதைப்போலல்லாமல் இது எம்பெருமான் திருவடிகளையே உபாயமாக நினைக்கும் நினைவாயிருக்கையாலும் ப4க்தியைக் காட்டிலும் ப்ரபத்திக்கு இச்சிறப்புகள் ஏற்படுகின்றன. ஒ த்3வயத்தில் உத்தரக2ண்ட3த்துக்கு ப்ரயோஜனம் சொல்லுகிறது இங்கு. '' ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை

ளுக்கும் ப₂லப்ரத₃மாகையாலே, "இவன் நம்மை உபாயமாகப் பற்றி ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டுபோகிறானாகாதே" என்று ஈஶ்வரஹ்ருத₃யம் கடல் கலங்கினாற்போலே கலங்கும்; உத்தரக₂ண்ட₃த்தாலே-'உன்னையே உபாயமாகப்பற்றி ப்ரயோஜ நாந்தரங்களைக்கொண்டு போவானொருவனல்லன்' என்று ஈஶ் வரன் "மாஶுச:" என்று - சேதநன் கண்ணநீரைத் துடைத் தாற்போலே, சேதநனும் ஈஶ்வரனை "மாஶுச:" என்கிறான்.

f ப்ரக்ருதி - விஶேஷணம்; விக்ருதி - அநுப₄வம்; ஏதத்₃ விக்ருதி - வ்ருத்திவிஶேஷம்; ப்ரக்ருத்யந்தரமும், விக்ருத் யந்தரமும் - ஆத்மநாஶம்.

---

உபாயமாகப் பற்றுகிறேன்" என்று பூர்வக₂ண்ட₃த்தில் அநுஸந்தி₄த்த வுடன், அத்திருவடிகள் மற்ற ப₂லங்களுக்கும் உபாயமாகையாலே, "இவன் மற்ற ப₂லங்களைப்பெற்று அகல்வதற்காக நம் திருவடிகளை ஶரணம் பற்றினானோ" என்று ஈஶ்வரன் திருவுள்ளம் கடல்கலங்கினாற் போலே கலங்கும். அப்போது "ஶ்ரீமானான நாராயணனின் பொருட்டு அவன் உகந்த அடிமை செய்யக்கடவேன்" என்னும் உத்தர க₂ண்ட₃த்தை அநுஸந்தி₄த்து, இச்சேதனன் தான் மற்ற ப₂லன்களைப் பெற்று அகல்பவனல்லன் என்பதைக் காட்டி எம்பெருமானுடைய கலக்கத்தைப் போக்குகிறான். சரமஶ்லோகத்தில் எம்பெருமான் "மாஶுச:" [வருந்தாதே] என்று இச்சேதனனுடைய கண்ணீரைத் துடைத்து வருத்தத்தைப் போக்கினதுபோலே, உத்தரக₂ண்ட₃த்தாலே ஜீவனும் ஈஶ்வரனுடைய வருத்தத்தைப் போக்குகிறான் என்று கருத்து.

f எம்பெருமானுக்கு விஶேஷணமாயிருப்பது ஜீவனுக்கு எப்போது முள்ள இயல்வாகும். எம்பெருமானைப்பற்றி ஜ்ஞானமுண்டானபோது அவன் அருளாலே இவனுக்குண்டாகும் விக்ருதி (மாறுபாடு) அவனது அநுப₄வமாகும். இவ்வநுப₄வம் முற்றினால் அவனுக்கு ஏற்படும் செயல் ப₄க₃வத்கைங்கர்யம். எம்பெருமானுக்கு விஶேஷணமாயிருப்பது நமக்கு ப்ரக்ருதி (இயல்வு) என்று எண்ணாமல், தன்னை ஸ்வதந்த்ர னாகவும், மற்றவர்களுக்கு விஶேஷணமாகவும் எண்ணும் ப்ரக்ருத் யந்தரமும், எம்பெருமானையொழிந்த தே₃வதாந்தரங்கள், விஷயாந் தரங்கள் முதலானவற்றை அநுப₄விப்பதும், தே₃வதாந்தரம் முதலானோர்க்குத் தொண்டு செய்வதுமாகிற விக்ருத்யந்தரமும், வ்ருத்த்யந்தரமும் இவ்வாத்மஸ்வரூபத்தை அழித்துவிடும். இருந்தும் இல்லாததுபோலே ஆக்கிவிடும் என்று கருத்து.

## அறுபதாம் வார்த்தை

வருணன் விஷயத்தில் பெருமாள் பண்ணின ப்ரபத்தி ப₂லியாதொழிந்தது - ஶரணாக₃தியின் சீர்மையை அறியும் ஶரணாக₃தனல்லாமையாலே. "பெருமாள் வருணனை ஶரணம் புகுகிறபோது ப்ராங்முக₂த்வாதி₃ நியமஸஹிதரானபடியாலே, ஶரணாக₃தரானவார்க்கெல்லாம் நியமாபேக்ஷையுண்டோ?" என்று வேல்வெட்டி நாராயணப்பிள்ளை நம்பிள்ளையைக் கேட்க; "ஶரணாக₃திக்கு நியமாபேக்ஷையுண்டாய்ச் செய்தாரல்லர்; இக்ஷ்வாகுக்கள் ஏதேனுமொன்று செய்யிலும் நியமத்தோடல்லது செய்யமாட்டாத வாஸநையாலே செய்தார்" என்று அருளிச்செய்தார்.

## அறுபத்தோராம் வார்த்தை

'ஸ்ரீப₄ரதாழ்வான் பெருமாளை வந்து ஶரணம் புக்கது ப₂லியாதொழிவானென்?' என்ன; 'ப₂லித்தது' என்று நம்பிள்ளை அருளிச்செய்தார்.

எங்ஙனேயென்னில்; இவன்தான் பீ₄தனாய்வந்து ஶரணம் புக்கது, 'ப₄ரதனுக்கு ராஜ்யம்' என்கிற ஸ்வரூபவிருத்₃த₄மான

---

**அறுபதாம் வார்த்தை**

இந்த வார்த்தை, ஸ்ரீவசனபூ₄ஷணம் 31-வது சூர்ணையிலும் அதன் வ்யாக்₂யானத்திலும் விவரிக்கப்பட்டுள்ளது. அங்கு கண்டு கொள்வது.

**அறுபத்தோராம் வார்த்தை**

இவ்வார்த்தையில் — ப₄ரதாழ்வான் ராமன் அயோத்திக்குத் திரும்பிவரவேணும் என்று ஶரணம்புகுந்தது ப₂லியாமற்போனதுக்குக் காரணமென்ன? என்னும் கேள்வி எழ, ப₄ரதாழ்வானுடைய முக்₂ய உத்₃தேஶ்யம் கைகூடினபடியாலே, ப₄ரதஶரணாக₃தியை ஒரு வகையில் ப₂லித்ததாகவே கொள்ளலாம் என்று நம்பிள்ளை ரஸமாக நிர்வஹிக்கிறார். 'அயோத்திக்குத் திரும்பிவரவேணும்' என்ற ப₄ரதனுடைய ப்ரார்த்த₂னை 'அரக்கர்களை அழிக்கவேணும்' என்னும் ருஷிகளுடைய ப்ரார்த்த₂னைக்கு முரணாயிருந்தபடியாலே ப₂லியாதுபோனாலும், ஸ்ரீபாது₃கையைக்கொடுத்து அடிசூடும் அரசிலே நிலைநிறுத்தியதன்

ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைக் கழிக்கைக்கன்றே ; திருவடி நிலை யாழ்வார்களைக் கொடுத்து, 'தத்பரதந்த்ரனாய்ப் போய் இரு'என்ற போதே அந்த ப₄யநிவ்ருத்தி பிறந்தது. அதுக்கு ப்ரமாணம்;- "ஆருரோஹ ரத₂ம் ஹ்ருஷ்ட: ஶத்ருக்₄நஸஹிதோ ப₃லீ" என்று. இவன் 'மீளவேணும்' என்று ப்ரார்த்தி₂த்தது செய்யா தொழிந்தது,—"ருஷயோऽப்₄யாக₃மந் ஸர்வே வத₄ாயாஸுரரக்ஷஸாம்" என்று ஶரணாக₃தரான ரிஷிகளுடைய ரக்ஷணார்த்த₂ மாக, இவன் 'மீண்டெழுந்தருளவேணும்' என்றத்தை மறுத்து எழுந்தருளினார். என்போல? என்னில் ; விருந்தினராய் வந்தவர்களுடைய த்ருப்த்யர்த்த₃மாக க்₃ருஹவானானவன் ப₄ார்யைக்கும் தனக்கும் பக்வமான சோற்றை இட்டு இருவரும் பட்டினி கிடக்குமாபோலே; அவனுக்கு ஸ்வவிஶ்லேஷத்திலுங் காட்டில் தமக்கு ப₄ரதவிஶ்லேஷம் து₃ஸ்ஸஹமாயிருக்க, ஸ்ரீத₃ண்ட₃காரண்யவாஸிகளான ருஷிகளுடைய த்ருப்த்யர்த்த₂ மாக மறுத்து எழுந்தருளினார்.

## அறுபத்திரண்டாம் வார்த்தை

மழலைக்கூற்றத்து நாராயணப்பிள்ளை, 'த்₃ருஷ்டார்த்த₂ மாகப் பண்ணின ப்ரபத்தி ப₂லிக்கக் காண்கிறிலோம் ; இது

---

மூலம் ஸ்வரூபவிருத்₃த₄மான ஸ்வாதந்த்ர்யம் நீங்குகையாகிற முக்₂யமான உத்₃தே₃ஶ்யம் ப₄ரதனுக்குக் கைகூடிற்றுகையாலே ப₄ரதஶரணாக₃தி ஒருவித₄த்தில் ப₂லித்ததாகவே கொள்ளலாமென்று கருத்து. "ஆருரோஹ ரத₂ம் ஹ்ருஷ்ட: ஶத்ருக்₄நஸஹிதோ ப₃லீ" [ரா-அ 113-1] [ப₃லமுடையவனான ப₄ரதன் மிக உகந்தவனாய், ஶத்ருக்₄னனுடன் தேரிலே ஏறினான்] என்று ப₄ரதன் உகப்புடனே திரும்பினான் என்றது இதை வலியுறுத்துகிறது. உத்தமனான க்₃ருஹஸ்த₂ன் விருந்தினரை ஆராதி₄ப்பதற்காக, தனக்கும் தன் மனைவிக்கும் வடித்த சோற்றை அவர்களுக்கு இட்டு, தானும் மனைவியும் பட்டினி கிடப்பதுபோலே, "ருஷயோऽப்₄யாக₃மந் ஸர்வே வத₄ாயாஸுரரக்ஷஸாம்" [ரா-பா₃ 1-44] [அஸுரராக்ஷஸர்களை அழிப்பதற்காக எல்லா ரிஷிகளும் ஶரணமடைந்தனர் ] என்று தன்னை ஶரணமடைந்த ரிஷிகளின் பொருட்டு ப₄ரதாழ்வானும் தானும் பிரிந்திருந்து பட்டினிகிடந்தார்கள். அதனாலேயே அயோத்திக்குப் பெருமாள் திரும்பி எழுந்தருளவில்லை என்று கருத்து.

போலேயோ அத்₃ருஷ்டார்த்த₂மும்' என்று நம்பிள்ளையைக் கேட்க; முதல் பண்ணின ப்ரபத்தியை நிரூபியாமல்காண் இது சொல்லிற்று; த்வத₃நுப₄வ விரோதி₄யானவற்றை யெல்லாம் போக்கி த்வத₃நுப₄வத்தைத் தரவேணுமென்று ப்ரபத்திபண்ணி, தத்₃விருத்₃த₄ ப்ரபத்தியைப் பண்ணினால், இவனுக்கு ஹிதத்தை எம்பெருமான் செய்தருளுகையாலே ப₂லிக்குமோ? ஆனால் " வரத₃ யதி₃ஹ வஸ்து வாஞ்சா₂ம்ய ஹம்" இத்யாதி₃யே ப்ரமாணமென்று அருளிச்செய்தார்.

## அறுபத்துமூன்றும் வார்த்தை

நஞ்சீயர் சரமத₃சையிலே, குட்டக்குடியிளையாழ்வார், த்₃வயத்தை அநுஸந்தி₄த்தாலாகாதோ? என்ன; " உனக்கு

---

**அறுபத்திரண்டாம் வார்த்தை**

மழலைக்கூற்றத்து நாராயணப்பிள்ளை என்பவர் ''ப்ரபந்நர்களான நாம் கண்காணும் இவ்வுலகப்ப₂லன்களை உத்₃தே₃சித்து அவ்வப் போது எம்பெருமானிடம் பண்ணும் சரணாக₃தி ப₂லிக்காமலிருப் பதைக் காண்கிறோம். இவ்வண்ணமே பஞ்சஸம்ஸ்காரத்தின்போது கண்காணாத மோக்ஷத்தைக் குறித்துப் பண்ணின சரணாக₃தியும் ப₂லிக்காமல்போகாதோ? என்று கேட்டார். அதற்கு நம்பிள்ளை— ''பஞ்சஸம்ஸ்காரத்தின்போது முதலில் பண்ணின சரணாக₃தியை ஆராயாமல் இக்கேள்வி கேட்டீர்; 'உன்னுடைய அநுப₄வத்துக்குத் தடையானவற்றையெல்லாம் போக்கி, உன் அநுப₄வத்தைத் தர வேணும்' என்று முதலில் சரணாக₃தி பண்ணி, அதற்கு முரணாக ப₄க₃வத₃நுப₄வத்தைத் தடுக்கும் ப₂லன்களை வேண்டி இவன் சரணா க₃தி பண்ணினால், இவனுக்கு நன்மையே செய்யும் எம்பெருமான் அதைப் ப₂லிக்கச்செய்யமாட்டான். 'வரத₃! யதி₃ஹ வஸ்து வாஞ்சா₂ம் யஹம் தவ சரணாப்₄ஜவிரோத₄ஸ்தத: । யதி₃ ந ப₄வதி தத் ப்ரதே₃ஹி ப்ரபோ₄! ஜ₂டிதி விதர பாத₃மேவாந்யதா₂॥' [வரதராஜஸ்தவம் 89] [வரத₃ராஜனே! நான் இங்கு யாதொரு வஸ்துவை விரும்புகிறேனோ அது உன் திருவடியை அடைவதற்குத் தடையாயிருக்காதாகில் அதைக்கொடு; இல்லையேல் உன்திருவடியையே விரைவில் கொடுத்து விடு] முதலான ஸ்ரீஸூக்திகள் இவ்விஷயத்தில் ப்ரமாணம்'' என்று அருளிச்செய்தார்.

அநுஸந்தி₄க்க வேண்டாதே எனக்கு இப்போது வேண்டுகிற தென்? நடையாடித் திரிவார்க்கு வேண்டாதே கிடப்பார்க்கு வேண்டியோவிருப்பது?" என்றருளிச்செய்தார்.

## அறுபத்துநாலாம் வார்த்தை

காகத்தினுடைய விஷயீகாரஸமயத்தில்-a"ததஸ் தஸ்யாக்ஷி காகஸ்ய ஹிநஸ்தி ஸ்ம ஸ த₃க்ஷிணம்" என்றபடியாலே-ஶ்ரீராம கு₃தனாலும் முன்புண்டான கர்மங்கள் அநுப₄வ்யங்களோ? என்னில்; இது பண்ணின குற்றத்துக்குத் தக்க த₃ண்ட₃ம் பண்ணிற்றன்று; தன் திருவடிகளிலே பண்ணின மஹாபராத₄த் தாலே ஸர்வலோகபரித்யக்தமான காகத்தை வெறுமன் பொறுத்து விட்டால் பொறுத்தமைக்கு அடையாளம் தெரியா திறே; ஆகையாலே தாம் பொறுத்தமைக்கு அடையாளம் பண்ணி விட்டாரித்தனை; b அதுதானும் திருமேனியில் ப்₃ரஹ்மாஸ்த்ரத் துக்கு இடங்கொடுத்தவோபாதியாக நினைத்துச் செய்தாரித்தனை. ஒரு கண்ணால் - இரண்டு கண்ணுங் கொள்ளக்கடவ கார்யங் கொள்ளும் c ஜாதியாகையாலும், d ஆத்மஸத்தையைக் காட்டி

---

### அறுபத்துமூன்றும் வார்த்தை

நஞ்சீயர் பரமபத₃ம் எழுந்தருளும்போது குட்டக்குடி இளையாழ் வார் என்பவர் அவருக்கு நன்மை சொல்லுவதாக நினைத்து "த்₃வயத்தை அநுஸந்தி₄த்தாலாகாதோ?" என்று சொல்ல, "நடையாடித் திரியும் உனக்கு ப்ராக்ருதவிஷயங்களில் ஸம்ஸர்க்க₃ம் ஏற்படக்கூடுமாகையாலே அது நீங்குவதற்காக த்₃வயாநுஸந்தா₄னம் அவஶ்யமானது; விஷயங்களோடு தொடர்பு நீங்கி எம்பெருமானையே சிந்தித்துக்கொண்டு அசையமுடியாமல் கிடக்கும் எனக்கு த்₃வயாநுஸந்தா₄னம் தேவையில்லையே" என்று அருளிச்செய்தார்.

### அறுபத்துநாலாம் வார்த்தை

a "அந்த ராமபிரான் அந்தக் காகாசுரனுடைய வலதுகண்ணை அழித்தார்" [ரா-ஸு 38·37] என்பது இதன் பொருள். b தொடுத்த ப்₃ரஹ்மாஸ்த்ரம் வீணாகக்கூடாதாகையாலே, அதுக்கு ஓர் இடம் கொடுத்தவளவேயொழிய, இது த₃ண்ட₃மல்ல என்று கருத்து. c ஜாதி - காகஜாதி. d பாட₂ம் பிறழ்ந்துள்ளது; ஆத்மாவின் ஸத்தையையே அழித்தாலும் போராதபடியான அஸஹ்யாபசாரம் செய்த காகம் என்று கருத்து இருக்கவேண்டும்.

ஞலும் பொறுதபடியால் அவ்வபராத₄த்தைப் பண்ணின காகத்துக்கு இது த₃ண்ட₃மாகப் போராமையாலும், பொறுத் தமைக்கு அடையாளம் வேண்டுகையாலும், இங்ஙனே ஒரு கண்ணழிவு கண்டாரித்ததைபோக்கி, த₃ண்ட₃மன்று என்று நம்பிள்ளையருளிச்செய்வர்.

## அறுபத்தைந்தாம் வார்த்தை

"ப்ரபந்நனுக்கு ப்ரபத்திவசநம் பலகாலும் வர்த்திக்க வேணுமோ? ஒருகால் அமையாதோ?" என்று கேட்க, பிள்ளையருளிச் செய்கிறார்;—a ப்ரபத்தவ்யனுக்கோ, b ப்ரபத்தா வுக்கோ, நீர் ஆர்க்குக் கேட்கிறது பின்பு? ப்ரபத்தவ்யனுக்கு இவன் ஒருகால் உச்சரித்தது அமையும்; ப்ரபத்தாவானவன் c ப்ராப்யத்ருஷ்ணையாலே அதினுடைய ஸித்₃தி₄யளவுஞ் செல்ல ஆவர்த்திக்கை தவிரான். அது என்போல? என்றால்;-d பிபா ஸிதனானவன் ஒருகால் "தண்ணீர்" என்றதுவே கொண்டு வார்க்கிறவன் வார்க்கக்கடவனாயிருக்க, e பிபாஸாதிஶயத் தாலே தண்ணீரளவுஞ்செல்ல "தண்ணீர் தண்ணீர்" என்று ஆவர்த்திக்குமாபோலே, பலகால் ஆவர்த்திக்குமது f விதி₄ ப்ரயுக்தமாய் வரக்கடவதன்று; ப்ராப்ய த்ருஷ்ணாதிஶயத் தாலே g ராக₃ப்ரயுக்தமாய் வரக்கடவது என்று அருளிச்செய்தார்.

## அறுபத்தாறும் வார்த்தை

எண்ணாயிரத்துத் திருவாய்க்குலத்தாழ்வான், 'ப்ரபத்தி a பு₃த்₃தி₄பூர்வகமாகப் பண்ணின அபசாரத்துக்கு ப்ராயஶ் சித்தமாமோ?' என்று நஞ்சீயரைக் கேட்க; 'ப்ரபத்திப்ரப₄ாவத்

---

**அறுபத்தைந்தாம் வார்த்தை**

a ப்ரபத்தவ்யன் - ஶரணாக₃திக்கு விஷயமான எம்பெருமான். b ப்ரபத்தா-ஶரணாக₃திசெய்யும் ஜீவன். c ப்ராப்யத்ருஷ்ணை-கைங்கர்ய மாகிற ப்ராப்யத்தில் ஆசை. d பிபாஸிதன் - தாகமெடுத்தவன். e பிபாஸாதிஶயம் - மிகுதியான தாகம். f விதி₄ப்ரயுக்தம் - "ஶரணம் வ்ரஜ" [ஶரணம் அடைவாய்] என்னும் ஶாஸ்த்ரவிதி₄யினால் ஏற்பட்டது. g ராக₃ப்ரயுக்தம்-ஶரணமடைபவனின் விருப்பத்தால் ஏற்பட்டது.

தைப் பார்த்தால் a புத்₃தி₄பூர்வத்துக்கும் ப்ராயஶ்சித்தமாம்; ஜ்ஞாநம் பிறந்த பின்பு a புத்₃தி₄பூர்வகம் கூடாது ; b ப்ரா மாதி₃கத்துக்கு அநுதாபமுண்டு ; ப₄யப்படவேண்டா என்று அருளிச்செய்தார்.

## அறுபத்தேழாம் வார்த்தை

பற்றிற்றெல்லாம் பற்றி அவனையும் பற்றுகை ப₄க்தி ; விடுவதெல்லாம் விட்டுத் தன்னையும் விடுகை ப்ரபத்தி.

## அறுபத்தெட்டாம் வார்த்தை

க(ண்)ணியனூர் சிறியாச்சான், எம்பாரைத் தண்டனிட்டு, 'திருவுள்ளத்தில் தஞ்சமாக நினைத்திருக்குமத்தை எனக்கு அவஶ்யம் அருளிச்செய்யவேணும்' என்ன ; "a தா₃ஶரதி₂! எம்பெருமானார் ஸ்ரீபாத₃த்₃வயமொழியத் தஞ்சமாயிருப்ப தில்லை" என்று அருளிச்செய்தார்.

## அறுபத்தொன்பதாம் வார்த்தை

பின்பழகியபெருமாள்ஜீயர், சில வைஷ்ணவர்களைக்காட்டி, 'த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்துக்கும் உத்தரக₂ண்ட₃த்துக்கும் வார்த்தை அருளிச்செய்யவேணும்' என்று விண்ணப்

---

**அறுபத்தாறும் வார்த்தை**

a புத்₃தி₄பூர்வகம் - பாபமென்று அறிந்து செய்யும் பாபம். b ப்ராமாதி₃கம் - கவனமின்மையால் செய்யும் பாபம்.

**அறுபத்தேழாம் வார்த்தை**

கர்மயோக₃ம், ஜ்ஞானயோக₃ம் முதலான அங்க₃ங்களையும் பற்றி, அங்கி₃யான ப₄க்தியையும் ப₂லகரண ஸாத₄னமாகப் பற்றி, எம்பெருமானையும் ப₂லப்ரத₃ஸாத₄னமாகப் பற்றுவதே ப₄க்தி என்னும் உபாயாந்தரம். தன் முயற்சியாயிருக்கும் உபாயாந்தரங்கள் அனைத்தையும் விட்டு, தான் எம்பெருமானை உபாயமாகப் பற்றுவதாகிற ஸ்வக₃தஸ்வீகாரத்திலும் உபாயபு₃த்₃தி₄யை விடுவது ப்ர பத்தி; அதாவது—ப₄க₃வதே₃கோபாயத்வாத்₄யவஸாயம். (எம்பெரு மான் ஒருவனையே உபாயமாகக் கொள்ளும் உறுதி.)

**அறுபத்தெட்டாம் வார்த்தை**

a தாஶரதி₂ - கணியனூர் சிறியாச்சானின் திருநாமம்.

பஞ்செய்ய; பிள்ளையருளிச்செய்தபடி; a பெருமாளும், பெரிய பிராட்டியாரும் அபி₄மதங்களை முடிப்பார் என்றிருக்கை. b அபி₄மதங்கள் தான் எவையென்னில்; பெருமாளும் பிராட்டியு மாயிருக்கிற இருப்பிலே எல்லா அடிமையுஞ் செய்யவேணு மென்றிருக்கையும், அடிமைக்கு விரோதி₄ கழியவேணு மென்றிருக்கையும் — என்றருளிச்செய்தபடி நினைத்திருக்கிறார் கள். c ஸ்ரீபாத₃த்திலவர்கள் நினைத்திருப்பதேது? என்று ஜீயர் கேட்க; இம்மஹோபகாரத்தைப் பண்ணினவன் என்று நினைத் திருப்பது; d பின்னையும் ஜீயர், புருஷகாரமாயிருக்கிற இவள் " அகலகில்லேன் " என்று ஆழங்காற்படாநிற்க, புருஷகார பூ₄தையாகிறபடி எங்ஙனே? என்னில்; e "அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" நிற்கச்செய்தேயும் ஜக₃ந்நிர்வாஹமும் செ(ா)ல்லுகிறதில்லையோ ; "பார்வண்ண

---

### அறுபத்தொன்பதாம் வார்த்தை

a (பெருமாளும்.........என்றிருக்கை) புருஷகாரபூ₄தையாயிருக்கும் பெரிய பிராட்டியாரும், உபாயபூ₄தரான பெருமாளும் நம்முடைய இஷ்டங்களை நிறைவேற்றித்தருவர் என்று நினைத்திருக்கை பூர்வ க₂ண்ட₃த்தின் பொருள். b உத்தர க₂ண்ட₃த்தின் பொருளைச் சொல்லு கிறது. நம்முடைய இஷ்டங்களாவன: (1) பெருமாளும் பிராட்டி யுமான சேர்த்தியிலே எல்லா அடிமைகளும் செய்யவேணும் என்று நினைத்திருக்கை. இது " ஸ்ரீமதே நாராயணாய " என்பதின் பொருள். (2) 'இந்தக் கைங்கர்யம் நம்முடைய ஆநந்த₃த்துக்கு உறுப்பு' என்று நினைப்பது இதற்குக் களையாகுமாகையாலே, அந்தக் களை கழியவேணும் என்று நினைத்திருக்கை. இது உத்தர க₂ண்ட₃த்தில் "நம: ' என்பதின் பொருள். c இந்த த்₃வயார்த்த₂த்தை ஆசார்ய னிடம் உபதே₃ஶம் பெற்றவர்கள் உபதே₃ஶித்த ஆசாரியனைப் பெரிய உபகாரஞ் செய்தவனாக நினைத்திருக்கவேணும் என்று கருத்து. d - "அகலகில்லேனிறையும்" [திருவாய் 6-10-10] என்று எம்பெரு மானிடம் ஈடுபடும் இயல்வுடைய பிராட்டி அவ்வீடுபாட்டை விட்டு, சேதனனைப் பார்த்து அவனுக்குப் புருஷகாரம் செய்வது எப்படிப் பொருந்தும் ? என்பது கேட்டவரின் கருத்து. e "அல்லிமலர்மகள் போக மயக்குக்கள் ஆகியும் நிற்கும் அம்மான்" [திருவாய் 3-10-8] என்று எம்பெருமான் பிராட்டியிடம் கணந்தோறும் ஈடுபட்டுக் கொண்டிருந்தபோதிலும், அவ்வளவன்றிக்கே "பார்வண்ண மட

மடமங்கை பத்தர் பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு'' என்றும் ஜகந்நிர்வாஹமும் செ(சொ)ல்லுகிறதில்லையோ? என்று அருளிச் செய்தார்.

## எழுபதாம் வார்த்தை

நம்பியை, கோவர்த்தநதாஸர், a அர்ஜுநனைப்போலே யாகிலும் யோக்யதை வேண்டாவோ? என்ன; b க்ஷத்ரியத் வாதிகளும் வேணுமோ? என்றார்; c அதிகாரிக்கு அபராதா நாம் ஆலயத்வமும், ஆர்த்தியும், ஆகிஞ்சந்யமும், அநந்ய கதித்வமும், ஸ்வஜ்ஞாநமும், ஸ்வரூபப்ரகாஶமும் வேணும்.

---

மங்கை பத்தர் பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு'' [திருநெடு - 18] என்கிறபடியே பூமிப்பிராட்டியிடமும் ஈடுபட்டுக்கொண்டிருந்தபோதிலும், உலகைப்படைத்து அளித்து அழிக்கும் கார்யத்தைச் செய்கிறனல்லவோ; அதுபோலே ஒரே சமயத்தில் எம்பெருமானிடம் ஈடுபடுவதும், புருஷகாரச்செயல் புரிவதும் பிராட்டிக்குப் பொருந்தும் என்பது பதிலின் கருத்து.

### எழுபதாம் வார்த்தை

a முமுக்ஷு (மோக்ஷத்தையடைய விரும்புபவன்) அல்லாமையாலே அர்ஜுனன் மிகச்சிறந்த அதிகாரி அல்லன். ப்ரபந்நனுக்கு அர்ஜுனனைப்போலவாவது தகுதியிருக்க வேண்டாமா? என்பது கேள்வியின் கருத்து. b அர்ஜுனனைப்போலவாவது தகுதி வேணுமாகில், அவனுக்கு இருந்த க்ஷத்ரியத்வமும் வேண்டுமென்று சொல்ல வேண்டிவரும். ஆகையால் கேள்வி சரியானதல்ல என்பது பதிலின் கருத்து. c இனி வார்த்தையின் எஞ்சிய பகுதியாலே ஶரணாகதி பலிப்பதற்கு அதிகாரியிடமும், பிராட்டியிடமும், எம்பெருமானிடமும் இருக்கவேண்டியவைகளை த்வயத்தின் பதங்களை விவரிப்பதன்மூலம் காட்டுகிறார். அதில் முதலில் 'ப்ரபத்யே' எனும் ஶப்தத்தால் உணர்த்தப்பெற்ற அதிகாரிக்கு வேண்டியவையாவன:— (1) தான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமானவன் என்று அநுஸந்திக்கவேணும். (2) எம்பெருமானைப் பெறவேண்டும் என்னும் ஆர்த்தி (துடிப்பு) வேணும். (3) கர்மயோகம் முதலான உபாயங்கள் எதுவும் தன்னிடமில்லை என்னும் ஆகிஞ்சந்யாநுஸந்தானம் வேணும். (4) தன்னை ரக்ஷிப்பார் வேறு எவருமில்லை என்னும் அநந்யகதித்வாநுஸந்தானம் வேணும். (5) தான் எம்பெருமானுக்கு ஶேஷபூதன் என்னும் தன்னைப் பற்றிய அறிவு வேணும். (6) தான் எம்பெருமானுக்கு அசித்துப்போலே அத்யந்த பாரதந்த்ரமானவன் என்னும் தன்னைப் பற்றிய தெளிவு வேணும்.

d பூர்வாபராத₄ம் பொறுக்கைக்குப் புருஷகாரம் வேணும்; e காலநியதி பாராமைக்கு மதுப்பு வேணும்; f புருஷகாரந் தான் ஜீவிக்கைக்கு ஶீலாதி₃கு₃ணங்கள் வேணும்; g அது தான் கார்யகரமாகைக்கு ஜ்ஞாநஶக்த்யாதி₃கு₃ணங்கள் வேணும்; h ஸம்ஸாரிகளுக்கு ருசிஜநகமுமாய், முமுக்ஷுக்க ளுக்கு ஶுபா₄ஶ்ரயமுமாய், முக்தர்க்கு போ₄க்₃யமுமாகைக்கு விலக்ஷணவிக்₃ரஹம் வேணும்; i உபாய ஸௌகுமார்யத்துக்கு நைரபேக்ஷ்யம் வேணும்; j அதுதான் ப₂லத்தோடே வ்யாப்த மாகைக்கு ஸ்வீகாரம் வேணும்; k கீழ் புருஷகாரமானாற்போலே

---

d அதி₄காரியிடம் முற்கூறிய தகுதிகள் இருந்தாலும் எம்பெருமான் இவன் முன் செய்த குற்றங்களைப் பொறுப்பதற்கு ஸ்ரீ ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட பிராட்டியின் புருஷகாரம் (சிபாரிசு) வேணும். e அதி₄காரிக்கு எந்த க்ஷணத்தில் ஆநுகூல்யம் ஏற்படுகிறதோ அந்த க்ஷணத்திலேயே ஶரணமடைவதற்கு மதுப்ப்ரத்யயத்தாலே காட்டப் பட்ட பிராட்டியின் நித்யயோக₃ம் எம்பெருமானுக்கு வேணும். f பிராட்டி செய்யும் புருஷகாரம் ப₂லிப்பதற்கு நாரஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட ஸௌஶீல்யம், ஸௌலப்₄யம், வாத்ஸல்யம், ஸ்வா மித்வம் ஆகிய கு₃ணங்கள் எம்பெருமானுக்கு (ஜீவன் ஆஶ்ரயிக்கும் சமயத்தில்) வேணும். g ஶரணாக₃தனுடைய கார்யம் நிறைவேறுவ தற்கு எம்பெருமானிடம் ஜ்ஞானம், ஶக்தி, ப்ராப்தி (ஸர்வ ஸ்வா மித்வம்), பூர்த்தி (அவாப்த ஸமஸ்தகாமத்வம்), கருணை என்னும் கு₃ணங்கள் வேணும். h இந்த ஸம்ஸாரத்தில் ஶப்₃த₃ம் முதலான ப்ராக்ருத விஷயங்களில் உழல்கின்றவர்களுக்கு எம்பெருமானிடம் ருசியை உண்டாக்குவதாய், மோக்ஷமடைய விரும்புகிறவர்களுக்கு த்₄யானிக்கத்தக்க ஶுபா₄ஶ்ரயமுமாய், முக்தியடைந்த பின் முக்தர் களுக்கு அநுப₄விக்கத்தக்கதுமாவதற்கு, சரணஶப்₃த₃த்தால் சொல்லப் பட்ட அப்ராக்ருத தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹம் எம்பெருமானுக்கு வேணும். i உபாயத்தின் சுமையுடைமைக்கு ஶரணஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட நைரபேக்ஷ்யம் (வேறொன்றை எதிர்பாராமை) எம் பெருமானுக்கு வேணும். j இந்த நிரபேக்ஷோபாயத் தன்மை ப₂லிப் பதற்கு ஜீவனுக்கு அதி₄காரி விஶேஷணமான — 'ப்ரபத்₃யே' என் னும் ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட உபாயஸ்வீகாரம் வேணும். k பூர்வக₂ண்ட₃த்தில் ஸ்ரீஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட பிராட்டி புருஷ

மேலும் ப்ராப்யபூ₄தையாகவேணும்; 1 கீழ் உபாயபூ₄தனுனாற் போலே மேலும் ப்ராப்யபூ₄தனாகவேணும்; ｍ ேஶஷத்வத் தளவேயன்றிக்கே ேஶஷவ்ருத்தியும் வேணும்; ｎ ஸ்வஸ்வா தந்த்ர்ய நிவ்ருத்தியன்றிக்கே ஸ்வபோ₄க்த்ருத்வநிவ்ருத்தியும் வேணும்.

## எழுபத்தோராம் வார்த்தை

ஆ வங்கிப்புரத்து நம்பி, யதிவர சூடா₃மணி தா₃ஸர்க்கு, "ஒரு ஸர்வஶக்தியை ஒரு அஶக்தன் பெறும்போது, தானும் பிறரும் தஞ்சமன்று; ஆசார்யன் அநுக்₃ரஹபூர்வகமாக த்₃வ யத்தில் அர்த்த₂த்தை அநுஸந்தி₄த்துப் பிழைத்தல், நித்ய ஸம்ஸாரியாய் முடிதல் செய்யுமதுக்கு மேற்பட்டதில்லை" என்று அருளிச்செய்தார்.

## எழுபத்திரண்டாம் வார்த்தை

எம்பெருமானார், பெரியநம்பி ஸ்ரீபாத₃த்திலே சென்று, "ப்ரபத்தியென்?" என்று விண்ணப்பஞ்செய்ய; ஆ 'கனிப்பழம்

---

காரமானாற்போலே, உத்தர க₂ண்ட₃த்தில் ஸ்ரீஶப்₃த₃த்தால் சொல்லப் பட்ட அவள் ப்ராப்யையாகவும் வேணும். 1 பூர்வக₂ண்ட₃த்தில் நாராயண ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட எம்பெருமான் உபாய மானாற்போலே, உத்தரக₂ண்ட₃த்தில் நாராயண ஶப்₃த₃த்தால் சொல் லப்பட்ட அவன் ப்ராப்யனாகவேணும். ｍ ஜீவனிடம் ேஶஷத்வமாத் திரமல்லாமல், அந்த ேஶஷத்வம் நிறம் பெறுவதற்கு "ஆய"பத₃த் தால் சொல்லப்பட்ட ேஶஷ வ்ருத்தியாகிற (ேஶஷபூ₄தனுக்குரிய செயலாகிற) கைங்கர்யமும் வேணும். ｎ பூர்வக₂ண்ட₃த்தில் சொல்லப் பட்டதாய், தன் கார்யத்துக்குத் தான் ஶக்தியற்றவனாயிருக்கையாகிற ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி மாத்ரமல்லாமல், இருவருமான சேர்த் தியில் செய்யப்படும் கைங்கர்யம் தன் ஆனந்த₃த்துக்காக என்னும் எண்ணமும் உத்தரக₂ண்ட₃த்தில் "நம:"பத₃த்தால் நீங்கவேணும்.

### எழுபத்தோராம் வார்த்தை

ஆ வங்கிப்புரத்துநம்பி—எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களில் ஒருவர். மணக்கால்நம்பியின் ஶிஷ்யரான வங்கிப்புரத்தாச்சியின் வம்ஶஸ்த₂ர்.

### எழுபத்திரண்டாம் வார்த்தை

ஆ இவ்வர்த்த₂ம் "தானே பழுத்தால் விழும் கனிபோல் பற்றற்று வீழும் விழுக்காடே" [ஞானஸாரம் 1] என்று அருளாளப் பெருமான்

காம்பற்றுற்போலேயிருக்கும்' என்ன; 'இன்னமும் ஸந்தே₃ஹம் செல்லாநின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய ; 'ஆகில் இவ் வர்த்த₂த்தைத் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்திலே கேளும்' என்ன ; இவ‌னும் அங்கே சென்று விண்ணப்பஞ்செய்ய; அவரும் b " ஸக்ருதே₃வ " என்றருளிச்செய்ய; 'இன்னமும் ஸந்தே₃ஹம் செல்லாநின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய: 'ஆகில் இவ்வர்த்த₂த்தைத் திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த் திலே கேளும்' என்ன; இவரும் அங்கேசென்று விண்ணப்பஞ் செய்ய; அவரும் c 'இத்தனை பிசகுகைக்குண்டோ? ஒருரேகை₂ மாத்ரம்'என்ன; d 'இன்னமும் ஸந்தே₃ஹம் செல்லாநின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய ; 'ஆகில் இவ்வர்த்த₂த்தை ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் ஸ்ரீ பாத₃த்திலே கேளும்' என்ன ; இவரும் அங்கே சென்று விண்ணப்பஞ் செய்ய ; அவரும் e 'ததீ₃யபர்யந்தமாகக்காணீர்' என்றருளிச் செய்தார்.

## எழுபத்துமூன்றும் வார்த்தை

a ஸ்வீகாரத்தில் உபாயபு₃த்₃தி₄யும், பேற்றில் ஸம்ஶயமுங் காண் ஒருவனுக்கு மோக்ஷவிரோதி₄. ஸாபராதி₄களான

---

எம்பெருமானாராலே அருளிச்செய்யப்பட்டது. b " ஸக்ருதே₃வ " என்றது " ஸஹஸைவ " என்றபடியாய், சடக்கெனத் திருவடி களிலே விழவேணும் என்று பெருமாள் அருளிச்செய்தது பெரியநம்பி யருளியதற்கு ப்ரமாணமென்று கருத்து. c 'நாம் பற்றும் பற்றுகிற உபாயஸ்வீகாரமும் நம் கையிலுள்ள உபாயமாகுமோ?' என்று ஸந் தே₃ஹிக்க வேண்டா. அது கையில் உள்ள ரேகை₂போல் அதி₄காரி விஶேஷணமாகவேயிருப்பது என்று பரிஹாரம். d 'இப்படி எம்பெரு மானே உபாயமானல் எல்லாருக்குமே ப₂லம் உண்டாக வேண்டி வருமே' என்றோ 'இப்படிப் பற்றற்று விழுகை ஒருவர்க்கு ஸித்₃தி₄க் குமோ?' என்றோ இங்கே எம்பெருமானுக்கு ஸந்தே₃ஹம். e எந்த ப்ரபந்நன் ப₄ாக₃வதாபி₄மானத்துக்கு விஷயமாகிறானோ அவனுக்கே தானே பழுத்தால் விழுங்கனிபோல் பற்றற்று வீழும் விழுக்காடாகிற ப்ரபத்தி ஏற்பட்டு, எம்பெருமானுடைய அருள் கிடைக்கும் என் பது இந்த ஸந்தே₃ஹங்கள் அனைத்துக்கும் அரையர் அருளிச்செய்த பரிஹாரம்.

ஸம்ஸாரிகளுக்கு, ஸர்வஸ்வாமியான எம்பெருமானைப்பற்று மிடத்து, தன் அபராத₄ பரம்பரைகளைப் பார்த்துப் பிற்காலி யாதே பின் பற்றுகைக்குப் புருஷகாரபூ₄தையான பிராட்டியைச் சொல்லுகிறது - "ஸ்ரீ" என்கிற பத₃த்தாலே; இப்படி புருஷ காரபூ₄தையான பிராட்டி அவனோடே சேர இருப்பது ஒரு தே₃ஶகாலங்களிலேயோ? என்னில்; b ப்ரப₄ாப்ரப₄ாவான்களைப் போலே பிரியாத நித்யயோக₃ங்களைச் சொல்லுகிறது - மதுப்பு ; இப்புருஷகாரமும் மிகை என்னும்படியாய் இவள்தானே குறைசொல்லிலும், "செய்தாரேல் நன்று செய்தார்" [பெரியாழ் திரு 4-9-2] என்று பரிந்து நோக்கும் வாத்ஸல்யாதி₃கு₃ணஞ் சொல்லுகிறது - நாராயண பத₃த்தாலே; c ஆஶ்ரிதரைக் கைவிடாத ஸௌலப்₄யஞ்சொல்லுகிறது - " சரணௌ " என் கிற பத₃த்தாலே; அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் தப்பாத உபாயமென்கிறது - "ஶரணம்" என்கிற பத₃த்தாலே; d அவன் திருவடிகளிலே இத்தனை நன்மையுண்டாயிருக்க, இந்நாள்வரை இழந்தது இவன் பற்றாமையிறே; அக்குறைகள் தீரப் பற்றும் பற்றுகையைச் சொல்லுகிறது - "ப்ரபத்₃யே" என்கிற பத₃த்தாலே; இப்படி பூர்வக₂ண்ட₃ம் சொல்லிநின்றது.

---

## எழுபத்துமூன்றும் வார்த்தை

a ஸ்வீகாரத்தில் உபாயபு₃த்₃தி₄- தான் எம்பெருமானை உபாயமாகப் பற்றும் பற்று ஸாத்₄யோபாயமாய் நின்று மோக்ஷகாரணமாகிறது என்னும் நினைவு. b ப்ரப₄ாப்ரப₄ாவான்களைப்போலே பிரியாத "அநந்யா ஹி மயா ஸீதா ப₄ாஸ்கரேண ப்ரப₄ா யதா₂" [ரா-யு 121-19] "அநந்யா ராக₄வேணாஹம் ப₄ாஸ்கரேண ப்ரப₄ா யதா₂" [ரா-ஸு 21-16] என்று பெருமாளும் பிராட்டியும் அருளிச்செய்தபடி ஒளியையுடையவனான ஸூர்யனும், அவனுடைய ஒளியும் போலே பிரியாத என்று கருத்து. c " (ஆஶ்ரிதரைக் கைவிடாத) பிராட்டியும், அவனும் விடிலும் திருவடிகள் விடாது ; திண்கழலாயிருக்கும்" [ முமுக்ஷுப்படி 146 ] எனும் சூர்ணையும், அதன் வ்யாக்₂யானமும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. d அவனிடமும், அவனுடைய திருவடிகளிடத்தும் இவ்வளவு உபாயத்வ பூர்த்தி உண்டாயிருந்தும் அநாதி₃காலமாக இதுவரை இச்சேதனன் பேற்றையிழந்திருந்தது இவன் இத்திருவடிகளை உபாயமாகப் பற்றாமையாலேயேயன்றோ என்று கருத்து.

மேல் உத்தரகண்டம் சொல்லுகிறது; — இதில் 'மதுப்' பாலே — இவனோடே கூடியிருக்கிற இவளுடைய உத்தேஶ்யை யாகையாலே, நாம் ஏதேனுமொரு கிஞ்சித்காரஞ்செய்யிலும், அவனோடே கூடியிருந்து ஒன்றுபத்தாக்கி அவன் திரு வுள்ளத்தை உகப்பிக்குமாகையாலே அவனோடே கூடியிருந் துள்ளவளென்கிறது - " ஸ்ரீமதே " என்கிற பதத்தாலே; நம்மோடு நித்யமுக்தரோடு வாசியற எல்லாரையும் ஸமமாக ரக்ஷிக்கும் ஸ்வாமித்வம் சொல்லுகிறது - நாராயண பதத் தாலே; இப்படி ஸ்வாமியான எம்பெருமான் திருவடிகளிலே ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோசிதமான ஸர்வவித கைங்கர்யங்களையும் பண்ணவேணுமென்று ப்ரார்த்திக்கும்படி யைச் சொல்லுகிறது - சதுர்த்தியாலே ; இப்படியிருந்துள்ள அடிமைசெய்யுமிடத்து அவனுகந்த உகப்பொழியத் தானுகந்த உகப்பைத் தவிரச் சொல்லுகிறது - "நம:" என்கிற பதத்தாலே.

## ஏழுபத்துநாலாம் வார்த்தை

நாய்ச்சிமாரை ஈஶ்வரனிற் காட்டில் குறையச்சொல்லுமிட மும், ஒக்கச்சொல்லுமிடமும், ஏழச்சொல்லுமிடமுமாயிருக்கும். இதுக்கு ப்ரமாணங்கள்;— a இவன் ப்ரதிபத்திபண்ணும்படி யைச் சொல்லுமிடத்தில் இவள் ஸ்வரூபஞ் சொல்லுகிற தென்றும், b ஒக்கச்சொல்லுகிறவிடத்தில் - ஐக்யஞ்சொல்லு கிறதென்றும், c ஏழச்சொல்லுமிடத்தில் - ஸௌலப்யஞ் சொல்லுகிறதென்றும் ப்ரதிபத்திபண்ணக்கடவன்.

---

### ஏழுபத்துநான்காம் வார்த்தை

a பிராட்டியினுடைய ஸ்வரூபத்தை உள்ளபடி நிஷ்கர்ஷிக்கும் போது அவள் எம்பெருமானுக்கு ஶேஷபூதை என்று, அவளை ஈஶ்வரனைவிடத் தாழ்வாகச் சொல்லவேண்டியிருக்கையால் அவ்விடங் களில் பிராட்டியின் ஸ்வரூபம் சொல்லுகிறது என்று எண்ணவேண்டும். b இருவரையும் ஸமமாகச் சொல்லுமிடங்களில் ''ஐகரஸ்யாத் தயா'' [ஸ்ரீஸ்தவம் 1] என்கிறபடியே இருவரின் திருவுள்ளங்களும் ஒன்று பட்டிருப்பதைச் சொல்லுகிறது என்று எண்ணவேண்டும். c எம்பெரு மானைவிடப் பிராட்டிக்குப் பெருமை சொல்லுமிடங்களில் ஆஶ்ரித

## எழுபத்தைந்தாம் வார்த்தை

பிள்ளை, நஞ்சீயர் ஸ்ரீபாத₃த்திலே ஸ்ரீ ப₄ாஷ்யம் வாசியா நிற்கச்செய்தே, 'a திருப்போனகம் சமைந்தது' என்றவாறே, 'b சொக்கத்தேவரைத் திருவாராத₄நம் பண்ணிவாரும்' என்றருளிச்செய்ய; 'அடியேன் திருவாராத₄நத்தை அறிந்தேனோ?' என்று விண்ணப்பஞ்செய்ய; 'நானோ சால க்ரமமறிந்திருக்கிறேன்? த்₃வயத்தைக்கொண்டு திருவடி விளக்கி அமுது செய்யப் பண்ணமாட்டீரோ?' என்றருளிச்செய்தார்.

## எழுபத்தாறும் வார்த்தை

'உகந்தருளின இடங்கள் பலவிடமாய் திருப்போனகம் படைப்பது ஒன்றேயானால் அமுதுசெய்யப் பண்ணும்படியென்?' என்று a பிள்ளை b பிள்ளைக்கு விண்ணப்பஞ்செய்ய; "த்₃வயத்தில் பூர்வோத்தரக₂ண்ட₃ங்களிரண்டுக்கும் நடுவே c 'ஸர்வமங்க₃ள விக்₃ரஹாய' என்கிற விஶேஷணஸஹிதமாக உச்சரித்து அமுதுசெய்தருளப்பண்ணுவது" என்றருளிச்செய்தார்.

---

ஸௌலப₄னை அவன் பிராட்டிக்குத் தன்னைத் தாழவிட்டிருக்கையாகிற ஸௌலப்₄யம் சொல்லுகிறது என்று எண்ணவேண்டும்.

**எழுபத்தைந்தாம் வார்த்தை**

a திருப்போனகம் - எம்பெருமானுக்குக் கண்டருளப் பண்ணும் ப்ரஸாத₃ம். b சொக்கத்தேவர்-திருவாராத₄னப் பெருமாள். இவ்வார்த்தை எம்பெருமான் ஆராத₄னைக்கு எளியன் என்பதைக் காட்டுகிறது.

**எழுபத்தாறும் வார்த்தை**

a பிள்ளை - நம்பிள்ளையின் ஶிஷ்யரான பெரியவாச்சான்பிள்ளை. நம்பிள்ளை காலத்துக்குப் பிறகு பின்பழகிய பெருமாள் ஜீயர், பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளில் ஆஶ்ரயித்திருந்தார் என்று பெரிய திருமுடியடைவில் சொல்லியிருப்பது இதற்கு ப்ரமாணம். b பிள்ளை நம்பிள்ளை. c அர்ச்சைத் திருமேனிகள் பல இருக்கையாலே, 'ஸர்வமங்க₃ளவிக்₃ரஹாய' என்னும் பத₃த்தைச் சேர்த்துக்கொள்ளவேணும் என்று கருத்து.

**எழுபத்தேழாம் வார்த்தை**

a பெரியபிராட்டியார் பெற்ற தாயைப்போலே செல்வம் முதலான இவ்வுலகப் ப₂லன்களைக்கொடுத்து இச்சேதனனுக்கு ப்ரியத்தைச்

## எழுபத்தேழாம் வார்த்தை

a இவ்வாத்மாவுக்குப் பெரியபிராட்டியார் ப்ரியத்தைப் பண்ணியருளும்; எம்பெருமான் ஹிதத்தைப் பண்ணியருளும்; ப்ரியஹிதங்களிரண்டும் சேர ஜீவிக்கிறபடி எங்ஙனேயென்னில்; ஆஶ்ரிதவிஷயத்திலும் அநாஶ்ரிதவிஷயத்திலும்:— b ஆஶ்ரிதர் பக்கல் இவள் பண்ணியருளும் ப்ரியத்துக்கு, ஆஶ்ரிதர் பெரும் பிழைகள் பாராதே பெரியபிராட்டியார் திருவுள்ளத்தைப் பின்செல்லும் ; இவ்விடம் - இவளுடைய ப்ரியகார்யமான வாத்ஸல்யம் ஜீவித்தபடி: c அநாஶ்ரிதர்பக்கல் ஹிதம்செய்யும் போது 'இவற்றினுடைய ப்ரக்ருதியின் பொல்லாங்காலே இவை நம்மையிழவாநின்றன' என்று. ப்ரஜைகளுடைய க்₃ரந்தி₂யை

---

செய்தருளுவார். எம்பெருமான் தந்தையைப்போலே இவனுக்குக் கசப்பாயிருந்தாலும் த₃ண்ட₃னை முதலானவற்றைக்கொடுத்து நன்மைகளைச் செய்தருளுவன். இப்படி முரணாகத்தோன்றும் இவ்விரண்டும் அடியார்கள் விஷயத்திலும் அடி அடையாதார் விஷயத்திலும் ஒன்ருகப் பொருந்துவது எப்படி? என்பது கேள்வியின் கருத்து. b அடியார்கள் விஷயத்தில் ப்ரியஹிதங்கள் பொருந்தும்படியை இங்கு விவரிக்கிறது. அடியார்கள் விஷயத்தில் பிராட்டி ப்ரியங்களைக் கொடுத்தருள்வாள். அத்தோடு இந்த ப்ரியங்களை அநுப₄விக்கமுடியாதபடி எம்பெருமான் அளிக்கும் த₃ண்ட₃னைகளை அவன் அளிக்க முடியாதபடி அவனிடம் புருஷகார க்ருத்யம் செய்தருளுவாள். அவனும் இவள் திருவுள்ளத்தைப் பின்சென்று அடியார்செய்த பெரும் பிழைகளைக் காணுமல் த₃ண்ட₃னையளிக்காமல் இருந்து, தான் விரும்பும் ஹிதங்களையே கொடுத்துவிடுவான். இப்படி அடியார்கள் விஷயத்தில் ப்ரியஹிதங்கள் பொருந்திவிடுகின்றன. ஆக, இங்கு—பிராட்டியிடம் எம்பெருமானுக்குள்ள ப்ரீதியினுலுண்டான அடியார் தோ₃ஷம் காணுமை, செய்த குற்றம் நற்றமாகவே கொள்ளுகை முதலான லக்ஷணங்களையுடைய வாத்ஸல்யகு₃ணம் வீறுபெற்று விடுகிறது. c அடியடையாதார் விஷயத்தில் ப்ரியஹிதங்கள் பொருந்தும்படியை விவரிக்கிறது இங்கு; அடியடையாதார் விஷயத்தில் எம்பெருமான் த₃ண்ட₃னைகளையளித்து ஹிதத்தைச் செய்யும்போது குழந்தைகளுடைய கட்டி முதலான புண்களைத் தகப்பனர் அறுத்துச் சிகித்ஸைசெய்யும்போது இசைந்திருக்கும் தாயைப்போலே ''இச்சேதனர்களிடத்திலுள்ள இயல்வான தீமையாலே இவர்கள் நம்மை அநாதி₃காலமாக இழந்திருக்

அறுப்பாரைப்போலே இவளிசைவோடேகூடி, ஹிதத்தைச் செய்தருளும் ; இவ்விடம் - இவனுடைய ஹிதகார்யமான ஸ்வாதந்த்ர்யம் ஜீவித்தபடி. d ஆகையால் ஆஶ்ரிதர்பக்கல் ப்ரியமும் அநாஶ்ரிதர்பக்கல் ஹிதமும் இருவர் திருவுள்ளத்துக்கும் சேருகிறது.

## எழுபத்தெட்டாம் வார்த்தை

(1) ப்ராயஶ்சித்தவ்யாவ்ருத்தி, (2) உபாயாந்தரவ்யாவ்ருத்தி, (3) உபேயவ்யாவ்ருத்தி, (4) அதி₄காரிவ்யாவ்ருத்தி,

---

கின்றனர். ஆகையால் இவர்களுக்கு த₃ண்ட₃ணையளித்துத் திருத்துவது நல்லதே''என்னும் பிராட்டியின் இசைவையும்பெற்று எம்பெருமான் த₃ண்ட₃னை முதலான ஹிதங்களை இவர்களுக்குச் செய்துவிடுவான். ஆகையால் இப்படி அடியடையாதார் விஷயத்திலும் ப்ரியஹிதங்கள் பொருந்திவிடுகின்றன. ஆக, அடியடையாதார் விஷயத்தில் பிராட்டியினுடைய ப்ரியமளிக்கும் தன்மை அமுங்கிநின்று, எம்பெருமானுடைய ஹிதமளிக்கும் தன்மையாலுண்டான ஸ்வாதந்த்ர்யம் வீறுபெறுகின்றது. d ஆக, இவ்வண்ணமாக அடியார்களிடம் ப்ரியமளிப்பதும் அடி அடையாதாரிடம் ஹிதமளிப்பதும் இருவருடைய திருவுள்ளத்துக்கும் பொருந்திவிடுகிறது.

### எழுபத்தெட்டாம் வார்த்தை

இவ்வார்த்தையில் த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃த்திலிருந்து தேறும் ஸித்₃தோ₄பாயத்துக்குள்ள நாலு வ்யாவ்ருத்திகளும்(வேறுபாடுகளும்), உத்தரக₂ண்ட₃த்திலிருந்து தேறும் மிது₂னமாகிற ப்ராப்யத்திற்குள்ள நாலு வ்யாவ்ருத்திகளும் சொல்லப்படுகின்றன. (1,2) ப்ராயஶ்சித்தங்களும் உபாயாந்தரங்களும்—ஸாத்₄யமாய், ப₂லங்கொடுப்பதற்கு ஒருவனையும், மற்றும் பல அங்க₃ங்களையும் அபேக்ஷிப்பவையாயிருப்பவை. ஸித்₃தோ₄பாயமோவெனில், தன் முயற்சியால் ஸாதி₄க்கவேண்டாதபடி ஸித்₃த₄மாய், ப₂லங்கொடுப்பதற்கு வேறொன்றை அபேக்ஷியாதிருக்கும். (3) இரக்கத்தோடு கூடிய எம்பெருமான் உபாயமாகவும், உகப்போடுகூடிய எம்பெருமான் உபேயமாகவுமிருக்கிறபடியால் இந்த உபாயத்துக்கு உபேயத்தைக் காட்டிலும் வேறுபாடு உள்ளது. (4)உபாயமாகப்பற்றும் அதி₄காரி அஜ்ஞனாய் (அறிவிலியாய்) அஶக்தனாய் இருக்கிறான். பற்றப்படும் உபாயமோவெனில், ஸர்வஜ்ஞமாய், ஸர்வஶக்தமாயிருக்கிறதாகையாலே இவ்வதி₄காரியின் கையில் எதையும் எதிர்பார்ப்பதில்லை. இதனால் அதி₄காரி வ்யாவ்ருத்தியும் ஸித்₃தி₄க்கிறது.

(5) ப்ராப்யாந்தரவ்யாவ்ருத்தி, (6) தே₃வதாந்தரவ்யாவ்ருத்தி, (7) பே₄ாக₃ாந்தரவ்யாவ்ருத்தி, (8) ஸ்வபே₄ாக₃வ்யாவ்ருத்தி.

## எழுபத்தொன்பதாம் வார்த்தை

ப₄ட்டர் ஒருவர்க்கு ஹிதமருளிச் செய்கிறபோது, நஞ்சீயர், "பிராட்டி முன்னிலையாகப் பற்றுகிற இதுக்கு ப்ரயோஜநமென்?" என்று கேட்க, a இவள் ஸந்நிதி₄யாலே—மிகவும் ஸாபராதி₄

---

ஆக, உபாயத்துக்கு நாலு வேறுபாடுகள் சொல்லப்பட்டன. இனி, ப்ராப்யத்துக்கு நாலு வேறுபாடுகள் சொல்லப்படுகின்றன. (5) மிது₂ன மான (பெருமாளும் பிராட்டியுமான) ப்ராப்யம் ப்ராப்தமாய், பரம பே₄ாக்₃யமாயிருக்கும். ஶப்₃த₃ாதி₃விஷயங்கள்போன்ற மற்ற ப்ரா ப்யங்கள் அப்ராப்தமாய் (ஸ்வரூபத்துக்குத் தகாததாய்), உவர்நீர் போலே அபே₄ாக்₃யமாயிருப்பவை. இது மிது₂னத்துக்கு ப்ராப்யாந்த ரங்களைக் காட்டிலும்,உள்ள வேறுபாடு. (6) "காணிலும் உருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார் பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவர்" [திருச்சந்த 69] "பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில் லாத் தேவரைத் தேறேன்மின் தேவு" [நான்-திருவ 53] என்கிற தே₃வதாந்தரங்களைப்போலல்லாமல் மிது₂னமாகிற ப்ராப்யம் அப் பொழுதைக்கப்பொழுது ஆராவமுதமாயிருப்பதால், தே₃வதாந்தரங் களைக் காட்டிலும் வேறுபாடு ஸித்₃தி₄க்கிறது. (7) அசித்₃பே₄ாக₃மான ஐஶ்வர்யாநுப₄வம் அல்பமாய் அஸ்தி₂ரமாயிருப்பது; சித்₃பே₄ாக₃மான கைவல்யாநுப₄வம் அதைக்காட்டிலும் உயர்ந்ததாய், நித்யமாயிருந்த போதிலும், மிது₂னத்தை அநுப₄விக்கும் பே₄ாக₃த்தைக் காட்டிலும் சிற்றின்பமாயிருக்கும்; ஆகையாலே மிது₂நாநுப₄வபே₄ாக₃த்துக்கு மற்ற பே₄ாக₃ங்களைக்காட்டிலும் வேறுபாடு ஸித்₃தி₄க்கிறது. (8) த்₃வயநிஷ்ட₂ னுக்குக் கிடைக்கும் மிது₂னவிஷயத்தில் பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங் கள் ஸாத₄நாந்தர நிஷ்ட₂ர்களுக்குக் கிடைக்கும் ஸ்வார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களைக் காட்டிலும் ஸ்வரூப ப்ராப்தமாகையாலே, த்₃வய நிஷ்ட₂னுக்குக் கிடைக்கும் மிது₂னபே₄ாக₃த்துக்கு, மற்றவர்களுக்குக் கிடைக்கும் ஸ்வபே₄ாக₃த்தைக்காட்டிலும் வேறுபாடு ஸித்₃தி₄க்கிறது.

### எழுபத்தொன்பதாம் வார்த்தை

a இவ்விஷயம் முமுக்ஷுப்படி 135-வது சூர்ணையிலும், அதன் வ்யாக்₂யானத்திலும் விவரிக்கப்பட்டுள்ளது. மற்ற விஷயங்கள் தெளிவானவை.

யான காகம் தலைகொண்டு தப்பிற்று; அத்தனைக்கு அபராத₄ மின்றியிலேயிருக்க இவள் ஸந்நிதி₄யில்லாமையாலே ராவணன் தலையறுப்புண்டான்; இளையபெருமாள் பிராட்டி முன்னிலை யாகப் பெருமாள் திருவடிகளைப்பற்றி, தம்மை "நில்" என்ற ஸங்கல்பத்தையும் அழித்துப் பெருமாளையும் பெற்றுவிட்டார் ; மற்றும் ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான், ஸ்ரீ கு₃ஹப்பெருமாள்தொடக்க மானார் பிராட்டி முன்னிலையாகப் பெற்றாராய்த்து.

## எண்பதாம் வார்த்தை

"ஸ்ரீமத்" என்கிற பத₃த்தாலே—திருமார்பில் நாய்ச்சியா ரோடே அநுஸந்தி₄க்கிறார்; "ஸ்ரீமந் நாராயண சரணௌ ஶரணம் ப்ரபத்₃யே" என்கிற பத₃ங்களாலே — திருவடிகளை அநுஸந்தி₄க்கிறார்; "ஸ்ரீமதே நாராயண" என்கிற பத₃த் தாலே — அருகிருந்த நாய்ச்சிமாரோடே, இட்ட தனிமாலையை யும், கவித்த திருவபி₄ஷேகத்தையும், சிவந்த திருமுகமண்ட₃ லத்தையும் அநுஸந்தி₄க்கிறார்; "ஆய, நம:" என்கிற பத₃ங்க ளாலே - கைங்கர்யத்தை அநுஸந்தி₄க்கிறார்.

---

### எண்பதாம் வார்த்தை

ப்ரபத்திக்கு விஷயம் அர்ச்சாவதாரமேயாகையாலே த்₃வயத்தின் பத₃ங்களை அர்ச்சாவதார எம்பெருமான் விஷயத்தில் ஸமந்வயப் படுத்துகிறார் (பொருந்தவிடுகிறார்). திருமார்பில் நாய்ச்சியாரே புருஷ காரம் செய்வதற்காக "அகலகில்லேனிறையும்" [திருவாய் 6-10-10] என்று அகல்மார்பில் உறைகையாலே "ஸ்ரீமத்"என்கிற பத₃த்தாலே திருமார்பில் நாய்ச்சியாரோடு கூடின எம்பெருமானை அநுஸந்தி₄க் கிறார்கள். "நாராயண சரணௌ ஶரணம் ப்ரபத்₃யே"என்கிற பத₃ங்க ளாலே உபாயமான இரு திருவடிகளை அநுஸந்தி₄க்கிறார்கள்."ஸ்ரீமதே நாராயண"என்கிற பத₃ங்களாலே, அருகிருந்த நாய்ச்சிமாரோடே, ஸ்வாமித்வத்தையும், இனிமை மிகுதியைக் காட்டும் இட்ட தனி மாலையையும், கவித்த திருமுடியையும், முறுவலோடு கூடிய சிவந்த திருமுகமண்ட₃லத்தையும் அநுஸந்தி₄க்கிறார்கள். "ஆய நம:"என்கிற பத₃ங்களாலே இவ்வெம்பெருமான் விஷயத்தில் அவனுகப்புக்காகச் செய்யும் கைங்கர்யத்தை அநுஸந்தி₄க்கிறார்கள்.

## எண்பத்தோராம் வார்த்தை

வஸ்துமான் வஸ்துவை முன்னிட்டுக்கொண்டிருக்கும்; வஸ்து விநியோக₃த்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும்; விநியோக₃ம் போ₄க₃த்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும்; போ₄க₃ம் அபி₄மதத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும்; அபி₄மதம் அநுகு₃ணத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கும்; அநுகு₃ணம் பரனுக்குப் பாங்காயிருக்கும்.

## எண்பத்திரண்டாம் வார்த்தை

ப₄ட்டர், ஜீயருக்கு த்₃வயத்தின் அர்த்த₂த்தை அருளிச்செய்தருளி, இதில் உத்தரார்த்த₄ம் அநுஸந்தி₄க்கலாவது பரமபத₃த்தைச் சென்றுலாயிருக்கும். இங்கே இவ்வர்த்த₂ம் அநுஸந்தி₄த்தவன் ஜீவந்முக்தன் என்றருளிச்செய்தார்.

---

### எண்பத்தோராம் வார்த்தை

இதைக் கடைசியிலிருந்து படிப்படியாக முன்னேக்கிப் பொருள் கொள்வது புரிந்துகொள்ள எளிதாயிருக்கும். எம்பெருமானுக்குப் பிராட்டிமார் முதலானோர் அநுகு₃ணமாய் (அநுரூபமாய்) இருக்கையாவது—அவனுக்குப் பாங்காயிருக்கையாகும்; இப்படி அநுரூபமாயிருப்பதோடு இவர்கள் எம்பெருமானுக்கு அபி₄மதர்களாயும் (இனியவர்களாயும்) இருப்பர்கள். இப்படி இவர்கள் அபி₄மதர்களாயிருக்கையாலேயே எம்பெருமானுக்கு இவர்களால் போ₄க₃ம் ஸித்₃தி₄க்கிறது. இப்படி இவர்கள் எம்பெருமானுக்கும் போ₄க்₃யப் பொருளாயிருக்கையால் அவனால் இஷ்டப்படி விநியோக₃ம் கொள்ளத் தக்கவர்களாயிருக்கிறார்கள். இப்படி இஷ்டப்படி விநியோக₃ம் கொள்ளத்தக்கவராயிருக்கையாலேயே இவர்களுக்கு வஸ்துத்வம் (ஒரு பொருளாயிருக்கை) ஸித்₃தி₄க்கிறது. இத்தகைய கணக்கற்ற வஸ்துக்களை உடையவனாயிருக்கையாலேயே எம்பெருமான் வஸ்துமான் (பொருளையுடையவன்) ஆகிறான்.

### எண்பத்திரண்டாம் வார்த்தை

எம்பெருமான் விஷயத்தில் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களைச் சொல்லும் உத்தரார்த்த₄த்தின் பொருளைப் பரிபூர்ணமாக அறிவது பரமபத₃த்திலேயேயாகும். ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும்போன்ற மஹான்கள் இவ்வுலகில் இருக்கும்போதே எம்பெருமானுடைய திர்

## எண்பத்துமூன்றும் வார்த்தை

a வ்யாக்₄ரஸிம்ஹங்களோபாதி உபாயவேஷம்; யூத₂பதி யான மத்தக₃ஜம்போலே உபேயவேஷம் என்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்வர்; b வ்யாமோஹம் உபாயம்; c முக மலர்த்தி உபேயம் என்று எம்பாரருளிச்செய்வர்.

## எண்பத்துநாலாம் வார்த்தை

திருக்கோட்டியூர்நம்பி a பெரியமுதலியாரைப் பார்த்து, 'உபாயாம்ஶத்தில் தஞ்சமாக நினைத்திருப்பதென்?' என்று விண்ணப்பஞ்செய்ய; 'b இதுநெடுங்காலம் ஸ்வரூபநிரூபணம்

---

ஹேதுக க்ருபையாலே அதைப் பரிபூர்ணமாக அறிந்தார்களாகை யாலே ஜீவந்முக்தர்கள் (இவ்வுலகில் இருக்கும்போதே முக்தர்களை ஒத்திருப்பவர்கள்) என்று கருத்து.

### எண்பத்துமூன்றும் வார்த்தை

a புலியும் சிங்கமும்போலே, எம்பெருமான் உபாயமாம்போது தன்னோடொத்த மற்றொரு உபாயத்தைப் பொறுக்கமாட்டான். யானைக்கூட் டத்திலுள்ள எல்லா யானைகளோடுசேர்ந்து தலைமையானை போ₄க₃ங்களை அநுப₄விப்பதுபோலே. எம்பெருமான் உபேயமாகும்போது பிராட்டி மார் நித்யமுக்தர்கள் முதலானவர்களோடு சேர்ந்தே உபேயமாகிறான். அதாவது — அன்றே முக்தியடைபவனை இவர்கள் அனைவரோடுகூடி எம்பெருமான் அநுப₄விக்கிறான் என்று கருத்து. b எம்பெருமானுக்குத் தன் உடைமையான ஜீவனிடமுள்ள பேரன்பே ஜீவனைக் கடைத் தேற்றும் உபாயமாகிறது. அவ்வன்பினாலேயே ஸ்ருஷ்டி அவதாரம் முதலான முயற்சிகளைச்செய்து படாதனபட்டு எம்பெருமான் ஜீவனைக் கடைத்தேற்றுகிறான் என்று கருத்து. c ஜீவனுக்குத் தான் எம்பெரு மானை அநுப₄வித்துக் கைங்கர்யம் செய்வதாலுண்டான ஆநந்த₃ம் உத்₃தே₃ஶ்யமல்ல. தன்னைப்பெற்று எம்பெருமான் அடையும் முக மலர்த்தியே உத்₃தே₃ஶ்யமாகவும், உபேயமாகவும் (அடையத்தக்க தாகவும்) இருக்கிறது என்று கருத்து.

### எண்பத்துநான்காம் வார்த்தை

a பெரிய முதலியார் - ஆளவந்தார். b இதுநெடுங்காலம் - இவ் வளவு நீண்ட காலம். c விஷண்ணராய்—வருந்தியவராய். d அழகிய

பண்ணப்பெற்றுவைத்து உபாயநிரூபணமே பண்ணத் தேடுவதே!' என்று c விஷண்ணராயருள; 'ஆகில் உபாயம் வேண்டாவோ ?' என்று விண்ணப்பஞ்செய்ய; ' d அபி₄ரூபையான ஸ்த்ரீ அழகை மட்டிக்க மட்டிக்க, அபி₄ரூபனாய் ஐஶ்வர்யவானுமான புருஷன் அந்தரங்க₃மாக ஆழங்காற்படுமா போலே, அஜ்ஞனான சேதநன் அழுக்கறுக்க அழுக்கறுக்க அவ்வீஶ்வரன் திருவுள்ளம் அத்யாஸந்நமாய்ப் போரும் காணும்' என்றருளிச்செய்தார்.

## எண்பத்தஞ்சாம் வார்த்தை

a தே₃வகிப் பிராட்டியாரருளிச்செய்த வார்த்தை; b ஸ்வரூபஜ்ஞன் ஸ்வயம் ஸ்வரூபநிரூபணம் பண்ணினால், தத₃நுரூபமான ப்ரத₄ாநாநுப₄வ விஶேஷத்தை அநுப₄வாந்தரத்துக்கு உறுப்பாக்குகையும் அநுபயுக்தம்; c உக்தார்த்த₂ஶ்ர

வளான மனைவி தன் வடிவை அலங்காரம் முதலானவற்றாலே அழகுபடுத்த, அழகுபடுத்த, அழகியவனாய் செல்வம் மிக்கவனான கணவன் அவளிடம் அந்தரங்க₃மாக ஈடுபடுவான். மனைவி கணவனின் ஈடுபாட்டுக்காக இதைத்தவிர வேறொரு உபாயாநுஷ்ட₂ானம் செய்யவேண்டியதில்லை. அதுபோலவே அநாதி₃காலமாக எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் தன் ஸ்வரூபத்தையும் அறியாமல், இவ்வறியாமையாகிற அழுக்குமண்டிக்கிடக்கும் ஜீவன் ஈஶ்வரனுக்கு ப₄ார்யையை ஒத்தவனாகையாலே, ப₄ர்த்தாவான அவன் தன்னை அநுப₄விக்கலாம்படி இவ்வழுக்கை அறுக்க அறுக்க, எம்பெருமான் திருவுள்ளம் இவனிடம் மிகவும் ஈடுபடும். ஆகையால் அவன் தன்னை விஷயீகரிப்பதற்கு இவன் உபாயாநுஷ்ட₂ானம் ஒன்றும் செய்யவேண்டியதில்லை என்று கருத்து.

### எண்பத்தஞ்சாம் வார்த்தை

a தே₃வகிப்பிராட்டியார் – திருக்கோட்டியூர் நம்பியின் குமாரத்தி. b தன் ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்தவன், ஆசார்யனுக்கு ஶேஷமும் பரதந்த்ரமுமான அந்த ஸ்வரூபத்தை ஆராய்ந்தால், அந்த ஸ்வரூபத்துக்குத் தக்கபடி ஆசார்யனுடைய கு₃ணங்களையும் திருமேனியையும் அநுப₄விக்கையாகிற முக்₂யாநுப₄வத்தை, எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திகளை அடைந்து அநுப₄விக்கையாகிற அமுக்₂யாநுப₄வத்துக்கு உபாயமாக்குவது ஒட்டாது. c இவ்விஷ

வணம் பண்ணினவனுக்கு உபாயாந்தரத்யாக₃ம் உடம்போடே கூடாது.

## எண்பத்தாறும் வார்த்தை

a பொன்னுய்ச்சியார் b கூரத்தாண்டாளுக்கு ப்ரஸாதி₃த்த வார்த்தை; - ஸ்வரூபஜ்ஞன் ஸ்வயம் c ஸ்வரூபநிரூபணம் பண்ணவே, d ஸ்வரூபாநுரூபமான உபாயோபேயாதி₃கள் e உப பந்நமாய்ப் போருங்காணும் என்றருளிச்செய்தார்.

## எண்பத்தேழாம் வார்த்தை

ப்ரபந்நனுகையாவது - அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தி யும் நமக்கு எம்பெருமான் பண்ணித்தந்தருளும் என்று த்₃வயாநுஸந்த₄ாந முக₂த்தாலே a ஒருகால் விஶ்வஸித்

---

யத்தைக் கேட்டறிந்தவனுக்கு ப₄க₃வத்ப்ராப்திஸாத₄னங்களான உபாயாந்தரங்களோடு தொடர்புக்கு ப்ரஸக்தியேயில்லாமையாலே, ''ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய'' என்றவிடத்தில் சொல்லப்பட்ட உபாயாந்தரத்யாக₃த்துக்கும் ப்ரஸக்தியேயில்லை. ''ப்ரஸக்தஸ்ய ஹி ப்ரதிஷேத₄:'' (எது உண்டாவதற்கு இடமுள்ளதோ, அதையே 'உண்டாகலாகாது' என்று நிஷேதி₄க்கமுடியும்) என்னும் ந்யாயத்தை அநுஸந்தி₄ப்பது.

### எண்பத்தாறும் வார்த்தை

a பொன்னுய்ச்சியார்—பிள்ளையுறங்காவில்லிதா₃ஸரின் தே₃விகள். b கூரத்தாண்டாள்-கூரத்தாழ்வான் தே₃விகள். c ஸ்வரூபநிரூபணம்-ஆசார்யஶேஷத்வபாரதந்த்ர்யங்களே ஸ்வரூபநிரூபக த₄ர்மம் என்று நிஷ்கர்ஷிக்கை. d ஸ்வரூபாநுரூபமான உபாயோபேயாதி₃கள் - முற் கூறிய ஸ்வரூபத்துக்குத் தகுந்தவையான ஆசார்யாபி₄மானமாகிற உபாயமும், ஆசார்யன் உகக்கும் கைங்கர்யம் முதலானவையாகிற உபேயங்களும். e உபபந்நமாய்ப்போரும் - பொருத்தமாக ஏற்படும்.

### எண்பத்தேழாம் வார்த்தை

a ஒருகால் - ''ஸக்ருதே₃வ'' என்றதின் அர்த்த₂ம். பஞ்சஸம்ஸ் காரஸமயத்தில் ஆசார்யன் த்₃வயத்தை உபதே₃ஶிக்க, ஶிஷ்யன் அதை உச்சரிக்கும்போது இவன் ப்ரபந்நனுகிவிடுகிறன் என்று

திருக்கை, b ப்ரபத்தி நிஷ்டை$_2$யாவது - ப்ரபத்தி ப்ரகாரமும் ப்ரபத்தி ப்ரப$_4$ாவமும் நெஞ்சிலே படுகை ; c ப்ரபத்திப்ரகாரம் நெஞ்சிலே படுகையாவது - ப்ரபத்தாவினுடைய க்ருத்யமான ப்ரபத$_3$நத்தை ப்ராபகமென்று நினையாதொழிகையும், ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் ஸ்வாதீ$_4$நமென்றிராதொழிகையும் ; d ப்ரபத்திப்ரப$_4$ாவம் நெஞ்சிலே படுகையாவது - ப்ரபத்தி பண்ணினவனுடைய ப்ரக்ருதியில் ப்ராக்ருதநிரூபணம் பண்ணுதொழிகை. e ப்ரக்ருத்யாத்மவிவேகமுடையவனானால் ப்ரபந்நனை ப்ரப$_4$ாவத்தையிட்டுக் காணாதே ப்ரக்ருதியையிட்டுக் கண்டானாகில், பழைய ப்ராக்ருதனாயேவிடும் என்று நம்பிள்ளை அருளிச்செய்வர்.

## எண்பத்தெட்டாம் வார்த்தை

ப$_4$ட்டர் ஸ்ரீபாத$_3$த்தில் ஸம்ப$_3$ந்த$_4$முடையாரொரு a ஸோமயாஜியரான ஸ்ரீ வைஷ்ணவர், 'எனக்குத் திருவாராத$_4$ந க்ரமத்தை அருளிச்செய்யவேணும்' என்ன ; ப$_4$ட்டரும்

---

கருத்து. b இப்படி ப்ரபந்நனானாலும் ப்ரபத்தி நிஷ்டை$_2$ நாளடைவிலேயே உண்டாகும் ; அதாவது — ப்ரபத்திப்ரகாரமும் ப்ரபத்திப்ரப$_4$ாவமும் நெஞ்சில் படப்பட ப்ரபத்திநிஷ்டை$_2$ நிறைவடையும் என்று கருத்து. c ஶரணமடைபவன் தான் பற்றும் பற்றுகிற உபாயஸ்வீகாரத்தில் உபாயபு$_3$த்$_3$தி$_4$ வைக்காமலிருப்பதும், தன்னுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் தன் வஶப்பட்டவை என்னும் எண்ணம் ஏற்படாமலிருப்பதுங்கொண்டு ப்ரபத்திப்ரகாரம் தன் நெஞ்சில் பட்டதை அறுதியிடலாமென்று கருத்து. d இதர ப்ரபந்நர்கள் விஷயத்தில் 'அவர்கள் எம்பெருமானை ஶரணமடைந்தவர்கள்' என்னும் சிறப்பை நோக்காது, 'அவர்களும் நம்மைப்போல் ப்ரக்ருதி வஶப்பட்ட ப்ராக்ருத மனிதர்களே' என்னும் எண்ணம் ஏற்படாமலிருப்பதைக்கொண்டு ப்ரபத்தி ப்ரப$_4$ாவம் தன் நெஞ்சிலே பட்டதை அறுதியிடலாமென்று கருத்து. e தே$_3$ஹத்தைக்காட்டிலும் ஆத்மாவை வேறுபடுத்திக காண்பவன்— மற்றொரு ப்ரபந்நனை, அவன் எம்பெருமானைப் பற்றினவன் என்னும் பெருமையையிட்டுப் பார்க்காமல், அவனுடைய தே$_3$ஹஸம்ப$_3$ந்த$_4$த்தால் அவனுக்குள்ள தாழ்வுகளையிட்டுப் பார்த்தானாகில், அப்படிப் பார்ப்பவனுடைய ப்ரபத்தி நிஷ்டை$_2$ நழுவி, ப்ரபத்தி செய்வதற்கு முன்பிருந்தபடி ப்ராக்ருதனாகவே ஆகிவிடுவான் என்று கருத்து.

இவர்க்கு உடையவருடைய b நித்யப்ரகாரத்தை அருளிச்செய்ய; அவரும் அதுகொண்டு நெடுநாள் திருவாராத₄நம் பண்ணிப் போரச்செய்தே, ஒன்றிரண்டுநாள் ப₄ட்டர் திருவாராத₄நத்திலே ஸேவித்திருந்தார்; அங்கு, தமக்கு அருளிச்செய்ததவையொன்றும் கண்டிலர் ; அவர் திருவாராத₄நம் பண்ணியருளினபடி;— தாம் திருமஞ்சநம் பண்ணிச் சேலைசாத்தித் திருநாமம் சாத்தி அமுதுசெய்யத் தளிகை வைத்தவளவிலே ' c தெற்காழ்வாரை எழுந்தருளுவித்துக்கொண்டு வாருங்கோள் ' என்று தமக்குப் படைத்த திருப்போனகத்தையும் தண்ணீரமுதையும் அமுது செய்யப்பண்ணி ப்ரஸாத₃ப்பட்டருளினார்; இத்தைக்கண்டு அந்த ஸ்ரீவைஷ்ணவர், 'எனக்கு அருளிச்செய்தபடியொன்று; தேவரீர் இப்படி செய்தருளிற்று; இதுக்கடியென் ?' என்று ஆர்த்தியோடே கேட்க; d ஸகலவேத₃ ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்த விடத்து உமக்கு அப்படியல்லது சொல்லலாவதில்லையாயிருந்தது; e என்னை நிரூபித்தவிடத்து இப்படியொழியச்செய்கைக்கு ஒருசெயல்கண்டிலேன் என்றருளிச்செய்தார்.

---

## எண்பத்தெட்டாம் வார்த்தை

a ஸோமயாஜியர் - ஸோமயாக₃ம் செய்து வேத₃த்தின் பூர்வ பா₄க₃த்திலே ஊன்றிப்போருமவர். இது ஸாபி₄ப்ராய (கருத்தோடு கூடிய) விஶேஷணம். இப்படிப்பட்ட கர்மட₂ர்களுக்குத் திருவாரா த₄னம் விஸ்தாரமாயிருந்தாலொழிய அதில் ப்ரதிபத்தி பிறக்காதாகையாலே, ப₄ட்டர் அவருக்கு விரிவாகத் திருவாராத₄ன க்ரமம் உபதே₃ஶித்தார் என்று கருத்து. b நித்யப்ரகாரம் - எம்பெருமானுடைய நித்யக்₃ரந்த₂த்தில் சொல்லப்பட்ட திருவாராத₄னமுறை. c தெற்காழ்வார்-ப₄ட்டருடைய திருவாராத₄னப்பெருமாள். d எல்லா வேத₃ஶாஸ்த்ரங்களையும்கொண்டு எம்பெருமானுடைய பெருமையைப் பார்க்கும்போது, த₄ரித்துநின்று நீண்டநேரம் திருவாராத₄னம் பண்ணவல்ல உமக்கு. எம்பெருமானுடைய பெருமைக்கும் உம்முடைய வன்மைக்கும் பொருந்தும்படியாக விரிவான திருவாராத₄னக்ரமத்தை உபதே₃ஶித்தேன் என்று கருத்து. e எம்பெருமானைக் கண்டவுடன் ஆழ்வார்களைப்போலே ''காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்'' [பெரிய திருவ 34] என்று தளர்ச்சியடையும் என்னைப்பார்க்கும்போது, இப்படிச் சுருக்கமான திருவாராத₄ன க்ரமமே பொருந்தும் என்று கருத்து.

## எண்பத்தொன்பதாம் வார்த்தை

a மருதூர்நம்பி தம்முடைய அந்திமத₃ஶையிலே பணித்த வார்த்தை ; "மூன்று ஜந்மம் திருவடிகளிலே அபராத₄ம் பண்ணின ஶிஶுபாலன் திருவடிகளைப் பெற்றான்; அநாதி₃ காலம் திருவடிகளிலே அபராத₄ம் பண்ணின நான் பெறு திருக்கை வழக்கோ?" என்று அழ, அப்போதே பரமபத₃த் தேற எழுந்தருளினார்.

## தொண்ணூறாம் வார்த்தை

நம்பிள்ளை அப்பிள்ளைப்பிள்ளைக்கு அருளிச்செய்தபடி ;— ஸ்ரீவைஷ்ணவன் ஶரீரநிப₃ந்த₄நமான ஐஶ்வர்யாதி₃களை எம்பெருமான்பக்கலிலே அபேக்ஷிக்கும்போது மூன்று தோ₃ஷம் ப்ரஸங்கி₃க்கும்; அவையாவன—a ஸித்₃தி₄யாத அம்ஶத்தில் ஸ்நிக்₃த₄னுகையும், b தன் ஸ்வரூபத்துக்குச் சேராதவற்றைச் சேர்க்கத் தேடுகையும், c பரஸ்வரூபஸமாத₄ாநத்துக்கு ஸமாதி₄ ப₄ங்க₃ம் பண்ணுகையும். d இதில் ஸித்₃தி₄யாத அம்ஶத்தில் ஸ்நிக்₃த₄னுகையாவது-கிடையாத அம்ஶத்துக்கு ஆசைப்படுகை. ஸர்வப₂லப்ரத₃னை எம்பெருமான்பக்கலிலும் கிடையா திருப்பதுண்டோ? என்னில்; உண்டு; - அதி₄காராநுகு₃ணமாக

### எண்பத்தொன்பதாம் வார்த்தை

a மருதூர் நம்பி - எம்பெருமானார் ஶிஷ்யர்களிலொருவர்.

### தொண்ணூறாம் வார்த்தை

a, d, j கணவனுக்கு மனைவியின் மேல் அன்புண்டானாலும், அவள் மற்றொரு புருஷனை நாடினால் கணவன் அதைத் தேடிக் கொடுக்க மாட்டாதது போல், எம்பெருமானும் ஸ்வரூபத்துக்குத் தகாத செல்வம் முதலானவற்றை ப்ரபந்நன் ஆசைப்பட்டால் அவற்றைத் தர மாட்டான் என்று கருத்து. b, f, g, h, j முற்கூறிய கணவன் மனைவி த்₃ருஷ்டாந்தத்தில் மனைவியின் கற்பு குலைவது போலே இந்த ப்ரபந்நனுக்கும் தன்னுடைய அநந்ய போ₄க்₃யத்வ ஸ்வரூபம் குலையும் என்று கருத்து. c, i, j முற்கூறிய கணவன் மனைவி த்₃ருஷ்டாந்தத்தில் கணவன் நெஞ்சு கலங்குவது போல், படாதபாடு பட்டு இவனைப் ப்ரபந்நனாக்கி, பெரும்பேறுபெற்றவனாகத் தன்னை நினைத்திருக்கும்

ப்ரபத₃நம் பண்ணுதலை சிலவுண்டாக e "யஸ்யாநுக்₃ரஹ மிச்ச₂ாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்" இத்யாதி₃ ப்ரமாணங்கள் சொல்லுகையாலே. இவ்விடத்தில் இவ்வதி₄காரி ஆரென்னில்; ஸத₃ாசார்யவரணம் பண்ணின ஸத₃ாசாரவான். இவனுக்கு இது லபி₄யாமைக்கு அடி, இவன் ஆசார்யவரணம் பண்ணுகிறபோது பண்ணின ப்ரபத₃நத்துக்கு விருத்₃த₄மாகையாலே. f தன் ஸ்வரூபத்துக்குச் சேராத அம்ஶத்தைச் சேர்க்கத் தேடுகையாவது - ராஜபுத்ரன், g புளிந்த₃புத்ரன் குடிக்கும் கூழுக்கு ஆசைப்படுமாபோலே, h அப்ராக்ருதாநுப₄வாந்வயியாகைக்கீடான ஆகாரங்கள் லபி₄த்த சேதநன் ப்ராக்ருதாநுப₄வாந்வயியாகை. i பரஸ்வரூபஸமாத₄ாநத்துக்கு ஸமாதி₄ப₄ங்க₃ம் பண்ணுகையாவது - நெடுநாள் இழந்துபோன சேதநனை இன்று நேராகக் கிட்டப்பெறுவதே! என்று க்ருதார்த்த₂னாயிருக்கிற ஈஶ்வரன் ஹ்ருத₃யத்தை வ்யாகுலாஶ்ரயமாக்குகை. j இதுக்கு உத₃ாஹரணம்; - ப₄ார்யை ப₄ர்த்தாஸ்நிக்₃த₄னானிறேயென்ன, புருஷாந்தர ஸம்ஸர்க்கேச்சை₂ நடையாடாநின்றதென்றால், அவனே தேடிக்கொடுக்கிறானல்லன், தன்னுடைய பாதிவ்ரத்யமும் குலையும், அவன் நெஞ்சும் வ்யாகுலமாம் என்று அருளிச்செய்தார்.

## தொண்ணூற்றோராம் வார்த்தை

a சிறியாண்டான் தம்முடைய அந்திமத₃ஶையிலே பணித்த வார்த்தை ;- திருவேங்கடமுடையான், தன் ஸ்வரூபத்தை

---

எம்பெருமானுடைய திருவுள்ளம் கலங்கும் என்று கருத்து. e "எந்தச் சேதனனுக்கு நான் அருள்புரிய விரும்புகிறேனோ அவனுக்கு ஸம்ஸாரஸம்ப₃ந்த₄த்தை வளர்க்கும் செல்வத்தைக் குறைத்து விடுகிறேன்" — என்பது ப₄க₃வத்₃ வசனமான இந்த ப்ரமாணத்தின் பொருள். g புளிந்த₃புத்ரன்—வேடனின் மகன். h அப்ராக்ருதமான ப₄க₃வத₃நுப₄வத்துக்குப் பாங்கான ஜ்ஞாநம், ப₄க்தி முதலான பெருமைகள் எம்பெருமான் அருளாலே கிடைக்கப் பெற்ற சேதனன், பழைய ப்ராக்ருதமான அநுப₄வத்தை மறுபடியும் விளைத்துக் கொள்கை.

மறந்து என் ஸ்வரூபத்தை நினைத்தானாகில் பழைய நரகங்களொழிய வேறே எனக்கொரு நரகம் ஸ்ருஷ்டிக்கவேணும்; அன்றிக்கே, என் ஸ்வரூபத்தை மறந்து தன் ஸ்வரூபத்தை உணர்ந்தானாகில் பழைய திருநாடு போராது, எனக்கென்ன ஒரு திருநாடு ஸ்ருஷ்டிக்கவேணும்.

## தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

a பட்டினிப்பெருமாளென்றுரொருவரை எம்பெருமானார் b நாலில் பத்தில் கண்டருளினால், "பெருமாளே!" என்றருளிச்செய்ய; இவரும் "ஜீய! ஜீய!" என்பர்; c இவரும் அற்றைக்கு க்ருதார்த்த₂ரானோம் என்றருளிச்செய்வர்; d இவரும் நாலுமூன்றுநாள் திருமுடிக்குறையிலே அநுஸந்தி₄த்துக் கொண்டிருப்பர்: e ஒருநாள் ராத்ரி கள்ளர் களவுகண்டு போகாநிற்கச்செய்தே இவரைக்கண்டு, இங்கே ஓராள் இருந்த

### தொண்ணூற்றொன்றாம் வார்த்தை

a *சிறியாண்டான்* — எம்பெருமானாருடைய ஶிஷ்யராய் க்ருமிகண்ட₂ன் அழிந்த நற்செய்தியைத் திருநாராயணபுரத்தில் எம்பெருமானாருக்குச் சொல்லி, அவரால் 'மாறொன்றில்லா மாருதி' (ஸீதாபிராட்டியால் கைம்மாறு காணமுடியாத அனுமனைப் போன்றவர்.) என்று கொண்டாடப் பெற்ற சிறியாண்டான்.

### தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

a பட்டினிப்பெருமாள்—யோகி₃களைப்போலே பட்டினி கிடப்பவராகையாலே பட்டினிப்பெருமாள் என்று பெயர் பெற்றவர். b நாலில் பத்தில் – பத்தெட்டு நாட்களுக்கு ஒரு முறை. c இவரும் (பட்டினிப் பெருமாளும்) "எம்பெருமானாராலே விஷயீகரிக்கப் பெற்றோமாகையால் இன்று பேறு பெற்றோம்" என்று அருளிச்செய்வர். d பட்டினிப் பெருமாள் பெரிய பெருமாளுடைய திருமுடிப்பார்ஶ்வத்திலே உள்ள திருமுடிக்குறையிலே ஏகாந்தமாக இருந்து கொண்டு எம்பெருமானாரால் விஷயீகரிக்கப் பெற்ற இப்பேற்றை அநுஸந்தி₄த்துக்கொண்டு யோகி₃களைப்போலே பல நாட்கள் அசையாமல் எழுந்தருளியிருப்பர். e சில கள்வர்கள் பொருள்களைத் திருடிச் செல்கையில் இந்தப் பட்டினிப்பெருமாளைப் பார்த்து அவர்களில் ஒருவன் 'இங்கே ஒரு ஆள்

தென்று அவர்களிலே ஒருவன் சொல்ல, 'அது அங்கே பண்டே யிருப்பதொன்று; இம்மரம் பிறர்க்குச் சொல்லில்காண் அவன் நம்மைச் சொல்லுவது' என்று மற்றுள்ளார்க்குச் சொல்ல, இத்தை எம்பெருமானார் கேட்டுநின்று அருளிச்செய்தார்.

## தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

அத்₃ருஷ்டத்தை த்₃ருஷ்டமாக அநுஸந்தி₄த்தும், த்₃ருஷ்டத்தை அத்₃ருஷ்டமாக அநுஸந்தி₄த்தபோதுமிறே இவன் முமுக்ஷுவாவது என்று ப₄ட்டரருளிச்செய்தார்.

## தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

திருக்கோட்டியூர்நம்பி அந்திமத₃ஶையிலே, "திருவுள்ளக் கருத்தேது?" என்று முதலிகள் கேட்க; சக்ரவர்த்தித் திருமகனார் திருவுள்ளக்கருத்தை ஒரு பக்ஷி புண்படுத்திற்று என்றார்.

---

இருந்தது' என்று சொல்ல, அவர்களில் மற்றொருவன் "அது பல நாட்கள் அங்கேயே மரம் போலே உட்கார்ந்திருக்கும். எதிரில் தெரியும் மரம் நம்மைக் காட்டிக் கொடுக்கும்போதுதான் மரம்போல் உணர்ச்சியற்ற இம்மனிதனும் நம்மைக் காட்டிக்கொடுப்பான். இந்த ஆளைக் கண்டு கவலைப்படவேண்டாம்" என்று மற்ற திருடர்களுக்குச் சொல்ல, இவ்வார்த்தையைத் தற்செயலாகக் கேட்ட எம்பெருமானார் பட்டினிப்பெருமாளுடைய நிஷ்டை₂யைக் கொண்டாடி அருளிச்செய்தார் என்று கருத்து.

### தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

கண்ணுக்குத் தோற்றாத பரமபத₃ாநுப₄வம் முதலானவற்றை, ஆசார்யோபதே₃ஶம் முதலானவற்றிலுள்ள நம்பிக்கையாலே கண் காண நிற்கும் ப்ரத்யக்ஷம்போலே அநுஸந்தி₄த்தும், கண்ணுக்குத் தோன்றும் ப்ராக்ருதப் பொருள்களில் பற்று அறுகையாலே, காணாத பொருள்களைப்போலே அவற்றை அநாத₃ரித்தும் நிற்கும் நிலை ஏற்பட்டால் அவனுக்கு முமுக்ஷுத்வம் (மோக்ஷமடைவதில் விருப்பம்) உண்டானதாகக் கொள்ளலாமென்று கருத்து.

### தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

சக்கரவர்த்தித்திருமகனார் திருவுள்ளக் கருத்தை ஒரு பக்ஷி புண்படுத்துகையாவது — ஸ்ரீராமாயணம் யுத்₃த₄காண்ட₃ம் பதினெட்டா

## தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை

அத்துழாய், பெரியநம்பி ஆபத்₃த₃சையிலே 'நாம் இங்கு நின்றும் கோயிலேறப் போனாலோ?' என்ன ; "நாம் அங்கே போய் ப்ரக்ருதியை விட்டால், நாட்டில் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவடிச்சாரும்போது 'நம்பியகப்படக் கோயிலேறப்போக வேண்டிற்றில்லையோ?' என்று ப₄யப்படார்களோ" என்றருளிச் செய்தார்.

---

வது ஸர்க்க₃ம் "ஶ்ரூயதே ஹி" என்று தொடங்கும் 24-வது ஶ்லோகத்திலும், "ஸ ஹி தம்" என்று தொடங்கும் 25-வது ஶ்லோகத்திலும் சக்கரவர்த்தித்திருமகன்—தன்னுடைய மனைவியைக் கவர்ந்து சென்ற வேடனுக்காகத் தன் உயிரை விட்டு அவனுக்கு விருந்தளித்த ஒரு புறுவின் கதையைச் சொல்லி, "இந்தப் புறுவைப் போலாவது நான் ஶரணாக₃தரக்ஷணம் செய்ய முடியாதே. நான் இந்த விபீ₄ஷணனை ரக்ஷித்தாலும் மனைவியைக் கவர்ந்த இந்த வேடனுக்காக உயிரை விட்ட இதன் பெருமை நமக்கு ஏற்படாதே. என் உயிரையே விட்டு ராவணனை ரக்ஷித்தால் அப்பெருமை ஏற்படலாம். அப்படி ஏற்பட்டாலும் நமக்கு முன்னமே ஒரு புறு பெற்றுப் போன பெருமையையே நாம் பெற்றோமாவோம்" என்று திருவுள்ளம் புண்பட்ட வ்ருத்தாந்தத்தை நினைக்கிறது. அந்த ஶ்லோகங்களின் அப₄ய ப்ரத₃ான ஸாரத்தில் பெரியவாச்சான்பிள்ளையும் திருவாய்மொழி 6-8-6 ஈட்டில் நம்பிள்ளையும் இவ்வார்த்தையை அருளாளப்பெருமாள் எம்பெருமானாருடையதாக எடுத்திருக்கிறார்கள். திருக்கோட்டியூர் நம்பி, அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஆகிய இருவருமே அந்திம காலத்தில் இப்படி அநுஸந்தி₄த்திருக்கலாம்.

### தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை

க்ருமிகண்ட₂னால் திருக்கண்கள் பிடுங்கப்பெற்று அவனுடைய தலைநகரான கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து பெரியநம்பி ஸ்ரீரங்க₃த்துக்குத் திரும்பிவரும் வழியில் பெரியநம்பிக்கு ப்ராணாபத்தாயிருக்கும்போது 'சரமத₃சை நேருவதற்குமுன் ஸ்ரீரங்க₃த்துக்குச் சென்றுவிட்டால் நன்றாயிருக்குமே' என்று நம்பி குமாரத்தியான அத்துழாய் தெரிவித்தபோது "இங்கேயே சரமத₃சை நேர்ந்தாலும் எம்பெருமான் அருளாலே பரமபத₃ம் கிடைப்பதில் தட்டில்லை. நாம் வாஹநாதி₃களை வைத்துக்கொண்டு விரைந்துசென்று ஸ்ரீரங்க₃த்துக்குப் போய் ப்ராணனைவிட்டால், மற்றுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும் இதை

## தொண்ணூற்றும் வார்த்தை

ஸ்வஸ்வாதந்த்ர்யம் பீ₃ஜபூ₄தமான ஸம்ஸாரத்தில் அருசியும், ஸ்வபாரதந்த்ர்யமூலமான உசிதகைங்கர்யத்திலே ருசியும், தன்னுடைய ஜ்ஞாநாநுஷ்டா₂நங்களில் ப்ராவண்யபு₃த்₃தி₄யும், இதுக்கு அடியான முமுக்ஷுக்களோட்டை ஸஹவாஸத்தில் கர்த்தவ்யபு₃த்₃தி₄யும், இதினுடைய விபாகத₃ஶையான நித்யமுக்தர் பரமபத₃த்தில் உத்₃தே₃ஶ்யபு₃த்₃தி₄யும், இவை ப்ரபந்நநிஷ்டை₂; ஸ்வரூபம் ஒருமிது₂நமென்றிருக்கையும், ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்த₂ம் மிது₂நவிஷயத்தில் பண்ணும் கைங்கர்யமென்றிருக்கையும், ஸ்வரூபவிரோதி₄ ஸ்வாதந்த்ர்யமென்றிருக்கை

---

மூன் மாதிரியாகக்கொண்டு ஸ்ரீரங்க₃த்தில் மரணமடைந்தால்தான் மோக்ஷம் என்று முடிவுகட்டி 'மற்ற இடங்களில் உயிர்நீங்கினல் மோக்ஷம் கிடைக்காது' என்று பயப்படுவார்கள்'' என்று கூறி, வழியிலேயே பரமபத₃மடைந்த செய்தியைக் கூறுவது இவ்வார்த்தை.

### தொண்ணூற்றும் வார்த்தை

ப்ரபந்நனுக்குத் தொடக்கத்தில் இருக்கவேண்டிய தன்மைகளும், ப்ரபத்தி நிஷ்டை₂ நிறைவடைந்து பரமைகாந்தியான பிறகு ஏற்படும் தன்மைகளும் இங்கு இரண்டு வாக்யங்களால் விவரிக்கப்படுகின்றன. ப்ரபந்நனுக்கு இருக்கவேண்டிய தன்மைகளாவன — (1) 'நானே ஸ்வதந்த்ரன்' என்னும் நினைவாலே ஏற்படும் இவ்வுலகவாழ்க்கையில் உண்டான ருசி நீங்கப்பெறுகை (2)'நான் எம்பெருமானுக்குப் பரதந்த்ரன்' என்னும் நினைவாலே, ஸ்வரூபத்துக்குத் தகுந்த ப₄க₃வத்₃ பா₄க₃வதகைங்கர்யங்களிலே ருசியுண்டாகை. (3) ப்ரபந்நனுக்கு உரிய ஜ்ஞானமும் அநுஷ்டா₂னமும் தனக்கு உண்டாகவேணும் என்று ஆசைப்படுகை. (4) அந்த ஜ்ஞானநுஷ்டா₂னங்கள் உண்டாவதற்காக, மோக்ஷமடையவேண்டும் என்னும் விருப்பமுள்ள மற்ற ப்ரபந்நர்களோடு கூடியிருக்கவேண்டுமென்னும் எண்ணம். (5) இவ்வெண்ணத்தின் முற்றிய நிலையான—நித்யர், முக்தர், அவர்கள் வாழும் பரமபத₃ம் ஆகியவற்றை அடையவேணும் என்னும் எண்ணம். பரமைகாந்திக்கு இருக்கவேண்டிய தன்மைகளாவன:-(1) நம் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் ஶேஷி ஸ்வரூபம் பெருமாளும் பிராட்டியுமான ஒரு மிது₂னம் என்று நினைத்திருக்கை. (2) அந்த மிது₂னவிஷயத்தில் பண்ணும் கைங்கர்யமே ஸ்வரூபத்துக்குத் தக்க புருஷார்த்த₂ம் என்று நினைத்திருக்கை. (3) ஸ்வரூபத்துக்கு முரணான தே₃வதாந்தரம், ப்ரயோஜநாந்தரம், தன் ஆநந்த₃த்துக்காக மோக்ஷத்தை விரும்புவது

யும் இவை பரமைகாந்தி நிஷ்டை₂: இவையிரண்டு வார்த்தையும் ஆட்கொண்டவில்லி ஜீயர் அருளிச்செய்தவை.

## தொண்ணூற்றேழாம் வார்த்தை

ப்ராப்யாந்தரங்களிலே கைவைத்தாளுகில் ஶாஸ்த்ரம் சிலுகிடும்; ஸாத₄நாந்தரங்களிலே கைவைத்தாளுகில் பாரதந்த்ர்யம் சிலுகிடும் ; ஸித்₃தோ₄பாயஸ்வீகாரத்திலே கைவைத்தாளுகில் ஸ்வரூபம் சிலுகிடும்.

## தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

பிள்ளை திருநறையூரரையரும், நம்பி திருவழுதிவளநாடு தா₃ஸரும்—a "வேம்பு முற்றமுற்றக் கைக்குமாபோலே, இவ்வாத்மாவும் ஒருநாளைக்கு ஒருநாள் விஷயாந்தரங்களிலே மண்டாநின்றது; இதுக்கு ப₄க₃வத்ப்ராப்தி கூடுமோ?" என்று

---

ஆகியவற்றிலே மூட்டும் ஸ்வாதந்த்ர்யம் (தான் ஸ்வதந்த்ரன் என்னும் நினைவு) ஸ்வரூபவிரோதி₄யாகும் என்று நினைத்திருக்கை. இரு வாக்யங்கள்கொண்ட இவ்வார்த்தை அருளிய ஆட்கொண்டவில்லி ஜீயர் எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களிலொருவர்.

**தொண்ணூற்றேழாம் வார்த்தை**

ஶாஸ்த்ரங்களுக்குப் பரமதாத்பர்யம் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற பரமமோக்ஷமேயாகையாலே, மற்ற ப்ராப்யங்களைச் சேதனன் விரும்பும்போது ஶாஸ்த்ரங்கள் 'நம் கருத்தறியாமல் இவற்றை விரும்புகிறானே' என்று வருந்திச் சண்டையிடும். 'தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தன் முயற்சியும் வேண்டும்' என்னும் ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யாலே மற்ற ஸாத₄னங்களை அநுஷ்டி₂த்தாளுகில், இவனுடைய ஆகிஞ்சன்யத்துக்கு உறுப்பான பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபம் சண்டையிடும். ஸித்₃தோ₄பாயமாகிற எம்பெருமானைத் தான் பற்றும் பற்றில் உபாயம் என்னும் நினைவு கொண்டாளுகில், வேறொதையும் எதிர்பாராத உபாயஸ்வரூபம் (உபாயமாகிற எம்பெருமானுடைய நிரபேக்ஷோபாயத்வம்) சண்டையிடும்.

**தொண்ணூற்றெட்டாம் வார்த்தை**

a வேப்பமரம் நாளாக நாளாகக் கசப்பு அதி₄கமாவது போலே, இவ்வுலகில் சேதனர்களும் நாளாக நாளாக ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் மிகவும் ஈடுபடுகிறார்கள். இத்தகைய இவர்கள் எம்பெருமானை எப்படி

ப₄ட்டரைக் கேட்க ; “b ஶரீரவியோக₃ஸமயத்திலேயாகிலும் இஶ் ஶரீரத்தில் உபேக்ஷையைப் பிறப்பிக்கையாலும், ஸ்ரீமாலாகாரர்க்குத் தன் வடிவழகைக் காட்டினாற்போலே இவனுக்கும் வடிவழகைக் காட்டுகையாலும் அது கூடும்” என்று அருளிச்செய்தார் ; இதுக்கு ப்ரமாணம்;-“ந க₂லு ப₄ாக₃வதா யமவிஷயம் க₃ச்ச₂ந்தி”.

## தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

a ஸம்ஸாரபீ₄தியும், ப்ராப்யருசியும், ஆகிஞ்சந்யமும், அநந்யக₃தித்வமும், ஸ்வதோ₃ஷக்₂யாபநமும், ஸ்வரூபப்ரகாஶமும், ஸ்வரூபஜ்ஞாநமும் இவையிறே அதி₄காரிக்கு ஸ்வரூபம்;

அடையமுடியும்?''என்பது கேள்வியின் கருத்து. b''எம்பெருமான் இந்த ஶப்₃த₃ாதி₃விஷயஸுகங்களை அற்பமாகவும் நிலைநில்லாததாகவுமே படைத்திருக்கையால், இச்சேதனனுக்கு ஶரீரம் விடும் ஸமயத்திலாவது இந்த ஶரீரத்திலும் அதைக்கொண்டு அநுப₄விக்கும் விஷயங்களிலும் ஈடுபாடின்மையை எம்பெருமான் உண்டாக்கிவிடுவான். தன்னை ஆஶ்ரயித்தபின்பு. ஸ்ரீமாலாகாரருக்குத் தன் வடிவழகைக் காட்டினாற்போலே இச்சேதனனுக்கும் அர்ச்சாஸ்த₂லங்கள் முதலான இடங்களில் அடிக்கடி தன் வடிவழகைக் காட்டி, மற்ற விஷயங்களிலுள்ள ஈடுபாட்டைப் படிப்படியாகக் குறைத்துவிடுகிறான். ஆகையால் எம்பெருமானை ஆஶ்ரயித்த சேதனன் அவனையடையத் தட்டில்லை. 'ப₄க₃வத்₃ ப₄க்தர்கள் யமனுடைய நாட்டிற்குச் செல்ல மாட்டார்களன்றோ' என்னும் பொருளுள்ள வேத₃வாக்யம் இவ்விஷயத்தில் ப்ரமாணம்'' என்பது பதிலின் கருத்து.

### தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

a ப்ரபந்நனான அதி₄காரியின் ஸ்வரூபநிரூபக த₄ர்மங்களாவன:- (1) இவ்வுலக வாழ்க்கையைக் கண்டு, 'இது எம்பெருமானிடம் ஈடுபாட்டைத் தடுத்துவிடுமோ' என்னும் ப₄யம். (2) ப்ராப்யமான ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யங்களில் ஈடுபாடு. (3) தன்னை ரக்ஷித்துக் கொள்ளத் தன்னிடம் எந்த உபாயமுமில்லாமை. (4) தனக்கு ரக்ஷகராக வேறொருவரைக் கொள்ளாமை. (5) தன்னுடைய குற்றங்களை எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பிக்கை. (6) தன்னுடைய ப₄க₃வத்₃ ப₄ாக₃வத ஶேஷத்வ ஸ்வரூபம் பிறர்க்கும் வெளிப்படும்படி இருக்கை. (7) அந்த ஸ்வரூபம் தனக்குத் தெளிவாயிருக்கை.

b ஸ்வரூபஜ்ஞன் ஸ்வரூபநிரூபணம் பண்ணுகையாவது - ஸ்வதஸ் ஸர்வஜ்ஞன் பக்கலுண்டான நித்யகைங்கர்யாநுவிச்சூ₂ாவிஶேஷ ப்ரதிபத்திநிவ்ருத்தி.

## நூறும் வார்த்தை

உபாஸகனை ஈஶ்வரன் பூ₄ஜிப்பிக்கவேணுமென்று நினைத்திருக்கும். ப்ரபந்நரை ஈஶ்வரன் பூ₄ஜிக்கவேணுமென்று நினைத்திருக்கும்.

---

இவையே ப்ரபந்நாதி₄காரிகளுக்கு ஸ்வரூபம். b தன்னுடைய அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்தையும், ''ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்கு உகப்பானுமவனே'' என்கிற எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் அறிந்தவன் தன்னுடைய ஸ்வரூபத்தை நன்கு ஆராய்ந்தால் இயற்கையிலேயே எல்லாமறிந்தவனான எம்பெருமான் விஷயத்தில் ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யும் போது ''அவ்வடிமை தன் ஆநந்த₃த்துக்கு உறுப்பானது'' என்னும் எண்ணம் நீங்கப்பெறுவான், இவ்வண்ணம் நீங்கப்பெறவில்லையாகில் இவன் ஸ்வரூபஜ்ஞனாக ஆக முடியாது; இயற்கையிலேயே எல்லாமறிந்தவனான எம்பெருமான் இவனுடைய விருப்பத்தையறிந்து மோக்ஷ நிலையிலும் இவனுக்கு ஸ்வார்த்த₂ கைங்கர்யத்தையே அருளிவிடுவான் என்று உணர்ந்து இவ்விஷயத்தில் மிகவும் ஜாக்₃ரதையாயிருக்க வேண்டும் என்று கருத்து.

### நூறும் வார்த்தை

உபாஸகன் தன் ஆநந்த₃த்துக்காக எம்பெருமானை அநுப₄விக்க வேணும் என்று நினைக்கிறானகையாலே, உபாஸித்தபடி ப₂லம் கொடுக்கும் எம்பெருமான் அவனுக்குத் தன்னை அநுப₄விக்கக் கொடுப்பதில் ஊற்றமுடையவனாயிருக்கிறான். ப்ரபந்நன் எம்பெருமானுடைய ஆநந்த₃த்துக்காகவே அநுப₄வ கைங்கர்யங்களைச் செய்ய நினைக்கிறானகையாலே அவன் விரும்பியபடி எம்பெருமான் ''ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:'' [கீ₃தை 7-19] [வாஸுதே₃வனே எல்லாம் என்று நினைப்பவனே மஹாத்மா; அவன் எனக்கும் கிடைத்தற்கரியவன்] என்கிறபடியே தனக்கும் பெறற்கரிய அவனைப் பெற்று அநுப₄விப்பதில் ஊற்றமுடையவனாயிருக்கிறான்.

## நூற்றோராம் வார்த்தை

a அவித்₃யாந்தர்ப்பூ₄தனான சேதநனுக்கு அநுப₄ாவ்ய மான பே₄ாக₃ம் அவித்₃யாநிவ்ருத்திபூர்வகமான அநுப₄ வேச்சை₂யுடையவனுக்கு அநுபாதே₃யம்; b அநுபாதே₃ய பே₄ாக₃ஸித்₃தி₄க்குக் காரணமான கர்மகாரணம் த்ரிவித₄ம்; அதில் சிறிது சிரகாலத்தோடேகூட அவித்₃யாநிவ்ருத்தியைப் பிறப்பிக்கக்கடவதாயிருக்கும்; அல்லாதவை அவித்₃யாவர்த்த₄ கங்களாயிருக்கும்.

## நூற்றிரண்டாம் வார்த்தை

எம்பார் வார்த்தை; a ஸ்வரூபஜ்ஞன், ஸ்வயம் ஸ்வரூப நிரூபணம் பண்ணுமதிலும் ஸ்வயம் ஸ்வதோ₃ஷ த₃ர்ஶநம்

---

### நூற்றோராம் வார்த்தை

a இவ்வுலகத்திலுள்ள அவித்₃யை எனப்படும் அஜ்ஞானம் நீங்கப்பெற்று, பரமபத₃ம் சென்று எம்பெருமானை அநுப₄விக்க வேண்டும் என்னும் விருப்பமுடையவனுக்கு, இந்த அஜ்ஞானத்தில் உழல்கின்ற சேதனன் அநுப₄விக்கும் ஶப்₃தா₃தி₃பே₄ாக₃ம் கைக் கொள்ளத்தகாதது. b கைக்கொள்ளத்தகாத இந்த ஶப்₃தா₃தி₃விஷய பே₄ாக₃ம் ஏற்படுவதற்குக் காரணம் இவனுடைய அநாதி₃ கர்மம். அந்தக்கர்மத்துக்குக் காரணமாயிருப்பது (1) ஸ்வஸ்வாதந்த்ர்யம், (2) 'தே₃ஹமே ஆத்மா' என்னும் மயக்கம், (3) 'நான் எம்பெருமானையொழிந்த மற்றவர்களுக்கு அடிமைப்பட்டவன்' என்னும் மயக்கம். இவற்றில் முந்தியதான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தில் ஒரு ஸூக்ஷ்மமான அம்ஶம், அதாவது — 'தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தானும் முயற்சிசெய்யவேணும்' என்னும் எண்ணம் — இவனை ப₄க்தி முதலான உபாயாந்தரங்களில் மூட்டி ப்ராரப்₃த₄கர்மம் முடியும் வரையில் பல ஜன்மங்கள் முயற்சிசெய்யும்படி பண்ணி, முற்கூறிய அஜ்ஞானத்தைப்போக்கி இவன் விரும்பும் ஸ்வார்த்த₂மோக்ஷத்தை ஸாதி₄த்துத்தரும். ஸ்வஸ்வாதந்த்ர்யத்தில் மற்ற பகுதிகளும், தே₃ஹாத்மமயக்கமும் அந்யஶேஷத்வமும் முற்கூறிய அஜ்ஞானத்தை வளர்த்து ஸம்ஸாரக்கடலிலேயே இவனை மேலும் மேலும் ஆழ்த்திவிடும்.

### நூற்றிரண்டாம் வார்த்தை

a ஸ்வரூபத்தை அறிந்தவனுடைய அறிவு அளவுபட்டதாகை யாலே அவன் தானாகத் தன்னுடைய ஶேஷத்வபாரதந்த்ர்யங்களை

பண்ணுகை ஸ்வஸாமர்த்த்₂யம். b ஸ்வரூபஜ்ஞன் ஸ்வயம் ஸ்வரூபநிரூபணம் பண்ணினால் ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனுக்குங் கூடக் கூடாதபடியான ஸ்வப₄ாவமுண்டாயிருக்கும்; c புருஷனுக்குப் பும்ஸ்த்வ நிவ்ருத்திபூர்வகமான புருஷார்த்த₂நிரூபணம் பண்ணுமதிலும் புருஷதே₃ஹ நிரூபணம் பண்ணுகையே புருஷார்த்த₂ம்; d ஸ்வரூபஜ்ஞனுக்கு அவித்₃யாஸம்ப₃ந்த₄ நிவ்ருத்திபூர்வகமான அப்ராக்ருத தே₃ஶவிஶேஷத்திலும் அவித்₃யாஸம்ப₃ந்த₄த்தில் ஆர்த்தி அத்யந்தாபேக்ஷிதம். e ஸ்வரூபவைஶத்₃யத₃ஶையாவது - பரஸ்வரூபவிஷயத்தில் ஸ்வீகார

---

ஆராய்ந்து உள்ளபடி அறிவது அரிது. ஆகையாலே இவன் தன் ஸ்வரூப ஜ்ஞானத்தாலே எம்பெருமானுடைய க்ருபைக்கு விஷயமாவதுமரிது. ஆனால் அநாதி₃காலமாக இவனிடம் உள்ள குற்றங்கள் ஏராளமாயுள்ளன. அவற்றையறிந்து எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பிப்பது மிக எளிது. அப்படி விண்ணப்பிப்பதால் எம்பெருமானுடைய திருவுள்ளம் மிகவும் இரங்கும். ஆகையால் ஸ்வரூபத்தை ஆராய்வதைக் காட்டிலும் தன் குற்றங்களைக்கண்டு எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பிப்பதே திறமைமிக்கவன் செய்யவேண்டியதாகும். b முன் வாக்யத்தில் சொன்னபடி தன்னுடைய ஶேஷத்வ பாரதந்த்ர்ய ஸ்வரூபங்களைத் தானே ஆராய்ச்சிசெய்யத் தொடங்கினால் இப்படி ஆராய்பவன் எம்பெருமானைப்போலே இயல்வான ஸர்வஜ்ஞத்வத்தை உடையவனானாலும் இவனுடைய ஶேஷத்வபாரதந்ர்யங்களாகிற ஸ்வப₄ாவம் அளவிட்டு அறியமுடியாதபடி இருக்கும். c ஜீவனுக்கு — தன்னுடைய ஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியை முன்னிட்டு ஏற்படும் எம்பெருமானுகப்புக்கேயான அநுப₄வகைங்கர்யங்களாகிற புருஷார்த்த₂த்தை ஆராய்வதைக்காட்டிலும், பரமபுருஷனான எம்பெருமான் உகந்து வாழும் தே₃ஹங்களான ப₄ாக₃வதர்களின் பெருமையைப் பற்றி ஆராய்வதே மேலான புருஷார்த்த₂மாகும். d ஸ்வரூபமறிந்தவனுக்கு — இவ்வுலகிலுள்ள அஜ்ஞானம் நீங்கிய பின்பே அடையப்படும் அப்ராக்ருதமான பரமபத₃த்தையடைவதில் விருப்பத்தைக் காட்டிலும் அந்த அஜ்ஞானம் நீங்குவதில் விருப்பமே மிகவும் அவஶ்யம். அஜ்ஞானமும் அதனாலே ஏற்படும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மும் நீங்குவதில் முழுவிருப்பமில்லாமல் பரமபத₃மடைவதில் மிகவும் விருப்பமிருந்தாலும் எம்பெருமான் அதை அருளமாட்டானென்று கருத்து. e ஸ்வரூபத்தைத் தெளிவாக அறியும் நிலையாவது - எம்பெருமானைத்

ப்ரதிபத்தி ப்ரவ்ருத்திநிவ்ருத்தியில் அவ்யவஸிதனாய்ப் போருகை. f ஸ்வரூபஜ்ஞனுக்கு ஸ்தூ₂லதே₃ஹாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக ஸ்வதே₃ஹபரிக்₃ரஹேச்ச₂ாதிஶயமும் தே₃ஹபோ₄க்₃யதையும் ஸத்₃ருஶம் ; g ஸ்வஸ்வரூபவிஷய ஜ்ஞாநபூர்த்தி நிஷ்டை₂யாவது - பரஸ்வரூபவிஷயத₃ர்ஶநாதி₃ ப்ரகார ப்ரதிபத்தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி பூர்வகமாக பரஸ்வரூபத்தில் ஆர்த்திவிஶேஷப்ரதிபத்திநிவ்ருத்திவிஶேஷநிஷ்டை₂ ; h ஸ்வரூபயாதா₂த்ம்யஜ்ஞாநமாவது — பரஸ்வரூபவைஶத்₃ய ஸ்மரண பூர்வகமாக பரஸ்வரூப(விஷய) வ்யதிரிக்தவிஷய கைங்கர்யருசிநிவ்ருத்தி பிறக்கை ; i ஸ்வக₃தஜ்ஞாநம் - ஸ்வ

---

தான் உபாயமாகப்பற்றும் ஸ்வக₃தஸ்வீகாரம் தன்னை உய்விக்கும் என்னும் நினைவு இல்லாமலிருக்கையும், ''உடையவன் உடைமையை ஏற்றுக்கொண்டால் ஏற்றுக்கொள்ளட்டும்; கைவிட்டாலும் விடட்டும்; ஏற்றுக்கொள்வதும் கைவிடுவதும் போ₄க்தாவான அவனுக்கே பொறுப்பு'' என்று எம்பெருமானுடைய ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளில் தான் பொறுப்பு ஏற்காதவனாயிருக்கையுமாகும். அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஞானசாரத்தில் அருளியபடியே, சாதகம்போல் நாதன் தனதருளே பார்த்திருக்கவேண்டும் என்று கருத்து. f ஸ்வரூபமறிந்தவனுக்கு ப்ராக்ருதமான மற்றொரு தே₃ஹத்தை அடையாமல் தனது ஸ்வரூபத்துக்குத் தகுந்த அப்ராக்ருத தே₃ஹத்தைப் பரமபத₃த்தில் பெறுவதில் மிகுந்த விருப்பமும், அந்த தே₃ஹம் மிக இனிது என்னும் எண்ணமும் ஒக்க இருப்பது தகும். g தன் ஸ்வரூபவிஷயத்தில் நிறைந்த ஜ்ஞானத்தோடு ஊன்றியிருக்கையாவது—எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை எண்ணெய்த்தாரைபோலே இடைவிடாமல் கண்டுகக்கும் அன்புத்தொடராயிருக்கும் ப₄க்தியாகிற உபாயாந்தர ப்ரவ்ருத்தியிலிருந்து நீங்குவதை முன்னிட்டுக்கொண்டு பரஸ்வரூபத்தைப் பெறவேணுமென்னும் பெருவிருப்பத்தோடு தன் ஆநந்த₃த்துக்காகத் தான் முயல்வதினின்றும் நீங்குவதில் ஊன்றிநிற்பதேயாகும். h ஸ்வரூபத்தை உள்ளபடி அறிகையாவது — எம்பெருமானுடைய ஸ்வரூபத்தைத் தெளிவாக நினைத்துக்கொண்டு, எம்பெருமானுடைய ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபட்டவர்களான ப்ராக்ருதர்விஷயத்தில் கைங்கர்யம் செய்யவேணும் என்னும் விருப்பம் நீங்கப்பெறுகை. i எம்பெருமானே உபாயம் என்னும் தன்னிடமுள்ள அறிவு அநந்ய ஶரணத்வமாகிற ஸ்வரூபத்தில் சேருமே ஒழிய உபாயமாகாது. எம்

ரூபம் ; பரக₃தஜ்ஞாநம்-உபாயம் ; j இதர ப₂லபோ₄க்த்ருத்வ ப்ரதிபத்தி நிவ்ருத்தி பூர்வகமான ஸம்யக்ப₂லபோ₄க்த்ருத்வ ப்ரதிபத்தி விஶேஷநிஷ்ட₂னவன், ஸர்வோத்க்ருஷ்டஜாதனுமாய், ஸர்வவிஸஜாதீயனுமாய், ஸர்வோபாயநிவ்ருத்திபூர்வகமாக ஸித்₃தோ₄பாயாந்தர்க்க₃தனுனவன், ஸஜாதீயத்வப்ரதிபத்தியும் ஸஜாதீயத்வவ்யாவ்ருத்தி விஶேஷநிஷ்டை₂யுமுண்டென்று பு₃த்₃தி₄பண்ணிக்கொண்டு போரக்கடவன் ; k இவ்வார்த்தையால் அஞ்சர்த்த₂ம் ப்ரதிபாதி₃க்கப்படுகிறது; - இதரவிஷயராக₃ நிவ்ருத்தியும், விஹிதவிஷயராக₃ப்ரவ்ருத்தியும்,

---

பெருமானிடமுள்ள ஜ்ஞானம் ஶக்தி முதலியவையே உபாயமாகும். j ஸ்வரூபத்துக்குத் தகாத ஶப்₃த₃தா₃தி₃விஷயாநுப₄வம் தொடக்கமாக மோக்ஷத்தில் ஸ்வார்த்த₂போ₄க₃ம் ஈருக உள்ள எல்லா அநுப₄வங்களையும் அநுப₄விக்கவேணும் என்னும் எண்ணத்திலிருந்து நீங்கப் பெற்று, பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யரூபமான ஒப்பற்ற அநுப₄வத்தை அனுப₄விக்கவேணும் என்று ஆசைப்படுமவன், இவ்வுலகிலுள்ள எல்லாச் சேதனர்களைக்காட்டிலும். ''பிறந்தார் உயர்ந்தே'' [திருவாய் 10-10-11] என்கிறபடியே மிகச் சிறப்புற்றவன். இத்தகையபெருமையையுடையவனுய். மற்ற உபாயங்கள் அனைத்தையும் கைவிட்டு ஸித்₃தோ₄பாயமான எம்பெருமான் அபி₄மானத்திலே அடங்கின இவன் எம்பெருமானும் நித்யமுக்தர்களும் தன்னைத் தங்களோடு ஒரு கோவையாக நினைப்பரென்றும், தங்களைக்காட்டிலும் சிறந்தவன் என்றும் நினைப்பர் என்றும் அநுஸந்தி₄த்துக்கொண்டு வாழலாம். ஸாத்விகாஹங்காரமாகையாலே இதில் தவறில்லை. ''ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்'' [கீதை 7-18] [''ஜ்ஞானியானவன் எனக்குத் தா₄ரகன் என்பது என் ஸித்₃தா₄ந்தம்.] ''வானவர்க்காவர் நற்கோவையே'' [திருவாய் 4-2-11] ''தீர்த்தங்களே என்று பூசித்து நல்கியுரைப்பர் தம் தேவியர்க்கே'' [திருவாய் 7-10-11] ''சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே'' [திருவிருத்தம் 79] முதலான ப்ரமாணங்களை இங்கு அநுஸந்தி₄ப்பது. k இவ்வார்த்தையால் ஐந்து அர்த்த₂ங்கள் சொல்லப்படுகின்றன. (1) பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யம் தவிர்ந்த அநுப₄வங்களில் விருப்பமின்மை (2) ஸ்வரூபத்துக்குத் தகுந்ததான பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களில் விரும்பி ஈடுபடுகை (3) மற்ற உபாயங்களைக் கைவிடுகை (4) ஸித்₃தோ₄பாயமான எம்பெருமானைப் பற்றுகை (5) ''வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத

இதரோபாயத்யாக₃மும், ஸித்₃தே₄பாய ஸ்வீகாரமும், ஹித பரன்பக்கல் யதா₂ப்ரதிபத்தியும்.

## நூற்றுமூன்றும் வார்த்தை

நஞ்சீயர் சரமத₃ஶையில் அருளிச்செய்த வார்த்தை ;— ஸ்வவிஷயமான வ்யாதி₄ ஶாந்த்யர்த்த₂மான ப்ரபத₃நமும் ஸ்வரூபஹாநி; இதுதான் பாரதந்த்ர்யத்துக்கு தூ₃ஷணம்; பரவிஷயவ்யாதி₄ஶாந்த்யர்த்த₂மான ஸாங்க₃ப்ரபத₃நமும் ஸ்வரூபஹாநி ; இது, ஈஶ்வரனுடைய பரரக்ஷண விஷயமான ஸர்வஜ்ஞத்வாதி₃களுக்கு தூ₃ஷணம்.

---

காதல் நோயாளன்போல்'' [ பெருமாள்திரு 5-4 ] என்கிறபடியே இச்சேதனனுக்கு நன்மையே செய்யும் எம்பெருமான் நமக்கு என்றும் ரக்ஷகனாகவே இருப்பான் என்னும் எண்ணம் மாருமலிருக்கை.

### நூற்றுமூன்றும் வார்த்தை

ப்ரபந்நனாயிருப்பவன் தன்னுடைய நோய் கு₃ணமாவதற்காக எம்பெருமானை ஶரணமடைவதும் ஸ்வரூபத்தை அழிக்கும். அதாவது-எம்பெருமானுக்கு அத்யந்த பரதந்த்ரனான இவன் ''ஹிதபரனான எம்பெருமான் நம்முடைய கர்மம் கழிவதற்காகவும். ஆத்மாவின் நன்மையின் பொருட்டும் இந்த நோயை அளித்திருக்கிறான். இதை நீக்குவதும் அவனுக்கே பொறுப்பு'' என்று இருக்க வேண்டியிருக்க, நோய் போவதற்காக எம்பெருமானைக் கால்கட்டி நிர்ப்ப₃ந்த₄ப் படுத்துவது பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு முரணாகும். பிறருடைய நோய் நீங்குவதற்காகப் பரிபூர்ண ப்ரபத்தி செய்வது பரோபகரமாகையாலே நல்லது தானே? எனில்: அதுவும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை அழிப்பதாகும். அதாவது — ஒருவனுக்கு ஹிதத்தின் பொருட்டு நோயையளித்த எம்பெருமான் அதை எப்போது நீக்க வேண்டும், எப்படி நீக்க வேண்டும் என்றறிந்த ஸர்வஜ்ஞனாகவும் ஸர்வஶக்தனாகவும் இருக்க, சேதனன் எம்பெருமானைக் கால் கட்டி அந்த நோயை நீக்கப் பிரார்த்தி₂ப்பது அவனுடைய ஸர்வஜ்ஞத்வம் முதலான கு₃ணங்களுக்குக் குறையை விளைத்து அவனுடைய ஸ்வரூபத்தை அழிப்பதாகும்—என்று கருத்து.

## நூற்றுநாலாம் வார்த்தை

a அநந்தாழ்வான், b நஞ்சீயரைக்கண்டு, ' இதுவென் ஜீயா? ஸுகுமாரராயிருக்கிற நீர் வேதாந்தபோது நீராடி, பசித்த போது அமுதுசெய்து, பட்டரை ஸேவித்திருந்தால் ஸந்ய ஸித்து வந்திலீரென்று உம்மைப் பரமபதத்தினின்றும் தள்ளுவாருண்டோ ? இனியென் ' என்று பார்த்து, " மந்த் ராந்தரங்களையடைய விட்டு, திருமந்த்ரத்திலே பிறந்து, த்வ யத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்டராவீர்" என்று வாழ்த்தி,

---

### நூற்றுநாலாம் வார்த்தை

a அநந்தாழ்வான்—எம்பெருமானுருடைய ஶிஷ்யராய், அவரு டைய நியமனத்தின் பேரில் சிந்துபூமகிழும் திருவேங்கடத்திலே நந்தவனமமைத்துத் திருவேங்கடமுடையானுக்குப் புஷ்ப கைங்கர்யம் செய்த மஹாசாரியர். b நஞ்ஜீயர்—பூர்வாஶ்ரமத்தில வேதாந்தி என்று பேர் பெற்றவராய், ஆறு தர்ஶனங்களுக்கு ஆறு ஆஸன மிட்டுக் கொண்டு அத்வைதஸித்தாந்த ப்ரவர்த்தகராயிருந்தவர். சரம காலத்தில் எம்பெருமானுரால் நியமிக்கப்பெற்று, பட்டர் வேதாந்தியென்றும் மாதவரென்றும் பெயர் பெற்று மேல் நாட்டில் (திருநாராயணபுரத்துக்குக்கருகில்) இருந்த இவரை வெற்றி கொண்டு நம் தர்ஶனஸ்தராக்கினுர். சிறிது காலம் கழித்து ஸம்ஸாரத்தில் விரக்தி பெற்ற இவர் துறவு பூண்டு ஏராளமான த்ரவ்யத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீரங்கத்துக்கு வந்து பட்டர் திருவடிகளிலே ஸமர்ப்பித்து, அவரையல்லது அறியாதவராயிருந்தார். இவரைப் பார்தது அநந்தாழ்வான் "வேதாந்தியாயிருக்கும்போது ராஜபோகத் தில் வாழ்ந்த ஸுகுமாரரான நீர் க்ருஹஸ்தராயிருந்துகொண்டே ஸ்நானம், அந்நபானம் முதலானவற்றில் ஸந்யாஸிக்குரிய கடுமை யான நியமங்களில்லாமல் பட்டர் திருவடிகளையே உபாயோபேய மாக நினைததிருந்தால் பரமபதம கிடைககாமல் போய் விடுமோ ? இதை இப்போது சொல்லி என்ன செய்வது " என்று கூறி, "வேதாந்தியாயிருந்தபோது கறறிருநத மற்ற மந்த்ரங்களை யெல்லாம் விட்டு, பட்டர் உபதேஶிதத திருமந்த்ரததாலே ஸ்ரீவைஷ் ணவத்வமாகிற புதிய பிறவியையடைந்து, பட்டர் உபதேஶிதத த்வயத்தையே எப்போதும் அநுஸந்திக்கையாலே அதனாலே ஜ்ஞான வளர்ச்சி பெற்றவராய் த்வயமொன்றையே பற்றியிருப்பவர் ஆவீர்"

பின்னையருளிச்செய்த வார்த்தை; - 'த்₃ருஷ்டத்திலுள்ளதெல்லாம் ப₄ட்டருக்காக்கினோம்; த்₃ருஷ்டத்துக்குக் கடவார் ப₄ட்டரென்று இருப்பதோரிருப்புண்டு; அது பூர்வத₃ஸையிலும் அநர்த்த₂யவாம்' என்று பார்த்து; 'த்₃ருஷ்டத்துக்குக் கடவார் பெருமாள், அத்₃ருஷ்டத்துக்குக் கடவார் ப₄ட்டர்' என்றிரும்; த்₃ருஷ்டாத்₃ருஷ்டங்களிரண்டுக்கும் ஆசார்யன் கடவனென்று இருந்தால் வருவதேதென்னில்; த்₃ருஷ்டத்தில் கர்மாதீ₄நமாக ஏதேனும் சுருங்குண்டாகில் ஆசார்யனை வெறுத்தபோது பெருமாளைக்கொண்டு தீர்த்துக்கொள்ள வொண்ணாது; பெருமாளை வெறுத்தானாகில் ஆசார்யனைக் கொண்டு தீர்த்துக்கொள்ளலாம்.

## நூற்றஞ்சாம் வார்த்தை

எம்பெருமானார், தம்முடைய ஸ்ரீபாத₃த்திலே ஆஸ்ரயித்ததொரு ஸ்ரீ வைஷ்ணவருடைய பிள்ளைக்கு உ ஏகாயநரோட்டை

---

என்று வாழ்த்தினார். அதற்குப்பின் ஒரு வார்த்தையும் அருளினார். அதாவது—'இம்மையில் நம் செல்வத்தையெல்லாம் ப₄ட்டருக்கு ஸமர்ப்பித்து விட்டோம். ஆகையால் இம்மையில் நமமுடைய நன்மையை ப₄ட்டர் பார்த்துக் கொள்வார்' என்று நீர் நினைத்தீராகில், அந் நினைவு அஹங்காரமமகாரங்களோடு கூடியதாகையாலே, நீர் வேத₂ாந்தியாயிருந்த நிலையைக் காட்டிலும் தாழ்வை விளைத்துவிடும். ஆகையால் "இவ்வுலகில் நம்முடைய தே₃ஹயாத்ரை பெரியபெருமாளுடைய பொறுப்பு. ஆத்மயாத்ரை ப₄ட்டருடைய பொறுப்பு" என்று நினைத்திரும். 'தே₃ஹயாத்ரை ஆத்மயாத்ரை இரண்டுமே ஆசார்யன் பொறுப்பு என்று நினைத்திருந்தால் குறையென்ன?' எனில் தே₃ஹயாத்ரையில் நம்முடைய கர்மம் காரணமாக ஏதேனும் குறைகள் உண்டானால், தே₃ஹயாத்ரையும் ஆசார்யன் பொறுப்பு என்று நினைப்பவன் ஆசார்யனை வெறுக்கவேண்டிவரும். ஆசார்யனை வெறுத்தவனுக்குப் பெருமாள் கைகொடுக்க மாட்டார் என்பது ஸாஸ்த்ர ஸித்₃த₄மாகையாலே, இவனுக்கு க₃தி இல்லாமல் போய் விடும். தே₃ஹயாத்ரை பெருமாள் பொறுப்பு என்று நினைத்திருப்பவன் அதில் குறையுண்டாம்போது பெருமாளை வெறுத்தாலும், ஆசார்யன் புருஷகாரம் செய்து பெருமாளுக்கு அதனால் ஏற்படும் கோபத்தைத் தணிப்பானாகையாலே இவனுக்கு க₃தியுண்டு என்பது இவ்வார்த்தையின் கருத்து.

ஸம்ஸர்க்க₃முண்டாக, நம்மோடு ஸம்ப₃ந்த₄முடையவன் வ்யபி₄சரித்து அநர்த்த₂ப்படவொண்ணுதென்று, பெருமாள் திருவடிகளிலே எழுந்தருளியிருக்கச்செய்தே அவனும் அங்கே ஸந்நிஹிதனுக, "வாராய்! உனக்கு ப்ரமாணங்களால் காட்டலாம்படி b ஜ்ஞாநபௌஷ்கல்யமில்லை; நான் வேத₃ாந்தங்களில் அறுதியிட்டிருக்கும் பொருள், - "இவ்வாத்மாவுக்குத் தஞ்சமாயிருக்கும் அர்த்த₂ம் த்₃வயமல்லதில்லை" என்று பெருமாள் திருவடிகளில் ஶடகோபனையெடுத்து ஸத்யம்பண்ணிக்கொடுத்தருளினுர்; அவரும் அன்று தொடங்கி c த்₃வயநிஷ்ட₂ரானுர்.

## நூற்றாரும் வார்த்தை

ப₄ட்டர்"த்₃வயத்தின் அர்த்த₂த்தை பு₃த்₃தி₄பண்ணி ஶப்₃த₃ாந்தரத்தாலே இவ்வர்த்த₂த்தை அநுஸந்தி₄க்கவொண்ணுதோ?" என்று உடையவருக்கு விண்ணப்பஞ்செய்ய; "அதுக்குக் குறையில்லை; ஆகிலும் இப்பாசுரத்துக்குச் சுரக்கும் அர்த்த₂ம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாதே"என்று அருளிச்செய்தார்.

### நூற்றஞ்சாம் வார்த்தை

a ஏகாயநர்—"பிராட்டி என்னும் தத்துவம் இல்லை. ப்₃ரஹ்ம சாரி நாராயணனே ப்ராப்யம்" என்னும் மதத்தைப் பற்றியவர். b ஜ்ஞான பௌஷ்கல்யம் - வேத₃ம் முதலான ப்ரமாணங்களில் மிகுதியான அறிவு. c த்₃வய நிஷ்ட₂ரானுர்-ஏகாயநராயிருந்த நிலை நீங்கப்பெற்று, பிராட்டியோடு கூடிய நாராயணனே ப்ராப்யம் என்று கூறும் த்₃வய மந்திரத்தின் பொருளில் ஊன்றி நிற்பவரானுர்.

### நூற்றாரும் வார்த்தை

"வேறொரு ப்ரமாண வ்ாக்யத்தாலே த்₃வயத்தின் அர்த்த₂த்தை அநுஸந்தி₄க்கக் கூடாதா?" என்பது ப₄ட்டரது கேள்வியின் கருத்து. "அர்த்த₂மே முக்₂யமாகையாலே, அப்படி த்₃வயத்தின் அர்த்த₂ம் முழுவதையும் வெளிப்படுத்தும் ப்ரமாண வாக்யம் இருந்தால் அதைக் கொண்டு த்₃வயார்த்த₂த்தை அநுஸந்தி₄க்கக் குறையில்லை; ஆனுல் த்₃வயார்த்த₂ம் முழுவதையும் சுரக்கும் (வெளிப்படுத்தும்) வேறொரு ப்ரமாணம் இல்லாமையாலே, த்₃வயத்தைக் கொண்டே இவ்வர்த்த₂ங்களை அநுஸந்தி₄ப்பதையே நம் ஆசார்யர்கள் ஆத₃ரித்துப்போருகிருர்கள்" என்பது எம்பெருமானுருடைய பதிலின் கருத்து.

## நூற்றேழாம் வார்த்தை

a நம் ஆசார்யர்கள் திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் அர்த்த₂த்தை ஒளித்துப்போருவர்கள் ; த்₃வயத்தில் ஶப்₃த₃மே தொடங்கி ஒளித்துப்போருவர்கள். b திருமந்த்ரம் ஆசார்யவாக்யம் ; த்₃வயம் சிஷ்யவாக்யம். c த்₃வயத்தில்

---

### நூற்றேழாம் வார்த்தை

a நாராயணோபநிஷத் முதலானவற்றிலும், உபப்₃ரும்ஹணங்களிலும், தெளிவாகக் காட்டப்பட்டிருக்கும் ஶப்₃த₃த்தையுடைய திருமந்த்ரத்தை (அஷ்டாக்ஷரத்தை) ப்ரயோஜநாந்தரபரர்கள் ஜபம் ஹோமம் முதலானவற்றைச் செய்வதில் பயன்படுத்தித் தாழ்ந்த பயன்களைப் பெற்றுப்போகிறுர்கள். இத்திருமந்த்ரத்துக்கும், கீ₃தாசரமஶ்லோகத்துக்கும் இடையறாத கு₃ருபரம்பரைமூலம் வந்த ரஹஸ்யார்த்த₂த்தை அறியாத அத்₃வைதிகள் முதலானோர் மனம்போனபடி விபரீதார்த்த₂ங்களைப் பரப்புகின்றனர். திருமந்த்ரசரமஶ்லோகங்களின் ஶப்₃த₃ம் ஶாஸ்த்ர ப்ரஸித்₃த₄மாகிவிட்டபடியாலே, அவற்றுக்கு இந்த து₃ர்த்த₃ஶை ஏற்பட்டுவிட்டது ஆகையால் நம் ஆசார்யர்கள் "இவற்றின் அர்த்த₂த்தையாவது அநதி₄காரிகள் செவிப்படாதபடி ரக்ஷிப்போம்" என்று பார்த்து அர்த்த₂த்தை ரக்ஷித்து ஶிஷ்யர்களின் தகுதியைப் பரீக்ஷித்து உபதே₃ஶிப்பர்கள். த்₃வயோபநிஷத் முதலானவற்றிலும், ஸ்ம்ருதி முதலான உபப்₃ரும்ஹணங்களிலும் மறைத்தே சொல்லப்பட்டதாகையாலே புறம்புள்ளார் அறியாத த்₃வயத்திற்கு, மற்ற இரண்டு ரஹஸ்யங்களுக்கும் ஏற்பட்ட முற்கூறிய து₃ர்த்த₃ஶைகள் வாராமலிருப்பதற்காக, நம் ஆசார்யர்கள் அர்த்த₂த்தை ஒளிப்பதோடு, ஶப்₃த₃த்தையும் ஒளித்துத் தகுதி பார்த்தே உபதே₃ஶிப்பர்கள் என்று கருத்து. எம்பெருமானுர் ஶரணாக₃திக₃த்₃யத்தில் த்₃வயஶரீரத்தை வெளியிடாமல் "அத்ர த்₃வயம்" என்றுமாத்திரம் ஸாதி₃த்திருப்பது இங்கு குறிக்கொள்ளத் தக்கது. b திருமந்த்ரம், த்₃வயம் ஆகிய இரண்டும் ஆசார்யன் ஶிஷ்யனுக்கு உபதே₃ஶிக்கும் வாக்யங்களாய் இருவருடைய அநுஸந்தா₄நத்திலும் இருந்தபோதிலும், த்₃வயத்தில் "ஶரணம் ப்ரபத்₃யே" (உபாயமாகப்பற்றுகிறேன்) என்று ஶிஷ்யனுடைய அநுஸந்தா₄நத்தை நிகழ்காலத்தாலே வெளிப்படையாகக் காட்டுகையாலே, அதை ஶிஷ்யவாக்யம் என்னலாம். அப்படி வெளிப்படையாகக் காட்டாமையாலே திருமந்த்ரம் ஆசார்யவாக்யம் என்னலாம். c த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₂த்தில் எம்பெருமான் நிரபேக்ஷோபாய

பூர்வக₂ண்ட₃த்தில் அர்த்த₂த்தை அநுஸந்தி₄த்தால், ரக்ஷ ணார்த்த₂மாக விலங்கிக்கிடந்த துரும்பெடுத்துப்பொகட ப்ராப்தி யில்லை; d உத்தரக₂ண்ட₃த்தில் அர்த்த₂தைதை அநுஸந்தி₄த்தால் தலைசொரிகைக்கு அவஸரமில்லை; மடலெடுத்துக்கொண்டு புறப் படுமித்தனை.

## நூற்றெட்டாம் வார்த்தை

ப₄க₃வச்சரணாரவிந்த₃ ஶரணாக₃தனாய், ஜ்ஞாநிநாம் அக்₃ ரேஸரனாய், விலக்ஷணாதி₄காரியான ப்ரபந்நனுக்கு a உபாயத் தில் ப்ரவ்ருத்தி ஸ்வரூபவிரோதி₄; b உபேயத்தில் நிவ்ருத்தி ருசிவிரோதி₄; c உபாயத்தில் ப்ரவ்ருத்தி ஸ்வரூபஹாநி;

---

மாகக் காட்டப்படுகிருன். அதை அநுஸந்தி₄த்தால் சேதனன் தன்னை ரக்ஷித்துக்கொள்ளுவதற்காக அருகிலிருக்கும் துரும்பை எடுத்துப்போடவும் தகுதியில்லை. 'ரக்ஷகன் நம்மைத் தனக்குத் திருவுள்ளமானபோது ரக்ஷிக்கிருன்' என்னும் உபாயாத்₄யவஸாயத் துடன் ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தியற்று இருக்கவேணும் என்று கருத்து. d த்₃வயத்தின் உத்தரக₂ண்ட₃த்தில் பிராட்டியும் பெருமாளு மான சேர்த்தியில் செய்யப்படும் அடிமையின் இனிமை காட்டப் படுகிறது. இந்த இனிமையில் ஈடுபட்டவனுக்கு இத்தகைய இனிய புருஷார்த்த₂த்தைப் பெற்றேயாகவேணும் என்னும் ப்ராப்யத்வரை உண்டாகியே தீரும். அப்போது அவர்கள் தலையை அரித்தால் சொரியக்கூட நேரமில்லாமல், இந்த மிக இனிய பயனைப்பெறுவதற் காக வழியல்லா வழிகளில்சென்று மடலெடுத்தல், நோன்புநோற்றல், தே₃வதாந்தரங்களை ஆஶ்ரயித்தல் முதலான செயல்களைச் செய்யத் தொடங்குவர்கள் என்று கருத்து. இந்நிலை ப்ராப்யத்வரை மிக்கிருந்த ஆழ்வார்களிடம் காணப்படுகிறதேயொழிய, அதில்லாத நம்மைப் போன்றவர்களிடம் காணப்படுவதில்லை என்பதும் குறிக்கொள்ளத் தக்கது.

### நூற்றெட்டாம் வார்த்தை

a ஸித்₃தோ₄பாயத்தைப் பற்றிவைத்து, தான் பற்றும் பற்றிலும் உபாயத்வபு₃த்₃தி₄வைப்பது, அநந்யஶரணத்வமாகிற சேதனஸ்வரூபத் துக்கு முரண்படும். b உபேயமாகிற கைங்கர்யத்தில் இனிமையை அறிந்துவைத்து, போதுமென்று அதில்நின்றும் மீள்வது இவனுக்கு இருக்கவேண்டிய ப்ராப்ய ருசியோடு முரண்படும். c ஸித்₃தோ₄பாய

d உபேயத்தில் ப்ரவ்ருத்தி ருசிவிரோதி₄; e இவ்விரண்டு அர்த்த₂த்துக்கும் நித₃ர்ஶநபூ₄தர் — ஸ்வரக்ஷணக்ஷமையாயிருக்கச் செய்தே ஸ்வஸ்வரூபபாரதந்த்ர்யத்தை அநுஸந்தி₄த்து, அஶோக வநிகையில், எழுந்தருளியிருந்த பிராட்டியும், f பெருமாள் "நில்" என்னச்செய்தேயும் தம்முடைய செல்லாமையைக் காட்டி அவருடைய வார்த்தையை அதிக்ரமித்துக் காட்டிலே தொடர்ந்து அடிமை செய்த இளையபெருமாளும்.

ஸம்ஸாரஸம்ப₃ந்த₄மற்றுத் திருநாட்டிலே போயிருக்குமளவும் த்₃வயத்தில் இரண்டு க₂ண்ட₃த்தில் அர்த்த₂த்தையுங் கொண்டு ப்ரபந்நனானவன் g காலக்ஷேபம் பண்ணும்படி — h பெரியபிராட்டியாரைப் பின்செல்லும் ஸ்வப₄ாவனனைகயாலே

---

*நிஷ்ட₂ன் தன் முயற்சியான கர்மம், ஜ்ஞானம் முதலான உபாயங்களில் (உபாயாந்தரங்களில்) ஈடுபடுவது ஆகிஞ்சன்யமாகிற ஸ்வரூபத்தை அழித்துவிடும். மற்ற சேதனரை உபாயமாகப்பற்றுவது அநந்ய க₃தித்வமாகிற ஸ்வரூபத்தை அழித்துவிடும் என்று கருத்து. d ஸ்வார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களில் ஈடுபடுவதும், ஐஶ்வர்யம், கைவல்யம் முதலான மற்ற உபேயங்களில் ஈடுபடுவதும் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களில் ருசியோடு முரண்படும். e பிராட்டி, தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ளவல்ல ஶக்தியுடையவளாயிருந்தபோதிலும், அத்யந்தபாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபவிரோத₄ம் ஏற்படும் என்று அதைப் பயன்படுத்தவில்லை. அனுமன் முதலானவரைக்கொண்டு பெருமாளை அடைவது எளிதாயிருந்தும், அநந்யக₃தித்வமாகிற ஸ்வரூபத்துக்கு விரோத₄ம் ஏற்படுமென்று அதற்கும் இசையவில்லை. ஆகையால் a, c வாக்யங்களில் சொல்லப்பட்ட அர்த்த₂ங்களுக்குப் பிராட்டியின் இவ்விருப்பு த்₃ருஷ்டாந்தம். f பெருமாள் 'காட்டுக்கு வரக்கூடாது' என்று தடுத்தபோதும், ப்ராப்யத்வரை மிக்கவராகை யாலே, இளையபெருமாள் பெருமாள் வார்த்தையை மீறுவதாகிற தகாத செயலைச்செய்து, பெருமாளை இசைவித்து, காட்டுக்குத் தொடர்ந்து சென்று அடிமைசெய்து, தூக்கம் முதலான உபேயாந்தரங்களிலும் விருப்பமற்றவராய், பெருமாளுக்குப் பரார்த்த₂கைங்கர்யஞ்செய்தது b, d வாக்யங்களில் சொல்லப்பட்ட அர்த்த₂ங்களுக்கு த்₃ருஷ்டாந்தம்.*

*g காலக்ஷேபம் பண்ணும்படி — த்₃வயத்தின் அர்த்த₂த்தை அநுஸந்தி₄த்து நற்போதுபோக்கும் ப்ரகாரம் பின்வருமாறு என்று*

இவள் புருஷகாரமாகக்கொண்டு ஆஶ்ரயிக்கிற நம் பெரும் பிழைகள் பாராதானுமாய், i ஆஶ்ரயிப்பார்க்கு மிகவும் எளியனான நாராயணனுடைய j திருவடிகளையிரண்டையும், k எனக்கு அத்யந்தம் அநிஷ்டமாய், அநாதி₃யாக இன்றளவும் வர வடிம்பிட்டு வருகிற ஸம்ஸாரத்தை வாஸநையோடே போக்கி, l எனக்கு இஷ்டதமமாய், நிரதிஶயாநந்த₃ாவஹமாய், அநந்தமாய் அபுநராவ்ருத்தி லக்ஷணமான மோக்ஷத்தைப் பெறுகைக்கு அவ்யவஹித ஸாத₄நமாகப் பற்றி நின்றேன் ; m பெரியபிராட்டியாரோடே கூட n ஸர்வ ஸ்வாமியான நாராயணன் திருவடிகளிலே o ஸர்வதே₃ஶ ஸர்வ கால ஸர்வாவஸ்தே₂ாசிதமான ஸகல ஶேஷவ்ருத்திகளையும் பண்ணப்பெறுவேனாகவும்; p அதுக்கு விரோதி₄யான அஹங்கார மமகாரங்கள் தவிருவதாகவும். இதினுடைய q அநுக்ரமணமிருக்கும்படி; r ஸாபராத₄னான ஸம்ஸாரிசேதநனுக்கு ஸர்வஜ்ஞனான ஸர்வேஶ்வரனைக் கிட்டுமிடத்தில், இவனுடைய அபராத₄ம் அவன் திருவுள்ளத்தில் படாதபடி அழகாலும் கு₃ணங்களாலும் அவனைத் துவக்கி இவனைத் திருவடிகளிலே சேர விடுகைக்குக் கண்ணழிவற்ற புருஷகாரமான பிராட்டி ஸ்வரூபம் சொல்லி, s மதுப்பாலே-இவளுக்கு அவனைப்பிரிய ஸம்ப₄ாவனையில்லாத மஹாஸம்பத்தான நித்ய

---

கருத்து. h இது ஸ்ரீமச்சப்₃த₃ார்த்த₂ம். i இது நாராயண ஶப்₃த₃ார்த்த₂ம். j இது 'சரணௌ' என்னும் ஶப்₃த₃த்தின் பொருள். k, l இவை முறையே அநிஷ்டநிவ்ருத்தியையும், இஷ்டப்ராப்தியையும் நேரே ஸாதி₄த்துத் தரும் உபாயத்தைக்கூறும் 'ஶரண' ஶப்₃த₃த் தின் பொருள். இதுவரை பூர்வக₂ண்ட₃த்தின் பொருள் அநுஸந்தி₄க்கப்பட்டது இனி உத்தரக₂ண்ட₃த்தின் பொருள் அநுஸந்தி₄க்கப்படுகிறது. m இது 'ஸ்ரீமதே' என்னும் ஶப்₃த₃த்தின் பொருள் n இது 'நாராயண' ஶப்₃த₃த்தின் பொருள். o இது 'ஆய' என்னும் ஶப்₃த₃த்தின் பொருள். p இது நமஶ்ஶப்₃த₃ார்த்த₂ம். q அநுக்ரமணம் - முன்சொன்னதின் விவரணம். r இது ஸ்ரீஶப்₃த₃ார்த்த₂ம். s ''பூ₄மநிந்த₃ாப்ரஶம்ஸாஸு நித்யயோகே₃'' என்னும் வ்யாகரண காரிகைப்படி இங்கு 'நித்யயோகே₃ மதுப்'பாய். பிராட்டி எம்பெருமானை

யோகமும் சொல்லி, t நாராயணபதத்தாலே-இவன் புருஷகாரமும் மிகையாம்படி அவன் ஆச்ரித விஷயத்தில் பண்ணும் வாத்ஸல்யாதி குணயோகஞ்சொல்லி, u "சரணௌ" என்கிற பதத்தாலே - இவன் குற்றங்களைப்பார்த்துக் கைவிடுமென்று u₂ வரையாதே மேல் விழுந்து ஸ்வீகரிக்கும் திருவடிகளினுடைய சேர்த்தியழகைச் சொல்லி, v "சரணம்" என்கிற பதத்தாலே-அவைதான் இவனுக்கு அநிஷ்ட நிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் ஸாதநமென்னுமிடஞ்சொல்லி, w "ப்ரபத்யே" என்கிற வர்த்தமாநத்தாலே-சேதநன் நெடுங்காலம் பண்ணின ப்ராதிகூல்யம் தவிர்ந்து, இன்று இசைந்து பற்றுகிற பற்றைச்சொல்லி, உத்தரகண்டத்தில் x ஸ்ரீமத் பதத்தாலே உபேயத்திலும் பிராட்டி புருஷகாரபூதையுமாய், ஸ்வாமிநியுமாய்க்கொண்டு அவனோடே நித்யவாஸம் பண்ணுகிறபடி சொல்லி, y நாராயணபதத்தாலே-அவனுடைய ஸர்வஸ்வாமித்வஞ்சொல்லி, z "ஆய" என்கிற சதுர்த்தியாலே-இவ்விருவருமான சேர்த்தியிலே இப்ரபந்நனை சேதநன் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிசேஷத்தை ப்ரார்த்தித்து, அத்யாஹார்யமான z₂ ஸ்வசப்தத்தாலே பெற்றபடி சொல்லி, z₃ நமஸ்ஸாலே-அடிமை செய்யுமிடத்து அவனுகந்த உகப்புக்கண்டு உகக்குமதொழியத் தன்னுகப்புத் தவிர்ந்தபடி சொல்லித் தலைக்கட்டுகிறது.

---

விட்டு இறையும் அகலகில்லாதவள் என்று காட்டுகிறது. t இது i வாக்யத்தின் விவரணம். u இது j வாக்யத்தின் விவரணம். u₂ வரையாதே—அந்தணர், அந்தியர் என்னும் வாசிபாராமல். இவ்விடத்தில் "பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்" [முமுக்ஷுப்படி 146] என்ற சூர்ணையும் அதன் வ்யாக்யானமும் அநுஸந்திக்கத்தக்கது. v இது k, l வாக்யங்களின் அர்த்தம். w இது l வாக்யத்தில் 'பற்றிநின்றேன்' என்றதின் விவரணம். x இது m வாக்யத்தின் விவரணம். y இது n வாக்யத்தின் அர்த்தம். z இது o வாக்யத்தின் அர்த்தம். z₂ ஸ்வசப்தத்தாலே — அஹம் சப்தத்தாலே. z₃ இது p வாக்யத்தின் விவரணம்.

## நூற்றென்பதாம் வார்த்தை

a உபாயத்தை நிலையிட்டவர்கள் பிராட்டியும் த்$_3$ரௌபதி$_3$யும், திருக்கண்ணமங்கையாண்டானும்; உபேயத்தை நிலையிட்டவர்கள் இளையபெருமாளும், பெரியவுடையாரும், சிந்தயந்தியும், பிள்ளை திருநறையூரரையரும்:—b 1. "ஶீதோ ப$_4$வ" என்னும் ஶக்தியோடே தன்னுடைய தனியிருப்பை மாற்ற வல்லவள், பெருமாளுடைய ஸ்வரூபத்துக்குக் கொற்றையாமென்று துரும்பு நறுக்காதிருந்தபடியாலும், c லஜ்ஜையில்லாத கோ$_3$ஷ்டி$_2$யிலே லஜ்ஜையையுடையவள், அவன் கையிலே தன் லஜ்ஜையைப் பொகட்டிருந்தபடியாலும், d தம் பரபரப்பை மாற்றி வருத்தவன் வாசலிலே ஒதுங்கினபடியாலும், $d_2$ உபாயத்துக்கு, $d_3$ ஸீமாபூ$_4$மி இவர்கள்; e நில்லென்ன, $e_2$1. "குருஷ்வ மாமநுசரம்" என்கிறபடியாலும், 2. "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்கிறபடியாலும், 3. "க்ரி

---

### நூற்றென்பதாம் வார்த்தை

a ஸ்ரீவசனபூ$_4$ஷணம் 80 முதல் 84 ஈறாக உள்ள சூர்ணைகளும் அவற்றின் வ்யாக்$_2$யானமும் இவ்விஷயத்தை விவரிக்கின்றன. அவற்றை இங்கு அநுஸந்தி$_4$ப்பது. b பிராட்டியின் உபாயாத்$_4$யவஸாய நிஷ்டை$_2$யைக்காட்டும் வாக்யம். அநுமனுடைய வாலின் நெருப்பைத் தன் ஸங்கல்பத்தாலே குளிரச்செய்தவளுக்கு, ராவணனை அழியச் செய்ய ஶக்தியிருந்தபோதிலும், தன்னை ரக்ஷிப்பது பெருமாளுடைய பொறுப்பு என்று உணர்ந்து, தன் ரக்ஷணத்துக்காகச் சிறிதும் முயலாதிருந்தாள் என்று கருத்து. c இரு கையும் விட்ட த்$_3$ரௌபதி$_3$யினுடைய உபாயாத்$_4$யவஸாயநிஷ்டை$_2$யைச் சொல்லுகிறது. d திருக்கண்ணமங்கையாண்டானுடைய உபாயாத்$_4$யவஸாயநிஷ்டை$_2$யைச் சொல்லுகிறது. $d_2$ உபாயத்துக்கு—உபாயாத்$_4$யவஸாயத்துக்கு $d_3$ ஸீமாபூ$_4$மி - எல்லை நிலம். e இளையபெருமாள் உபேயத்தை நிலையிட்டதைச் சொல்லுகிறது. e1 [ரா-அ 31-24] 'என்னைக் கூட அழைத்துச்செல்வாய்' என்று இளையபெருமாள் பெருமாளை நோக்கி, காட்டுக்குக் கூட அழைத்துச் செல்லும்படி பிரார்த்தித்த வாக்யம். e2 [ரா-அ 31-27] 'அடியேன் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்வேன்' என்று இளையபெருமாள் பெருமாளைக் குறித்து விண்ணப்பித்த வாக்யம். e3 [ரா-ஆ 15-7]" 'இன்னவிதமாகப் பர்ண

யதாமிதி மாம் வத₃” என்கிறபடியாலும், 4. “லக்ஷ்மணோநு க₃தாம் க₃திம்” என்னும்படியான ப்ராப்தியாலும், 5.“ஸஹ ஜகைங்கர்யவித₄ய:” என்கிற அர்த்த₂ம் கைப்பட்டது அவர்க்கே யாகையாலும், f பெரியவுடையாரும் பிள்ளை திருநறையூரரை யரும் வகுத்த விஷயத்தைப் பிரிந்து தந்தாமுடைய உடம் பைப் பேணுமையாலும், சிந்தயந்தி வகுத்த விஷயத்தைக் கண்ட மாத்ரத்திலே விரோதி₄யான உடம்பை விட்டு நிற்கை யாலும், உபேயாநுப₄வத்துக்கு ஸீமாபூ₄மி இவர்கள்.

## நூற்றுப்பத்தாம் வார்த்தை

ஆச்சி, ஆச்சானுக்கு—ப₄க₃வச்சே₂ஷமாய் அநாதி₃காலம் எம்பெருமானோட்டை ஸம்ப₃ந்த₄த்தை அறுத்துக்கொண்ட a ஜந் துவுக்கு எம்பெருமான் திருவடிகளிலே b பிணைத்துப் பிழைப் பிக்கப் பிராட்டியுளள் என்றிரும்—என்றருளிச்செய்தார்.

## நூற்றுப்பதினோராம் வார்த்தை

விட்டுப்பற்றித் தேறியிருக்கை அதி₄காரிக்ருத்யம்; விடு வித்துப் பற்றுவித்து விலக்கடியறுக்கை உபாயக்ருத்யம் என்று வடக்குத்திருவீதிப்பிள்ளை.

---

மாலை சமைப்பாய்' என்று நீயே உத்தரவிடவேண்டும்'' என்று இளையபெருமாள் பெருமாளை நோக்கி விண்ணப்பித்த வாக்யம். e4 [ரா-உ-107-3] 'லக்ஷ்மணன் சென்ற வழியில் இன்றே பின் செல் வேன்' என்று இளையபெருமாள் பரமபத₂ம் அடைந்தவுடன் பெரு மாள் அருளிச்செய்த வார்த்தை. e5 ப₄ட்டர் அஷ்ட ஶ்லோகியின் மூன்றுவது ஶ்லோகத்தில் திருமந்த்ரத்தின் வாக்யார்த்த₂த்தை அருளிச்செய்து ''இயல்வான கைங்கர்யச் செயல்கள் எனக்கு ஏற் படட்டும்'' என்று பிரார்த்திவுக்கும் இறுதிப்பத₂ம். f பெரிய உடை யார், பிள்ளை திருநறையூரரையர், சிந்தயந்தி ஆகியவர்கள் எப் படி உபேயத்தை நிலையிட்டார்கள் என்பதை, தொடக்கத்தில் குறித்த ஸ்ரீவசனபூ₄ஷண சூர்ணைகளின் வ்யாக்₂யானத்தில் கண்டு கொள்ளலாம்.

**நூற்றுப்பத்தாம் வார்த்தை**

a ஜந்துவுக்கு-ப₃த்₃த₄ சேதனனுக்கு. b பிணைத்துப் பிழைப்பிக்க- சேர்த்து உய்விக்க. (இது வங்கிபுரத்தாச்சி கிடாம்பியாச்சானுக்கு அருளியது)

## நூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை

உ உபாயத்தில் அத்₄யவஸாயமாவது - ஶங்காத்ரயநிவ்ருத்தி பூர்வகமாக அத்₄யவஸிக்கை. ஶங்காத்ரயமாவது - ஸ்வக்ருத தோ₃ஷத₃ர்ஶநம், உத்₃தே₃ஶ்யது₃ர்லப₄த்வம், உபாயப₃ல் கு₃த்வம், இம்மூன்று ஶங்கையும்; ь ஸர்வஜ்ஞத்வம், ஸர்வஶக்தித்வம், பரமகாருணிகத்வம், பரமௌத₃ார்யவத்த்வம், ஆஶ்ரிதவத்ஸலத்வம், அஶரண்யஶரண்யத்வம், அநாலோசிதவிஶேஷா஽ஶேஷலோகஶரண்யத்வம், நிருப₄ாதிக ஸர்வஸ்வாமித்வம், ஶ்ரிய:பதித்வம், நாராயணத்வமாகிற இப் பத்து கு₃ணங்களையும் அநுஸந்தி₄க்க நிவ்ருத்தமாம். எங்ஙனே?

### நூற்றுப்பதினோராம் வார்த்தை

தன் முயற்சியான உபாயாந்தரங்களை விட்டு, ஸித்₃தே₄ாபாயமான எம்பெருமானையே உபாயமாகப் பற்றி, பலத்தில் ஐயமில்லாமலிருப்பது ஶரணாக₃தன் செய்யவேண்டியது. இந்தச் சேதனனுக்கு மற்ற உபாயங்களோடு தொடர்பை விடுவித்து, தன்னையே உபாயமாகப் பற்றும்படி செய்து, இவன் தன்னைப் பெறுகைக்குத் தடையாயிருக்கும் எல்லாப்பாபங்களையும் போக்கடிக்கை ஸித்₃தே₄ாபாயமான எம்பெருமான் செய்ய வேண்டியது என்று கருத்து.

### நூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை

உ மூன்று ஐயப்பாடுகள் நீங்கப்பெற்று உறுதிகொள்வதே உபாயாத்₄யவஸாயமாவது. அவையாவன:— (1) அநாதி₃காலமாகக் கணக்கற்ற பாபங்களைச் செய்திருக்கும் நாம் தலைசிறந்த புருஷார்த்த₂மான பரமபத₃த்தை அடைவது எப்படி? என்னும் ஐயப்பாடு. (2) பிரமன், உருத்திரன், ஸநகர், ஸநந்த₃னர் முதலானோர்க்கும் அரியதான பரமபத₃ப்ராப்தி நமக்கு எப்படி கிடைக்கும் என்னும் ஐயப்பாடு. (3) இவ்வுலகிலுள்ள அல்பபலங்களையே மிகவும் ஶ்ரமப்பட்டு அடையவேண்டியிருக்கும்போது, தலைசிறந்த பலமான மோக்ஷத்தை, எம்பெருமானை உபாயமாகப்பற்றுவதாகிற எளியவழியால் எப்படி அடையமுடியும் என்னும் ஐயப்பாடு. ь முற்கூறிய மூன்று ஐயப்பாடுகளும் ஸர்வஜ்ஞத்வம் முதலாக நாராயணத்வம் ஈறாகவுள்ள பத்து கு₃ணங்களை அநுஸந்தி₄ப்பதால் நீங்கும். எப்படியெனில்: (1) அடியார்களுடைய தோ₃ஷங்களைக் காணமலிருக்கை,

என்னில் ; - ஆஶ்ரிதவாத்ஸல்யத்தை அநுஸந்தி4க்க ஸ்வக்ருத தோ3ஷத3ர்ஶநத்தாலே வருகிற ஶங்கை கழியும்; ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ பரமகாருணிகத்வ பரமௌதா3ர்யவத்த்வ மாகிற நாலு கு3ணங்களையும் அநுஸந்தி4க்க, உத்3தே3ஶ்ய து3ர்லப4த்வத்தால் வருகிற ஶங்கை கழியும் ; அஶரண்யஶரண் யத்வம் அநாலோசிதவிஶேஷாऽஶேஷலோகஶரண்யத்வமாகிற இவையிரண்டையும் அநுஸந்தி4க்க,உபாயப2ல்கு3த்வத்தால் வரு கிற ஶங்கை கழியும் ; c மேல் மூன்று கு3ணமும் மூன்றுக்கும் பொது; எங்ஙனேயென்னில்;- ஶ்ரிய:பதித்வத்தை அநுஸந்தி4க்க தோ3ஷங்கண்டு அஞ்சவேண்டா ; நிருபாதி4கஸர்வஸ்வாமித் வத்தை அநுஸந்தி4க்க, உத்3தே3ஶ்யது3ர்லப4த்வங்கண்டு அஞ்ச வேண்டா ; நாராயணத்வத்தை அநுஸந்தி4க்க, உபாயப2ல் கு3த்வங்கண்டு அஞ்சவேண்டா.

இக்கு3ணங்கள் "மாம்" என்ற பத3த்திலே அநுஸந் தே4யங்கள். எங்ஙனேயென்னில் ;- d உன்னிற்காட்டில் உன்

---

கண்டால் கு3ணமாகக் கொள்ளுகை முதலான லக்ஷணங்களையுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யமாகிற கு3ணத்தை அநுஸந்தி4த்தால் தன் குற்றம் பார்த்து ஏற்படும் முதல் ஐயப்பாடு நீங்கும். (2) அரியனவற்றை யும் எளிதில் ஸாதி4க்கவல்ல எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்தவனாயிருக்கை), ஸர்வஶக்தித்வம் (எல்லாம் வல்லவனா யிருக்கை), ஒப்பற்ற கருணையுடையவனாயிருக்கை, ஒப்பற்ற வண்மை உடையவனாயிருக்கை என்கிற நாலு கு3ணங்களையும் அநுஸந்தி4த் தால் 'மோக்ஷப2லம் கிடைத்தற்கரியதாயிற்றே' என்னும் இரண்டாம் ஐயப்பாடு நீங்கும். (3) புகலற்றவர்களுக்கும் புகலாயிருக்கை. அந்தணர் அந்தியர் என்ற வாசி பாராமல் அனைத்துலகுக்கும் புகலாயிருக்கை என்னும் இரண்டு கு3ணங்களையும் அநுஸந்தி4த்தால் எளிய உபாயத்தால் அரிய ப2லனை எப்படி ஸாதி4க்கமுடியும் என்னும் மூன்றும் ஐயப்பாடு நீங்கும். c (1) லக்ஷ்மீநாத2னாயிருக்கை, (2) அனைவர்க்கும் இயல்வான ஸ்வாமியாயிருக்கை, (3) நாராயண னாயிருக்கை என்னும் மற்ற மூன்று கு3ணங்களும் இந்த மூன்று ஐயப்பாடுகளையும் நீக்கும். மூலத்தில் ஒவ்வொரு ஐயப்பாடு விஷயத் தில் ஒவ்வொரு கு3ணத்தை எடுத்துக் காட்டியபோதிலும், மூன்று ஐயப்பாடுகளுமே இம்மூன்று கு3ணாநுஸந்தா4னங்களாலும் நீங்கும் என்பதை எளிதில் உணரலாம். d இது ஸர்வஜ்ஞத்வத்தின் பொருள்.

காரியம் அறிவேனுமாய், e உன்னிலும் உன்காரியஞ்செய்கைக்கு க்ஷமனுமாய், f உன்னிலும் உன்காரியத்துக்கு நேர்ந்திருப்பேனுமாய், g உன்காரியஞ்செய்யுமிடத்தில் என்றும் செய்வேனுமாய், h உன் குற்றங்காணுதிருப்பேனுமாய், உன் குற்றம் போ₄க்₃யமாயிருப்பேனுமாய், i உனக்குப் பற்றில்லாத அன்று பற்ருயிருப்பேனுமாய், j உன்தரம் பாராதிருப்பேனுமாய், k உன்னிலும் உன் காரியஞ்செய்கைக்கு ப்ராப்தனுமாய், l உனக்கும் எனக்கும் த₄ாரகையான ஸர்வேஶ்வரிக்காகவே உன்காரியஞ்செய்வேனுமாய், m நீரிலே நெருப்பெழுந்தாற் போலே இவள் குற்றங்காட்டிலும் விடவொண்ணுத குடல் துடக்கையும் உடையேனுமாயிருக்கிற என்னையென்றபடி.

## நூற்றுப்பதின்மூன்ரும் வார்த்தை

a த்யாக₃விஶிஷ்டம் ஸவீகாரம்; b ஸ்வீகாரவிஶிஷ்டம் அதி₄காரம்; c கு₃ணவிஶிஷ்டம் உபாயம்; d லக்ஷ்மீவிஶிஷ்டம் உபேயம்.

e இது ஸர்வஶக்தித்வத்தின்பொருள். f இது பரமகாருணிகத்வத்தின் பொருள். g இது பரமௌதா₃ர்யவத்த்வத்தினுல் ஏற்படுவது. h இது ஆஶ்ரிதவத்ஸலத்வத்தின் கார்யம். i இது அஶரண்யஶரண்யத்வத்தின் பொருள். j இது அநாலோசிதவிஶேஷாஶேஷலோகஶரண்யத்வத்தின் பொருள். k இது நிருபாதி₄க ஸர்வஸ்வாமித்வத்தின்பொருள். l இது ஶ்ரிய:பதித்வத்தின் பொருள். m இது நாராயணத்வத்தின் பொருள்.

### நூற்றுப்பதின்மூன்ரும் வார்த்தை

a எல்லா உபாயங்களையும் விட்டே எம்பெருமானைப் பற்றவேணுமாகையாலே, விடுகையை முன்னிட்டுக்கொண்டிருப்பது பற்றுவது. b எம்பெருமானை உபாயமாகப்பற்றின அதி₄காரிக்கே பரார்த்த₂ாதுப₄வ கைங்கர்யங்களைப் பெறத் தகுதியுண்டாகையால், பற்றுதலை முன்னிட்டுக்கொண்டிருப்பது அதி₄காரம் (ஶரணுக₃தனின் தகுதி). c வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌஶீல்யம், ஸௌலப்₄யம் என்ற ஆஶ்ரயணஸௌகர்யாபாத₃க (ஆஶ்ரயிப்பதற்கு எளிமையைப் பண்ணித்தரும்) கு₃ணங்களோடும், ஸர்வஜ்ஞத்வம் (ஜ்ஞானம்), ஸர்வஶக்தித்வம் (ஶக்தி), ஸர்வஸ்வாமித்வம் (ப்ராப்தி), அவாப்த ஸமஸ்தகாமத்வம் (பூர்த்தி), கருணை என்னும் ஆஶ்ரிதகார்யாபாத₃க (அடியார்களுடைய கார்யத்தை ஸாதி₄த்துத்தரும்) கு₃ணங்களோடும் கூடியிருக்கும் எம்பெருமான் உபாயமாகிறன். d பெரியபிராட்டியாரோடு கூடியுள்ள எம்பெருமான் உபேயமெனப்படும் ப்ராப்யமாகிறன்.

## நூற்றுப்பதினன்காம் வார்த்தை

நம்பி ஸ்ரீகேசவர்த்த₄நதா₃ஸர், "அர்ஜுநன் ப்ரஶ்நம் பண்ண, ஸர்வஜ்ஞனுமாய், ஸர்வஶக்தியுமாயிருக்கிறவன் பண்டுபோல் சொல்லமாட்டேனென்றதென்? " என்று கூரத்தாழ்வானைக்கேட்க ; " த்₃ரௌபதி₃ குழல்முடித்தபின்பு பண்டுபோலே அவன் வாய் புறப்படுமோ? என்று திருவுள்ளக்கருத்து" என்றருளிச்செய்தார்.

## நூற்றுப்பதினைந்தாம் வார்த்தை

பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் வார்த்தை;-a நாராயணனுக்கு நைரந்தர்யவேஷம்,—நம் பக்கல் தம் பேற்றுக்கு " நம: " என்னுதவர்களை, " வானவர் நாட்டையும் நீ கண்டுகொள் "

---

### நூற்றுப்பதினன்காம் வார்த்தை

*கீ₃தையைக்கேட்டு நெடுநாளைக்குப்பின் அர்ஜுனன் கீ₃தார்த்த₂ங்களை மறுபடியும் உபதே₃ஶிக்கவேண்டும என்று கண்ணனைக் கேட்க, கீ₃தையில் தான் சொன்ன பொருள்களெல்லாம் மறந்துவிட்ட அர்ஜுனனைப் பார்த்து "து₃ர்மேத₄ஸ்ஸாஸி" முதலான வார்த்தைகளால் நிந்தி₃த்து. கண்ணன் சுருக்கமான அநுகீ₃தையை உபதே₃ஶித்ததைப் பற்றியது இவ்வார்த்தை. "ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியுமாயிருக்கும் கண்ணன் முன்போல் விரிவாக கீ₃தையை ஏன் உபதேஶிக்கவில்லை ?" என்பது கேள்வியின் கருத்து. " 'அர்ஜுனனுக்கு ப்ரபத்த்யுபதே₃ஶம் பண்ணிற்றும் இவளுக்காக' [ஸ்ரீவசனபூ₄ஷணம் 22] என்கிறபடியே த்₃ரௌபதியின் குழல் விரித்திருப்பதைப் பார்த்து, அதை எப்படியாவது முடிக்கவேண்டும் என்ற ஊற்றத்தாலேயே உபநிஷத்துக்களில் ஆங்காங்கு கிடந்த ரஹஸ்யார்த்த₂ங்களையெல்லாம் யுத்₃த₄களத்திலே கண்ணன் வெளிப்படுத்தினன். அவள் குழல் முடித்தபின்பு அர்ஜுனன் கேட்டாலும் கண்ணனுடைய திருவாய் முன்போல் விரிவாகப் பேசாது" என்பது பதிலின் கருத்து.*

### நூற்றுப்பதினைந்தாம் வார்த்தை

*a " தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே " [ திருவாய் 2-9-4 ] "உனக்கே நாமாட்செய்வோம்" [திருப்பாவை 29] என்கிறபடியே நமஸ்ஸப்₃த₃ார்த்த₂ம் கைவந்து ப₄க₃வத₂நுப₄வகைங்கர்யங்களும் அவனுடைய முக₂மலர்த்திக்கே உறுப்பு என்றிராமல், 'அவை நம் ஆநந்த₃த்துக்கும் உறுப்பு' என்றிருக்கும் ஸாத₄நாந்தரநிஷ்டர்களுக்கும் "வானவர் நாட்டையும் நீ கண்டுகொள் என்று வீடும் தரும்"*

என்னும்படியாயிருப்பதொரு ஔதா₃ர்யவிஶேஷம். b நாராயணனே நமக்கே வஸ்துவுக்கு நைரந்தர்யவேஷம்;- "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று - பேற்றுக்கு நிர்ப்ப₄ரனாய்ப்போருகையும் தத்ப்ரதிப₃ந்த₄கமான பாபத்தில் ஆர்த்தனாய்ப்போருகையும்.

## நூற்றுப்பதினாறும் வார்த்தை

எம்பெருமானாரருளிச்செய்த வார்த்தை;- a ஸ்வஸ்வரூப வைஶத்₃யத₃ஶையாவது - பரஸ்வரூபவிஷயத்தில் ஸ்வீகார த்யாக₃ப்ரகார ப்ரதிபத்திநிவ்ருத்தியில் வ்யவஸ்தி₂தனாய்ப் போருகை. b விட்டுப்பற்ற என்றருளிச்செய்வர் ஆழ்வான்; பற்றிவிட என்றருளிச்செய்வர் முதலியாண்டான்; பிச்சுத் தெளிந்து கண்விழிக்கை என்று ஆண்டான்.

[திருவாய் 3-9-9] என்கிறபடியே பரமபத₃த்தைத் தரும்படியாயிருக்கும் வண்மைமிக்கிருக்கை நாராயணனுக்கு எப்போதுமுள்ள இயல்பு. b "நாராயணனே நமக்கே பறைதருவான்" [திருப்பாவை 1] என்று தமக்குப் பேறு கிடைக்குமென்பதில் கவலையற்றிருக்கையும், அப்பேற்றுக்குத் தடையான அவித்₃யை (அஜ்ஞானம்), கர்மம் (புண்யபாபங்கள்), வாஸனை (பழக்கம்), ருசி (ஈடுபாடு), ப்ரக்ருதி (தே₃ஹ) ஸம்ப₃ந்த₄ம் ஆகியவற்றைக்கண்டு "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" [திருவாய் 6-9-9] என்கிறபடியே மிகவும் வருந்தித் துடிக்கையும் நாரஸப்₃த₃ார்த்த₂மான ப₃த்₃த₄சேதனனுக்கு எப்போதும் இருக்கவேண்டிய இயல்பு.

### நூற்றுப்பதினாறும் வார்த்தை

a தன் ஸ்வரூபத்தைத் தெளிவாக அறிகையாவது—எம்பெருமானுடைய பரத்வத்தை அறிவதிலும், அவனையே பற்றுவதிலும், தன் முயற்சியான எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விடுவதிலும், 'தான்பற்றும் பற்று உபாயம்' என்னும் நினைவு நீங்குவதிலும் உறுதியோடிருக்கையேயாகும். b "முந்துறவுரைக்கேன் விரைக்குழல் மடவார் கலவியைவிடு ... மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே" [பெரியதிரு 9-8-1] என்கிறபடியே விஷயாந்தரங்களை விட்டே எம்பெருமானைப் பற்றவேணும் — என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்வர், "இது ஆழ்வானைப்போன்ற வைராக்₃யஶீலர்க்குக் கூடுமேயொழிய ஸாமான்யர்களுக்குக் கூடாது" என்று திருவுள்ளம் பற்றிய முதலியாண்டான் "விஷயாந்தரங்களை விடாவிடிலும், எம்பெருமானைப்பற்றினால் "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்

## நூற்றுப்பதினேழாம் வார்த்தை

எம்பார் வார்த்தை ;- a ஸ்வீக்ருதோபாயபூ₄தனாகையாவது-ஸ்வீக்ருதபூ₄தனாகை. அதாவது-ஸ்வகத₃ஸ்வீகாரத்தில் உபாய பு₃த்₃தி₄யை த்யஜித்து பரக₃தஸ்வீகாரத்துக்கு விஷயமாய் விடுகை. அதாவது - ஸ்வார்த்த₂ ப்ரவ்ருத்தியையும் ஸ்வப்ர வ்ருத்தியையும் விட்டு, பரார்த்த₂ப்ரவ்ருத்தியிலும் பரப்ரவ்ருத்தி யிலும் அந்வயிக்கை. b "உனக்கென்று நிவ்ருத்திக்கையை விட்டு, எனக்கென்ன நான் ப்ரவ்ருத்திக்கவென்று உள்ளே புகுரு" என்று ஈஶ்வரன் வாக்யம்.

---

கைவிட்டு" [மூன்-திருவ 14] என்கிறபடியே, அவனுடைய இனிமை இவனைப் படிப்படியாக விஷயாந்தரங்களை விடச்செய்துவிடும். பால் குடித்துப் பித்தத்தைத் தீர்த்துக்கொள்வதுபோன்றது இது. ஸாமான்ய ஜனங்களுக்கு விஷயாந்தரங்களைவிட்டே எம்பெருமானைப் பற்றுவது என்பது பால் முதலான மருந்துகளைக் குடிக்காமலே பைத்தியம் தெளிந்து அறிவு ஏற்படுவதுபோலே இயலாத கார்யம்" என்று அருளிச்செய்வர்.

### நூற்றுப்பதினேழாம் வார்த்தை

a எம்பெருமானை உபாயமாகப் பற்றினவனாகையாவது—எம்பெருமானாலே பற்றப்பட்டவனாகையேயாகும். அது எப்படி ? எனில் ; எம்பெருமானைப் பற்றும்போது தான் பற்றும் அப்பற்றில் 'உபாயம்' என்னும் எண்ணத்தை விட்டு, எம்பெருமான் தன்னைப்பற்றும் பற்றுக்குத் தான் இசைந்திருக்கையே ஶரணாக₃தி என்று கருத்து. அதாவது — தனக்காகத் தான் முயல்வதையும், பெண்டுபிள்ளை முதலான பிறர்க்காகத் தான் முயல்வதையும் விட்டு, எம்பெருமானுக்காகவும் அவன்அடியார்களுக்காகவும் தான் முயல்வதில் ஈடுபடுவதன்மூலம், எம்பெருமான் தனக்காகச் செய்யும் முயற்சிகளைத் தடுக்காமல் இசைந்திருக்கையே ஶரணாக₃தியாகும். b ஸர்வேஶ்வரன் வாக்யமாகிற சரமஶ்லோகத்தின் பரமதாத்பர்யமாவது — "உனக்கென்று நீ ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளைச் செய்வதைவிட்டு எனக்கென்றே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் செய்பவனாய், என் இஷ்டப்படி நான் உனக்காக முயலலாம்படி என் முயற்சியிலே உள்ளடங்குவாய்" என்பது.

### நூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

எம்பெருமானாருடைய மருமகனான 'வரத₃விஷ்ணு' என்னும் திருநாமமுடைய நடாதூராழ்வானுடைய பேரரான நடாதூரம்மாள்

## நூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

நடாதூரம்மாள், பிள்ளையெங்களாழ்வார் ஸ்ரீபாத$_3$த்திலே சரமஶ்லோகார்த்த$_2$ம் கேளாநிற்கச்செய்தே, பிள்ளை, "ஸர்வ த$_4$ர்மாந் பரித்யஜ்ய" என்றருளிச்செய்ய; அம்மாள், 'இதொரு ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யமிருந்தபடியென்!' என்ன; பிள்ளையும், "நீர் இப்படி சொல்லுவானென்? அதி$_4$காரிக்குச் சேர்ந்தத்தை விடச்சொல்லிலன்றோ நீர் இப்படி சொல்லவேண்டுவது; அதி$_4$ காரிக்குச் சேராதத்தையன்றோ விடச்சொல்லிற்று. ஆகையால் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமன்று காணும் இது. அதிகாரிக்கு ஸ்வ ரூபஹாநியாகையாலேகாண் இத்தை விடச்சொல்லிற்று"என்று அருளிச்செய்தார்.

*என்னும் வரத$_3$ாசார்யர், தம் ஆசார்யராய், ஸ்ரீவிஷ்ணுசித்தரென்னும் திருநாமமுடையவராய், திருவெள்ளறையில் எழுந்தருளியிருந்தவரான எங்களாழ்வான் திருவடியிலே அமர்ந்து சரமஶ்லோகார்த்த$_2$ம் கேட்டு வரும்போது "'எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விட்டே என்னைப் பற்றவேண்டும்' என்கிறன் எம்பெருமான்" என்று அருளிச் செய்தார் எங்களாழ்வான். இதைக்கேட்ட அம்மாள், "தானே ஶாஸ்த்ரங்களில் விதி$_4$த்த எல்லா உபாயங்களையும் விடச்சொல்லி ஈஶ்வரனுக்கு இப்படி ஒரு ஸ்வாதந்த்ர்யமா!" என்று ஆஶ்சர்யப் பட்டார். அதற்கு எங்களாழ்வான் "அத்யந்தபரதந்த்ரனை இச் சேதனனுடைய ஸ்வரூபத்துக்குப் பொருந்தியதை விடச்சொன்னா லன்றோ நீர் இப்படி ஆஶ்சர்யப்படலாம், இவனுடைய அத்யந்த பாரதந்த்ர்யஸ்வரூபத்துக்குப் பொருந்தாத ஸ்வப்ரவ்ருத்தி ரூபமான இவ்வுபாயங்களையன்றோ விடச்சொல்லுகிறன். ஆகவே ஈஶ்வரன் தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே இவற்றை விடச் சொல்லவில்லை. சேதன னுடைய ஸ்வரூபத்துக்குத் தகாது என்னும் காரணத்தாலேயே விடச் சொல்லுகிறன். ஆகையால் நீர் சொன்ன வார்த்தை சரியல்ல" என்று அருளிச்செய்தார்.*

## நூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

"ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய" என்றவிடத்தில் சொல்லப்பட்ட உபாயாந்தரபரித்யாக$_3$மும் உபாயமல்ல. 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்றவிடத்தில் சொல்லப்பட்ட சேதனனுடைய ஸித்$_3$தோ$_4$பாய ஸ்வீகாரமும் (எம்பெருமானைப் பற்றுகிற பற்றும்) உபாயமன்று.

## நூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

ஆச்சான்பிள்ளை வார்த்தை ;-ஒரு ஸ்ரீவைஷ்ணவர், "விடுகை உபாயமோ பற்றுகை உபாயமோ ?" என்று கேட்க; "விடுகையும் உபாயமன்று, பற்றுகையும் உபாயமன்று, விடுவித்துப் பற்றுவிக்கிறவனே உபாயம்" என்று அருளிச்செய்தார்.

## நூற்றிருபதாம் வார்த்தை

ஆச்சான்பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் "ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமோ, ப்ராப்யாநுரூபமான ஸ்வரூபமோ?" என்று கேட்க; "a முமுக்ஷுத$_3$சையில் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யம்;

---

ஸ்ருஷ்டி அவதாரம் முதலான முயற்சிகளாலே இவ்வுபாயங்களைவிட வைத்துத் தன்னைப் பற்றவைத்த எம்பெருமானே உபாயம் — என்று கருத்து.

### நூற்றிருபதாம் வார்த்தை

a இவன் முமுக்ஷுவாக (மோக்ஷமடையவிரும்புகிறவனாக) இருக்கும்போது இவனுடைய விருப்பத்துக்குத் தக்கவாறு இவனுடைய ப்ராப்யங்கள் வேறுபடுகின்றன. அதாவது ஸ்வார்த்த$_2$தையின் (சுயநலமனப்பான்மையின்) எல்லையிலே நின்று தன்னுடைய ஆத்மாநுப$_4$வத்தையே தான் பெற நினைத்து, அதற்கு உபாயமான ஜ்ஞானயோக$_3$ம் முதலான உபாயங்களை அநுஷ்டி$_2$த்தானாகில், அவனுக்கு அந்த ஸ்வரூபத்துக்கு அநுரூபமாக, கைவல்யமோக்ஷம் ப்ராப்யம் (அடையத்தக்கது) ஆகிறது. ஸ்வார்த்த$_2$தையில் பெரும்பகுதி கழியப்பெற்று, ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வகைங்கர்யங்களைத் தன் ஆநந்த$_3$த்துக்காகவும் விரும்பி அதற்குரிய ப$_4$க்தியோக$_3$ம் முதலான ஸாத$_4$னங்களை அநுஷ்டி$_2$த்தானாகில், அவனுக்கு அந்த ஸ்வரூபத்துக்கு அநுகு$_3$ணமாக ஸ்வார்த்த$_2$ாநுப$_4$வகைங்கர்யங்கள் ப்ராப்யமாகின்றன. ஸ்வார்த்த$_2$தை முழுவதும் கழியப்பெறுகையாலே, பரார்த்த$_2$ாநுப$_4$வகைங்கர்யங்களையே விரும்பி, தனக்காகத் துரும்பு நறுக்கவும் மாட்டாதவனாய், எம்பெருமானையே உபாயமாகப் பற்றினவனுக்கு அந்த ஸ்வரூபத்துக்கு அநுகு$_3$ணமாக, பரார்த்த$_2$ாநுப$_4$வகைங்கர்யங்கள் ப்ராப்யமாகின்றன. ஆக, முமுக்ஷுநிலையில் அவரவருடைய நினைவாகிற ஸ்வரூபத்துக்குத் தக்கபடி ப்ராப்யம் உள்ளது.

b முக்ததஶையில் ப்ராப்யாநுரூபமான ஸ்வரூபம் என்றருளிச் செய்தார்" என்று திருநகரிப்பிள்ளை அருளிச்செய்தார்.

## நூற்றிருபத்தோராம் வார்த்தை

ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஸம்ஸாரத்தினுடைய பொல்லாங்கையும், மந்த்ரங்களினுடைய பன்மையையுங்கண்டு பிள்ளைக்கு விண்ணப்பஞ்செய்ய; ஆகையாலன்றோ தானே உபாயமாக வேண்டுவது என்றருளிச்செய்தார்.

---

b முக்தனுயிருக்கும் நிலையில், அவனவனுடைய ப்ராப்யத்துக்குத் தக்கபடி ஸ்வரூபம் அமைந்திருக்கிறது. அதாவது — கைவல்யமோக்ஷத்தை அடைந்தவனுக்கு, கர்மம் கழிந்துவிட்டபடியாலே தர்மபூதஜ்ஞானத்தின் சுருக்கம் நீங்கப்பெற்று ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவம் ஏற்பட்டிருந்த போதிலும், தன் ஆத்மாநுபவமே அவனுக்கு ப்ராப்யமாய் பகவதநுபவகைங்கர்யங்கள் ப்ராப்யங்களல்லாமற்போகையாலே, ஶேஷத்வஸ்வரூபாவிர்ப்பாவம் ஏற்படுவதில்லை. ஸ்வார்த்தாநுபவகைங்கர்யரூபமான மோக்ஷத்தை அடைந்தவனுக்கு கர்மம் கழிந்துவிட்டபடியாலே ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவமும், கைங்கர்யம் ப்ராப்யமாகையாலே ஶேஷத்வாவிர்ப்பாவமும் ஏற்பட்டபோதிலும், அநுபவகைங்கர்யங்களைத் தன் ஆநந்தத்துக்கு உறுப்பாகவும் அவன் நினைக்கையாலே, அத்யந்தபாரதந்த்ர்யஸ்வரூபாவிர்ப்பாவம் ஏற்படவில்லை. அத்யந்த பரதந்த்ரஸ்வரூபத்துக்கு அநுகுணமான பரார்த்தாநுபவகைங்கர்யங்களை அடைந்தவனுக்கு, கர்மம் கழிகையாலே ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவமும், கைங்கர்யம் ப்ராப்யமாகையாலே ஶேஷத்வஸ்வரூபாவிர்ப்பாவமும், அக்கைங்கர்யமும் பரார்த்தமாகையாலே அத்யந்தபாரதந்த்ர்யஸ்வரூபாவிர்ப்பாவமும் ஏற்படுகின்றன. ஆக, முக்தனுயிருக்கும் நிலையில் ப்ராப்யத்துக்கு அநுகுணமாக ஸ்வரூபம் உள்ளது.

### நூற்றிருபத்தோராம் வார்த்தை

"ஸம்ஸாரம் மிகவும் கொடிதாயிருக்கிறது; அதைப் போக்கித் தரும் மந்த்ரங்களோ 'அநந்தா வை பகவந்மந்த்ரா:' என்கிறபடியே கணக்கற்றவையாயிருக்கின்றன. இதில் எந்த மந்த்ரத்தைக்கொண்டு கொடிய ஸம்ஸாரத்தைப் போக்கிக்கொள்வது என்று திகைப்பு ஏற்படுகிறதே" என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் நம்பிள்ளையிடம் விண்ணப்பிக்க, "இதுகொண்டே—மந்த்ரங்களைக்கொண்டு ஸம்ஸாரத்தைப் போக்கிக்கொள்வது தகாது; மந்த்ரங்களுக்கு ப்ரதிபாத்யனை

## நூற்றிருபத்திரண்டாம் வார்த்தை

அப்பிள்ளைப்பிள்ளைக்கு, ப₄ட்டர், 'பெரியபெருமாள் கண்வளரு கிறபடி பு₃த்₃தி₄பண்ணினீரே' என்றருளிச்செய்தவார்த்தை ;— வைஷ்ணவன் கர்மங்களினுடைய க₄னத்தைப்பார்த்து ப₄யப்பட, மடித்த திருக்கையில் திருவிரல்கள் 'உன்னை ரக்ஷிக்கைக்குக் கவித்த முடியன்றோ' என்று தொட்டுக்காட்டுகிறன ; திருவடிகளிலே நேரே பொகட்ட திருக்கை, ப்ரஜையினுடைய நாவிலே முலைக்கண்களை நெருடிக்கொடுக்கும் மாதாவைப்போலே, திருவடிகள் புகலிடமென்று காட்டுகிறது என்று அருளிச்செய்தார்.

## நூற்றிருபத்துமூன்றும் வார்த்தை

'எம்பெருமான் உபாயமாமிடத்தில் a விஷயஸாபேக்ஷனுமாய் b வ்யாபாரநிரபேக்ஷனுமாயிருக்கும்' என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்வர்.

---

(பொருளான) ஸித்₃தோ₄பாயமான எம்பெருமானைக்கொண்டே ஸம்ஸாரத்தைப் போக்கிக்கொள்ளவேணும் என்று விளங்குகிறதே'' என்று நம்பிள்ளை அருளிச்செய்தார் என்று கருத்து.

**நூற்றிருபத்திரண்டாம் வார்த்தை**

''பெரியபெருமாள் கிடந்ததோர் கிடக்கையாக ஶயனித்திருக்கும் திருக்கோலத்திலே இரண்டு திருக்கைகளும் அமைந்திருக்கும் முறையே சேதனனுக்குத் தஞ்சமாயிருக்கின்றது'' என்று ப₄ட்டர் அப்பிள்ளைப் பிள்ளைக்கு அருளிச்செய்த வார்த்தை இது. அதாவது- வைஷ்ணவன் தன்னை நலியும் அநாதி₃கர்மங்களின் மிகுதியைப் பார்த்து ப₄யப்பட, மடித்துத் திருமுடியைத் தொட்டுக்கொண்டிருக்கும் வலதுதிருக்கையில் திருவிரல்கள் ''உன்னை ரக்ஷிப்பதற்காக நான் இட்டுக்கொண்டிருக்கும் முடியன்றோ இது'' என்று தொட்டுக் காட்டி அப₄யமளிக்கின்றன. திருவடிகளை நோக்கி நேரேயிருக்கும் இடதுதிருக்கை கைக்குழந்தையின் வாயிலே தனது முலைக்கண்களை நெருடிக்கொடுக்கும் தாயைப்போலே, கைக்குழந்தைக்குத் தாய்முலை போலே மோக்ஷார்த₄தனுக்கு ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருக்கும் திருவடிகளை 'இவையே உனக்குப் புகல்' என்று காட்டுகிறது என்று அருளிச்செய்தார். ஸ்ரீரங்க₃ராஜஸ்தவத்தில் ''கிரீடம் ஸ்ரீரங்கே₃ஶயிது:'' [ர-ஸ்த 1-110] என்று தொடங்கும் ஶ்லோகத்தில் ப₄ட்டர் இவ் வர்த்த₂த்தைக் காட்டியிருப்பதைக் கண்டு சுவைக்கலாம்.

## நூற்றிருபத்துநாலாம் வார்த்தை

விக்ரமச்சோழன் திருவீதியிலே திருவரங்கச்செல்வர் எழுந்தருளாநின்றால், பிள்ளையுறங்காவில்லிதாஸர் நாள்தோறும், a ஆயுதம் எடாமல் ஸேவிப்பர்; அருளாளப்பெருமாளெம்பெருமானார், 'பிள்ளாய்! உம்முடைய ஆயுதம் என்று விநியோகப்படுவது' என்று கேட்க; உம்முடைய அஞ்ஜலிபவித்ரம் விநியோகப்படுமன்று அடியேனுடைய ஆயுதம் விநியோகப்படும் என்றார்.

## நூற்றிருபத்தஞ்சாம் வார்த்தை

a ப்ரபந்நாதிகாரிக்குக் கார்யம் ஒன்றுயிருக்க மூன்று அவஸ்தைகூடிக் காரியமாகவேணும்; b அவையாவன —

---

நூற்றிருபத்துமூன்றும் வார்த்தை

a விஷயஸாபேக்ஷன்-ஶரணமடையும் புருஷனை எதிர்பார்ப்பவன். b வ்யாபாரநிரபேக்ஷன் - அவனுடைய முயற்சியை எதிர்பாராதவன். "உபாயம் ஸ்வீகார காலத்தில் புருஷஸாபேக்ஷமுமாய்......கார்ய காலத்தில் உபயநிரபேக்ஷமாயிருக்கும்" என்கிற ஸ்ரீவசனபூஷண (268ம்) சூர்ணையும் அதன் வ்யாக்யானமும் இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

நூற்றிருபத்துநாலாம் வார்த்தை

a நம்பெருமாள் புறப்பாடு கண்டருளும்போது, அவர் சிறிது சாய்ந்தாலும் தம் ப்ராணனை முடித்துக்கொள்வதற்காக ஒரு ஆயுதத்தை (குற்றுடைவாளை) ஏந்திக்கொண்டு பிள்ளையுறங்காவில்லிதாஸர் நம்பெருமாளைப் பின்தொடர்வர். அப்போது நம்பெருமாளை ஸேவிக்கும்போதும் ஆயுதத்தைக் கைவிட்டெடுக்காமலே ஸேவிப்பர். அருளாளப்பெருமாளெம்பெருமானார் 'உம்முடைய ஆயுதம் என்று செயல்படும்?' என்று தாஸரைக் கேட்க, இப்படிப்பட்ட ப்ரதிபத்தியுடன் தாம் அருகில் வரும்போது தம் உயிருக்கு ஊறு ஏற்படும்படி நம்பெருமாள் விடமாட்டாராகையாலே, தம் ஆயுதத்துக்கு விநியோகம் ஏற்படாது என்று உறுதிகொண்ட தாஸர் அதுக்கு த்ருஷ்டாந்தமாக 'உமது அஞ்ஜலிபவித்ரம் (ஜலபவித்ரம்) கேவலஸந்யாஸ தர்மத்துக்கு உறுப்பாமன்றே அடியேனுடைய ஆயுதமும் விநியோகப்படும்' என்று அருளிச்செய்தார்.

நூற்றிருபத்தஞ்சாம் வார்த்தை

a ப்ரபந்நனை அதிகாரி செய்யவேண்டிய கார்யம் - எம்பெருமானுக்குத் தன்னை போக்யமாக்கிக் கொடுக்கையொன்றேயாகும்.

ஆஶ்ரயணோதி4காரம், ப2லாதி4காரம், போ4க3ாதி4காரம். இவற்றுக்கு வேஷம் ஆகிஞ்சந்யமும், அநந்யக3தித்வமும், அத்4யவஸாயமும், பரப4க்திபரஜ்ஞாநபரமப4க்தியும். c இவற்றுக்கு விஷயம் - ஶீலாதி3கு3ணவிஶிஷ்டனுமாய், ஜ்ஞாநஶக்த்யாதி3கு3ணவிஶிஷ்டனுமாய், ஆநந்த3ாதி3கு3ணவிஶிஷ்டனுமாயிருந்துள்ள ஸ்ரிய:பதி; இவன் தன் ஆகிஞ்சந்யத்தையும் அநந்யக3தித்வத்தையும் முன்னிட்டு, ஆஶ்ரயணாபேக்ஷைபண்ண; அவனும் தன் ஶீலாதி3கு3ணங்களை முன்னிட்டு ஆஶ்ரயணீயனும்; இவன் அத்4யவஸாயத்தை முன்னிட்டு ப2லாபேக்ஷை பண்ண, அவன் ஜ்ஞாநஶக்த்யாதி3கு3ணங்களை முன்னிட்டுப் ப2லப்ரத3னும்; இவன் பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்திகளை

---

ஆனாலும் மூன்று தகுதிகள் கூடினால்தான் அக்கார்யம் ஸித்3தி4க்கும் என்று கருத்து. b அம்மூன்று தகுதிகளாவன—(1) ஆஶ்ரயணத்துக்குரிய தகுதி. தன்னிடம் ஒரு கைம்முதலும் இல்லாமையாகிற ஆகிஞ்சன்யமும், தனக்கு வேறொருவர் புகலாயில்லாமையாகிற அநந்யக3தித்வமும் இத்தகுதியையளிப்பவை. (2) பரார்த்த2ாநுப4வகைங்கர்யங்களாகிற ப2லனைப் பெறுவதற்குரிய தகுதி எம்பெருமானே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருப்பவன் என்னும் அத்4யவஸாயம் (உறுதி) இத்தகுதியை அளிப்பது. (3) போ4க்தாவான (முகமலர்த்தியோடு கூடிய) எம்பெருமான் தன்னை அநுப4விப்பதற்குத் தன்னிடமிருக்கவேண்டிய தகுதி. எம்பெருமானைக் காண்கையாகிற பரப4க்தியும், அவனோடு கூடுகையாகிற பரஜ்ஞானமும், அவனைப் பிரியில் த4ரியாமையாகிற பரமப4க்தியும் இத்தகுதியை அளிப்பவை. c (1) ஆஶ்ரயணோதி4காரத்துக்கு விஷயம்-ஸௌஶீல்யம், ஸௌலப்4யம், வாத்ஸல்யம், ஸ்வாமித்வம் ஆகிய நாலு கு3ணங்களோடு கூடிய ஸ்ரிய:பதி. சேதனன் தன் ஆகிஞ்சன்ய அநந்யக3தித்வங்களை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமானை ஆஶ்ரயிக்கவேண்டும் என்று விரும்பினால், அவன் இக்கு3ணங்களை முன்னிட்டுக்கொண்டு ஆஶ்ரயிக்கத் தக்கவனாகிறான். (2) ப2லாதி4காரத்துக்கு விஷயம் - ஜ்ஞானம், ஶக்தி, ப்ராப்தி, பூர்த்தி, கருணை எனும் ஐந்து கு3ணங்களோடு கூடிய ஸ்ரிய:பதி. முற்கூறிய அத்4யவஸாயத்தை முன்னிட்டு, சேதனன் முற்கூறிய ப2லத்தை விரும்பினால் இக்குணங்களை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமான் ப2லனை அளிப்பவனாகிறான். (3) போ4க3ாதி4காரத்துக்கு விஷயம்-ஆநந்த3ம் முதலான போ4க்தாவுக்குரிய கு3ணங்க

முன்னிட்டு போ₄காகு₃ாபேக்ஷபண்ண, அவன் ஆநந்த₃ாதி₃ குு₃ணங்களை முன்னிட்டு போ₄க்தாவாம்.

## நூற்றிருபத்தாறும் வார்த்தை

சோமாசியாண்டான் அருளிச்செய்த வார்த்தை-a ப₄க₃வத் ப்ரவ்ருத்திவிரோதி₄ ஸ்வப்ரவ்ருத்தி; b ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ப்ரபத்தி. c ப₄க்தியுமுபாயமன்று, ப்ரபத்தியுமுபாயமன்று; ப்ரபத்தவ்யனே உபாயம்.

## நூற்றிருபத்தேழாம் வார்த்தை

''சிறியாச்சான் கலங்குகைக்கு யோக்₃யதையுண்டாயிருக்கச் செய்தே தெளிந்திருப்பர்; அடியேன் யோக்₃யதையில்லாமை யாலே தெளிந்திருப்பது'' என்று ஜீயரருளிச்செய்தார்.

---

ளோடு கூடியிருக்கும் ஶ்ரிய:பதி. இவன் பரப₄க்தி பரஜ்ஞான பரம ப₄க்திகளை முன்னிட்டுக்கொண்டு, அவனுக்குத் தன்னை அநுப₄விக்கக் கொடுத்தால் அவன் இக்கு₃ணங்களை முன்னிட்டுக்கொண்டு போ₄க்₃தா வாகி இவனை போ₄க்₃யமாகக்கொண்டு அநுப₄விப்பான்.

### நூற்றிருபத்தாறும் வார்த்தை

a சேதனன் தனக்காகத் தான் முயல்வது முழுவதும் எம்பெருமான் இவனுக்காக முயல்வதற்குத் தடையாயிருப்பது. b ஆகையால் அந்தத் தன் முயற்சி முழுவதையும் விடுவதே ப்ரபத்தி எனப்படும் ஶரணாக₃தியாகும். ஆக, தனக்காகத் தான் முயல்வதிலிருந்து நீங்கினால் எம்பெருமானுடைய முயற்சிகள் ப₂லிக்கப்பெற்று, முற்கூறிய தடை நீங்கப்பெற்ற அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂ம் உண்டாகும் என்று கருத்து. c இப்படி இவன் முயற்சியாயிருப்பது அனைத்தும் இப்பரம புருஷார்த்த₂த்தை அடைவதற்குத் தடையாயிருக்கையாலே, ஸாத₄நாந்தரமான ப₄க்தியும், ஸ்வக₃தஸ்வீகாரமான ப்ரபத்தியும் இதற்கு உபாயமன்று. இவன், இவற்றை உபாயமாக மயங்கி அநுஷ்டி₂த்தால், அந்த ப₄க்திப்ரபத்திகள் முறையே ப₄க₃வத₃நுப₄வப்ரத₄ானமான ஸ்வார்த்த₂ மோக்ஷத்துக்கும், ப₄க₃வத்கைங்கர்ய ப்ரத₄ானமான ஸ்வார்த்த₂ மோக்ஷத்துக்கும் காரணமாகுமேயொழிய, பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂த்துக்குக் காரணமாகமாட்டா. ஆகையால் முற்கூறிய ப்ரபத்திக்கு விஷயமான எம்பெருமானே உபாயமாவான் என்று கருத்து.

## நூற்றிருபத்தெட்டாம் வார்த்தை

a அமுதனார், சிறியாச்சானை, 'உம்முடைய அநுஷ்டா₂நமிருக்கும்படி இது ; நாங்கள் என்செய்யக் கடவோம்?' என்ன; "என் அநுஷ்டா₂நத்துக்கு ஒரு ப₂லமுண்டாகிலன்றோ உம்முடைய அநநுஷ்டா₂நத்துக்கு ஒரு ப்ரத்யவாயமுண்டாவது ; வெறும் புடவை தோயாமல் கெடும்; பட்டுப்புடவை தோய்க்கக் கெடும் என்றிரீர்" என்று அருளிச்செய்தார் ; b ஆசார்யர்களில்

---

### நூற்றிருபத்தேழாம் வார்த்தை

*சிறியாச்சான் என்பவர் ப₄க்தியை உபாயமாக அநுஷ்டி₂க்கத் தக்க ஜ்ஞானஶக்திகளையுடைய அதி₄காரி. அவரைக் குறித்து நஞ்ஜீயர், " சிறியாச்சான் ப₄க்தியை அநுஷ்டி₂க்க ஶக்தியிருந்தமையாலே, 'அதுவும் உபாயமாகும்' என்று கலங்குவதற்குத் தகுதியிருந்தும் உபாயாந்தரங்கள் அத்யந்தபாரதந்த்ர ஸ்வரூபத்துக்கு முரண்பட்டவையாகையாலே அநுஷ்டி₂க்கத்தகாதவை என்று தெளிவு பெற்றிருப்பவர். அவ்வுபாயங்களை அநுஷ்டி₂க்கத் தகுதியேயில்லாமையாலே எம்பெருமானே உபாயமென்று தெளிந்திருப்பேன் அடியேன் " என்று அருளிச்செய்வர்.*

### நூற்றிருபத்தெட்டாம் வார்த்தை

*a அநுஷ்டான ஶீலரான சிறியாச்சான் 'அத்தகைய அநுஷ்டா₂னமில்லாத எங்களுக்குப் புகலேது' என்று கவலைப்பட்ட அமுதனாரைப் பார்த்து "என்னுடைய அநுஷ்டா₂னம் பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂த்துக்கு உபாயமாகாது. உம்முடைய அநுஷ்டா₂னமின்மையும் அதற்குத் தடையாகாது. வெறும் புடவையை தினந்தோறும் தோய்க்காமலிருந்தால் அதற்கு அஶுத்₃தி₄ உண்டாவதுபோலே நான் இவ்வநுஷ்டா₂னத்தைவிட்டால் எம்பெருமானுடைய நிக்₃ரஹரூபமான அஶுத்₃தி₄ உண்டாகிவிடும். பட்டுப்புடவைக்குத் தோய்த்தால் அஶுத்₃தி₄ உண்டாவதுபோலே, நீர் என்னைப்போல் அநுஷ்டா₂னம் செய்ய முயற்சி செய்தீரானல், உமக்கு—பரமபுருஷார்த்த₂த்துக்குத் தடையாயிருக்கும் ஸ்வப்ரவ்ருத்தியாகிற அஶுத்₃தி₄ உண்டாகிவிடும். ஆகையால் நம் இருவருக்கும், அவரவர் நின்ற நிலையிலேயே அநுஷ்டா₂னத்தையோ அநுஷ்டா₂னமின்மையையோ கணிசியாமல் தன் நிர்ஹேதுக க்ருபையாலே எம்பெருமான் பரம புருஷார்த்த₂த்தை அருளுவான் என்று நினைத்திரும்" என்று அருளிச்செய்தார். b மற்றும் சில ஆசார்யர்களும் இதேபோல் சிறியாச்சானிடம் விண்ணப்பம்செய்ய, அவர்களைக் குறித்து " என்னுடைய*

சிலர், 'உம்முடைய அநுஷ்ட$_2$ாநமிருக்கும்படி இது ; நாங்கள் என்செய்யக்கடவோம் ?' என்ன; 'என் படியும் உங்கள்படியுங் கொண்டு காரியமென் ? " ஏதத்$_3$ வ்ரதம் மம " என்றருளிச் செய்தபடியேயன்றோ' என்று அருளிச்செய்தார்.

## நூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை

ப்ரபந்நனுக்கு பு$_3$த்$_3$தி$_4$பூர்வாபசாரம் புகுருகைக்கு வழியில்லை; ப்ரமாத$_3$த்தாலே புகுந்ததாகில், ஜ்ஞாநமும் அநுதாபமும் ஒரு தலையாக அபு$_3$த்$_3$தி$_4$பூர்வமாமித்தனை; அநுதாபம் பிறந்ததில்லையாகில் ஜ்ஞாநம் பிறந்ததில்லையாகக்கடவது என்று ஜீயரருளிச்செய்தார்.

## நூற்றுமுப்பதாம் வார்த்தை

நம்பிள்ளை நஞ்சீயரை, " இதரோபாயங்களுக்கு ப்ரமாணங்களும் ப$_3$ஹுளமாய் அநுஷ்ட$_2$ாநங்களும் ப$_3$ஹுளமாயிருக்க, a இதுக்கு ப்ரமாணமும் சுருங்கி அநுஷ்ட$_2$ாதாக்களும் சுருங்கியிராநின்றது; இதுக்கு அடியென் ?" என்று

---

அநுஷ்ட$_2$ானமோ உங்களுடைய அநுஷ்ட$_2$ானமின்மையோ, பரம புருஷார்த்த$_2$த்தை ஸாதி$_4$த்துத் தரப்போவதுமில்லை, தடுக்கப்போவதுமில்லை. 'ஶரணமடைந்தவனை ரக்ஷிப்பதே என் வ்ரதம்' என்று அருளிச்செய்த எம்பெருமானேயன்றோ நம் அனைவரையும் ரக்ஷிக்கப் போகிறான்; ஆகையால் கவலைப்படவேண்டாம்" என்று அருளிச்செய்தார்.

**நூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை**

எம்பெருமான் திருவுள்ள உகப்பையே தன் உகப்பாகக்கொண்ட ப்ரபந்நன் தன் நெஞ்சறிய அபசாரங்களைச் செய்யமாட்டான்; செய்தால், எம்பெருமானுடைய உகப்பு நீங்கிச் சீற்றம் உண்டாகிவிடும் என்று அறிந்தவனாகையாலே. கவனமின்மையால் ஒருகால் அபசாரம் ஏற்பட்டுவிட்டால், உணர்ந்தவுடன் அநுதாபமும் ஏற்படுமாகையாலே, எம்பெருமான் அதை நெஞ்சறியச்செய்த பிழையாகக் கொள்ளாமல், அறியாமல் செய்த பிழையாகவே கொள்ளுவான். அநுதாபம் ஒருவனுக்குப் பிறக்கவில்லையாகில், எம்பெருமானுடைய உகப்பே தம் உகப்பு என்னும் ஜ்ஞானமே உண்டாகாமையாலே அவன் ப்ரபந்நனேயாகமாட்டான் என்று கருத்து.

**நூற்றுமுப்பதாம் வார்த்தை**

a இதுக்கு - ப்ரபத்திக்கு. b ஆசார்யன் நினைவுக்குமேல் ஶிஷ்யனுக்கு வேறு ப்ரமாணம் தேவையில்லை. c ப்ரத்யக்ஷமான லோக

கேட்க; "b நான் நினைத்திருக்குமதுக்கு அவ்வருகு உமக்கு வேண்டுவதொன்றுண்டோ? c இருவர்கூடி ஓராற்றிலே இழிந்து போகாநின்றால் முந்தினவன் முந்தாதவன் கையைப்பிடிக்கும்போது இதுக்கொரு ப்ரமாணாபேக்ஷையுண்டோ? d வேண்டில் ப்ரமாணங்களாலும் ஒரு குறையில்லை; e இனி ப்ரமாணங்கள் காணவேணுமென்று நினைத்திரேன்; f இருந்ததேகுடியாக ஸம்ஸாரிகளாய், நாலத்திரண்டு உத்தமாதி$_4$காரிகளாயிருந்தால் அவர்களுக்கு ஒரு உத்கர்ஷத்தையும், இவர்களுக்கொரு அபகர்ஷத்தையுமுண்டோ, ஸ்வரூபப்ராப்தமென்னுமித்தனையொழிய? 'ஸ்வர்க்க$_3$காமோ யஜேத' என்கிறபடியே ஸ்வர்க்க$_3$ப$_2$லத்தை அநுப$_4$விக்க ஸாத$_4$நமாக ஶாஸ்த்ரஞ்சொல்லாநிற்கச் செய்தேயும் ஓரூரில் ஒருவனையே யஜித்தான் என்றுநின்றது; இதுக்கோ உமக்கு ஆள்பற்றப் புகுகிறது?" என்று அருளிச் செய்ய, பிள்ளையும் க்ருதார்த்த$_2$ரானார்.

---

த்$_3$ருஷ்டாந்தமும் உண்டு என்று கருத்து. d "முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்$_3$யே" [ஶ்வே 6-18] "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:" [தை-நா 50] முதலான ப்ரமாணங்களை நினைக்கிறார். e நம் ஆழ்வார்களுககும் ஆசார்யர்களுக்கும் ஸ்வாநுப$_4$வஸித்$_3$த$_4$மான இவ்விஷயத்துக்கு ப்ரமாணம் தேவையில்லை என்று கருத்து. f இனி இது தொடங்கி அநுஷ்டா$_2$தாக்கள் சுருங்கியிருக்கிறார்களே என்னும் கேள்விக்குப் பதில் உரைக்கிறார். "ஸர்வத: கரவீராதீ$_3$ந் ஸூதே ஸாக$_3$ரமேக$_2$லா। ம்ருதஸஞ்ஜீவிநீ யத்ர ம்ருக்$_3$யமாண து$_3$ர்லபா$_3$ம் க$_3$தா ||" [ஸுபாஷிதநீவீ] [கடல் சூழ்ந்த இம்மண்ணுலகம் எங்கு பார்த்தாலும் கள்ளி சப்பாத்தி முதலான பயனற்ற பொருள்களையே மிகுதியாக விளையச்செய்கிறது. செத்தவர்களைப் பிழைக்க வைக்கும் மூலிகை இவ்வுலகில் தேடிக் கண்டுபிடிக்கவேண்டியதாகவேயிருக்கிறது] என்கிற ரீதியில் உலகில் ஸம்ஸாரிகளே பெரும்பான்மையினராயிருப்பதால் அவர்களுக்கு ஓர் சிறப்பில்லை. உத்தமப்ரபந்நர்கள் நாலிரண்டு பேர்களே இருப்பதால் அவர்களுக்குத் தாழ்வில்லை. இது உலகின் இயல்வு என்றே கொள்ளவேணும். ஸ்வர்க்க$_3$ஸாத$_4$னமான ஜ்யோதிஷ்டோமாதி$_3$களுக்கே அதி$_4$காரிகள் குறைவாயிருக்கும்போது உத்தமபுருஷார்த்த$_2$மான மோக்ஷத்தின் பொருட்டு உத்தமோபாயமான எம்பெருமானைப் பற்றியிருப்பவர்கள் குறைவாகவேயிருப்பர்கள் என்பதைச் சொல்லவேணுமோ? என்று கருத்து.

## நூற்றுமுப்பத்தோராம் வார்த்தை

ப₄ட்டர் a திருவணையாட எழுந்தருளாநிற்க, பாதிரிக்கொடியிலே b போதுவைகி வந்து ஒரு வேடனகத்திலே புக, அவன் தானிருந்த ஆஸநத்தையும் வாங்கிப் பொகட்டு ஒரு கட்டிலையுங்கொடுக்க, அதிலே எழுந்தருளியிருந்து;—"இவன் நம்முடைய வைப₄வத்தையறிந்து செய்தானல்லன், க்₂யாதிபரனாய்ச் செய்தானல்லன், நம்மாலே உபக்ருதனாய்ச் செய்தானல்லன், தன்னுடைய க்₃ருஹத்திலே புகுந்தோமென்கிற அபி₄மாநமிறே அவன் இது செய்யவேண்டிற்று. ஈஶ்வரன் தன் அபி₄மாநத்திலே ஒதுங்கினாரை என்னினைத்திருக்கிறானோ?" என்று அநுஸந்தி₄த்தருளி, "ஐயா! இற்றைக்கு விஶேஷமென்?" என்று கேட்டருள, "நாயன்றே! காட்டிலே வேட்டைக்குப் போனேன்; அங்கே ஒரு முசல்குட்டியைப் பிடித்தேன்; அதினுடைய தாயானது பின்னே முடுகிவந்து ஒரு c எரிவெளியானவாறே முன்னே வந்து கும்பிட்டுக்கொண்டு கிடந்தது; எனக்கு அத்தைக்கண்டு வ்யஸநமாய்க் குட்டியை விட்டேன்" என்றான்; இதைக்கேட்டு "இது சேதநனுக்கில்லாததொன்று; பரமசேதநனுக்குள்ளதொன்று; d 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று இம்முசலுக்கு உபதே₃ஶித்தாரில்லை; e 'அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா' என்று வேடனுக்கு உபதே₃ஶித்தாரில்லை, அவ்யவத₄ாநேந ஶரணாகதி ப₂லித்ததே! இதொரு ப்ரமாண ப்ரஸித்₃தி₄யென்?" என்று அருளிச்செய்தார்.

## நூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

எம்பெருமானார், புழுவன்காலத்திலே வெள்ளைசாத்தி மேல்நாட்டுக்கு எழுந்தருள; அங்கே நம்பெருமாள் ப்ரஸாத₃ங்

---

**நூற்றுமுப்பத்தோராம் வார்த்தை**

a திருவணையாடுதல் - ஸேதுஸ்நானம் செய்தல். b போதுவைகி- அஸ்தமனமாகி. c எரிவெளி - பொட்டல் வெளி. d "என்னையொருவனையே உபாயமாகப் பற்றுவாய்" [கீ₃தை 18-66] என்னும் சரமஶ்லோகம். e "ஶரணமடைந்த விரோதி₄ பிராணனை விட்டும் நல்லவனால் காப்பாற்றத்தக்கவன்" [ரா-யு 18-29]

கொண்டு காணவந்த அம்மங்கியம்மாளுக்கு உடையவர் ஒருரு த்₃வயத்தை அருளிச்செய்தார். a பார்ஶ்வஸ்த₂ர் b 'இதுவென் ஜீயா! அங்கீ₃கரித்தருளிற்றே' என்ன; c 'இத்தனைதூரம் பெருமாள் ப்ரஸாத₃ங்கொண்டு வந்த இவர்க்கு த்₃வயமொழிய ப்ரத்யுபகாரமுண்டோ?' என்று அருளிச்செய்தார்.

## நூற்றுமுப்பத்துமூன்றும் வார்த்தை

இதரோபாயங்களிற் காட்டில் ப்ரபத்திக்கு வாசி பத்து;- இதரோபாயங்கள் அதி₄க்ருதாதி₄காரமாகை, விதி₄பரதந்த்ரனுய்ச்செய்கை, ப்ராரப்₃த₄ கர்மாவஸாநத்திலே ப₂லமாகை,

---

### நூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

a பார்ஶ்வஸ்த₂ர் - அருகிலிருப்பவர்கள். b ஏற்கனவே த்₃வயார்த்தோ₂பதே₃ஶபூர்வகமாக உம்மால் அங்கீ₃கரிக்கப்பெற்ற சிஷ்யரான இவருக்கு, மறுபடியும் த்₃வயார்த்தோ₂பதே₃ஶம் செய்வானென்? என்று கருத்து. c இத்தனை தூரம் நடந்து வந்து நம்பெருமாள் ப்ரஸாத₃ம் கொண்டுவந்த இவர்க்கு த்₃வயார்த்தோ₂பதே₃ஶமொழிய, தாம் செய்யக்கூடிய கைம்மாறு வேறு இல்லை என்று கருத்து.

### நூற்றுமுப்பத்துமூன்றும் வார்த்தை

மற்ற உபாயங்களைக் காட்டிலும் எம்பெருமானையே உபாயமாக உறுதிகொள்வதாகிற ப்ரபத்திக்குப் பத்து சிறப்புக்கள் உள்ளன. அவையாவன— (1) ப₄க்தி முதலான மற்ற உபாயங்களில் வேத₃ாத்₄யயனம் செய்வதற்குத் தகுதியுள்ள த்ரைவர்ணிகர்கள் (ப்₃ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்யர்கள்) முதலான சிலர்க்கே அதி₄காரமுண்டு. ப்ரபத்தியோவெனில் அவர்களோடு ஸ்த்ரீஶூத்₃ரர் முதலான எல்லா மனிதர்களுக்கும் க₃ஜேந்த்₃ரன் போன்ற அறிவுடைய விலங்குகளுக்கும் கூட அநுஷ்டி₂க்கத்தக்கதாயிருக்கும். (2) மற்ற உபாயங்கள் "உபாஸீத" முதலான ஶாஸ்த்ரவிதி₄களுக்கு வஶப்பட்டுச் செய்ய வேண்டியவையேயொழிய நம் பூர்வாசார்யர்களால் அநுஷ்டா₂னத்தின் மூலமோ உபதே₃ஶத்தின் மூலமோ நமக்குக் காட்டப்பட்டவையல்ல. ப்ரபத்தியானது அப்படியல்லாமல், எல்லா ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும் அநுஷ்டா₂னத்தின் மூலமும் உபதே₃ஶத்தின் மூலமும் காட்டப்பட்டது. (3) மற்ற உபாயங்கள் ப்ராரப்₃த₄கர்மம் எவ்வளவு ஜன்மங்களுக்குப் பிறகு முடிகிறதோ, அந்தக்கடைசி ஜன்மத்தின் முடிவில் ப₂லமளிப்பவை. ப்ரபத்திநிஷ்ட₂னுக்கோவெனில், "மரணமானால்

அந்திமஸ்ம்ருதி வேணுமென்கை, அசேதநமாகை, ஸாத்₄ய மாகை,ப₂லங்கூட(த்துணை)?வேணுமென்கை,ப₂லப்ராப்திக்கு ஈஶ்வரனை அபேக்ஷிக்கை, ஸ்வரூபவிரோதி₄யாகை, ப்ராப்யத்துக்கு விஸத்₃ருஶமாகை; இது ஸர்வாதி₄காரமாகை, ஆசார்யருசிபரிக்₃ரஹமாகை,தே₃ஹாவஸாநத்திலே ப₂லமாகை; அந்திமஸ்ம்ருதி நிரபேக்ஷமாகை, பரமசேதநமாகை, ஸித்₃தே₄ாபாயமாகை,

---

வைகுந்தம் கொடுக்கும் பிரான்'' [திருவாய் 9-10-5] என்கிறபடியே அந்த ஜன்மத்தின் முடிவிலேயே ப₂லம் ஏற்படுகிறது. (4) மற்ற உபாயங்கள் எந்த ஜன்மத்தில் அந்திமஸ்ம்ருதி ஏற்படுகிறதோ அந்த ஜன்மத்தில்தான் ப₂லமளிக்கும். ஆகையால் மற்ற உபாயங்கள் ப₂லமளிப்பதற்கு அந்திம ஸ்ம்ருதி அவசியம். ப்ரபந்நனுக்கு ''அஹம் ஸ்மராமி'' என்கிற வராஹ சரமஶ்லோகத்தின்படியே, அந்திமஸ்ம்ருதியை எதிர்பாராமல் அந்த ஜன்மத்தின் முடிவிலேயே எம்பெருமான் ப₂லம் அளிக்கின்றுனைகயாலே அந்திமஸ்ம்ருதி அவசியம் இல்லை. (5) மற்ற உபாயங்களைக்கொண்டு ப₂லம்பெறும் போது அசேதனமான அவ்வுபாயங்கள் ப₂லகரணமாயிருந்து ப₂லமளிக்கின்றன. ப்ரபத்திநிஷ்டனுக்கோவெனில் பரமசேதனனாய் ப₂லப்ரத₃னாயிருக்கும் எம்பெருமான் ப₂லகரணமாகவுமிருந்து ப₂லமளிக்கிறான். (6) மற்ற உபாயங்களைக்கொண்டு ப₂லம்பெறும்போது ப்ரயத்னத்தால் ஶ்ரமப்பட்டு ஸாதி₄க்கத்தக்க அவை ப₂லகரணமாயிருந்து ப₂லமளிக்கின்றன. ப்ரபந்நனுக்கு ஸித்₃த₄னான எம்பெருமானே ப₂லகரணமாயிருந்து ப₂லப்ரத₃னாகையாலே ப₂லம் எளிதில் கிடைக்கிறது. (7) ப₄க்தி முதலான மற்ற உபாயங்கள் ப₂லமளிக்கும்போது கர்மயோக₃ம் ஜ்ஞானயோக₃ம் முதலான அங்க₃ங்கள் தேவைப்படுகின்றன. ப்ரபந்நனுக்கு எம்பெருமான் உபாயமாம்போது எந்தத் துணையையும் எதிர்பார்ப்பதில்லை. (8) மற்ற உபாயங்கள் அசேதனமாகையாலே ப₂லனை அளிப்பதற்குப் ப₂லப்ரத₃னான எம்பெருமானை எதிர்பார்த்திருக்கின்றன — ஆகையால் ப₂லகரணம் ப₂லப்ரத₃ம் என்று இரு உபாயங்கள் தேவைப்படுகின்றன. ப்ரபந்நனுக்குப் ப₂லப்ரத₃னான எம்பெருமானே ப₂லகரணமுமாகிறானாகையாலே உபாயம் ஒன்றேயாகிறது. (9) தன் முயற்சியாயிருக்கும் மற்ற உபாயங்கள் சேதனனுடைய அத்யந்தபரதந்த்ரஸ்வரூபத்துக்கு முரண்படுகின்றன. தன் முயற்சியினின்றும் நீங்கி எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவதாயிருக்கும் ப்ரபத்தி சேதனஸ்வரூபத்துக்குப் பொருந்தியிருக்கிறது. (10) பெறப்போகிற மோக்ஷமாகிற ப₂லத்தின் பெருமையைப் பார்த்

ஸஹாயாந்தரநிரபேக்ஷமாகை, ஒன்றாகை, ஸ்வரூபத்தோடு சேருகை, ப்ராப்யத்துக்கு ஸத்₃ருஶமாகை.

## நூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை

a கர்மம் கைங்கர்யமாயிருக்கும் ; ஜ்ஞாநம் ஸ்வரூபமாயிருக்கும்; ப₄க்தி போ₄க₃பரமாயிருக்கும்; ப்ராப்யம் த₄ாரகமாயிருக்கும் ; உக்தி காலக்ஷேபமாயிருக்கும். b உபாயத்தில் அநுஷ்ட₂ாநம் ஸக்ருத் ; இதில் அத்₄யவஸாயம் யாவச்ச₂ரீரபாதம்; உபேயத்தில் ருசி யாவதா₃த்மப₄ாவி.

---

*தால், மற்ற உபாயங்கள் அப்ப₂லத்துக்கு நேர்நிற்கமாட்டாதவையாய், வ்யாஜமாத்திரம் ஆகின்றன. இங்கு எம்பெருமானாகிற ப₂லத்தைப் பெறுவதற்கு எம்பெருமானே உபாயமாகிறான். ஆகையாலே இவ்வுபாயம் ப₂லத்துக்கு நேர்நிற்பதாயிருக்கிறது. இப்படி பத்துவிதமான சிறப்புக்கள் இருக்கிறபடியால் மற்ற உபாயங்களை விட்டு எம்பெருமானையே உபாயமாகப் பற்றவேணும் என்று கருத்து.*

### நூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை

*a ப்ரபந்நனுக்குக் கர்ம ஜ்ஞான ப₄க்தியோக₃ங்கள் கைவிடத் தக்கவையானாலும், உபாயத்வபு₃த்₃தி₄யற்ற அவை கைக்கொள்ளத் தக்கவையுமாகின்றன. அப்படிக் கைக்கொள்ளும்போது கர்மம் இவனுக்கு ப₄க₃வத் கைங்கர்யமாகிறது. ஜ்ஞானம் ஸ்வரூபத்தைத் தெளிய அறிவதற்கு உறுப்பாகிறது. ப₄க்தி ப்ராப்யமான கைங்கர்ய போ₄க₃த்துக்கு உறுப்பான ருசியாயிருக்கிறது. (இம்மூன்றும் முமுக்ஷுப்படி 271-ம் சூர்ணையிலும் அதன் வ்யாக்₂யானத்திலும் விவரிக்கப்பட்டது) ப்ராப்யமான கைங்கர்யமே ப்ரபந்நனுக்கு த₄ாரகமாயிருக்கும். த்₃வயத்தை எப்போதும் அநுஸந்தி₄ப்பதே காலக்ஷேபமாயிருக்கும். b ஆசார்யன் த்₃வயத்தை உச்சரிக்க, ஆசார்ய ஸமாஶ்ரயணத்தின் போது ஶிஷ்யன் அதைத் திரும்பச் சொல்லும்போதே ப்ரபத்தியுபாயத்தின் அநுஷ்ட₂ானம் ஆகிவிடுகிறது. ஆகையால் மறுபடியும் உபாயாநுஷ்ட₂ானம் செய்யவேண்டாம். ஆனாலும் அப்போது தொடங்கியதான 'எம்பெருமானே உபாயம்' என்ற அறிவு அந்த ஶரீரம் முடியும் வரையிலும் இருக்கவேண்டும். உபேயமாகிற கைங்கர்யத்தில் ருசி ஆத்மாவுள்ள வரையில் அதாவது நித்யமாய் இருக்கவேண்டும்.*

c ஒரொன்றில் அநுக்தமாய் அவஶ்யம் ஜ்ஞாதவ்யங்களான அர்த்த₂விஶேஷங்களுக்கு விவரணமாகையாலே ரஹஸ்யத்ரயமும் ஒருவனுக்கு ஜ்ஞாதவ்யமாகக் கடவது. எத்தை எது விவரிக்கிறது? என்னில், d ஸவிப₄க்திகமான அகாரத்தை உகார மகாராக்ஷரத்₃வயமும் விவரிக்கிறது; e அவ்வக்ஷரத்₃வயத்தையும் மந்த்ரஶேஷபத₃த்₃வயமும் விவரிக்கிறது; f அப்பத₃த்₃வயத்தையும், த்₃வயத்தில் வாக்யத்₃வயம் விவரிக்கிறது. g அவ்வாக்யத்₃வயத்தையும் ஶ்லோகத்தில் அர்த்த₄த்₃வயமும் விவரிக்கிறது. h அதில் அகாரத்தை அக்ஷரத்₃வயத்தில் ப்ரத₂மாக்ஷரம் விவரிக்கிறது; $h_2$ விப₄க்தியை மகாராக்ஷரம் விவரிக்கிறது; i இதில் ப்ரத₂மாக்ஷரத்தை ப்ரத₂மபத₃ம் விவரிக்கிறது; $i_2$ அநந்தராக்ஷரத்தை அநந்தரபத₃ம் விவரிக்கிறது. j இதில் ப்ரத₂மபத₃த்தை ப்ரத₂மவாக்யம் விவரிக்கிறது; $j_2$ அநந்தரபத₃த்தை, அநந்தர வாக்யம் விவரிக்கிறது; k இதில் பூர்வவாக்யத்தைப் பூர்வார்த்த₄ம் விவரிக்கிறது; $k_2$ உத்தரவாக்யத்தை உத்தரார்த்த₄ம் விவரிக்கிறது.

---

c திருமந்த்ரம், த்₃வயம், சரமஶ்லோகம் என்னும் மூன்றும் ஒன்றுக்கு மேல் ஒன்று விவரணமாயுள்ளன. ஒன்றில் இல்லாததாய் அவஶ்யம் அறியவேண்டியதான அர்த்த₂ங்களைச் சொல்லுவதன்மூலம் ஒன்றுக்கு மேல் ஒன்று விவரணமாயிருக்கையாலே இந்த மூன்று ரஹஸ்யத்தின் பொருளையும் ஒவ்வொருவனும் அறியவேணும், d இதுமுதல் $o_2$ வாக்யம் ஈறாக ரஹஸ்யத்ரயத்தில் எதை எது விவரிக்கிறது என்பதை விளக்குகிறார். d, h, $h_2$ முதலில் ப்ரணவத்தில் முதல் அக்ஷரமான அகாரத்தை இரண்டாம் அக்ஷரமான உகாரமும், முதல் அக்ஷரத்தில் மறைந்து நிற்கும் நாலாம் வேற்றுமையை மூன்றும் அக்ஷரமான மகாரமும் விவரிக்கிறது என்கிறார். e, i, $i_2$ உகாரத்தை 'நம:' பத₃மும், மகாரத்தை 'நாராயணாய' பத₃மும் விவரிக்கிறது என்கிறார். f, j, $j_2$ நம:பத₃த்தை த்₃வயத்தில் பூர்வவாக்யமும், 'நாராயணாய' பத₃த்தை த்₃வயத்தில் உத்தரவாக்யமும் விவரிக்கிறது என்கிறார். g, k, $k_2$ த்₃வயத்தில் பூர்வவாக்யத்தைச் சரமஶ்லோகத்தில் பூர்வார்த்த₄மும், உத்தரவாக்யத்தை உத்தரார்த்த₄மும் விவரிக்கிறது என்கிறார்.

l இதில் ஶேஷத்வ ப்ரதிஸம்ப₃ந்தி₄யைச் சொல்லுகிற அகாரத்துக்கு அநந்யஶேஷத்வவாசகமான உகாரம் விவரணமாகிறபடியென்னென்னில்;- அகாரவாச்யனுடைய ஶேஷித்வம் ஆஶ்ரயாந்தரங்களிலும் கிடக்குமோ, அநந்யஸாத₄ாரணமாயிருக்குமோ? என்று ஸந்தி₃க்₃த₄மானால், அதினுடைய அநந்யஸாத₄ாரணத்வ ப்ரகாஶகமாகையாலே, உகாரம் அகாரவிவரணமாகிறது. எங்ஙனேயென்னில்;- உகாரத்தில் சொல்லுகிற சேதநனுடைய அநந்யார்ஹ ஶேஷத்வம் ஸித்₃தி₄ப்பது— அதுக்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஶேஷித்வம் ஓரிடத்திலே இளைப்பாறில். அங்ஙனன்றியிலே அநேகம் ஶேஷிகளாகில் அநந்யார்ஹஶேஷத்வம் ஸித்₃தி₄யாது; அந்யராயிருப்பார் சில ஶேஷிகளுண்டாகில் அந்யஶேஷத்வம் ஸித்₃தி₄ப்பதொழிய அநந்யார்ஹஶேஷத்வம் ஸித்₃தி₄யாதே; ஆகையாலே அகாரவாச்யனுடைய ஸமாப்₄யதி₄கத₃ாரித்₃ர்யத்தைச் சொல்லிற்றாயிற்று. l₂ சதுர்த்தி₂யிற்சொல்லுகிற ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயவிஶேஷப்ரகாஶகமாய்க்கொண்டு விவரணமாகிறது மகாரம்; நிராஶ்ரயமான த₄ர்மத்துக்கு ஸ்தி₂தியில்லையே. m ப₄க₃வத்₃வ்யதிரிக்தரைத் தன்னோடு பிறரோடு வாசியற அந்யராகச் சொல்லி, அவர்களுக்கு அநந்யார்ஹன் இச்சேதநனென்கிறது உகாரம்; இதில் கழியுண்கிற தே₃வதாந்தராதி₃ மாத்ரத்தாலே

---

l இதில் h வாக்யத்தை விவரிக்கிறார். l₂ இதில் h₂ வாக்யத்தை விவரிக்கிறார். m இதில் i வாக்யத்தை விவரிக்கிறார். m₂ இதில் i₂ வாக்யத்தை விவரிக்கிறார். n இதில் j வாக்யத்தை விவரிக்கிறார். n₂ இதில் j₂ வாக்யத்தை விவரிக்கிறார். o இதில் k வாக்யத்தை விவரிக்கிறார். o₂ இதில் k₂ வாக்யத்தை விவரிக்கிறார்.

l அகாரம் ஸர்வஶேஷியைக் குறிப்பதன்மூலம் ஒத்தாரும் மிக்காரும் இல்லாத எம்பெருமானைக் காட்டுகிறது என்று அநந்யார்ஹ ஶேஷத்வத்தைச் சொல்லும் உகாரம் விவரிக்கிறது என்று கருத்து. l₂ நாலாம் வேற்றுமையில் சொல்லுகிற ஶேஷத்வம் ஜீவனிடத்தில் இருக்கிறது என்று காட்டுவதன்மூலம் மகாரம் சதுர்த்தி₂யை விவரிக்கிறது. m அநந்யார்ஹஶேஷத்வத்தைச் சொல்லுகிறது உகாரம். இது அந்யஶேஷத்வத்தை மாத்திரம் கழிப்பதாகாமல், தனக்குத்

அந்யஶப்₃த₃த்துக்குப் பூர்த்தியில்லாமையாலே அவ்வந்யஶப்₃த₃த்தில் அந்விதமான தன்னையும் கழித்து அநந்யார்ஹதையைப் பூரிக்கிற முக₂த்தாலே உகாரவிவரணமாகிறது நமஶ்ஶப்₃த₃ம்; "அஹமபி ந மம" என்கிறபடியே ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத அத்யந்தபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது-நமஶ்ஶப்₃த₃த்திலேயிறே. ஆகையாலே உகாரவிவரணமாகிறது நமஶ்ஶப்₃த₃ம். ௱₂ ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயவிஶேஷ ப்ரகாஶகமான மகாரவாச்யனுடைய ஶேஷத்வபூர்த்தி ப்ரகாஶிப்பது, "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" என்கிறபடியே கிஞ்சித்காரத்தாலே(யாதல்?) ஆகையாலே, கிஞ்சித்கார ப்ரகாஶகமாய்க்கொண்டு மகாரவிவரணமாகிறது நாராயணபத₃ம்; ௱ அத்யந்தபாரதந்த்ர்யப்ரயுக்தமாய் வருகிற உபாயவிஶேஷத்தினுடைய ஸ்வரூபமென்ன, இதில் இழிகைக்கு ஏகாந்தமான துறையென்ன, அவ்வுபாயவிஷயமாகச் செய்ய வேண்டும் அம்ஶமென்ன, இவற்றை ப்ரகாஶிப்பிக்கையாலே நமஶ்ஶப்₃த₃விவரணமாகிறது-த்₃வயத்தி ல்பூர்வவாக்யம்; ௱₂கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄ ஒரு மிது₂நமென்னுமிடத்தை(க்காட்டி?) அதுக்குக் களையான அம்ஶத்தையும் கழித்துத் தருகையாலே நாராயணஶப்₃த₃த்துக்கு விவரணமாகிறது உத்தரவாக்யம்;

---

தானும் ஶேஷமன்று என்று தன்னுடைய அத்யந்த பாரதந்த்ர்யத்தைக் காட்டுவதன்மூலம் நம:பத₃ம் உகாரத்தை விவரிக்கிறது. ௱₂ மகாரத்தால் சொல்லப்படும் ஜீவனுடைய ஶேஷத்வம் கைங்கர்யம் செய்யாவிடில் ஸித்₃தி₄க்காதாகையாலே, அக்கைங்கர்யத்தைக் காட்டும் 'நாராயணாய' பத₃ம் மகாரவிவரணமாகிறது. ௱ நம:பத₃த்தால் சொல்லப்படும் அத்யந்த பரதந்த்ரனான சேதனனுக்கு எம்பெருமானே தகுந்த உபாயமென்றும், அவனுடைய திருவடிகளையே உபாயமாகப் பற்றவேண்டும் என்றும் காட்டுவதன்மூலம், த்₃வயத்தின் பூர்வவாக்யம் நம:பத₃ விவரணமாகிறது. ௱₂ நாராயணாய என்னும் பத₃த்தில் சொல்லப்பட்ட கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்வது பிராட்டியும் பெருமாளுமான மிது₂னமென்றும், அக்கைங்கர்யத்திலும் தனக்கென்று இழிகை கைவிடத்தக்கது என்றும் காட்டுவதன் மூலம் அப்பத₃த்தை த்₃வயத்தின் உத்தரவாக்யம் விவரிக்கிறது.

o அவ்வுபாயஸ்வீகாரம் ஸாத₄நாந்தர நிவ்ருத்தி பூர்வகமாகை யாலே தத்ப்ரகாஶகமாய்க்கொண்டு பூர்வவாக்யத்துக்கு விவரண மாகிறது - பூர்வார்த்த₄ம் ; o₂ உத்தரவாக்யத்தில் சொன்ன ப்ராப்யஸித்₃தி₄ விரோதி₄நிவ்ருத்தி பூர்வகமாகக் கடவதென்று விவரிக்கிறது – உத்தரார்த்த₄ம் ;

p ஸர்வாதி₄காரமாயும், அதி₄க்ருதாதி₄காரமாயும் ஆசார்ய ருசி பரிக்₃ருஹீதமாயு மிருந்துள்ள வாக்யத்₃வயத்தில் பூர்வ வாக்யம் ப்ராபகமாயும் உத்தரவாக்யம் ப்ராப்யமாயுமிருந்ததே யாகிலும், பூர்வவாக்யம் பத₃த்ரயாத்மகமாயும் அர்த்த₂த்ரயாத் மகமாயுமிருக்கும். இதில் - "ஸ்ரீமத்" என்கிற ப்ரதே₃ஶம் புருஷகாரம் ; "ஶரணம் ப்ரபத்₃யே" என்கிற பத₃ம் அதி₄காரி க்ருத்யம்; நடுவு "நாராயண சரணௌ"என்கிற பத₃ம் உபாயம்;

---

o த்₃வயத்தின் பூர்வவாக்யத்தில் சொல்லப்பட்ட உபாயமான எம் பெருமானை ஸாத₄நாந்தரங்களை விட்டே பற்றவேண்டும் என்று காட்டுவதன்மூலம் அவ்வாக்யத்தைச் சரமஶ்லோகத்தில் பூர்வார்த்த₄ம் விவரிக்கிறது. o₂ த்வயத்தில் உத்தரவாக்யத்தில் சொன்ன கைங்கர் யம் எல்லாப் பாபங்களும் நீங்கின பின்பே ஏற்படும் என்று விவரிப் பதன் மூலம் அவ்வாக்யத்தைச் சரமஶ்லோகத்தின் உத்தரார்த்த₄ம் விவரிக்கிறது.

p ஸ்த்ரீஶூத்₃ராதி₃களுக்கும் அறிவுடைய விலங்குகளுக்குங்கூட ஶரணமடையத் தகுதியுண்டாகையாலே அனைவர்க்கும் அதி₄கார முள்ளதாய், அத்யந்த பாரதந்த்ர்யஜ்ஞானமுடையவர்களுக்கே ஶரண மடையத் தகுதி உண்டாகையாலே, சிலர்க்கே அதி₄காரமுண்டு என்றும் சொல்லலாம்படி இருப்பதாய், நம் ஆசார்யர்கள் விரும்பிக் கைக்கொண்டதான த்₃வயமந்த்ரத்தில் முதல் வாக்யம் உபாயத் தைச் சொல்லுவதாகவும் பின் வாக்யம் உபேயத்தைச் சொல்லுவ தாகவும் இருந்தபோதிலும், இரண்டு வாக்யங்களும் ஒவ்வொன்றும் மும்மூன்று பத₃ங்களை உடையதாய் மும்மூன்று அர்த்த₂ங்களைச் சொல்லுவதாயுமிருக்கும். முதல்வாக்யத்தில் 'ஸ்ரீமத்' என்கிற பத₃ம் புருஷகாரமான பிராட்டியையும், 'ஶரணம் ப்ரபத்₃யே' என்கிற பத₃ம் ஶரணமடைபவன் செய்யவேண்டிய கார்யத்தையும், நடுவிலுள்ள 'நாராயண சரணௌ' என்கிற பத₃ம் உபாயத்தையும் கூறுவது.

உபாயம் புருஷகாரஸாபேக்ஷமாயும் அதி₄காரி ஸாபேக்ஷமாயுமிருக்கும்; ப₂லத்தில் வந்தால் அந்யநிரபேக்ஷமாயிருக்கும்: உத்தரவாக்யமும் பத₃த்ரயாத்மகமாயிருக்கும்; இதில் "ஆய" என்கிறவிடம் - கைங்கர்யத்தைச் சொல்லுகிறது; இதுக்குக் கீழ் கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யைச் சொல்லுகிறது; மேலில் பத₃ம் கைங்கர்யத்தில் களையைச் சொல்லுகிறது.

## நூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை

a நம்மாசார்யர்கள், திருமந்த்ரத்தையும் சரமஶ்லோகத்தையும் த்₃வயத்திலே அநுஸந்தி₄க்கும்படி ; - இதுதான் உபாயோபேயமிரண்டையும் சொல்லுகையாலே த்₃வயமென்கிறது. திருமந்த்ரத்தில் b உபேயப்ராதா₄ந்யேந சொல்லுகிற அர்த்த₂த்தையும், சரமஶ்லோகத்தில் c உபாயப்ராதா₄ந்யேந சொல்லுகிற அர்த்த₂த்தையும் இதில் பூர்வவாக்யத்தாலும் உத்தரவாக்யத்தாலுஞ் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்,-

---

உபாயமாகிற எம்பெருமான் ஆஶ்ரயணத₃ஶையில் பிராட்டியின் புருஷகாரச்செயலையும், ஜீவன் தன்னை உபாயமாகப் பற்றுவதையும் எதிர்பார்த்திருந்தபோதிலும், ப₂லனையளிக்கும்போது பிராட்டியின் உதவியையோ ஜீவனிடம் ஏதேனும் கைம்முதலையோ எதிர்பார்ப்பதில்லை என்கிற அர்த்த₂த்தைப் பூர்வவாக்யம் அறிவிக்கிறது. மூன்று பத₃மாயிருக்கும் உத்தரவாக்யமும் மூன்றர்த்த₂ங்களைச் சொல்லுகிறது. 'ஆய' என்னும் பத₃த்தால் கைங்கர்யத்தையும், அதற்குமுன் உள்ள பகுதியால் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் மிது₂னத்தையும், பின்னுள்ள 'நம:' பத₃த்தால் கைங்கர்யத்தில் களையையறுப்பதையும் சொல்லுகிறது.

### நூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை

a இவ்வார்த்தை—திருமந்த்ரமும் த்₃வயத்தின் உத்தரவாக்யமும், சரமஶ்லோகமும் த்₃வயத்தின் பூர்வவாக்யமும் ஒரே பொருளுடையவை என்று நிரூபிக்கிறது. அதில் முதல் பாரா திருமந்த்ரம் த்₃வயத்தின் உத்தரவாக்யத்தில் அடங்கியிருப்பதைச் சொல்லுகிறது. b,c திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் உபாயமும் உபேயமுமாகிற இரண்டுமே சொல்லப்பட்டபோதிலும் திருமந்த்ரத்துக்கு உபேயத்தைச் சொல்லுவதிலேயும், சரமஶ்லோகத்துக்கு உபாயத்தைச் சொல்லுவதிலேயும்

அகாரத்தில் d ஸ்வரூபாநுப₃ந்தி₄த்வத்தால் சொல்லுகிற லக்ஷ்மீ ஸம்ப₃ந்த₄த்தையும், நாராயணபத₃த்திலே பிராட்டிக்கும் அந்தர்ப்ப₄ாவமுண்டாகையாலே அவ்வழியாலே வருகிற லக்ஷ்மீ ஸம்ப₃ந்த₄த்தையும், த்₃வயத்தில் உத்தரவாக்யத்தில் "ஸ்ரீமதே" என்கிற பத₃த்தாலே சொல்லுகிறது. அகாரத்திலே சொல்லு கிற ஸர்வரக்ஷகத்வத்தையும், இதின் விவரணமான நாரா யணஶப்₃த₃ார்த்த₂த்தையும், உத்தரவாக்யத்தில் நாராயண பத₃த்தாலே சொல்லுகிறது. அகாரத்திற்சொல்லுகிற e தாத₃ர்த்த்₂யத்தையும், மகாரத்திற் சொல்லுகிற ஜீவஸ்வ ரூபத்தையும், f அவத₄ாரணத்தாலே சொல்லுகிற அந்ய ஶேஷத்வ நிவ்ருத்தியையும், இதின் விவரணமான நமஸ் ஸில் சொல்லுகிற அத்யந்தபாரதந்த்ர்யத்தையும், g தத்ப்ர வ்ருத்தியை ப்ரார்த்தி₂க்கிற சதுர்த்தி₂யர்த்த₂த்தையும், உத்தரவாக்யத்தில் சதுர்த்தி₂யாலே சொல்லுகிறது; திருமந்த் ரத்தில் நமஶ்ஶப்₃த₃ார்த்த₂மான அஹங்காரமமகார நிவ் ருத்தியை உத்தரவாக்யத்தில் நமஸ்ஸாலே சொல்லுகிறது ; ஆக, திருமந்த்ரம் த்₃வயத்தில் உத்தரவாக்யத்திலே அந் வயித்தது.

h இனி சரமஶ்லோகம் பூர்வவாக்யத்திலே அந்வயிக்கும் படி சொல்லுகிறது ; - "மாம்" என்கிற பத₃த்தில் ஸ்வரூபாநு ப₃ந்தி₄த்வத்தாலே சொல்லுகிற லக்ஷ்மீஸம்ப₃ந்த₄த்தையும்,

---

நோக்கு என்று கருத்து. d ஸ்வரூபாநுப₃ந்தி₄த்வம்-ஸ்வரூபநிரூபகத்வம். அதாவது - க₄டத்தை க₄டத்வத்தைக்கொண்டு மற்ற பொருள்களிலும் வேருக நிரூபிக்கவேண்டியிருப்பதுபோலே, எம்பெருமானை 'ஸ்ரிய:பதி' என்று பிராட்டியின் ஸம்ப₃ந்த₄த்தையிட்டு, திருவில்லாத்தேவர்களைக் காட்டிலும் வேறுபடுத்தி அறியவேண்டியிருக்கும் தனித்தன்மை e தாத₃ர்த்த்₂யம் - மறைந்திருக்கும் நாலாம் வேற்றுமையால் சொல் லப்படும் ஶேஷத்வம். f அவத₄ாரணத்தாலே - ஏகாரப்பொருளையுடைய உகாரத்தாலே. g தத்ப்ரவ்ருத்தி - பாரதந்த்ர்யத்துக்குத் தக்க ப்ர வ்ருத்தியான கைங்கர்யம்.

h இந்தப் பாரா சரமஶ்லோகம் த்₃வயத்தின் பூர்வவாக்யத்தில் அடங்கியிருப்பதைச் சொல்லுகிறது. i இவ்விடத்தில் முமுக்ஷுப்படி

“ அஹம் ” என்கிறவிடத்தில் ஸ்வரூபாநுப₃ந்தி₄த்வத்தாலே சொல்லுகிற லக்ஷ்மீஸம்ப₃ந்த₄த்தையும், த்₃வத்யத்தில் பூர்வ வாக்யத்தில் - ஸ்ரீமத்பத₃த்தாலே சொல்லுகிறது ; “ மாம் ” என்கிற பத₃த்தில் ஸௌலப்₄யத்தையும் “ அஹம் ” என்கிற பத₃த்திற் சொல்லுகிற ஸ்வாமித்வத்தையும் இதில் நாராயண பத₃த்தாலே சொல்லுகிறது; i “ மாம் ” என்கிற பதத்திற் சொல்லுகிற ஸேநாதூ₄ளியும், சிறுச்சதங்கையும், தாங்கின உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், நீட்டின திரு வடிகளுமாய் நிற்கிற விக்₃ரஹத்தை, த்₃வயத்தில், “சரணௌ” என்கிற பத₃த்தாலே சொல்லுகிறது ; ஏகஶப்₃த₃த்தாற் சொல்லுகிற அவத₄ாரணார்த்த₂த்தையும், ஶரண ஶப்₃த₃ார்த் த₂த்தையும், “ ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி ” என்கிற விரோதி₄நிவ்ருத்தியையும், த்₃வயத்தில் ஶரண ஶப்₃த₃த் தாலே சொல்லுகிறது; “வ்ரஜ” என்கிறவிடத்தில் அர்த்த₂த் தையும், “ ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய ” என்கிற அர்த்த₂த்தை யும், “த்வா” என்கிறவிடத்திற் சொல்லுகிற அதி₄காரியையும், “ப்ரபத்₃யே” என்கிற க்ரியாபத₃த்தாலே சொல்லுகிறது. j த₄ர்ம த்யாக₃ம் அங்கேயுண்டோவென்னில்: - உபாயஸ்வீகாரம் உபா யாந்தர நிவ்ருத்தி பூர்வகமாகவல்லது நில்லாமையாலே ஸ்வீகாரஞ்சொன்னவிடத்திலே த்யாக₃ஞ்சொல்லிற்றாயிற்று. ஆக, சரமஶ்லோகம் த்₃வயத்தில் பூர்வவாக்யத்திலே அந்வ யித்தது ; ஆக திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் சொல்லுகிற அர்த்த₂ம் த்₃வயத்திலே சேர அநுஸந்தி₄க்கும்படி சொல்லிற்று ;

k சரமஶ்லோகத்தாலே பூர்வக₂ண்ட₃த்தை விஶதீ₃கரிக் கிறது ; திருமந்த்ரத்தாலே உத்தரக₂ண்ட₃த்தை விஶதீ₃கரிக்

---

[218] சூர்ணையும் அதன் வ்யாக்₂யானமும் அநுஸந்தி₄க்கத்தக்கது.
j சரமஶ்லோகத்தில் ‘ ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய ’ என்று சொல்லப் பட்ட உபாயாந்தர பரித்யாக₃ம் ‘ப்ரபத்₃யே’ என்று உபாயஸ்வீகாரத் தைச் சொல்லுமிடத்திலேயே அநுஸந்தி₄க்கத்தக்கது என்று கருத்து.

k இந்தப் பாரா சரமஶ்லோகம் த்₃வயத்தின் முன் வாக்யத்தையும், திருமந்த்ரம் த்₃வயத்தின் உத்தரவாக்யத்தையும் விவரிக்கும்படியைக்

கிறது ; - "மாம், அஹம்" என்கிற பத₃ங்களில் லக்ஷ்மீஸம்ப₃ந்த₄த்தைப் பூர்வக₂ண்ட₃த்தில் ஸ்ரீமத்பத₃த்தாலே சொல்லுகிறது; "மாம் அஹம்" என்கிற பத₃ங்களில் ஸௌஶீல்யஸர்வஜ்ஞத்வாதி₃களை த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்தில் நாராயணபத₃த்தாலே சொல்லுகிறது ; "மாம்" என்கிற பத₃த்தில் விக்₃ரஹத்தையும், "ஏகம்" என்கிற பத₃த்தில் - அர்த்த₂த: வந்த அவத₄ாரணத்தையும், "சரணௌ" என்கிற பத₃ங்களி(த்தி?)ன் அர்த்த₂ங்களையும், "ப்ரபத்₃யே" என்கிற பத₃த்தாலே சொல்லுகிறது; சரமஶ்லோகத்தில் - ஶரண ஶப்₃த₃த்தில் அர்த்த₂த்தை இங்குத்தை ஶரண ஶப்₃த₃த்தாலே சொல்லுகிறது ; "ஸர்வ த₄ர்மாந், பரித்யஜ்ய, வ்ரஜ, த்வா, ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி, மாஶுச:" என்கிற பத₃ங்களினர்த்த₂ங்களை "ப்ரபத்₃யே" என்கிற பத₃த்தாலே சொல்லுகிறது; அகாரத்தில் ஸ்வரூபாநுப₃ந்தி₄யான லக்ஷ்மீஸம்ப₃ந்த₄த்தையும், நாராயணபத₃த்தில் நாரஶப்₃த₃த்தில் லக்ஷ்மீஸம்ப₃ந்த₄த்தையும், உத்தரக₂ண்ட₃த்தில்"ஸ்ரீமதே"என்கிற பத₃த்தாலே சொல்லுகிறது; அகாரத்தின் அர்த்த₂த்தையும், நாராயணஶப்₃த₃த்தின் அர்த்த₂த்தையும்,இங்குத்தை நாராயணஶப்₃த₃த்திற் சொல்லுகிறது; அகாரத்தில் சதுர்த்தி₂யையும் உத்தரபத₃த்தில் சதுர்த்தி₂யையும், ப்ரணவத்தில் மகாரத்தையும், உத்தரக₂ண்ட₃த்தில் சதுர்த்தி₂யாலே சொல்லுகிறது; ப்ரணவத்தில் மத்₄யமாக்ஷரத்தையும்,நமஸ்ஸில் அர்த்த₂த்தையும், உத்தரக₂ண்ட₃த்தில் நமஸ்ஸாலே சொல்லுகிறது.

## நூற்றுமுப்பத்தாரும் வார்த்தை

a மத்ஸ்யத்தினுடைய ஆகாரமெல்லாம் ஜலமாயிருக்கிறாற்போலே ஸ்ரீமானுடைய வடிவித்தனையும் ஸ்ரீமயமாயிருக்கும்

---

காட்டுகிறது. இந்தப் பாராவில் 'சொல்லுகிறது' என்று ஒவ்வொரு வாக்யத்திலும் வரும் பத₃ம் சுருங்கச் சொல்லுவதைக் காட்டுவதாய், திருமந்த்ரமும் சரமஶ்லோகமும் த்₃வயத்தை விவரிப்பதைக்காட்டுகிறது.

### நூற்றுமுப்பத்தாரும் வார்த்தை

a" எம்பெருமான் உபாயமாம்போது புருஷகாரமாகவும், உபேயமாம்போது தானும் உபேயமாகவும், கைங்கர்யத்தை வளர்ப்பவளாக

என்று பெரியமுதலியாரருளிச்செய்வர்; b ஆசார்யன் ப்ரமாதாவென்றும், அர்ச்சாவதாரம் ப்ரமேயமென்றும், த்₃வயம் ப்ரமாணமென்றும் அருளிச்செய்வர் உய்யக்கொண்டார்; c ஸம்ஸாரவிஷது₃ஷ்டனுக்கு ரஸாயநமாயிருக்குமென்று அருளிச்செய்வர் மணக்கால்நம்பி; d அத₄நனுக்கு மஹாநிதி₄ போலே என்றருளிச்செய்வர் பெரியமுதலியார்; e க்ஷுத்₄ார்த்த னுக்கு அம்ருதபானம்போலே யென்றருளிச்செய்வர் திருமாலை யாண்டான்; f ஸ்தநந்த₄யப்ரஜைக்கு ஸ்தந்யம்போலே யென் றருளிச்செய்வர் திருக்கோட்டியூர்நம்பி; g பதிவ்ரதைக்கு மங்க₃ள ஸூத்ரம்போலே என்றருளிச்செய்வர் பெரியநம்பி; h ராஜகுலத்துக்கு முடியும் மாலையும்போலே இப்ரபந்நனுக்கு

---

வும் அவன் ஜக₃த்காரணமாம்போது இவளும் ஜக₃த்ஸ்ருஷ்டி முதலான வற்றை ப்ரேரணம் செய்பவளாகவும், ஜக₃த்₃வ்யாபார ரஸத்தில் அந்வயிப்பவளாகவும், அவனுடைய பர வ்யூஹ விப₄வ அந்தர்யாமி அர்ச்சாரூபங்கள் அனைத்திலும் அவனைவிட்டுப்பிரியாது கூடியிருப்பவ ளாகவுமிருக்கையாலே மீன் ஜலமயமாய் இருப்பதுபோலே எம்பெருமா னுடைய வடிவம் ஸ்ரீமயமாயிருக்கும்'' என்று பெரியமுதலியாரான நாத₂முனிகள் அருளிச்செய்வர். த்₃வயத்தில் இரண்டு க₂ண்ட₃த்தி லும் ஸ்ரீஶப்₃த₃ம் வந்திருப்பதற்கு இது விளக்கமாகும். இவ்வார்த்தை முழுவதுமே த்₃வயத்தின் விளக்கமாகவும், பெருமையை விளக்குவ தாகவும் இருக்கிறது. b ப்ரமாண ஸாரமாகையாலே த்₃வயம் ப்ரமாணம் என்றும், அதற்கு விஷயம் அர்ச்சாவதாரமாகையாலே அதுவே ப்ரமேயம் என்றும், த்₃வயத்தின் அர்த்த₂த்தை அறிந்து உபதே₃ஶிப்பவன் ஆசார்யனாகையாலே அவனே ப்ரமாதா என்றும் உய்யக்கொண்டார் அருளிச்செய்வர். c ''ஸம்ஸாரமாகிற விஷம் தீண்டப்பெற்றவனுக்கு த்₃வயம் விஷம் தீர்க்கும் மருந்தாயிருக்கும்'' என்று மணக்கால்நம்பி அருளிச்செய்வர். d ''குருடனுக்குப் புதையல் கிடைத்ததுபோலே நமக்கெல்லாம் த்₃வயம்'' என்று ஆளவந்தார் அருளிச்செய்வர். e ''பசியால் வருந்தியவனுக்கு அம்ருதபானம் போலேயிருக்கிறது த்₃வயம்'' என்று திருமாலையாண்டான் அருளிச் செய்வர். f ''கைக்குழந்தைக்குத் தாய்முலைபோன்றிருப்பது நமக்கு 'த்₃வயம்' '' என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர். g ''பதி வ்ரதைக்கு மங்க₃ளஸூத்ரம்போன்றது நமக்கு த்₃வயம்'' என்று பெரியநம்பி அருளிச்செய்வர். h ''ராஜகுலத்துக்கு முடியும் மாலை

த்₃வயோச்சாரணமென்றருளிச்செய்வர் ஸ்ரீபா₄ஷ்யகாரர்; i ஸம்ஸாரத்தில் இவ்வுபாயவிஶேஷம் விலங்கைவிட்டவன் தலையிலே முடியை வைத்தாற்போலே என்றருளிச்செய்வர் எம்பார்; ராஜகுமாரனுக்குக் கர்ப்பூரநிகரம்போலே, ப்ரபந்நனுக்கு ப்ரபத்தியைவிடில் நாக்கு வற்று மென்றருளிச்செய்வர் நம்பிள்ளை; k எலுமிச்சம்பழங்கொடுத்து ராஜ்யம் பெறுவாரைப்போலே என்று பணிப்பர் திருக்குருகைப்பிரான் பிள்ளான்; l கு₃ரு பரம்பரையையொழிந்த ப்ரபத்தியும் ஸாத₄நாந்தரத்தோடொக்குமென்றருளிச்செய்வர் முதலியாண்டான்; m அந்த₄ன் கையிலே சிந்தாமணி வந்தாற்போலே என்றருளிச்செய்வர் பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர்.

---

யும்போலே, அடிசூடுமரசையுடைய ப்ரபந்நனுக்கு இரண்டு வாக்யமுடைய த்₃வயத்தை உச்சரிப்பது'' என்று ஸ்ரீபா₄ஷ்யகாரர் அருளிச்செய்வர். i ''அநாதி₃காலமாக ஸம்ஸாரத்தில் கட்டுண்டு கிடக்கும் நமக்கு எம்பெருமானை உபாயமாகத் தெளிவுபடுத்தும் இந்த த்₃வயம் விலங்கிடப்பட்டவனுக்கு விலங்கை வெட்டிவிட்டு அவன் தலையிலே முடியை வைத்ததுபோலே'' என்று எம்பார் அருளிச்செய்வர். j ''ஸுகுமாரனை (மென்மைமிக்க) ராஜகுமாரன் தன் வாயில் நாக்கு வற்றுமலிருப்பதற்காக அடிக்கடி பச்சைக்கர்ப்பூரத்தை இட்டுக் கொள்வதுபோலே, ப்ரபந்நனுக்கு த்₃வயமாகிற ப்ரபத்தி மந்த்ரத்தை உச்சரிக்காவிடில் நாக்கு வற்றும்'' என்று நம்பிள்ளை அருளிச்செய்வர். k''உதா₃ரனை சக்ரவர்த்தியைப் பார்க்கச் செல்லும்போது, வெறுங் கையோடு செல்லலாகாது என்று அவன் மோந்து பார்ப்பதற்காக ஓர் எலுமிச்சம்பழத்தை எடுத்துச்சென்று கொடுத்து அவனுடைய வண்மையாலே ராஜ்யத்தைப் பரிசாகப் பெறுமிடத்திற்போலே த்₃வயத்தை உச்சரித்து, பரமபுருஷார்த்த₂லக்ஷண மோக்ஷத்தைப் பெறுவது வ்யாஜமென்றும் சொல்லத்தகாததாயிருப்பது'' என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்வர். l ''கு₃ருபரம்பரையை அநுஸந்தி₄க்காமல் ப்ரபத்தி மந்த்ரமான த்₃வயத்தை உச்சரிப்பது ஸாத₄நாந்தராநுஷ்டா₂னம்போலே ஸ்வரூபவிருத்₃த₄மானது'' என்று முதலியாண்டான் அருளிச்செய்வர். m ''குருடன் கையிலே விரும்பியதைக் கொடுக்கும் சிந்தாமணி கிடைத்தாற்போலேயிருப்பது அநாதி₃காலமாக அஜ்ஞானத்தாலே அறிவுக் குருடர்களாயிருக்கும் நமக்கு த்₃வயம் கிடைத்திருப்பது'' என்று பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் அருளிச்செய்வர்.

## நூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

ப்ரத₂மபத₃த்தில் பாணிக்₃ரஹணம், மத்₄யமபத₃த்தாலே உடன் மணநீர்; த்ருதீயபத₃த்திலே சதுர்த்தி₂ படுக்கையுமா யிருக்கும்.

## நூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

க்ஷேத்ரஜ்ஞருக்ருத்யமான வரம்பையிட்டுக்கொடுக்கிறது ப்ரத₂மபத₃ம்; இடைஞ்சல் வாராமல் களைபறித்துக்கொடுக்கிறது மத்₄யமபத₃ம் ; விளைந்து ஸ்வாமிபோ₄க₃ங்கொடுக்கிறது த்ருதீயபத₃ம்.

---

### நூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

36-ஆம் வார்த்தையான பிள்ளையுறங்காவில்லிதாஸர் வார்த்தையில் இவ்வார்த்தை விவரிக்கப்பட்டுள்ளது. அங்கே கண்டுகொள்வது.

### நூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

'அகாரவாச்யனை எம்பெருமானுக்கே உரியவனாக மகாரவாச்யனை அடியேன் இருக்கிறேன்' என்னும் அநுஸந்தா₄னமாயிருக்கும் ப்ரணவமாகிற முதல்பத₃ம் — கைங்கர்யமாகிற பயிர் விளைவதற்கு சேதனனாகிற வயலுக்கு வரப்பிடுவதுபோலிருப்பது. ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்த₂ம் என்னும் மூன்றுக்கும் விரோதி₄களைப் போக்கித்தரும் நடுப்பத₃மான நம:பத₃ம் — அப்பயிருக்கு ஸ்வஸ்வாதந்த்ர்யம் (தனக்குத் தானே உரியவன் என்னும் எண்ணம்), அந்யோபாயத்வம் (தனக்குப் பிறரோ தானோ ரக்ஷகர் என்னும் எண்ணம்), அந்யபோ₄க்₃யத்வம் (தான் பிறர்க்கு போ₄க்₃யன் என்னும் எண்ணம்) என்னும் களைகளைப் பறித்துக்கொடுப்பது. கைங்கர்யமாகிற பயிர் விளைந்து ஸ்வாமியான் எம்பெருமானுக்கு போ₄க₃ம் ஏற்பட்டதைக் காட்டுகிறது மூன்றாவதான நாராயணாயபத₃ம். ஆக இவ்வண்ணமாகப் பத்தியுழவனை எம்பெருமான் அநுப₄விப்பதற்காக ஜீவனாகிற வயலிலே கைங்கர்யமாகிற பயிர் விளைவதைக் காட்டுகிறது திருவஷ்டாக்ஷரமந்த்ரம் என்று கருத்து.

### நூற்றுமுப்பத்தொன்பதாம் வார்த்தை

ரஹஸ்யத்ரயத்துக்கும், தாத்பர்யார்த்த₂ங்களையும் வாக்யார்த்த₂ங்களையும், ப்ரதா₄நார்த்த₂ங்களையும், ஜீவன் அநுஸந்தி₄க்கவேண்டிய அநுஸந்தா₄னங்களையும் காட்டித்தருகிறது இவ்வார்த்தை. எல்லா

## நூற்றுமுப்பத்தொன்பதாம் வார்த்தை

திருமந்த்ரத்துக்குத் தாத்பர்யார்த்த₂மேது, வாக்யார்த்த₂ மேது, ப்ரத₄ாநார்த்த₂மேது, அநுஸந்த₄ாநமேது? என்னில்; தாத் பர்யார்த்த₂ம் ஸகலவேத₃ஶாஸ்த்ர ருசிபரிக்₃ருஹீதம் ; வாக் யார்த்த₂ம் ப்ராப்யஸ்வரூபநிரூபணம்; ப்ரத₄ாநார்த்த₂ம் ஆத்ம ஸ்வரூபநிரூபணம்; அநுஸந்த₄ாநம் ஸம்ப₃ந்த₄ாநுஸந்த₄ாநம். த்₃வயத்துக்குத் தாத்பர்யார்த்த₂மேது, வாக்யார்த்த₂மேது, ப்ர த₄ாநார்த்த₂மேது, அநுஸந்த₄ாநமேது? என்னில்;-தாத்பர்யார்த் த₂ம் ஆசார்யருசிபரிக்₃ருஹீதம் ; வாக்யார்த்த₂ம் ப்ராப்யப்ராபக ஸ்வரூபநிரூபணம் ; ப்ரத₄ாநார்த்த₂ம் மிது₂நகைங்கர்யப்ரா த₄ாந்யம் ; அநுஸந்த₄ாநம் — ஸ்வதோ₃ஷாநுஸந்த₄ாநம்.

---

வேத₃ஶாஸ்த்ரங்களாலும் ஆத₃ரிக்கப்பட்டது என்பது திருவஷ்டா க்ஷரத்துக்குத் தாத்பர்யார்த்த₂ம். ஆசார்யன் விரும்பிக்கைக்கொண்டது என்பது த்₃வயத்துக்குத் தாத்பர்யார்த்த₂ம். ஶரண்யனை எம்பெருமான் விரும்பி உபதே₃ஶித்தது என்பது சரமஶ்லோகத்துக்குத் தாத்பர் யார்த்த₂ம். ப்ராப்யஸ்வரூபத்தை நிரூபிப்பது திருவஷ்டாக்ஷரத்தின் வாக்யார்த்த₂ம் ; கைங்கர்ய ப்ரார்த்த₂னையோடு முடிகையாலே. ப்ராப்யப்ராபகங்கள் இரண்டின் ஸ்வரூபத்தையும் நிரூபிப்பது த்₃வ யத்தின் வாக்யார்த்த₂ம்; த்₃வயத்தின் இரண்டு வாக்யங்களும் முறையே ப்ராபகத்தையும் ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷிக்கையாலே. ப்ராபக ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷிப்பது சரமஶ்லோகத்துக்கு வாக் யார்த்த₂ம்; தான் ஸர்வபாபவிமோசனம் பண்ணலாம்படி உபாயாந் தரங்களை விட்டு, தன்னை உபாயமாகப் பற்றச் சொல்லுகையாலே. திருவஷ்டாக்ஷரத்துக்கு ஸங்க்₃ரஹமான ப்ரணவம் அகாரவாச்யனுக்கே அடிமைப்பட்டிருப்பவன் மகாரவாச்யனான ஜீவன் என்று ஆத்மஸ்வ ரூபத்தை நிரூபிக்கையாலே, திருவஷ்டாக்ஷரத்துக்கு ஆத்மஸ்வரூப நிரூபணமே ப்ரத₄ாநார்த்த₂மாகிறது. மிது₂நகைங்கர்யத்தை ப்ரார்த் தி₂ப்பதாக முடிகையாலே, அதன் ப்ராத₄ாந்யத்தைக் காட்டுவதே த்₃வயத்துக்கு ப்ரத₄ாநார்த்த₂ம், 'மாம்' என்றும் 'அஹம்' என்றும் ஈஶ்வர ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்து, பூர்வார்த்த₄த்தாலே ஈஶ்வரனை உபாயமாகக் காட்டி, உத்தரார்த்த₄த்தின் முற்பகுதி யாலே அநிஷ்டநிவர்த்தகனும் அவனே என்று காட்டுகையாலே ஈஶ்வரஸ்வரூப நிரூபணமே சரமஶ்லோகத்துக்கு ப்ரத₄ாநார்த்த₂ம்.

சரமஶ்லோகத்துக்குத் தாத்பர்யார்த்தமேது, வாக்யார்த்தமேது, ப்ரதாநார்த்தமேது, அநுஸந்தாநமேது? என்னில்; - தாத்பர் யார்த்தம் ஶரண்யருசிபரிக்ருஹீதம்; வாக்யார்த்தம் ப்ராபக ஸ்வரூபநிரூபணம்; ப்ரதாநார்த்தம் ஈஶ்வரஸ்வரூபநிரூபணம்; அநுஸந்தாநம் ஸௌலப்யம்.

## நூற்றுநாற்பதாம் வார்த்தை

a ஆஶ்ரயணஞ்சொல்லி, ஆஶ்ரயிதாவைச் சொல்லி, b ஆஶ்ரயணீயன் வேஷஞ்சொல்லி, அப்ருதக்ஸ்திதித்யோதந நித்யயோகஞ்சொல்லி, தஸ்மிந்நேவ பராதிஶயஞ்சொல்லி, ப்ரபாப்ரபாவதோரிவ ஶேஷஶேஷித்வஞ்சொல்லி, ஸதா

28-வது வார்த்தையிலும், நவவிதஸம்பந்தம் என்னும் ரஹஸ்ய க்ரந்தத்திலும் நிரூபித்தபடி, திருவஷ்டாக்ஷரத்தின் அக்ஷரங்களில் எம்பெருமானுக்கும் சேதனனுக்குமுள்ள ஒன்பது விதமான ஸம்பந் தங்கள் காட்டப்படுகின்றனவாகையாலே, திருமந்த்ரத்தில் அந்த ஸம்பந்தங்களை அநுஸந்திக்கவேணும். தன் தோஷங்களை அநு ஸந்திப்பதாகிற ஆகிஞ்சன்யத்தை முன்னிட்டுக்கொண்டே ஶரண மடையவேண்டுமாகையாலே, ப்ரபத்திக்குக் காரணமந்த்ரமான த்வ யத்தில் நம்முடைய தோஷங்களை அநுஸந்திக்கவேண்டும். 135-ம் வார்த்தை i வாக்யத்தில் சொன்னபடி எம்பெருமானுடைய ஸௌலப் யாநுஸந்தானம் சரமஶ்லோகத்தில் முக்யமானதாகையாலே, சரம ஶ்லோகத்தில் ஸௌலப்யத்தை அநுஸந்திக்கவேண்டும்.

### நூற்றுநாற்பதாம் வார்த்தை

இவ்வார்த்தையில், த்வயத்தின் பொருள் மிக விரிவாக அநு ஸந்திக்கப்படுகிறது. a ஸ்ரீஶப்தத்தில் சொல்லப்படுவது — (1) பிராட்டி எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கிருள். (2) பிராட்டியை ஜீவர்கள் புருஷகாரமாக ஆஶ்ரயிக்கிருர்கள். b ஸ்ரீமச்சப்தத்தில் சொல்லப்படுவது—(1) பிராட்டியோடு கூடிய எம்பெருமானே ஆஶ்ர யிக்கத்தக்கவன். (2) 'அகலகில்லேன் இறையும்' என்று அலர்மேல் மங்கையாகிற பிராட்டி எம்பெருமானேடு எப்போதும் சேர்ந்திருப்பவள். (3) பிராட்டியோடு கூடியிருக்கையாலேயே திருவில்லாத்தேவர்க் கில்லாத பரப்ரஹ்மத்வம் எம்பெருமானுக்குள்ளது. (4) பிராட்டி ஒளிபோன்று ஶேஷபூதையாயிருப்பவள். எம்பெருமான் ஒளியை

பூர்த்தி சொல்லி, ஆக லக்ஷ்மீவிஶிஷ்டன் ப்ரபத்தவ்ய னென்னுமிடஞ்சொல்லி, c சித₃சித்ஸ்வரூபஞ்சொல்லி, உப₄ய மும் பரனுக்கு ஶரீரத்₃வாரா ஶேஷமென்று சொல்லி, தே₃ஹ வத் தே₃ஹிநாநாத்வஞ்சொல்லி, தே₃ஹிநோ ஜ்ஞாநைகாகா ரதயா ஸமரென்று சொல்லி, ஆகையாலே ஸ்வப₄ாவைக்யம் சேரச்சொல்லி, ஸ்வரூபைக்யத்தை நிஷேதி₄த்து, பஞ்சாவஸ்த் தை₂யிலும் ஸந்நிக்ருஷ்டாவஸ்த₂ாவஸ்தி₂தத்திலே ப்ரபத்தி யென்று சொல்லி, ஆத்மந: பரஸ்ய ச ப்ராப்தி சொல்லி, கு₃ணகு₃ணிபே₄த₃ஞ் சொல்லி, கல்யாணகு₃ணைகதாநத்வஞ் சொல்லி, ஹேயகு₃ண நிஷேத₄ஞ்சொல்லி, ஷட்₃விம்ஶகத்வஞ்

---

யுடைய ஸூர்யாதி₃களைப்போலே ஶேஷியாயிருப்பவன். (5) இப்படி பிராட்டியோடு எப்போதும் கூடியிருக்கையாலேயே எம்பெருமா னுக்கு எப்போதும் பூர்த்தியுள்ளது. ஆக, இதுவரையில் புருஷ காரபூ₄தையான பிராட்டியோடு கூடிய உபாயபூ₄தனை எம் பெருமானே ஶரணமடையத்தக்கவன் என்று சொல்லப்பட்டதாயிற்று. c நாராயண ஶப்₃த₃த்தில் சொல்லப்படுவது—(1) சேதநாசேதனஸ்வ ரூபங்கள் (நாரஶப்₃தா₂ர்த்த₂ம்) (2) அவை இரண்டும் எம்பெருமானுக்கு ஶரீரமாயிருந்துகொண்டு ஶேஷமாயிருக்கின்றன. (3) நாரஶப்₃த₃த் தால் சொல்லப்படும் அசேதனமான தே₂ஹங்கள் கணக்கற்றவையா யிருப்பதுபோலே, அந்த ஶப்₃த₃த்தால் சொல்லப்பட்ட சேதனரான தே₃ஹிகளும் (தே₃ஹமுடைய ஜீவர்களும்) கணக்கற்றவர்கள். (4) ஆயினும் அந்த ஜீவர்கள் அனைவரும் ஜ்ஞானமாயிருக்கையையே வடிவாகக் கொண்டிருப்பவர்களாகையாலே, ஒருவரோடொருவர் ஒப்பர். (5) இக்காரணத்தாலேயே ஜீவாத்மாக்கள் தம் கு₃ணங்களில் ஒருபடிப்பட்டிருப்பவர்கள். (6) அதனாலேயே அவர்களுக்குத் தங்க ளுக்குள்ளேயும் எம்பெருமானோடும் ஸ்வரூபைக்யம் கிடையாது. (7) பரம், வ்யூஹம், விப₄வம், அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளோடு கூடிய எம்பெருமான்களில் நமக்கு எளியவனான அர்ச்சாவதார நிலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடத்திலேயே ஶரணாக₃தி செய்யவேண்டும். (8) நாரஶப்₃த₃த்துக்குப் பொருளான நமக்கு நாராயணனான எம்பெருமான் ப்ராப்த (ஸ்வரூபத்துக்குத் தகுந்த) ஶேஷியாயிருப்பவன். (9) நாரஶப்₃த₃த்துக்குப் பொருளான கு₃ணங்களுக்கும் அவற்றையுடைய நாராயணனுக்கும் பே₄த₃ம் (வேறுபாடு) உண்டு. (10) எல்லாக் கல்யாணகு₃ணங்களுக்கும் ஒரே கொள்கலமாயிருப்பவன் நாராயணன். (11) தாழ்ந்த கு₃ணங்கள்

சொல்லி, புருஷகாரநிரபேக்ஷமாம்படியான வாத்ஸல்யாதி$_3$ கு$_3$ணங்கள் சொல்லி, நித்யத்வஞ் சொல்லி, d தத் அப்ராக்ருத த்$_3$ரவ்யாஶ்ரயமென்று சொல்லி, பரபூர்த்தி சொல்லி, ஸந்நிதி$_4$ சொல்லி, வடிவழகு சொல்லி, ஸர்வ ஸாமாநாதி$_4$கரண்யம் (ஸமாஶ்ரயணீயத்வம்?) சொல்லி, ஸௌலப்$_4$யஞ்சொல்லி, e ப்ரபத்தா ஆரென்று சொல்லி, ப்ரபத்தவ்யன் ஆரென்று சொல்லி, அநந்யபரோபாயத்வம் சொல்லி, அஸ்மை என்று சொல்லி, அஸ்மாத் என்று சொல்லி, அஸ்ய என்று சொல்லி, அஸ்மிந் என்று சொல்லி, ப்ராப்யஞ்சொல்லி, ப்ராபகஞ்சொல்லி, க$_3$த்யர்த்த$_2$

---

ஒன்றுமில்லாதவனாயிருப்பவன் நாராயணன். (12) நாரஶப்$_3$த$_3$த்தால் சொல்லப்படும் இருபத்துநாலு தத்துவமாயிருக்கும் அசேதன தத்துவத்துக்கும், இருபத்தைந்தாவதான சேதன தத்துவத்துக்கும் அயனமாயிருக்கையாலே இருபத்தாறுவது தத்துவமாயிருப்பவன் நாராயணன். (13) 'புருஷகாரங்கூடத் தேவையில்லை' என்று சொல்லலாம்படியான வாத்ஸல்யம், ஸௌஶீல்யம், ஸௌலப்$_4$யம், ஸ்வாமித்வம் என்னும் ஆஶ்ரயண ஸௌகர்யாபாத$_3$க கு$_3$ணங்களையுடையவன் நாராயணன். (14) நாரஶப்$_3$த$_3$த்தால் சொல்லப்பட்ட அசேதனப்பொருள்கள் ப்ரவாஹதோ நித்யமாயிருப்பவை. அந்த ஶப்$_3$த$_3$த்தால் சொல்லப்பட்ட சேதனர்களும், நாராயணனும் ஸ்வரூபதோ நித்யர்களாயிருப்பவர்கள். d சரணஶப்$_3$த$_3$த்தால் சொல்லப்படுவது — (1) முற்கூறிய ப$_4$க$_3$வத் ஸ்வரூபம் அப்ராக்ருதமான நித்யவிபூ$_4$தி த்$_3$ரவ்யத்துக்கு ஆதா$_4$ரமாயிருப்பது. எம்பெருமானுடைய திருமேனி முதலானவை அந்த த்$_3$ரவ்யத்தாலானவை. (2) அந்தத் திருமேனியோடு கூடியிருப்பதாலேயே—கைங்கர்யத்தை ஏற்கவல்லவனாயிருக்கை, அடியார்களுக்கு ஆநந்த$_3$த்தை அளிக்கவல்லவனாயிருக்கை முதலான பூர்த்திகள் எம்பெருமானுக்கு ஏற்படுகின்றன. (3) அத்திருமேனியாலேயே எம்பெருமான் எல்லாவிடத்திலும் ஆவிர்ப்ப$_4$விக்கிறான். (4) அதனாலேயே வடிவழகையுடையவனாகிறான். (5) அதனாலேயே அனைவருக்கும் ஆஶ்ரயிக்கத்தக்கவனாயிருக்கிறான். (6) அதனாலேயே அடியார்க்கு எளியனாயிருக்கிறான். e 'ஶரணம் ப்ரபத்$_3$யே' என்பதால் சொல்லப்படுவது:— (1) ஶரணமடைபவனுடைய ஸ்வரூபம். (2) ஶரணமடையத்தக்கவனுடைய ஸ்வரூபம். (3) அவனையல்லது அறியாதவர்களுக்கு எம்பெருமான் உபாயமாகிறான். (4) ஜீவன் அவனுக்காகவே ஏற்பட்டவன். (5) ஜீவன் அவனிடமிருந்தே நித்ய ஸத்தை பெற்றிருப்பவன். (6) ஜீவன் அவனுக்கே உரியவன். (7) ஜீவன் அவனிடத்

த்₃வாரா பு₃த்₃த்₄யர்த்த₂ஞ்சொல்லி, மாநஸப்ரபத்தியினுடைய முக்₂யதை சொல்லி, ஸப்ரகாரஶரணாக₃தி உபாயமென்று சொல்லி, ஸப்ரகாரலக்ஷ்மீஸஹசரமான வஸ்துவினுடைய உபாயத்வஞ்சொல்லி, f பரவிஶேஷணங்களடைய ப்ராப்யமென்று சொல்லி, விஶேஷ்யப்ரதிபத்தியிலும் விஶேஷண ப்ரதிபத்தி பரஸ்ய ப்ரீதிஜநகமென்று சொல்லி, g ஸப்ரகார

திலேயே ப்ரகாரமாக ஒன்றிநிற்பவன். (8) ஶரணாக₃தனுக்கு எம்பெருமானுடைய முகமலர்த்தியே ப்ராப்யம். (9) அவனே உபாயம். (10) 'ப்ரபத்₃யே' என்னும் ஶப்₃த₃மானது 'பத்லு-க₃தௌ' என்னும் தா₄துவிலிருந்து தோன்றியதாகையாலே "க₃த்யர்த்த₂ா: பு₃த்₃த்₄யர்த்த₂ா:" [க₃தியைச் சொல்லும் பத₃ங்கள் மனத்தின் க₃தியாகிற அறிவையும் சொல்லும்] என்னும் ந்யாயப்படி மாநஸக₃தியான அத்₄யவஸாயத்தை (உறுதியை)ச் சொல்லும். (11) எம்பெருமானைக் கைகூப்புவது, வணங்குவது முதலானவை காயிக (ஶரீரத்தால் செய்யப்படும்) ப்ரபத்தி. 'ஶரணமடைகிறேன்' என்று வாயால் சொல்லுவது வாசிக (வாயால் செய்யப்படும்) ப்ரபத்தி. அவனையே உபாயமாக உறுதிகொள்வது மாநஸ (மனத்தால் செய்யப்படும்) ப்ரபத்தி. இப்படி முக்கரணங்களில் ஏதேனுமொரு கரணத்தால் ஶரணமடைந்தாலும் எம்பெருமான் ப₂லனளிக்கவல்ல உதா₃ரனாயினும், 'ஜ்ஞானத்தாலே மோக்ஷம்' என்று ஶாஸ்த்ரங்கள் சொல்லியிருக்கையாலே, மாநஸப்ரபத்தியே முக்₂யமாகும். (12) ஆநுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்யவர்ஜனம், ரக்ஷிப்பான் என்னும் விஶ்வாஸம், ஆத்மஸமர்ப்பணம், ஆகிஞ்சன்யாநந்யக₃தித்வங்கள் என்னும் ஸம்ப₄ாவித ஸ்வப₄ாவங்களோடு (நெல் குத்தினால் வேர்வை ஏற்படுவது போலே தன்னடையே ஏற்படும் தன்மைகளோடு) கூடிய முற்கூறிய மாநஸப்ரபத்தியால் பரமபுருஷார்த்த₂மான மோக்ஷம் உண்டாகிறது. (13) ஶரணாக₃தி உபாயமென்று வழங்கினாலும் கு₃ணங்களோடும் புருஷகாரபூ₄தையான பிராட்டியோடும் கூடிய எம்பெருமான் உபாயம் என்றே தேறும். f உத்தரக₂ண்ட₃த்தில் 'ஶ்ரீமத்' 'நாராயண' என்னும் ஶப்₃த₃ங்களால் சொல்லப்படுவது — (1) எம்பெருமானுக்கு விஶேஷணமாயிருக்கும் பெரியபிராட்டியார் முதலான பிராட்டிமார், நித்யமுக்தர்கள், உப₄யவிபூ₄திகள் முதலான எல்லாம் ப்ராப்யமாகின்றன. (2) விஶேஷ்யமான ப₄க₃வத்ஸ்வரூபம் ப்ராப்யமாகத் தட்டில்லை; அவனுடைய விஶேஷணங்கள் எப்படி ப்ராப்யமாகும்? எனில்: 'இவை நம் உடைமை' என்று அவன் இவ்விஶேஷணங்களைத் தன் ஸ்வரூபத்தைக் காட்டிலும் உகந்து அபி₄மானிக்கையாலே, அவையும்

நாராயணனுக்கென்று சொல்லி, ஏவம்வித₄னுக்கே அஹ மர்த்த₂பூ₄தனான நான், ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வா வஸ்த்தோ₂சித ஸர்வவித₄ கைங்கர்யத்தையும் பண்ணுகிறே னென்று - ப்ரத்யக்ஷாத்மநः ப₂லஞ்சொல்லி, h ப்ரபத்தியில் உபாயபு₃த்₃தி₄ உபசாரஸித்₃தை₄ என்று சொல்லி, பரனே பரமோபாயமென்று சொல்லி, ப்ரபத்தி உபாயமென்று சொல்லி, இவை உபாயமாம்போது பரஸாபேக்ஷமென்று சொல்லி, நிரபே க்ஷோபாயம் அவனேயென்று சொல்லி, அத ஏவ உபாயாநவத்₃ யதை சொல்லி, ஒன்றுக்கே உபாயோபேயாகாரத்₃வயம் க₄டிக்கு மென்று சொல்லி, த₃யாக்ஷாந்த்யாதி₃கு₃ணங்களாலே ஸந்நி ஹிதனுக்கு உபாயத்வஞ்சொல்லி, தே₃ஶவிஶேஷநிலயனுக்கு

---

ப்ராப்யமாகத் தட்டில்லை. g நான்காம் வேற்றுமையாலும் 'நமஸ் ஶப்₃த₃த்தாலும் சொல்லப்படுவது — (1) முற்கூறிய விஶேஷணங்க ளோடு கூடிய நாராயணனுக்கே உரியது ஆத்மவஸ்து. (2) 'ஆகை யால் அத்தகைய அவனுடைய உகப்புக்காகவே அடியேன் எல்லா தே₃ஶங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் உசிதமான எல்லாவித₄மான அடிமைகளையும் பண்ணக்கடவேன்' என்று தனக்குப் ப₂லத்தைப் பிரார்த்தி₂ப்பது. h இனி த்₃வயத்தில் உணர்த் தப்படும் பொதுவான அர்த்த₂ங்கள் விளக்கப்படுகின்றன. (1) ப்ரபத்தி உபாயம் என்று வழங்குவதும் நினைப்பதும் ஔபசாரிகம். (2) உண்மை யில் எம்பெருமானே இயல்வான தலைசிறந்த உபாயம். (3) 'ஸ்வக்ரு₂த ஸ்வீகாரம்' என்பப்படும் 'தான் பற்றும் பற்று' உபாயமாகக் கொள்ளப்பட் டால், ஸ்வார்த்த₂ கைங்கர்யத்திற்கு உபாயமாகிறது. (4) மற்ற உபா யங்கள் ஸ்வார்த்த₂ மோக்ஷத்தை ஸாதி₄த்துத்தரும்போது ப₂லப்ரத₂ னாக எம்பெருமானை எதிர்பார்க்கின்றன. (5) ஸித்₃தோ₄பாயநிஷ்ட₂ர் களுக்குப் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂ லக்ஷணமோக்ஷத்திற்கு எதையும் எதிர்பாராத இயல்வான உபாய மாயிருப்பவன் எம்பெருமானே. (6) அதனாலேயே 133-ம் வார்த்தை யில் உபாயாந்தரங்களுக்குச் சொல்லப்பட்ட பத்துவித₄மான குறைகள் எம்பெருமானாகிற உபாயத்துக்குக் கிடையாது. (7) இக்காரணத்தி னாலேயே எம்பெருமான் ஒருவனுக்கே உபாயத்வம் உபேயத்வம் என்னும் இரண்டு ஆகாரங்களும் பொருந்துகின்றன. (8) கருணை, பொறுமை முதலான ஆஶ்ரயண ஸௌலப்₄யாதி₃கு₃ணங்கள் நிறைந்து, அருகில் இருப்பவனான அர்ச்சாவதார எம்பெருமானுக்கே உபாயத்வமுள்ளது. (9) பரமபத₃த்தில் எழுந்தருளியிருக்கும் பரவாஸு

உபேயத்வஞ்சொல்லி, உபா₄யவிபூ₄தியும் அவனதாயிருக்க, ஒரு விபூ₄தியில் நின்றும் ஒரு விபூ₄திக்குப் போகை மோக்ஷம் என்பானேனென்னில் - அது மஹாநஸஸ்த₂ாந பே₄ாக₃ஸ்த₂ாந ஸ்தி₂த ப₄ர்த்ருப₄ார்யா ஸம்யோக₃ந்யாயமென்று சொல்லி, அவனே ப்ராபகனானால் பாபவிநாசநத்₃வாராதான் ப்ராப்தியென்பானேனென்னில் - மஹாநஸத்திலே பு₄ஜிக்கும்போது பழைய வேஷமே பே₄ாக்₃யம், பே₄ாக₃ஸ்த₂ாநத்திலே பு₄ஜிக்கும் போது உடுத்த புடைவையை அவிழ்த்து பு₄ஜிக்க வேண்டுமென்று சொல்லி, ரத்நஸ்வீகாரம் பண்ணும்போது ருஷிகையில் நின்றும் வாங்கி மஞ்ஜூஷாந்தரத்திலே இட வேண்டுமென்று சொல்லி, த்ரிவித₄ப்ரபந்நனுக்கும் தே₃ஹ

---

தே₃வனுக்கே உபேயத்வமுள்ளது. (10) உபா₄யவிபூ₄தியும் அவன் உடைமையாயிருக்க, இந்த விபூ₄தியிலேயே மோக்ஷமேற்படாமல் நித்யவிபூ₄திக்குச் சென்றே மோக்ஷம் ஏற்படுகிறது என்று கூறுவானென்? எனில்: கணவன் மனைவியோடு சமையலறை பள்ளியறை இரண்டிடங்களில் கூடியிருந்தபோதிலும், சமையலறையில் ஆஹாரத்தையும் பள்ளியறையில் பே₄ாக₃த்தையும் கொள்வதுபோலே லீலா விபூ₄தியில் லீலாரஸத்தையும், நித்யவிபூ₄தியில் பே₄ாக₃ரஸத்தையும் அநுப₄ப்பது பொருந்தும். (11) அவனே உபாயமானால் இந்த ஶரீரத்தோடே மோக்ஷத்தை அருளாமல், இந்த ஶரீரத்தையும் அதற்குக் காரணமான பாபங்களையும் போக்கடித்து நித்யவிபூ₄தியிலேயே மோக்ஷம் அருளுகிறான் என்பானென்? எனில், சமையலறையில் மனைவி அளிக்கும் ஆஹாரங்களை பு₄ஜிக்கும்போது உடுத்த புடவையோடு அவள் பே₄ாக்₃யமாகிறாள். பள்ளியறையில் மனைவியை அநுப₄விக்கும்போது உடுத்தபுடவையை அவிழ்த்தே அவளை அநுப₄விக்கவேண்டும். அதுபோலவே எம்பெருமான் இவ்விபூ₄தியில் ப்ராக்ருத ஶரீரத்தோடு கூடவும், அவ்விபூ₄தியில் அந்த ஶரீரத்தைக் கழித்தும் அநுப₄விப்பது பொருந்தும். (12) ரத்னங்களை அழுக்கு நீங்கக் காய்ச்சும் பாத்திரத்திலிருந்து எடுத்து, அழுக்குக்கழித்துப் பெட்டியில் வைத்துப் பாதுகாப்பதுபோல், எம்பெருமானும் ஸ்ரீகௌஸ்துப₄ ரத்னம்போன்று தனக்கினியவனான ஜீவனை, லீலாவிபூ₄தியான காய்ச்சும் பாத்திரத்திலிருந்து எடுத்து, ப்ராக்ருத ஶரீரமான அழுக்கைக்கழித்து, நித்யவிபூ₄தியில் அப்ராக்ருத ஶரீரமான பெட்டியில் வைத்துப் பாதுகாத்து அநுப₄விக்கிறான் என்று கொள்ளலாம். (13) அஜ்ஞானத்தாலே ப்ரபந்நர், ஸ்வரூபயாத₂ாத்ம்ய ஜ்ஞானத்

பாதஸமநந்தரம் பரமபுருஷார்த்த₂லக்ஷண மோக்ஷஞ்சொல்லி, மற்றையிருவருக்கும் விளம்ப₃ப₂லஞ்சொல்லி, ராஜா அக்ரு தாப₄ரணங்கள் தன்னதானபோது எடுத்துப் பூணுமத்தனை யென்று சொல்லி, இச்ச₂ாப்ரவர்த்தகத்வஞ்சொல்லி, அல்லாதபோது ஈஶ்வரத்வந்தானில்லையென்னுமிடஞ்சொல்லி, இத்தலையில் கைம்முதலறுகை அவன் கடாக்ஷத்துக்கடியென்று சொல்லி, இத்தலையில் விஶ்வாஸம் பிறக்கையாவது - அருளவனுடைய க்ருபைக்கே; க்ருபை பிறப்பது துதிக்கையழுந்தின

---

தாலே ப்ரபந்நர், ப₄க்தி பாரவஶ்யத்தாலே ப்ரபந்நர் என்னும் மூவகைப்பட்ட ப்ரபந்நர்களுக்கும் இந்த ஶரீரம் விட்டவுடன் ப₄க₃வத் கைங்கர்யரூபமான பரமபுருஷார்த்த₂லக்ஷணமோக்ஷம் கிட்டுகிறது. (14) உபாயாந்தரங்களை அநுஷ்டி₂த்து எம்பெருமானை அடைபவர்களுக்கும், ப்₃ரஹ்மலோகத்துக்குச் சென்று ப்₃ரஹ்மாவோடு கூட அவனுடைய ஆயுளின் முடிவில் க்ரமமுக்தி அடைபவர்களுக்கும் அவர்களுடைய ப்ராரப்₃த₄கர்மம் கழிந்தபின்பே மோக்ஷமாகையாலே ப₂லம் தாமதித்தே கிடைக்கிறது. (15) இப்படி ஒவ்வொருவரை ஒவ்வொரு காலத்தில் எம்பெருமான் ஏற்றுக்கொள்வதற்குக் காரணமென்ன? எனில்: அரசன் தன்னுடைய சில ஆப₄ரணங்களை நீண்டநாள் அணிந்து கொள்ளாமலே இருந்து தான் விரும்பியபோது ஒருநாள் எடுத்துப் பூண்பதுபோலே எம்பெருமானும் ஒவ்வொரு ஜீவனை ஒவ்வொரு ஸமயத்தில் ஏற்கிறான். (16) "பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது" [ஆசார்யஹ்ருத₃யம் 106] என்கிற ரீதியில் மோக்ஷமளிக்கும் விஷயத்தில் ஸ்வதந்த்ரனான எம்பெருமான் இச்சை₂யே ஹேதுவாகிறது. (17) இப்படிக் கொள்ளாவிடில் ஈஶ்வரத்வமே நிலைநில்லாது. (18) அப்படியானால் அவனுடைய கடாக்ஷத்துக்குக் காரணமாக மோக்ஷமடையுமவனிடம் எதுவுமே இல்லையோ? எனில்: மோக்ஷோபாயமாக எதுவுமற்றிருக்கையே அவன் கடாக்ஷத்துக்குக் காரணமாக இவனிடத்தில் உள்ளது. (19) 'அவனே ரக்ஷகன்' என்னும் விஶ்வாஸம் இவனிடம் பிறந்துள்ளதே? எனில்: அந்த விஶ்வாஸமும் அவனுடைய க்ருபையாலேயே ஏற்பட்டது. (20) அப்படியானால் அந்த க்ருபை எப்போது ஏற்படும்? எனில்: தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ள முயன்ற க₃ஜேந்த்₃ராழ்வானுக்குத் துதிக்கை நீரில்அழுந்தும் நிலை ஏற்பட்டபோது எம்பெருமானுடைய க்ருபை உண்டானதுபோலே, சேதனனுக்குத் தனக்காகத் தான் முயல்வது நீங்கின போது எம்பெருமானுடைய க்ருபை உண்டாகிறது. (21) இவ்வுலகில்

லென்று சொல்லி, கர்மாநுப₄வம் அவனுடைய ஶிக்ஷை யென்று சொல்லி, ஶிக்ஷிதனானவாறே பித்ருப்ரஸாத₃ம் பிறக்குமாபோலே "தா₄து: ப்ரஸாத₃ாத்" என்கிற பேறு சொல்லித் தலைக்கட்டுகிறது - ப்ரபத்திவாக்யத்தால்.

## நூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

நம் ஆசார்யர்கள் திருமந்த்ரத்தை விஶத₃மாக அநுஸந்தி₄க்கும்படி த்₃வயம். இது த்₃வயமென்று திருநாமமாக வேண்டிற்று - உபாயோபேய வாசகமான வாக்யத்₃வயத்தை உடைத்தாகையாலே; இதில் பூர்வவாக்யம் உபாய்பரமாயிருக்கும்; உத்தரவாக்யம் உபேயபரமாயிருக்கும்; பூர்வவாக்யம் மூன்று பத₃மாயிருக்கும்; உத்தரவாக்யம் மூன்று பத₃மாயிருக்கும்; "ஶ்ரீமந்நாராயண சரணௌ" என்றும் "ஶரணம்" என்றும், "ப்ரபத்₃யே"என்றும், "ஶ்ரீமதே"என்றும், "நாராயணாய" என்றும், "நம:" என்றும்; இதில் "ஶ்ரீ:" என்கிற திருநாமம், "ஶ்ரிஞ்-ஸேவாயாம்" என்கிற தா₄துவிலேயாகையாலே, "ஶ்ரயதே, ஶ்ரீயதே, இதி ஶ்ரீ:" என்கிற வ்யுத்பத்தித்₂வயத்தாலே- ஸேவிக்கும், ஸேவிக்கப்படும் என்கிறது. இவ்வர்த்த₂ம் ஸாபேக்ஷமாகையாலே, யாரை யாராலே என்ன வேண்டிவரும்; உ அவைதான் அவளுக்கு ஸ்வரூபாநுரூபமாயிறேயிருப்பது.

---

ஜீவன் புண்யபாபரூபகர்மங்களின் ப₂லனை அநுப₄விப்பது ஜீவனுடைய ஸ்வார்த்த₂தைக்கு (சுயநல மனப்பான்மைக்கு) எம்பெருமான் கொடுத்த த₃ண்ட₃னையாகும். (22) பரிபூர்ணமாக த₃ண்டி₃க்கப்பெற்று சுயநல மனப்பான்மை நீங்கப்பெற்ற பிள்ளைக்குத் தகப்பன் அருள் புரிவதுபோலே "தா₄து: ப்ரஸாத₃ாத்" [கட₂ 1-2-20] என்கிற ரீதியில் எம்பெருமான் அருள்புரிய ஜீவனுக்குப் பரமபுருஷார்த்த₂லக்ஷண மோக்ஷம் கிடைக்கிறது. இவ்வளவையும் ப்ரபத்தி வாக்யமான த்₃வயம் சொல்லுகிறது.

### நூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

இந்த வார்த்தையின் பெரும்பகுதி முன் வார்த்தைகளிலும் பரந்த ரஹஸ்யம் த்₃வயப்ரகரணம் முதலானவற்றிலும் வந்ததே. ஆகையால் அரும்பத₃ங்கள் சிலவற்றுக்கு மாத்திரம் விவரணம் தரப்படுகிறது. உ பிராட்டிக்கு ப₄க₃வச்சே₂ஷத்வம் ஸ்வரூபமாகையாலே, 'அவனை ஸேவிக்கும் (ஆஶ்ரயித்திருக்கும்)' என்றும், மூவகைப் பட்ட சேதனர்க்கும் ஶேஷியாயிருக்கை பிராட்டிக்கு ஸ்வரூபமாகையாலே, '(மூவகைப்பட்ட சேதனராலும்) ஸேவிக்கப்படும் (ஆஶ்ரயிக்கப்படுவாள்)' என்றும் கொள்ளவேண்டும் என்று கருத்து.

எங்஡னேயென்னில்; – b ஸர்வபூ₄தாநாம் ஈய்வரியாகையாலே, த்ரிவித₄சேதநராலும் ஸேவிக்கப்படும்; c விஷ்ணுபத்நியாகை யாலே, தான் அவனை ஸேவிக்கும் என்கிறது; ஆகையாலே தன்னையொழிந்த ஸகலாத்மாக்களுடைய d ஸ்வரூபஸ்தி₂த்யாதி₃கள் தன்னுடைய கடாக்ஷாதீ₄நமாயிருக்கும்; தன்னுடைய d ஸ்வரூபஸ்தி₂த்யாதி₃கள், அவனுடைய கடாக்ஷாதீ₄நமாயிருக்கும். ஆகையாலே தன்னையொழிந்தார்க்குத் தான் ஸ்வாமிநியாய், அவனுக்குப் பரதந்த்ரையாயிருக்கையே இவளுக்கு ஸ்வரூபமென்னுமிடம் சொல்லுகிறது. இதுதான் வ்யுத்பத்தி ஸித்₃த₄மேயன்று, ப்ரமாணஸித்₃த₄மும். e இப்படி வ்யுத்பத்தித்₃வயத்தாலும், உப₄யஸம்ப₃ந்த₄ஞ் சொல்லுகிறது; f இதுதான் புருஷகாரத்திலே நோக்காயிருக்கும்; புருஷகாரஞ் செய்கைக்கு இத்தலையில் ப₃ந்த₄மும், அது வாய்க்கைக்கு அத்தலையில் ஸம்ப₃ந்த₄முஞ் சொல்லுகையாலே. g வரிக்குமவனை, 'இவனைக் கைக்கொண்டருளீர்' என்னும் பிராட்டி; 'கைக்கொண்டருளுகையாவதென்?' என்னுமே அவன்; 'ஆபி₄முக்₂யம் பண்ணினான்' என்னுமே இவள்; 'ஆகில் அபராத₄ஞ்

b இது ஸ்ரீஸூக்தத்தில் உள்ளது. ஜீவராஸிகள் அனைவருக்கும் ஈய்வரி என்று பொருள். c இது நீளாஸூக்தத்திலுள்ளதாயினும் பெரிய பிராட்டியாருக்கும் மிகப்பொருந்தும். 'விஷ்ணுவின் பத்னீ' என்று பொருள். d ஸ்வரூபஸ்தி₂த்யாதி₃கள்-ஸ்வரூபம் (ஸத்தை), ஸ்தி₂தி, ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி ஆகியவை. e ஶ்ரயதே (ஆஶ்ரயித்திருக்கிறாள்) என்னும் வ்யுத்பத்தியாலே எம்பெருமானுக்குப் பத்நியாயிருக்கும் ஸம்ப₃ந்த₄மும், 'ஶ்ரீயதே' (ஆஶ்ரயிக்கப்படுகிறாள்) என்னும் வ்யுத்பத்தியாலே எல்லாச் சேதனர்க்கும் தாயாயிருக்கும் ஸம்ப₃ந்த₄மும்(உறவும்) சொல்லுகிறது என்றபடி. f, g, h இந்த மஹாவாக்யம் பிராட்டி எம்பெருமானிடம் புருஷகாரம் செய்யும் ப்ரகாரத்தை விவரிக்கிறது. f புருஷகாரம் செய்பவளுக்கு இருக்கவேண்டிய முற்கூறிய உப₄ய ஸம்ப₃ந்த₄ம் இவளிடத்தில் இருக்கையாலே, இந்த உப₄யஸம்ப₃ந்த₄த்தைச் சொல்லும் ஸ்ரீஶப்₃த₃ம் பிராட்டியின் புருஷகாரத்தன்மையைச் சொல்லுவதில் நோக்காயிருக்கும் என்று கருத்து. g இங்கு பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் நடக்கும் ஸம்வாத₃ம் பூர்ணமாயில்லை. இவ்வார்த்தையின் கடைசியில் அது பூர்த்தி செய்யப்படு

செய்யப் பார்த்தபடியென் ? என்னுமே அவன்; ‘அதுவென் இனி?’ என்னுமே இவள் ; ‘அதுவென்னென்றதுக்குப் பொருளென் ? என்னுமே அவன்; ‘பொருளைக்கேளீர் ; திருவடி திருவநந்தாழ்வானேபாதி உம்மை அநுப₄விக்கைக்கு இட்டுப் பிறந்துவைத்து, உம்முடையபக்கல் விமுக₂னாய், ஶப்₃த₃ாதி₃ விஷயப்ரவணனாய், அதன் கார்யமான ஜநநாதி₃களிலே புக்கு அநாதி₃காலம் க்லேஶப்பட்டுப்போராநிற்க, உம்முடைய ப₄ாக்₃யத்தாலே இற்றையளவும் ஸித்₃தி₄யாத ஆபி₄முக₂யம், இன்று ஒருபடி ஸித்₃தி₄த்தால், அபராத₄த்தை உம்முடைய க்ருபைக்கு விஷயமாக்கி, உம்முடைய ஶீலாதி₃கு₃ணங்களையே இட்டு கைக்கு உறுப்பாக்கும் h யோக்₃யதை சொல்லுகிறது.’ i எம்பெருமான்பக்கல் யோக்₃யதையிறே உபாயவரணம் பண்ணுகிறது. j இப்படி வரணீயஸ்வரூபத்தில் புருஷகார ப₄ாவத்துக்கு அநுஷ்டா₂நமுண்டோவென்னில், “ஶ்ருணோதீதி ஶ்ரீ:, ஶ்ராவயதீதி ஶ்ரீ:” என்னுமிவ்விரண்டாலும்-ஸ்வரூபத்தில் அநுஷ்டா₂நமுண்டென்கிறது. ஶ்ருணோதி என்கிறது - கேட்குமென்றபடி. கேட்கிறதென்னென்னில் ;-ஆஶ்ரயிக்க இழிகிற அதி₄காரி தன்னுடைய அபராத₄ங்களையும், எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் அநுஸந்தி₄த்து ‘அவனைக் கிட்டுகையென்பதொன்றில்லையாகாதே’ என்று இவன் பிற்காலித்தால், ‘நீ பிற்காலிக்கிறதென்? உனக்கு ஆபி₄முக்₂யமன்றே வேண்டுவது;

---

கிறது. பரந்தரஹஸ்யத்தில் ஸ்ரீஶப்₃த₃விவரணத்தில் பூர்ணமாயிருக்கிறது. அதைக்கொண்டு இங்கு பூரணம் செய்துகொள்வது. வரிக்குமவனை என்றது வரிக்கப்படும் ஈஶ்வரனை என்று பொருள்படும். h யோக்₃யதை சொல்லுகிறது என்றவுடன் “அதுவென் ? என்று சொன்னதற்குப் பொருள்” என்னும் பத₃ங்களைக்கூட்டி வாக்யத்தைப் பூரித்துக்கொள்வது. i எம்பெருமான் நிருபாதி₄கமான (இயல்வான) நவவித₄ஸம்ப₃ந்த₄ங்களையும் உடையவனுயிருக்கும் தகுதியைக் கண்டே அவனை உபாயமாகச் சேதனன் வரிக்கிறுன் என்றபடி. j உபாயமாக வரிக்கப்படும் எம்பெருமானிடம் புருஷகாரபூ₄தையான பிராட்டி செய்யவேண்டிய கார்யமுண்டோ? எனில் “(சேதனன் சொல்வதைக்) கேட்கையாலே ஸ்ரீ எனப்படுகிருள்” (அவ்வார்த்தையை எம்பெருமானைக்) கேட்பிக்கையாலும் ஸ்ரீ எனப்படுகிருள்” என்னும்

அபராத₄ங்களைப் பொறுப்பிக்கைக்கு நானிருந்தேன்; நீ அஞ்சாதே' என்று சொல்லுகை; ஶ்ராவயதி என்கிறது-கேட்பிக்குமென்றபடி. அதாவது-''இவனுடைய அபராத₄ங்களைக் கணக்கிட்டு நீர் இப்படி தள்ளிக்கதவடைத்தால் இவனுக்கு வேறொரு புகலுண்டோ? உமக்கும் இவனுக்கும் உண்டான ஸம்ப₃ந்த₄ விஶேஷத்தைப் பார்த்தால், 'உறவேல் நமக்கிங்கொழிக்க வொழியாது' என்கிறபடியே குடநீர் வழித்தாலும் போகாததொன்றன்றோ; ஸ்வம்மான இவனை லபி₄க்கை ஸ்வாமியான உம்முடைய பேறன்றோ இருப்பது'' என்று.

## நூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

விஷயம் - ஆத்மா; விஷயீ - ஈஶ்வரன்; விஷயஶுத்₃தி₄ கர்த்தா-ஆசார்யன்; விஷயாநுப₄வவர்த்த₄கை பிராட்டி; விஷயாநுப₄வஸஹாயபூ₄தர் - ஸ்ரீவைஷ்ணவர்கள்.

## நூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

அதி₄காரி க்ருத்யம், ஆசார்ய க்ருத்யம், புருஷகார க்ருத்யம், உபாய க்ருத்யம் என்று நாலு. இதில், அதி₄காரி க்ருத்ய

---

இரண்டு ஸ்ரீஶப்₃த₃வ்யுத்பத்திகளாலும் புருஷகாரபூ₄தையான பிராட்டி சேதனன் சொல்லும் வார்த்தையைக்கேட்டு, எம்பெருமானைக் கேட்பிக்கையாகிற கார்யத்தைச் செய்யவேண்டும் என்று கருத்து.

### நூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

மோக்ஷத்தில் எம்பெருமான் அநுப₄விப்பதற்கு விஷயமாயிருக்கிறது ஜீவாத்மஸ்வரூபம். அதை அநுப₄விப்பவன் ஸர்வேஶ்வரனான நாராயணன். அஜ்ஞானம் முதலான தோ₃ஷங்களால் பரிஶுத்₃தி₄யில்லாமலிருக்கும் அந்த ஜீவாத்மஸ்வரூபத்துக்கு உண்மையறிவை உபதே₃ஶித்து, பரிஶுத்₃தி₄யை உண்டாக்குமவன் ஆசார்யன். ஜீவாத்மாவைப் பரமாத்மா அநுப₄விக்கும் அநுப₄வத்தை வளர்ப்பவள் பெரியபிராட்டியார். எம்பெருமான் ஜீவாத்மஸ்வரூபத்தை அநுப₄விப்பதற்குத் துணையாயிருக்கிறவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள்.

### நூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

இவ்வார்த்தையில் ஶரணமடையும் அதி₄காரி, ஶரணமடையப்படும் உபாயமான எம்பெருமான், புருஷகாரஞ்செய்யும் பிராட்டி, ஶரணமடைபவனுக்கு அறிவு அளித்த ஆசார்யன் என்னும் நால்வர்

மாவது,—ஆசார்யஶுஶ்ருஷையும், க்ருதஜ்ஞதையும், உபாயத்தில் அத்₄யவஸாயமும்; உபாய க்ருத்யமாவது,—விரோதி₄ நிவர்த்தகத்வமும், ப்ராப்யஸித்₃தி₄கரத்வமும்; புருஷகார க்ருத்யமாவது, — அபராத₄க்ஷாமகத்வமும், கைங்கர்ய வர்த்த₄கத்வமும்; ஆசார்ய க்ருத்யமாவது, - அஜ்ஞாதஜ்ஞாபநமும், ருசிப்ரவர்த்தகத்வமும்;

## நூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை

எம்பெருமான் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிறத்துக்கு ப்ரயோஜநம் சேதநருக்கு மோக்ஷத்தில் இச்சை₂ பிறக்கை; அவதாரங்களுக்கு ப்ரயோஜநம் - மோக்ஷப்ரத₃ாநம் பண்ணுகை; a மோக்ஷப்ரத₃ாநம் பண்ணுவது ஜ்ஞாநப்ரத₃ாநம்பண்ணிலுல்; ஜ்ஞாநப்ரத₃ாநம் பண்ணுவது ஆசார்யோபதே₃ஶமுக₂த்தாலே; b ஆசார்யன் இருவருக்கும் உபகாரகன். எங்ஙனேயென்னில்;-சேதநனுக்கு ஶேஷியை உபகரித்தான், ஶேஷிக்குச் சேதநனை உபகரித்தான். இப்படியிருக்கிற ஆசார்யனுக்கு ப்ரத்யுபகாரம்

---

செய்யும் கார்யங்கள் சுருங்கக் கூறப்படுகின்றன. I அதி₄காரி செய்ய வேண்டியவை—(1) ஆசார்ய கைங்கர்யம், (2) ஆசார்ய விஷயத்தில் நன்றி. (3) எம்பெருமானை உபாயமாகக் கொள்வதில் உறுதி. II உபாயமான எம்பெருமான் செய்பவை— (1) ஶரணமடைபவனுடைய விரோதி₄களான அவித்₃யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ங்களைப் போக்குவது. (2) பரமப்ராப்யமான பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களை அளிப்பது. III புருஷகாரமான பிராட்டி செய்பவை— (1) ஶரணாக₃தன் செய்த குற்றங்களை எம்பெருமானைப் பொறுப்பிக்கை. (2) அவன் செய்யும் (ப்ராப்யமான) கைங்கர்யங்களை வளர்க்கை. IV ஆசார்யன் செய்பவை— (1) ஶிஷ்யன் அறியாத அர்த்த₂ங்களை அறிவிக்கை. (2) பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களில் ருசியை வளர்க்கை.

### நூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை

a "ஜ்ஞாநாந்மோக்ஷம்" என்கிறபடியே மோக்ஷஸ்வரூபத்தைப் பற்றிய அறிவு எவனுக்கு உண்டாகிறதோ, அவனுக்கே மோக்ஷத்தை எம்பெருமான் அளிக்கமுடியும் என்று கருத்து b இவ்வாக்யங்களில் சொல்லப்படும் அர்த்த₂ம்—ஸ்ரீவசநபூ₄ஷணத்தில் 428, 429, 432வது சூர்ணைகளிலும் அவற்றின் வ்யாக்₂யானத்திலும் விளக்கப்பட்டது.

பண்ணலாவது-விபூ₄திசதுஷ்டயமும் ஈஶ்வரத்₃வயமும் உண்டா கில். c ஆசார்யனுவான் - அர்த்த₂காமங்களில் நசையறுத்து ப₄க₃வத்₃ப₄ாக₃வத விஷயங்களிலே மிகவும் நசையுண்டாக்கு மவன்.

## நூற்றுநாற்பத்தஞ்சாம் வார்த்தை

நான் ஒரு நூலில் வைத்துச் சொல்லென்றால் சொல்லும் நூலில் மாலைகள் ஒரு முமுக்ஷுவுக்குப் பாவநமுமாய் போ₄க்₃ய முமாயிருக்கும் என்று ஆச்சான்பிள்ளை வார்த்தை.

## நூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

a ஆச்சான்பிள்ளை சிறியதாயார். b பெரியபிள்ளையையும் ஆச்சான்பிள்ளையையும் ஸேவித்துப் போருகிறகாலத்திலே இவள் ஶோகார்த்தையாக ; ஆச்சான்பிள்ளை, நீ ஶோகிக்கிற தென்னென்ன; 'அநாதி₃காலம் பாபவாஸனைகளாலே 'ஐந் மாதி₃களிலே ஈஶ்வரன் இன்னம் என்னைத் தள்ளப்புகுகிறனோ' என்று ப₄யப்பட்டு நின்றேன்'' என்ன ; "கெடுவாய் ! இது ஆர்கேடென்றிருந்தாய் ? c உனக்கு ஸ்ருஷ்டிக்கவேண்டுமோ ?

---

அங்கு கண்டு கொள்வது c த₄ர்ம, அர்த்த₂, காம, மோக்ஷங்களாகிற நாலு புருஷார்த்த₂ங்களில் அர்த்த₂காமங்களில் ஆசையை அறுத்து, பரமத₄ர்மமாகவும் மோக்ஷப்ராப்யமாகவும் இருக்கும் ப₄க₃வத்₃ ப₄ாக₃வத விஷயங்களில் மிகவும் ஆசையை உண்டாக்குகிறவன் எவனோ, அவனே ஆசார்யன்; மற்றவர்கள் ஆசார்யஶப்₃த₃த்தால் சொல்லப்பட்டாலும், அவர்கள் ஆசார்யர்கள் அல்லர்.

### நூற்றுநாற்பத்தைந்தாம் வார்த்தை

நூலில் தொடுக்கப்படும் மாலைகள் அவற்றை அணிபவனுக்குப் பரிஶுத்₃தி₄யை விளைப்பவையாய், இனியவையாயிருப்பதுபோலே, நூலில் (க்₃ரந்த₂த்தில்) சொல்லப்படும் அர்த்த₂ங்கள் மோக்ஷமடைய விரும்புகிறவனுக்குப் பரிஶுத்₃தி₄யை விளைப்பவையாய், இனிய வையாயிருக்கும் என்று கருத்து.

### நூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

a ஆச்சான்பிள்ளை — பெரியவாச்சான்பிள்ளை. b பெரியபிள்ளை— அவருடைய தகப்பனாரான யாமுநாசார்யராயிருக்கக்கூடும். c "ஸ்ருஷ் டிப்பது, அவதரிப்பது முதலான ஆளைத்தொழிலைச் செய்வது நீயோ?

அவதரிக்கவேண்டுமோ? d 'பிறப்பில் பல்பிறவிப்பெருமான்' என்றும், e 'பொருளென்று இவ்வுலகம் படைத்தவன்' என்றும், f (ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃) என்றும் - ஒருவனைப் பிடிக்க ஊரை வளையுமாபோலே g அகி₂லஜக₂த்ஸ்வாமியாயிற்று- g அஸ்மத்ஸ்வாமியாகைக்கன்றோ'' என்றருளிச்செய்தார்.

## நூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

a ஜ்ஞாநப்ரத₃ன் ஆசார்யன், ஜ்ஞாநவர்த்த₄கர் ஸ்ரீவைஷ்ணவர்கள், ஜ்ஞாநவிஷயம் எம்பெருமான், ஜ்ஞாநப₂லம் கைங்கர்யம், ப₂லத்திலினிமை ப₄ாக₃வதகைங்கர்யம். b ஶிஷ்ய

---

உன்னையும் உன்னைப்போன்றவர்களையும் பெறுவதற்காக அவனன்றோ இவ்வாளைத்தொழில்களைச் செய்துவருகிறான். அப்படியிருக்க, உன் ரக்ஷணத்தைப்பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? உனக்காக அவன் அநாதி₃காலமாகப் பாடுபட்டுவரும்போது, நீ உனக்காகப் பாடுபடுவதையும் கவலைப்படுவதையும் விட்டாலே போதுமே! உடையவன் உடைமையைத் தன்னடையே ஏற்றுக்கொள்கிறான்'' என்று கருத்து. d '' பிறப்பில் பல்பிறவிப்பெருமான் '' [திருவாய் 2-9-5] e ''பொருளென்று இவ்வுலகம் படைத்தவன்'' [திருவாய் 2-10-11] f ''ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃'' [கீ₃தை 4-8] [ஸாது₄க்களின் ரக்ஷணத்திற்காகவும், து₃ஷ்டர்களை அழிப்பதற்காகவும், த₄ர்மத்தை நிலை நிறுத்துவதற்காகவும் யுக₃ந்தோறும் பிறக்கிறேன்] என்ற கண்ணன் வார்த்தை. g '' அகி₂லஜகத்ஸ்வாமிந் அஸ்மத்ஸ்வாமிந் '' [ஶரணாக₃திக₃த்₃யம்] [எல்லா உலகத்துக்கும் ஸ்வாமியே! அடியேனுக்கு ஸ்வாமியே!] என்னும் வாக்யத்தில் நோக்கு.

### நூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

a எம்பெருமானே ப்ராப்ய ப்ராபகங்களாயிருப்பவன் என்னும் அறிவை அளிப்பவன் ஆசார்யன். உசாத்துணையாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அவ்வறிவை வளர்ப்பவர்கள். ப்ராப்ய ப்ராபகங்களாயிருக்கும் எம்பெருமான் அவ்வறிவுக்கு விஷயம். அவ்வறிவைப் பெற்ற சேதனனுக்கு அவ்வறிவின் பயனாக ஏற்படுவது ப₄க₃வத் கைங்கர்யம். அந்த ப₄க₃வத்கைங்கர்யத்தில் இனிமை அதி₄கரிக்க அதி₄கரிக்க அவ்வினிமை எம்பெருமானளவோடு நிற்கவிடாமல் அவனடியார்கள் விஷயத்திலும் கைங்கர்யம் செய்யும்படி மூட்டும். b ஒவ்வொரு சமயங்களில் ஆசார்யன் மிகுதியாக அருளைப்பொழியும்போது

னுக்கு ஆசார்யனுடைய ஸ்வப்ரஸாத₃ம் அப்ரஸாத₃மாகவும், அப்ரஸாத₃ம் ஸ்வப்ரஸாத₃மாகவும் வேணும்.

## நூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

ஆசார்ய விஷயத்தில் க்ருதஜ்ஞதை, விஶ்வாஸம், ப்ரேமம், விஶ்லேஷபீ₄ருவாகை, ஸம்ஶ்லேஷவிஷயம், மங்க₃ளா ஶாஸநம், க₃திசிந்தனை, அநுப₄வேச்சை₂ இவையித்தனையு முடையவன் ஆத்மஜ்ஞாநமுடையவனாகிறான்.

## நூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

அர்த்த₂ப்ரவணனுக்கு ப₃ந்து₄வுமில்லை, கு₃ருவுமில்லை ; விஷயப்ரவணனுக்கு லஜ்ஜையுமில்லை, ப₄யமுமில்லை; க்ஷுத்து

---

அதனால் ஶிஷ்யனுக்கு ஓர் அஹங்காரம் ஏற்பட இடமுண்டு. அதற்கிடங்கொடாமல் ஸமநிலையில் நின்று அந்த ஸ்வப்ரஸாத₃த்தையும் அப்ரஸாத₃ம்போலே (ப்ரஸாத₃மின்மைபோலே) ப₄ாவித்து அடங்கியிருக்கவேண்டும். சில சமயம் ஆசார்யன் அப்ரஸாத₃மாகிற நிக்₃ரஹத்தையும் காட்டக்கூடும்; அப்போது ஶிஷ்யன் வெறுப்படையாமல், அதையும் ஆசார்யன் அளித்த பெரிய ஸன்மானம்போலே நினைத்து மகிழ்ந்திருக்கவேணும்.

### நூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

ஆசார்யன் விஷயத்தில் (1) அவன் செய்த உபகாரத்துக்கு நன்றி பாராட்டுதல். (2) அவன் வார்த்தையில் நம்பிக்கை கொள்ளல். (3) அவனிடம் அன்பு காட்டுதல். (4) அவனைப் பிரிவதில் த₄ரியசமை. (5) அவனோடு எப்போதும் கூடியிருத்தல். (6) அவனுக்கு மங்க₃ளா ஶாஸனம் செய்தல். (7) அவனையே ப்ராப்யப்ராபகங்களாக எப்போதும் நினைத்தல். (8) அவனுடைய திருமேனியையும் திருக்குணங்களையும் எப்போதும் அநுப₄விக்க விரும்புதல் ஆகிய இவ்வெட்டையுமுடையவனே ஆசார்யகடாக்ஷத்தாலே உண்மையான ஆத்மஜ்ஞானமுடையவனாவான்.

### நூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

பொருளில் ஈடுபட்டவனுக்குப்பொருளே அனைத்திலும் பெரிதாகத் தோன்றுமாகையாலே, அவன் உறவினரையும் ஆசார்யனையும் உபேக்ஷித்து விடுவான். ''காமாதுராணாம் ந ப₄யம் ந லஜ்ஜா'' (காமத்

நலிந்தவனுக்கு விவேகமும் இல்லை, நியதியுமில்லை; ஜ்ஞாநிக்கு நித்₃ரையுமில்லை, ஸுக₂முமில்லை.

## நூற்றைம்பதாம் வார்த்தை

திருக்கச்சிநம்பி ஸ்ரீபாத₃த்திலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஆஶ்ரயித்து 'அடியேனை அங்கீ₃கரித்தருளவேணும்' என்ன; நம்பி, பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, a பெருமாளும், 'நம்மை அவனுக்குச் சொல்லும்' என்ன, b நம்பியும் பெருமாள் ப்ரபத்தியை அருளிச்செய்ய, ஸ்ரீவைஷ்ணவரும், க்ருதார்த்த₂ராய் க்ஷணகாலமும் நம்பியைப் பிரியாதே ஸேவிக்க,

---

தில் ஈடுபட்டவனுக்கு ப₄யமில்லை; வெட்கமில்லை) என்கிறபடியே காமம் கண்ணை மறைத்துவிடுமாகையால், அவர்கள் தங்கள் காமத்தைப் பிறர் அறிந்துவிடுவார்களே என்று வெட்கப்படவும் மாட்டார்கள். தகாத காமமாயிற்றே என்று ப₄யப்படவும்மாட்டார்கள். பசியால் வருந்தினவனுக்கு 'இன்னபொருளைச் சாப்பிடலாம், இன்னதைச் சாப்பிடக்கூடாது' என்ற பகுத்தறிவும் அகன்றுவிடும். 'குளித்து, உட்கார்ந்துகொண்டு சாப்பிடவேண்டும்' முதலான நியதியும் பார்க்க மாட்டான். எம்பெருமானுடைய ஜ்ஞானம் கனிந்து ப₄க்தியாக முற்றிய ஆழ்வார்கள் போன்றவர்களுக்கு "தொல்லைமாலைக் கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" [திருவிருத்தம் 97] என்கிற ரீதியில் நித்₃ரையுமில்லை; அடிக்கடி எம்பெருமானைப்பிரிந்து துன்பமுறுவதும், கூடினபோது "ஸம்யோகா₃ விப்ரயோகா₃ந்தா: ' [ரா-அ 105-16] [சேர்வதெல்லாம் பிரிவதிலேயே முடியும்] என்கிறபடியே வரப்போகிற பிரிவை நினைத்துவருந்துவதுமாயிருக்குமாகையாலே ஸுக₂முமில்லை.

### நூற்றைம்பதாம் வார்த்தை

இவ்வார்த்தை ஆசார்யவிஶ்லேஷ ப்ரஸங்க₃த்தில் மூச்சடங்கப் பெற்ற ஒரு பரமபா₄க₃வதரின் வ்ருத்தாந்தத்தை விளக்குகிறது. a "ப்ராப்யப்ராபகங்களாயிருப்பது நாமே என்று அந்த ஸ்ரீவைஷ்ணவருக்குச் சொல்லும்" என்று பெருமாள் அருளிச்செய்தார் என்றபடி. b திருக்கச்சிநம்பி பெருமாள் அருளிச்செய்த ராம க்ருஷ்ண வராஹ சரமஶ்லோகங்களை அந்த ஸ்ரீ வைஷ்ணவருக்கு அர்த்த₂த்தோடேகூட உபதே₃ஶித்தார் என்று கருத்து.

c இவருடைய ப்ரக்ருதிப₃ந்து₄க்கள் இதுகண்டு பொறுக்க மாட்டாமல் இவரைப் பிரித்துக்கொண்டுபோய் ப்ராயஶ்சித்தம் பண்ணவேணுமென்ன, d இவரும் ஆகில், அநந்தஸரஸ்ஸில் தீர்த்த₂மாடிவாராநின்றேனென்று போந்து, நம்பி ஸ்ரீபாத₃த்திலே தண்டனிட்டு நிற்க, 'நீர் போகாவிட்டதென் அவர்கள் பொல்லாங்கு சொல்லாமே?' என்ன, 'அத்தனையோ அடியேனுக்கு' என்று ஶோகம் பொறுக்கமாட்டாமல், ஶோகார்த்தராய் பரமபத₃த்திற்கு எழுந்தருளினார்.

## நூற்றைம்பத்தோராம் வார்த்தை

அநந்தாழ்வான் எச்சானுக்கு அருளிச்செய்த வார்த்தை; இவ்வாத்மாவாகிற பெண்பிள்ளையை, ஆசார்யனாகிற பிதா,

---

c அந்தணர் குலத்தைச் சேர்ந்த அந்த ஸ்ரீவைஷ்ணவருடைய தே₃ஹப₃ந்து₄க்கள் நம்பியினுடைய ப்ரப₄ாவமறியாமல், அவர் வைஶ்யர் என்பதையே பார்த்து, வைஶ்யரை ஆஶ்ரயித்ததற்கு ப்ராயஶ்சித்தம் பண்ண முயன்றார்கள் என்று கருத்து. d அந்த ஸ்ரீவைஷ்ணவரும் அவர்களிடமிருந்து தப்புவதற்காக, தேவப்பெருமாள் கோவிலின் முன்புறமிருக்கும் அநந்தஸரஸ்ஸில் நீராடி ப்ராயஶ்சித்தம் செய்துகொள்ள வருவதாகப் பொய்கூறி, நம்பி திருவடிவாரத்தை அடைந்து வணங்கி, அவரை அகலமாட்டாமல்நிற்க, நம்பியும் 'தே₃ஹப₃ந்து₄க்களோடு விரோதி₄த்துக் கொண்டு அவர்களிடம் போகாமல் நீர் இங்கிருப்பது தவறு' என்று நிர்ப₃ந்த₄மாக அவரைப் போகச் சொல்ல, நம்பியின் விஶ்லேஷம் (பிரிவு) பொறுக்க மாட்டாமல் பெருவருத்தமுற்றவராய், அப்போதே மூச்சடங்கிப் பரமபத₃மடைந்தார் என்று கருத்து.

### நூற்றைம்பத்தோராம் வார்த்தை

இவ்வார்த்தை—ஆசார்யன் எம்பெருமானுக்கு ஒரு ஶிஷ்யனை அளிப்பதை, ஒரு பிதா வரனுக்குத் தன் பெண்ணை நீர்வார்த்துக் கன்யகாத₃ானமாகக் கொடுப்பதோடு ஒப்பிடுகிறது. இவ்விஷயம் ஆசார்ய ஹ்ருத₃யம் 121 வது சூர்ணையிலும், அதன் வ்யாக்₂யானத்திலும் மிக விரிவாக விவரிக்கப்பட்டது. ஒரு விவாஹத்துக்கு கடகர்கள் போலே, இந்த ஜீவாத்ம பரமாத்மாக்களின் விவாஹத்துக்கு

எம்பெருமானுகிற வரனுக்கு, கு₃ருபரம்பரையாகிற புருஷ காரத்தை முன்னிட்டு, த்₃வயமாகிற மந்த்ரத்தைச்சொல்லி, உத₃கம்பண்ணிக்கொடுத்தான்.

## நூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாத₃த்திலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், 'அஹங்காராதி₃கள் நடையாடிக்கொண்டுபோருகிற அடியேனுக்கு அக்கரைப்பட வழியுண்டோ?' என்று கேட்க, அருளிச்செய்த வார்த்தை—போ₄க்தாவானவன், ¹ போ₄க்₃யபதா₃ர்த்த₂த்தைக் குலங்கொண்டே ஸ்வீகரித்துவைத்து, போ₄க₃காலம் வந்தவாறே குலங்கறுத்து மணியை பு₄ஜிக்குமாபோலே, ஆசார்யவரணம் பண்ணி ஶரணாக₃தனுயிருப்பானொரு அதி₄காரிக்கு அஹங்காராதி₃கள் நடையாடிற்றாகிலும் கைவிடாதே ஸ்வீகரித்து, "தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல" என்கிறபடியே இவனுடைய அஹங்காராதி₃களாகிற சேற்றைக்கழுவிப் பொகட்டு போ₄க்₃யமான வஸ்துவை, போ₄க்தாவான எம்பெருமான்தானே பு₄ஜிக்குமென்று நினைத்திரீர் என்று அருளிச்செய்தார்.

---

கு₃ருபரம்பரையில் அடங்கிய ஆசார்யர்கள் க₄டகர்கள் என்று கருத்து. எச்சான், அநந்தாழ்வான் இருவரும் முதலில் எம்பெருமானுருக்கும் பிறகு அருளாளப்பெருமாள் எம்பெருமானுருக்கும் ஶிஷ்யர்களாயிருந்தவர்கள்.

### நூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

1 சுரங்கத்திலிருந்து மணி முதலான போ₄க்₃யப் பொருள்களை அவற்றிலுள்ள அழுக்கோடேயே கைக்கொண்டு, அவற்றை அணியும் போது சாணை முதலானவற்றில் இட்டு அவ்வழுக்கைக் கழற்றி அந்த மணி முதலானவற்றை அணிவதுபோலே, எம்பெருமான் ஓராசார்யன் மூலம் தன்னையடைந்த அதி₄காரியை அஹங்காரம் முதலான அழுக்குக்களோடேயே ஏற்றுக்கொண்டு "தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல" [திருவாய் 3-5-11] என்கிறபடியே அவற்றைக் காலக்ரமத்தில் கழித்து, திருநாட்டுக்குக் கொண்டுபோய் அநுப₄விப்பான் என்று கருத்து.

## நூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

எங்களாழ்வான்; - ஆசார்யனுவான் அஹங்காரத்தை விட்டு அழிச்சாட்டத்தை விட்டு அலமாப்பை விட்டு அகாரார்த்த₂மான அந்தர்யாமிக்கே அற்று அர்ச்சாவதாரத்தை ஆஶ்ரயித்து ஆநந்தி₃யாகப்போருமவன்; அல்லாதான், ஒருவனுக்குக் குடிமகனுய் லோககு₃ருவாயிருக்க, லோகத்துக்கடைய குடிமகனுகா நின்முன்.

## நூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

நாராயணனைப் பற்றி நாடுபெறலாயிருக்க, a நாரங்களைப் பற்றி நரகவாஸிகளாகாநின்முர்கள்; எம்பெருமானைப் பற்றி ஏற்றம்பெறலாயிருக்க, b ஏழைகளைப்பற்றி எளிவரவுபடாநின்முர்கள்; ஸ்ரீவைஷ்ணவர்களைப்பற்றிச் சீர்மைபெறலாயிருக்க, c சில்வானரைப்பற்றிச் சீர்கேடராகாநின்முர்கள்; ஆசார்யனைப்

---

### நூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

தே₃ஹாத்மாபி₄மானமாகிற அஹங்காரத்தை விட்டு, ஸ்வஸ்வாதந்த்ர்யமாகிற அழிச்சாட்டத்தை (சண்டித்தனத்தை) விட்டு, அந்யஶேஷத்வமாகிற அலமாப்பை (பெருவருத்தத்தை) விட்டு, அகாரத்தின் பொருளான அந்தர்யாமிக்கே அற்றுத் தீர்ந்து, அர்ச்சாவதாரமான எம்பெருமானை ஆஶ்ரயித்து, பரமபத₃ம் சென்று பேராநந்த₃மடையத் தகுதியுள்ளவன் எவனே அவனே ஆசார்ய லக்ஷண பூர்த்தியுள்ளவன். இந்த லக்ஷண பூர்த்தியில்லாதவன், ஓராசார்யனுக்கு அடிமைப் பட்டவனுயிருந்து, பிறகு லோககு₃ரு என்று பேரைச் சுமந்து கொண்டு, தன் ஶிஷ்யலோகம் முழுவதற்கும் அவர்கள் கொடுக்கும் பணத்துக்காக அடிமைத் தொழில் புரிகின்முன்.

### நூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

அழகான ப்ராஸம் எனப்படும் மோனைகள் நிறைந்த வார்த்தை இது. a நாரங்கள்—அழியாதவனுகையாலே நரனெனப்படும் எம்பெருமானிடமிருந்து உண்டான ஶப்₃த₃ாதி₃ விஷயங்கள். b ஏழைகள்—"சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே" [திருமாலை 10] என்கிற ரீதியிலே எம்பெருமானேடு ஒப்பிடும்போது த₃ரித்₃ரர்கள் எனத்தக்க மற்ற தெய்வங்களைச் சொல்லுகிறது. அன்றிக்கே "ஏழையராவி உண்ணும்" [திருவாய் 7-7-1] முதலான இடங்களிற் போலே பெண்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். c சில்வானர்—

பற்றி d அம்ருதபாநம் பண்ணலாயிருக்க, அஜ்ஞரைப்பற்றி அநர்த்த₂ப்படாநின்றார்கள்; e மந்த்ரத்தைப்பற்றி மாசறுக்கலாயிருக்க, மமதையைப்பற்றி f மரியாநின்றார்கள்; g (வடுகநம்பி-) நியந்தாவான ஆசார்யன் ஸந்நிதி₄யிலே வர்த்தித்தல், நியமவானான *ஶி*ஷ்யன் ஸந்நிதி₄யிலே வர்த்தித்தல் செய்யிலல்லது நியதனாகைக்கு வழியில்லை.

## நூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

a தான் வைஷ்ணவனாயற்றால் தனக்குத் தன்னாசார்யனிற் குறைந்திருப்பானொரு *ஶி*ஷ்யனில்லை ; b உத்₃தே₃*ஶ்*ய ப்ரதிபத்திதுல்யமாகையாலே. c ஆகிறபடியென்னென்னில் ;- 'என்னுடைய அஜ்ஞாநத்தையும், அ*ஶ*க்தியையும், அநநுஷ்ட₂ாநத்தையும் பாராதே, என்னை விஷயீகரித்து, d அத்தலைக்காக்கினவனன்றோ' என்று *ஶி*ஷ்யன் உத்₃தே₃*ஶ்*ய ப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு போரக்கடவன்; ஆசார்யனும், e 'என்னுடைய அஜ்ஞாநத்தையும், அ*ஶ*க்தியையும்,

---

அற்பர்கள். d அம்ருதபானம் – அழியாததாய், பரம போ₄க்₃ய வஸ்துவான ப₄க₃வத்₃விஷயத்தை அநுப₄விப்பது. e மந்த்ரம்—திருமந்த்ரமும் த்₃வயமும். f மரியாநின்றார்கள் — ஸ்வரூப நாஶத்தை அடையாநின்றார்கள். g ஆசார்ய லக்ஷண பூர்த்தியுள்ள ஓர் ஆசார்யனுடனே ஶிஷ்ய லக்ஷணபூர்த்தியுள்ள ஓர் ஶிஷ்யனுடனே கூடியிருந்தால்தான், எம்பெருமானே ப்ராப்யமாய், ப்ராபகமாய், தா₄ரகமாய், போஷகமாய், போ₄க்₃யமாயிருப்பவன் என்ற நியதி ஏற்படும் என்று கருத்து. இந்தக் கடைசி வாக்யத்தின் தொடக்கத்தில் சில ப்ரதிகளில் மாத்திரம் வடுகநம்பி என்று உள்ளது.

### நூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

a வைஷ்ணவனாயிருக்கும் ஓர் ஆசார்யன் தன் ஶிஷ்யனை, தன் ஆசார்யனை ஒத்தவனாகவாவது நினைக்கவேண்டும். b ஒருவரை ஒருவர் உத்₃தே₃ஶ்யராகக் கொள்ளும் நினைவு ஒத்திருக்கையாலே, முன் வாக்யத்தில் சொன்னபடி ஆசார்யன் நினைவு இருக்கவேண்டும் என்று கருத்து. c தொடங்கி b வாக்யத்தை விவரிக்கிறது. d அத்தலைக்கு – எம்பெருமானுக்கு. e " காமுகன் மரத்தாலான பெண் பொம்மையைக் கண்டாலும் தழுவுவதுபோலே, ப₄க₃வத்₃விஷயத்தி

அநநுஷ்டா₂நத்தையும் பாராதே, விஷயப்ரவணன் மரப்பாவை காணிலும் ஆலிங்க₃நம் பண்ணுமாபோலே, என்பக்கலிலே யுட்பட பரதந்த்ரனாய்க்கொண்டு போருகிறானன்றே; ப₄க₃வத்₃ விஷயத்திலே தனக்குண்டான ஆத₃ராதிஶயமிருந்தபடியென்!' என்று உத்₃தே₃ஶ்யப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு போரக் கடவன்.

## நூற்றைம்பத்தாறும் வார்த்தை

ஆசார்யன் அருளிச்செய்யும் வார்த்தையை ஆப்தமென்று ஆத₃ரித்தார்க்கு a அந்த:கரணம் விதே₄யமாம்; அந்த:கரணம் விதே₄யமானவாறே அந்தர்யாமி ப்ரஸந்நனாம் ; அந்தர்யாமி ப்ரஸந்நனானவாறே b அந்த:ப்ரகாஶமும் அந்தஸ்ஸுக₂மும் உண்டாம் ; இவையிரண்டுமுண்டானவாறே c அந்தர்தோ₃ஷமும் அந்தர்து₃:க்க₂மும் கழியும் ; இவை கழிகிறவளவன்றிக்கே d அந்தமில்லாத ஆநந்த₃முமுண்டாம்.

## நூற்றைம்பத்தேழாம் வார்த்தை

ஶத்ருக்களுக்குக் கரையவேண்டா; ஸ்வாமியுமாய், ஶ்ரிய:பதியுமானவனுடைமையாகையாலே.

---

லுள்ள ஈடுபாட்டாலே, ஆசார்ய லக்ஷணபூர்த்தியில்லாத எனக்கு ஶிஷ்யனாய் ஆட்பட்டிருக்கிறானே '' என்று ஶிஷ்யனை உத்₃தே₃ஶ்யனாக நினைத்திருக்கவேண்டும் என்று கருத்து. இப்படி ஶிஷ்யனைப் போரப்பொலிய நினைக்கவேண்டியிருக்கையாலே, ஆசார்யன் தன் ஶிஷ்யனைத் தன் ஆசார்யனுக்கு ஸமமாகவோ, உயர்வாகவோகூட நினைப்பது பொருந்துமென்று கருத்து.

### நூற்றைம்பத்தாறும் வார்த்தை

a அந்த:கரணம் விதே₄யமாம்—நெஞ்சு ஆசார்யகடாக்ஷத்தாலே சொன்னபடி கேட்கும் என்று கருத்து. b அந்த:ப்ரகாஶம்—உள்ளேயிருக்கும் ஆத்மபரமாத்மாக்களைப்பற்றிய தெளிந்த அறிவு. c அந்தர் தோ₃ஷம்—உள்ளே இருக்கும் அஜ்ஞாநம், அந்யதா₂ஜ்ஞானம், விபரீதஜ்ஞானம், ப்ரக்ருதிவாஸநை முதலானவை. d அந்தமில்லாத ஆநந்த₃ம்—பேரின்பமாகிற மோக்ஷம்.

### நூற்றைம்பத்தேழாம் வார்த்தை

நம்மை உடையவனாய், ஸகல மங்க₃ளங்களுக்கும் இருப்பிடமான பிராட்டிக்கு நாத₂னுமான நாராயணனுக்கு நாம் உடைமைப் பொரு

## நூற்றைம்பத்தெட்டாம் வார்த்தை

ஆசார்யன் மூன்றுலே உத்₃தே₃ஶ்யன்; - ஜ்ஞாநப்ரத₃ன், அநுஷ்டா₂நப்ரத₃ன், உபாயப்ரத₃ன் என்று; ஸ்ரீ வைஷ்ணவர்களும் மூன்றுலே உத்₃தே₃ஶ்யர்; - உபாயத்துக்கு முற்பாடர்; உபேயத்துக்கு எல்லைநிலமாய், இருந்த நாளைக்கு உசாத்துணையென்று; பிராட்டியும் மூன்றுலே உத்₃தே₃ஶ்யை; - புருஷகாரபூ₄தை, கைங்கர்யவர்த்த₄கை, நித்யப்ராப்யை என்று; ஈஶ்வரன் மூன்றுலே உத்₃தே₃ஶ்யன்; - ருசிஜநகன், மோக்ஷப்ரத₃ன், உபாயபூ₄தன் என்று.

---

ளாயிருக்கையாலே "உடையவன் விரோதி₄களைப்போக்கி உடைமையை ஏற்றுக்கொள்வான்" என்னும் மஹாவிஶ்வாஸத்தாலே உடைமையான நாம் நம் விரோதி₄களைப்பற்றிக் கவலைப்படவேண்டா என்று கருத்து.

### நூற்றைம்பத்தெட்டாம் வார்த்தை

ஆசார்யன், ஸ்ரீவைஷ்ணவர்கள், பிராட்டி, எம்பெருமான் ஆகிய நால்வரும் மும்மூன்று காரணங்களாலே உத்₃தே₃ஶ்யர்கள் என்று சொல்லுகிறது இவ்வார்த்தை. அதாவது:— I அறியாத அர்த்த₂ பஞ்சகங்களை அறிவிப்பதாலும், நல்ல அநுஷ்டா₂னத்தை உபதே₃ஶிப்பதாலும், எம்பெருமானை உபாயமாகக் காட்டிக்கொடுப்பதாலும் ஆசார்யன் உத்₃தே₃ஶ்யன். II தனக்கு முன்னே எம்பெருமானை உபாயமாகப்பற்றிநின்று தனக்கு வழிகாட்டிகளாகையாலும், பரமபத₃த்தில் ப்ராப்யத்தைப் பெறும்போதும் அதுக்கு எல்லை நிலமாய் (சரமபர்வமாய்) இருக்கிறவர்களாகையாலும், இவ்வுலகில் இருக்கும்போதும் "போ₃த₄யந்த: பரஸ்பரம்" [கீ₃தை 10-9] [ஒருவர்க்கொருவர் அறிவிப்பவர்களாய்] என்கிறபடி ப₄க₃வத்₃விஷயத்தை அநுப₄விக்கத் துணையாயிருக்குமவர்களாகையாலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்₃தே₃ஶ்யர்கள். III எம்பெருமானிடம் புருஷகாரம் செய்து நம்மைச் சேரவிடுபவளாகையாலும், (பரமபத₃த்தில்) கைங்கர்யம் செய்யும்போது அதை வளர்ப்பவளாகையாலும், எப்போதும் நமக்கு ப்ராப்யையாயிருப்பவளாகையாலும் பிராட்டி உத்₃தே₃ஶ்யையாயிருக்கிருள். IV பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற பரமப்ராப்யத்தில் ருசியை விளைப்பவனாகையாலும், பரமமோக்ஷத்தை அளிப்பவனாகையாலும், அந்த மோக்ஷத்துக்குப் மூலகாரணஸாத₄னமாகவும் தானேயிருப்பவனாகையாலும் எம்பெருமான் உத்₃தே₃ஶ்யனாகிருன்.

## நூற்றைம்பத்தொன்பதாம் வார்த்தை

a ஸ்வபா₄வாந்யதா₂ஜ்ஞாநம், ஸ்வரூபாந்யதா₂ஜ்ஞாநம், இவை, (அந்யதா₂ஜ்ஞாநம்)? விபரீதஜ்ஞாநம்; b இவன் ஆத்ம ப்ரதா₃நம்பண்ணிணுப்போலே இருப்பதொன்றிறே அவன் ஜ்ஞாநப்ரதா₃நம் பண்ணினபடி.

## நூற்றறுபதாம் வார்த்தை

ஈஶ்வரனுகிற a கர்ஷகன், சேதநனுகிற b திருப்பள்ளித் தாங்கன்றை ஶேஷத்வஜ்ஞாநமாகிற c க்ஷேத்ரத்திலே ஊன்றி,

---

### நூற்றைம்பத்தொன்பதாம் வார்த்தை

a சங்கம் மஞ்சள்நிறமுடையது என்று நினைப்பதுபோன்ற இடங்களில் ஶங்க₂மாகிற த₄ர்மி சரியாக அறியப்படுகிறது. அதாவது அதன் ஸ்வரூபநிரூபகத₄ர்மம் சரியாக அறியப்படுகிறது. நிரூபித ஸ்வரூப விஶேஷணமான, அதாவது அந்த த₄ர்மியின் ஸ்வபா₄வமான வெள்ளைநிறமே மஞ்சள்நிறமாகத் தவருக அறியப்படுகிறது. இது ஸ்வபா₄வாந்யதா₂ஜ்ஞானம் அல்லது அந்யதா₂ ஜ்ஞானம் என்று சொல்லப்படும். கிளிஞ்சலை வெள்ளியாக நினைக்குமிடத்திலும், பழுதையைப் பாம்பென்று நினைக்குமிடத்திலும் த₄ர்மி ஸ்வரூபமே, அதாவது அதன் ஸ்வரூபநிரூபகத₄ர்மமே மாருக அறியப்படுகிறது. இது ஸ்வரூபாந்யதா₂ஜ்ஞானம் அல்லது விபரீத ஜ்ஞானம் என்று சொல்லப்படும். b ஶிஷ்யன் ஆசார்யனுக்குத் தன் ஆத்மாவை ஸமர்ப்பணம் பண்ணினதாக நினைப்பது தன்னதல்லாத தொன்றைத் தன்னதாக நினைத்து ஸமர்ப்பிப்பதாகையாலே, தன்னுடைய ஶேஷத்வமாகிற ஸ்வரூபநிரூபகத₄ர்மத்தை மாருடி நினைக்கையாகிற விபரீதஜ்ஞானமாகிறது. அதுபோலவே ஆசார்யன்—தன் ஆசார்யன் ஶிஷ்யனுக்கு அறிவு அளிக்கிருன் என்று நினையாமல், தான் அவனுக்கு அறிவு அளிப்பதாக நினைக்கிறதும் அவனது ஆசார்யபாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்தை மாருடி நினைக்கும் விபரீத ஜ்ஞானம் ஆகிறது. ஆகவே இரண்டும் விபரீதஜ்ஞானமேயாகிறது என்று கருத்து.

### நூற்றறுபதாம் வார்த்தை

a கர்ஷகன் - ''பத்தியுழவன்'' [நான் திருவ 23] என்கிறபடியே சேதனனை விதையாயிருக்கும் நிலையிலிருந்து படிப்படியாக முயற்சி செய்து, தான் அணிந்துகொள்ளும் மாலைபோன்ற பரமைகாந்தியாகும்

தநி₃யாபராத₄மும் d விபரீதஜ்ஞாநமுமாகிற புழுக்கடியாமல் நோக்கி, e கைங்கர்யாநுவர்த்தநமாகிற மடையாலே ஆசார்ய னருளாகிற நீர்பாய்ச்சி, அஹங்கார மமகாரமாகிற களை மண்டாமே, ப₄க₃வத்₃விஷயமாகிற களைக்கொட்டாலே சேற்றை யெடுத்து, f விபரீதாங்கீ₃காரமாகிற மாடும், ஶப்₃த₃ாதி₃விஷய மாகிற பேய்க்காற்றும் புகுராமே, ப்ரபந்நத்வமாகிற வேலியை யிட்டு, ஸ்ரீவைஷ்ணவர்களாகிற வர்ஷத்தையுண்டாக்கித் தளிரும் முறியும் மொட்டும் g செலுந்துமாய் அதின் ஒளிமொட்டெடுத்துக் கட்டின மாலையிறே பரமைகாந்தி.

## நூற்றறுபத்தோராம் வார்த்தை

பரமசேதநனாகிற பசியன், a ஆசார்யமுக₂த்தாலே அவக₄ாதனாய் சேதநனாகிற சிறுநெல் பொறுக்கி, வேத₃ாந்த மாகிற உரலிலே உபதே₃ஶமாகிற உலக்கையாலே,

---

நிலைக்கு மாற்றும் உழவன். b திருப்பள்ளித்தாங்கன்று – விதை. c க்ஷேத்ரம் – நிலம். d விபரீதஜ்ஞானம் – தே₃ஹாத்மாபி₄மானம் ஸ்வஸ்வாதந்த்ர்யம், அந்யஶேஷத்வஜ்ஞானம் முதலானவை, e கைங்கர்யாநுவர்த்தனம் - ஆசார்யவிஷயத்தில் கைங்கர்யமும் அவனைப் பின்செல்வதும். f விபரீதாங்கீ₃காரம் – முற்கூறிய விபரீதஜ்ஞான முடையவர்களோடு ஸஹவாஸம். g செலுந்து - கொழுந்து.

### நூற்றறுபத்தோராம் வார்த்தை

முந்தின வார்த்தையும் இதுவும் முதலியாண்டான் வார்த்தை. முந்தின வார்த்தையில் – ஸர்வேஶ்வரன் சேதனனைப் பரமைகாந்தி யாகத் திருத்துவதை ஓர் உழவன் விதையை ஊன்றி, பாதுகாத்து, நீர்பாய்ச்சி, வேலியிட்டு, பூப்பறித்து, மாலை கட்டி அணிவதாக உருவகப்படுத்தினார். இவ்வார்த்தையில் சேதன லாப₄மாகிற பசியை யுடைய பரம சேதனன், சேதனனாகிற நெல்லைப் பொறுக்கி உரலி லிட்டுக் குத்திப்புடைத்துக் கொழித்துக் களைந்து, கழுவிக் கல்லரித்து, பானையிலிட்டு உலைகட்டி அடுப்பிலிட்டுப் பொங்கவைத்து அன்ன மாக்கி, கரிப்பானையோடே படிஏறி மச்சுக்குச் சென்று பொற்கலத் திலிட்டு பு₄ஜிப்பதாக உருவகப்படுத்துகிறார். a ஆசார்யோபதே₂ஶத் தாலே குத்தினபின்பு அறிவுடைய சேதனனாகிற அரிசியாகும் சிறுநெல்.

b ஶ்ரவணமாகிற தலைத்துகை துகைத்து, c உடம்பாகிற உமி கழித்து, d மனனமாகிற அடுக்கலிட்டு, e நிதி₃த்₄யாஸநமாகிற சுளகாலே விவேகமாகிற கொழி கொழித்து, f அஹங்காரமம காரமாகிற அடிக்கழித்து, அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய மாகிற நுனிக்கொழித்து, g ருசிவாஸனையாகிற தவிடறக்குத்தி, ஶேஷத்வ ஜ்ஞாநமாகிற வெளுப்பையுண்டாக்கி, h அத்₄யவஸாய மாகிற அரிக்குஞ்சட்டியிலே ப்ரபத்தியாகிற நீரை வார்த்து, ஸாத₄நாந்தரமாகிற தவிடறக்கழுவி, ப்ரயோஜநாந்தரமாகிற

---

b ஆசார்யனிடமிருந்து முதலில் கேட்பதாகிற ஶ்ரவணம் நெல்லை முதலில் உரலிலிட்டுக் குத்தும் குத்தலாகிறது. c அதனாலே தே₃ஹாத் மாபி₄மானமாகிற உமி கழிகிறது. d ஶ்ரவணத்துக்கு அடுத்தபடி சேதனன் பல முறை செய்யும் மனனம் முற்கூறிய நெல்லை அடுத்த படி பல முறை குத்தும் அடுக்கலாகிறது. e மனனத்துக்குப் பிறகு சேதனன் செய்கிற நிதி₃த்₄யாஸனமாகிற த்₄யானம் சுளகாகவும் அதனால் பிறக்கும் விவேகம் (பகுத்தறிவு) கொழித்தலாகவும் உருவ கப்படுத்தப்படுகிறது. f இப்படி சுளகெனப்படும் முறத்திலேயிட்டுக் கொழிக்கும்போது, முறத்தின் அடியிலேயிருக்கும் நெல்லைக் கழித்து நுனியிலே இருக்கும் குருணையைக்கொழித்து, நடுவிலிருக்கும் அரிசியை எடுப்பதுபோலே, அஹங்கார மமகாரங்களாகிற அடிப்பகுதியைக் கழித்து, அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களாகிற நுனிப்பகுதி யைக் கொழித்துவிட்டு, சேதனனாகிற அரிசியை எடுத்துக்கொள்ளு கிறான் என்று கருத்து. g அந்த அரிசி தவிடோடு சேர்ந்திருக்கு மாகையாலே சிவந்திருக்கும். அதை மறுபடி குத்தி வெளுப்பாக்கு வது போலே இந்தச் சேதனனாகிற அரிசியையும் ருசி வாஸனை களாகிற தவிடு போகும்படி மறுபடியும் வேதா₃ந்தமாகிற உரலிலே ஆசார்யோபதே₃ஶமாகிற உலக்கையாலே குத்தி ப₄க₃வச்சே₂ஷத்வ ஜ்ஞானமாகிற வெளுப்பை உண்டாக்குகிறான் என்று கருத்து. h இப்படித் தவிடறக்குத்தி வெளுப்பான அரிசியை அரிக்குஞ்சட்டி யிலே இட்டு நீர் வார்த்துக் களைந்து அதில் ஸூக்ஷ்மமாக ஒட்டிக் கொண்டிருக்கும் தவிடுபோம்படி கழுவி, அரிசியோடு சேர்ந்திருக் கும் கற்களை முழுவதும் அரித்தெடுப்பதுபோலே, 'எம்பெருமானே உபாயமாயும் உபேயமாயுமிருப்பவன்' என்னும் உறுதியாகிற அரிக் குஞ்சட்டியிலே இச்சேதனனாகிய அரிசியையிட்டு, ஶரணாக₃தியாகிற நீரைவார்த்து, ஸாத₄நாந்தரங்களாகிற ஸூக்ஷ்மத் தவிடு போம் படி கழுவி, ப்ரயோஜநாந்தரங்களாகிற கற்களை முழுவதும் அரிக்

கல்லற அரித்து, i பரபக்தியாகிற பானையிலே பரஜ்ஞாநமாகிற உலைகட்டி. அநுபவமாகிற அடுப்பிலே விஶ்லேஷமாகிற நெருப்பையிட்டு, இருவினையாகிற விறகை மடுத்து, த்வரையாகிற ஊத்தூதி, ஆற்றாமையாகிற கொதிகொதித்து, பரமபக்தியாகிற பொங்கிலே, j ஸூக்ஷ்ம ஶரீரமாகிற கரிக்கலத்தோடே ஸுஷும்நையாகிய வாசலாலே புறப்பட்டு, அர்ச்சிராதியாகிற படியொழுங்காலே மாகவைகுந்தமாகிற மச்சிலேற்றி, அப்ராக்ருதமாகிற பொற்கலத்தோடே "அஹமந்நம்" என்கிற சோற்றையிட்டு, "அஹமந்நாத:"என்று புஜியாநிற்கும்; இவையிரண்டும் முதலியாண்டான் அருளிச்செய்த வார்த்தை.

---

கிருன் என்று கருத்து. i அரிக்குஞ்சட்டியில் கழுவிக் கல்லரித்த பின்பு அரிசியைப் பானையிலே உலைகட்டி, அடுப்பிலே நெருப்பையிட்டு விறகையடுக்கி, ஊதுகுழலால் ஊதி, உலையிற் கொதி வந்த பின்பு பொங்கிச் சோறு பக்குவமாகும். அதுபோலே சேதனனுகிற அரிசியை, பரபக்தியாகிற பானையிலே பரஜ்ஞானமாகிற உலைகட்டி பகவதநுபவமாகிற அடுப்பிலே, தன்னை (எம்பெருமானைப்) பிரிவதாகிற நெருப்பையிட்டு, புண்யபாபங்களாகிற விறகையடுக்கி, எம்பெருமானைப் பெறவேணும்' என்னும் த்வரையாகிற ஊதுகுழலைக் கொண்டு ஊதி, பிரிவாற்றாமையாகிற கொதிகொதித்து, பரமபக்தியாகிற பொங்கின நிலையை (பக்குவ நிலையை) சேதனனுகிற அவ்வரிசிக்கு விளைக்கிருன் என்று கருத்து. j பொங்கின சோற்றைக் கரிக்கலத்தோடு சமையல் அறை வாசல் வழியாக வெளியில் கொண்டு வந்து மச்சுப்படி வழியாக மச்சிலேறி அழகான கலத்திலிட்டு, பசியுடைய சக்ரவர்த்திகள் நிலாச் சாப்பாடு சாப்பிடுவார்கள். அதுபோலே, சேதனலாபமாகிற பெரும் பசியையுடைய முற்கூறிய ஸர்வலோக சக்ரவர்த்தியான எம்பெருமான், இச்சேதனனுகிற பக்வாந்நத்தை ஸூக்ஷ்ம ஶரீரமாகிற கரிக்கலத்தோடே எடுத்துக் கொண்டு ஸுஷும்நா நாடியாகிற வாசலாலே புறப்பட்டு அர்ச்சிராதிகதியாகிற மச்சுப்படி வழியாக "மாகவைகுந்தம்" [திருவாய் 9.3-7] எனப்படும் வைகுண்டமாகிற மச்சிலேற்றி அப்ராக்ருத ஶரீரமாகிற பொற்கலத்திலே "அஹமந்நம்" [தை-ப்ருகு 10] [நான் பரமாத்மா புஜிக்கும் அன்னமாயிருக்கிறேன்] எனப்படும் இச்சேதனனுகிற அறுசுவை அன்னத்தையிட்டு "அஹமந்நாத:" [தை-ப்ருகு 10] [நான் சேதனனுகிற அன்னத்தை புஜிக்கிறேன்] என்று அநுபவிக்கிருன் என்று கருத்து.

## நூற்றறுபத்திரண்டாம் வார்த்தை

கலங்குகிறதும், கலக்குகிறதும், கலங்கிக்கிடக்கிறதும், தெளிகிறவனும், தெளிவிக்கிறவனும், தெளிந்திருக்கிறவனும்; கலங்குகிறான் சேதநன்; கலக்குகிறது அசித்து; a கலங்கிக் கிடக்கிறான் ஸம்ஸாரி; தெளிகிறான் சேதநன்; தெளிவிக்கிறான் ஆசார்யன்; b தெளிந்திருக்கிறான் ஈஶ்வரன்; ஆகையாலே கலங்குகிற தன்னையும், கலக்குகிற அசித்தையும், தெளிவிக்கிற ஆசார்யனையும், தெளிந்த ஈஶ்வரனையும் அறியவேணும்.

## நூற்றறுபத்துமூன்றாம் வார்த்தை

நஞ்சீயர் பரமபத₃த்துக்கு எழுந்தருளுகிற காலத்திலே, a தெற்காழ்வார் ப₄ட்டர், ஜீயர் ஶ்ரீபாத₃த்திலே எழுந்தருளி 'உமக்குச் செய்யவேண்டுவதென்?' என்று கேட்டருள, ஜீயர், b "பெருமாள் ஸர்வஸ்வதா₃நம்பண்ண அநுப₄விக்கவேண்டியிராநின்றது" என்று விண்ணப்பஞ்செய்ய; ப₄ட்டரும் இத்தைத் c திருமாலைதந்தபெருமாளுக்கு அருளிச்செய்ய; அவரும் d பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும்

---

**நூற்றறுபத்திரண்டாம் வார்த்தை**

a சேதனன் ஆசார்யோபதே₃ஶம் பெறுவதற்கு முன்பு கலங்கிக் கிடக்கிறவனாகவும், பெற்ற பிறகு தெளிகிறவனாகவும் ஆகிறான் என்று கருத்து. b ஈஶ்வரன் எப்போதுமே தெளிந்திருக்கிறான் என்று கருத்து.

**நூற்றறுபத்துமூன்றாம் வார்த்தை**

இந்த வார்த்தை "தூவிரிய" [பெரியதிரு 3·6] ப்ரவேஶத்திலே பெரியவாச்சான்பிள்ளையால் சுருக்கமாக எடுக்கப்பட்டுள்ளது. கு₃ருபரம்பரையிலும் (பக்கம் 380, 381) உள்ளது. a 'தெற்காழ்வார் ப₄ட்டர்' என்பவர் நஞ்சீயர் ஶிஷ்யர்களில் ஒருவர். 'தூவிரிய' ப்ரவேஶத்திலிருந்து இவருக்கு 'பெற்றி' என்கிற திருநாமமுண்டு என்று விளங்குகிறது. b பெருமாள் சாத்திக்கொண்டிருக்கும் வஸ்த்ரத்தைக் களைந்து திருமேனியை முற்றும் அநுப₄விக்கப்பண்ணுகையே ஸர்வஸ்வதா₃நம் பண்ணுகையாகும். "மறைவறத் திருமேனி காட்டுகை" என்று கு₃ருபரம்பரையில் விளக்கப்பெற்றுள்ளது. "பெருமாள் எழுந்தருள, பின்னும் முன்னும் சுற்றும் வந்து திருவடித் தொழவேண்டியிராநின்றேன்" என்று நஞ்சீயர் ஆசைப்பட்டதாக 'தூவிரிய' ப்ரவேஶத்திலுள்ளது. c திருமாலைதந்தபெருமாள்— இவர் நம்பெருமாளுடைய அர்ச்சகர். d பெருமாள் - நம்பெருமாள்.

புறப்பட்டருளி, சேலையைக்களைந்தருளி ஜீயரை அநுப₄விப்பித்தருள, ஜீயரும் அநுப₄வித்து, பிள்ளைதொடக்கமான முதலிகளைக்குறித்து, "பெருமாள் எனக்கு ஸர்வஸ்வதா₃நம் பண்ணியருளினார்; e நானும் ஸர்வஸ்வதா₃நம் பண்ணக் கடவதாக ஒருப்பட்டேன், அபேக்ஷையுடையார் உடையபடியே அபேக்ஷித்துக்கொள்ளுங்கோள்" என்று அருளிச்செய்ய, f பிள்ளையும் "அடியேனுக்குத் தஞ்சமாக ஒருவார்த்தை அருளிச்செய்ய வேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய, g 'மணக்கோலத்தே மூளைதெளிப்பாரைப்போலே இப்போது தஞ்சமான ஒருவார்த்தை யுண்டோ கேட்பது!' என்று பின்னையும் அருளிச்செய்த வார்த்தை ;-

h "ஆத்மவிநியோக₃ம் ஈஶ்வரனென்றிராதே, ஈஶ்வர விநியோக₃ம் ஆத்மாவென்றிரும்" என்றருளிச்செய்ய; i இவர் திருவுள்ளம் ப்ரஸந்நமாகாமையாலே பேசாதே நிற்க; 'உம்முடைய நினைவேது சொல்லிக்காணீர்' என்ன; j "ஒரு ஸ்ரீவைஷ்ணவர், பரமபத₃த்துக்கு எழுந்தருளினால் இருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் என் நினைந்திருக்கக்கடவர்?" என்ன;

---

e "நானும் எனது ஶிஷ்யர்களான உங்களுக்கு நீங்கள் எதைக்கேட்டாலும் உபதே₃ஶிக்க முற்பட்டேன்" என்று கருத்து. "மறைவறச் சரமார்த்த₂விஶேஷங்களை வெளியிடுகை" என்று கு₃ருபரம்பரையில் விளக்கப்பெற்றுள்ளது. f பிள்ளை-நம்பிள்ளை. g 'கல்யாணத்தின்போது பாலிகையிலே அங்குரார்ப்பணம் செய்வதுபோலே, நான் எம்பெருமானோடு விவாஹம் செய்யப்போகிற இந்த சமயத்திலே உங்களுக்குத் தஞ்சமான ஒரு வார்த்தையை நீங்கள் கேட்பதே!' என்று நஞ்சீயர் ஈடுபட்டார் என்று கருத்து.

h 'பரமபத₃த்துக்குச் சென்று சேதனன், ஈஶ்வரனை அநுப₄விப்பது புருஷார்த்த₂ம் என்றிராமல், ஆத்மாவைப்பெற்று அநுப₄விப்பவன் ஈஶ்வரன்; இவனைப்பெற்று உகக்கும் ஈஶ்வரனுக்கு இஷ்டப்படி விநியோக₃ம் கொள்ளும்படியிருக்கை சேதனனுக்குப் புருஷார்த்த₂ம் என்று நினைத்திரும்' என்று கருத்து. i இந்த வார்த்தையைக் கேட்டபின்பு நம்பிள்ளைக்குப் பூர்ணத்ருப்தி ஏற்படாமையாலே, அவர் பேசாமலிருக்க, "நீர் இன்னும் என்னிடமிருந்து என்ன கேட்கவிரும்புகிறீர்?" என்று நஞ்சீயர் கேட்டார் என்றபடி. j இது நம்பிள்ளையினுடைய கேள்வி.

k "அது அதி₄காராநுகு₃ணமாயன்றே இருப்பது; த்₃ருப்தனாகில் ஆர்த்தனாயிருக்கிறான், ஆர்த்தனாகில் த்₃ருப்தனாயிருக்கிறான்" என்று அருளிச்செய்ய; l பிள்ளையும் இவ்வர்த்த₂த்தை அநுஷ்டா₂நபர்யந்தமாகக் கண்டபடி; - அம்மங்கியம்மாள், பரமபத₃த்துக்கு எழுந்தருளுகிற காலத்திலே, அவர் திருமாளிகையிலே பிள்ளை எழுந்தருள; அவருடைய தே₃வியார் ப்ரஸந்நையாயிருக்க, ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்துப் போந்த முதலிகள் 'இதுக்கு நித₃ாநம் என்?' என்று கேட்க; 'அம்மாள், தே₃வியார் விஷயத்தில் இதுக்கு முன்பு பண்ணின ப்ராதிகூல்யம் உண்டாகிலன்றே அவர்பேற்றுக்கு இவர் வெறுக்கவேண்டுவது' என்று அருளிச்செய்தார்; அநந்தரம் தம்முடைய ஸ்ரீபாத₃த்தையுடையாரொரு ஸ்ரீ வைஷ்ணவர் திருநாட்டுக்கெழுந்தருள, ஸ்ரீ வைஷ்ணவர்பிள்ளைகள் தம்முடைய ஸ்ரீ பாத₃த்திலே விழுந்து அழ; 'இதுக்கு அடியென் ?' என்று முதலிகள் கேட்க, "பெறுகிற தே₃ஶம் கொந்தளிக்கிறபடி கண்டால், இழக்கிற தே₃ஶம் என்படக்கடவது ?" என்று அருளிச்செய்தார்.

## நூற்றறுபத்துநாலாம் வார்த்தை

ப₄ட்டர் ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்திருப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவரை 'ப்ரஸாத₃க்கிழியையெடுத்துக்கொண்டு வாரும்' என்ன,

---

k அதற்கு நஞ்சீயருடைய பதில் இது. l நஞ்சீயருடைய இவ்வார்த்தையின் பொருளை நம்பிள்ளை இருவருடைய அநுஷ்டா₂னத்திலே நேரே அநுப₄வித்தபடியைக் காட்டுகிறது. அம்மங்கியம்மாள் தே₃வியார் ஆர்த்தாதி₄காரியாகையாலே தமது ப₄ர்த்தா பரமபத₃மடைந்ததற்கு உகந்து, தாமும் விரைவில் அவரை அடைந்துவிடுவதில் உறுதியுடனிருந்தார். ஸ்ரீவைஷ்ணவர்பிள்ளைகள் த்₃ருப்தாதி₄காரிகள்; பரமபத₃மடைகிற சேதனனைப்பெற்று நித்யவிபூ₄தியிலுள்ளார் ஆநந்த₃த்தாலே கொந்தளிப்பதை "சூழ்விசும் பணிமுகில்" [திருவாய் 10-9] முதலானவிடங்களில் பார்க்கிறோம். அத்தகைய அதி₄காரியை இழந்து. அவரது பிரிவு பொறுக்கமாட்டாமல், உடனே மோக்ஷமடைவதையும் விரும்பாத த்₃ருப்தாதி₄காரிகள் வருத்தத்தாலே கொந்தளிப்பதில் வியப்பில்லை— என்று நம்பிள்ளை அருளிச்செய்தது முதல் வார்த்தையோடு முரண்பாடின்றியிலே பொருந்துகிறது—என்று கருத்து.

### நூற்றறுபத்துநாலாம் வார்த்தை

ப₄ட்டர் ஶிஷ்யர் ஒருவர் பணத்தில் சாபல்யமுடையவர். அவருடைய த₄னசாபல்யத்தைப் போக்கவேண்டி ஒரு நாடகமாடினார்

ப்ரஸாத₃க்கிழியினருகே பணக்கிழியுமிருக்க, அவர் ப்ரஸாத₃க்கிழியையெடுப்பது பணக்கிழியையெடுப்பதாய்நிற்க, இவர் வரக்காணுமையாலே எழுந்தருளி, இவர் நிற்கிற நிலையைக்கண்டு " இடம்பெற்றவளவிலே இருவரும் உம்மை நலிந்தார்களாகாதே, வாரீர் " என்று அருளிச்செய்தார்.

## நூற்றறுபத்தஞ்சாம் வார்த்தை

ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாத₃த்திலே ஸேவிப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள், ராக₃த்₃வேஷங்கொண்டாடி அவர்களிலே ஒருவர் பரிப₄வப்பட்டோம் என்று பட்டினிவிட, 'பரிப₄வப்படுவாரும் தாமேயாம், பட்டினிவிடுவாரும் தாமேயாம்' என்று அருளிச்செய்தார்.

---

ப₄ட்டர். ஓரிடத்தில் ஒருகட்டுச்சோற்றுமுடிச்சையும் அருகிலேயே ஒரு பணமுடிச்சையும் வைத்து. அந்த ஸ்ரீவைஷ்ணவரை ப்ரஸாத₃முடிச்சை எடுத்துவரச்சொன்னார். அங்கு சென்று அருகில் பணமுடிச்சைக்கண்ட அவர் அதை எடுத்துத் தனக்காக மறைத்துவைத்துக் கொண்டுவிடலாமா என்று நினைத்து அதை எடுத்தார். "ப₄ட்டர் அறிந்தால் கோபிப்பரே"என்னும் எண்ணம்வந்தவுடன் பணமுடிச்சை இருந்தவிடத்திலேயே வைத்துவிட்டு ப்ரஸாத₃முடிச்சை எடுத்தார். இப்படிச் சிந்தனை அலைகளாலே இவர் தயங்கிக்கொண்டிருக்கும்போது அங்கு ப₄ட்டர் எழுந்தருளி, "ரந்த்₄ராந்வேஷிகளாய் இடம்பார்த்துப் புண்ய பாபங்கள் சேதனனை நலிவதுபோலே, இந்த இருமுடிச்சுகளுமே உம்மை இடம்பார்த்துத் துன்புறுத்துகின்றனபோலும்" என்று ஹாஸ்யமாக அருளிச்செய்து, அவரை வெட்கமடையச்செய்து திருத்தியருளினார் என்று கருத்து.

### நூற்றறுபத்தஞ்சாம் வார்த்தை

ஆச்சான்பிள்ளையின் ஶிஷ்யர்கள் இருவர் ஒருவர்க்கொருவர் அர்த்த₂காமங்கள் விஷயமாகப் பிணங்கி, அர்த்த₂காமங்களில் ஆசையையும் ஒருவர்க்கொருவர் வெறுப்பையும் காட்டிப் பல கார்யங்கள் செய்ய, அவர்களில் ஒருவர் மற்றொருவர் தன்னை அவமதித்து விட்டதாக நினைத்துப் பட்டினி கிடக்க, இதைக் கேள்விப்பட்ட ஆச்சான்பிள்ளை "எனக்கு ஶிஷ்யர்களான இவர்கள் இப்படி நடந்து கொள்ளுகையால் உண்மையில் அவமானப்படுபவனும் நானே; கு₃ணபூர்த்தியுள்ள ஶிஷ்யர்களான உணவைப் பெறுமல் பட்டினி கிடப்பவனும் நானே" என்று அருளிச்செய்தார். (இந்த வார்த்தையைக் கேட்டபின்பு ஶிஷ்யர்கள் திருந்தியிருப்பார்கள் என்பதும் நிச்சயம்.)

## நூற்றறுபத்தாரும் வார்த்தை

இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் ராக₃த்₃வேஷங் கொண்டாடி வர, இவர்களைச் சேரவிட்டருளவேணுமென்று ஆச்சான் பிள்ளைக்கு ஒரு ஸ்ரீவைஷ்ணவர் விண்ணப்பஞ்செய்ய; a "ஜக₃த்தில் ஈஶ்வரர்கள் இருவருண்டோ' என்றருளிச்செய்ய, "ஆகிலும் சேரவிட்டருள வேணும்" என்ன, b "ஸ்வஶரீரத்தை நியமிக்கமாட்டாத நான் அந்ய ஶரீரத்தை நியமிக்கப் புகுகிறேனோ?" என்ன, "ஆகிலும் இப்படி அருளிச்செய்யலாமோ?" என்ன; c "அத்₃ருஷ்டத்துக்கு அஞ்சி நெஞ்சை மீட்கக் கண்டிலோம்; த்₃ருஷ்டத்துக்கு அஞ்சி வாயை மூடக் கண்டிலோம்; நாம் இவர்களைச் சேரவிடும்படி யென்?" என்று அருளிச் செய்ய; d இருவரும் அந்யோந்யம் பீ₄ருக்களாய்த் தங்களில் ஏகமநாக்களாய்விட்டார்கள்.

---

### நூற்றறுபத்தாரும் வார்த்தை

a "ஜக₃த்₃வ்யாபாரம் ஈஶ்வரனுடையதேயாகையாலே ஸ்வரூபத்துக்குத்தகாமல் ஒருவரோடொருவர் பிணங்கிநிற்கும் இவர்களைச் சேரவிடுவதாகிற ஈஶ்வரக்ருத்யத்தை நான் ஏறிட்டுக்கொள்ள முடியாது" என்று ஆச்சான்பிள்ளை திருவுள்ளம். b "என் ஶரீரமே நான் சொன்னபடி கேட்பதில்லையே; அப்படியிருக்க எம்பெருமானுக்கு ஶரீரமாக இருக்கிற இவர்களா நான் சொன்னபடி கேட்கப்போகிறார்கள்?" என்று கருத்து. c " 'இப்படி ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் ஒருவர்க்கொருவர் அத்யந்த பாரதந்த்ர்யத்தோடு இருக்க வேண்டியிருக்க, ஒருவரோடொருவர் பிணங்கி நிற்பதால் எம்பெருமானுடைய நிக்₃ரஹம் ஏற்பட்டு, அதன் மூலமாக மறுமையில் நரகமன்றோ ஏற்படும்' என்று மறுமைக்கு அஞ்சி நெஞ்சைக் காமக்ரோத₄ங்களுக்கு வசப்படுத்தாமலுமிருக்கவில்லை; 'இப்படி ஒருவரையொருவர் வாயால் வைதும் அதன் மூலமாக அடிதடிகளில் இறங்கியும் ஊர் சிரிக்க நின்றால், இம்மையிலேயே ராஜத₃ண்டனையும் ஏற்படுமே, லோகாபவாத₃மும் ஏற்படுமே' என்று ப₄யப்பட்டு இவர்கள் வாய் மூடிக்கொண்டிருக்கவுமில்லை. இப்படி மநோவாக்காயங்களாகிற முக்கரணங்களையும் அடக்காத இவர்களை நான் எப்படிப் பொருந்தவிடமுடியும்?" என்று கருத்து. d ஆச்சான்பிள்ளையின் அருமையான இந்த வார்த்தையைக் கேட்ட இருவரும் இம்மையிலும் மறுமையிலும் தங்களுக்கு ஏற்படும் அநர்த்த₂ங்களை உணர்ந்து, பிணக்கம் நீங்கி ஒற்றுமைப்பட்டு விட்டார்கள் என்று கருத்து.

## நூற்றறுபத்தேழாம் வார்த்தை

பிள்ளையுறங்காவில்லிதாஸர், முதலியாண்டான் ஸ்ரீபாதத்திலே சென்று தண்டனிட்டு 'ஶிஷ்யலக்ஷணமிருக்கும்படியென்?' என்று விண்ணப்பஞ்செய்ய; ஆண்டானருளிச் செய்தபடி;—"ஆசார்ய விஷயத்திலே ஶிஷ்யன் பார்யாஸமனுமாய், ஶரீரஸமனுமாய், தர்மஸமனுமாயிருக்கும்; அதாவது–சொன்னத்தைச் செய்கையும், நினைத்தத்தைச் செய்கையும், நினைவாயிருக்கையும்" என்றருளிச்செய்தார்.

## நூற்றறுபத்தெட்டாம் வார்த்தை

அநந்தரம், பிள்ளை கூரத்தாழ்வான் ஸ்ரீபாதத்திலே சென்று தண்டனிட்டு 'ஆசார்யலக்ஷணமிருக்கும்படி யெங்ஙனே?' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வான் அருளிச்செய்தபடி; "ஶிஷ்யன் விஷயத்தில் ஆசார்யன் பர்த்ருஸமனுமாய், ஶரீரிஸமனுமாய் தர்மிஸமனுமாயிருக்கக்கடவன்; அதாவது-ஏவிக்கொள்ளுகையும், எடுத்து இடுவிக்கையும். அதாவது - அசேதநத்தைக்கொண்டு நினைத்தபடி விநியோகங்கொள்ளுமா போலே விநியோகங்கொள்ளுகையும், எடுத்துக்கொள்ளுகையும்" என்று அருளிச்செய்தார்.

---

### நூற்றறுபத்தேழாம் வார்த்தை

ஆசார்யன் விஷயத்தில் ஶிஷ்யன் பதிவ்ரதையான பார்யையைப்போலே சொன்னதைக் கேட்பவனாகவும், ஶரீரம் போலே நினைத்ததைச் செய்பவனாகவும், அறிவு போலே நினைவாகவேயிருப்பவனாகவும் இருப்பான் என்று கருத்து.

### நூற்றறுபத்தெட்டாம் வார்த்தை

ஶிஷ்யன் விஷயத்தில் ஆசார்யன் பத்னியை பர்த்தா நியமித்துக் கார்யங்கொள்வதுபோலே ஏவிக்கார்யங்கொள்ளுமவனாய், ஶரீரத்தை ஶரீரி (ஆத்மா) நிற்பது இருப்பது கிடப்பது முதலான நிலைகளிலே தான் நினைத்தபடி விநியோகம் கொள்வதுபோலே விநியோகம் கொள்பவனாயும், தர்மியான ஆத்மா தன் தர்மமான அறிவை எப்போதும் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு கார்யம்கொள்வது போல் ஶிஷ்யனை எப்போதும் தன்னுடனே வைத்துக்கொண்டு கார்யங் கொள்ளுமவனாயும் இருப்பான் என்று கருத்து.

## நூற்றறுபத்தொன்பதாம் வார்த்தை

ஆசார்யனுவான், — சிஷ்யனுக்கு ஹிதகாமனுயிருக்குமவன்; சிஷ்யனுவான், — ஸர்வப்ரகாரத்தாலும் ஆசார்யனுக்குத் தன்னை ஒதுக்கிவைக்குமவன்.

## நூற்றெழுபதாம் வார்த்தை

உடையவர், ஸந்யஸித்தருளுகிறபோது 'ஶரீரஸம்பந்த₄த்தை விட்டுவிடவேண்டுகிறதோ?' என்று கேட்க, 'a முதலியையொழிய ஸந்யஸித்தோம்' என்றார்; 'இப்படி செய்யலாமோ?' என்று அருகிருந்தார் கேட்க, 'த்ரித₃ண்ட₃த்தை விடிலன்றோ முதலியை விடுவது' என்று அருளிச்செய்தார்.

## நூற்றெழுபத்தோராம் வார்த்தை

a கோளரியாழ்வான் என்றொருத்தன், 'எனக்கு ஹிதமருளிச்செய்யவேணும்' என்ன, b ப₄ட்டர், பெருமாளையும் பார்த்து அவனையும் பார்த்துவிட்டதில் இவனுக்கு விஶ்வாஸம் பிறவாமல் நிற்க, c "வ்ருதை₂வ ப₄வதோ யாதா பூ₄யஸீ ஜந்மஸந்ததி:। தஸ்யாமந்யதமம் ஜந்ம ஸஞ்சிந்த்ய ஶரணம் வ்ரஜ||" என்கிற ஶ்லோகத்தை அருளிச்செய்தார்.

---

### நூற்றறுபத்தொன்பதாம் வார்த்தை

ஆசார்யன் ஶிஷ்யனுக்கு எப்போதும் நன்மையே செய்பவனுயிருப்பான். ஶிஷ்யனும் முற்கூறியபடி ப₄ார்யையைப்போலும், ஶரீரத்தைப்போலும், த₄ர்மம்போலும் எல்லாவித₄த்திலும் பரதந்த்ரனுயிருப்பான் என்று கருத்து.

### நூற்றெழுபதாம் வார்த்தை

a முதலி - முதலியாண்டான். கு₃ருபரம்பராப்ரப₄ாவம் முதலான க்₃ரந்த₂ங்களிலும் இவ்வார்த்தையின் பொருள் வந்துள்ளது.

### நூற்றெழுபத்தோராம் வார்த்தை

a கோளரியாழ்வான் - திருக்கோட்டியூரைச் சேர்ந்தவர் என்று ஈடு முதலான வ்யாக்₂யானங்களில் வந்துள்ளது. b ப₄ட்டர் பெருமாளிடம் மானஸமாக இவர்க்கு நன்மையைப் பிரார்த்தி₂த்தார் என்று கருத்து. c இந்த ப்ரமாணத்துக்குப் பொருள்—"உனக்குக் கணக்கற்ற ஜன்மபரம்பரைகள் வீணுகக் கழிந்துவிட்டன. அந்த ஜன்மங்களில்

## நூற்றெழுபத்திரண்டாம் வார்த்தை

ஸுக்ருததுஷ்க்ருதங்களிரண்டுக்கும் தலை, ஆத்மஸமர்ப்பணமும், ஆத்மாபஹாரமும்; இவற்றிலும் விஞ்சின ஸுக்ருத துஷ்க்ருதங்கள்-ஆத்மாபஹார தோஷத்தைப் போக்கி ஆத்ம ஸமர்ப்பணத்தைப் பண்ணுவித்த ஆசார்யன்பக்கலிலே க்ருதஜ்ஞதையும் க்ருதக்நதையும்.

## நூற்றெழுபத்துமூன்றும் வார்த்தை

a திருக்கோட்டியூர்நம்பி திருநாளுக்கெழுந்தருளி திருமாலையாண்டானையும் அழைத்துக்கொண்டு எம்பெருமானார் மடமே எழுந்தருள, அவரும் தண்டன் ஸமர்ப்பிக்க, அவரைப் பார்த்தருளி, 'நீர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்தமும் கேளும்' என்று இவரைத் திருமாலையாண்டான் திருக்கையிலே காட்டிக்கொடுத்துத் தாம் மீண்டெழுந்தருளினார். திருக்கோட்டியூர் நம்பி கோயிலுக்கெழுந்தருளித் திருமாலையாண்டான் பக்கலிலேயெழுந்தருளி, 'திரு

---

ஒன்றான இந்த ஜன்மத்திலாவது எம்பெருமானே நமக்கு உபாயோபேயமாயிருப்பவன் என்று நினைத்து அவனையே உபாயமாக உறுதிகொள்வாய்'' என்கை.

### நூற்றெழுபத்திரண்டாம் வார்த்தை

ஜீவன் செய்யும் நல்ல செயல்களுக்கெல்லாம் தலைசிறந்தது—தன் ஆத்மாவை எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதாகும். தீய செயல்களுக்கெல்லாம் தலையானது—அநாதிகாலமாக ஆத்மாவை மற்றவர்களுக்கு சேஷமாகவும் ஸ்வதந்த்ரமாகவும் நினைத்துவந்த ஆத்மாபஹாரமேயாகும். இவ்விரண்டிலும் மேலான நற்செயலும் தீச்செயலுமுண்டா? என்று ஆராய்ந்தால், முற்கூறிய ஆத்மாபஹாரமாகிற பெருங்குற்றத்தைப் போக்கி, ஆத்மஸமர்ப்பணமாகிற தலைசிறந்த நற்செயலைச் செய்து வைத்த ஆசார்யன்விஷயத்திலே நன்றி பாராட்டுவதே ஒப்புயர்வற்ற நற்செயலாகும். அவ்வாசார்யவிஷயத்தில் நன்றிமறக்கையே ஒப்புயர்வற்ற தீச்செயலாகும்.

### நூற்றெழுபத்துமூன்றும் வார்த்தை

a இந்த ஐதிஹ்யம் குருபரம்பராப்ரபாவம், ப்ரபந்நாம்ருதம், யதிராஜவைபவம், ஈடு முதலான வ்யாக்யானங்கள் முதலான பல

வாய்மொழி வ்யாக்₂யாநம் நடத்தாமல் தவிருவானென் ?' என்று கேட்டருள, 'ஆளவந்தார் அருளிச்செய்ய அடியேன் கேட்ட அர்த்த₂மொழிய இவர் சில விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி பண்ணி ஸ்வகல்பிதமாகச் சொல்லுகையாலே தவிர்ந்தேன்' என்ன, அவர் சொன்ன அர்த்த₂ம் ஏதென்ன; (அறியாக் காலத்துள்ளே) என்கிற பாட்டை, 'உபகார ஸ்ம்ருதியாகவேணு மென்று சொன்னார்' என்ன, 'அதுவும் ஆளவந்தாரருளிச் செய்ய நான்கேட்டேன்' என்று நம்பி அருளிச்செய்து, "ஸாந்தீ₃பன்பக்கலிலே, க்ருஷ்ணன் அத்₄யயநம் பண்ணினாற்போலே காணும் உம்முடைய பக்கலிலே எம்பெருமானார் திருவாய் மொழி கேட்கிறது; ஆளவந்தார் திருவுள்ளத்திலுண்டான அர்த்த₂மொழிய இவருக்கு ப்ரகாஶியாதென்றிரும்; நீர் இவருக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணுகிறேனென்றிராதேகொள்ளும்" என்று அருளிச்செய்தருளினார். b இத்தால் சொல்லிற்றுய்த்து-ஆசார்யனுடைய ஆத்மகு₃ணங்களோடு தே₃ஹகு₃ணங்களோடு வாசியற ஶிஷ்யனுக்கு உபாதே₃யமாயிருக்கிறபடி.

## நூற்றெழுபத்துநாலாம் வார்த்தை

பின்பழகிய பெருமாள் ஜீயர்க்கு ஒருகால் திருமேனி பாங்கின்றியிலே கண்வளர்ந்தருளும்போது, தமக்கு அந்தரங்க₃ரான ஶ்ரீவைஷ்ணவர்களை அழைத்து "நான் இப்போது திருவடிச் சாராமல் a ஆலஸ்யம் பொறுத்து, இன்னமும் இங்கே சிறிது நாளிருக்கும்படி * ஏழையேதலன் * ஆழியெழச் சங்கு இவற்றைப் பெருமாள் திருவடிகளிலே விண்ணப்பஞ் செய்து ப்ரபத்தி பண்ணுங்கோள்" என்ன, அவர்களும் அப்படியே செய்து ஜீயருக்குத் திருமேனி பண்டுபோலே பாங்

---

க்₃ரந்த₂ங்களில் இவ்வண்ணமே விவரிக்கப்பட்டுள்ளது. b இந்த வாக்யம் அடுத்தவாக்யத்தின் ஸாரமாயிருக்கையால் அதன் முடிவிலோ தொடக்கத்திலோ இருக்கவேண்டும்.

**நூற்றெழுபத்துநாலாம் வார்த்தை**

இந்த வார்த்தையும் கு₃ருபரம்பராப்ரபா₄வத்திலே (பக்கம் 371, 372,373) விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. a ஆலஸ்யம்-காலதாமதம்.

காய்த்து; இதைக்கேட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் இவருடைய ஆசார்யரான நம்பிள்ளைஸ்ரீபாத₃த்திலே சென்று தண்டனிட்டு 'ஜ்ஞாநவ்ருத்₃த₄ருமாய் வயோவ்ருத்₃த₄ருமான ஜீயர் இப்படி செய்தார்; இது இவருடைய ஸ்வரூபத்துக்குச் சேருமோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையும் 'அவருடைய அபி₄ப்ராயம் அறிகிறிலோம்; ஸகலவேத₃ ஶாஸ்த்ரங்களும் போவது பிள்ளையெங்களாழ்வார்க்காய்த்து; அவரைச் சென்று கேளுங்கோள்' என்ன; அவர்களும் எங்களாழ்வாரைக்கேட்க, அவரும் b 'ஸ்ரீரங்க₃ஸ்ரீயிலே ஸங்க₃ம்போலே காணும்' என்ன; பிள்ளை இதைக்கேட்டருளி "அழகிது, திருநாராயணபுரத்தரையரைச்சென்று கேளுங்கோள்" என்ன, அவரும், c "துவக்கின கைங்கரியங்கள் தலைக்கட்டாமையாலே காணும்" என்ன, இத்தையும் கேட்டருளி, d "ஆகிறது; அம்மங்கியம்மாளைக் கேளுங்கோள்" என்ன, அவரும் "பிள்ளை கோ₃ஷ்டி₂யிலிருந்து அவர் அருளிச்செய்கிற ப₄க₃வத்₃விஷயங் கேட்கிறவர்களுக்கும் ஒரு தே₃ஶவிஶேஷம் ருசிக்குமோ?" என்ன; மீளவும் பிள்ளை இத்தையுங்கேட்டருளி "e பெரியமுதலியாரைக் கேளுங்கோள்" என்ன, அவரும் "பெருமாள் சிவந்த திருமுக₂மண்ட₃லமும் கஸ்தூரித் திருநாமமும் பரமபத₃த்தில் கண்டேனில்லையாகில், மூலையடியே முறித்துக்கொண்டு மீண்டு வருவேனென்றன்றோ ப₄ட்டரருளிச்செய்தார். அப்படியே இவரும் பெருமாள் திருமுக₂மண்ட₃லத்தையும் கஸ்தூரித்

---

b தொண்டரடிப்பொடியாழ்வாரைப்போலே "இந்திரலோகமாளும் அச்சுவைபெறினும் வேண்டேன்" [திருமாலை 2] என்று பரமபத₃ம் செல்வதில் விருப்பமில்லாமல் திருவரங்கச்செல்வத்தையே அநுப₄விக்க விரும்பி ஜீயர் இப்படி செய்தார்போலும்—என்று விஷ்ணுசித்தரான எங்களாழ்வான் திருவுள்ளம். c தாம் தொடங்கியிருக்கும் கு₃ருபரம்பராப்ரப₄ாவம் வார்த்தாமாலை போன்ற க்₃ரந்த₂ங்களை நிறைவுறச் செய்யாமையாலே ஜீயர் இங்கு வாழநினைத்தார்போலும் என்பது திருநாராயணபுரத்தரையர் திருவுள்ளம். d 'நம்பிள்ளை கோ₃ஷ்டி₂யிலிருந்து ப₄க₃வத்₃விஷயம் கேட்கும் ருசியாலே ஜீயர் பரமபத₃ம் செல்ல விரும்பவில்லை' என்பது அம்மங்கியம்மாள் திருவுள்ளம். e அம்மங்கிப் பெரியமுதலியார் என்று கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில்

திருநாமத்தையும் விட்டுப்போகமாட்டாராகவேணும்” என்றார். f பிள்ளை, இவையெல்லாவற்றையும் கேட்டருளி ஜீயர் திருமுக₂ மண்ட₃லத்தைப் பார்த்துச் சிரித்து ‘இவையெல்லாம் உம்முடைய நினைவுக்கு ஒக்குமோ ?’ என்ன, ‘ இவையித்தனையுமன்று ’ என்று ஜீயர் விண்ணப்பஞ்செய்ய; ‘ஆனாலும் உம்முடைய அபி₄ப்ராயத்தைச் சொல்லும் ’ என்ன, g பிள்ளை;-“தேவரீர் ஸர்வஜ்ஞராகையாலே அறிந்தருளாததில்லை; ஆனாலும் அடியேனைக்கொண்டு வெளியிட்டருளத் திருவுள்ளமாகில் விண்ணப்பஞ்செய்கிறேன்; தேவரீர் திருமஞ்சனச்சாலையிலே எழுந்தருளித் திருமஞ்சனஞ்செய்தருளித் h தூய்தாகத் திருக்குற்றெலியல் சாத்தியருளி, உலாவியருளும்போது குறுவேர்ப் பரும்பின திருமுக₂மண்ட₃லத்தில் ஸேவையும், i சுழற்றிப் பணிமாறுகிற கைங்கர்யத்தையும்விட்டு அடியேனுக்குப் பரமபத₃த்துக்குப்போக இச்சை₂யாயிருந்ததில்லை’’ என்று ஜீயர் விண்ணப்பஞ் செய்தார்; இதைக்கேட்டருளி, பிள்ளையும் முதலிகளுமெல்லாம், “இவ்விபூ₄தியிலேயும் இவ்வுடம்போடே ஒருவர்க்கும் இவ்வைஶ்வர்யம் கூடுமதோ !” என்று மிகவுந் திருவுள்ளமுகந்தருளினார்கள்.

## நூற்றெழுபத்தைந்தாம் வார்த்தை

நஞ்சீயர் ப₄ட்டர் ஶ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்த அநந்தரத்திலே கையிலேயிருந்த சில பொன்னைவாங்கி ப₄ட்டர்

---

வந்துள்ளது. அம்மங்கியம்மாளின் தகப்பனாராயிருக்கலாம். f ‘‘இவையெல்லாம் ஜீயர் திருவுள்ளத்துக்குப் பொருந்தமாட்டா’’ என்று உணர்ந்த நம்பிள்ளை, — அவரையே தம் திருவுள்ளத்தை விவரிக்கச் சொன்னார் என்று கருத்து. g பிள்ளை என்று இங்குள்ளது ‘‘பின்னை’’ என்று பாட₂மாயிருக்கலாம். அல்லது ‘ஆனாலும்’ என்று தொடங்கும் முன்வாக்யத்தின் முதலில் சேர்த்துக்கொள்ளலாம். h இவ்விடத்தில் ‘‘தூயவுடையாடை, திருவுத்தரியம்’’ என்று கு₃ருபரம்பரையிலுள்ளது. i இவ்விடத்தில் ‘‘அடியேன் சுற்றிச் சுழற்றிப் பணிமாறுகிற’’ என்று கு₃ருபரம்பரையிலுள்ளது. திருவாலவட்ட கைங்கர்யத்தைச் சொல்லுகிறது. இவ்வார்த்தையின் ஸாரார்த்த₂மே ‘‘பின்பழகராம் பெருமாள்சீயர்’’ என்று தொடங்கும் [ உபதேசரத்தினமாலை 66 ] பாசுரத்தில் மாமுனிகளால் அருளிச்செய்யப்பட்டது.

ஸ்ரீபாத₃த்திலேயிட்டு தண்டனிட்டவாறே, ப₄ட்டர் அத்தை யெடுத்து இவரைப் பார்த்து 'நான் கொடுத்த த்₃ரவ்யத்தில் ஸாபேக்ஷராயிருக்கிற இவர் உபதே₃ஶித்த ஜ்ஞாநம் நமக்கு உத்தாரகஹேதுவாகப் புகுகிறதோவென்றோ உனக்கோடு கிறது ?' என்று கேட்டருளி, இவரைப் பார்த்து, "ஸர்ப்பத₃ஷ்டனாய் ம்ருதனான ராஜகுமாரனுடைய ஸம்ஸ்காரத₃ஶையிலே, மந்த்ரௌஷத₄ ஶக்தியுடையனாயிருப்பானொருவன் வந்து, உன் மகனைப் பிழைப்பிக்க இந்த ராஜ்யத்தைத் தாவென்னிலும் கொடுக்கும்படியான புத்ரவாத்ஸல்யத்தையுடைய ராஜாவின் பக்கலிலே ஒரு பிடிசோறு வேண்டி உண்டு ம்ருதனான ராஜ புத்ரனைப் பிழைப்பிக்கும்; ப்ரக்ருதிமான்களெல்லாரும் உண்கிற சோற்றிலே இவனுக்கு இச்சை₂யுண்டாய்த்தென்று, அந்த விஷஹரண ஶக்தியில் ஏதேனுங்குறைந்ததில்லையிறே; அப் படியே எல்லாரும் ஸ்ப்ருஹை பண்ணுகிற அர்த்த₂காமங்களிலே

---

நூற்றெழுபத்தைந்தாம் வார்த்தை

*நஞ்சீயர் பூர்வாஶ்ரமத்தில் சிறந்த த₄னிகராயிருந்தார். திரு நாராயணபுரத்தருகில் வாழ்ந்துவந்த அவர் ப₄ட்டரோடு பிரியாதிருக்க* வேண்டும் என்று *திருவுள்ளங்கொண்டு தம் செல்வத்தில்* இரு பகுதிகளைத் தன் இருபத்னிகளுக்குக் கொடுத்துவிட்டு ஒரு பகுதியை ப₄ட்டருக்காக எடுத்துக்கொண்டு ஸந்யாஸாஶ்ரமஸ்வீகாரம் செய்து கொண்டு திருவரங்கம் சேர்ந்து ப₄ட்டர் திருவடிகளிலே தாம் கொண்டுவந்திருந்த த்₃ரவ்யத்தை ஸமர்ப்பித்தார். அப்போது ப₄ட்டர் அருளிச்செய்த வார்த்தை இது. இதன் கருத்தாவது—" 'நம்மிடம் சில த்₃ரவ்யங்களைப் பெற்றுக்கொண்ட இவர் உபதே₃ஶித்த ஜ்ஞானம் நம்மை ஸம்ஸாரத்திலிருந்து கைதூக்கிவிடுமோ?' என்று நீர் நினைக்க வேண்டா. அரசகுமாரன் பாம்புகடித்துச் செத்தவன்போலே இருக்கும் போது மந்த்ரத்தாலும், மருந்தாலும் அவனுடைய உயிரை மீட்டுக் கொடுத்த ஒருவன், ராஜ்யத்தையே விரும்பினாலும் அதை அரசன் கொடுக்க ஸித்₃த₄மாயிருக்கும்போது, அவனிடம் ஒருவேளை சோற்றை யுண்டு பசியாறி த்ருப்தியடைந்தால், அதை அவன் செய்த கார்யத் துக்குக் கைம்மாறாகக் கூறமுடியுமோ ? அதைப் பார்க்கும் சில அறி விலிகள் 'சோற்றில் ஆசையாலே இவன் இக்கார்யம் செய்தான்' என்று கூறினால், அதனால் இவன் ப்ரயோகி₃த்த மந்த்ரத்துக்கோ மருந்துக்கோ ஶக்தி குறைந்துவிடாதே; அதுபோலவே ஆசார்யர்க ளாகிற நாங்களும் ஶிஷ்யர்களான உங்களைப் போன்றவர்களிடம் ஏதோ சில த்₃ரவ்யங்களைப்பெற்று ஜ்ஞானத்தை உபதே₃ஶிக்கும் போதும் குறைய நினைக்கக்கூடாது. நாங்கள் உபதே₃ஶிக்கும்

எங்களுக்கு ஸ்ப்ருஹையுண்டாய்த்தேயாகிலும் நாங்கள் உபதேஶிக்கிற ஜ்ஞாநத்துக்கு ஒரு ஸம்ஸாரப$_3$ந்த$_4$த்தையறுத்துப் புருஷார்த்த$_2$த்தைத் தரவல்ல ஶக்தியுண்டென்றிரும்'' என்று அருளிச்செய்தார். b இத்தால் - ஆசார்யனுக்காதல் வேறொரு ஶ்ரீவைஷ்ணவனுக்காதல் இதர ஸம்ஸாரிகளோபாதி ஹேது ஸத்தாப்ரயுக்தமான அர்த்த$_2$காமப்ராவண்யமுண்டாய்த்தென்று, இவர்களையும் ப்ரக்ருதிமான்களோபாதியாக நினைக்கலாகாது;- எங்ஙனேயென்னில், ''காமோபபோ$_4$க$_3$பரமா ஏதாவதி$_3$தி நிஶ்சிதா:'' என்று அர்த்த$_2$காமங்கள் புருஷார்த்த$_2$மென்றிருப்பார் அஜ்ஞர்; ஜ்ஞாநவான்கள் ஶரீராவஸாநத்தளவும், ''ஸத்$_3$ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி'' இத்யாதி$_3$ ப்ரக்ரியையாலே வாஸநாப்ரயுக்தமாய்ச் செல்லக் கடவதென்றருளிச்செய்தார்.

## நூற்றெழுபத்தாறும் வார்த்தை

நஞ்சீயர் மட$_2$த்திலே ப$_4$ட்டருடைய மூத்தபெண்பிள்ளை, 'காஞ்சோரிச் சருகுண்டோ' என்று கேட்டுவர, அப்போது

---

ஜ்ஞானம் ஸம்ஸாரப$_3$ந்த$_4$த்தை அறுத்துப் பரமபுருஷார்த்த$_2$த்தைத் தரக்கூடிய ஶக்தி உடையதாகவே இருக்கும் என்று நினைத்திருக்க வேண்டும்'' என்பது ப$_4$ட்டர் வார்த்தையின் ஸாரம். b இவ்வார்த்தையின் ஸாரமான இதன் கருத்து — ஆசார்யனோ ஶ்ரீவைஷ்ணவர்களோ மற்ற ஸம்ஸாரிகளைப்போலே ப்ரக்ருதி வாஸனையினால் அர்த்த$_2$காமங்களிலே ஈடுபட்டுச் சிலவற்றை அபேக்ஷித்தாலும் அவர்களை மற்ற ஸம்ஸாரிகளைப்போலே ப்ராக்ருதர்களாக நினைக்கக்கூடாது. ''காமோபபோ$_4$க$_3$பரமா: ஏதாவதி$_3$தி நிஶ்சிதா:'' [கீ$_3$தை 16-11] [காமத்தை அநுப$_4$விப்பதையே மேலான புருஷார்த்த$_2$மாக நினைப்பவர்களாய் அதைக் காட்டிலும் மேலான புருஷார்த்த$_2$ம் இல்லை என்று நினைப்பவர்கள்] என்ற ஶ்லோகத்தில் சொல்லும் நிலையிலிருப்பவர்கள் அறிவிலிகளான ப்ராக்ருதர்கள். ஜ்ஞானவான்களான ஆசார்யர்களும் ஶ்ரீவைஷ்ணவர்களுமோவெனில், ''ஸத்$_3$ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி'' [கீ$_3$தை 3-33] [(ஶாஸ்த்ரங்களினால் ஏற்படும் ஆத்மதத்வ) ஜ்ஞானத்தை உடையவனும் தன் அநாதி$_3$யான விஷயவாஸனைக்குத் தக்கபடி (ப்ராக்ருத விஷயங்களிலேயே) பழகுகிறான்] என்கிற ஶ்லோகத்தில் சொன்னபடியே அநாதி$_3$வாஸனையினாலே அர்த்த$_2$காமங்களிலே சிறிது ஈடுபடுகிறார்களேயொழிய, ஸம்ஸாரிகளைப்போலே அதையே பரம புருஷார்த்த$_2$மாக நினைத்து ஈடுபடுவதில்லை என்றபடி.

a முன்வாயிலே சிலவற்றைப் பார்த்துக் காணுமையாலே 'இல்லை' என்று, பின்னையும் பார்த்தவாறே, ஒரு b கலத்திலே கண்டு, தம்முடைய மடியிலே இட்டுக்கொண்டு எழுந்தருளினவாறே, 'இத்தை ஒருவர் கையிலே வரவிடலாகாதோ ? நீர் கொண்டெழுந்தருளவேணுமோ ?' என்று ப₄ட்டரருளிச்செய்ய, 'அப்போது இல்லையென்றுவிட்ட மஹாபாபிக்கு ஆளிட்டிருக்கவும் வேணுமோ?' என்று அருளிச்செய்தார். இத்தால், ஆசார்ய புத்ர பௌத்ராதி₃களும் ஆசார்யவத் அநுவர்த்தநீயரென்று கருத்து.

## நூற்றெழுபத்தேழாம் வார்த்தை

ப₄ட்டர், குடும்ப₃ ஸஹிதமாக a கூரகுலோத்தமனிலே இருக்கிற நாளிலே, திருநந்த₃வநத்திலே அல்பம் உபஹதி யுண்டாய்த்தென்று, திருநந்த₃வநஞ்செய்கிற ஏகாங்கிகள் சில வார்த்தை சொன்னார்களென்று b பெரிய ஜீயர் அவர்களை அழைத்து, c 'நான் பெருமாள் திருக்குழல் சிக்கு நாறுகிறதென்றோ திருநந்த₃வநஞ்செய்கிறது? ப₄ட்டருடைய குடும்பத்துக்கு இஷ்டவிநியோக₃ார்ஹமாகத் திருநந்த₃வந வ்யாஜத்தாலே கோலினேனத்தனை யன்றோ'' என்று அருளிச்செய்தார்.

---

### நூற்றெழுபத்தாறும் வார்த்தை

a முன்வாயிலே - தன் கண்ணுக்கு எதிரிலுள்ள சில இடங்களிலே. b கலத்திலே - பானையிலே.

### நூற்றெழுபத்தேழாம் வார்த்தை

a கூரகுலோத்தமன்—ஓர் ஊர். பின்னால் வந்த கூரகுலோத்தமதா₃ஸருடைய அவதாரஸ்த₂லமாயிருக்கலாம். b பெரியஜீயர் - கூரத்தாழ்வானுக்கும், பிறகு ப₄ட்டருக்கும் ஶிஷ்யராயிருந்தவராய், நஞ்சீயரைவிட வயதில் பெரியவராய், ஸாத₃ர்ஶநஸதகம் உபநிஷத்₃ ப₄ாஷ்யம், ஸ்தோத்ரரத்ன வ்யாக்₂யானம் முதலான க்₃ரந்த₂ங்களை அருளிச்செய்தவராய், ஸ்ரீரங்க₃நாராயண ஜீயர் மட₂த்தை ஸ்த₂ாபித்தவராய், நலந்திகழ் நாராயணஜீயர் என்னும் திருநாமமுடையவரான கூரநாராயணஜீயர். c ப₄ட்டர் குடும்பத்தாரால் பெரியஜீயருடைய நந்த₃வனத்துக்குச் சில அழிவுகள் உண்டாக, அப்போது நந்த₃வனத்தைக் கவனித்துக்கொள்ளும் ஏகாங்கிகள் கோபிக்க, அப்போது ஜீயர் அவர்களை அழைத்து ''நான் பெருமாளுக்காக நந்த₃வனம் அமைத்திருக்கிறேன் என்று நினைக்காதீர்கள். எனது ஆசார்யரான ப₄ட்டருடைய குடும்பத்தார் உபயோக₃த்துக்காகவே அதை அமைத்திருக்கிறேன். ப₄ட்டர் விரும்புகையாலே பெருமாளுக்கும் உபயோகப் படுகிறது'' என்று அருளிச்செய்தார். இவ்வார்த்தையிலிருந்தும் ஶிஷ்யனுக்கு ஆசார்யகுடும்ப₃மே உத்₃தே₃ஶ்யம் என்று விளங்குகிது.

## நூற்றெழுபத்தெட்டாம் வார்த்தை

a தூவியப்புள்ளு திருவவதரித்தாரென்று நம்பிள்ளைக்குச் சிலர் விண்ணப்பஞ்செய்ய, அப்போது அருகே ஸேவித்திருந்த திருப்பேராச்சானைப்பார்த்து "எனக்கொரு தமையனார் திருவவதரித்தார்" என்று நம்பிள்ளை அருளிச்செய்தார்.

## நூற்றெழுபத்தொன்பதாம் வார்த்தை

நம்பி திருவழுதி வளநாடு தாஸர் திருநாட்டுக்கெழுந்தருளுகிற ஸமயத்திலே ஸேவித்துப்போந்த ஸ்ரீவைஷ்ணவர் அழ, "கெடுவாய்! செத்துப்போகிற நான் போகாநின்றேன்; ஸ்ரீபராஶரபட்டர் வாசிக்கக் கேட்கவிருக்கிற நீ ஏன் அழுகிறாய்?" என்றருளிச்செய்தாரென்று பிள்ளையருளிச்செய்தார்.

## நூற்றெண்பதாம் வார்த்தை

a பெருமாள்கோயிலிலே ஒரு பாகவதஜந்மத்திலே பிறந்தானொரு ஊமை, அஞ்சாறு வருஷம் ஊமையாயிருந்து அநந்தரம் இரண்டு மூன்று ஸம்வத்ஸரம் காணாதிருந்து, பின்பு அவன் வார்த்தை சொல்லவல்லனாய்வர, இந்த ஆஶ்சர்யத்தைக் காண்கைக்காக எல்லாரும் திரண்டு, 'ஊமாய்!

---

### நூற்றெழுபத்தெட்டாம் வார்த்தை

a தூவியப்புள்ளு—பட்டர் வம்ஶஸ்தராயிருக்கலாம். ஆசார்ய வம்ஶஸ்தர் பிறந்த குழந்தையாயிருந்தாலும் தமயனாரைப்போலே கௌரவிக்கத்தக்கவர் என்ற நம்பிள்ளையின் ப்ரதிபத்தியை இவ்வார்த்தை காட்டுகிறது.

### நூற்றெழுபத்தொன்பதாம் வார்த்தை

இவ்வார்த்தை ஆசார்யஸம்ஶ்லேஷம் பரமபதத்தைக்காட்டிலும் உத்தேஶ்யம் என்று காட்டுகிறது.

### நூற்றெண்பதாம் வார்த்தை

a இவ்வார்த்தையில் கண்டுள்ள ஊமையைப்பற்றின வ்ருத்தாந்தம் குருபரம்பரை பக்கம் 293ல் வந்துள்ளது. சரமோபாயநிர்ணயத்தில்

எங்குப்போனாய்?'என்று கேட்க; அவனும்'நான் க்ஷீராப்₃தி₄க்குப் போய்வந்தேன்' என்ன, 'அங்கு விஶேஷமென்?' என்று கேட்க, 'சேனைமுதலியார் உடையவராய்வந்து அவதரித்தார்' என்று சொன்ன அநந்தரம் அவனைக் கண்டதில்லை—என்று ஸேநாபதிஜீயர் அருளிச்செய்தார்.

b யாத₃வப்ரகாஶனோடே எம்பெருமானார் படித்தருளுகிற காலத்திலே அந்த ராஜ்யத்தின் ராஜாவினுடைய புத்ரியை ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு பிடிக்கையாலே யாத₃வப்ரகாஶனுக்கு அறிவிக்க, "யாத₃வப்ரகாஶன் போகச்சொன்னானென்று சொல்லுங்கோள்" என்று சொல்லிப் போகவிட; "அவன்றன்னை அங்கு நின்றும் போகச்சொன்னேன்" என்று ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்ல, யாத₃வப்ரகாஶனும் போர குபிதனாய் சிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு மஹாமந்த்ரத்தையும் ஜபித்துக்கொண்டு ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸின் முன்னேபோய் நிற்க, ரக்ஷஸ்ஸும் முடக்கின காலைப் பின்னையும் நீட்டி, "வாராய் அடா யாத₃வ ப்ரகாஶா! நீ ஜபிக்கிற மந்த்ரம் நானறியேனோ" என்று அந்த மந்த்ரத்தையும் சொல்லி, "நான் இவற்றுக்குப் போவேனோ? நீ உன் ஜன்மமுமறியாய், என் ஜந்மமுமறியாய்?" என்ன, "ஆகில் நீ பிரானே; ஸர்வஜ்ஞனாயிருந்தாயாகில் உன்னுடைய ஜந்மமேது என்னுடைய ஜந்மமேது?" என்று யாத₃வ ப்ரகாஶன் கேட்க; "உன்னுடைய ஜந்மம், ஸ்ரீமது₄ராந்தகத்தில் ஏரிக்கரையிலே ஒரு புற்றாய் அதிலே ஒரு உடும்பாயிருப்புதி; திருமலைக்குப் பெருங்கூட்டம் போகிறபோது ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏரிக்கரையிலே நீராடி அங்கே ஸ்வயம்பாகம்செய்து அமுதுசெய்தருளின தளிகையின் கீழே சிந்தின ப்ரஸாத₃த்தையும் தீர்த்த₂த்தையும் ப்ரஸாத₃ப்பட்டாய்; அத்தாலே நீ இப்படி வித்₃வானாய்ப் பிறந்தாய்; இனி என்னுடைய ஜந்மம் ப்₃ராஹ்மணஜந்மம்; யாக₃ம்பண்ணினேன்; மந்த்ரலோப க்ரியா

---

522-லும் உள்ளது. b இவ்வார்த்தையில் கண்டுள்ள ப்₃ரஹ்மரக்ஷஸ் வ்ருத்தாந்தம் கு₃ருபரம்பரையில் பக்கம் 150,151,152-லும் சரமோபாயநிர்ணயத்தில் பக்கம் 523-லும் உள்ளது.

லோபம் வந்தவாறே ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸானேன்" என்ன; "ஆனால் நீ யார்க்குப் போவுதி?" என்ன; "உன்னுடன் வாசிக்கிறவரிலேயொருவர் அநந்த க₃ருட₃ விஷ்வக்ஸேநாதி₃களென்கிற நித்யஸூரிகளிலே ஒருவர்" என்று உடையவரைக்காட்டி, அவர் திருவடிகளை த₃ண்ட₃னிட்டு, 'இவர் போகச்சொன்னாராகில் போகிறேன்' என்ன, 'ஆகில் இளையாழ்வீர்! நீர் போகச்சொல்லீர்' என்ன; 'ஆனால் நீ போகிறத்துக்கு அடையாளத்தைக் காட்டிப்போ' என்ன, "இவ்வரசு முறிந்து விழும்" என்று அவ்வரசை முறித்துக்கொண்டு போயிற்று; யாத₃வப்ரகாஶனும் "இளையாழ்வீர்! நீர் ஸர்வஜ்ஞராயிருந்தீர்" என்று மிகவும் உபஶ்லோகித்து மீண்டு தன்னுடைய மட₂மே வந்தான்.

## நூற்றெண்பத்தோராம் வார்த்தை

அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்தையுடையராயிருப்பார் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் பட்டணங்களில்நின்றும் திருமலையைத் திருவடித்தொழப்போகாநிற்கச்செய்தே, a வளத்தான் மங்கலமுடையான் திண்ணையிலே கிடந்தவளவிலே, அவன் 'எங்கேறப் போகிறிகோள் ?' என்ன, இவர்களும், 'திருவேங்கடமுடையானைத் திருவடித்தொழப்போகிறோம்' என்ன, இவனும், 'நானும் போகிறேன்' என்று சொல்லி இவனுங்கூடப்போய் அவர்களும் இரண்டுமூன்று பயணம்போனவளவிலே, b இவனுடன் உறவற்றுத் தங்களிலே கூடிப்போகப் புக்கபடியாலே, இவனும் 'என்னை ஸ்ரீவைஷ்ணவனுக்கிக் கொண்டுபோகவேணும்' என்று இவர்களைப் பலகாலும் வேண்டிக்கொள்ள, c இவர்களும் பேசாதேபோய்த் திருமலை

---

**நூற்றெண்பத்தோராம் வார்த்தை**

a வளத்தான் மங்கலமுடையான்—வளத்தான் மங்கலம் க்₂ராமத்திலுள்ள ஒரு த₄னிகனான ப்₃ராஹ்மணன். b இவனுடன் உறவற்று—இவன் ஸ்ரீ வைஷ்ணவனல்லாமையாலே அநந்தாழ்வான் ஶிஷ்யர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் தனிக்கூட்டமாகப் போனார்கள் என்றபடி. c அவனை ஸ்ரீவைஷ்ணவனாகத் திருத்திப் பணிகொள்ளத் தம் ஆசார்ய

யிலே வந்தவாறே அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே வந்து தண்டனிட்டுநிற்க; அவரும் இவர்களைக் காரியங்களும் கேட்டு இவர்களுக்குச் சில வார்த்தைகளும் அருளிச்செய்து 'திருவேங்கடமுடையான் பாடேறப் போகலாகாதோ?' என்று அருளிச்செய்தவளவிலே, இவனும் 'என்னை ஸ்ரீபாத₃த்திலே காட்டிக்கொடுக்கவேணும்' என்ன; அவரும் அத்தைக்கேட்டு 'அவன் சொல்லுகிறதேது?' என்று கேட்டருள; 'ஆஶ்ரயிக்க வேணுமென்கிறான்' என்று விண்ணப்பம்செய்ய; அநந்தாழ்வானும் வாராயென்றழைத்தருளி, 'உனக்கு என்பாடே ஹிதம் கேட்கவேணுமோ?' என்று கேட்டருள, 'வேணும்; என்னை ரக்ஷித்தருளவேணும்' என்ன; 'ஆனால் என்பக்கலிலே ஹிதம் கேட்கில் உன் ஐஶ்வர்யம் உன்னைவிட்டகலும்' என்று அருளிச்செய்ய; அவனும் 'இவை போக அமையும்' என்று விண்ணப்பஞ்செய்ய; 'ஆனால் d நீ நான் புக்க தே₃ஶம் புகுவுதி' என்று அருளிச்செய்து ஹிதத்தையு மருளிச்செய்தவாறே, e நெல்லுக்குப் பால் வற்ற வற்றத் தலைவணங்குமாப் போலே, ஶரணாக₃தி நெஞ்சில் பற்றப்பற்றத் தன் மேற்கிடக்கிற பொன்னடங்க வாங்கி ஆசார்ய த₃க்ஷிணையாகக்கொடுத்து ஊரிலே வந்தவாறே, இவர் ஸ்ரீவைஷ்ணவரானாரென்று பல ஸ்ரீவைஷ்ணவர்களும் வந்து காண, அவர்களுக்கு வேண்டுமவை கிஞ்சித்கரிக்கப் புக்கவாறே, இவருடைய மாதாபிதாக்கள் இவரை அழைத்து, 'ரிஷிகளைப் போலேயிருக்கிற ப்₃ராஹ்மணர்வந்து புகுந்து ப்ரஸாதி₃த்துப் போகாநின்றார்கள்; நீர் செய்கிற த₄ர்மத்தை விலக்கலாகாது; உம்மை விஶ்வஸித்திருக்கிற எங்களுக்கும் ஏதேனும் தரவல்லீரோ?' என்று கேட்க; 'அப்படியே செய்கிறேன்' என்று தான் தேடின த்₃ரவ்யத்தை f ஆள்விழுக்காட்டிலேயிட்டு இவர்களுக்கும்

---

ருக்கே அதி₄காரமுண்டாகையாலே ஸ்ரீ வைஷ்ணவர்கள் பேசாதே போனார்கள் என்று கருத்து. d நீ நான் புகவிருக்கிற பரமபத₃த்துக்குப் போவாய் என்று கருத்து. e விளையும் நெல் பால்வற்றி முற்றமுற்றத் தலைவணங்குவதுபோலே. f ஆள்விழுக்காட்டிலே... பற்றி - ஆளுக்கு ஒரு பகுதியாகப் பங்கிட்டு அவர்களுக்கு இரண்டு

கொடுத்துத் தாமும் தம் மோபாதியைப்பற்றி, அருளிச்செய லும் ஓதி, ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து பிற்றையாண்டு திருமலை யேறவர; அநந்தாழ்வான், 'கண்டீரே! அப்போதே இவை உம்மை விட்டகலுமென்று சொன்னேன்' என்று அருளிச் செய்ய; "அடியேனுக்கு இரண்டு வார்த்தை அருளிச்செய் தருளிற்று; 'என்பக்கலிலே ஹிதம் கேட்டால் நான் பெறும் தே₃ஶம் பெறுவதி' என்றருளிற்று; ‡ அத்தைக் கிழிச்சீரை யிலே த₄நமென்று முடிந்துகொண்டேன்; 'இங்குள்ள ஐஶ் வர்யம் உன்னைவிட்டகலும்' என்றருளிச்செய்தருளிற்று; அது ப்ரத்யக்ஷமாகக் கண்டபடியாலே h ஸ்ரீபாத₃த்துக்கு அடிமை யென்னுமிடம் கண்டேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; 'இனி நீரிங்கேயே நில்லும்' என்று அருளிச்செய்தருளினார்.

## நூற்றெண்பத்திரண்டாம் வார்த்தை

பெருமாள் ஆழ்வானைப்பார்த்து 'நீ உனக்கு வேண்டுவது நம்மை வேண்டிக்கொள்' என்று திருவுள்ளமாக; 'நாயன்தே! அடியேனுக்குப் பண்டே எல்லாம் தந்தருளிற்றே' என்று விண்ணப்பஞ்செய்ய; 'இல்லை, இப்போது நம்மை வேண்டிக் கொள்' என்ன; 'ஆகில் நாயன்தே, அடியேனோடு ஸம்ப₃ந்த₄

---

பகுதிகளைக் கொடுத்து, தமக்கு ஒருபங்கு எடுத்துக்கொண்டு என்று கருத்து. ‡ பணத்தைத் துணியில் முடிந்துகொள்வதுபோலே தேவரீர் சொன்ன வார்த்தையை மனத்தில் முடிந்துகொண்டேன் என்கை. h ஸ்ரீபாத₃த்துக்கு அடிமை என்னுமிடம் கண்டேன் — இங்குபோலே பரமபத₃த்திலும் தேவரீருக்கு அடிமையாகவேயிருப்பேன் என்பதை உணர்ந்தேன் என்றபடி.

### நூற்றெண்பத்திரண்டாம் வார்த்தை

இந்த வார்த்தையில் அருளிச்செய்யப்பட்ட விஷயம் பல ப்ராசீந க்₃ரந்த₂ங்களில் உள்ளது. "அர்வாஞ்சோ யத்பத₃ஸரஸிஜத்₃வந்த்₃வ மாஶ்ரித்ய பூர்வே, மூர்த்₄நா யஸ்யாந்வயமுபக₃தா தே₃ஶிகா முக்தி மாபு:। ஸோऽயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தா₂ம் யத் ஸம்ப₃ந்த₄ாத₃மநுத கத₂ம் வர்ண்யதே கூரநாத₂:॥" [எந்த எம் பெருமானாருடைய திருவடிஸம்ப₃ந்த₄த்தாலே பின்புள்ளவர்களும்,

முடையாரெல்லாரும் பரமபத₃ம் பெறவேணும்' என்ன, 'தந்தோம்' என்று திருவுள்ளமாக; இத்தை உடையவர் கேட்டருளிக் a காஷாயத்தை முடிந்தேறிட்டு ஆர்த்துக்கொள்ள, 'இது என்?' என்ன, 'நமக்கு ஆழ்வானோடே ஸம்ப₃ந்த₄முண்டாகையாலே பரமபத₃ம் பெறலாமே' என்று அருளிச்செய்தார்.

## நூற்றெண்பத்துமூன்றும் வார்த்தை

உடையவர் அப₄யப்ரதா₃நம் அருளிச்செய்யாநிற்க, பிள்ளை யுறங்காவில்லிதா₃ஸர் கோ₃ஷ்டி₂யில் நின்றும் புறப்பட்டு "ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமாள் ஸ்வாபி₄மாநத்தைவிட்டுப் பெருமாள் திருவடிகளே தஞ்சமாக a "ஸர்வலோகஶரண்யாய ராக₄வாய" என்று பற்றினவரைக் கல்லுந்தடியுங்கொண்டது -b பெருமாள் பரிகரம்; நாம் என்செய்யக்கடவோம்?" என்று ப₄யப்பட; உடையவர் அருளிச்செய்தபடி. c கமுகுண்ணில் வாழை உண்ணும்; எனக்குப் பெரியநம்பியுண்டு; உமக்கு நானுண்டு' என்று அருளிச்செய்தருளினார்.

---

திருமுடிஸம்ப₃ந்த₄த்தாலே முன்புள்ளவர்களுமான ஆசார்யர்கள் மோக்ஷமடைந்தார்களோ, அந்த ராமாநுஜமுனிவரும் எந்தக் கூரத்தாழ்வானோடு ஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்து, தமக்கு மோக்ஷம் நிஶ்சயம் என்று உறுதிகொண்டாரோ, அத்தகைய கூரத்தாழ்வானுடைய பெருமையை வர்ணிக்கமுடியுமோ ?] என்னும் கூரத்தாழ்வான் தனியனிலும் அநுஸந்தி₄க்கப்பட்டது. a காஷாயத்தை முடிந்தேறிட்டு ஆர்த்துக்கொள்ள—உத்தரீயத்தைக் கையில் பிடித்துக்கொண்டு உயர எறிந்து மகிழ்ச்சிக் கூச்சலிட என்றபடி.

**நூற்றெண்பத்துமூன்றும் வார்த்தை**

a "ஸர்வலோகஶரண்யாய ராக₄வாய..." (எல்லா உலகிற்கும் ஶரணமடையத்தக்கவராய், மஹாத்மாவான ராக₄வரிடத்தில் விபீ₄ஷணன் வந்திருப்பதை விரைந்து தெரியப்படுத்துங்கள்) b பெருமாள் பரிகரம்—ராமனுக்குத் துணைவரான ஸுக்₃ரீவன் முதலான வானரஸேனை. c "நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்" என்கிறரீதியிலே கமுகுபயிரிடுவோர் அதற்குத் தண்ணீர் பாய்ச்சும்போது அதனருகிலிருக்கும் வாழையும் அத்தண்ணீரை உண்டு வளருவதுபோலே பெரியநம்பி ஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்து பெருமாள்

## நூற்றெண்பத்துநாலாம் வார்த்தை

'எம்பெருமானாரிலும் ஆளவந்தாரிலும் வாசி யார்க்குண்டு?' என்று ஆழ்வானை முதலிகள் கேட்க; ஓரிராவெல்லாம் விசாரித்து, 'பெருமாளிலும் பெரியபிராட்டியாரிலும் வாசி யார்க்குண்டு?' என்றார்; (ந த்யஜேயம்) என்றார் பெருமாள்; (ந கஶ்சிந்நாபராத்₄யதி) என்றாள் பிராட்டி; இப்படி இருவர்க்கும் வாசி என்று அருளிச்செய்தார்.

## நூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை

ஒருநாள் உடையவரும் முதலிகளும் எழுந்தருளாநிற்க, a பெரியநம்பி தண்டனிட, உடையவர் அஞ்ஜலிபண்ணிப்போக, முதலிகள், உடையவரை இதுவென்னென்று கேட்க, அப்

---

என்னைக் கடாக்ஷிப்பர். என்னோடு ஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்து உம்மையும் கடாக்ஷிப்பர். ஆகையால் பெருமாள் கடாக்ஷமாகிற வெள்ளம் நம்மீதும் ஏறிப்பாய்ந்து நம்மையும் உஜ்ஜீவிக்கச் செய்யும் என்று கருத்து.

**நூற்றெண்பத்துநாலாம் வார்த்தை**

பெருமாள் பிராட்டி இருவரில் எவர்க்குச் சிறப்பு என்று ஆராயும் போது பரப்₃ரஹ்மத்வத்தை இட்டுப் பெருமாளுக்கே சிறப்பிருந்த போதிலும் "நண்பனாக வந்தவனைக் கைவிடமாட்டேன்" [ரா-யு 18-3] என்ற பெருமாளைக் காட்டிலும் "இவ்வுலகில் குற்றம்செய்யாதவன் ஒருவனுமில்லையே" [ரா-யு 116-44] என்று கூறும் பிராட்டியே கருணை முதலான கு₃ணங்களில் மிக விஞ்சியவளாகிறாள்; அதுபோலே ஆளவந்தார் எம்பெருமானாருக்கு ப்ராசார்யராகையாலும், அவருடைய கடாக்ஷத்தாலேயே எம்பெருமானார் உய்வுபெற்றவராகையாலும் ஆளவந்தார்க்கே சிறப்பிருந்தபோதிலும், "ஆசையுடையார்க்கெல்லாமாரியர்காள் கூறும்" என்ற க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யத்வம் காரேய் கருணையிராமாநுசரிடத்திலேயே நிலைநிற்கையாலே இவர்க்கே சிறப்பு என்று கருத்து.

**நூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை**

இந்த வார்த்தையிலும் அடுத்த வார்த்தையிலுமுள்ள அர்த்த₂ம் பல ப்ராசீன க்₃ரந்த₂ங்களில் வந்துள்ளது. a 'ஆளவந்தார் கோ₃ஷ்டி₂யுடன் எழுந்தருளுவதாக நினைத்து த₃ண்டத₃னிட்டேன்" என்று பெரிய நம்பி அருளியதாக அடுத்த வார்த்தையிலும், மற்றும் பல ப்ராசீன

போது, b'அவருடைய இஷ்டம் அநுவர்த்திக்கையன்றே நமக்கு ஸ்வரூபம்' என்று அருளிச்செய்தார்.

## நூற்றெண்பத்தாறும் வார்த்தை

அநந்தரம் நம்பி ஸ்ரீ பாத₃த்திலே சென்றுகேட்க, 'ஆளவந்தாரும், முதலிகளும் எழுந்தருளினாற்போலேயிருந்தது ; அத்தாலே தண்டனிட்டேன்'' என்ன, ' இது ஹேதுவாக மாட்டாது'' என்று விண்ணப்பஞ்செய்ய, a ''ஆளவந்தார்க்குப் பின்பு அர்த்த₂ஸ்தி₂தி இவர்க்கே உள்ளது ; வேறொருவருக்குமில்லை; ஒருவரை த₃ண்ட₃னிடக்கடவதாய் அத்தால் மற்றோரை த₃ண்ட₃னிடுவது'' என்று அருளிச்செய்தார்.

## நூற்றெண்பத்தேழாம் வார்த்தை

எம்பெருமானார் மேற்கே வெள்ளைசாத்தி எழுந்தருளின போது இவருடைய உபந்யாஸத்தைக்கண்டு ஸர்வரும் விஸ்மிதராக; a ''என் பரமாசார்யர் வார்த்தையைக்கேட்டுச் சொன்னேனித்தனை; அவரைக்கண்ணாலே கண்டேனாகில் பரமபத₃த்தளவும் ஸோபாநமாகக் கட்டேனோ?'' என்று அருளிச்செய்தார்.

---

க்₃ரந்த₂ங்களிலும் வந்துள்ளது. b, எம்பெருமான் திருத்துழாயான நித்யஸூரியைத் தன் முடியிலே வைத்துக்கொண்டாலும் இசைந்திருக்கையே அந்த நித்யஸூரியின் பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்குச் சேர்ந்திருப்பதுபோலே, பெரியநம்பி த₃ண்ட₃னிட்டதை இசைந்திருப்பதே நமக்கு ஸ்வரூபம் என்றபடி.

### நூற்றெண்பத்தாறும் வார்த்தை

a அர்த்த₂ஸ்தி₂தி - ஆசார்யத்வபூர்த்தி. ஆளவந்தாருக்குப் பிறகு ஆசார்யத்வபூர்த்தி இவர்க்கேயுள்ளது; வேறொருவருக்குமில்லை. ஆளவந்தாரை த₃ண்ட₃னிட விரும்பிய அடியேன் அவரில்லாமையாலே, ஆசார்யத்வபூர்த்தியில் அவரை ஒத்த இவரை த₃ண்ட₃னிட்டேன் என்று கருத்து.

### நூற்றெண்பத்தேழாம் வார்த்தை

a என் பரமாசார்யரான ஆளவந்தாருடைய வார்த்தைகளை அவருடைய ஶிஷ்யர்கள்மூலம் கேட்டுச்சொன்ன உபந்யாஸத்தின் பெருமை இவ்வளவு. அவரைக் கண்ணாலே கண்டு சிறிதுகாலம் கூடிவாழ்ந்திருந்தேனாகில் பரமபத₃த்துக்கே படிகட்டியிருப்பேனே—என்று கருத்து.

## நூற்றெண்பத்தெட்டாம் வார்த்தை

"எம்பெருமான்றானே நம்மாழ்வாராய் வந்தார்" என்று ஆளவந்தார் அருளிச்செய்வர்; "நித்யஸம்ஸாரிகளிலே ஒருவனை உப₄யவிபூ₄தி விலக்ஷணனாம்படி எம்பெருமான் ஆக்கினான்" என்று எம்பார் அருளிச்செய்வர்.

## நூற்றெண்பத்தொன்பதாம் வார்த்தை

திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த்திலே எம்பெருமானார் திருவாய்மொழி கேளாநிற்க, ஆளவந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் நிர்வஹித்ததொழிய, பாட்டுக்கள்தோறும் சில அர்த்த₂ங்களை ப்ரதிபாதி₃த்து 'இங்ஙனேயானாலோ?'

---

### நூற்றெண்பத்தெட்டாம் வார்த்தை

'நம்மாழ்வாருடைய பெருமையைப் பார்க்கும்போது திருக்குறுங்குடி நம்பியான எம்பெருமானே நம்மாழ்வாராய் வந்து அவதரித்தான் என்று சொல்லலாம்' என்று ஆளவந்தார் திருவுள்ளம். "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து' [திருவாய் 2-6-8] முதலான பாசுரங்களில், பொய்யில் பாடல்களைப் பாடிய நம்மாழ்வாரே தம்மை அநாதி₃காலமாகப் பல பிறவியெடுத்த நித்ய ஸம்ஸாரியாக அநுஸந்தி₄த்துக் கொண்டிருக்கையாலே "ஒரு நித்ய ஸம்ஸாரியை விண்ணுளாரிலும் சீரியராக ஆக்கினான் எம்பெருமான் என்பதே உண்மை நிலை 'யத்₃யத்₃விபூ₄திமத்ஸத்த்வம் ஸ்ரீமதூ₃ர்ஜிதமேவ வா। தத்ததே₃வாவக₃ச்ச₂ த்வம் மம தேஜோம்ஶஸம்ப₄வம்॥' [கீ₃தை 10-41] [எந்தெந்த ஜந்துக்கள் செல்வம், காந்தி, நற்செயல்களில் உறுதி முதலான சிறப்புக்களையுடையவையாக இருக்கின்றனவோ, அந்தந்த ஜீவராசிகள் என்னுடைய நியமனஶக்தியின் ஒரு பகுதியாலே உண்டானவை என்று நீ அறிவாயாக.] என்கிற ரீதியிலே எம்பெருமானுடைய அம்ஶத்தாலுண்டானவர் நம்மாழ்வார் என்பதையிட்டுப் பூர்வாசார்யர்கள் அவரை ப₄க₃வத₃வதாரமாக அருளிச்செய்கிறார்கள்" என்பது எம்பார் திருவுள்ளம். திருவிருத்தம் ப்ரவேஶத்தில் இந்த நிஷ்கர்ஷம் பின்பற்றப்பட்டுள்ளது.

### நூற்றெண்பத்தொன்பதாம் வார்த்தை

173-ம் வார்த்தையின் சில அம்சங்களின் விவரணமாயிருப்பது இந்த வார்த்தை. திருவாய் 2-3-3 ஈடு முதலானவற்றிலும் இவ்விஷயம் உள்ளது. இதன் தொடர்ச்சி 173-ம் வார்த்தையிலுள்ளது.

என்று உடையவரருளிச்செய்ய; 'இப்படி ஆளவந்தாரருளிச் செய்யக் கேட்டறியேன்' என்று திருமாலையாண்டான் அருளிச் செய்து இங்ஙனே நடவாநிற்கச் செய்தே, 'அறியாக்காலத் துள்ளே' என்கிற பாட்டுக்கு "'அறிவு நடையாடாத த₃ஶை யிலே ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து ஜ்ஞாநத்தை அழிக்கக்கடவதான தே₃ஹஸம்ப₃ந்த₄த்தோடே பின்னையும் வைத்தாய்' என்கிற இழவாலே அருளிச்செய்கிறார்" என்று திருமாலையாண்டானருளிச்செய்ய; இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "முன்னிற்பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் பெரிய ப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதிதோற்றச் சொல்லுமது சேராது; இங்ஙனேயாமித்தனை; — (அறியாமா மாயத்து அடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து - வைத்தாயால்) என்கிறார் என்று இத்தை யும் ஒருபகாரமாக்கி அருளிச்செய்கிறார்" என்று உடையவர் விண்ணப்பஞ்செய்ய; 'இது விஶ்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறியோம்' என்று திருமாலையாண்டான் திருவாய்மொழி அருளிச்செய்யத் தவிர்ந்தார்.

## நூற்றுத்தொண்ணூறும் வார்த்தை

எம்பெருமானார் வெள்ளைசாத்தி எழுந்தருளினபோது a திருமலைநல்லான் சிஷ்யரான சில வேடர் புனம்பாராநிற்க, அம்மலையடியே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருள ; இந்த வேடர் அவரைத் b திருநாமமே குறியாக 'நீர் எங்குநின் றெழுந்தருளுகிறீர்?' என்று கேட்க; 'கோயில் நின்றும் வரு கிறேன்' என்ன; "எம்பெருமானார் திருவடிகளுக்கு ஒரு குறைகளுமில்லையே? c பெரியதிருச்செல்வத்துக்கு ஒருகுறை களுமற நடவாநின்றதோ?" என்று கேட்க; "என்ன எம்

---

**நூற்றுத்தொண்ணூறும் வார்த்தை**

இந்த வார்த்தை கு₃ருபரம்பரையில் 241 முதல் 246 வரை உள்ள பக்கங்களில் காணப்படுகிறது. a திருமலை நல்லான் - எம் பெருமானார் ஶிஷ்யர்களில் ஒருவர். b திருநாமமே குறியாக - திரு மண்காப்பே அடையாளமாக. c பெரிய திருச்செல்வம் - திருவரங்கச்

பெருமானாரும் என்ன திருச்செல்வமும்? எம்பெருமானார் வெள்ளைசாத்திக்கொண்டு எழுந்தருளினார்; இன்னவிடத்திலே எழுந்தருளினாரென்று தெரிந்ததில்லை'' என்று அருளிச் செய்ய; அவர்களும் ஆறுநாள் பட்டினியே கிடந்தார்கள்; ஆறும்நாள் ராத்ரி எம்பெருமானார் மழையும் இடியுமாய்க் குளிரிலே d ஈடுபட்டு, இவர்கள் மலையிலே நெருப்பொளிகண்டு 'அங்கே நம்மைக்கொண்டுபோங்கோள்' என்று அருளிச்செய்ய; முதலிகளும் அங்கே எழுந்தருளி, 'வழியெங்கே பிள்ளைகாள்!' என்றழைக்க; 'ப்₃ராஹ்மணக் குரலாயிருந்தது; பெருவிடாயோடே ஒருகாலழையாநின்றது' என்றோடிவந்து, வேலியையும் பிரிதது இங்கே வாருங்கோளென்று, சாத்துகைக்குப் e புடைவையும் கொடுத்து, சாத்தினபுடைவையும் காம்புலரவிட்டுக் f காய்ச்சியொற்றி, 'எங்குநின்றுமெழுந்தருளுகிறது?' என்று கேட்க, 'கோயில் நின்றும வருகிறோம்' என்று அருளிச்செய்ய; 'எம்பெருமானார் செய்தருளுகிறதென்?' என்று கேட்க, 'நீங்கள் எம்பெருமானாரை அறிந்தபடியென்?' என்ன; ''நாங்கள் நல்லானடிமைசள்; எங்களுக்கு ஹிதமருளிச் செய்கிறபோது, 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்றருளிச்செய்தார்; அன்று தொடங்கி எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருந்தோம்'' என்ன; 'ஆகில் அவரிறே இவர்' என்று முதலிகள் உடையவரைக் காட்ட, இவர்களும் உடையவர் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு வ்யாகுலப்பட்டு ஸேவித்துநிற்க, உடையவரும் '' 'நல்லான்' என்கிற காளமேக₄ம் இங்கும் வர்ஷித்ததோ?'' என்று உகந்தருள; பின்பு தினைக்கதிரைக்கொண்டுவந்து தேனமுதையும் g மிடாவோடே ஸமர்ப்பித்து, 'இத்தை வறுத்து இடித்துத் தேனிலே குழைத்து அமுதுசெய்யுங்கோள்' என்று விண்ணப்பஞ்செய்ய, அவர்களும் அப்படியேசெய்து அமுது செய்து கண்வளர்ந்தார்கள்; மற்றைநாள் விடிந்த

---

செல்வம். d ஈடுபட்டு - வருந்தி. e புடவை - வஸ்த்ரம். f காய்ச்சி ஒற்றி - குளிரால் நடுங்கும் உடலுக்குச் சூடு உண்டாகக் காய்ச்சி ஒற்றி. g மிடா - பானை. h அவர்களுடனே என்பதற்குப் பதிலாக

வாறே அந்த வேடமுதலிகளிலே ஒருவரையும் ஸ்ரீபாத₃த்தில்முதலிகளிலே ஒருவரையுமாகக் கோயிலுக்குப் போக விட; h அவர்களுடனே நாற்பத்தஞ்சு திருநாமம் எழுந்தருளினார்கள்; அந்த வேடமுதலிகள் அந்த மலைக்கு மேற்கே அறுகாத வழி கொண்டுபோய் ஒரு வேடனகத்திலே விட்டுவர; அந்த வேடன் பகலெல்லாம் வேட்டைக்குப் போய்வந்து ராத்ரி உண்ணப்புக்கவாறே, ப்₃ராஹ்மணர் உண்ணுதிருக்க நாம் உண்ணலாகாதென்று அருகாக ஒரு க்₃ராமத்திலே கட்டளை வாரியனென்பான் ஒருவனகத்திலே வேண்டுங் கட்டளைகளும் பண்ணிக்கொடுவந்து 'இவர்களைக் கொண்டுபோய்ச் சடக்கென அமுது செய்வியுங்கோள்' என்று மீண்டான். அவ்வகமுடைய மணவாட்டுப்பெண் 'உங்களுக்கு அமுது செய்யவேண்டாவோ?' என்ன; 'வேண்டா' என்றார்கள்; 'உங்களுக்கு ப₄யப்பட வேண்டா; நானும் எம்பெருமானார் ஸ்ரீபாத₃த்தையுடையேன்' என்றாள்; 'நீ எம்பெருமானாரை ஆஶ்ரயித்தபடியென்?' என்று கேட்க; "நாங்கள் இவ்விடம் வர்ஷமின்றிக்கே இருந்தவாறே அங்கே கோயிலிலே வந்திருந்தோம்; என்னகமுடையானும் நானும் ஒரு மச்சிலே இருக்கையாயிருக்கும்; அப்போது எம்பெருமானார் i ஏழகத்திலே மாது₄கரம் பண்ணி அமுதுசெய்தருளுவர்; திருவீதியிலே எழுந்தருளும்போது அகளங்க நாட்டாழ்வான் முதலான j பட்டமுதலிகளெல்லாரும் இவர் திருவடிகளிலே ஸேவித்துக்கொண்டு வருவார்கள்; இவர் மாது₄கரத்துக்கு அந்த அகத்திலெழுந்தருளினார்; நான் மச்சினின்றுமிழிந்து k தகைந்தேன்; 'இதுவென் பெண்ணே?' என்றார்; 'உம்மை ராஜாக்களும் j பட்டமுதலிகளும் தண்டனிடாநின்றார்கள்; நீர் மாது₄கரம் பண்ணுநின்றீர்' என்றவாறே; 'அவர்களுக்கு நாம் ப₄க₃வத்₃விஷயத்திலே சில வார்த்தை சொல்லுகை

---

'உடையவருடனே மற்ற' என்று கு₃ருபரம்பரையிலுள்ளது. i ஏழகத்திலே மாது₄கரம் பண்ணி - ஏழு திருமாளிகைகளிலே பி₄க்ஷை கொண்டு. j பட்ட முதலிகள்-பட்டத்துக்குரிய ஶிஷ்யர்கள். k தகைந்தேன் - "இடைகழியில் தகைந்து (தயங்கி) நின்றேன்" என்று

யாலே காண்' என்று அருளிச்செய்ய; 'அந்த வார்த்தையை எனக்கும் அருளிச்செய்யவேண்டும்' என்ன; அப்போது அருளிச்செய்தருளினார்; பின்பு எங்கள் தே3ஶம் வர்ஷமுண்டாய், நாங்கள் எங்கள் நாட்டேறப்போகிறபோது, l அவரருளிச்செய்த வார்த்தையை மறந்தேன் என்றவாறே; m அத்தை நெஞ்சிலே படும்படி அருளிச்செய்து போகப்புக்கவாறே; 'அடியேனுக்கு ஆத்மரக்ஷையாக ஏதேனும் தந்தருள வேணும்' என்று விண்ணப்பஞ்செய்தேன்; அப்போது சாத்தியிருந்த ஸ்ரீபாத3ரக்ஷையை ப்ரஸாதி3த்தெழுந்தருளினார்; நாங்களும் அன்றேபோந்தோம்; பின்னையும் ஸேவிக்கப்பெற்றிலேன்'' என்றவாறே; n திருவுள்ளத்திலே விசாரித்தருளித் திருப்போனகம் சமைக்க அருளிச்செய்து 'இவள் செய்யுமது பார்த்திரும்' என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவரை வைக்க; அவளும் அடைவாகச் சமைத்து முன்புடுத்த புடைவையையும் விழுத்து, ஶுத்3த4மான புடைவையையும் உடுத்து உள்ளே புகுந்து, "எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்'' என்று உச்சரித்து ஸ்ரீபாத3ரக்ஷையையும் ஏறியருளப்பண்ணித் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணிப் புறப்பட்டு தண்டன் ஸமர்ப்பித்து, முதலிகளை 'ஸ்ரீபாத3ம் விளக்க எழுந்தருள வேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய; முன்பு பார்த்திருக்கச் சொன்ன ஸ்ரீவைஷ்ணவரை அழைத்து 'இவள் செய்ததேது?' என்று கேட்டருள; 'இவளும் திருப்போனகத்தைச் சமைத்து முன்புடுத்த புடைவையை விழுத்து, ஶுத்3த4மான புடைவையை உடுத்து, திருப்போனகத்தை உள்ளே கொண்டு புகுந்து கதவையடைத்து த்4யாநம் பண்ணிக்கொண்டிருந்தாள்; o கறுத்து நீண்டிருந்தது; எம்பெருமானாயிருந்ததில்லை' என்றவாறே; அவள்தன்னை அழைத்து 'நீ

---

கு3ருபரம்பரை. l அவர் அருளிச்செய்த வார்த்தை — த்3வயம். m அத்தை நெஞ்சிலே படும்படி அருளிச்செய்து-''த்3வயத்தை நெஞ்சிலே நிலை நிற்கும்படி கு3ருபரம்பரா பூர்வகமாக உபதே3ஶித்து'' என்று கு3ருபரம்பராப்ரப4ாவத்தில் வந்துள்ளது. n உடையவர் என்பதைச் சேர்த்துக்கொள்வது. o 'இவள் தளிகை அமுது செய்வித்த தெய்வம் கறுத்து நீண்டிருந்தது; எம்பெருமானுடைய அர்ச்சாவிக்3ர

உள்ளே செய்ததேது?' என்று கேட்க; 'முன்பு ஏறியருளப் பண்ணித்தந்த ஸ்ரீபாத₃ரக்ஷையை ஏறியருளப்பண்ணித் திருவடிவிளக்கி அமுது செய்யப்பண்ணியாக்கும் அடியேன் ப்ரஸாத₃ப்படுவது; இப்போதும் அப்படியே செய்தேன்' என்று விண்ணப்பஞ்செய்ய; 'அவைதன்னைக் கொண்டுவந்து காட்டு' என்ன; அவளும் கொண்டுவந்து காட்ட; p அங்குத்தைக்குத் தகுதியாயிருந்தவாறே, 'எம்பெருமானார் அருளிச்செய்த வார்த்தை ஒத்திருந்ததில்லையாகில் முதலிகள் அமுது செய்யார்கள்; அத்தை என் செவியிலே சொல்லிக் காணாய்' என்ன; அவளும் விண்ணப்பஞ்செய்தாள்; வார்த்தையும் ஒத்திருந்தது, 'ஆகில் q இதுக்குள்ளே எம்பெருமானாருண்டோ வென்று பார்த்துக் காணாய்' என்ன; அவளும் திருவிளக் கேற்றிக்கொண்டுவந்து அடைவே பார்த்தாள். எம்பெருமானார் திருவடிகளானவாறே அங்கே திகைத்து "எம்பெருமானார் திருவடிகள்போலேயிருக்கிறது, காஷாயமில்லாமையாலே தெரி கிறதில்லை" என்றவாறே, 'நான்காண்!' என்ன; அவளும் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு அழப்புக்கவாறே, கண்ண நீரைத்துடைத்து, "r (விது₃ராந்நாநி பு₃பு₄ஜே ஶுசீநி கு₃ண வந்தி ச) என்று பாவநத்வபோ₄க்₃யத்வங்களையுடைத்தாயிருந் தது; முதலிகாள்! இனி அமுது செய்யுங்கோள்" என்றரு ளிச்செய்ய, அவர்களும் அமுதுசெய்து கண்வளர; இவளும் தளிகைப்ரஸாத₃மும் கூட்டி, பாலையும் கலந்து மச்சிலே கிடக்கிற ப₄ர்த்தாவையெழுப்பி ப்ரஸாத₃த்தையுமிட்டுட்டி ப்ரஸாத₃ப்படப்பண்ணி தான் ப்ரஸாத₃ப்படாதேகிடக்க; 'இதென்?' என்று கேட்க, 'கோயில் நின்றும் எம்பெருமானாரும் முதலிகளும் எழுந்தருளி அமுது செய்யமாட்டோமென்று கண்வளருகிறார்கள்' என்றவாறே; 'நான் இதுக்கு என் செய்யவேணும்?' என்ன; 'நீ எம்பெருமானார் திருவடி

---

றம் போல் இல்லை' என்றபடி. p அங்குத்தைக்கு - எம்பெருமானார் திருவடிகளுக்கு. q இதுக்குள்ளே-இக்கோ₃ஷ்டி₂யிலே. r "பரிஶுத்₃த₄மாய் பிறரையும் பரிஶுத்₃த₄ப்படுத்தவல்லதாய் (பாவனமாய்), குணமுள்ளதான (இனியதான) விது₃ரரின் அன்னங்களைக் கண்ணன் பு₄ஜித்தான்" என்னும் பொருளுள்ள மஹாபா₄ரத ஶ்லோகம்.

களை ஆஶ்ரயிக்கவல்லையோ?' என்ன; இவனும் ராத்ரியிலே § ஸம்வதி₃த்து ப்ரத்யயம் பண்ணிக்கொடுக்க, இவளும் † ப்ரஸாத₃ம் சூடி நித்₃ரைபண்ணி, விடிந்தவாறே எம்பெருமானார் திருவடிகளிலே த₃ண்டனிட்டு 'இற்றைக்கெழுந்தருளிநிற்க வேண்டும்; இவனை க்ருபைபண்ணி எழுந்தருளவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய; எழுந்தருளிநின்று அவனை க்ருபைபண்ணி அந்த க்₃ராமத்திலே நாலஞ்சுநாளெழுந்தருளியிருந்து த்ரித₃ண்ட₃காஷாயாதி₃களையும் ஸம்பாதி₃த்துத் தம்முடைய திருவாராத₄நமான பேரருளாளர் திருமுன்பேவைத்து த₃ண்டன்ஸமர்ப்பித்து முன்புபோலே அவற்றை உடையவர் த₄ரித்தருளினார்.

## நூற்றுத்தொண்ணூற்றோராம் வார்த்தை

எம்பெருமானை அபேக்ஷிக்கை வார்த்தாமாத்ரம்; ஸ்ரீவைஷ்ணவர்களையபேக்ஷிக்கை கையைப்பிடிக்கை; ஆசார்யனை அபேக்ஷிக்கை காலைப்பிடிக்கை "கு₃ருப்ரமாணீக்ருத சித்தவ்ருத்தய: ஶ்ருதி ப்ரமாண ப்ரதிபந்நவ்ருத்தய: । அமாநிநோ த₃ம்ப₄விவர்ஜிதா நரா: தரந்தி ஸம்ஸார ஸமுத்₃ரமஶ்ரமம் ॥"

## நூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

அந்யஶேஷத்வ நிவ்ருத்தியும் ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியும் அதி₄காரிக்ருத்யம்; ஜ்ஞாநப்ரத₃ாநமும் ஜ்ஞாநவர்த்த₄கத்வமும் ஆசார்யக்ருத்யம்; புருஷகாரத்வமும் கைங்கர்ய

---

§ ஸமமதித்து ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொடுக்க. † ப்ரஸாத₃ம் சூடி- ப்ரஸாத₃ப்பட்டு என்று குரு₃பரம்பரையிலுள்ளது.

### நூற்றுத்தொண்ணூற்றோராம் வார்த்தை

எம்பெருமானைப் பற்றுகை அவனைக் குஶலப்ரஶ்னம் செய்வதை ஒக்கும். ஸ்ரீவைஷ்ணவர்களைப் பற்றுகை எம்பெருமானுடைய கையைப் பிடித்து நட்புக்கொள்வதை ஒக்கும். ஆசார்யனைப் பற்றுகை எம்பெருமானுடைய காலைப் பிடிப்பதை ஒக்கும். இத்தகைய ஆசார்யனுடைய வைப₄வத்துக்கு ப்ரமாணம் "ஆசார்யனையே, அதாவது அவனது வாக்கையே பரம ப்ரமாணமாகக் கொண்ட கருத்தை உடையவர்களாய், அதனாலேயே வேத₃மாகிற ப்ரமாணத்தில் நம்பிக்கை உடையவர்களாய், க₃ர்வமற்றவர்களாய், ஆடம்பரமற்றவர்களாயிருக்கும் மனிதர்கள் ஸம்ஸாரக் கடலை மிக எளிதில் தாண்டுகிறார்கள்" என்னும் பொருள் உள்ள ஶ்லோகம்.

வர்த்த₄கத்வமும் பிராட்டிக்ருத்யம்; விரோதி₄ நிவர்த்தகத்வமும் ப்ராப்யப்ரத₃த்வமும் ஈஶ்வரக்ருத்யம்.

## நூற்றுத்தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

அக்₃நியை அகற்றுவாரும், அவித்₃யையை அகற்றுவாரும், அந்யரை அகற்றுவாரும், அச்சத்தை அகற்றுவாரும், அபே₄ாக்₃யரை அகற்றுவாரும்.

---

### நூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

143-ம் வார்த்தை இதற்கு விவரணமாயிருப்பது. சில மாறுதல்கள் உள்ளன.

### நூற்றுத்தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

ஆசார்யர்கள் ஐந்து வகைப்படுவர்; ஊற்றத்தைப் பற்றச் சொன்னது இது. (1) அக்₃னியை அகற்றுவார் — இங்கு அக்₃னி என்பது அக்₃நிபரிசர்யா ரூபங்களான யாக₃ங்களாகிற காம்யகர்மங்களைக் குறிக்கிறது. இந்தக் காம்யகர்மங்களால் பெறும் ஸ்வர்க்க₃ம் முதலான ப₂லன்கள் அல்பமாகவும் அஸ்தி₂ரமாகவும் இருப்பவை என்பதைக் காட்டி இக்கர்மங்களில் ஈடுபடாமல் மோக்ஷார்த்த₂மான உபாயங்களில் ஈடுபடச் செய்யும் ஆசார்யர்கள் இவர்கள். (2) அவித்₃யையை அகற்றுவார்—தே₃ஹத்தையே ஆத்மாவாக மயங்கும் தேஹாத்மாபி₄மானமாகிற அஜ்ஞானத்தையும், தன்னை ஸ்வதந்த்ரனென்று நினைக்கும் ஸ்வஸ்வாதந்த்ர்யமாகிற அஜ்ஞானத்தையும் அகற்றுகிறவர்கள் இவ்வாசார்யர்கள். (3) அந்யரை அகற்றுவார்—பிரமன் சிவன் முதலான தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும், மற்ற ஸம்ஸாரிகளுக்கும் ஶேஷமாயிருப்பது தன் ஆத்மா என்னும் அந்யஶேஷத்வப்₄ரமத்தை அகற்றுகிறவர்கள் இவ்வாசார்யர்கள். (4) அச்சத்தை அகற்றுவார்-அநாதி₃காலமாகத் தனக்குத்தான் நன்மையை விளைத்துக் கொள்வதாக நினைத்துத் தீமையையே தேடிக்கொண்டிருப்பதைப் பார்த்து ''க₃தௌ சாபி வர்த்ததே மே மஹத்₃ப₄யம்'' [ஜிதந்தே 11·9] [உபாயங்களைப் பார்த்தும் எனக்குப் பெரும் ப₄யமுள்ளது] என்று அச்சமடைவாரைக் கண்டு ஸ்வார்த்த₂மான ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூபமான ப்ரபத்தியை உபதே₃ஶித்து எம்பெருமானையே உபாயமாகக் காட்டி அவர்களுடைய அச்சத்தை அகற்றுகிறவர்கள் இவ்வாசார்யர்கள். (5) அபே₄ாக்₃யரை அகற்றுவார்—ஐஶ்வர்ய கைவல்யங்களும், ப₄க₃வத₃நுப₄வ கைங்கர்யங்களைத் தனக்கென்று விரும்பும் ஸ்வார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களும் பே₄ாக்₃யமன்று என்று காட்டி அபே₄ாக்₃யங்களை அகற்றி, பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களே பே₄ாக்₃யம் என்று உணர்த்துகிறவர்கள் இவ்வாசார்யர்கள்.

## நூற்றுத்தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

து₃:க்க₂ாநுப₄வம் ப்ரக்ருதி, து₃:க்க₂ாநுப₄விதா ஆத்மா, து₃:க்க₂ாஸஹை பிராட்டி, து₃:க்க₂நிவாரகன் ஈஶ்வரன்.

## நூற்றுத்தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை

நஞ்ஜீயர், ப₄ட்டரை, 'பெருமாள் சந்த்₃ரபுஷ்கரிணிக்கரை யிலே கண்வளர்ந்தருளுகிற இதுக்குத் திருவுள்ளத்தில் கருத் தென்?' என்று விண்ணப்பஞ்செய்ய; "நாராயணா ஓ! மணி வண்ணா!" என்று கூப்பிட்டபின்பிறே மடுவின்கரையிலே வந்தது; இங்குக் கண்வளருகிறது நான் கூப்பிடுவதற்குமுன்பே என்னை எடுக்கைக்காக, a நானகப்பட்ட பொய்கையிலே ஏற்கவே வந்து கண்வளர்ந்தருளுகிறார்; இவ்வர்த்த₂ங் கேட்டது உம்முடைய வசநத்தாலன்றுகாணும்; உம்மைக் கொண்டு பெருமாள் என் நினைவை வெளியிட்டருளினார் என்றருளிச்செய்தார்.

## நூற்றுத்தொண்ணூற்றாறும் வார்த்தை

ஆழ்வானுக்கு ப₃ாலமித்ரனாயிருப்பானொரு ப்₃ராஹ்மணா னுக்கு அநேகங்காலம் பிள்ளையின்றிக்கேயிருந்து பின்பு ஒரு பிள்ளை பிறந்தவாறே, கோயிலிலே ஆழ்வானுக்கு வார்த்தை யாய்க்கேட்டு அப்போதே பெரியபெருமாள் திருவடிகளிலே

---

**நூற்றுத்தொண்ணூற்றுநாலாம் வார்த்தை**

ஸம்ஸாரது₃:க்க₂த்தைச் சேதனன் அநுப₄விப்பதற்குக் காரணம் அசேதனமான ப்ரக்ருதியோடு அவனுக்குள்ள தொடர்பு. இந்த ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தாலே து₃:க்க₂த்தை அநுப₄விப்பவன் ப₃த்₃த₄ ஜீவன். தன் குழந்தையான இவன் இப்படித் துன்புறுவதைப் பொறுக்காமல் இவன் துன்பத்தை மாற்றும்படி எம்பெருமானிடம் புருஷகாரம் (சிபார்சு) செய்பவள் பிராட்டி. அவளுடைய சிபார்சுக்கு உட்பட்டு ஜீவனுடைய அத்துன்பத்தைப் போக்குகிறவன் எம்பெருமான்.

**நூற்றுத்தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை**

a நான் அகப்பட்ட பொய்கையிலே—நான் அகப்பட்டுத்தவிக்கும் ஸம்ஸாரமாகிற பெரிய மடுவிலே.

சென்று அப்பிள்ளைக்கு ஹிதத்தை அருளிச்செய்தருளி, வரு வாரையெல்லாம் 'அந்தப்பிள்ளை செய்வதென்?' என்று வினவுவர்; ஒருநாள் ஆண்டாள் 'போனத்தை வாவென்றழைத்து உறவுகொண்டாடாநின்றீர்; இதுக்கு ஹேதுவென?' என்ன: 'நான் அவனுக்கொரு நல்வார்த்தை சொன்னேன் காண்' என்ன; a 'அவனெங்கே நீரெங்கே? இப்படி சொல்லுவதொரு வார்த்தையுண்டோ?' என்ன; b 'ஒருவன் விலங்கிலே கிடந்தால் விலங்கு விடுவிக்கும்போது விலங்கில் கிடக்கிறவனுக்குச்சொல்லுமோ, விலங்கையிட்ட ராஜாவுக்குச் சொல்லுமோ?' என்றருளிச்செய்தார்; அந்தப்பிள்ளை, உபநயநம் பண்ணின ஸமநந்தரத்திலே கோயிலிலே வந்து ஆழ்வான் ஸ்ரீபாத₃த்திலே வந்து சேர்ந்தான்.

c போசலராஜ்யத்து ஸ்ரீஸாளக்₃ராமத்துக்கு உடையவரெழுந்தருள, ஊரடைய சைவராகையாலே ஆத₃ரியாதேயிருக்க, உடையவர், முதலியாண்டானைப்பார்த்து 'இவ்வூரார் நீர்முகக்குமிடத்திலே உன்னுடைய ஸ்ரீபாத₃த்தைவிளக்கி வா' என்றருளிச்செய்ய; அவரும் அப்படியே செய்ய; பிற்றைநாள் அவ்வூராரடைய உடையவர் ஸ்ரீபாத₃த்தை ஆஶ்ரயித்தார்கள்; அதுக்குப்பின்பு ஸ்ரீஸாளக்₃ராமமென்று பேராய்த்து.

## நூற்றுத்தொண்ணூற்றேழாம் வார்த்தை

மிளகாழ்வானை, முதலிகள் 'நீர் a கீழையூருக்குப் பலகாலும் போவானேன்?' என்று கேட்க; 'நான் அங்கே போனால் ப₄க₃வத்₃விஷயத்துக்கு அநுகூலமான வார்த்தைகள் அவர்

---

நூற்றுத்தொண்ணூற்றாறும் வார்த்தை

a 'பிறந்த குழந்தையை நீர் பாராமலேயிருக்கும்போது அவனுக்கு நீர் நல்வார்த்தை சொல்லுவது எப்படி?' என்பது ஆண்டாள் கேள்வியின் கருத்து b ''விலங்கிடப்பட்டவனை விடுவிக்கும்படி அவனுக்கு வேண்டியவன் ராஜாவிடம் நல்வார்த்தை சொல்வதுபோலே நான் ரங்கராஜாவிடம் அவனை ரக்ஷிக்கும்படி சொன்னேன்; விலங்கிடப்பட்டிருப்பவனை நேரில் பார்க்கவேண்டிய அவசியமில்லை'' என்பது ஆழ்வான் பதிலின் கருத்து.

c இவ்வார்த்தை குருபரம்பரையில்பக்கம் 246-இல் வந்துள்ளது.

களுக்குச் சொல்லுவன்; அத்தாலே b இங்குத்தைக்கு விரோதி₄யார்கள்' என்று, 'அவர்கள் பக்கலிலே c சில கொண்டு-போந்து ப₄ாக₃வத விஷயத்துக்கு உறுப்பாக்கினல் d அவர்களுக்கு ஓரானுகூல்யம் பிறக்குமென்றும் போனேன்' என்ன; e 'அப்படியாகிலும் அவர்கள் பதா₃ர்த்த₂ங்கள் ஆமோ?' என்ன; f 'நான் எல்லாரையும் நாராயணஸம்ப₃ந்த₄ நிப₃ந்த₄நமாகக் காணுமத்தனையல்லது ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ நிப₃ந்த₄நமாகக் காணேன்; அத்தாலே ஒரு வஸ்துவும் அந்ய ஸம்ப₃ந்த₄மாயிராதே' என்று அருளிச்செய்தார்.

## நூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

நடாதூரம்மாளும் a ஆளிப்பிள்ளானுமாகக் கூட அமுது செய்யாநிற்க, அத்தைப் பெருங்கூர்ப் பிள்ளை கண்டு அநுப₄வித்து, "தேவரீருடைய அநுஷ்டா₂நத்தைக் காணாதே b அருளிச்செய்த வார்த்தையைத் தஞ்சமென்றிருந்தேனாகில் அநர்த்த₂ப்பட்டோமித்தனையிறே" என்று விண்ணப்பஞ்செய்ய;

### நூற்றுத்தொண்ணூற்றேழாம் வார்த்தை

a கீழையூர்-ஸ்ரீரங்க₃த்துக்குக் கிழக்கேயுள்ள திருவானைக்கா. b இங்குத்தைக்கு - ஸ்ரீரங்கம் கோவிலுக்கும், அதிலுள்ளார்க்கும். c சில கொண்டுபோந்து - சில த்₃ரவ்யங்களைப் பெற்றுவந்து. d அவர்களுடைய த்₃ரவ்யம் ப₄ாக₃வதர்களுக்கு உபயோக₃ப்பட்டதாகையாலே அவர்களுக்கு ஸத்வகுணம் மிகுதியாகி எம்பெருமானிடம் ஈடுபாடுண்டாகும் என்று கருத்து. e அப்படியானாலும் ஶைவர்கள் த்₃ரவ்யத்தை வைஷ்ணவர்கள் உபயோகப்படுத்தலாமா? என்பது கேள்வியின் கருத்து. f எல்லாம் எம்பெருமான் உடைமையாகையாலே அது அவர்கள் பொருளன்று; எம்பெருமானுடையதே என்பது பதிலின் கருத்து.

### நூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

a ஆளிப்பிள்ளான் - எம்பெருமானார், பிள்ளான், எங்களாழ்வான் போன்ற ஸதா₃சார்யர்களுடைய அபி₄மானத்துக்குப் பாத்திரராய் அறிவிலிகள் தாழநினைக்கும் குலமொன்றில் பிறந்த ஸ்ரீவைஷ்ணவோத்தமராய் இருக்கக்கூடும். b அருளிச்செய்த வார்த்தை—"வர்ணாஶ்ரமத₄ர்ம வரம்புகளை மீறலாகாது" என்று பொதுவான ஶாஸ்த்ரங்

அம்மாளும் c "ஸதா₃சார்ய ப்ரஸாத₃ம் உத்₃தே₃ஶ்யமென்ற போதே எல்லாம் இதிலே கிடந்ததன்றோ" என்றருளினார்.

## நூற்றுத்தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

திருக்கோட்டியூர்நம்பியை, தம்முடைய தமையனார் "அந்திமத₃ஶையிலே எனக்குத்தஞ்சமேது?" என்று கேட்க; a விரஜைக்கு இக்கரையில் 'உம்மை எங்குநின்றும் வந்தீர்?' என்று கேட்டாருண்டாகில் 'திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாத₃த்தில் நின்றும் வந்தோம்' என்றும், b அக்கரையில் உம்மைக்கேட்டாருண்டாகில், 'திருக்கோட்டியூர்நம்பி தமையனார்' என்றும் சொல்லுமென்று அருளிச்செய்தார்.

## இருநூறும் வார்த்தை

அபா₄க₃வதத்யாக₃ம், பா₄க₃வதபரிக்₃ரஹம், ப₄க₃வத்ஸ்வீகாரம், ஸ்வாசார்யாங்கீ₃காரம், ஸ்வப்ரஜ்ஞை இவையித்தனையுமுண்டானபோதாய்த்து ஈடேறலாவது.

---

கொண்டு அருளிச்செய்த வார்த்தை. c "ஸதா₃சார்யர்களுடைய அபி₄மானத்துக்குப் பாத்திரமாயிருக்கும் எவரும் எப்பொருளும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மிகவும் கைக்கொள்ளத் தக்கவை" என்று நான் சொன்ன வார்த்தைக்கும் இந்த என்னுடைய அநுஷ்டா₂னம் மிகப்பொருந்தும் என்று கருத்து.

### நூற்றுத்தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

a இந்த ஸம்ஸார மண்ட₃லத்தில் "திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்தை அடைந்தவன்" என்று சொன்னால் யமன் முதலானோர்கள் நலியமாட்டார்கள் என்று கருத்து. b நித்யவிபூ₄தியில் "நம்பிக்குத் தமையனார்" என்று சொன்னால் "லோகோத்தாரகரான எம்பெருமானாருடைய ஆசார்யருக்கும் தமையனாரா?" என்று அங்குள்ளார் கொண்டாடுவர் என்று கருத்து.

### இருநூறும் வார்த்தை

வைஷ்ணவரல்லாதாரை இவன் கைவிடுவது மாத்திரமன்றிக்கே அவர்கள் இவனைக் கைவிடுவதும், வைஷ்ணவர்களை இவன் கைக்கொள்வது மாத்திரமன்றிக்கே அவர்கள் இவனைக் கைக்கொள்வதும், எம்பெருமானை இவன் பற்றுவது மாத்திரமன்றிக்கே அவன் இவனை ஏற்றுக்கொள்வதும், இவை இத்தனைக்கும் அடியாக இவனுடைய

## இருநூற்றோராம் வார்த்தை

திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே உடையவர் a பதி னெட்டு ப்ரகாரம் எழுந்தருள, 'இன்னமும் கேட்கவந்திரோ?' என்ன; உடையவர், 'ஒருரு இரண்டுருவாந்தனையும் வருவன்' என்றருளிச்செய்தார்.

## இருநூற்றிரண்டாம் வார்த்தை

a "பெரியமுதலியாருக்கும், நம்மாழ்வாருக்கும் நடுவுள்ள ஆசார்யர்களெல்லாரையும் அறியவேண்டாவோ ?" என்று நம்பிள்ளை ஜீயரைக்கேட்க; b "அவர்களுடைய ப்ராஹ்மண்யத் தாலே அறியப்போகாது; இத்தால் இவனுடைய ஜ்ஞாநத்துக் காதல் பேற்றுக்காதல் குறை வாராது; அதெங்ஙனேயென்னில்;- ஸந்தாநத்தில் பித்ருபிதாமஹப்ரபிதாமஹப்ரப்ருதிகளுக்கு

---

ஆசார்யன் இவனைக் கைக்கொள்வதும், அந்த ஆசார்யனால் இவ னுக்கு ஏற்பட்ட தன் ஸ்வரூபத்தைப் பற்றிய அறிவும் ஆகிய இவையெல்லாம் ஒரு சேதனனுக்கு ஏற்பட்டால்தான் எம்பெருமா னுடைய நிர்ஹேதுக க்ருபைக்கு விஷயமாகி அவன் கடைத்தேற லாம் என்று கருத்து.

### இருநூற்றோராம் வார்த்தை

a திருமந்த்ர சரமஶ்லோகார்த்தங்களைக் கேட்பதற்காக என்று கூட்டிக்கொள்வது. b ரஹஸ்யார்த்தங்களைக் கேட்டபின்பும் மறுபடி யும சில உருக்கள் அவற்றைக் கேட்டு உறுதிப்படுத்திக்கொள்வதற் காக இன்னமும் பலமுறை வருவேன் என்று கருத்து.

### இருநூற்றிரண்டாம் வார்த்தை

a "நாதமுனிகளுக்கும் நம்மாழ்வாருக்கும் நடுவில் நம்மாழ்வா ருடைய ஶிஷ்யரான மதுரகவிகளையும், அவருடைய வம்ஶத்தில் பிறந் தவராய் நாதமுனிகளுக்குக் கண்ணிநுண்சிறுத்தாம்பை உபதேஶித்தவ ரான பராங்குஶ நம்பியையும் தவிர இடையிலுள்ள மதுரகவி வம்ஶஸ்த் தர்கள் அனைவரையும் திருநாமத்தையிட்டு அறிந்து அநுஸந்திக்க வேண்டாவோ?" என்று கேள்வியின் கருத்து. b "அவர்கள் பலராகையா லும், நெடுங்காலத்துக்கு முற்பட்டவர்களாகையாலும் அவர்களுடைய திருநாமங்கள் அறியமுடியாமலிருக்கிறது. நம்முடைய தந்தை முதலா னார் விஷயத்திலும் ஒரு சில தலைமுறைகள் தவிர மற்றவர்களை அறியாத தனால் ப்ராஹ்மண்யத்துக்குக் குறையில்லாமலிருப்பதுபோலே இவ்வா

அவ்வருகே நாமறிகிலோமிறே; இதுக்காக ப்₃ராஹ்மண்யத்துக்கு ஏதேனும் தட்டாகிறதோ?" என்றருளினார்.

## இருநூற்றுமூன்றும் வார்த்தை

நஞ்ஜீயரைப் பெரியகோயில்வள்ளலார் திருவாய்மொழியிலே ஓரர்த்த₂ப்ரஸ்தாபத்திலே ஜீயரருளிச்செய்தபடியொழிய இங்ஙனேயாறேலோவென்ன; 'நான் சொன்னபடி அழகிதென்று திருக்கலிகன்றி தாஸர் சொல்லுவர்' என்று ஜீயர் அருளிச்செய்ய; 'உம்முடைய ஶிஷ்யர் அழகியதென்பரென்றது ப்ரமாணமாகச் சொல்லுவானென்?' என்ன; 'அதிலொரு நிப₃ந்த₄நமில்லைகாணும், ஸதா₃சார்ய ஸந்நிதி₄யோடு ஸச்சி₂ஷ்யஸந்நிதி₄யோடு வாசியில்லைகாணும் ஒருவனுக்குத் திருத்தம் பிறக்க' என்றருளினார்.

## இருநூற்றுநாலாம் வார்த்தை

'ப₄ட்டர் திருவணையாட எழுந்தருளுகிறபோது பகலில் வழிநடந்த ஆயாஸத்தாலே a விட்டதொரு தூற்றடியிலே நஞ்ஜீயர் மடியிலே திருமுடியைவைத்துக் கண்வளர்ந்தருள,

---

சார்யர்களையும் பெயரையிட்டு அறியாததினால் இவனுடைய அறிவுக்கோ பேறு கிடைப்பதற்கோ தட்டில்லை" என்று பதிலின் கருத்து.

### இருநூற்றுமூன்றும் வார்த்தை

'நல்ல ஆசார்யன் மூலமாக நம்முடைய ஜ்ஞானத்தைச் சீர்திருத்திக்கொள்வதுபோலே, நல்ல ஶிஷ்யன் மூலமாகவும் நாம் அறியாத ஓர் அர்த்த₂ம் கிடைத்தால் அதைக்கொண்டு நம்முடைய ஜ்ஞானத்தைத் திருத்திக்கொள்ளலாம்' என்ற பரந்த மனப்பான்மையை உடையவர் நஞ்ஜீயர் என்பது இவ்வார்த்தையிலிருந்து விளங்குகிறது. அருளிச்செயல் வ்யாக்₂யானங்களிலும் சில இடங்களில் நம்பிள்ளையாகிற திருக்கலிகன்றிதாஸர் தம் ஶிஷ்யரென்றும் பாராமல் சில அபூர்வார்த்த₂ங்களை அவர் சொல்லும்போது அவற்றை ஏற்று நஞ்சீயர் அவரைக் கொண்டாடினார் என்று காணப்படுகிறது.

### இருநூற்றுநாலாம் வார்த்தை

a வழிநடப்பார் இளைப்பாறுவதற்காக ஏற்பட்ட நிழல் உள்ளதோர் இடம். b பிள்ளை - நம்பிள்ளை.

அவ்விராமுடியத் துடைமாறுதல், சலிப்புதல் செய்யாதே எழுந்தருளியிருந்தார்' என்று b பிள்ளை அருளிச்செய்வர்.

## இருநூற்றஞ்சாம் வார்த்தை

எம்பெருமானார், திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாத₃த்திலே நின்று நெடுநாளோடேகூட ஸ்தோத்ரங்கேட்டருளிச் சாத்தின வாறே, 'இனி ஜ்ஞாநகார்யத்தில் உமக்குக் கர்த்தவ்யம் ஒன்று மில்லை, பெரியநம்பிக்கு ப்ரியமாகக் கோயில் திருவாராத₄நம் நடத்தலாகாதோ?' என்று சரமஶ்லோகார்த்த₂த்தையும் அவ் வளவிலே அருளிச்செய்து விடைகொடுத்தருள, இவரும் விடைகொண்டு a திருக்குளக்கரையிலே எழுந்தருள, முதலி யாண்டான் எம்பெருமானார் தாழ்த்தருளினவாறே ஸ்ரீபாத₃த் திலே கண்டு வரவேணுமென்று வர, 'ஓரடி முற்பட்டீ ரில்லையே; எனக்குச் சரமஶ்லோகமருளிச்செய்த உருகுபத₃த் தோடே எழுந்தருளியிருக்கிறார்; புக்கு தண்டனிட்டு வா' என்று அருளிச்செய்ய, ஆண்டானும் நம்பி ஸ்ரீபாத₃த்திலே சென்று தண்டனிட்டு நிற்க, 'ராமாநுஜ பரிக்₃ருஹீதனைப் போலேயிருந்தாய்' என்று விஷயீகரித்து b சரமஶ்லோகார்த் த₂த்தை அருளிச்செய்து, 'உனக்குப் பரிஹரிக்கவேண்டுவது மூன்று படுகுழியுண்டு; அத்தைக்கேள்' என்ன, 'அருளிச் செய்யலாகாதோ?' என்ன; "வித்₃வான், c அபி₄ஜாதன், எம் பெருமானார் மருமகன் என்கிறவற்றையெல்லாம் உத்₃தே₃ஶ்ய

---

இருநூற்றஞ்சாம் வார்த்தை

a திருக்குளக்கரையிலே - திருப்பாற்கடல் என்னும் புஷ்கரிணிக் கரையருகிலே எம்பெருமானார் திரும்பிவரும்போது இவரைக்காண வேண்டும் என்று ஸ்ரீரங்க₃த்திலிருந்து எழுந்தருளின முதலியாண் டான் அங்கு எம்பெருமானாரைச் சந்தித்தார் என்று கருத்து. b கு₃ருபரம்பராப்ரப₄ாவம் முதலானவற்றில் முதலியாண்டானுக்கு எம்பெருமானாரே சரமஶ்லோகார்த்த₂ம் அருளிச்செய்தார் என்றிருக் கையாலே இங்கு திருக்கோட்டியூர் நம்பி அருளியதாக உள்ளதை 'நம்பி சுருக்கமாகச் சரமஶ்லோகார்த்த₂ம் அருளிச்செய்து, விரிவை எம்பெருமானாரிடம் கேட்கும்படி நியமித்தார்' என்று கொள்ளவேண் டும். c அபி₄ஜாதன்-நற்குடிப் பிறந்தவன். d எம்பெருமானார் ஸம்

மென்றிராதே, எம்பெருமானார் திருவடிகளில் பண்ணின ஸம்ப₃ந்த₄மே உனக்கு உத்தாரகஹேது என்றிரு'' என்று அருளிச்செய்ய d''அத்யந்தஹேயனாயிருக்கிற என்னையும் தங்களோடே ஒரு கோவையிலே கோப்பதே!'' என்று கண்ணும் கண்ணீருமாய் விடைகொண்டு எம்பெருமானார் ஸ்ரீபாத₃த்தேறப் போந்தார் என்று பிள்ளையருளிச்செய்வர்.

## இருநூற்றோரும் வார்த்தை

எம்பெருமானார், ''உந்துமதகளிற்றன்'' என்கிற பாட்டை அநுஸந்தி₄த்துக்கொண்டு திருக்கோட்டியூர்நம்பிதிருவாசலிலே (சீரார்வளையொலிப்ப வந்து திறவாய்) என்கிறவிடத்தை அநுஸந்தி₄க்கிறபோது a நம்பிதிருமகளார், திருக்கதவைத் திறந்துகொண்டு புறப்பட, எம்பெருமானார் விழுந்து தண்டனிட்டுக் கிடக்க, நெரித்துக்கொண்டு உள்ளேயோடிப் புக, நம்பி 'இதுவென் பெண்ணே?' என்ன, 'என்னை எம்பெருமானார் தண்டனிட்டார்' என்ன, 'அதுக்கு ப₄யப்படவேணுமோ?' என்றருளிச்செய்து, எம்பெருமானார் உள்ளே புக்கருளினவாறே, 'இளையாழ்வீர்! இப்போது அநுஸந்த₄ாநம் உந்துமதகளிற்றனோ?' என்றருளிச்செய்தாரென்று பிள்ளையருளிச்செய்வர்.

---

ப₃ந்த₄மே உத்தாரகமான மோக்ஷஹேது என்று தாங்கள் நினைத்திருப்பதுபோலே மிகத் தாழ்ந்த அடியேனையும் நினைக்கச் சொல்வதே! என்று கருத்து.

### இருநூற்றோரும் வார்த்தை

a நம்பி திருமகளார் - தேவகிப் பிராட்டியார். திருப்பாவை பதினெட்டாம் பாட்டு 'உந்துமதகளிற்றன்' வ்யாக்₂யானத்தின் இறுதியிலுள்ள ஐதிஹ்யத்தின் விவரணம் இந்த வார்த்தை. இந்த வார்த்தையிலும் வடிவழகிய நம்பிதாஸரின் கு₃ருபரம்பராப்ரப₄ாவம் முதலான மற்ற க்₃ரந்த₂ங்களிலும் திருக்கோட்டியூர் நம்பி திருமாளிகையில் நடந்ததாகச் சொல்லியிருக்கும் இவ்வைதிஹ்யத்தைப் பெரிய நம்பி திருமாளிகையில் அத்துழாய் விஷயமாக நடந்ததாக திருப்பாவை மூவாயிரப்படி அரும்பத உரைகாரர் எழுதியிருப்பது ப்ராமாணிகர்களால் ஆதரிக்கத்தக்கதன்று.

## இருநூற்றேழாம் வார்த்தை

நம்பி திருவழுதிவளநாடுதாஸர், ஒருரு கண்ணிநுண் சிறுத்தாம்பை அருளிச்செய்து, "மதுரகவி சொன்ன சொல் நம்புவார் பதி வைகுந்தங்காண்மினே" என்று தலைக்கட்டின வாறே ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருந்த ஸ்ரீ வைஷ்ணவர், 'லீலாவிபூதியிலே ஒருவன் இத்தை ஶ்ரத்தை பண்ணி அநு ஸந்திக்க, அவ்விடம் நித்யவிபூதியாம்படி எங்ஙனே?' என்று கேட்க, 'அது இருந்தபடி கேளீர்;- கூரத்தாழ்வான் திருமகனார் திருவவதரித்த பின்பு இடைச்சுவர் தள்ளி இரண்டு விபூதி யும் ஒன்றாய்த்துக் காண்' என்று அருளிச்செய்தாரென்று பிள்ளை அருளிச்செய்வர்.

## இருநூற்றெட்டாம் வார்த்தை

ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் விஶ்லேஷபீருக்களாய் வர்த்திக்கிறவர்கள்,ஒருநாள் இருவரும் ஆற்றுக்கு எழுந்தருளி ஒருவர் புறப்பட்டுவர, ஆளவந்தார் அருளிச்செய்த வார்த்தை;- 'அன்றிலினுடைய அவஸ்தை பிறந்தபோது காண் ஆத்ம ஜ்ஞாநம் பிறந்ததாவது' என்று அருளிச்செய்தார்.

---

### இருநூற்றேழாம் வார்த்தை

"மதுரகவிகளின் வாக்கான கண்ணிநுண்சிறுத்தாம்பை நம்பு கின்றவர்கள் இருந்த இடம் வைகுந்தமாகவேயாகிவிடும்; இதை வருங்காலத்தில் கண்டுகொள்ளலாம்" என்று கண்ணிநுண்சிறுத் தாம்பில் அருளிய பலஶ்ருதி பட்டர் காலத்திலே பரிபூர்ணமாகப் பலித்தது என்பது இவ்வார்த்தையின் தாத்பர்யம்.

### இருநூற்றெட்டாம் வார்த்தை

ஒருவரையொருவர் பிரியாமலிருக்கும் தம் இரு ஶிஷ்யர்களும் ஆண்பெண் அன்றில்கள்போலே பிரிந்தால் தரியாதவர்களாயிருக் கும் நிலையை உடையவர்களானால்தான் பாகவதநிஷ்டையாகிற ஆத்மயாதாத்ம்யஜ்ஞானம் பரிபூர்ணமாகப் பிறந்ததாகக் கொள்ள லாம் என்பது ஆளவந்தார் திருவுள்ளம்.

## இருநூற்றைம்பதாம் வார்த்தை

ஆளவந்தார் திருவநந்தபுரத்துக்கு எழுந்தருளுகிற போது, தெய்வவாரியாண்டானை மடத்துக்கு வைத்து திருவநந்தபுரத்துக்கு எழுந்தருளுகிற அளவிலே, ஸந்நிதியில் முதலிகளைப்பார்த்து, 'குருகைக்காவலப்பன் நமக்கு இட்டுத் தந்த திருமுகத்தை எடுத்துக்கொண்டு வாருங்கோள்' என்று அருளிச்செய்தருளித் திருமுகத்தைப் பார்த்தருள, மாஸமும் திவஸமும் அன்றுதானாயிருந்தபடியாலே 'ஒரு புஷ்பக விமாநம் பெற்றிலோமே?' என்று போர ஶோகார்த்தராய் மீண்டெழுந்தருளாநிற்க, தெய்வவாரியாண்டானுக்கு ஆளவந்தாருடைய விஶ்லேஷம் பொறாமல் திருமேனி ஶோஷிக்க, வைத்யர்கள்பலரும் பார்த்தவிடத்தில் 'விஷயஸ்ப்ருஹை யாக்கும் இப்படியாய்த்து' என்று சொல்ல, 'உமக்கு எந்த விஷயத்திலே ஸ்ப்ருஹையாயிருக்கிறது?' என்று கேட்க, 'அடியேனுக்கு ஆளவந்தார் விஷயமொழிய வேறேயும் ஒருவிஷயமுண்டோ?' என்று அருளிச்செய்ய, 'ஆகில் இவரை அங்கே கொண்டுபோங்கோள்' என்று வைத்யர்கள் சொல்ல, இவரைக் கட்டணத்திலே கொண்டுபோக, ஒருநாளைக்கொருநாள் திருமேனி பெருத்து நடக்கவல்லராய் வருகிறவளவிலே, ஆளவந்தாரும் திருவநந்தபுரம் ஸேவித்து மீண்டெழுந்தருளாநிற்க, தெய்வவாரியாண்டானும் தண்டன் ஸமர்ப்பித்து எழுந்திருக்கமாட்டாமலிருந்தபடியைக் கண்டு, 'பெருமாள் ஸ்வதந்த்ரருமாய் ஶூரருமாயிருக்கையாலே ஸ்ரீபரதாழ்வான் வைத்தவிடத்திலே இருந்தார்; நான் ஸ்வதந்த்ரனுமன்றிக்கே ஶூரனுமன்றிக்கேயிருக்கையாலேயிறே நாம் வைத்தவிடத்திலிராமல் நீர் வந்தது' என்று ஆளவந்தார் அருளிச்செய்ய, இத்தைக்கேட்டுத் தெய்வவாரியாண்டான் 'நாம் வந்து ஸ்வரூபஹாநிபட்டோம்' என்று ஸத்தை குலைந்து கிடக்க, 'என்னை

### இருநூற்றைம்பதாம் வார்த்தை

இந்த வார்த்தை ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் (137, 138, 139 பக்கங்களில்) விவரிக்கப்பட்டுள்ளது. அங்கே கண்டு கொள்வது.

ஸ்வதந்த்ரனுமாக்கி பரதந்த்ரனுமாக்கி யெழுந்திருக்கிறோம் என்று கிடக்கிறாயோ?' என்று ஆளவந்தார் அருளிச்செய்ய, 'வைத்த விடத்தேயிராதே வந்து ஸ்வரூபஹாநிபட்டாற்போலே, இதுவு மொரு ஸ்வரூபஹாநியாய்த்ததோ' என்று பரபரென எழுந் திருந்துநிற்க, ஆளவந்தாரும் 'இதொரு அதி₄காரவிஶேஷ மிருந்தபடியென்?' என்று உகந்து, 'போரஇளைத்தாயே' என்று க்ருபைபண்ணி, 'திருவநந்தபுரத்துத் திருக்கோபுரம் தோன்று கிறது; ஸ்ரீபத்₃மநாப₄ப்பெருமாளை ஸேவித்து வாரும்' என்று அருளிச்செய்ய, 'என்னுடைய திருவநந்தபுரம் எதிரேவந்தது' என்று ஸ்வாசார்யரான ஆளவந்தார் திருவடிகளைக்காட்டி, கூட ஸேவித்துக்கொண்டு மீண்டு கோயிலுக்கு எழுந்தருளினார்.

## இருநூற்றுப்பத்தாம் வார்த்தை

எம்பார் திருமலைநம்பி திருமாளிகைக்கு ஸர்வவித₄ கைங்கர்யங்களும் பண்ணிக்கொண்டு போருகிறபடியைக்கண்டு உடையவர் ப்ரீதராய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிறவளவிலே, ஒருநாள் நம்பிக்குத் திருப்படுக்கைபடுத்து, எம்பார் முதலில் அதிலே படுத்துக்கொண்டுபார்க்க, இத்தை ஒருநாள் உடையவர் கண்டு 'இவருடைய பரிமாற்றமிருந்த பொல்லாங்கென்?' என்று இக்ரமத்தைத் திருமலைநம்பிக்கு அருளிச்செய்ய, திருமலைநம்பி எம்பாரை அழைத்து, 'ஸ்ரீகோவிந்தப்பெருமாளே ! நீர் நமக்குப் படுத்த படுக்கையிலே படுத்துக்கொண்டீரென்று கேட்டோம், இப்படி செய்யலாமோ ? இதுக்கு ப₂லம் ஏது ?' என்ன; 'நரகம்' என்ன; 'இப்படியறிந்திருந்து செய்வா னென்?' என்ன, a 'தேவரீர் திருமேனியிலே ஒன்று உறுத்து தல், ஊன்றுதல், கடித்தல் செய்யாமல் கண்வளரப்பெற்றால்

---

**இருநூற்றுப்பத்தாம் வார்த்தை**

இவ்வார்த்தை ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம் (பக்கம் 214, 215 இல்) உள்ளது. a ஊன்றுதல் என்பதற்குப் பதில் ஊர்தல் என்று உள்ளது. 'கடி₂னப₄ாகமும் திருமேனியில் உறுத்துவது, தைப்பது, எறும்பு முதலானவை கடிப்பது' என்று இங்குள்ள பாட₂த் துக்குப் பொருள். திருமேனியில் கடி₂னப₄ாகமும் உறுத்துவது.

அடியேனுக்கு நரகமேயமையும்' என்று விண்ணப்பஞ்செய்ய, இத்தை உடையவர் கேட்டருளி, 'இதொரு ப்ரதிபத்தி விஶேஷமிருந்தபடியென்!' என்று உகந்தருளினார்.

## இருநூற்றுப்பதினோராம் வார்த்தை

பெரியநம்பிதிருமகளார் அத்துழாய் புக்ககத்திலே இரா நிற்க, ஒருநாள் 'தீர்த்தமாடத் துணைவரவேணும்' என்று மாமியாருக்கு அருளிச்செய்ய, 'உன் சீதநவெள்ளாட்டியைக் கொண்டு போ' என்று தடுத்துச்சொல்ல, நம்பிபக்கல் வந்து, 'நம்பீ! என்னை இப்படி சொன்னார்' என்ன, 'நாமறியோம்; உங்கள் ஜீயருக்குச் சொல்லும்' என்ன; இவளும் அங்கேசென்று விண்ணப்பம்செய்ய, அருகேயிருந்த முதலியாண்டானைப் பார்த்து, 'உமக்கு இந்தாரும் அம்மா ஶ்ரீதநவெள்ளாட்டி' என்று திருவுள்ளமாய் 'இவரைக் கொண்டுபோ' என்ன, ஆண்டானும் கூட எழுந்தருளி நீராடப் பண்ணுவித்து, இவருடைய புக்ககத்திலே நின்று தாஸவ்ருத்திகளைச் செய்யத் தொடங்கினார்; இவருடைய புக்ககத்தார் 'இதுவென் ஆண்டான்?' என்ன, 'என்னை வரவிட்ட உடையவரும் எங்கள் நாய்ச்சியாரும் சொன்னது செய்யவேணுமே' என்ன, அவர்களும் நம்பிஶ்ரீபாதத்தேறப் போய் 'நம்பீ! முதலியாண்டானை வரவிட்டு இப்படி எங்களை நசிப்பிக்கிறதென்?' என்ன, 'நாம் அறிந்தோமோ? எம்பெருமானாருக்குச் சொல்லுங்கோள்' என்ன, அங்கேசென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும், 'ஆண்டானை அத்துழாய்க்குச் சீதநவடிமையாகக் கொடுத்தோம்; அங்கு உங்களுக்கு நிற்க ப்ரியமன்றாகில் இங்கேநின்று அடிமை செய்கிறது' என்றருளிச்செய்து அழைப்பித்துக்கொண்டருளினார்.

---

எறும்பு முதலானவை ஊர்வது, கடிப்பது' என்பது குருபரம்பரைப் பாடத்தின் பொருள்.

### இருநூற்றுப்பதினோராம் வார்த்தை

இவ்வார்த்தை ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் (பக்கம் 237இல்) சில பாடபேதங்களோடு உள்ளது.

## இருநூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை

த்ரைலோக்யாள் என்பாளொரு ஸ்த்ரீ a ஆச்சிஶ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்திருக்கும்; அங்கே அநந்தாழ்வான் எழுந்தருள, அவரை ஆறுமாஸம் ஸேவித்திருந்து b அவரெழுந்தருளினவாறே ஆச்சி ஶ்ரீபாத₃த்தேறச் சென்றாள்; அவர் இத்தனைநாள் வந்திலையீயென்ன. 'அநந்தாழ்வானை ஸேவித்திருந்தேன்' என்ன, அவர் நான் சொன்னத்திலும் ஏற்றமாகச் சொல்லிற்றுண்டோ?' என்ன, 'உண்டு;-உம்மை ஆஶ்ரயித்துப் c பதினாருட்டை நாளுண்டு, எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமென்றிரித்தனை; அவர் ஆறுமாஸத்திலே உம்முடைய திருவடிகளே தஞ்சமென்னும்படி பண்ணினார்' என்றாள்.

## இருநூற்றுப்பதின்மூன்றும் வார்த்தை

அப்பன் ஆழ்வானுடைய அந்திமத₃ஶையிலே 'ஶ்ரீபாத₃த்திலே ஸேவிக்கப்பெற்றிலேன்; எனக்கு ஹிதாம்ஶம் அருளிச்செய்யவேணும்' என்று ப₄ட்டர்க்கு விண்ணப்பஞ்செய்ய; 'ஊரையும் ஸ்வாஸ்த்₂யத்தையும் விட்டு மேற்குநோக்கி ஓரடி

---

**இருநூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை**

a எம்பெருமானார் சிஷ்யர்களில் ஒருவரான வங்கிபுரத்தாச்சி. b அவர் எழுந்தருளினவாறே — எம்பெருமானாரின் மற்றொரு ஶிஷ்யரான திருமலை அனந்தாழ்வான் திருமலைக்குத் திரும்ப எழுந்தருளினவாறே. c பதினாருட்டைநாள்—பதினாறுவருடகாலம்.

**இருநூற்றுப்பதின்மூன்றும் வார்த்தை**

திருவரங்கத்துக்குக் கிழக்கே ஓர் ஊரில் செல்வத்துடன் ஸௌகர்யமாக வாழ்ந்து வந்த அப்பன் என்பவர் ஆழ்வானை ஆஶ்ரயிக்கவேணுமென்று திருவரங்கத்துக்கு வந்தவளவில் ஆழ்வானுக்கு அந்திமத₃ஶையாயிருக்க, பட்டரைப் பார்த்து "ஆழ்வானிடம் ஆஶ்ரயிக்க முடியவில்லை; என்னுடைய ஹிதத்துக்கு உறுப்பான வார்த்தையை தேவரீர் அருளிச்செய்யவேணும்" என்று கேட்டார். அதற்கு பட்டர் "இருந்த ஊரையும் ஸௌகர்யமாயிருந்த இருப்பையும் விட்டு, ஆழ்வானை ஆஶ்ரயிக்கவேணும் என்னும் எண்ணத்துடன் திருவரங்கத்தை நோக்கி மேற்கே ஓரடியிட்டபோதே உம்முடைய

யிட்டபோதே ஹிதாம்ஶமற்றது; சொல்லவேணுமோ?' என்று அருளிச்செய்தார்.

## இருநூற்றுப்பதினைலாம் வார்த்தை

முதலியாண்டான் 'a ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யராலே மோக்ஷம்' என்ன, கூரத்தாழ்வான், 'b க்ருபாமாத்ர ப்ரஸந்நா சார்யராலே மோக்ஷம்' என்ன ; ஆண்டான், c "குற்றமின்றிக் குணம்பெருக்கிக் குருக்களுக்கு அநுகூலராய்" என்று பெரியாழ்வார் அருளிச்செய்கையாலே ஸ்வாநுவ்ருத்தி ப்ரஸந்நா சார்யராலே ஆகவேணும்—என்ன ; ஆழ்வான்,—அங்ஙனன்று, d "பயனன்றாகிலும் பாங்கலராகிலும், செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான், குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி" என்று ஸ்ரீ மது₄ரகவியாழ்வார் அருளிச் செய்கையாலே அவருடைய அடிப்பாட்டிலே நடக்கிற நமக்கு எல்லாருக்கும் ஸ்வாநுவ்ருத்தி கூடாமையாலே, க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யராலே மோக்ஷமாகவேணும்—என்று அருளிச் செய்தார்; ஆண்டானும் 'அப்படியாம்' என்று மிகவும் ப்ரீதரானார்.

ஹிதத்துக்காகச் செய்யவேண்டியதை நீர் செய்துவிட்டீர். இனி நான் ஹிதத்துக்காக எதுவும் சொல்லவேண்டியதில்லை" என்று அருளிச்செய்தார். இதிலிருந்து "ஒரு ஸத₃ாசார்யனை ஆஶ்ரயிக்க வேணும் என்னும் எண்ணம் ஏற்பட்டவுடனே ஹிதத்துக்குச் செய்ய வேண்டியதைச் செய்தாய்விட்டது; மற்ற செயல்களெல்லாம் கால க்ஷேபத்துக்கு (போதுபோக்குக்கு) உறுப்பானதே" என்று தேறுகிறது.

### இருநூற்றுப்பதினைலாம் வார்த்தை

a ஶிஷ்யர்களுடைய ஶுஶ்ரூஷை முதலானவற்றைக்கண்டு அருள் புரியும் திருக்கோட்டியூர்நம்பிபோல்வாரான ஆசார்யர்கள். b "ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறும்" [உபதேச 37] என்கிறபடியே நிர்ஹேதுக க்ருபையாலே, ஆசையுடைய ஶிஷ்யர்களுக்கு அருள்புரியும் எம்பெருமானார்போல்வாரான ஆசார்யர்கள். c [பெரியாழ்திரு 4-4-2] d [கண்ணிநுண்சிறுத்தாம்பு 10].

## இருநூற்றுப்பதினஞ்சாம் வார்த்தை

ஈஶ்வரன் மோக்ஷப்ரத₃ன் என்றிருந்தபோது ஆசார்யனைத் தஞ்சமென்றிருப்பான்; ஆசார்யன் மோக்ஷப்ரத₃ன் என்றிருந்த போது ஆசார்ய வைப₄வம் சொன்னவனைத் தஞ்சமென்று இருப்பான்.

## இருநூற்றுப்பதினாறும் வார்த்தை

பிள்ளை, பின்பழகியபெருமாள்ஜீயர்மட₂த்திலே ஒருநாள் எழுந்தருளியிருக்க, எல்லார்க்கும் a ஆழ்வாருடைய அவஸ்தை₂யுண்டாய்ப் பெறவேண்டியிராநின்றது; b 'ஸ்த்ர்யந்நபாநாதி₃களோடேயிருக்கிற நாங்கள் செய்வதென்?' என்று விண்ணப்பஞ்செய்ய; 'இங்கு அந்த அவஸ்தை₂ பிறந்ததில்லையாகிலும் ஸதா₃சார்யகடாக்ஷவிஶேஷத்தாலே ஸ்தூ₂லஶரீர விமோசநத்துக்கும், கைங்கர்ய ப்ராப்திக்கும் நடுவே அவ்வவஸ்தை₂யைப் பிறப்பித்து எம்பெருமான் கார்யஞ்செய்யும்'

---

### இருநூற்றுப்பதினஞ்சாம் வார்த்தை

எம்பெருமான் மோக்ஷமளிப்பவன் என்று ஒருவன் அறியும்போது, ஸ்வாதந்த்ர்யத்தாலே அவன் தன்னை உதறிவிடக் கூடியவனாகையாலே அவனைத் தஞ்சமாக (உய்வுபாயமாக) நினையாமல் அந்த ஈஶ்வரனைத் தன்னை அங்கீ₃கரிப்பித்த ஆசார்யனையே தஞ்சமென்று இருக்கவேணும். ''பொன்னுலகாளீரோ'' [திருவாய் 6-8-1] என்னும் திருவாய்மொழியில் சொன்ன ரீதியில் உப₄யவிபூ₄தியும் தானிட்ட வழக்காயிருக்கும் ஓர் ஆசார்யனை மோக்ஷமளிப்பவனாக நினைக்கும் போது அவனைக்காட்டிலும் அவனுடைய வைப₄வத்தைச் சொல்லி அவனைக் காட்டிக் கொடுத்தவன் மிகுந்த உபகாரகனாகையாலே அப்படிக் காட்டிக்கொடுத்த ஸ்ரீவைஷ்ணவோத்தமனையே தஞ்சமென்று இருக்கவேணும்.

### இருநூற்றுப்பதினாறும் வார்த்தை

a ஆழ்வாருடைய அவஸ்தை₂ — பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளை உடையராய் எம்பெருமானையே தா₄ரகபோஷகபோ₄க்₃யங்களாகக்கொண்டிருக்கும் நிலை. b ஸ்த்ரீ, அன்னம், பானம் முதலானவற்றை தா₄ரகபோஷகபோ₄க்₃யங்களாகக் கொண்டிருக்கும் நாங்கள். ப்ரபந்நனுக்கு இந்த ஜன்மத்தின் முடிவிற்கும், அர்ச்சிராதி₃க₃தியாலே

என்று நம்பிள்ளை அருளிச்செய்தாரென்று நடுவில் திருவீதிப் பிள்ளை ப₄ட்டர் அருளிச்செய்வர்.

## இருநூற்றுப்பதினேழாம் வார்த்தை

'ஶிஷ்யன் ஆசார்யவிஷயத்தில் அர்த்த₂முக₂த்தாலே ப்ரதிபத்தி பண்ணுமிடத்து, அப்போது அங்குத்தைக்கும் அடி யுண்டு இல்லை என்று நிரூபிக்கக்கடவனல்லன்; தன் ஶரீர தா₄ரணத்தோபாதியாகிலும் அங்குத்தைக்கு அம்முக₂ங்களாலே ப்ரீதி பண்ணுகை ஸ்வரூபம்'என்று நம்பிள்ளை அருளிச்செய்வர்.

## இருநூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

நஞ்ஜீயர், ப₄ட்டரை ஸ்ரீபாத₃ந்தாங்குவதாகத் தோளிலே a தண்டை வைக்கப்புக, 'உம்முடைய b வேஷத்துக்கு விருத்₃த₄ மாகச் செய்யலாகாது காணும்' என்று ப₄ட்டரருளிச்செய்ய, 'இங்குத்தை கைங்கர்யத்துக்கு ஏகாந்தமென்று வேஷபரி க்₃ரஹம் பண்ணினேன்; இதுதானே இதுக்கு விரோதி₄யா மாகில் c பழைய வெள்ளையை உடுக்கிறேன்' என்றார்.

சென்று எம்பெருமானை அடைவதற்கும் இடையிலுள்ள காலத்திலே ஆழ்வாருடைய முற்கூறிய நிலைகள் பிறக்கும் என்று கருத்து.

### இருநூற்றுப்பதினேழாம் வார்த்தை

ஒரு ஶிஷ்யன் ஓர் ஆசார்யனை ஆஶ்ரயிக்கும்போது தன்னுயி யன்ற த₄னத்தை ஸமர்ப்பிக்கவேணும் என்பது ஶாஸ்த்ரவிதி₄. அப்படி ஸமர்ப்பிக்கும்போது ஆசார்யனிடம் செல்வம் உண்டா இல்லையா என்னும் ஆராய்ச்சியைச் செய்யக்கூடாது. தான் உயிர் வாழ்வதற்கு எவ்வளவு த₄னம் தேவைப்படுகிறதோ அவ்வளவு த₄னமாவது ஆசார்யனுக்கு ஸமர்ப்பித்து ஆசார்யனை உகப்பிக்க வேணும் என்று நம்பிள்ளையின் திருவுள்ளம்.

### இருநூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

a தண்டு—பல்லக்கின் தண்டு (வாரை). b வேஷம் — ஸந்யாஸி வேஷம். c பழையவெள்ளை-க்₃ருஹஸ்த்த₂னுக்குரிய வெள்ளை வஸ்த்ரம். இவ்வார்த்தை ஆருயிரப்படி கு₃ருபரம்பரை பக்கம் 347ல் வந்துள்ளது.

## இருநூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

வைஷ்ணவனுக்குக் a கரணத்ரயத்தாலும் காலக்ஷேபம் ஏதென்னில் ; ஆசார்யகைங்கர்யம், ப₄க₃வத்கைங்கர்யம், பா₄க₃வதகைங்கர்யம். இவை மூன்றும் b தன்னிலொக்குமோ? என்னில்; ஸ்வரூபத்தை உணர்ந்தவன், ஆசார்யகைங்கர்யமே ப₄க₃வத்கைங்கர்யமும் பா₄க₃வதகைங்கர்யமும் என்றிருக்கும்; c ப்ரபா₄வஜ்ஞனவன், ப₄க₃வத்கைங்கர்யமே ப்ரதா₄நமென்றிருக்கும்; d உப₄யத்திலும் உணர்வில்லாதான் மூன்றையும் தத்ஸமமென்றிருப்பான்.

## இருநூற்றிருபதாம் வார்த்தை

"எல்லா ஆசார்யர்களுடைய அபி₄ப்ராயமும், எல்லா ஆழ்வார்கள் திருவுள்ளக்கருத்தும், எல்லா வேத₃ங்களுடைய க₃தியும், எல்லா ஶாஸ்த்ரங்களுடைய நினைவும் நிருபித்தவளவில் ஆசார்யகைங்கர்யமே பரமப்ரயோஜநம்" என்று நஞ்ஜீயர் a பிள்ளைக்கு அருளிச்செய்தாரென்று வடக்குத்திருவீதிப் பிள்ளை அருளிச்செய்வர்.

---

### இருநூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

a கரணத்ரயம் - மனோவாக்காயம் (மனம் மொழி மெய்) என்னும் முக்கரணங்கள். b ஒன்றோடொன்று ஸமமாகுமோ? என்னில். c ப்ரபா₄வஜ்ஞனவன்-ஸர்வேஶ்வரனுடைய பெருமையை மாத்திரம் உணர்ந்தவன். d ப்ராப்யப்ராபகங்களைப்பற்றி யாதா₂த்ம்யஜ்ஞானம் (உண்மையறிவு) இல்லாதவன்—ப₄க₃வத் கைங்கர்யத்தைக் காட்டிலும் ஆசார்ய கைங்கர்யம் சிறந்தது என்றும், அவ்வாசார்ய கைங்கர்யத்தைக் காட்டிலும் அவ்வாசார்யனுகந்த பா₄க₃வத கைங்கர்யம் சிறந்தது என்றும் அறியாமல் மூன்றையும் ஒன்றோடொன்று ஸமமானது என்று நினைத்திருப்பான்.

### இருநூற்றிருபதாம் வார்த்தை

இவ்வார்த்தையின் பொருள் மிகத் தெளிவாயுள்ளது. a பிள்ளை - நம்பிள்ளை.

## இருநூற்றிருபத்தோராம் வார்த்தை

"ஆசார்யகைங்கர்யம் a தனக்குப் பசிவிளைந்துண்கை; பாகவதகைங்கர்யம் b தாய்க்குச்சோறிடுகை; பகவத்கைங்கர்யம் c ஒப்பூணுண்கையும் d மூப்புக்குச் சோறிடுகையும்" என்று வடுகநம்பி அருளிச்செய்வர்.

## இருநூற்றிருபத்திரண்டாம் வார்த்தை

ஆச்சான் பிள்ளை தேவியார், a மடத்தில்பிள்ளையோடே பிணங்கி "b வாருகோலே! போய்க்கிட" என்ன, மடத்தில் பிள்ளையும் "வாழும் மடத்துக்கு ஒரு வார்கோலும் வேணுங்காணும்; இவ்வார்கோல் c தலைக்கடையை விளக்கித் திண்ணையிலே கிடக்கவோ, d திருப்பள்ளியறையை விளக்கி உள்ளே கிடக்கவோ?" என்று விண்ணப்பஞ்செய்தார்.

## இருநூற்றிருபத்துமூன்றும் வார்த்தை

பகவத் ப்ரஸாதம் பகவத்ருசியைப் பிறப்பிக்கும்; பகவத்ருசி ஆசார்யாங்கீகாரத்தைப் பிறப்பிக்கும்; ஆசார்யாங்கீகாரம் a ஸ்வீகாரஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கும்; ஸ்வீகார

---

### இருநூற்றிருபத்தோராம் வார்த்தை

a தனக்குப் பரமபோக்யமாயிருப்பது என்று கருத்து. b விலக்கவொண்ணாத கடமை என்று கருத்து. c ஒப்பூணுண்கை - இருக்கும் சோற்றைப் பலரில் ஒருவனாக இருந்து உண்கை d வயதான ஏழை எளியவர்களுக்குச் சோறிட்டுக் காப்பாற்றுவதுபோன்றது எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்து அவனுக்கு த்ருப்திசெய்விக்கை என்று கருத்து.

### இருநூற்றிருப்பத்திரண்டாம் வார்த்தை

a மடத்தில்பிள்ளை - பெரியவாச்சான்பிள்ளையின் மடத்தை நிர்வஹித்துவரும் ஶிஷ்யர். b வாருகோல்-விளக்குமாறு. c தலைக்கடையை விளக்கித் திண்ணையில் கிடக்கவோ-பாஹ்ரங்க கைங்கர்யம் செய்து வெளியில் திண்ணையிலே கிடக்கவோ? d அந்தரங்க கைங்கர்யம் செய்து மடத்தின் உள்ளே கிடக்கவோ?

### இருநூற்றிருபத்துமூன்றும் வார்த்தை

a ஸ்வீகாரஜ்ஞானம் - எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவதாகிற அறிவு.

ஜ்ஞாநம் ப₄க₃வத் ப்ராப்தியைப் பிறப்பிக்கும்; ப₄க₃வத்ப்ராப்தி தத்கைங்கர்யத்தைப் பிறப்பிக்கும்; தத்கைங்கர்யம் ததீ₃ய கைங்கர்யத்தைப் பிறப்பிக்கும்.

## இருநூற்றிருபத்துநாலாம் வார்த்தை

உடையவர் அந்திமத₃ஶையிலே அருளிச்செய்த வார்த்தை; ஒருவன் ப்ரபந்நனானால் அவனுடைய தே₃ஹயாத்ரை கர்மாதீ₄நமாகையாலே கரையவேண்டா; கரைந்தானாகில் நாஸ்திகனாமித்தனை; ஆத்மயாத்ரை ப₄க₃வத₃தீ₄நமாகையாலே அதில் தனக்கு அந்வயமில்லை ; உண்டென்றிருந்தானாகில் ஆத்ம ஸமர்ப்பணம் பொய்யாமித்தனை ; ஆகையாலே உப₄யயாத்ரையுங்கொண்டு அந்வயமில்லை; ஆகையால் கரணத்ரயங்களையுங்கொண்டு வேண்டிற்றுச் செய்து திரியவோ ? என்னில்; அது ஸ்வரூபமன்று; இனி உபாயாந்தரத்தில் அந்வயமில்லாவிட்டால் ப்ராப்யமான கைங்கர்யத்தில் அந்வயிக்குமித்தனை; இங்கேயிருக்கும் நாள் செய்யும் கைங்கர்யம் ஆறு; அவை யாவன:—ஸ்ரீபா₄ஷ்யத்தை வாசித்து வாசிப்பிக்கவும், அதுவும் மாட்டானாகில் அருளிச்செயலை ஓதி ஓதுவிக்கவும், அதுவும் மாட்டானாகில் உகந்தருளின தி₃வ்யதே₃ஶங்களிலே அமுதுபடி சாத்துப்படி ஆராய்ந்துபோரவும், அதுவும் மாட்டானாகில் திருநாராயணபுரத்திலே ஒரு குடில்கட்டியிருக்கவும், அதுவும் மாட்டானாகில், த்₃வயத்தின் அர்த்த₂ாநுஸந்தா₄நம்பண்ணவும், அதுவும் மாட்டானாகில், என்னுடையவனென்று அபி₄மாநிப்பான் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் அபி₄மாநத்திலே ஒதுங்கியிருக்கவும். இப்படி வர்த்திக்கும் அதி₄காரிக்கு முன்னடி பார்த்து வர்த்திக்கவேண்டுவது மூன்று விஷயங்களுண்டு ; அவர்களாரென்னில்;-அநுகூலரும், ப்ரதிகூலரும், அநுப₄யரும். இதில் அநுகூலராவார் – ஸ்ரீ வைஷ்ணவர்கள் ; ப்ரதிகூலராவார் – உ ப₄க₃வத்₃த்₃விட்டுக்கள்; அநுப₄யராவார்-ஸம்ஸாரிகள். இதில் அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டால், சந்த₃ந

இருநூற்றிருபத்துநாலாம் வார்த்தை

உ ப₄க₃வத்₃த்₃விட்டுக்கள் - எம்பெருமானை த்₃வேஷிப்பவர்கள்.

குஸுமதாம்பூ₃லாதி₃களைப்போலேயும், நிலாத்தென்றல் சந்த₃னம்போலேயும், அபி₄மதவிஷயம்போலேயும் உகந்து வர்த்திப்பான்; ப₄க₃வத்₃த்₃விட்டுக்களைக் கண்டால் ஸர்ப்பாக்₃நிகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்திப்பான்; அநுப₄யரைக் கண்டால் காஷ்ட₂லோஷ்டாதி₃களைக் கண்டாற்போலே உபேக்ஷித்து வர்த்திப்பான். இப்படி வர்த்திக்கவொட்டாதொழிகிறது b அர்த்த₂காமப்ராவண்யம். அர்த்த₂காமமடியாக அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களை அவமாநம்பண்ணினானாகில் ராஜபுத்ரனை அவமாநம்பண்ணினால் ராஜஹ்ருத₃யம் புண்படுமாபோலே தத்₃த்₃வாரா எம்பெருமான் திருவுள்ளம் புண்படும்; ப்ரதிகூலரான ப₄க₃வத்₃த்₃விட்டுக்களை அர்த்த₂காமமடியாக ஆத₃ரித்தானாகில், ராஜா ஸார்வபௌ₄மனாயிருக்க, ராஜமஹிஷி க்ஷுத்₃ரஜந்துக்கள்பக்கலிலே மடிபி₄க்ஷை புக்கால் ராஜாவுக்கு அவத்₃யமாப்போலே எம்பெருமானுக்கு அவத்₃யமாய், தத்₃த்₃வாரா எம்பெருமான் திருவுள்ளம் புண்படும்; அநுப₄யரான ஸம்ஸாரிகளை அர்த்த₂காமமடியாக ஆத₃ரித்தானாகில், ரத்நத்துக்கும் பாஷாணத்துக்கும் வாசி அறியாதாரைப்போலே நமக்கும் பிறர்க்கும் வாசியறிந்திலன், இவனுக்குப் பிறந்த ஜ்ஞாநம் கார்யகரமாகப்பெற்றிலோமேயென்று இவனளவில் ஈஶ்வரன் உதா₃ஸீநனாய்ப்போரும்.

## இருநூற்றிருபத்தஞ்சாம் வார்த்தை

முதலியாண்டான் அருளிச்செய்த வார்த்தை; ப்ரபந்நன் யாவச்ச₂ரீரம் காலயாபநம் பண்ணும்படி எங்ஙனேயென்னில்;- தே₃ஹத்தில் ஆத்மபு₃த்₃தி₄தவிர்கையும், a தே₃ஹாநுப₃ந்தி₄க

---

b பொருள், இன்பம் என்னும் இரு புருஷார்த்த₂ங்களில் ஈடுபாடு. இவ்வார்த்தை ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம் 314, 315ம் பக்கங்களிலும் 317ம் பக்கத்திலும் வந்துள்ளது.

### இருநூற்றிருபத்தஞ்சாம் வார்த்தை

a தே₂ஹத்தோடு தொடர்பு கொண்ட பெண்டிர், பிள்ளைகள், வீடு, வயல், பணம் முதலியவற்றில் என்னுடையவை என்ற எண்ணம்

ளான பதா₃ர்த்த₂ங்களிலே மமதாபு₃த்₃தி₄ தவிர்கையும், b தே₃ஹாத்பரனான ஆத்மாவைத் தானாக நினைத்திருக்கையும், ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யமே ஸ்வரூப மென்றிருக்கையும். பாரதந்த்ர்யத்துக்கு எல்லை ஏதென்னில், ததீ₃யஶேஷத்வபர்யந்தமென்றிருக்கையும், உத்₃தே₃ஶ்யரான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலும், மஹோபகாரகனான ஆசார்யன் விஷயத்திலும், ஸர்வப்ரகார ரக்ஷகனான எம்பெரு மான் விஷயத்திலும், கரணத்ரயத்தாலும் ஆனவளவும் அநுகூலனாய்ப் போரவும், c வருந்தியும் ப்ராதிகூல்யம் தவிர வும், ஆசார்யருசி பரிக்₃ருஹீதமான த்₃வயார்த்த₂ம் நெஞ்சிலே பட அநுஸந்தி₄க்கவும், உகந்தருளின நிலங்களிலே பலகாலும் புக்கு முகங்காட்டவும், அருளிச்செயலைக்கொண்டு போதுபோக் கவும், d ந்யாயார்ஜிதமான த்₃ரவ்யத்தாலே க்ஷுந்நிவ்ருத்தி மாத்ரத்திலே பர்யாப்திபிறக்கவும், தே₃ஹாத்மாபி₄மாந நிவ் ருத்தி பூர்வகமாக ஸம்ஸாரபீ₄தனாகவும், பரதே₃வதா ப்ரதி பத்தியும், ப்ரயோஜநாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக ப்ராப்ய ருசியும், e ஸாத₄நாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக ஸித்₃தே₄பாய வ்யவஸ்தை₂யும், இவை இத்தனையும் ஆசார்யகடாக்ஷத்தா லும், எம்பெருமான் விஷயீகாரத்தாலும் ஸித்₃தி₄க்குமென்று அத்₄யவஸித்திருக்கையும், f ஆசார்யஸந்நிதி₄யில்லாதபோது, விடாய்த்தவன் தண்ணீர்பெற்றானாகிலோ என்னுமாபோலே

---

நீங்குகையும். b தே₃ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டு ஜ்ஞானானந்த₃ ஸ்வரூபமாயிருப்பது ஆத்மா என்று நினைத்திருக்கையும். c வருந்தி யும்... - மிக முயன்றாவது, ஸ்ரீவைஷ்ணவர்கள், ஆசார்யன், எம்பெரு மான் விஷயங்களில் மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் அபசாரங்களைத் தவிரவும். d ந்யாயமான வழிகளிலே தேடப்பட்ட பொருளைக்கொண்டு பசியில்லாமல் வாழுமளவோடு த்ருப்திபெறவும். e மற்ற ஸாத₄னங்களாகிற கர்மஜ்ஞானப₄க்தியோக₃ங்களை வாஸனை யோடு கைவிட்டு ஸித்₃தே₄பாயமான எம்பெருமானே உபாயமென்று உறுதிபூண்டிருக்கையும். f ஆசார்யனைவிட்டுப் பிரிந்தபோது தாகத் தால் வருந்தினவன் ஒருவாய் தண்ணீர் பெற்றால் உயிர் த₄ரித் திருக்கலாம் என்று கண்டார் நினைக்கும்படி இருப்பதுபோலே ஆசார்யனோடு கூடுவதில் பேரவாக்கொண்டவனாய் இருக்கவேணும்;

யிருக்கவும், ப₄க₃வத்ஸந்நிதி₄யில்லாதபோது நடுவழியிலே பசித்தவன் ஊரைச் சேரப்போமாபோலேயிருக்கவும்.

இவ்வதி₄காரிக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் g ஜாதமான ப்ரஜைக்குத் தாய்முலைப்பால்போலே; எம்பெருமானுடைய தீர்த்த₂ம் பசுவின் பாலும் நெய்யும்போலே; ஆழ்வார்கள் அருளிச்செயல் அம்ருதபாநம்போலே; ஸாமாந்ய ஶாஸ்த்ரஶ்ரவணம் h அநபி₄மதபே₄ாஜநம்போலே; i விவித₄ ப₂லங்களான நாநாவித₄ ப₄க₃வந்மந்த்ரஜபாதி₃கள் வாஸநா ப₃லத்தாலே வந்ததாகில், ஸம்ஸாரத₄ர்மாநுவர்த்தநம் போலே; j த்₃வயார்த்த₂ாநுஸந்த₄ாநம் ப்ராப்யதே₃ஶவாஸ ஸுக₂ஸமாநம் என்னலாமித்தனையிறே; மற்றுச்சொல்ல லாவதில்லை.

---

எம்பெருமானைவிட்டுப் பிரிந்திருக்கும்போது நடுவழியில் பசித்தவன் விரைந்து ஊர் சென்று பசியாற நினைப்பதுபோலே எம்பெருமானை விரைவில் அடைய நினைக்கவேண்டும். பசியைக்காட்டிலும் தாகம் அஸஹ்யமாயிருப்பதுபோலே எம்பெருமானைப் பிரிந்திருப்பதைக்காட்டிலும் ஆசார்யனைப் பிரிந்திருப்பது மிகவும் பொறுக்கவொண்ணாதது என்று கருத்து. g ஜாதமான ப்ரஜை - அப்போது பிறந்தகுழந்தை. h அநபி₄மதபே₄ாஜனம் - வேண்டாத சாப்பாடு. i ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யங்களையொழிந்த ப₂லங்களின் பொருட்டு அஷ்டாக்ஷர ஸுத₃ர்ஶனமந்த்ர ஜப ஹோமாதி₃கள் முதலான ப₄க₃வந் மந்த்ரஜப ஹோமாதி₃கள் அநாதி₃வாஸனுப₃லத்தாலே ப்ரபந்நனுக்கு ஏற்பட்டதாகில், தினப்படி வாழ்க்கையில் பெண்டுபிள்ளைகளைப் பின்சென்று வாழ்வதுபோலே இதுவும் தவிர்க்கவொண்ணமல் வந்துவிட்டது என்று நினைக்கவேணும். j த்₃வயமந்த்ரத்தைப் பொருளோடு அநுஸந்தி₄ப்பது ஸ்ரீவைகுண்ட₂த்தில் வாழ்ந்து ப்₃ரஹ்மாநந்த₃த்தை யநுப₄விப்பதை ஒக்கும் என்று நினைக்கவேண்டும். ஆக, இவ்வார்த்தையில் ஸ்ரீ வைஷ்ணவன் உயிருள்ளவரை பொழுதுபோக்கும் வழி சொல்லப்பட்டது.

## இருநூற்றிருபத்தாறும் வார்த்தை

மறுமைக்கு ஆசார்யன் உபாயம் என்றிருப்பதுபோலே இம்மைக்கும் ஆசார்யன் உபாயம் என்று நினைத்தால் ஏற்படும் அநிஷ்டத்தைச் சொல்லுகிறது இவ்வார்த்தை. அதாவது-இம்மைப் பயன்கள் கர்மம் காரணமாக வருகின்றவையாகையாலே இவனுடைய

## இருநூற்றிருபத்தாறும் வார்த்தை

a ஆசார்யன் கடவனென்றிருந்தால் வருவதென்? என்னில்: - த்₃ருஷ்டத்திலே கர்மாதீ₄நம்; அங்கு ஏதேனும் சுருங்கிற்றுண்டாகில் ஆசார்யனை வெறுத்தபோது எம்பெருமானைக் கொண்டு தீர்த்துக்கொள்ளவொண்ணாது; எம்பெருமானை வெறுத்தோமாகில் ஆசார்யனைக்கொண்டு தீர்த்துக் கொள்ளலாம்.

## இருநூற்றிருபத்தேழாம் வார்த்தை

எம்பெருமானார் தம்முடைய ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ணவருடைய பிள்ளைக்கு a ஏகாயநரோட்டை ஸம்ஸர்க்க₃முண்டாக, 'நம்மோடு ஸம்ப₃ந்த₄முடையவன் வ்யபி₄சரித்து அநர்த்த₂ப்படவொண்ணாது' என்று பெருமாள் திருவடிகளிலே எழுந்தருளிநிற்கச்செய்தே அவனும் அங்கே ஸந்நிஹிதனாக, 'வாராய்! உனக்கு ப்ரமாணங்களால் காட்டலாம்படி ஜ்ஞாநபௌஷ்கல்யமில்லை; நான் வேதா₃ந்தங்களில் அறுதியிட்டிருக்கும் பொருள் இவ்வாத்மாவுக்குத் தஞ்சமாயிருக்கும் அர்த்த₂ம் த்₃வயமல்லதில்லை' என்று பெருமாள் திருவடிகளில் ஸ்ரீ ஶட₂கோபனை எடுத்து

---

பாபத்துக்கு அநுகு₃ணமாகக் கஷ்டங்கள் ஏற்படும். அப்போது "நாம் இம்மைக்கும் ஆசார்யனை உபாயமாகப் பற்றியிருக்கும்போது இப்படி வந்துவிட்டதே" என்று ஆசார்யனைக் குறைய நினைத்தானாகில் இவனுக்கு எம்பெருமானும் ரக்ஷகனாகமாட்டான். இம்மையில் எம்பெருமான் ரக்ஷகனென்று நினைத்துக் கஷ்டமேற்பட்டபோது எம்பெருமானைக் குறைய நினைத்தால் அதனால் எம்பெருமானுக்கு ஏற்படும் கோபத்தை ஆசார்யனைக்கொண்டு ஆற்றிக்கொள்ளலாம்; ஆகையால் இம்மைக்கு எம்பெருமானையாவது ரக்ஷகனாக நினைக்கலாமேயொழிய ஆசார்யனை ரக்ஷகனாக நினைக்கலாகாது என்று கருத்து. இது ஏற்கனவே 104ம் வார்த்தைப் பகுதியாக வந்துள்ளது.

**இருநூற்றிருபத்தேழாம் வார்த்தை**

a ஏகாயனர் - பிராட்டி ஸம்ப₃ந்த₄மில்லாத நாராயணனே ஶேஷி என்னும் கொள்கையுடையவர்கள். இது 105ம் வார்த்தையாக வந்துள்ளது.

ஸத்யம்பண்ணிக்கொடுத்தருளினார்; அவரும் அன்றுதொடங்கி த்3வயநிஷ்ட2ரானார்.

## இருநூற்றிருபத்தெட்டாம் வார்த்தை

ப4ட்டர் ''த்3வயத்தின் அர்த்த2த்தை பு3த்3தி4பண்ணி ஶப்3த3ாந்தரத்தாலே இவ்வர்த்த2த்தை அநுஸந்தி4க்கவொண்ணாதோ?'' என்று உடையவர்க்கு விண்ணப்பஞ்செய்ய; ''அநுஸந்தி4க்கைக்குக் குறையில்லை, ஆகிலும் இப்பாசுரத்துக்குச் சுரக்கும் அர்த்த2ம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாது'' என்று அருளிச்செய்தார்.

## இருநூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை

நம் ஆசார்யர்கள் திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் அர்த்த2த்தை ஒளித்துப்போருவர்கள்; த்3வயத்தில் ஶப்3த3த்தை ஒதுக்கி ஒளித்துப்போருவர்கள்.

## இருநூற்றுமுப்பதாம் வார்த்தை

திருமந்த்ரமும் சரமஶ்லோகமும் ஆசார்யவாக்யம்; த்3வயம் ஶிஷ்யவாக்யம். த்3வயத்தில் பூர்வக2ண்ட3த்தின் அர்த்த2த்தை அநுஸந்தி4த்தால் ஸ்வரக்ஷணார்த்த2மாக விலங்கிக்கிடந்த துரும்பை எடுத்துப்பொகட ப்ராப்தியில்லை; உத்தரக2ண்ட3த்தின் அர்த்த2த்தை அநுஸந்தி4த்தால் தலைசொறிகைக்கு அவஸரமில்லை, மடலெடுத்துக்கொண்டு புறப்படுமித்தனை.

---

**இருநூற்றிருபத்தெட்டாம் வார்த்தை**

த்3வயத்திலிருந்து தேறும் அத்தனை அர்த்த2ங்களும் மற்ற மந்த்ரங்களினால் கிடைக்கமாட்டா. இது 106ம் வார்த்தையாக இந்நூலில் வந்துள்ளது.

**இருநூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை**

இதுவும் அடுத்த வார்த்தையும் இந்நூலில் 107ம் வார்த்தையாக வந்துள்ளன.

**இருநூற்றுமுப்பதாம் வார்த்தை**

107ம் வார்த்தையில் இது ஒருபகுதியாயுள்ளது.

## இருநூற்றுமுப்பத்தோராம் வார்த்தை

ப₄க₃வச்சரணாரவிந்த₃ ஶரணாக₃தனாய், ஜ்ஞாநிநாம் அக்₃ரேஸரனாய், விலக்ஷணாதி₄காரியான இப்ரபந்நனுக்கு உபாயத்தில் ப்ரவ்ருத்தி ஸ்வரூபவிரோதி₄; உபேயத்தில் நிவ்ருத்தி ருசிவிரோதி₄; இவ்விரண்டு அர்த்த₂த்துக்கும் நித₃ர்ஶந பூ₄தர் ஸ்வரக்ஷண க்ஷமையாயிருக்கச் செய்தேயும் ஸ்வஸ்வரூப பாரதந்த்ர்யத்தை அநுஸந்தி₄த்து அஶோகவநிகையில் எழுந்தருளியிருந்த பிராட்டியும், பெருமாள் நில்லென்றிருக்கச் செய்தேயும் தம்முடைய செல்லாமையைக்காட்டி அவருடைய வார்த்தையை அதிக்ரமித்து, காட்டிலே தொடர்ந்து அடிமை செய்த இளையபெருமாளும்.

## இருநூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

ஸம்ஸாரஸம்ப₃ந்த₄மற்றுத் திருநாட்டிலே போயிருக்குமளவும் த்₃வயத்தில் இரண்டு க₂ண்ட₃த்தின் அர்த்த₂த்தையும் கொண்டு ப்ரபந்நனானவன் காலயாபநம் பண்ணக்கடவன்.

## இருநூற்றுமுப்பத்துமூன்றும் வார்த்தை

ஆசார்ய ஸமாஶ்ரயணம் எப்போது, அப்போது பிறந்தானாகக்கடவன்; அன்று முதல் ஶரீராந்தமளவாகக் கீழ்ச் சொன்னபடி செய்துபோருமாகிலிறே தன் ஸ்வரூபத்துக்கும் இவன் ஸ்வரூபத்துக்கும் சேருவது; a அல்லாதபோது எம்

---

**இருநூற்றுமுப்பத்தோராம் வார்த்தை**

இது இந்நூலில் வார்த்தை 108ல் ஒரு பகுதியாக வந்துள்ளது.

**இருநூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை**

இது 108ன் மற்றொரு பகுதியாக வந்துள்ளது.

**இருநூற்றுமுப்பத்துமூன்றும் வார்த்தை**

a முன் வார்த்தைகளில் சொன்னபடி ப்ரபந்நன் நடக்காவிடில் எம்பெருமான் ஒரு ஸதா₃சார்யனைப் புருஷகாரமாகக்கொண்டு தன்னைப்

பெருமான் இவனைப் புருஷகாரமுகத்தாலே விடமாட்டாதே விதியே என்று ரக்ஷிக்குமித்தனை.

## இருநூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை

a நஞ்ஜீயருக்குப் பெரியபட்டர் அருளிச்செய்த பத்தர்த்தம் ;-சரக்கேற்றின மரக்கலத்துக்குக்கேடு, காற்றுலேயாதல், ஸமுத்ரஸ்தபர்வதசிகரம் தட்டியாதல், பெருங்கடல் பாய்ந்தாதல், மஹாமத்ஸ்யங்களினுடைய புச்சவிக்ஷேபங்களாலேயாதல், ப்ரதீகாரமில்லாத அழிவு வருமாபோலே, எம்பெருமான் திருவடிகளிலே பண்ணிவைத்த ப்ரபத்திக்கும் பாகவத விஷயங்களிலே அறிந்தும் அறியாதும் பண்ணின அபசாரங்களாலே சில அந்தராயங்கள் நாசபர்யந்தமாக வுண்டாகவே ஸம்பவிக்கும். தத்பய ஸம்பாவநாநிவ்ருத்த்யர்த்தமாக இப்பத்தர்த்தத்தைக் கேட்டு புத்திபண்ணி அநுஷ்டித்து நிர்ப்பரனாய் மார்பிலே கைவைத்துறங்கும் ;

---

பற்றிய இவனை விடமுடியாமல் ''இவனையும் ரக்ஷிக்கவேண்டிய தலைப்பொறுப்பு நமக்கு வந்துசேர்ந்ததே'' என்று மனக்குறையோடு ரக்ஷிப்பானித்தனை. (முற்கூறிய பெருமைகள் இவனுக்கு ஏற்பட்டால் பெரும்பேறாக நினைத்து மிக உகப்புடன் இவனைக் கைக்கொள்ளுவான என்று கருத்து.)

### இருநூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை

a நஞ்சீயருக்கு பட்டர் அருளிச்செய்த பத்து அர்த்தங்கள் ஒரு ப்ரபந்நனுக்கு ஏற்படக்கூடிய ப்ரபத்திநிஷ்டாபாயங்களைத் தவிர்க்கும் வழியைச் சொல்லுகின்றன. சரக்கேற்றின ஒரு கப்பலுக்குப் புயற்காற்றுலேயாவது, கடலில் அமிழ்ந்திருக்கும் பாறைதட்டியாவது கடல்நீர் பொங்கிப் பாய்ந்தாவது, பெரிய மீன்கள் வாலாலடிப்பதாலாவது தவிர்க்கமுடியாத அழிவோ நஷ்டமோ ஏற்படுவதுபோலே, எம்பெருமான் திருவடிகளிலே பண்ணின ப்ரபத்திக்கும் பகவத் பாகவதவிஷயங்களிலே அறிந்தும் அறியாமலும் பண்ணின சில அபசாரங்கள் இவனுடைய ஸ்வரூபநாசம்வரையில் விளைக்கக்கூடியவையாக உண்டாகும். இப்படி உண்டாகக்கூடிய இடையூறுகளால் ஏற்படும் பயம் அடியோடு நீங்குவதற்காக இந்தப் பத்துஅர்த்தங்களைக் கேட்டறிந்து அநுஷ்டித்து ப்ரபந்நன் கவலையற்றவனாய் வாழலாம்.

b அவை எவையென்னில்;— (1) ஆசார்யன் திருவுள்ளத்தாலே அநவரதம் நினைக்கும்படியாக ஶரீரார்த்த₂ப்ராணன்களை அழிய மாறியாகிலும் ஒரு கைங்கர்யம் உறுதியாகச்செய்வது; (2) ப₄க₃வத்₃விஷயத்திலும் எல்லாரும் கொண்டாடும்படியாகவும் திருவுள்ளத்துக்குப் பாங்காகவும், தன் நெஞ்சு உணரவும் ஒரு ஸ்ரீகார்யஞ்செய்வது ; (3) ப₄ாக₃வதவிஷயத்திலும் அப்படியே பல ஸ்ரீவைஷ்ணவ கோ₃ஷ்டி₂யிலும் 'இன்னான் கல்யாணகு₃ணங்களையுடையவன் ; ப₄க₃வத்₃ப₄ாக₃வதவிஷயங்களில் செய்துபோரும்படி அழகிது' என்று கொண்டாடும்படி போருவது; (4) ஸர்வஸாக்ஷியாய் நினைவின் தலையிலே குடியிருக்கிற எம்பெருமான் சிரியாதபடி, வறைநாற்றமான அல்பாஸ்தி₂ர ப₄லஶ்ரத்₃தை₄யாலே ஏகாந்தத்திலும் அந்ய தே₃வதோபாஸநாதி₃களை ஆசரியாதொழியவும், அந்யதே₃வ

இவ்வளவும் இவ்வார்த்தைக்குப் பீடிகை: b இனி, பத்து அர்த்த₂ங்களாவன — (1) "ஶரீரம் அர்த்த₂ம் ப்ராணஞ்ச ஸத்₃கு₃ருப்₄யோ நிவேத₃யேத்" [உடலையும், பொருளையும், உயிரையும் ஶிஷ்யன் நற்கு₃ருவுக்கு ஸமர்ப்பிக்கவேண்டும்] என்கிற ப்ரமாணத்தில் சொன்னபடி ஆசார்யன் திருவுள்ளத்தில் எப்போதும் தன்னை நினைத்திருக்கும்படியாக உடலையும் பொருளையும் உயிரையும்விட்டாவது ஓர் ஆசார்யகைங்கர்யத்தை உறுதியாகச் செய்யவேண்டும். (2) எம்பெருமான் விஷயத்திலும்—ப₄ாக₃வதர்கள் அனைவரும் கொண்டாடும்படியாகவும், எம்பெருமான் திருவுள்ளத்துக்குப் பாங்காயிருக்கும்படியும், தன் நெஞ்சே அறிந்து பாராட்டும்படியாகவும் ஒரு நல்ல கைங்கர்யத்தைச் செய்யவேண்டும். (3) ப₄ாக₃வதர்கள் விஷயத்திலும் முற்கூறியபடியே பல ஸ்ரீவைஷ்ணவ கோ₃ஷ்டி₂களில் தன்னை நற்குணங்கள் உடையவன் என்றும், ப₄க₃வத்₃ப₄ாக₃வதகைங்கர்யங்களை அழகாகச் செய்கிறவன் என்றும் கொண்டாடும்படி நடந்துகொள்ளவேண்டும். (4) பொசுங்கின நாற்றமுடைய உணவுபோலே அற்பமும் நிலைநில்லாததுமான ப₂லன்களில் ஆசையாலே தனியாயிருக்கும்போது மற்ற தே₃வதைகளை உபாஸிப்பது முதலான கார்யங்களைச் செய்தாலும், அதைச் செய்பவர்களோடு கூடப்போதல், கூடிவாழ்தல், கூடி இருத்தல், கூடிப்பேசுதல் முதலியவற்றைச் செய்தாலும், உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்து அறியும்படி நினைவு புறப்படுகிற நெஞ்சிலே இருக்கிற எம்பெருமான் "இவன் நம்மையே

தோபாஸகரோடு ஸஹக₃மந ஸஹவாஸ ஸஹாவஸ்த₂ாந ஸம்ப₄ாஷணங்களை வருந்தியும் ஒழியவும்; (5) ஸுறைநாற்றத்தை ஆசைப்பட்ட பெருச்சாளி இடரிலே அகப்பட்டு அநர்த்த₂ப்படுமாபோலே, அநர்த்த₂ ஸம்ப₃ந்த₄ ரதிநிமித்தமான பே₄ாஜநாஸநஶயநாதி₃ ஸம்ப₃ந்த₄த்தாலே ஜ்ஞாநஹாநி பிறந்து விபரீதஜ்ஞாநமும் பிறந்து ஸ்ரீவைஷ்ணவகோ₃ஷ்டி₂யிலும் ப₃ஹிஷ்க்ருதனாய்விடுகை; ஶிரஶ்சே₂த₃பர்யந்தமான மஹாபத்து ஸம்பாதி₃தமானாலும் ஆத்மத₄ர்ம ப்ரச்யுதி பிறவாதபடி த்₃ருட₄ாத்₄யவஸாய நிஷ்ட₂ாக₃தனாகவும். இதுக்கு த்₃ருஷ்டாந்தபூ₄தர் இவர்களிறே; பெரியநம்பியும் கூரத்தாழ்வானும்; (6) ஸாமாந்ய ஶாஸ்த்ரத்தில் கண்வையாதே விஶேஷஶாஸ்த்ரத்திலே அநவரத த்₃ருஷ்டியாய் அநுஷ்ட₂ாநத்திலும் அப்படியேயாய்த் தன்னை ஒருங்கப்பிடித்து நிஸ்ஸம்ஶயனாயிருக்கை; 'ஆதி₃ப₄ரதனும் திருக்கண்ணமங்கையாண்டானுமிறே இதுக்கு ப்ரமாணபூ₄தர். நமக்கெட்டாத நிலமன்றோ?'

---

ஏமாற்றப் பார்க்கிறானே'' என்று சிரித்திருப்பன். அப்படி அவன் சிரித்திராதபடி சிரமப்பட்டாவது முற்கூறிய கார்யங்களைச் செய்யாதிருக்கவேண்டும். (5) பொசுங்கின நாற்றமுடைய உணவுக்கு ஆசைப்பட்ட பெருச்சாளி கூண்டிலேயகப்பட்டுத் துன்புறுவதுபோலே, இவனுக்கு இடரை விளைக்கும் போ₄க₃ங்களை விரும்பினால், அதற்குரிய உணவு, இருப்பு, படுக்கை முதலானவற்றின் தொடர்பாலே நல்லறிவு கெட்டு, தீய அறிவு உண்டாகி, ஸ்ரீவைஷ்ணவர்களின் திரளிலிருந்து விலக்கப்பட்டுவிடுவான் தலையேபோகும் ஆபத்துவருவதானாலும் முற்கூறியபடி ஆத்மஜ்ஞானத்துக்கு அழிவு பிறவாதபடி நிலையான உறுதிகொண்டவனாயிருக்கவேண்டும். இதற்கு உத₃ாஹரணமாயிருந்தவர்கள்—அரசனைத் துரும்பென மதித்து த₃ர்ஶனத்துக்காக உயிரைவிட்ட பெரியநம்பியும், த₃ர்ஶனத்தை (கண்ணை)க்கொடுத்த கூரத்தாழ்வானுமாவர். (6) ஸாமாந்யஶாஸ்த்ரத்தில் ''காண்பரோ கேட்பரோ தாம்'' [திருமாலை 7] என்கிற ரீதியில் கண்செலுத்தாமல் விஶேஷ ஶாஸ்த்ரமான ப₄க₃வத்₃விஷயத்தில் எப்போதும் பரிஶீலனம் பண்ணிக்கொண்டு அநுஷ்ட₂ானத்திலும் ஸாமான்யத்தைவிட்டு விஶேஷத்தையே கடைப்பிடித்து. இதில் ஒருபடிப்பட்டவனாய் ஐயமற்றவனாயிருக்கவேண்டும். ''ஆதி₃ப₄ரதனை ஜ்ஞானியும், ஸ்வார்த்த₂மான ஸ்வவ்யாபாரத்தைவிட்ட திருக்கண்ணமங்கையாண்டானுமன்றோ

என்னில்; ஏறுவான் சாருங்குதிரையிறே. இளநெஞ்சர்க்கெல்லாம் இத்தை அத்₄யவஸிக்கில் அருமையில்லை; ஒருத்தி அப்₄யாஸத்தாலே மலையை எடுத்துக் காட்டினளென்னும் பழஞ்சொல்லில்லையோ? (7) கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான ப்ரஸித்₃த₄ க்ஷேத்ரங்களில் நித்யவாஸம் பண்ணுதல்; அங்கே நித்யவாஸம் பண்ணி அபி₄யுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பலகாலும் நினைக்கும்படி ஆப்தம்பண்ணி அர்த்தோ₂பகாரத்தாலேயாதல், ஶேஷவ்ருத்தியாலேயாதல், அநுவர்த்தித்துக் கொண்டுபோரவும். (8) புத்ர மித்ர களத்ர க்ஷேத்ர அர்த்த₂ தே₃ஹாதி₃களிலே அதிப்ரஸக்தி (ப்ரதிபத்தி) பண்ணாதே ஆசார்யன் ஆத்மஹிதம் பண்ணினத்துக்கு ஒரு வாசிதோற்ற அவற்றோடு ஒட்டற்றுப் பரிமாறவும்; (9) ப₄க₃வத்₃ பா₄க₃வத கைங்கர்யத்திலே மிகவும் தாத்பர்யமுடையனாய், ஸம்ஸாரத்தின் அநித்யத்வத்தை அநுஸந்தி₄த்து, அவற்றோடு

இப்படியிருக்கமுடியும். நமக்கு இது எட்டாததன்றோ'' என்று ஐயமுறலாகாது. எப்பேற்பட்ட முரட்டுக்குதிரையானாலும் ஏறுகிற முறையில் ஏறிப்பழகினால் அது அடங்கிநிற்கும். அதுபோலே இளநெஞ்சை உடையவர்களுக்கும் இந்த உறுதியைப் பழக்கிக்கொள்வது சிரமமில்லை. ஒரு பெண்பிள்ளை நெடுநாள்பழக்கத்தாலே முதலில் பெரியகல்லையும், அதற்குப்பின் சிறியகுன்றையும் அதற்குப்பின் ஒரு மலையையுமே எடுத்துக்காட்டினாள் என்று ஒரு பழங்கதை சொல்லுவதில்லையோ? (7) கோயில், திருமலை, பெருமாள்கோயில் முதலான உலகறிந்த தி₃வ்யதே₃ஶங்களில் எப்போதும் வாழவேண்டும். அப்படி வாழும்போது நல்லோர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் பலகாலும் தன்னை நினைக்கும்படி அவர்களுக்கு வேண்டியவர்களாயிருந்து, அவர்களுக்குப் பொருள் உதவி செய்தோ, கைங்கர்யம்செய்தோ அவர்கள் திறத்தில் நல்லவனாயிருக்கவேண்டும். (8) பிள்ளைகள், நண்பர்கள், கொண்ட பெண்டிர், வயல், பொருள், உடல் முதலானவற்றில் மிகவும் பாசம் வைக்காமல் ஆசார்யனால் எம்பெருமான் கையிலே காட்டிக் கொடுக்கப்பட்டவன் என்னும் வாசி தெரியும்படி முற்கூறியவற்றோடு பற்றற்று நடக்கவேண்டும். (9) எம்பெருமான் விஷயத்திலும் அவன் அடியார் விஷயத்திலும் கைங்கர்யம் செய்வதில் மிகவும் ஈடுபட்டவனாய், ஸம்ஸாரத்தின் அல்பாஸ்தி₂ரத்தன்மையை அநுஸந்தி₄த்து முற்கூறிய புத்ரமித்ராதி₃கள் விஷயத்தில் அடியோடு பற்றை

வேறொரு (வேரோடு?) ஒட்டறவிடுக்கையும்; (10) நித்யனாய், ப்ரியபூ₄தனாய், ஸர்வவித₄ ப₃ந்து₄பூ₄தனான எம்பெருமானை, "நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" என்று அநுஸந்தி₄த்துவரவும்; இப்பத்தர்த்த₂ம் ப்ரதிபத்திஸ்த₂ாநம்.

## இருநூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை

கந்தாடையாண்டான் அருளிச்செய்த வார்த்தை;— ஸ்ரீவைஷ்ணவன் ஸம்ஸார மண்டலத்திலே இருக்கும் இருப்பை, பிராட்டி ராவணப₄வநத்திலேயிருந்து காட்டினாள்; எங்ஙனேயென்னில், (1) a பிராட்டி இளையபெருமாள்திறத்தில் அருளிச்செய்தவார்த்தை பெருமாள் திருவடிகளை அகற்றினாற்போலே இவனுக்குத் ததீ₃யாபராத₄ம் எம்பெருமான் திருவடிகளை அகற்றும்; (2) பிராட்டிக்கு ராவணஸ்பர்ஶம்போலே இவனுக்கு தே₃ஹஸம்ப₃ந்த₄ம்; (3) பிராட்டிக்கு b தர்ஜநப₄ர்த்ஸநாதி₃களைப் பண்ணின ராக்ஷஸிகள் ஸஹவாஸம் போலே இவனுக்குக் களத்ரபுத்ராதி₃ ஸஹவாஸம்; (4) பிராட்டிக்கு மாரீசத₃ர்ஶநம்போலே இவனுக்கு விஷயப்ராவண்யம்; பிராட்டிக்கு ராவண த₃ர்ஶநம்போலே இவனுக்கு இந்த்₃ரியங்கள்; (5) பிராட்டிக்குத் திருவடி c தோற்றரவுபோலே இவ

---

அறுத்துவிடவேண்டும். (10) நித்யனாய், மிக இனியவனாய், எல்லா விதமான உறவுமுடையவனான எமபெருமானை "நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" [திருச்சந்தவிருத்தம் 101] என்று பிரார்த்தி₂த்து வரவேண்டும். இப்பத்து அர்த்த₂மும் கைவந்தவன் அறிந்தும் அறியாமலும் தவிர்க்கவொண்ணாதபடி ஏற்படும் ப₄க₃வத்₃ப₄ாக₃வத அபசாரங்களில் கவலையற்று மார்பிலே கையைவைத்து உறங்கலாமென்றபடி.

**இருநூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை**

a மாரீசனாலே பெருமாள் பிரிக்கப்பட்டபோது பிராட்டி இளைய பெருமாளைக் குறித்துச் சொன்ன கடுஞ்சொல் பெருமாளைவிட்டு அவளை அகற்றினதுபோலே, ஜீவனுக்கும் ப₄ாக₃வதாபசாரம் எம்பெருமானைவிட்டு அகற்றிவிடும். b தர்ஜனப₄ர்த்ஸனாதி₃களை—மிரட்டுதல் ப₄யமுறுத்தல் முதலானவைகளை. c தோற்றரவு - காட்சி.

னுக்கு ஆசார்யன் தோற்றரவு; (6) பிராட்டிக்குத் திருவடி ராமகு₃ணங்களைச் சொன்னாற்போலே இவனுக்கு ஆழ்வார்களருளிச்செயல்; (7) பிராட்டிக்குத் திருவாழி மோதிரத்தின் வரலாறு சொன்னாற்போலே இவனுக்கு ஆசார்யன் அருளிச்செய்த கு₃ருபரம்பரை; (8) பிராட்டிக்குத் திருவாழி மோதிரங்கொடுத்தாற்போலே இவனுக்கு ஆசார்யன் அருளிச்செய்த திருமந்த்ரம்; (9) பிராட்டிக்கு ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெண் பிள்ளைகள் உசாத்துணையானாற்போலே இவனுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் உசாத்துணை; (10) பிராட்டிக்கு விரோதி₄யான ராவணாதி₃களை நிரஸித்துப் பெருமாள் பிராட்டியை எழுந்தருளுவித்துக்கொண்டு போனாற்போலே இவனுக்கு விரோதி₄யான ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தை அறுத்து எம்பெருமான் பரமபத₃த்தேறக்கொண்டுபோகை; d இப்பத்து வார்த்தையையும் அநுஷ்ட₂ாநபர்யந்தமாகவுடைய ஸ்ரீவைஷ்ணவன் ஶரீரத்தளவும் நிரபாயமாக இருந்து எம்பெருமான் திருவடிகளைப்பெறும்.

## இருநூற்றுமுப்பத்தாறும் வார்த்தை

காணவேணுமென்று ஆசைப்படுகை காட்சி; அநுப₄விக்க வேணுமென்று ஆசைப்படுகை அநுப₄விக்கை; கைங்கர்யத்தை ஆசைப்படுகை அநுப₄வஜநிதப்ரீதிகாரித கைங்கர்யம்; இவையித்தனையும் ஏககாலத்திலே க₄டிக்கும் அக்கரைப்பட்ட அதி₄காரிக்கு.

---

d இந்தப் பத்துவார்த்தைகளையும் அறிவதோடல்லாமல், அநுஷ்டி₂க்கவும் வல்ல ஸ்ரீவைஷ்ணவன் உயிரோடிருக்கும் வரையில் யாதொரு ஆபத்துமில்லாமலிருந்து எம்பெருமான் திருவடிகளைப் பெறுவான் என்பது உறுதி.

### இருநூற்றுமுப்பத்தாறும் வார்த்தை

இவ்வுலகிற்போலே ஒருகால் கண்டால் போதுமென்றிராதே எப்போதும் காணவேண்டுமென்று ஆசைப்படுகையாகிற காட்சியும், அதுபோலே எப்போதும் அநுப₄விக்கவேணுமென்று ஆசைப்படுகையாகிற அநுப₄வமும், அவ்வநுப₄வத்தாலேற்படும் அன்பினால் ஏவப்பட்டு எப்போதும் கைங்கர்யம் செய்யவேண்டும் என்று ஆசைப்படுகை

## இருநூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

ஒரு முமுக்ஷுவுக்கு மூன்று த்யாஜ்யம், மூன்று உபாதேயம்; அதென்னென்னில்; - a பௌருஷஸங்கம், காமஸங்கம், அர்த்தஸங்கம் என்று இவை மூன்று; b ஆசார்ய விக்ரஹஸங்கம், ஆசார்ய கைங்கர்யஸங்கம், ஆசார்யன் அருளிச்செய்த வார்த்தையில் அதிஸங்கம் என்று இவை மூன்று.

## இருநூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

ஸ்வஸ்வரூப விரோதி—ஸம்பந்தவிமோசநத்வம், ஸ்வஸ்வரூபதர்சநத்வம், ஸ்வஸ்வரூபாநுபவத்வம், ஸ்வஸ்வரூப விகாஸவ்ருத்தித்வம், ஸ்வஸ்வரூப அவிகாஸாநுபவத்வம், உபயவிகாஸ வ்ருத்தித்வம்.

---

யாகிற கைங்கர்யமும் ஆகிய இவையெல்லாம் பரமபதஞ்சென்ற அதிகாரிக்கு ஒரே சமயத்தில் ஏற்படும்.

### இருநூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

aபௌருஷஸங்கம்—ஸ்வஸ்வாதந்த்ர்யத்தில் ஈடுபாடு. b ஆசார்ய விக்ரஹஸங்கம்—ஆசார்யன் திருமேனியில் ஈடுபாடு.

### இருநூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

ஸ்வஸ்வரூப விரோதிகளை ஆறுவகையாகப் பிரித்துக்காட்டுகிறது இவ்வார்த்தை. (1) பகவத் பாகவதாசார்யர்களோடு உறவை அறுத்துக்கொள்ளுகை. (2) எம்பெருமானை அறிவதில் ஊன்றியிராமல் தன் ஆத்மாவை அறிவதில் ஊன்றியிருக்கை. (3) எம்பெருமானை அநுபவிப்பதில் ஈடுபடாமல் தன் ஆத்மாவை அநுபவிப்பதில் ஈடுபடுகை. (4) கைங்கர்யத்தை வ்ருத்தியாக (பரமப்ராப்யமாக)க் கொள்ளாமல் தன் ஸ்வரூபம் ப்ரக்ருதிஸம்பந்தம் நீங்கி, தன் தர்மபூதஜ்ஞானம் விரிவடைந்து ஸ்வரூபாவிர்பாவமேற்படுவதைப் பரமப்ராப்யமாகக் கொண்டிருக்கை. (5) தன் ஸ்வரூபம் சுருங்கியிருக்கும் ஸம்ஸாரதசையில் சப்தாதிவிஷயங்களை அநுபவிக்கை. (6) பகவத்பாகவத கைங்கர்யத்தை வ்ருத்தியாக (பரமப்ராப்யமாக)க் கொள்ளாமல் ஸ்வாத்மபரமாத்ம குணாநுபவத்தைப் பரமப்ராப்யமாகக் கொள்ளுகை.

## இருநூற்றுமுப்பத்தொன்பதாம் வார்த்தை

ஜ்ஞாநத₃ஶை, ப்ராபகத₃ஶை, ப்ராப்தித₃ஶை, ப்ராப்ய த₃ஶை என்று நாலு; ஜ்ஞாநத₃ஶையில் அஜ்ஞாநத்தை முன்னிட்டிருக்கக்கடவன்; ப்ராபகத₃ஶையில் ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டிருக்கக்கடவன்: ப்ராப்தி த₃ஶையில் ஆர்த்தியை முன்னிட்டிருக்கக்கடவன்; ப்ராப்ய த₃ஶையில் த்வரையை முன்னிட்டிருக்கக்கடவன்.

---

### இருநூற்றுமுப்பத்தொன்பதாம் வார்த்தை

சேதனன் எம்பெருமானை அடையும்போது (1) ஸ்வஸ்வரூபபர ஸ்வரூபங்களை உள்ளபடி அறிகையாகிற ஜ்ஞானத₃ஶை. (2) எம்பெருமானையே உபாயமாக உறுதிகொள்கையாகிற ப்ராபகத₃ஶை, (3) எம்பெருமானை அடையும் காலம் நெருங்கியிருக்கும் ப்ராப்தித₃ஶை, (4) எம்பெருமானை அடைந்த பின்புள்ள ப்ராப்யத₃ஶை என்று சேதனனுக்கு நாலு நிலைகள் உண்டு. (1) ஜ்ஞானத₃ஶையில் ஞானம் கனிந்த நலமான ப₄க்தி முற்றினால் ஸ்வஸ்வரூபபரஸ்வரூபங்களை மாறுடி, எம்பெருமானுடைய ஜ்ஞானஶக்த்யாதி₃களை மறந்து, அவனுடைய ஸௌகுமார்யம் (மென்மை) முதலானவற்றையே நினைத்து, அவனை ரக்ஷிக்கத்தக்கவனாகவும் தன்னை ரக்ஷகனாகவும் எண்ணி, அவனுக்கு மங்க₃ளாஶாஸனம் செய்பவனாய் இருக்கவேண்டும். (2) எம்பெருமானையே உபாயமாக உறுதிகொள்ளும் ப்ராபகத₃ஶையில், தன் முயற்சியாகிற கைம்முதல்இல்லை என்று அநுஸந்தி₄க்கும் ஆகிஞ்சன்யத்தை முன்னிட்டுக்கொண்டே எம்பெருமானை உபாயமாக உறுதிகொள்ளவேண்டும். (3) எம்பெருமானை அடையும் காலம் நெருங்கியிருக்கும் ப்ராப்தி த₃ஶையில், அவனை அடையவேண்டும் என்பதில் துடிப்போடு இருக்கவேண்டும். (4) எம்பெருமானை அடைந்த பின்புள்ள ப்ராப்யத₃ஶையில் அவனுக்குக் கைங்கர்யம் செய்வதில் வேக₃முடையவனாயிருக்கவேண்டும்.

### இருநூற்றுநாற்பதாம் வார்த்தை

எம்பெருமானுடையவும் அவனது அடியார்களுடையவும் அநுப₄வமும் கைங்கர்யமும் இவ்வுலகத்திலேயே கிடைக்கப்பெற்றவர்களுக்கு "அச்சுவை பெறினும் வேண்டேன்" [திருமாலை 2] "மற்றொன்றினைக் காணாவே" [அமலனாதி 10] "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை" [திருவாய் 7.10.10] என்கிறபடியே

## இருநூற்றுநாற்பதாம் வார்த்தை

அநுப₄வம் விச்சே₂தி₃யாமைக்கும், உசாத்துணைக்குமாக வாய்த்து தே₃ஶவிஶேஷம் வேண்டுகிறது.

## இருநூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

தானநுப₄விக்கையாவது - அவனநுப₄விக்கை. அபி₄மத விஷயத்தில் அழுக்குகக்கும் செருக்கரைப்போலே வருந்திப் பெறுவாரும், இரந்து பெறுவாருமாயிருக்கும்.

---

பரமபத₃மாகிற அப்ராக்ருத தே₃ஶமும் தேவையில்லை என்றே தோன்றும்; ஆனாலும், அவர்களும், அந்த தே₃ஶத்துக்குப் போவதற்கு இரண்டு காரணங்களுண்டு:—(1) இவ்வுலகம் அநித்யமானதாகை யாலே, ப்ரளயகாலத்தில் ப₄க₃வத்ப₄ாக₃வதாநுப₄வகைங்கர்யங்களுக்கு இடையூறு ஏற்பட்டே தீரும். (2) இங்கிருக்கும்போது ஏற்படும் அநுப₄வகைங்கர்யங்களுக்கு உசாத்துணைக்கு (கூடியநுப₄விப்பதற்கு) ஆட்கள் தேடிக்கண்டுபிடிக்கவேண்டும்படி இருக்கும். அதனாலேயே இவ்விரு குறைகளும் நேராதபடி நித்யமாய், உசாத்துணைக்குக் கணக்கற்றவர்களையுடைய நித்யவிபூ₄திக்கு ஜ்ஞானிகள் செல்ல வேண்டியிருக்கிறது.

### இருநூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

சேதனன் எம்பெருமானைத் தான் அநுப₄விக்கையாவது—எம்பெருமான் இவனைப்பெற்று அநுப₄விப்பதைக் கண்டு களிக்கையேயாகும். தாம் விரும்பும் ஸ்த்ரீ விஷயத்தில் அவளுடைய வியர்வைநாற்றம் முதலான அழுக்குகளையும் விரும்பும் ராஜாக்களைப்போலே, எம்பெருமான், ஆழ்வாரைப் போன்றவர்களுடைய அழுக்குடம்பையும் விரும்பியிருப்பான். ''செஞ்சொற்கவிகாள்'' என்னும் திருவாய்மொழியில் (10·7) அநுஸந்தி₄த்தபடி, நித்யவிபூ₄திக்கும் ஆழ்வாரை இவ்வுடம்போடே கொண்டுபோக ஆசைப்படுவான், ஆழ்வார் அதுக்கு இசையாமல் ''மங்கவொட்டு'' [திருவாய் 10-7-10] என்று தம் ஶரீரத்தை இங்கேயே லயமடையச் செய்யவேண்டும் என்று பிரார்த்தி₂க்கையாலே தான் விரும்பிய ஆழ்வாருடைய திருமேனியின் அநுப₄வம் கிடைக்கப்பெறாத வருத்தத்தோடேயே ஆழ்வாருடைய ஆத்மஸ்வரூபத்தை எம்பெருமான் பெறுகிறான். அதுபோலவே ''சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை'' [திருவாய் 7-10-10] என்று ஆழ்வார் பரமபத₃ம் செல்லவும் ஆசையில்லாமல் திருவாறன்விளையிலே ஈடுபட்டபோது ''ஆழியான் அருள்தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே''

## இருநூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

a ப₄க₃வத்பரர் த்₃விவித₄ர்; முமுக்ஷுக்களென்றும் பு₃பு₄க்ஷுக்களென்றும். முமுக்ஷுக்கள் தான் த்₃விவித₄ர்; ப₄க₃வச்சரணார்த்தி₂களும், கைவல்யார்த்தி₂களும். ப₄க₃வச்சரணார்த்தி₂கள் த்₃விவித₄ர்; உபாஸகரும், ப்ரபந்நரும். ப்ரபந்நர் த்₃விவித₄ர்; ஆர்த்தரும், த்₃ருப்தரும். b ஆர்த்தப்ரபந்நர் த்₃விவித₄ர்; ஸம்ஸாரம் அடிக்கொதித்தவர்களும், ப₄க₃வத₃நுப₄வம் பெற்றாலொழிய த₄ரிக்கமாட்டாதாரும்.

## இருநூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

வ்யதிரிக்தங்களைவிட்டு அவனைப்பற்றுகை வைஷ்ணவனாகையாவது; தன்னைவிட்டு அவனைப்பற்றுகை ஏகாந்தியாகை

---

[திருவாய் 10-6-1] என்கிறபடியே ஆழ்வாரை யாசித்துப் பரமபத₃த்தில் அவரைப்பெற்று அநுப₄விப்பவனாய் இருப்பான். ஆக, ப்ராப்தாவும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே என்று சொல்லப்பட்டதாயிற்று.

### இருநூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

a இவ்விஷயங்கள் தீ₃பிகாகாரிகாவளீ ஜீவப்ரகரண விவரணத்தில் விவரிக்கப்பட்டன. b ஆர்த்தப்ரபன்னர்கள் இரண்டுவகைப்பட்டவர்கள். ''பாவியேனைப் பல நீகாட்டிப்படுப்பாயோ—கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ'' [திருவாய் 6-9-9] என்கிறபடியே, ஸம்ஸாரத்தில் இருப்பு நெருப்பில் இருப்புப்போலே தோன்றி அதனாலே உடனே எம்பெருமானைப் பெறவேண்டும் என்று துடிப்பவர்கள் ஒருவகையான ஆர்த்த ப்ரபன்னர்கள்; எம்பெருமானை அநுப₄விப்பதின் சிறப்பைக் கருதி, அதைப்பெற்றாலொழிய த₄ரிக்கமாட்டாதவர்களாய் எம்பெருமானை உடனே பெறவேண்டும் என்று துடிப்பவர்கள் இரண்டாவதுவகையான ஆர்த்தப்ரபன்னர்களாவர்.

### இருநூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

(1) மற்ற தெய்வங்களைவிட்டு—தாம் விரும்பும் ஐஸ்வர்யத்துக்காகவாவது எம்பெருமானைப் பற்றுகிறவர்கள் வைஷ்ணவர்கள். (2) அவர்களைப்போலே தாம் விரும்பக்கூடிய மற்ற ப₂லன்களையும் விட்டு அவனையடைவதற்காகவே அவனைப்பற்றும் உபாஸகர்கள் ஏகாந்திகள். அவர்களைப்போலே அவனை அடைவதையும் தமக்குப் ப₂லமாகக்

யாவது; அவனைவிட்டு அவனைப் பற்றுகை பரமைகாந்தி யாகையாவது.

## இருநூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை

அம்மங்கியம்மாள் வார்த்தை; - a உடம்பைப்பற்றிச் சோறு தேடுவாரும், b உறவுமுறைபற்றிச் சோறுதேடுவாரும், c உடம்பரைப்பற்றிச் சோறுதேடுவாரும், d உடம்பு(பர்)களைப்பற்றிச் சோறுதேடுவாரும், e லோகத்தைப்பற்றிச் சோறுதேடுவாரும், f உயிரைப்பற்றிச் சோறுதேடுவாரும், g அவனைப் பற்றிச்

---

கொள்ளாமல், அவன் முகமலர்த்தியையே பரமப்ரயோஜனமாகக் கொண்டு அவனைப்பற்றுகிறவர்கள் பரமைகாந்திகளாவர்.

### இருநூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை

இவ்வார்த்தையில் மேன்மேலே சிறந்த புருஷார்த்தங்களைப்பெறுகின்ற பலர் காட்டப்படுகின்றனர். அவர்களாவார்-a தேஹாத்மாபிமானிகளாய் இருந்துகொண்டு, உடம்புக்கு நன்மையை விரும்பி ஐச்வர்யத்தை ஸம்பாதிப்பவர்கள். b பெண்டுபிள்ளை முதலான உறவுமுறையார்க்கு நன்மையைவிரும்பி இவர்களுடைய உடலை வளர்க்க ஐச்வர்யத்தை ஸம்பாதிப்பவர்கள். c தேஹத்திற்காட்டிலும் மேற்பட்ட ஆத்மா ஒன்று உண்டு என்று உணர்ந்து, உடம்பையுடைய அவ்வாத்மாவுக்கு நன்மையைவிரும்பி ஸ்வர்க்கமாகிற மறுமைச் செல்வத்தையடைய இஷ்டாபூர்த்தங்களை (புண்யகார்யங்களை)ச் செய்பவர்கள். d உடம்பையுடைய தமக்கு மாத்திரமல்லாமல் தமது பெண்டுபிள்ளைகள் முதலான உறவுமுறையாருடைய ஆத்மாக்களுக்கும் நன்மையைவிரும்பி, அதற்குரிய புண்யகார்யங்களை அநுஷ்டிப்பவர்கள். e உலகத்துக்கே நன்மையை விரும்பி, தம் உடல், பொருள், ஆவிகளாலே பாடுபடுபவர்கள். f தம் உயிருக்கு நன்மையைவிரும்பிக் கைவல்யமோக்ஷத்தையடைய எம்பெருமானைக் குறித்து ஸாதநாநுஷ்டானம் செய்பவர்கள். முந்தியவர்கள் எம்பெருமானைப் பற்றுதவர்களாகையாலே இவர்களைவிடத் தாழ்ந்தவர்கள். மோக்ஷத்தை விரும்பி எம்பெருமானைப் பற்றுகையால் இவர்கள் அவர்களைவிட உயர்ந்தவர்கள். இனி, அடுத்தபடியாக எம்பெருமானையும் பிராட்டியையும்பற்றி ஐஶ்வர்யங்களை விரும்புகிறவர்களை இவர்களைக் காட்டிலும் உயர்வாகச் சொல்லுவது "ஏடுநிலத்தில்" [திருப்பல் 4] பாசுரவ்யாக்யானத்தில் சொன்ன ரீதியில், இக்கைவல்யார்த்திக்கு என்றுமே பகவதநுபவம் இல்லாமற்போகையாகிற துர்க்கதியைக் கண்டு என்று கொள்ளவேண்டும். g எம்பெருமானைப்

சோறுதேடுவாரும், h அவளைப்பற்றிச் சோறுதேடுவாரும், i அவனையும் அவளையும்பற்றிச் சோறுதேடுவாரும், j தன்னையும் அவனையும்பற்றிச் சோறுதேடுவாரும், k தன்னையும், அவனையும் அவளையும்பற்றிச் சோறுதேடுவாருமாயிறேயிருப்பது என்று.

## இருநூற்றுநாற்பத்தஞ்சாம் வார்த்தை

கலக்கத்தோடு கூடின தேற்றம் ப்ரத₂மாதி₄காரிக்கு; தேற்றத்தோடு கூடின கலக்கம் சரமாதி₄காரிக்கு.

---

பற்றி ஐஶ்வர்யத்தைப்பெற ஸாத₄நாநுஷ்ட₂ானம் செய்பவர்கள். h ஐஶ்வர்யத்தைக் கொடுப்பதையே இயல்வாகக்கொண்ட பெரிய பிராட்டியாரைப்பற்றி ஐஶ்வர்யத்தைப்பெற ஸாத₄நாநுஷ்ட₂ானம் செய்பவர்கள். பிதாவாய் ஹிதபரனை எம்பெருமானைப்பற்றி ஐஶ்வர்யத்தைப் பெறுவதைக்காட்டிலும், மாதாவாய் ப்ரியபரையான இவளிடம் பெறுவது எளிதாகையாலே இவர்கள் முந்தியவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள். i இருவருமான சேர்த்தியிலே அவளைப் புருஷகாரமாகக்கொண்டு அவனிடம் ஐஶ்வர்யத்தைப் பெறவிரும்புகிறவர்கள், இது ஸ்வரூப ப்ராப்தமாகையாலே, மோக்ஷத்தில் ருசியை விளைவித்துவிடும். ஆகையாலே இவர்கள் முந்தியவர்களைவிடச் சிறந்தவர்கள். j தனக்கு நன்மையைவிரும்பி அவனை உபாஸித்து ப₄க₃வத₃நுப₄வரூப மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஸாத₄நாநுஷ்ட₂ானம் செய்கிறவர்கள். k இருவருமான சேர்த்தியில் அவர்களுடைய முகமலர்த்திக்காகவும், அதைக் கண்டு தான் களிப்பதற்காகவும் பரமபுருஷார்த்த₂மான பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களை அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே பெறவிரும்புகிறவர்கள். இவர்கள் அனைவரிலும் உயர்ந்தவர்கள் என்பது சொல்லாமலே விளங்கும்.

### இருநூற்றுநாற்பத்தஞ்சாம் வார்த்தை

ப₄க₃வத்₃விஷயஜ்ஞானம் தொடங்கியிருக்கும் நிலையிலிருக்கும் ப்ரத₂மாதி₄காரிக்கு அநாதி₃வாஸனையினால் ஏற்பட்ட ஸாம்ஸாரிகமான கலக்கத்தோடுகூட, ப₄க₃வத்₃விஷயஜ்ஞானத்தாலுண்டான தெளிவு உண்டு. ப₄க₃வத்₃விஷயஜ்ஞானம் முதிர்ந்த நிலையில் இருக்கும் சரமாதி₄காரிக்கு, ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களைப்பற்றிய தெளிவோடுகூட, ப₄க்திரூபமான ஜ்ஞானம் முதிர்ந்தமையால் அஸ்தா₂னே ப₄யஶங்கையுண்டாகி, அவனுக்கு என் வருகிறதோ? என்னும் கலக்கமும் சேர்ந்திருக்கும்.

## இருநூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

நஞ்ஜீயருக்கு ப₄ட்டரருளிச்செய்த வார்த்தை;-உபாயாம்ஶ நிரூபகர் த்ரிவித₄ர். எங்ஙனேயென்னில்;-கர்மஜ்ஞாந நிஷ்டரென்றும், ஸித்₃தோ₄பாயஸ்வீகார நிஷ்டரென்றும், ஸித்₃தோ₄பாயாந்தர்க்க₃தநிஷ்டரென்றும். இதில் ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரநிஷ்டன் கர்மஜ்ஞாநாதி₃நிஷ்டனை அருவருக்கும்; ஸித்₃தோ₄பாயாந்தர்க்க₃தநிஷ்டன் ஸித்₃தோ₄பாயஸ்வீகார நிஷ்டனை அருவருக்கும்; கர்மஜ்ஞாநாதி₃ நிஷ்டன் கர்ம பரிபாலநப₄ங்க₃ம் பிறக்கிறதோ? என்று கலங்கிக்கொண்டு போரும்; ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரநிஷ்டன் ஸித்₃த₄ஸாத₄ந

### இருநூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

மோக்ஷோபாயத்தைப்பற்றி ஆராய்ந்து அதன்படி நடந்துகொள்பவர்கள் மூன்று வகைப்பட்டவர்கள். அவர்களாவார்— (1) கர்ம ஜ்ஞான நிஷ்டர். அதாவது—கர்மயோக₃த்தையும் ஜ்ஞானயோக₃த்தையும், ஜ்ஞானவிஶேஷமான ப₄க்தியோக₃த்தையும் அநுஷ்டி₂த்து மோக்ஷத்தைப் பெறவிரும்புகிறவர்கள். (2) ஸித்₃தோ₄பாயமாகிற எம்பெருமானை உபாயமாகப் பற்றித் தான் பற்றின பற்றுலே தமக்கு மோக்ஷம் நிஶ்சயம் என்று உறுதிகொண்டிருக்கும் ஸ்வக₃தஸ்வீகார நிஷ்டர். (3) 'எம்பெருமான் நம்மைப்பற்றும் பற்று உபாயமே தவிர நாம் அவனைப் பற்றும்பற்று உபாயமன்று' என்று உணர்ந்து, நிர்ஹேதுகக்ருபையோடு கூடிய எம்பெருமானே ரக்ஷகன் என்று அவனுடைய அபி₄மானத்தில் அடங்கியிருக்கும் பரக₃தஸ்வீகார நிஷ்டர். இவர்களில் முதல்வகையைச் சேர்ந்த உபாஸகருக்கு கைங்கர்யத்தில் ஊற்றமில்லாமையால் ப₄க₃வத₃நுப₄வப்ரத₄ானமான மோக்ஷமே கிடைக்கிறபடியால், ஸ்வார்த்த₂கைங்கர்யநிஷ்டரான இரண்டாம்வகையினர் முதல்வகையினரை அருவருத்திருப்பர்கள். எம்பெருமானுடைய முகமலர்த்திக்கே உறுப்பான பரார்த்த₂கைங்கர்யமே பரமபுருஷார்த்த₂மாயிருக்கையால் ஸ்வார்த்த₂ கைங்கர்யத்தை விரும்பும் இரண்டாம்வகையினரை, பரார்த்த₂கைங்கர்யத்தை விரும்பும் மூன்றாம்வகையினர் அருவருத்திருப்பர்கள். முதல்வகையினர் கர்மம் முதலான மோக்ஷஸாத₄னமான உபாயங்களை அநுஷ்டி₂ப்பதில் ஏதேனும் குறை ஏற்படுமோ? என்று கலங்கிக்கொண்டிருப்பர். ஸ்வக₃தஸ்வீகாரநிஷ்டர்களான இரண்டாம்வகையினர் ஆநுகூல்ய ஸங்கல்பம் முதலான ப்ரபத்த்யங்க₃ங்களில் ஏதேனும் குறை ஏற்

பரிபாலந ப₄ங்க₃ம் பிறக்கப்புகுகிறதோ ? என்று கலங்கிக் கொண்டு போரும்; ஸித்₃தே₄ாபாயாந்தர்க்க₃த(தத்வ)நிஷ்ட₂ன் ஸித்₃த₄ஸாத₄நநிஷ்கர்ஷம் பண்ணிக்கொண்டு போரும்.

## இருநூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

திருச்சங்கணித்துறைநம்பிக்கு ப₄ட்டர் அருளிச்செய்த வார்த்தை; - முமுக்ஷுசேதநக₃தமான ஜ்ஞாநம் த்ரிவித₄ம் ; உபாஸநாத்மகஜ்ஞாநமென்றும், ப்ரபத₃நாத்மகஜ்ஞாநமென்றும், ஸ்வரூபயாத₂ாத்ம்யஜ்ஞாநமென்றும். உபாஸநாத்மக ஜ்ஞாந முடையவன், உபாஸ்யன் பக்கலிலே தனக்குண்டான வ்ருத்தியில் உகப்பை அவனுக்கும் தனக்குமென்றிருக்கும்; ப்ரபத₃நாத்மக ஜ்ஞாநமுடையவன் ப்ரபத்தவ்யன்பக்கலிலே தனக்குண்டான வ்ருத்தியில் உகப்பை அவனுக்கே யென்றி

---

படுமோ' என்று கலங்கிக்கொண்டிருப்பர். பாக₃தஸ்வீகாரநிஷ்ட₂ர்க ளான மூன்றுவதுவகையினரோவெனில், "ப்ராப்தாவும் ப்ராபகனும், ப்ராப்திக்குகப்பானும் அவனேயாயிருக்க, அவன் முகமலர்த்தியையே பேருகக்கொண்டு மார்பிலே கையை வைத்து உறங்க அமையும்" என்று கவலையும் கலக்கமுமற்று ப்ராப்யநிஷ்கர்ஷமும், ஸித்₃த₄ ஸாத₄நநிஷ்கர்ஷமும் பண்ணிக்கொண்டிருப்பர்.

### இருநூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

மோக்ஷமடையவிரும்பும் சேதனர்களுடைய அறிவு மூன்றுவகைப் பட்டிருக்கும். (1) ஸ்வப்ரவ்ருத்தி ரூபமான கர்மஜ்ஞான யோக₃ங்களை அங்க₃மாகக்கொண்டதான ப₄க்திரூபமான உபாஸனமென்னும் அறிவு; (2) நீயே உபாயமாவாயாக என்று ப்ரார்த்திக்கும் ப்ரபத்தி என்னும் ஶரணாக₃திரூபமான அறிவு. (3) எம்பெருமான் உடையவன், நாம் அவனுக்கு உடைமை என்னும் ஸ்வரூபத்தைப்பற்றிய உண்மை அறிவு. முதல்வகைப்பட்டவன் தன் முயற்சியில் ஈடுபடுகையாலே தன்னுடைய ப₄க₃வத₃நுப₄வகைங்கர்யங்களினால் எம்பெருமானோடு தனக்கும் ஆநந்த₃முண்டாவதாக நினைத்திருப்பான். இரண்டாவது வகைப்பட்டவன் தனக்காகவான தன் முயற்சியினின்றும் நீங்குகை யாகிற ஶரணாக₃தியில் ஊன்றியவனாகையாலே "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" [திருவாய் 2·9·4] "உனக்கே நாமாட்செய்வோம்" [திருப்பாவை 29] என்கிறபடியே, தாம்செய்யும் கைங்கர்யத்தினால் எம்பெருமானுக்குண்டாகும் உகப்பையே உத்₃தே₃ஶ்யமாகக்கொண்டி

ருக்கும்; ஸ்வரூபயாதா₂த்ம்ய ஜ்ஞாநமுடையவன் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞன்பக்கலுண்டான வ்ருத்திலயே ஸ்வயம் ஸ்வகார்ய மென்றிருக்கும். இவற்றுக்கு உதா₃ஹரணம்; பதிவ்ரதை மாங்க₃ல்யஸூத்ரம் பெருகினால் ப₃ந்தி₄க்கும்போது ப₄ர்த்தாவினுடைய நிக்₃ரஹாநுக்₃ரஹங்களை ஹேதுவாக்காமல், தன்னுடைய அநர்த்த₂வ்ருத்தியென்று நினைத்திருக்குமாபோலே.

## இருநூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

நம்பிள்ளை வார்த்தை—ஆத்மஸமர், ப்ராணஸமர், த்₃ருஷ்டி ஸமர், ப₃ாஹுஸமர், ஆப₄ரணஸமர், ஆயுத₄ஸமர், பாத₂ஸமர், பாத₃ரேக₂ாஸமர், பாத₃ரக்ஷாஸமர், ச₂ாயாஸமர்.

---

ருப்பான். மூன்றுவதுவகைப்பட்டவன் எம்பெருமானுகப்புக்காகக் கைங்கர்யம் செய்வது தனக்கு உத்₃தே₃ஶ்யம் என்றும் நினையாமல், உடையவனுக்கு உடைமையாகிற நாம் செய்யவேண்டிய கடமை என்று கைங்கர்யம் செய்வான். மூன்றுவது மனப்பான்மைக்கு ஒரு வகையில் பின்வரும் மனப்பான்மை த்₃ருஷ்டாந்தமாகும். அதாவது:- பதிவ்ரதையான ஸ்த்ரீக்கு ஏதோவொரு காரணத்தால் மங்க₃ள ஸூத்ரம் (தாலி) அறுந்துபோய், மறுபடி கட்டிக்கொள்ள நேரும்போது "ப₄ர்த்தாவினுடைய அநுக்₃ரஹமிருந்தவரையில் அறுமலிருந்தது. அநுக்₃ரஹம் நீங்கி நிக்₃ரஹம் ஏற்பட்டதால் அறுந்துவிட்டது" என்று நினையாமல் 'நான் தவறுசெய்யாமலிருந்தவரையில் அறுமலிருந்தது; இப்போது நாம்செய்த ஏதோ ஒரு தவறான கார்யத்தால் அறுந்துவிட்டது" என்று நினைப்பாள். அதுபோலே என்றபடி.

### இருநூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

ஓர் ஆசார்யனுக்கு ஒரு ஶிஷ்யன் ஆத்மாவுக்கே ஸமமாகவும், உயிருக்கே ஸமமாகவும், கண்ணையொத்தவனாகவும், கைகளையொத்தவனாகவும் இருப்பான், அவைபோல் இனியவனாயிருக்கையாலும் கார்யங்களைச் செய்கையாலும். ஆப₄ரணத்தைப்போலேயிருப்பான், ஆசார்யனுக்குப் பொலிவூட்டுகையாலே. ஆயுத₄த்தைப்போலிருப்பான், து₃ர்ஜனவிரோதி₄களை நிரஸிக்கையாலே. பாத₃த்தை ஒத்தவனாகவும் பாத₃ரேகை₂யை ஒத்தவனாகவும், பாதரக்ஷையை ஒத்தவனாகவும் இருப்பான், அந்தரங்க₃கைங்கர்யங்களைச் செய்கையாலும், பிரித்துப்பார்க்க முடியாதபடி இருக்கையாலும், நிழலைப்போலேயிருப்பான் எப்போதும் பிரியாமல் பின்தொடருகையால்.

## இருநூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

ஸர்வேஶ்வரனைப்பற்றுமவர் ஷட்₃வித₄ர். அவர்களாகிறார்;- உத்தமன், உத்தமப்ராயன், மத்₄யமன், மத்₄யமப்ராயன், அத₄மன், அத₄மப்ராயன். உத்தமனாகிறான்—உத்க்ருஷ்டனான எம்பெருமானே தனக்கு உறவு என்றிருக்குமவன்; உத்தமப்ராயனாகிறான் — உத்க்ருஷ்டனான எம்பெருமான்பக்கல் உபஜீவ்யாம்ஶத்துக்கு விரைகட்டுமவன்; மத்₄யமனாவான்—மாத₄வைஶ்வர்யத்துக்கு மஹாஜ்ஞான தபஸ்ஸு பண்ணுமவன்; மத்₄யமப்ராயனாவான்—மாதவனைப் பெற்றும் வகுத்த வாழ்வறியாதவன்; அத₄மனாவான்-அம்மானைப் பெற்று அந்நத்தைப் பற்றுமவன்; அத₄மப்ராயனாவான் - அம்மானைப்பெற்றும் அல்லாதாரைப் பற்றுமவன்.

## இருநூற்றைம்பதாம் வார்த்தை

கந்தாடையாண்டான் வார்த்தை;-ப்ரபத்தி நிஷ்டர் மூவர்— ஶப்₃த₃ நிஷ்ட₂ரும், அர்த்த₂நிஷ்ட₂ரும், அபி₄மாநநிஷ்ட₂ரும்.

---

### இருநூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

ஸர்வேஶ்வரனைப் பற்றுமவர்கள் ஆறுவகைப்பட்டவர்கள்; இவர்கள் மேன்மேலே கீழ்ப்பட்டவர்கள். (1) உத்தமன் - மிக உயர்ந்தவனான எம்பெருமானே தனக்கு எல்லாவித₄மான உறவுமாயிருக்கையால், உபேயமும் உபாயமும் அவனே என்றிருக்கும் ப்ரபந்நன். (2) உத்தமப்ராயன்-உயர்ந்தவனான எம்பெருமானையே உபேயமாகக் கொண்டும், அவனைப்பெறுவதற்கு விதைவிதைப்பதுபோலே தன் முயற்சியில் ஈடுபடும் உபாஸகன். (3) மத்₄யமன் - எம்பெருமானையொத்த அபஹதபாப்மத்வம் முதலான எட்டு கு₃ணங்களின் ஆவிர்ப₄ாவத்தைப் பெறுவதற்கு நெடுங்காலம் ஜ்ஞானயோக₃ம் முதலான அரிய உபாயாநுஷ்ட₂ானங்களைச் செய்யும் கைவல்யநிஷ்ட₂ன். (4) மத்₄யமப்ராயன்-எம்பெருமானை அறிந்திருந்தும் மோக்ஷோபாயமறியாமல் தடுமாறுமவன். (5) அத₄மன் - எம்பெருமானைப் பெற்றும் அவனிடம் புத்ரன் பசு அன்னம் முதலான க்ஷுத்₃ரப்ரயோஜனங்களை வேண்டுமவன். (6) அத₄மப்ராயன்-எம்பெருமானைப் பற்றும் குடியில் பிறந்து அவனை அறிந்துவைத்தும், பணம் மாடு மனை பெண்டுபிள்ளைகள் முதலானவற்றுக்காக மற்ற தெய்வங்களைப் பற்றுமவன்.

## இருநூற்றைம்பத்தோராம் வார்த்தை

அஜ்ஞாநத₃ஶை கும்ப₄கர்ணனைப்போலே; தே₃வதாந்தர ப₄ஜநம் பண்ணுகிறத₃ஶை ராவணனைப்போலே; ப₄க்தித₃ஶை சூர்ப்பணகை₂யைப்போலே ; ப்ரபத்தித₃ஶை ஸ்ரீவிபீ₄ஷணாழ் வானைப்போலே என்று நம்பிள்ளை.

## இருநூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

ஸர்வயோக₃ஸந்யாஸி, ஸர்வோபாய ஶூந்யன், உண்டு உபவாஸி, ஸர்வஸங்க₃பரித்யாகி₃; திருமழிசைப்பிரான், நம் மாழ்வார், திருமங்கையாழ்வார், எம்பெருமானார்.

### இருநூற்றைம்பதாம் வார்த்தை

ப்ரபத்தி நிஷ்டர் மூவகைப்படுவர்—(1) த்₃வயஶப்₃த₃ாநுஸந்தா₄னத்தில் ஊன்றியிருப்பவர்கள் (2) த்₃வயத்தின் அர்த்த₂த்தில் ஊன்றியிருப்பவர்கள் (3) த்₃வயத்தின் அர்த்த₂த்தில் ஊன்றியிருக்கும் ஒரு பா₄க₃வதனின் அபி₄மானமே உத்தாரகம் என்றிருப்பவர்கள். இவர்கள் மேன்மேலே சிறந்தவர்கள்.

### இருநூற்றைம்பத்தோராம் வார்த்தை

அஜ்ஞானத₃ஶை — உறங்கும் கும்ப₄கர்ணன் நிலைபோன்றது. எம்பெருமானுக்கு அபசாரம் செய்து மற்ற தெய்வங்களைப்பற்றுவார் நிலை—அதையே செய்த ராவணன் நிலைபோன்றது. புருஷகாரத்தை முன்னிடாமல், ப₄க்தியாகிற தன் முயற்சியாலே எம்பெருமானைப் பெற நினைக்கும் உபாஸகர்களுடைய நிலை—அதையே செய்த சூர்ப்பணகை நிலைபோன்றது. பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றி எம்பெருமானையே உபாயோபேயமாகப் பற்றும் ப்ரபந்நர் நிலை—அதையே செய்த ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் நிலைபோன்றது.

### இருநூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

ப₄க்தியோக₃ம் முதலான எல்லா யோக₃மும் கைவந்தவராயிருந்தும் அவற்றைக் கொண்டு எம்பெருமானைப் பெறநினையாமல் எம்பெருமானையே உபாயமாகப்பற்றிய திருமழிசைப்பிரான் ஸர்வத₄ர்மபரித்யாக₃மாகிற ஸர்வயோக₃ஸந்யாஸத்தைச் செய்தவர். "கண்ணனல்லால் இல்லைகண்டீர் சரண்" [திருவாய் 9-1-10] "நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்" [திருவாய் 5.7.1]

## இருநூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

அர்த்த2லுப்3த4ன் ஸம்ஸாரி; ஜ்ஞாநலுப்3த4ன் ஶ்ரீவைஷ்ணவன்; கைங்கர்யலுப்3த4ர் முக்தநித்யர்; தா3ஸ்யலுப்3த4ன் எம்பெருமான்.

## இருநூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

ப3த்3த4ன் தன்னை ப்ரக்ருதியென்றிருக்கும்; விஷயீ தன்னைக் காமுகனென்றிருக்கும்; கேவலன் தன்னை ஸ்வதந்த்ரனென்றிருக்கும்; ஶாஸ்த்ரி தன்னை ஸர்வஜ்ஞனென்றிருக்கும்; கர்மீ தன்னை போ4க்தாவென்றிருக்கும்; ஜ்ஞாநி

---

என்றருளிய நம்மாழ்வார் ஸர்வோபாயஶூந்யர். எம்பெருமான் திருமந்த்ரோபதே3ஶம் செய்வதற்குமுன் விஷயப்ரவணராயிருந்து. உபதே3ஶம்பெற்றபின் அது நீங்கப்பெற்ற திருமங்கையாழ்வார் உண்டு உபவாஸி. த3ண்ட3பவித்ரங்கள்போன்ற கூரத்தாழ்வான், முதலியாண்டான் தவிர மற்ற அனைவரிடமும் பற்றைவிட்ட எம்பெருமானார் ஸர்வஸங்க3பரித்யாகி3.

### இருநூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

ஸம்ஸாரிகள் இவ்வுலகச் செல்வத்தை ஆசைப்படுமவர்கள். ஶ்ரீவைஷ்ணவர்கள் ஸ்வஸ்வரூப பரஸ்வரூபஜ்ஞானத்தை ஆசைப்படுமவர்கள். முக்தர்களும் நித்யர்களும் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதில் ஆசையுள்ளவர்கள். எம்பெருமான் சேதனருடைய தா3ஸ்யத்தை (அடிமையை)ப் பெறுவதில் ஆசையுள்ளவன்.

### இருநூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

ஸம்ஸாரத்தில் கட்டுண்டிருக்கும் ப3த்3த4ஜீவன் ப்ரக்ருதி கார்யமான ஶரீரமென்று தன்னை நினைத்திருப்பான். விஷயப்ரவணனாயிருப்பவன் (ஸ்த்ரீஸம்போ4க3த்தில் ஈடுபட்டவன்) தன்னைக் காமத்தை அநுப4விப்பதற்காகவே ஏற்பட்டவன் என்று நினைத்திருப்பான். எம்பெருமானுக்கு அடிமைசெய்வதை விரும்பாமல், தன் ஆத்மாவைத் தானே அநுப4விக்கும் கேவலன், தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்திருப்பான். ஶாஸ்த்ரஜ்ஞானத்திலேயே ஈடுபட்டிருக்கும் ஶாஸ்த்ரி, தன்னை எல்லாமறிந்தவனாக அஹங்காரம் கொண்டிருப்பான். வேத3த்தில் சொல்லப்பட்ட ஸ்வர்க்கா3தி3ஸாத4னமான யாக3ங்களை அநுஷ்டி2க்கும் கர்மீ, தன்னை ஸ்வர்க்கா3தி3களை அநுப4விப்பதற்கு ஏற்

தன்னை விரக்தனென்றிருக்கும்; ப₄க்திமான் தன்னை மோக்ஷ ஸாத₄நனென்றிருக்கும்; ப்ரபந்நன் தன்னை அசித்தென்றி ருக்கும்.

## இருநூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

ப₃த்₃த₄ருக்குச்சோறும், தண்ணீரும் த₄ாரகம்; a ஆஜ்ய க்ஷீராதி₃கள் போஷகத்₃ரவ்யம்; b ஸ்ரக்சந்த₃நாதி₃கள் போ₄க்₃ யம். முமுக்ஷுவுக்கு ஜ்ஞாநம் த₄ாரகம்; ஆசார்ய வைப₄வம் போஷகம் ; ப₄க₃வத்கு₃ணநுஸந்த₄ாநம் போ₄க்₃யம்: நித்ய முக்தருக்கு c மிது₂நாநுப₄வம் த₄ாரகம்; கைங்கர்யம் போஷ கம்; d ப₄க₃வந்முகோ₂ல்லாஸம் போ₄க்₃யம்.

## இருநூற்றைம்பத்தாறும் வார்த்தை

ஓராசார்யன் ஸ்ரீபாத₃த்திலே இரண்டு பேர் ஆஶ்ரயிக்க, ஒருவர் ஜ்ஞாநாதி₄கராக ஒருவர் ஸம்ப₃ந்த₄மாத்ரமேயாயிருப் பானென்? என்னில்;-பாபம் க்ஷீணமாகாமையாலே. அப்படியா னால் ஆஶ்ரயிக்கக்கூடுமோ? என்னில், பாபந்தான் த்ரிவித₄

---

பட்டவனாக நினைத்திருப்பான். ஜ்ஞானயோகத்தில் ஊன்றியவன் அதற்குறுப்பான வைராக்₃யத்தையுடையவனாகத் தன்னை நினைத்தி ருப்பான், ப₄க்தியோகநிஷ்டன் தன்னை மோக்ஷஸாத₄னம் கைவந்த வனாக நினைத்திருப்பான். எம்பெருமானையே உபாயமாகக்கொண்ட ப்ரபந்நன் மோக்ஷத்திலும் தன் ஆநந்த₃த்தை ஆசைப்படாமல், எம்பெருமானுடைய முகமலர்த்தியையே உத்₃தே₃ஶ்யமாகக்கொள்கை யாலே தன்னை அசித்தைப்போல் பரதந்த்ரனாக எண்ணி மோக்ஷ ஸாத₄னங்களில் ஈடுபடாமலிருப்பான்.

### இருநூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

ஸம்ஸாரத்தில் கட்டுண்ட ப₃த்₃த₄ருக்கும், மோக்ஷத்தை விரும்பும் முமுக்ஷுவுக்கும், மோக்ஷமடைந்திருக்கும் நித்யமுக்தருக்கும் உயிர் த₄ரிக்கச்செய்யும் த₄ாரகம், போஷிக்கச் செய்யும் போஷகம், இனி மையை விளைக்கும் போ₄க்₃யம் ஆகியவை யாவை என்று இவ் வார்த்தையில் காட்டப்படுகிறது. (a) நெய் பால் முதலியவை; (b) மாலை, சந்த₃னம் முதலியவை, (c) பிராட்டியும் பெருமாளுமான சேர்த்தியை அநுப₄விப்பது. d எம்பெருமானுடைய முகமலர்த்தி.

மாகையாலே கூடும்; எங்ஙனேயென்னில்; - ஒரு ஸ்த்ரீக்கு மூன்று ப்ரதிப₃ந்த₄கம் உண்டாமாபோலே. அவையாவன - பாணிக்₃ரஹணம் பண்ணவொட்டாத பாபமும், ப₄ர்த்தாவோடு ஸம்ஶ்லேஷிக்கவொட்டாத பாபமும், புத்ரரின்றிக்கே யிருக்கிற பாபமும்; இவை பர்வக்ரமத்தாலே போமாபோலே, அதி₄காரிக்கும் ஸமர்ப்பணவிரோதி₄க்ஷயமும், ஸாத₄நவிரோதி₄க்ஷயமும், ப்ராப்யவிரோதி₄க்ஷயமும் என்றிவை மூன்றும் பர்வக்ரமத்திலே போகவேண்டுமாகையாலே.

## இருநூற்றைம்பத்தேழாம் வார்த்தை

வைஷ்ணவனென்றும், ஏகாந்தியென்றும், பரமைகாந்தியென்றும் ஆகாரம் மூன்று. வைஷ்ணவனாகிறான் - தே₃வ

---

### இருநூற்றைம்பத்தாறும் வார்த்தை

ஒரே ஆசார்யனிடம் இரு ஶிஷ்யர்கள் ஆஶ்ரயித்திருக்கும்போது, ஒருவர் அறிவில் சிறந்தவராகிறார். ஒருவர் ஆசார்யஸம்ப₃ந்த₄மாத்திரமாய், அறிவில்லாமலிருக்கிறார். இதுக்குக் காரணமென்ன? என்பது கேள்வி. இரண்டாமவர்க்குப் பாபம் கழியாமையாலே இப்படி அறிவில்லாமலிருக்கிறார் என்பது பதில். 'பாபம் கழியவில்லை என்றால் ஆசார்யனை ஆஶ்ரயித்ததுதான் எப்படிப் பொருந்தும்?' என்பது இதற்குமேல் கேள்வி. 'பாபம் மூன்றுவகைப்படுமாகையாலே பொருந்தும்' என்பது பதில். இதற்கு ஒரு த்₃ருஷ்டாந்தம்:-ஒருபெண்ணுக்கு மூன்றுவகையான பாபங்கள் அவளுடைய பேறுகளைத் தடுக்கும். அவையாவன.— (1) ஒரு பாபம் கல்யாணமாகாதபடி தடுக்கும். (2) கல்யாணமானாலும் ஒரு பாபம் கணவனுக்கும் மனைவிக்கும் மனவேற்றுமை முதலானவற்றை உண்டாக்கி அவனோடு கூடமுடியாதபடி தடுக்கும். (3) கணவனோடு கூடியிருந்தாலும், ஒருபாபம் பிள்ளை உண்டாகாதபடி தடுக்கும். இதுபோலவே சில அதி₄காரிகளுக்கு ஒருபாபம் தன்னை ஆசார்யனிடம் ஸமர்ப்பிக்கமுடியாதபடி தடுக்கும். மற்றொரு பாபம் ஆஶ்ரயித்தபின்பு இவனுக்கு அதி₄காரத்தை ஸாதி₄த்துக்கொடுக்கும் ஜ்ஞானமுண்டாகாதபடி தடுக்கும். மற்றொரு பாபம் ஜ்ஞானமுண்டான பின்பும் ப₄க₃வத்₃ப₄ாக₃வதாபசாரங்களை விளைத்து ப்ராப்யமான மோக்ஷமுண்டாகாதபடி தடுக்கும். இம்மூன்று பாபங்களும் ஆசார்ய உபதே₃ஶம், ப₄க₃வத்₃ப₄ாக₃வதாசார்யாபி₄மானம் முதலானவற்றாலே படிப்படியாகவே நீங்கும்.

தாந்தர நிவ்ருத்திபூர்வகமாக ப₄க₃வச்சே₂ஷத்வஜ்ஞாநம் பிறந்தவன்; ஏகாந்தியாகிறன் - ஸாத₄நாந்தர நிவ்ருத்திபூர்வமாக ஸித்₃த₄ஸாத₄நஸ்வீகாரம் பண்ணினவன்; பரமைகாந்தியாகிறன் - ப்ரயோஜநாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக பரமப்ராப்ய ருசி பிறந்தவன்.

## இருநூற்றைம்பத்தெட்டாம் வார்த்தை

வைஷ்ணவன் அக்ருத்யத்தைப் பாபமென்று தவிரும்; ஏகாந்தி அக்ருத்யத்தை ஸ்வரூபஹாநியென்று தவிரும்; பரமைகாந்தி அக்ருத்யத்தை ருசியில்லாமையாலே தவிரும்; "அருவருத்தஞ்சினயேல்" என்னக்கடவதிறே.

### இருநூற்றைம்பத்தேழாம் வார்த்தை

(1) மற்ற தெய்வங்களிடம் பற்றற்று, ஆத்மா எம்பெருமானுக்கே அடிமைப்பட்டது என்று அறிபவன் வைஷ்ணவன். இவனுக்கு மற்ற ப்ரயோஜனங்களிலும், மற்ற ஸாத₄னங்களிலும் ஈடுபாடு உண்டு. (2) தன் முயற்சியாகிற மற்ற ஸாத₄னங்களைக் கைவிட்டு ஸித்₃தோ₄பாயமாகிற எம்பெருமானையே உபாயமாகப்பற்றினவன் ஏகாந்தி. இவன் எம்பெருமானோடு மற்ற பயன்களையும் விரும்புகிறவன். (3) மற்ற பயன்களிலும் பற்றற்று, பரமப்ராப்யமான ப₄க₃வத்₃ பா₄க₃வத பரார்த்த₂கைங்கர்யத்திலேயே ஈடுபட்டு அதைப்பெறுவதற்கு எம்பெருமானையே உபாயமாகக்கொண்டவன் பரமைகாந்தி.

### இருநூற்றைம்பத்தெட்டாம் வார்த்தை

ஶாஸ்த்ரத்தில் விலக்கப்பட்ட கார்யத்தைச் செய்வது பாபமாகையாலே நாம் விரும்பும் ஸாத்₄யங்களையும், அவற்றுக்கு ஸாத₄னங்களையும் தடுத்துவிடும் என்னும் எண்ணத்தாலே வைஷ்ணவன் அக்கார்யத்தைச் செய்யாதிருப்பான். எம்பெருமானையே உபாயமாகப் பற்றிய ஏகாந்தி "எம்பெருமானுடைய ஆணையாகிற ஶாஸ்த்ரத்தில் விலக்கப்பட்ட கார்யத்தைச் செய்வது நம் ஸ்வரூபத்துக்குத் தகாது" என்னும் எண்ணத்தாலே அதைச் செய்யாதிருப்பான். பரமைகாந்தியோவெனில் எம்பெருமானையே ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் கொண்டவனாகையாலே முற்கூறிய கார்யத்தில் ருசியில்லாமையாலேயே அதைச் செய்யாமலிருப்பான். "அன்னமென்னடையினார் கலவியை அருவருத்தஞ்சினயேல்" [பெரிய திருமொழி 9-7-2] என்று திருமங்கையாழ்வாரும் பரமைகாந்தியின் நிஷ்டை₂யைக் காட்டினார்.

## இருநூற்றைம்பத்தொன்பதாம் வார்த்தை

வைஷ்ணவன் க்ருத்யத்தை அதி₄காரிஸம்பத்திக்காகச் செய்யும்; ஏகாந்தி க்ருத்யத்தை லோகஸங்க்₃ரஹதயா கர்த்தவ்யமென்று செய்யும்; பரமைகாந்தி க்ருத்யத்தை க்ருபையாலே செய்யும்.

## இருநூற்றறுபதாம் வார்த்தை

வைஷ்ணவன் கைங்கர்யத்தை ஸாத₄நமென்று செய்யும்; ஏகாந்தி கைங்கர்யத்தைக் காலக்ஷேபமென்று செய்யும்; பரமைகாந்தி கைங்கர்யத்தை ராக₃ப்ராப்தமென்று செய்யும்.

## இருநூற்றறுபத்தோராம் வார்த்தை

ஶாந்தனுக்கு ஸத்வோத்₃ரேகஹேது - ஸத்வோத்தருடைய ஶரீராஹார நிரூபணம் பண்ணிச் சருகுதிரட்டாத ஸம்யக்ஜ்ஞாந நிஷ்டை₂; ஸ்வரூபஜ்ஞனுக்கு ஸ்வவர்ணாநுகூல

---

**இருநூற்றைம்பத்தொன்பதாம் வார்த்தை**

ஶாஸ்த்ரத்தில் விதி₄க்கப்பட்ட கார்யத்தை, தன் இஷ்டத்தைப் பெறுவதற்கு அதைச் செய்தாலேயே தகுதி ஏற்படும் என்னும் எண்ணத்தினால் செய்வான் வைஷ்ணவன். எம்பெருமானையே உபாயமாகப் பற்றின ஏகாந்தி அக்கார்யம் இவனுக்கு உபாயமல்லாமையாலே விடக்கூடியதாயிருந்தாலும், தன்னைப் பார்த்துத் தகுதியில்லாத மற்றவர்களும் விட்டு நாஶித்துப்போவார்களே என்னும் எண்ணத்தாலே அதை அநுஷ்டி₂ப்பான். எம்பெருமானையே உபேயமாகவும் உபாயமாகவும் கொண்ட பரமைகாந்தி லோகக்ஷேமம் ஏற்படும் என்னும் கருணையாலே ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்ட கார்யங்களைச் செய்வான்.

**இருநூற்றறுபதாம் வார்த்தை**

வைஷ்ணவன் கைங்கர்யத்தைத் தான் விரும்பும் ப₂லத்துக்கு ஸாத₄னமாகக் கருதிச் செய்வான். எம்பெருமானையே உபாயமாகக் கொண்ட ஏகாந்தி கைங்கர்யத்தைப் போதுபோக்காகக் கருதிச்செய்வான். மற்ற ப₂லன்களிலும் ஆசையிருக்கையாலே, இவனுக்குக் கைங்கர்யத்தில் மிகுந்த ஈடுபாடு இராது என்று கருத்து. பரமைகாந்தி கைங்கர்யமே பரமப்ராப்யம் என்று அறிந்தவனாகையாலே, மிகவும் ஆசையுடன் அதைச் செய்வான்.

மான ஸுஹ்ருத்₃த₃ர்ஶநமே ஸர்வாபேக்ஷிதம்; ஸ்வரக்ஷணத்துக்கு, பரேச்ச₂ாநுகூலமான ஸ்வஶேஷத்வமே ஸ்வரூபோபாயயுக்தம்; ஸத்வஸ்த்த₂னுக்கு ஸலக்ஷ்மீகாநுப₄வஸாத₄நம் ஸத்வஸ்'த₂விஷய லக்ஷ்மீக₃த ஸம்ப₃ந்த₄ஸாரஜ்ஞாநமே.

## இருநூற்றறுபத்திரண்டாம் வார்த்தை

ஶாந்தனுகிறன் சதுர்வித₄ாஹங்காரங்கழிந்தவன்; அவையாவன - தே₃ஹத்தில் அஹங்காரமும், ஸ்வரூபத்தில் அஹங்காரமும், உபாயத்தில் அஹங்காரமும், உபேயத்தில் அஹங்காரமும்; தே₃ஹத்தில் அஹங்காரமாவது-தே₃ஹத்தைத் தானாக நினைக்கையும்,தே₃ஹாநுப₃ந்தி₄களான பதா₂ர்த்த₂ங்களிலே மமதாபு₃த்₃தி₄ பண்ணுகையும், தே₃ஹாந்தராநுப₄வத்தில் புருஷார்த்த₂பு₃த்₃தி₄பண்ணுகையும்.

---

### இருநூற்றறுபத்தோராம் வார்த்தை

அடுத்த இருவார்த்தைகளில் ஶாந்தனுடைய லக்ஷணம் சொல்லப்படுகிறது. அத்தகைய ஶாந்தனுக்கு ஸத்வகு₃ணம் வளர்வதற்குக் காரணம் யாதெனில்: ஸத்வகு₃ணம் மிக்கவர்கள் தங்களுடைய ஶரீரத்துக்கு எந்த உணவைக் கொள்கிறார்கள் என்பதை ஆராய்ந்து, சருகு போன்ற (அஸாரமான) ராஜஸதாமஸாஹாரங்களை விலக்கி, ஸாத்விகமான ஆஹாரத்தையே உண்டு, ''ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்'' [கீ₃தை 14-17] [ஸத்வகு₃ணத்தால் ஜ்ஞானம் உண்டாகிறது] என்கிறபடியே ஜ்ஞானம் வளரப்பெற்று, அந்த உண்மையறிவிலேயே ஊன்றியிருக்கை மேன்மேலும் ஸத்வம் வளருவதற்குக் காரணமாகும். தன் ஸ்வரூபத்தை அறிந்தவனுக்கு, தம் தம் வர்ணாஶ்ரமங்களுக்கு அநுகூலமான ஆசாரங்களை உடைய நல்லோர்களைக் காண்பதே எல்லா விருப்பங்களையும் பெற்றதற்கு ஸமானமாகும். தம்மை ரக்ஷித்துக்கொள்வதற்கு—எம்பெருமானுடைய திருவுள்ளத்துக்கு அநுகூலமாயிருக்கும் தன் ஶேஷத்வத்தை அறிந்து 'சாதகம் போல் நாதன் தனதருளே பார்த்திருப்'பதே தன் ஸ்வரூபமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கும், உபாயமான எம்பெருமானுக்கும் பொருந்தியது. ஸத்வகு₃ணத்திலே ஊன்றியிருப்பவனுக்கு, பிராட்டியும் பெருமாளுமான சேர்த்தியை அநுப₄விப்பதற்கு ஸாத₄னமாயிருப்பது—ஸத்வகு₃ணத்தில் ஊன்றியிருப்பவர்கள் விரும்புவதாய், பெரியபிராட்டியாரிடம் உள்ளதான புருஷகாரத்வமாகிற ஸம்ப₃ந்த₄த்தின் ஸாரத்தை அறிவதேயாகும்.

# இருநூற்றறுபத்துமூன்றும் வார்த்தை

இது கழிகையாவது — தே₃ஹத்தில் ஆத்மபு₃த்₃தி₄நிவ்ருத்தியும், தே₃ஹாநுப₃ந்தி₄யான பதா₃ர்த்த₂ங்களில் மமதாபு₃த்₃தி₄நிவ்ருத்தியும், தே₃ஹாந்தராநுப₄வத்தில் புருஷார்த்த₂பு₃த்₃தி₄நிவ்ருத்தியும். ஸ்வருபத்தில் அஹங்காரமாவது-தே₃ஹத்தை அண்டைகொண்டு ஸ்வரூபத்தை உறுமுதல், ஸ்வரூபத்தை அண்டைகொண்டு தே₃ஹத்தை உறுமுதல் செய்கை; இது கழிகையாவது - அவன் வடிவே வடிவாகையாலே பரஸ்வரூபத்துக்குள்ளே ஸ்வஸ்வரூபம் விளங்குகை. உபாயத்தில் அஹங்காரமாவது - ஸ்வக₃தஸ்வீகாரத்தில் உபாயபு₃த்₃தி₄பண்ணுகை; இது கழிகையாவது - ஸ்வக₃தஸ்வீகாரத்

---

**இருநூற்றறுபத்திரண்டாம் வார்த்தை,**

**இருநூற்றறுபத்துமூன்றும் வார்த்தை.**

இவ்விரண்டு வார்த்தையும் ஒன்றுகவே இருக்கவேணும். நாலு வகைப்பட்ட அஹங்காரமும் கழியப்பெற்றவனே முன்வார்த்தையில் ஶாந்தன் எனப்படுகிருன். அவ்வஹங்காரங்களும், அவை கழிகையுமாவது:—(1) தே₃ஹத்தில் அஹங்காரம். அதாவது-தே₃ஹத்தையே ஆத்மாவாக நினைக்கையும், தே₃ஹத்தோடு தொடர்புள்ள பெண்டு பிள்ளைகள், மாடுமனை முதலானவற்றில் தன்னுடையது என்னும் நினைவைக்கொள்ளுகையும், ஸ்த்ரீதே₃ஹம் முதலான மற்ற தே₃ஹங்களை அநுப₄விப்பதைப் பயனாக நினைக்கையுமாகும். இது கழிகையாவது-இந்த நினைவுகள் நீங்குகை. (2) ஸ்வரூபத்தில் அஹங்காரம். அதாவது-தே₃ஹத்தைப்பற்றிநின்று ஜ்ஞானைகாகாரமான தன் ஸ்வரூபத்தோடு எதிரிடும் ஸம்ஸாரிநிலையும், ஜ்ஞானைகாகாரமான தன் ஸ்வரூபத்தைப் பற்றிநின்று தே₃ஹம் அடியோடு நீங்குவதற்கு முயலும் கேவலனின் நிலையும். இது கழிகையாவது—எம்பெருமான் தன் ஸங்கல்பத்தாலேயே தன்னைப்போலே ஜீவனை ஜ்ஞானைகாகாரனாக அநாதி₃காலமாகப் படைத்திருக்கையாலே, பரமாத்மஸ்வரூபத்துக்கு ப்ரகாரமாகத் தன் ஸ்வரூபத்தை அநுஸந்தி₄க்கையேயாகும். (3) உபாயத்தில் அஹங்காரம். அதாவது—எம்பெருமானைத் தான் ஶரணமடைவதாகிற ஸ்வீகாரத்தை உபாயமாக நினைக்கை. இது கழிகையாவது - தான் பற்றின பற்றும் அவனுடைய ஸ்ருஷ்டி, அவதாரம்

தில் உபாயபு₃த்₃தி₄யை த்யஜித்து, பரக₃தஸ்வீகாரத்துக்கு விஷயனாகை. உபேயத்தில் அஹங்காரமாவது-நாம் அவனுக்கு அடிமை செய்கிறோமென்றிருக்கை; இது கழிகையாவது - தன் கையாலே தன் மயிரை வகிர்ந்தால் அந்யோந்யம் உபகார ஸ்ம்ருதி கொண்டாட வேண்டாதாப்போலே அவயவபூ₄தனான ஆத்மா அவயவியான எம்பெருமானுக்கு அடிமைசெய்கிறான் என்றிருக்கை.

## இருநூற்றறுபத்துநாலாம் வார்த்தை

ப₃த்₃த₄ன் அவித்₃யாதீ₄நன், ஶாஸ்த்ரி புண்யபாபாதீ₄நன், கேவலன் ஸ்வஸ்வரூபாதீ₄நன், முமுக்ஷு ப₄க₃வத₃

---

முதலான முயற்சிகளாலே ஏற்பட்டது என்று உணர்ந்து, தான் பற்றும்பற்று உபாயம் என்னும் எண்ணத்தைவிட்டு, எம்பெருமான் தன்னைப் பற்றும் பற்றே உபாயம் என்று உணர்ந்து, அந்த ஸ்வீகாரத்துக்கு இசைந்திருக்கை. (4) உபேயத்தில் அஹங்காரம், அதாவது–நாம் அவனுக்கு அடிமைசெய்கிறோம் என்று அபி₄மானித்திருக்கை. இது கழிகையாவது—தன் கையாலே தன் தலைமயிரைச் சீர்திருத்தினால், கைக்குத்தானே தனக்குக் கையோ நன்றி செலுத்த வேண்டிய அவஶ்யம் இல்லாததுபோலே, எம்பெருமானுடைய அவயவமான ஜீவாத்மா அவயவியான எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வது கடமையேயொழிய, அபி₄மானித்து நன்றியை எதிர்பார்க்கும் விஷயமல்ல என்று நினைத்திருக்கை.

### இருநூற்றறுபத்துநாலாம் வார்த்தை

ஸம்ஸாரத்தில் கட்டுண்ட ப₃த்₃த₄ஜீவன் தன்னுடைய அஜ்ஞானத்தாலே பாபங்களை வளர்த்து மேன்மேலே ஸம்ஸாரத்தில் அழுந்துவதாகிற ப₂லனைப்பெறுவான். வெறும் ஶாஸ்த்ரஜ்ஞானத்தை உடையவன் ஶாஸ்த்ரத்தில் சொன்ன புண்யங்களை அநுஷ்டி₂த்து, பாபத்தை விலக்கி,தான் விரும்பும் ஸ்வர்க்க₃ாதி₃புருஷார்த்த₂ங்களைப் பெறுவான். கேவலன் ஜ்ஞானாகாரமான தன் ஸ்வரூபத்தையே சிந்தித்து, கைவல்ய மோக்ஷத்தைப் பெறுவான். மோக்ஷமடைய விரும்பி ஸாத₄னங்களை அநுஷ்டி₂ப்பவன் அந்த ஸாத₄னங்களாலே ப்ரீதியடைந்த எம்பெருமானைக்கொண்டு மோக்ஷத்தைப் பெறுவான். ஓர் ஆசார்யனை அடைந்து த்₃வயோபதே₂ஶம் பெற்று எம்பெருமானை ஶரணமடைந்த

தீ₄நன், ப்ரபந்நன் ஆசார்யாதீ₄நன், ப்ரபத்திநிஷ்ட₂ன் ததீ₃யாதீ₄நன்.

## இருநூற்றறுபத்தஞ்சாம் வார்த்தை

ப்ரபந்நத்வமாவது-a (களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்) என்றும், b (வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேன்) என்றும், c (அருள் நினைந்தே அழுங்குழவியதுவே போன்றிருந்தேன்) என்றும், d (அருளே புரிந்திருந்தேன்) என்றும், e (கடைத்தலையிருந்து வாழும்) என்றும், f (படியாய்க்கிடந்து) என்றும், g (அவ்வருளல்லன அருளுமல்ல) என்றும், h (நல்லானருளல்லால் நாமநீர் வையகத்துப் பல்லாரருளும்பழுது) என்றும், i (துணியேனினி நின்னருளல்லதெனக்கு) என்றும், j (உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்) என்றும், k (சேமஞ் செங்கோனருளே) என்றும், l (அவன் செய்யுஞ்சேமம்) என்றும், m (அவன் செய்வன செய்துகொள்ள) என்றுமிருக்கை.

## இருநூற்றறுபத்தாறும் வார்த்தை

முமுக்ஷுத்வமாவது-a (அடியேற்கு வானுலகம் தெளிந்தே என்றெய்துவது) என்றும், b (அடியார்கள் குழாங்களை -

---

ப்ரபந்நன் அவ்வாசார்யாபி₄மானத்தாலே பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களாகிற பரமபுருஷார்த்த₂த்தைப் பெறுவான். முற்கூறிய ப்ரபத்தியிலே ஊன்றியிருப்பவன் இங்கும் அங்கும் ப₄ாக₃வதர்களுடைய முகமலர்த்திக்கு உறுப்பான கைங்கர்யமே பரமப்ராப்யம் என்று உணர்ந்து அவர்களுடைய அபி₄மானத்தாலே அதைப் பெறுவான்.

### இருநூற்றறுபத்தஞ்சாம் வார்த்தை

இவ்வார்த்தை ப்ரபந்நனின் தனித்தன்மையை ஆழ்வார்களின் பாசுரங்களைக்கொண்டு திருபிக்கிறது. அப்பாசுரங்களாவன — (a) [திருவாய் 5-8-8] (b) [பெருமாள்திரு 5-5] (c) [பெருமாள்திரு 5-1] (d) [பெரியாழ்திரு 5-4-1] (e) [திருமாலை 38] (f) [பெருமாள்திரு 4-9] (g) [திருவாய் 9-9-6] (h) [முதல்திருவ 15] (i) [பெரியதிரு 11-8-8] (j) [திருவாய் 5-8-3] (k) [திருவிருத்தம் 27] (l) [திருவாய் 7-5-10] (m) [பெரியாழ்வார்திரு 3-7-9]

உடன்கூடுவதென்றுகொலோ) என்றும், c (கூவிக்கொள்ளுங் காலம் இன்னங்குறுகாதோ) என்றும், d (மாகவைகுந்தம் காண்பதற்கென் மனம் ஏகமெண்ணும்) என்றும், e (சென்றுளெந்நாள்) என்றும், f (முகப்பே கூவிப் பணிகொள்ளாய்) என்றும், g (உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ) என்றும், h (நின்மாதாள் சேர்ந்து நிற்பதென்ஞான்றுகொலோ) என்றும், i (மங்கவொட்டு) என்றுமிருக்கை.

## இருநூற்றறுபத்தேழாம் வார்த்தை

a காட்டுத்தீ சூழின் போக்கடியற்ற ம்ருக₃ாதி₃களைப் போலே, தாபத்ரயாத்மகமான ஸம்ஸாராநுப₄வபீ₄தரான முமுக்ஷுக்களுக்கு ஆசார்யன் முன்னிலையாக ப்ரபத்த்யநுஷ்டா₂ந ப்ரகாரஞ் சொல்லுகிறது; - ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் ராவணனைக் குறித்து, b "ப்ரதீ₃யதாம் தா₃ஶரதா₂ய மைதி₂லீ" என்று கொண்டு பெருமாள் திருவடிகளிலே பிராட்டியை ஸமர்ப்பி என்றருளிச்செய்தாற்போலே, ஆசார்யனும் முமுக்ஷுவைக்

---

### இருநூற்றறுபத்தாறும் வார்த்தை

a [பெரியதிரு 6-3-8] b [திருவாய் 2-3-10] c [திருவாய் 6-9-3] d [திருவாய்9-3-7] e [திருவாய்5-8-3] f [திருவாய்8-5-7] g [திருவாய் 5-8-10] h [திருவாய் 3-2-2] i [திருவாய் 10-7-10] இவ்வார்த்தை மேலே எடுத்த தி₃வ்யப்ரப₃ந்த₄ப் பாசுரங்களைக்கொண்டு மோக்ஷமடைய விரும்பும் முமுக்ஷுக்களின் தனித்தன்மையை விளக்குகிறது.

### இருநூற்றறுபத்தேழாம் வார்த்தை

a காட்டுத்தீ சூழ்ந்தபோது தப்பிப்போக வழியில்லாத காட்டு மிருகங்களைப்போலே, ஆத்₄யாத்மிகம் (தே₃ஹத்தைப்பற்றிவரும் இன்பதுன்பம் முதலானவை), ஆதி₄பௌ₄திகம் (மற்ற பூ₄தங்களால் ஏற்படும் இடர்கள்), ஆதி₄தை₃விகம் [தெய்வச்செயலான இடிமுதலானவற்றால் வரும் இடர்கள்] என்னும் மூன்றுவகைப்பட்ட தாபங்கள் நிறைந்த இவ்வுலக வாழ்க்கையில் இடருற்று பயந்துநடுங்கி மோக்ஷமடையவிரும்பும் சேதனர்களுக்கு ஆசார்யனைப் புருஷகாரமாகக் கொண்டு ஶரணாக₃தியை அநுஷ்டி₂க்கும் முறையைச் சொல்லுகிறது விபீ₄ஷணஶரணாக₃தி ப்ரகரணம். b [ரா-யு 14] தா₃ஶரதா₂குமாரனிடம்

குறித்து, 'இவ்வாத்மாவை எம்பெருமான் திருவடிகளிலே ஸமர்ப்பி' என்றும், ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள்திருவடிகளை அடைகைக்கு c "கத₂ம் நு ராமாத் ப₄விதா ப₄யம் ந:" என்றுகொண்டு ப்ரஹஸ்தாதி₃ வாக்யதோ₃ஷ தூ₃ஷிதமான ராவணன்ஹ்ருத₃யம்போலே, ஆசார்யன் ப்ரஸாதி₃த்த வார்த்தையும் ப்ராக்ருத ஸஹவாஸதோ₃ஷதூ₃ஷிதமான முமுக்ஷுவின் ஹ்ருத₃யத்தில் தொங்காது; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடிகளை அடைகைக்கு d "வத்₄யதாமேஷ தீவ்ரேண த₃ண்டே₃ந ஸசிவைஸ்ஸஹ" என்றுகொண்டு மஹாராஜர் சொன்ன வார்த்தைக்கு ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் ஹ்ருஷ்டராய் நின்றாற்போலே, முமுக்ஷுவும் ஒரு e ஜ்ஞாநாதி₄கர் நெருக்கிச்சொன்ன வார்த்தைக்கு அதிப்ரீதனாயிருப்பான்; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடிகளை அடைகைக்கு f "பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச த₄நாநி ச" என்று பரிக்₃ரஹமானவற்றை விட்டாற்போலே, முமுக்ஷுவும் ப₄க₃வத்₃ விஷயம் சொல்லப்போகாத தே₃ஶத்தை விட்டுப்போவான்; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடிகளை அடைகைக்கு g "க₂ஸ்த₂ ஏவ வ்யதிஷ்ட₂த" என்று g₂ நிராலம்ப₃னாய் நின்றாற்போலே, முமுக்ஷுவும் எம்பெருமான் திருவடிகளை அடைகைக்கு உபாயாந்தரஶூந்யனாயிருப்பான்; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடிகளை அடைகைக்கு h "த்யக்த்வா

---

மைதிலி ஸமர்ப்பிக்கப்படட்டும். c [ரா-யு 14-8] ராமனிடமிருந்து ராக்ஷஸர்களான நமக்கு எப்படி பயமுண்டாகும்—என்னும் ப்ரஹஸ்த வாக்யம் முதலான துர்மந்திரிவாக்யங்களாகிற தோ₃ஷங்களாலே கெடுக்கப்பட்ட ராவணன் நெஞ்சுபோலே, ப்ரபந்நனுக்கும் ப்ரக்ருதி வஶப்பட்டவர்களுடைய ஸஹவாஸத்தாலே நெஞ்சு கெடுக்கப்பட்டு ஆசார்யனுடைய வார்த்தை நெஞ்சில் ஒட்டாது என்றபடி. d [ரா-யு 17-27] இந்த விபீ₄ஷணன் மந்த்ரிகளோடுகூட கடுமையான த₃ண்ட₃னை அளிக்கப்பட்டுக் கொல்லப்படட்டும். e பேரறிவாளர்கள் கோபித்துச் சொன்ன வார்த்தை. f [ரா-யு 19-5] — "என்னால் லங்கையும், நண்பர்களும், செல்வங்களும் கைவிடப்பட்டன" இது விபீ₄ஷணவாக்யம். g [ரா-யு 17-8]—"விபீ₄ஷணன் ஆகாயத்திலேயே நிலைநின்றான்" g₂ ஆத₄ாரமில்லாதவனாய். h [ரா-யு 17-14]— "மக்க

புத்ராம்ஶ்ச தா₃ராம்ஶ்ச ராக₄வம் ஶரணம் க₃த:" என்று h₂ அநுபாதே₃யங்களை விட்டுப் போந்தாற்போலே, முமுக்ஷுவும் எம்பெருமான் திருவடிகளை அடைகைக்கு விலங்கான விரோதி₄களை விடுவான்; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடிகளை அடைகைக்கு i "ஆஜகா₃ம முஹூர்த்தேந யத்ர ராமஸ் ஸலக்ஷ்மண:" என்றுகொண்டு பெருமாள் எழுந்தருளியிருந்த தே₃ஶமே உகந்து வந்தாற்போலே, முமுக்ஷுவும் எம்பெருமான் உகந்தருளின தி₃வ்யதே₃ஶமே தனக்குத் தஞ்சமாகப் பற்றுவான்; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடியடைகைக்கு j "நிவேத₃யத மாம் க்ஷிப்ரம்" k "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட₂" என்கிறவிடங்களில் ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் ஒருவனுமே ப்ரஸ்துதனாகக் கூடவந்த முதலிகளுக்கு இழவுபேறு ஒத்தாற்போலே, முமுக்ஷுக்களுக்கு எம்பெருமான் திருவடிகளிலே ஆசார்யன் பண்ணின ப்ரபத்தியே அமையும்; ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான் பெருமாள் திருவடிகளை அடைகைக்கு, l "ததஸ்து ஸுக்₃ரீவவசோ நிஶம்ய தத் ஹரீஶ்வரேணாபி₄ஹிதம் நரேஶ்வர:। விபீ₄ஷணேநாஶு ஜகா₃ம ஸங்க₃மம் பதத்ரிராஜேந யதா₂ புரந்த₃ர: ।।" என்று மஹாராஜர் முன்னிலையாகப் பெருமாள் ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமாளைக் கைக்கொண்டருளினாற்போலே, முமுக்ஷுவையும் ஆசார்யன் முன்னிலையாக எம்பெருமான் கைக்கொண்டருளும்;

---

ளையும் மனைவிமாரையும் கைவிட்டு ராக₄வனை ஶரணமடைந்தேன்" இதுவும் விபீ₄ஷணனின் வாக்யம். h₂ கைக்கொள்ளத் தகாதவைகள். i [ரா-யு 17-1]—"லக்ஷ்மணனோடு ராமன் எழுந்தருளியிருந்த இடத்துக்கு ஒரு முஹூர்த்தகாலத்தில் வந்தான் விபீ₄ஷணன்" j [ரா-யு 17-15]—"என்னை விரைவில் ராக₄வனுக்குத் தெரிவியுங்கள் (அல்லது அடைவியுங்கள்)" இதுவும் விபீ₄ஷண வாக்யம். k [ரா-யு 18-34]—"வாநர அரசனான ஸுக்₃ரீவனே! இவ்விபீ₄ஷணனை அழைத்துவா" இது ராமவாக்யம். l [ரா-யு 18-39]—"அந்த ஸுக்₃ரீவனுடைய வார்த்தையைக்கேட்டு அதற்குப்பின் மனிதர் தலைவரான ராமபிரான் வாநரர் தலைவரான ஸுக்₃ரீவனாலே சொல்லப்பட்ட விபீ₄ஷணாழ்வானோடு சேர்த்தியை இந்திரன் புள்ளரையனான க₃ருட₃னோடு சேர்த்தியையடைந்ததுபோல் அடைந்தார்".

m இப்படி கைக்கொண்டருளப்பட்ட ப்ரபந்நன் ஸம்ஸார மண்டலத்திலேயிருக்கும் இருப்பை, பிராட்டி ராவணபவநத்திலே அசோகவநிகையிலே இருந்து காட்டினாள். (1) பிராட்டிக்கு ராவண ஸம்பந்தம்போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கு உடம்போட்டை ஸம்பந்தம்; (2) பிராட்டிக்கு ஏகாக்ஷீ ஏககர்ணிகளைப்போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கு அஹங்கார மமகாரங்கள்; (3) பிராட்டியைப் பெருமாள் திருவடிகளில் நின்றும் பிரிக்கைக்குத் தோற்றின மாரீசனைப்போலே வைஷ்ணவனுக்கு (முடிகைக்குத் தோற்றின) விஷயப்ராவண்யம் ; (4) பிராட்டியைத் தர்ஜநபர்த்ஸநாதிகளைப் பண்ணின ராக்ஷஸிகளோட்டை ஸம்பந்தம்போலே, வைஷ்ணவனுக்கும் புத்ரமித்ராதிகளோட்டை ஸம்பந்தம்; (5) பிராட்டிக்குத் திருவடிதோற்றரவுபோலே வைஷ்ணவனுக்கும் ஆசார்யன் தோற்றரவு; (6) பிராட்டிக்குத் திருவடி வர்ஷித்த ராமகுணம்போலே வைஷ்ணவனுக்கும் ஆழ்வார்களருளிச்செயல் ; (7) பிராட்டிக்குத் திருவாழிமோதிரத்தின் வரவுபோலே ஸ்ரீவைஷ்ணவனுக்கும் ஆசார்யன் ப்ரஸாதித்த குருபரம்பரை; (8) பிராட்டிக்குத் திருவாழிமோதிரம்போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஆசார்யன் ப்ரஸாதித்த திருமந்த்ரம்; (9) பிராட்டிக்குத் திருவாழிமோதிரத்தைப் பார்த்து அவ்வழியாலே அணிவிரலைக் குறித்து, அவ்வழியாலே திருக்கை தொடக்கமாக, அணைத்த திருத்தோள் திருமேனியெல்லாம் அணைத்து தரித்தாற்போலே, ஸ்ரீவைஷ்ணவனும் ஆசார்யன் ப்ரஸாதித்த திருமந்த்ரத்தில் அர்த்தாநுஸந்தாநத்தோடே தரித்திருப்பான்; (10) பிராட்டிக்கு இளையபெருமாள்திறத்தில் அருளிச்செய்த வார்த்தை பெருமாள் திருவடிகளை அகற்றிற்றுபோலே வைஷ்ணவனுக்கும் பாகவதாபசாரம்;"க்ஷிபாமி,ந க்ஷமாமி" இவற்றுக்கு விஷயமாய் எம்பெருமான்திருவடிகளை அகற்றும்; (11) பிராட்டிக்கு விரோதிகளான ராவணாதிகளைத் துணித்து, பெருமாள்

(m) இந்த வார்த்தையின் பிற்பகுதி ஏற்கனவே 235-ம் வார்த்தையில் சில மாறுதல்களுடன் வந்துள்ளது. அங்கு கண்டுகொள்வது.

பிராட்டியைத் திருவயோத்₄யையேறக்கொண்டு எழுந்தருளி ஞற்போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கும் விரோதி₄யான ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தை ஸவாஸநமாக அறுத்து இந்த ஆத்மாவை எம்பெருமான் பரமபத₃த்தேறக் கொண்டுபோய் நித்யமுக்தரோ டொக்க நித்யகைங்கர்யத்தைக் கொண்டருளும்; இப்பத்து வார்த்தையும் அநுஷ்ட₂ாநபர்யந்தமாகவுடைய ஸ்ரீவைஷ்ண வனுக்கு இவ்விடந்தான் பரமபத₃ம்.

## இருநூற்றறுபத்தெட்டாம் வார்த்தை

எம்பெருமான் பக்கலிலே அபராத₄ம்பண்ணினுல் ஐந்மாந் தரத்திலே ஈடேறலாம்; ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கலிலே அப ராத₄ம் பண்ணினுல் ஐந்மாந்தரத்திலுமில்லை.

## இருநூற்றறுபத்தொன்பதாம் வார்த்தை

ஆண்டாள் வார்த்தை;-ஆசார்யன் விஷயத்தில் அபசாரம் பண்ணின ௨ நாலூராநும் ஈடேறினன்; ப₄க₃வத்₃விஷயத்தில் அபராத₄ம்பண்ணின ᏙᏗᏙᏆ-பாலனும் ஈடேறினன், ப₄ாக₃வத விஷயத்தில் அபசாரம் பண்ணினர் இன்னர் ஈடேறினரென்று இதுக்கு முன்பு கேட்டறிவதில்லை.

---

### இருநூற்றறுபத்தெட்டாம் வார்த்தை

ப₄க₃வத₃பசாரத்தைக் காட்டிலும் ப₄ாக₃வதாபசாரத்தின் கொடு மையைக் காட்டுகிறது இவ்வார்த்தை.

### இருநூற்றறுபத்தொன்பதாம் வார்த்தை

௨ நாலூரான்-க்ருமிகண்ட₂னிடம் மந்த்ரியாயிருந்து ஆசார்யனை கூரத்தாழ்வான் கண்ணிழக்கக் காரணமாயிருந்தவன். "நான் பெற்ற லோகம் நாலூரானும் பெறவேணும்" என்று கூரத்தாழ்வான் எம் பெருமானைப் பிரார்த்திக்கையாலே இவனும் ஈடேறினன். அம்ப₃ரீஷன் போன்ற ஒரொரு ப₄ாக₃வதவிஷயத்தில் அபசாரப்பட்டால் அந்த ப₄ாக₃வதரிடம் மன்னிப்புவேண்டிப் பெற்றாலொழிய து₃ர்வாஸர் போன்ற ரிஷியாலேயும் ஈடேறமுடியாது. ப₄ாக₃வதர் பலர் விஷயத் தில் அபசாரப்பட்ட க்ரிமிகண்ட₂ன் போன்றவர்களுக்கு விமோசனமே யில்லை என்று கருத்து.

## இருநூற்றெழுபதாம் வார்த்தை

நம்பிள்ளை, நஞ்சீயரை 'அவதாரங்கள் ஏதுக்காக ?' என்ன; 'ஈஶ்வரன் அவதரித்துப்பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் ப₄ாக₃வதாபசாரம் பொறுமை' என்று ஜீயரருளிச்செய்தார்.

## இருநூற்றெழுபத்தோராம் வார்த்தை

தே₃வகிப்பிராட்டி வார்த்தை;- "ந கஶ்சிந்நாபராத்₄யதி" என்னுமவளாகையாலே பிராட்டியும் தன் விஷயத்தில் அபராத₄ம் பொறுக்கும்; "மித்ரப₄ாவேந" என்னுமவனாகையாலே - ஈஶ்வரனும் தன் விஷயத்தில் அபராத₄ம் பொறுக்கும்; a ப₄ாக₃வதவிஷயத்தில் அபசாரம் இவர்கள்தங்களுக்கேயாகிலும் உயிரும் உடலும் பிரியும்படியாயிறேயிருப்பது.

b புருஷகாரபூ₄தையான பிராட்டி ஒரு கையும், ப்ரபத்த்யுபதே₃ஶம்பண்ணின ஆசார்யன் ஒருகையுமாக ப்ராப்யஸ்த₂லத்தேறப் பிடித்துக்கொண்டுபோகிலும் ப்ரதிப₃ந்த₄கமாயேவிடும் - ப்ரபந்நவிஷயாபசாரம்; இதுக்கு உதா₃ஹரணம்-விண்ணப்பஞ்செய்வார் திறத்தில் அபசாரம்பண்ணின ஸ்ரீவைஷ்ணவர்கதை.

---

### இருநூற்றெழுபதாம் வார்த்தை

இது ஸ்ரீவசனபூ₄ஷணம் 192-வது சூர்ணையாக வந்துள்ளது. அதன் வ்யாக்₂யானத்தில் பொருள் உணரலாம்.

### இருநூற்றெழுபத்தோராம் வார்த்தை

a இளையபெருமாள் விஷயத்தில் அபசாரப்பட்டவள் பிராட்டியேயாயினும் உயிரும் உடலும்போன்ற பெருமாளும் பிராட்டியும் அவ்வபசாரத்தின் பயனைகப் பிரியும்படி ஆய்விட்டது என்றபடி.

b பிராட்டியும் ஆசார்யனும் சேர்ந்து புருஷகாரஞ்செய்து கையைப் பிடித்துப் பரமபத₃த்துக்கு அழைத்துச்சென்றாலும், ப்ரபந்நன் விஷயத்தில் அபசாரப்பட்டால். அபசாரப்பட்டவன் பரமபத₃ம் செல்ல முடியாதபடி ஆகிவிடும்.

## இருநூற்றெழுபத்திரண்டாம் வார்த்தை

எல்லா வேத₃ங்களையும் எல்லா சாஸ்த்ரங்களையும் எல்லா ஆழ்வார்கள் ப்ரப₃ந்த₄ங்களையும், எல்லா ஆசார்யர்கள் பாசுரங்களையும் பார்த்தவிடத்து, ஒரு வைஷ்ணவனுக்கு நிலை நின்ற ஆசார்யாபி₄மாநமொழிய மோக்ஷோபாயமுமில்லை; நிலைநின்ற பா₄க₃வதாபசாரமொழிய மோக்ஷவிரோதி₄யுமில்லை.

## இருநூற்றெழுபத்துமூன்றும் வார்த்தை

எம்பெருமானார் தம்முடைய அந்திமத₃சையிலே அருளிச்செய்த வார்த்தை;-a உடையவர் தம்முடைய திருவுள்ளத்திலே ஆர்த்தியோடே விசாரித்து, பெரியபெருமாளைத் திருவடித் தொழுது விண்ணப்பஞ்செய்தபடி;- ஸம்ஸாரத்தில் அருசி பிறந்ததென்று ஸாங்க₃ப்ரபத்தியைப் பண்ணியருளினார்; b இப்போதிதுவென்னென்று பெரியபெருமாள் வினவியருள; c காலாதிக்ரமம் பிறந்ததே யென்ன; காலத்துக்கு நாமன்றோ கடவோம்; சிறிதுகாலம் உம்மைக்கொண்டு லோகத்தைத் திருத்தப்பார்த்தோம்; அறப்பதறினீர்; இனி உமக்கு வேண்டுவ

---

### இருநூற்றெழுபத்திரண்டாம் வார்த்தை

பொருள் மிகத்தெளிவு. அடுத்த வார்த்தையிலுள்ள எம்பெருமானார் வார்த்தையில் இது அடங்கியுள்ளது.

### இருநூற்றெழுபத்துமூன்றும் வார்த்தை

(a) எம்பெருமானார் ஒரு பங்குனி உத்தரத் திருநாளிலே பெரிய பிராட்டியும் பெரியபெருமாளும் கூடியிருக்கும்போது க₃த்₃யத்தை அருளிச்செய்து செய்த ப்ரபத்தியே— இங்கு ஸாங்க₃ப்ரபத்தியாகக் கூறப்படுகிறது. ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம் (310 பக்கம்) காண்க. ஸாங்க₃ப்ரபத்தியாவது ஸர்வத₄ர்ம பரித்யாக₃பூர்வகமாக எம்பெருமானை உபாயமாகப்பற்றுவது. (b) ஏற்கனவே மது₄ராந்தகத்தில் பெரியநம்பியை ஆஶ்ரயிக்கும்போது அவர் த்₃வயத்தை உச்சரிக்க. நீர் அதைத் திருப்பி உச்சரிப்பதன்மூலம் ப்ரபத்தி செய்தீரே. இப்போது மறுபடி எதற்காக ப்ரபத்தி செய்கிறீர்? என்பது பெரிய பெருமாள் கேள்வியின் கருத்து. (c) பெரியநம்பியை ஆஶ்ரயித்து நெடுங்காலமாகியும் பேறுகிடைக்காமையாலே, பண்ணின ப்ரபத்

தென்னென்ன; சடக்கெனத் திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளவேண்டுமென்ன, ஆகில் இற்றைக்கிழமைக்கு d₂நாலாம் நாள் அப்படியே செய்கிறோமென்ன, 'அப்போது என்னுடைய ஸம்ப₃ந்தி₄ ஸம்ப₃ந்தி₄களெல்லாம் நான்பெற்ற லோகம் பெற வேணும்' என்று விண்ணப்பஞ்செய்து மட₂த்துக்கெழுந்தருளி, அப்போது முதலிகளெல்லாரையும் அழைத்தருளி, ஒருகாலும் அருளிச்செய்யாத அர்த்த₂ங்களெல்லாம் அருளிச்செய்தார்; அவ்வர்த்த₂ங்களையெல்லாம் கேட்டு அதிஶங்கைபண்ணி விண்ணப்பஞ்செய்ய; இவரும் d வெள்ளக்கேடாகவொண்ணா தென்று இற்றைக்கு d₂ நாலாம்நாள் பெரியபெருமாள் திருவடி களிலே போகிறோமென்றருளிச்செய்ய; இவருடைய விஶ்லேஷத்தில் ஆத்மத்யாக₃ம் பண்ணக்கடவோமென்று முதலிகள் தேறியிருக்கிற ப்ரகாரத்தைத் திருவுள்ளம்பற்றி e 'ஆளவந்தார் ஸ்ரீபாத₃மே, ஆத்மத்யாக₃ம் பண்ணிலுண்டாகில் நம்மோடு அந்வயமில்லை' என்றருளிச்செய்ய, இவர்களும் இத்தைக்கேட்டு மிகவும் ஶோகார்த்தராய் 'இனி எங்களுக்குச் செய்ய அடுப்பதென்? f பட்டிபுகுதல், பட்டினி கிடத்தலன்றோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, அருளிச்செய்த வார்த்தை;- ஸகல வேத₃ங்களிலும் ஸகல ஶாஸ்த்ரங்களிலும், ஸகலமான

---

திக்கு உபாயாபாயஸம்யோக₃த்நால் ஏதேனும் கண்ணழிவு ஏற் பட்டதோ? என்று அதிஶங்கித்து, அந்த ப்ரபத்தியின் அநுஸந்த₄ான ரூபமான க₃த்₃யத்தை விண்ணப்பித்தேன் என்பது எம்பெருமானார் பதிலின் கருத்து. (d) நாம் சடக்கெனப் பரமபத₃மடைந்தால், பெரு வெள்ளத்தால் பயிரழிவதுபோல் ஶிஷ்யர்கள் சடக்கென முச்சடங்கு வார்கள் என்று திருவுள்ளம்பற்றி முன்கூட்டியே தாம் பரமபத₃ம் செல்லும் நாளை அவர்களுக்கு அருளிச்செய்தார் என்று கருத்து. (d₂) கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் ஏழாம் நாள் என்று உள்ளது. (e) நம் முடைய பிரிவினாலே எவரேனும் உயிர்துறந்தால் என்னோடு ஸம்ப₃ந்த₄ மற்றவராவார்கள். இது ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்தின்மேல் ஆணை என்று கருத்து. f எம்பெருமானைப் பிரிந்தால் அவரநுப₄வமில் லாமையாலே பட்டினி கிடக்கவேண்டிவரும். அல்லது பட்டினி கிடக்கும் மாடு அயல்வயலிலே பட்டிதிரிந்து பசியாறுவதுபோலே, விஷயாந்தரமான ப₄க₃வத்₃விஷயத்தில் புகுந்து பட்டினிதீரும்படி

ஆழ்வார்கள் தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களிலும், ஸகலாசார்ய பாசு ரங்களிலும் பார்த்தவிடத்தில் — ஒரு அதி₄காரிக்கு த்₃வய மொழிய மந்த்ரமில்லை; மிது₂நமொழிய வஸ்துவில்லை; மிது₂ன கைங்கர்யமொழியப் புருஷார்த்த₂மில்லை, ஆசார்யாபி₄மாந மொழிய மோக்ஷோபாயமில்லை, ப₄ாக₃வதாபசாரமொழிய மோக்ஷவிரோதி₄யில்லை.

ப₄ாக₃வதாபசாரந்தான் ப₃ஹுவித₄ம்;- அதில் ப்ரத₄ாநமான அபசாரம் பன்னிரண்டு ; அவையெவை ? என்னில்;- ஜந்ம நிரூபணம், ஶரீரநிரூபணம், ப₄ாவ(பாக)நிரூபணம், ஆஶ்ரம நிரூபணம், அவயவநிரூபணம், ஆலஸ்யநிரூபணம், வாஸ நிரூபணம், ப₃ந்து₄நிரூபணம், ப்ரகாஶநிரூபணம், ப்ரகாரநிரூ பணம், வர்த்தநநிரூபணம், தோ₃ஷநிரூபணம். (1) இதில் ஜந்மநிரூபணமாவது - "ஶூத்₃ரம் வா ப₄க₃வத்₃ப₄க்தம் நிஷா- த₃ம் ஶ்வபசம் தத₂ா। வீக்ஷதே ஜாதிஸாமாந்யாத் ஸ யாதி நரகம் நர: ॥ ந ஶூத்₃ரா ப₄க₃வத்₃ப₄க்தா: விப்ரா ப₄ாக₃வதாஸ் ஸ்ம்ருதா:। ஸர்வவர்ணேஷு தே ஶூத்₃ரா: யே ஹ்யப₄க்தா ஜநார்த்த₃நே ॥ ய: பஶ்யதி ஶூப₄ாசாரம் வைஷ்ணவம் வீத

---

ஆகிவிடும் என்று கருத்து. இவ்வார்த்தையின் மேற்பகுதியில் ப₄ாக₃வதாபசாரம் பன்னிரண்டுவகைப்படும் என்பதை விவரித்து ப₄ாக₃வதாபசாரத்தின் கொடுமையையும் விளக்குகிறார்.

பன்னிரண்டுவகை ப₄ாக₃வதாபசாரங்கள் பின்வருமாறு:— (1) ஜன்மநிரூபணம்:— அதாவது ஜாதியையிட்டு ப₄ாக₃வதரைத் தாழ நினைப்பது. அதாவது- "எம்பெருமானுக்கு அடியானை ஶூத்₃ரனையோ, வேடனையோ, சண்டாளனையோ அவனுடைய ஜாதியை மாத்தி ரம் பார்த்துத் தாழ நினைப்பவன் நரகத்தை அடைகிறான். எம் பெருமானுடைய ப₄க்தர்கள் ஜாதியால் ஶூத்₃ரர்களாயினும் ஶூத்₃ரர்கள் அல்லர், அவர்கள் அந்தணர்களாகவே எண்ணப்படு கிறார்கள். எம்பெருமானிடம் ப₄க்தியில்லாதவர்கள் எந்த வர்ணத் தில் இருந்தாலும் அவர்கள் ஶூத்₃ரர்களே. நல்லொழுக்கமுடைய வனாய், குற்றமற்றவனை வைஷ்ணவனை ஒருவன் கண்டால் அவ்வைஷ்ணவன் எக்குலத்தவனாயினும் அவனை த₃ண்டம் போல் பூ₄மியில் விழுந்து வணங்கவேண்டும். இவ்வுலகில் எல்லா

கல்மஷம்। ஸ வை யஸ்மிந் குலே ஜாதம் ப்ரணமேத் த₃ண்ட₃வத்₃பு₄வி ॥ கிமப்யத்ராபி₄ஜாயந்தே யோகி₃நஸ்ஸர்வ-யோநிஷு। ப்ரத்யக்ஷிதாத்மநாத₂ாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதி₃கம் ॥" என்றித்யாதி₃ புராணங்களிலே சொல்லப் பட்டிருக்கையாலே தான் வைஷ்ணவர்களை ஜந்மநிரூபணம் பண்ணுவது அபசாரம். (2) ஶரீரநிரூபணமாவது-புருஷஶரீர மென்றும், ஸ்த்ரீஶரீரமென்றும், திருவநந்தாழ்வானைப் பாம்புஶரீரமென்றும், ஸ்ரீக₃ருட₃ாழ்வானையும் ஜடாயு மஹா ராஜரையும் பக்ஷிஶரீரமென்றும், ஸ்ரீக₃ஜேந்த்₃ராழ்வானையும், திருவடியையும், ஸுக்₃ரீவமஹாராஜரையும் ம்ருக₃ங்களென் றும், ப்ரஹ்லாத₃ாழ்வானையும் ஸ்ரீவிபீ₄ஷணப்பெருமானையும் மஹாப₃லியையும் இவர்கள் முதலான ப₄க₃வத்₃த₃ாஸரை ராக்ஷஸரென்றும், தே₃வதிர்யங்மநுஷ்ய ஸ்த₂ாவரரூபங்க ளான சதுர்வித₄ ஶரீரங்களில் ப₄க₃வத்₃ப₄க்தர் யாதொரு ஶரீரம் பரிக்₃ரஹித்திருந்தாலும் இந்த ஶரீரமென்று ஶரீர நிரூபணஞ்செய்கை அபசாரம். (3) ப₄ாவ(பாக)நிரூபணமாவது-ஷட்₃ப₄ாவவிகாரமான ப₃ால்ய யௌவந வ்ருத்₃த₄(த்வ)ாதி₃ வயோநிரூபணஞ் செய்கை அபசாரம். (4) ஆஶ்ரமநிரூபணமா

---

ஜாதிகளிலுமே யோகி₃கள் ஏதோவொரு காரணத்தினால் பிறக்கிறார்கள். உயிர்களுக்கு நாத₂னை எம்பெருமானை நேரில் கண்ட அவர்களுடைய குலம், அறிவு, ஒழுக்கம் முதலானவற்றை ஆராய்ந்து இகழலாகாது". முதலான புராணவசனங்களில் சொல்லப்பட்டபடி வைஷ்ணவர்களை ஜாதியைப் பார்த்து இகழ்வது அபசாரமாகும். (2) ஶரீரநிருபணம்:— அதாவது – ஸ்ரீவைஷ்ணவர்கள் உடம்பைப் பார்த்து, புருஷன், ஸ்த்ரீ, பாம்பு, பறவை, விலங்கு, அஸுரன், ராக்ஷஸன் முதலான ஶரீர பே₄த₃த்தையிட்டு அவர்களை இகழுவது. (3)ப₄ாவ(பாக)நிருபணம்:— அதாவது – (1) அஸ்தி(பின் வரும் விகாரங்களோடு) இருக்கிறது (2) ஜாயதே (பிறக்கிறது) (3) வர்த்த₄தே (வளர்கிறது) (4) அபக்ஷீயதே (குறைகிறது) (5) பரிணமதே (விகாரமடைகிறது) (6) விநஶ்யதி (அழிகிறது) என்று அசேதனப் பொருள்கள் அனைத்துக்குமுள்ளதான ஆறு வகைப் பட்ட விகாரங்களில் சேர்ந்ததான ப₃ால்யம், யௌவனம், முதுமை முதலான வயஸ்ஸுக்களை ப₄க₃வதர் விஷயத்தில் ஆராய்ந்து அவர்

வது - ப்₃ரஹ்மசர்ய க்₃ருஹஸ்த₂ வாநப்ரஸ்த₂ யத்யாதி₃களில் ஸ்ரீவைஷ்ணவர்களை இந்த ஆஶ்ரமத்தவர்களென்று ஆஶ்ரம நிரூபணஞ்செய்கை அபசாரம். (5) அவயவநிரூபணமாவது-திரு மேனியிலேயாதல், அவயவங்களிலேயாதல் ஸ்ரீவைஷ்ணவர்க ளுக்கு ஒரு தோ₃ஷமுண்டாகிலும் அவர்கள் ஜ்ஞாநமே ஸர்வாவயவபூர்த்தியென்று பாராமலிருக்கை அபசாரம். (6) ஆலஸ்யநிரூபணமாவது - ப்ரபந்நனொருவன் தன்னுடைய திருமேனியை உபேக்ஷைபண்ணி ஹேயமாயிருக்குமிடத்தில் குத்ஸியாமல் அவர் விக்₃ரஹமே போ₄க்₃யமாகப் பாராதிருத் தல் அபசாரம். இதுக்கு விண்ணப்பஞ்செய்வார் கதை.

---

களை இகழ்கை. (4) ஆஶ்ரமநிரூபணம்:— அதாவது – (1) ப்₃ரஹ்ம சர்யம், (2) க்₃ருஹஸ்த₂நிலை, (3) வாநப்ரஸ்த₂நிலை, (4) ஸந் யாஸி நிலை என்னும் நாலு ஆஶ்ரமங்களில் இன்ன ஆஶ்ரமத்தைச் சேர்ந்தவர்கள் என்று ப₄ாகவதர்களை அவர்களுடைய ஆஶ்ரமத்தை யிட்டு ஆராய்ந்து இகழ்கை. (5) அவயவநிரூபணம்:— அதாவது – ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திருமேனியிலோ, அவயவங்களிலோ தோ₃ஷங்களைப் பார்த்து இகழாமல், அவர்களுக்குள்ள ஸ்வஸ்வரூப பரஸ்வரூப ஜ்ஞானமே அக்குறைகளை நிறைவு செய்துவிடும் என்று நினையாமலிருக்கை. (6) ஆலஸ்யநிரூபணம்:— அதாவது – ப்ரபந்ந னொருவன் தன்னுடைய சோம்பலாலே உடம்பை ஸ்நானாதி₃கள் செய்யாமல் உபேக்ஷித்திருக்கையாலே அவ்வுடலில் து₃ர்நாற்றம் முத லானவை கிளம்புவதைப் பார்த்து, அதில் அருவருப்புடன் இகழா மல் அத்தகைய அவனுடைய திருமேனியையே, காமுகன் காமினி யின் உடம்பை உகப்பதுபோலே உகக்காமலிருக்கை. இங்கு அரை யர் ஸ்வாமி ஒருவருடைய கதை அநுஸந்தி₄க்கத்தக்கது. அதாவது – அரையர் ஸ்வாமி ஒருவர் சோம்பலாலே தம்முடைய வெற்றிலை பாக்குப் பெட்டியிலேயே ஸாளக்₃ராமமூர்த்தியை எழுந்தருளப் பண்ணி வைத்திருந்தார். தாம் சாப்பிட உட்காரும்போது வெற்றிலை பாக்குப் பெட்டியைத் திறந்து அந்தப் பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணி விட்டுச் சாப்பிடுவர். சாப்பிட்ட பின்பு வெற்றிலை பாக்கு அமுது செய்யும்போது கொட்டைப் பாக்கோடு சேர்த்து அந்தப் பெருமாளையும் வாயிலிட்டுக் கடித்து, கடிபடாமையைக் கொண்டு பெருமாள் என்று உணர்ந்து துப்பித் திருமஞ்சனம் செய்து மறுபடி யும் வெற்றிலை பாக்குப் பெட்டியில் எழுந்தருளப் பண்ணிக்கொள்வர்.

(7) வாஸநிரூபணமாவது-கோயில் திருமலை பெருமாள்கோயில் நின்றும் எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை எத்தனை ஆத₃ரிப்பார்கள், அப்படியே ஒரு குப்பத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவரை அவரிருந்த ஸ்த₂லமே தி₃வ்ய தே₃ஶமென்று உத்₃தே₃ஶ்யப்ரதிபத்திசெய்யாதிருக்கை அப

---

அடிக்கடி நிகழும் இந்தப் பரிப₄வத்தைப் பார்த்திருந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அந்த அரையர் ஸ்வாமியிடம் அந்த ஸாளக்₃ராமப் பெருமாளை யாசித்துப் பெற்றத் தம் கோயிலாழ்வாரில் எழுந்தருளப்பண்ணி ஷோட₃ஶோபசாரங்களுடன் திருவாராத₄நம் ஸமர்ப்பிக்கத் தொடங்கினர். அன்றிரவே அந்த எம்பெருமான் அவர் கனவில் எழுந்தருளி ''அருளிச்செயல் மணம் கமழும் அரையர் ஸ்வாமியின் வாயமுதத்தைப் பருகி வந்த என்னை அவ்வநுப₄வம் இல்லாமல் செய்துவிட்டீரே. உடனே அவருடைய வெற்றிலை பாக்குப் பெட்டிக்கே என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும்'' என்று சீற்றத்துடன் நியமிக்க, அவரும் 'அபசாரப்பட்டோமே' என்று நடுநடுங்கி இந்த வ்ருத்தாந்தத்தையும் சொல்லி, அரையர் ஸ்வாமியின் வெற்றிலைப்பெட்டிக்கே எழுந்தருளும்படி செய்தார்—என்பது. இவ்விடத்தில் தெலுங்குப் பதிப்பில் ஒரு கதை சொல்லப்பட்டிருக்கிறது. விண்ணப்பம் செய்வார்கள், ஒரு பா₄க₃வதருடைய திருமேனியில் வ்யாதி₄யைக்கண்டு இகழ, அவர்களுக்கும் இந்த வ்யாதி₄ வர, மன்னார்குடி ராஜகோபாலன் மனுஷ்ய வடிவில் வந்து அவர்களை ஹரித்₃ரா நதி₃யில் குளிக்கச் செய்து வியாதி₄யைப் போக்கினன் என்பது கதை. இது ஆலஸ்யம் என்னும் சோம்பலில் சேராதாகையாலே மேலே காட்டப்பட்டதாய் அடையவளைந்தான் அரும்பத உரையில் எடுக்கப்பட்டதான விண்ணப்பம் செய்வார் கதையே இங்கும் பொருந்தும். மன்னார்குடிக் கதையை பா₄வநிரூபணத்தில் சேர்த்துக்கொள்ளலாம். (7) வாஸநிரூபணம்:— அதாவது – கோயில் திருமலை பெருமாள் கோயிலிலிருந்து எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை ஆத₃ரிப்பது போலே, எவருமறியாத ஒரு குப்பத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவரையும் அவர் இருந்த இடமே ஒரு தி₃வ்யதே₃ஶமென்று நினைத்து ஆத₃ரிக்காமலிருக்கை. க₃ருட₃ன், சாண்டிலி என்னும் ஓர் அம்மையாரை ''இவள் தி₃வ்யதே₃ஶத்தில் இராமல் க்₃ராமத்தில் இருக்கிருளே'' என்று நினைக்க, அதனால் அவருடைய சிறகுகள் உதிர்ந்து, அவள் இரண்டு கையாலும் தடவிக்கொடுக்கையாலே மறுபடி சிறகு வளர்ந்த கதை இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. இதுவும் நம் பூர்வாசார்

சாரம்; (8) ப₃ந்து₄நிரூபணமாவது - தன்னுடைய ப்ரக்ருதி ப₃ந்து₄க்களிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவருண்டாகில் தன்னுடைய ஸ்வாமியென்று உத்₃தே₃ஶ்ய ப்ரதிபத்தி செய்யாதிருக்கை அபசாரம் ; (9) ப்ரகாஶநிரூபணமாவது - ஆசார்யரையும், ஸிம்ஹாஸநத்தில் அவர்களையும், பூஜ்யரானவரையும், ப்ரஸித்₃த₄மாக ஆசார்ய கைங்கர்ய தா₃ஸ்யக்ருத்யம் பண்ணுமவர்களையும், உபாயஶூந்யராய் ஒதுங்கி வர்த்திக்குமவர்களையும், ஏகப்ரகாரத்திலே ரக்ஷகரென்று பாராதிருத்தல் அபசாரம்; (10) ப்ரகார நிரூபணமாவது - திருநந்த₃வநம் செய்கிற ப்ரபந்நரையும், திருமுற்றங்கள் கட்டுவிக்கிற ப்ரபந்நரையும், சாத்துப்படி திருமாலை திருவிளக்கிடுகிற ப்ரபந்நரையும், மற்றும் இத்யாதி₃ பரிசாரகங்கள் செய்கிற ப்ரபந்நரையும், பார்வைக்கு ஒன்றும் செய்யமாட்டாதே வெறுமனேயிருக்கிற ப்ரபந்நரையும், ஏகப்ரகாரத்திலே உத்₃தே₃ஶ்யரென்று பாராதிருக்கை அபசாரம் ; (11) வர்த்தநநிரூபணமாவது -

---

யர்களாலே எடுக்கப்பட்டுள்ளது. (8) ப₃ந்து₄நிரூபணம்:— அதாவது— தன்னுடைய தே₃ஹஸப₃ந்து₄க்களில் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் இருந்தால், அவருடைய வைஷ்ணவத்வத்தையிட்டு ஸ்வாமியாக நினையாமல் வெறும் உறவினராக நினைத்திருக்கை அபசாரம். (9) ப்ரகாஶநிருபணம்:— அதாவது—தன் ஆசார்யரையும் எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதி₃பதிகளில் சேர்ந்த ஆசார்யர்களையும் கௌ₃ரவிக்கத்தக்க ஜீயர் முதலானோரையும் உலகறிந்த ஆசார்ய கைங்கர்யம், ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்யம் முதலானவற்றைச் செய்பவர்களையும், எம்பெருமானையே உபாயோபேயங்களாகக்கொண்டு உபாயாந்தரங்களில் கை வைக்காதவர்களாய், ஏதோவொரு மூலையில் எவரும் அறியாமல் வாழ்கிற ஸ்ரீவைஷ்ணவர்களையும் ஒருபடிப்பட ரக்ஷகர்கள் என்று எண்ணாதிருக்கை. (10) ப்ரகாரநிருபணம்:— அதாவது - நந்த₃வனத்தை வளர்க்கும் ஸ்ரீவைஷ்ணவரையும், கோயில் திருப்பணி செய்யும் ப்ரபந்நரையும், திருமாலை திருவிளக்கு ஸமர்ப்பிக்கிற ப்ரபந்நரையும் இது போன்ற மற்றைத் திருப்பணிகள் செய்யும் ப்ரபந்நரையும் மேல் பார்வைக்கு ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்கிற ப்ரபந்நரையும் ஏற்றத்தாழ்வு பாராமல் ஒரே வித₄த்தில் உத்₃தே₃ஶ்யர்கள் என்று நினையாதிருக்கை. (11) வர்த்தனநிருபணம்:— அதாவது -

ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமேனியாத்ரையான ப்ரக்ருதிவஶ்யர் நிருபணத்தில் வ்யவஹாரம் பண்ணுதல்; க்ருஷிபண்ணுதல், ஆயுதம் பிடித்து ஸேவித்தல், எவ்வகையில் பாங்காயிருந்தாலும் இவ்வகையிலிருக்கிறார்களென்று நினைக்கை அபசாரம்; இதுக்கு அவரை வ்யாபாரி (கவரை வ்யவஹாரி) கதை; (12) தோஷ நிருபணமாவது - ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமேனி போகமான ப்ரவ்ருத்தி - " ஸா கதா பாரதீ புண்யா த்ரௌபதீ ச பதி வ்ரதா। தத்வித: பாண்டவா தந்யா: ப்ரஸந்நே புரு ஷோத்தமே ॥ ' என்று த்ரிவிதகரணங்களிலும் அவிஶேஷ ஜ்ஞரென்றும், அநுஷ்டாதா அன்று என்றும், ஸ்ரீவைஷ்ண வர்களை ஏவமாதிதோஷங்கள் நிருபிக்கை அபசாரம்.

தான் ஸ்ரீவைஷ்ணவர்கள் தோஷத்தைப் பார்க்கக்கடவ னல்லன்; கண்ணாலே பார்த்து, மநஸ்ஸாலே நினைத்து, வாக் காலே சொல்லி, அம்மை கநகம்ருகத்தைக்கொண்டு வரச் சொல்லி, பகவானையனுப்பின அபசாரம். அதெங்ஙனே யென்னில்; கந்தர்ப்பகோடிலாவண்யமாய், பஞ்சோபநிஷந்

---

ஸ்ரீவைஷ்ணவர்கள் தேஹயாத்ரைக்காக வ்யவஸாயம் செய்தல், ஆயுதம் பிடித்து ராஜஸேவை செய்தல் முதலான எந்த வ்ருத்தி யில் (தொழிலில்) ஈடுபட்டிருந்தாலும் அதையிட்டு மற்ற ஸம்ஸாரி களைப் போலே 'இன்ன தொழில் செய்கிறார்கள்' என்று வழங்குதல்; இங்கு எடுக்கப்பட்ட கதை தெரிந்தவர்களிடம் கேட்டுக்கொள்வது. (12) தோஷநிருபணம்:— அதாவது - ஸ்ரீவைஷ்ணவர்கள் திரு மேனியைக்கொண்டு தகாத போகாநுபவங்களைச் செய்தாலும், "பாரதக்கதை புண்யமான கதை. பஞ்சபாண்டவர்களின் பத்னியான த்ரௌபதி பதிவ்ரதையாகிறாள். ஒருத்தியைப் பத்னியாகக் கொண்ட பஞ்சபாண்டவர்கள் பாக்யஶாலிகள் ; ஏனெனில் இவற்றில் புரு ஷோத்தமன் திருவுள்ளம் உகந்திருக்கிறான் " என்கிறபடியே நினை யாமல், அவர்களை முக்கரணங்களிலும் குறைந்த அறிவுடையவர்கள் என்றும் அநுஷ்டானமில்லாதவர்களென்றும் குற்றங்களை நிருபிக்கை.

இதுக்குமேல் உள்ளதின் ஸாரம்:— கோடி மன்மதர்களை விட அழகுமிக்க பஞ்சோபனிஷத்துக்களாலான திவ்யமங்கள விக்ரஹத் தையுடைய எம்பெருமானிருக்க, அப்ராக்ருத தேஶத்தில் " ஹா

மயமாய், "ஹா வுஹா வுஹா வு" என்று தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹாநுப₄வம் பண்ணி, ஸப்₃த₃ாதி₃ விஷயப்ராவண்யத்தில் ஒரு ஸுவர்ணப₄ாஸ ம்ருக₃த்தை அபேக்ஷித்துப் பெருமாளை விட்டபோதே, பரமப₄ாக₃வதனை இளையபெருமாளைப் பருஷ வாக்யங்களைச் சொன்னபோதே, ராக்ஷஸர்கையில் சிறைபோக வேண்டிற்று; வாசகத்தால் செய்த அபசாரத்துக்கு ப்ராயஸ்சித்தமில்லை. "ந க்ஷமாமி கதா₃சந" "மத்₃ப₄க்தம் ஸ்வபசம் வாऽபி நிந்த₃ாம் குர்வந்தி யே நரா:। பத்₃மகோடி ஸதேநாऽபி ந க்ஷமாமி வஸுந்த₄ரே! ॥" இவைதான் ஒரொன்று ப₃ஹுமுக₂மாக வந்தேறும். இவ்வபராத₄ங்களைத் தான் பண்ணுகையும், தனக்கு உத்₃தே₃ஸ்யனை ஆசார்யன்பண்ணிலும்,- "நியமாதிக்ரமம் ரஹஸி போ₃த₄யேத்" என்கிறபடியே ஏகாந்தத்தில் நியமித்துத் தவிர்ப்பியாதொழிகையும், பரதந்த்ரரானவர்கள் பண்ணுமிடத்தில் முதுகிலேயடித்து விலக்காதொழிகையும், ஸ்ரீவைஷ்ண

---

வுஹா வுஹா வு" என்று முக்தர் அநுப₄விக்கும் திருமேனியை விரும்பிய பின், ஒரு பொன் மானை விரும்பி ப₄க₃வத₃பசாரப் படுகையாலும், பரமப₄ாக₃வதரான இளையபெருமாளைக் கடுஞ்சொற்கள் சொல்லி ப₄ாக₃வதாபசாரப் படுகையாலும் ஸர்வ ஜக₃ந்மாதாவான பிராட்டிக்கே ராக்ஷஸர்களிடம் அகப்பட்டுப் பத்து மாதம் சிறையிருக்க வேண்டி வந்தது. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் குற்றங்களைப் பார்க்கவே கூடாது. கண்ணாலே பார்த்து, நெஞ்சாலே நினைத்து, வாக்காலும் சொன்னால் அதுக்கு ப்ராயஸ்சித்தமே கிடையாது. "சண்டா₂ளனாகிலும் என் ப₄க்தனாயிருப்பவனை நிந்தி₃ப்பவனை எவ்வளவு கற்பகோடி காலமானாலும் பொறுக்கமாட்டேன்" என்று வராஹப்பெருமாள் பூ₄மிப் பிராட்டியிடம் சொன்ன வசனத்தை இங்கு அநுஸந்தி₄க்கவேணும். இந்த ப₄ாக₃வதாபசாரம் ஒன்று செய்தால் பலவாகப் பெருகும். இவற்றைத் தான் பண்ணுவது கூடாது என்பதோடன்றியில், தன் மதிப்புக்குரிய ஆசார்யனே பண்ணினாலும் "ஆசார்யன் செய்யும் வரம்பு மீறிய செயல்களை ஸிஷ்யன் ரஹஸ்யத்தில் உணர்த்தவேண்டும்" [ ] என்கிறபடியே ஆசார்யனையும் ப₄ாக₃வதாபசாரம் செய்யாமலிருக்கும்படி எடுத்துச் சொல்லவேணும். தனக்கு வஸப்பட்ட குடும்பத்தினர், நண்பர் முதலானோர் ப₄ாக₃வதாபசாரம் செய்தால், அவர்களை அடித்தும் திருத்தவேணும். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவர்க்கொருவர்

வர்கள் அந்யோந்யம் அபராத₄ம் பண்ணுமிடத்தில் அவர்கள் ஸ்ரீபாத₃த்தைக் கட்டிக்கொண்டு ஆனவளவும் நியமித்துத் தவிர்ப்பியாதொழிகையும், அவர்கள் தவிராதவளவில் தான் ப₄க₃வத்₃விஷயத்தில் ஶ ர ண ம் புகுராதொழிகையும், ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏகாந்தத்திலே பண்ணின அபராத₄ங்களை ப்ரகாஶமாக்குகையும், அபராத₄க்ஷாமணம் பண்ணினவர்களை ப₄ாக₃வதாபசாரம் பண்ணினார்களென்று நினைத்திருக்கையும் இவ்வபராத₄ங்களுக்கெல்லாம் அடி.

## இருநூற்றெழுபத்துநாலாம் வார்த்தை

அவஶ்யம் பரிக்₃ராஹ்யங்களான பன்னிரண்டு அறிய வேண்டும்; அவையாவன - ஆஹாரநியமமும், விஹாரநியமமும், அந்நநியமமும், போ₄ஜநநியமமும், ஸ்நாநநியமமும், ஸ்வரூபநியமமும், உபாயநியமமும், உபேயநியமமும், வாஸநியமமும், போ₄க₃நியமமும், ஆசாரநியமமும், ஸம்ஸர்க்க₃நியமமும், (1) ஆஹாரநியமமாவது-ப₄ாக₃வதாந்நமே பு₄ஜிக்கை. (2) விஹாரநியமமாவது - ப₄க₃வத₃ாலயங்களிலும் திருநந்த₃

---

அபசாரம் செய்வதைப் பார்த்தால் அவர்கள் திருவடிகளைக் கட்டிக்கொண்டு முடிந்த வரையில் எடுத்துச் சொல்லி அவ்வபசாரத்தை விலக்கவேண்டும். அவர்கள் விலகாவிடில் அவர்களைத் திருத்தும்படி எம்பெருமானை ஶரணம் புகவேண்டும். இப்படியெல்லாம் செய்யாதிருப்பதும், ஸ்ரீவைஷ்ணவர்கள் தனிமையில் செய்த குற்றங்களை ஸபை₄யில் வெளிப்படுத்துகையும், ப்ரக்ருதி வாஸனையால் ப₄ாகவதாபசாரப்பட்டு மன்னிப்பு கேட்டுக்கொண்டவர்களை 'ப₄ாக₃வதாபசாரங்கள் பண்ணினார்கள்' என்று நினைக்கையும் முற்கூறிய பன்னிரண்டு வகை ப₄ாக₃வதாபசாரங்களுக்கும் காரணமாகும்.

### இருநூற்றெழுபத்துநாலாம் வார்த்தை

இவ்வார்த்தையில் முற்கூறிய ப₄ாக₃வதாபசாரங்கள் ஏற்படாதிருக்கக் காரணமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் கைக்கொள்ளவேண்டிய பன்னிரண்டு நியமங்கள் சொல்லப்படுகின்றன. அவையாவன (1) ஆஹாரநியமம்:— அதாவது - ப₄ாக₃வதர்களுடைய அன்னத்தையே ப்ரஸாத₃ப்படுகை. (2) விஹாரநியமம்:— அதாவது - ப₄க₃வத்

வநங்களிலும், ஸ்வாசார்யன் ஸஞ்சரிக்கும் ஸ்த₂லங்களிலும்! மற்றும் விலக்ஷணமான ஸ்த₂லங்களிலும் (ஸஞ்சரியாதே மற்ற விடத்திலே) ஸஞ்சரிக்கை. (3) அந்நநியமமாவது - ப்ராக்ருத ரிடத்தில் தன்னைக் கீழ்ப்படுத்தி ஆர்ஜியாதே, அமுதுபடி, சாத்துப்படி, ஸ்ரீகார்யம் முதலானவற்றுக்கு அர்ஹமான த்₃ரவ்யங்களுக்குக் கர்த்தவ்யதயா அநுகூலரை நெருக்கி ஆர்ஜியாதே, ஸ்வக்ஷேத்ரத்தில் ஸ்வஶரீரத்தில் க்ருஷிபண்ணியாதல், அநுகூலருடைய ஸ்நேஹத்தால் வந்த த்₃ரவ்யமாதல், மாது₄ கரமுஷ்டியினாலே ஆர்ஜித்த த்₃ரவ்யம் ஸ்வீகரிக்கையும். (4) போ₄ஜநநியமமாவது - இப்படி ஆர்ஜிதமான த்₃ரவ்யத்தை ப₄க₃வத்₃பா₄க₃வத விஷயத்தில் ஸமர்ப்பித்து ப்ரஸாத₃ப்ரதிபத்திபண்ணும்போது ப்ரஸாத₃ஸ்வீகாரமென்றும், க்ஷுந்நிவ்ருத்தி மாத்ரமென்றும் தே₃ஹத₄ாரண மாத்ரமென்றும்

---

ஸன்னிதி₄களிலும், திருநந்தவனங்களிலும், தன் ஆசார்யன் ஸஞ்சரிக்கும் இடங்களிலும், மற்றும் இத்தகைய சிறந்த இடங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டு, மற்ற இடங்களில் ஸஞ்சரியாதே இருக்கை. "ஸஞ்சரியாதே மற்றவிடங்களில்" என்னும் பாடத்தை மற்றவிடங்களில் ஸஞ்சரியாதே என்று மாற்றிப்படிக்கவேணும். (3) அந்நநியமம்:— அதாவது – ப்ராக்ருதர்களான அவைஷ்ணவர்களிடத்தில் அடிமைத் தொழில் செய்து ஸம்பாதி₃க்காமல், வைஷ்ணவர்களிடத்திலும், அவர்களுடைய திருவாராத₄னத்துக்குப் பயன்படும் அமுதுபடி, சாத்துப்படி, மற்ற கைங்கர்யங்கள் முதலானவற்றுக்காக அவர்களிடமிருக்கும் த்₃ரவ்யத்தையும் நிர்ப்ப₃ந்தி₄த்துப் பெருமல், தன்னுடைய நிலத்தில் வ்யவஸாயம் முதலானவற்றைச் செய்தோ, உடலுழைப்பினாலோ, ஸ்ரீவைஷ்ணவர்கள் அன்பாகக்கொடுத்த த்₃ரவ்யத்தாலோ, மது₄கரமாகிற வண்டு புஷ்பங்களிலிருந்து அவற்றுக்கு வாட்டம் வராதபடி தேனை சேகரிப்பதுபோலே உஞ்சவ்ருத்தி செய்வதாகிற மாது₄கரத்தின் மூலம் கிடைக்கும் சில பிடி அரிசிகளாலோ, அன்னத்தை ஸித்₃த₄ப்படுத்தி அதை எம்பெருமானுக்குக் கண்டருளப் பண்ணி ஸ்வீகரிக்கை. (4) போ₄ஜனநியமம்:— அதாவது – முற்கூறியபடி ஸம்பாதி₃த்த அரிசி முதலானவற்றை அன்னமாக்கி எம்பெருமானுக்கும், அவன் அடியார்களுக்கும் ஸமர்ப்பித்து, தான் ப்ரஸாத₃ ஸ்வீகாரம் பண்ணும் (உண்ணும்) போது "இது ப₄க₃வத்₃பா₄க₃வத ப்ரஸாத₃மாகையாலே கைக்கொள்ளத்தக்கது" என்றும், "தே₃ஹத்

புருஷார்த்தமென்று இருக்கை. (5) ஸ்நாநநியமமாவது - பாபவிமோசநம் என்றுதல், ப்ரயோஜநாந்தரநினைவாதல், புண் கழுவுகிறோமென்றுதல், அதிகாரி ஸம்பத்திக்கு உடலாக வாதல், ஶரீரமாலிந்யத்துக்காகவாதலன்றிக்கே, பர்த்ரு போகத்துக்குப் பதிவ்ரதை ஸ்நாநம்பண்ணுமாபோலே பக வத்பாகவதஸமாராதநம் செய்கைக்காக ஸ்நாநம்பண்ணுகை. (6) ஸ்வரூபநியமமாவது-ததீயஶேஷமாயிருக்கை. (7) உபாய நியமமாவது - அநந்யஸாதநனாயிருக்கை. (8) உபேயநியம மாவது-அநந்யப்ரயோஜநனாயிருக்கை. (9) வாஸநியமமாவது-அநந்யப்ரயோஜனரான மஹாபாகவதருடைய திருமாளிகைக் கடைத்தலையிலே ஒதுங்கி வர்த்திக்கை. (10) போகநியமமா வது - அவர்களுடைய ஸேவையே எல்லா போகங்களும்

---

தின் உபாதியான பசியைப் போக்கிக்கொள்ளும் அளவுக்கே எடுத்துக் கொள்ளப்படுகிறது'' என்றும் ''எம்பெருமான் கொடுத்த தேஹத் தைத் தரிக்கச் செய்யுமளவுக்கே எடுத்துக்கொள்ளப்படுகிறது'' என்றும் நினைத்து போஜனத்தைப் புருஷார்த்தமென்று கொள்கை. (5) ஸ்நாநநியமம்:— அதாவது – தீர்த்தம் முதலானவற்றில் ஸ்நா நம் செய்வது – 'பாபத்தைப் போக்கும்' என்று நினைத்தோ, '(தாழ்ந்ததொரு) பயனைத்தரும்' என்று நினைத்தோ, 'புண் போன்ற இந்த ஶரீரத்தைப் பரிஶுத்தப்படுத்தும்' என்று நினைத்தோ, 'மோக்ஷத்தை அடைவதற்கு இது தகுதியை விளைக்கும்' என்று நினைத்தோ, 'தீர்த்தாடனத்தாலே ஶரீரம் கொழுப்படங்கும்' என்று நினைத்தோ தீர்த்தஸ்நாநங்கள் செய்யாமல், கணவனோடு ஆநந் தம் அநுபவிப்பதற்காகப் பதிவ்ரதையான பத்னி ஸ்நானம் செய்வது போலே, எம்பெருமானுக்கும் அவன் அடியார்களுக்கும் ஆராதனத் துக்கு உறுப்பாக ஸ்நாநம் செய்வது. (6) ஸ்வரூபநியமம்:— அதா வது—மற்ற தெய்வங்களுக்கோ மனிதர்களுக்கோ அடிமைப்பட்டிரா மல், எம்பெருமானுக்கும் அவன் அடியார்களுக்குமே அடிமைப்பட்டி ருக்கை. (7)உபாயநியமம் :— அதாவது–எம்பெருமான் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருக்கை. (8) உபேயநியமம்:— அதாவது - அவனுடைய முகமலர்த்தியைத் தவிர வேறொன்றைப் பயனாகக் கொள்ளாதிருக்கை. (9) வாஸநியமம்:— அதாவது – எம்பெருமா னையே உபாயமாகவும் உபேயமாகவும் கொண்ட பரம பாகவதர்களு டைய திருமாளிகையின் வாசல் திண்ணையிலேயே இருந்து வாழ்கை,

என்றிருக்கை. (11) ஆசாரநியமமாவது - அர்த்த₂காமாபி₄மாநங்கள் ஹேதுவாக ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளத்திலும், ஆசார்யன் திருவுள்ளத்திலும் கலக்கம் வாராமல் வர்த்திக்கை. (12) ஸம்ஸர்க்க₃நியமமாவது - ஸாத்விகர் அங்கீ₃காரமுள்ள தே₃ஶத்திலே வஸித்திருக்கை. இந்நியமங்களுண்டாய்ப் போரவே இவ்வபராத₄ங்களொன்றும் புகுராதென்று அருளிச்செய்தருளினர்.

## இருநூற்றெழுபத்தஞ்சாம் வார்த்தை

a நம் மனிச்சர் ஸ்ரீ வைஷ்ணவர்களைக்கண்டால் தங்களோபாதி ப்ரக்ருதிமான்களாக நினைத்திருக்கும் புல்லிமையின்றிக்கேயாயிற்றிருப்பது ; b (திருவுடைமன்னர்) c (செழுமாமணிகள்) d (நிலத்தேவர்) e (தெள்ளியார்) f (பெருமக்கள்) g (பெருந்தவத்தர்) h (உருவுடையாரிளையார்) i (சிறுமாமனிசர்) j ( எம்பிரான்றன சின்னங்களிவரிவர் ) என்று

(10) போ₄க₃நியமம்:— அதாவது - அத்தகைய பரமபா₄க₃வதர்களுடைய ஸேவையே காட்சியும், கைங்கர்யமே எல்லா போ₄க₃ங்களும் ஆகும் என்று நினைத்திருக்கை. (11) ஆசாரநியமம் :— அதாவது - பண ஆசை, அபி₄மானங்கள் முதலானவை காரணமாக, சில கார்யங்களைச் செய்து, அதனால் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளத்திலும் ஆசார்யன் திருவுள்ளத்திலும் கலக்கம் வராதபடி வாழ்க்கை நடத்துகை. (12) ஸம்ஸர்க்க₃நியமம் :— அதாவது - ஸாத்விகர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் உகந்த இடத்திலே வாழ்கை. இந்தப் பன்னிரண்டு நியமங்களும் ஏற்பட்டால், முற்கூறிய பன்னிரண்டு வகைப்பட்ட அபசாரங்களும் நேராது என்றபடி.

### இருநூற்றெழுபத்தஞ்சாம் வார்த்தை

*இந்த வார்த்தை சிறிது விரிவாகவே பெரியவாச்சான்பிள்ளையின் மாணிக்கமாலையில் (நமது பதிப்பில் பக்கம்-4) காணப்படுகிறது. a நம்முடைய ஆசார்யர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், அவர்களைத் தங்களைப்போலே 'ப்ராக்ருதர்கள்' என்று நினைக்கும் தாழ்வற்றவர்களாகவேயிருந்தனர்.* b [திருவாய் 4-4-8] c [திருவாய் 5-8-9] d [திருவாய் 7-10-10] e [நாச்சியார்திரு 4-1] f [திருவாய் 3-7-5] g [திருநெடுந்தாண்டகம் 24] h [நாச்சியார்திரு 1-6] i [திருவாய் 8-10-3] j [பெரியாழ்திரு 4-4-9]

எம் குலநாத₂ரான ஆழ்வார்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இப்படி திருநாமஞ்சாத்துகையாலே கேவலம தன்னோடொக்க ஒரு மநுஷ்யனென்று நினைத்திருக்கை அபசாரம்.

## இருநூற்றெழுபத்தாரும் வார்த்தை

உடலை நெருக்கி உயிரோடே உறவுகொண்டாடுவாரைப் போலே காணும் நாரங்களை நெருக்கி நாராயணனோடே உறவு கொண்டாடுகை.

## இருநூற்றெழுபத்தேழாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவர்களை நெகிழ நினைத்தானாகில் - நிலம் பிளந்தால் இழையிடவொண்ணாதாப்போலேயும், மலை முறிந்தால் தாங்கவொண்ணாதாப்போலேயும், கடல் உடைந்தால் அடைக்கவொண்ணாதாப்போலேயும் இதுவும் அப்ரதிக்ரியமாயிருப்பதொன்று.

## இருநூற்றெழுபத்தெட்டாம் வார்த்தை

நாட்டிலேயிருந்து பெருமாளை ஸேவிப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் a அந்யோந்யம் விஶ்லேஷபீ₄ருக்களாய்ப் போருகிறவர்கள், ஒருகால் ராக₃த்₃வேஷங்கொண்டாடி ஒருவர் ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாத₃த்தேற வந்து மற்றையவருடைய குற்

---

### இருநூற்றெழுபத்தாரும் வார்த்தை

*உடலுக்குத் தீங்குசெய்து உயிருக்கு நல்லது செய்ய நினைப்பவர்கள் போன்றவர்கள் — நாராயணனுக்கு ஶரீரமான நாரங்களான மற்ற ஜீவராசிகளுக்குத் தீங்குசெய்து நாராயணனைப் பெறநினைப்பவர்கள்.*

### இருநூற்றெழுபத்தேழாம் வார்த்தை

*ஸ்ரீவைஷ்ணவர்களைத் தாழநினைப்பதாகிற பா₄க₃வதாபசாரத்துக்குப் பரிஹாரமே கிடையாது. பூ₄கம்பத்தால் நிலம்பிளந்தால் அதை ஒன்றுசேர்க்கமுடியாததுபோலவும், மலை முறிந்து தலையில் விழுந்தால் அதைத் தாங்கமுடியாததுபோலவும், கடலுடைந்தால் அதை அடைக்கமுடியாததுபோலவும் பா₄க₃வதாபசாரத்துக்கும் பரிஹாரம் இல்லை.*

றம் விண்ணப்பஞ்செய்ய; ஸேவித்திருந்தவர்களிலே சிலர் "அப்படி சொல்லலாமோ?" என்ன; b ஆச்சான்பிள்ளை ;— அவர் சொல்லுகிறீர்! தண்டல் படையிறுனை யமன், "பரிஹர" என்றான்; பிராட்டி, "ந கஶ்சிந் நாபராத்₄யதி" என்றாள்; ஈஶ்வரன் "செய்தாரேல் நன்று செய்தார்" என்றான் ; ஆழ்வார்கள் "அவன் தமரெவ்வினையராகிலும்" என்றார்கள்; இப்படியிருக்க, அவர் குற்றம் இவரையொழியச் சொல்லுவாரார்? என்று அருளிச்செய்தார்.

---

### இருநூற்றெழுபத்தெட்டாம் வார்த்தை

a ஒருவரையொருவர் விட்டுப்பிரியப் பொறுக்காதவர்கள். b ஆச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியின் கருத்து பின்வருமாறு—பிறரை ஶிக்ஷிப்பதற்காகவே ஏற்பட்ட யமன் "பரிஹர மது₄ஸூத₃ந ப்ரபந்நாந்" [வி-பு 3-7-14] [மது₄ஸூத₃நனை ஶரணமடைந்தவர்களைக் கண்டால் வெகுதூ₃ரம் விலகிப்போ] என்று தன் தூ₃தர்களைப் பார்த்துச் சொன்னான். புருஷகாரபூ₄தையான பிராட்டி "பாபாநாம் வா" என்று தொடங்கும் தனது சரமஶ்லோகத்தில் "இவ்வுலகில் குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே" என்று திருவடியைக் குறித்துச் சொன்னாள். பாபங்களுக்கெல்லாம் ப₂லனளிக்கும் ஸர்வேஶ்வரனே "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" [பெரியாழ் திரு 4-9-2] என்கிறபடியே, அடியார்களுடைய குற்றத்தை நற்றமாகவே கொண்டான். ஆழ்வார்களும் "அவன் தமர் எவ்வினையராகிலும் எங்கோனவன் தமரே யென்றொழிவதல்லால்—நமன் தமரால் ஆராயப்பட்டறியார் கண்டீர்" [முதல்திருவ 55] என்று 'எப்பேர்ப்பட்ட பாபம்செய்த ப₄ாக₃வதர்களையும் யமன் ஆராயமுடியாது' என்றார்கள், இப்படியிருக்க, பரமப₄ாக₃வதரான அவருக்கு நெடுங்காலம் நண்பராயிருந்து அவருடைய ஸ்ரீவைஷ்ணவத்வத்தையும் அறிந்த இவரையொழிய வேறெவரும் அவருடைய குற்றத்தைச் சொல்லுவாரில்லாமையாலே, இவரே சொல்லப் புறப்பட்டுவிட்டார். இதை யாரால் தடுக்கமுடியும் ? என்றபடி. பரிஹாஸம் கலந்த கடுமையான உபதே₃ஶமொழியான இவ்வார்த்தையாலே, அந்த ஸ்ரீவைஷ்ணவர் தலைகுனிந்து தான் செய்த கடுமையான அபசாரத்தை உணர்ந்து, பெரியவாச்சான்பிள்ளையிடமும் அந்த ஸ்ரீவைஷ்ணவரிடமும் மன்னிப்புக்கேட்டுக்கொண்டு திருந்தியிருப்பார் என்று எளிதில் ஊகிக்கலாம்.

# இருநூற்றெழுபத்தோன்பதாம் வார்த்தை

a ஸோமாசியாண்டானுக்கு b அப்பிள்ளை அருளிச்செய்த படி;-c "ஆண்டான்! தேவரீர் ஜ்ஞாநவ்ருத்₃த₄ருமாய், வயோ வ்ருத்₃த₄ருமாய், ஶீலவ்ருத்₃த₄ருமாய், ஸ்ரீப₄ாஷ்யம் திருவாய் மொழியிரண்டுக்கும் நிர்வாஹகருமாய், எல்லாவற்றாலும் பெரியவராயிருந்தீர்; ஆகிலும் சாத்தியிருக்கிற திருப்பரிவட்டத் தலையில் ப₄ாக₃வதாபசார நிமித்தமாக ஒரு துணுக்கு முடிந்து வையும்" என்றருளிச்செய்தார்.

---

## இருநூற்றெழுபத்தொன்பதாம் வார்த்தை

a ஸோமாசியாண்டான் எம்பெருமானாருடைய முக்கிய ஶிஷ்யர் களில் ஒருவர். ஸ்ரீப₄ாஷ்யத்துக்கு முதன்முதலில் விவரணம் எழுதி யவர். ஷடர்த்த₂ஸங்க்ஷேபம், கு₃ருகு₃ணாவளி முதலான மற்றும் பல க்₃ரந்த₂ங்களை இவர் அருளிச்செய்திருப்பதாகப் பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களிலிருந்து விளங்குகிறது. எம்பெருமானார் திருநாமத்தை இவர் அநுஸந்தி₄க்கும் விதமே தனிப்பட்டது என்று தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களில் அருளிச்செய்யப்பட்டுள்ளது. இவருடைய க்₃ரந் த₂ங்களிலிருந்து சில பகுதிகளை இவருடைய வம்ஶஸ்த₂ரான மேக₄ நாத₃ாரி என்பவர் தமது நயத்₃யுமணியிலும், ஸ்ரீவேத₃ாந்ததே₃ஶிகர் தமது ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனம் முதலான க்₃ரந்த₂ங்களிலும், நாயனா ராச்சான் பிள்ளை தமது சரமோபாய நிர்ணயத்திலும் எடுத்துள்ளார் கள். b அப்பிள்ளை - பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர் அருளிச்செய்த அந்திமோபாய நிஷ்டை₂யில் இவ்வார்த்தை எடுக்கப்பட்டுள்ளது. அதிலிருந்து இவர் ப₄ட்டர் ஶிஷ்யர் என்றும், இவருக்கு 'கடகத்துப் பிள்ளை' என்றொரு பெயர் உண்டு என்றும் விளங்குகிறது. c அப் பிள்ளை வார்த்தையின் கருத்து பின்வருமாறு:— அறிவு, பிராயம், நல்லொழுக்கம், உப₄யவேத₃ாந்த நிர்வாஹகத்வம் ஆகிய எல்லா வற்றாலும் ஸோமாசியாண்டான் பெரியவராயிருந்தபோதிலும் ப₄ாக₃ வதாபசாரத்திலும் சிறிது ஈடுபட்டிருந்தபடியாலே, அதற்காக முந் தானையிலே ஒரு முடிச்சுப் போட்டிருந்து அது நேராதபடி ஜாக்₃ரதை யாயிரும் என்கை. அப்பிள்ளை பரமஹிதபு₃த்₃தி₄யாலே ஸோமாசி யாண்டானுக்கு இப்படி உபதே₃ஶித்தார் என்றும், அதற்குப்பின் ஸோமாசியாண்டான் ப₄ாக₃வதாபசாரத்தில் ஈடுபடாமல் ஜாக்₃ரதை யாயிருந்தார் என்றும் கொள்ளலாம்.

## இருநூற்றெண்பதாம் வார்த்தை

எம்பெருமான், ஸ்வவிஷயத்தில் அபசாரத்தை 'செய்யலாவதுண்டோ' என்று பொறுக்கும்; ப₄ாக₃வதாபசாரமும் இவன் சாபலத்தாலே வந்ததாகில், 'சொல்லலாவதுண்டோ' என்று பொறுக்கும்; அஸஹ்யாபசாரம் ஒருபடியாலும் பொறுன்; ஸதா₃சார்யன் ஏறிட்டுக்கொள்ளுமாகில் அதுவும் பொறுக்கும்; இதுக்கு உதா₃ஹரணம்; "மயி த்₃வேஷாநுப₃ந்தே₄ாऽபூ₄த் ஸம்ஸ்துதாவுத்₃யதே தவ। மத்பிதுஸ் தத்க்ருதம் பாபம் தே₃வ தஸ்ய ப்ரணஶ்யது॥" என்ன க்ஷமித்தான்.

---

### இருநூற்றெண்பதாம் வார்த்தை

எம்பெருமான் தன் விஷயத்தில் சேதனன் ஓர் அபசாரம் செய்தால், 'இவனது அபசாரச்செயலால் எனக்கு என்ன தீங்கு நேரப்போகிறது' என்று நினைத்துப் பொறுத்திருப்பான். ஏதோ சில அர்த்த₂காமங்களில் சாபல்யத்தாலே ப₄ாக₃வதாபசாரம் நேர்ந்தாலும் "இது உலகியற்கைதானே. என்ன சொல்லி இவனை தூ₃ண்டி₃ப்பது" என்று நினைத்துப் பொறுத்திருப்பான். ஆனால் ஒருகாரணமுமில்லாமல் ப₄க₃வத்₃ப₄ாக₃வதவிஷயங்களில் அபசாரம செய்கையாகிற அஸஹ்யாபசாரத்தைச் செய்தால், எம்பெருமான் எவ்விதத்திலும் தான் பொறுக்கமாட்டான். அபசாரம் செய்தவன் சார்பாக நல்ல ஆசார்யனொருவன் எம்பெருமானிடம் மன்னிப்புக்கேட்டுக்கொண்டால் அதையும் பொறுப்பான். இதற்கு ப்ரஹ்லாத₃னின் வார்த்தை த்₃ருஷ்டாந்தம். அதாவது—"உன்னைத் துதிப்பதில் ஈடுபட்டிருந்த என்னிடத்தில், என்னுடைய தந்தைக்கு நீண்டகாலமாக த்₃வேஷம் இருந்துவந்தது. தேவனே! என்தந்தைக்கு அதனால் ஏற்பட்ட பாபம் நீங்கவேண்டும்" [வி-பு 1-2-21] என்று ப்ரஹ்லாத₃ன் பிரார்த்திக்க, எம்பெருமானும் ஹிரண்யன் செய்த அஸஹ்யாபசாரத்தைப் பொறுத்தானன்றே. "நான் பெற்றபேறு நாலூரானும் பெறவேணும்" என்று கூரத்தாழ்வான் பிரார்த்திக்க, எம்பெருமான் நாலூரானின் ப₄ாக₃வதாபசாரத்தைப் பொறுத்ததும் இதுக்கு த்₃ருஷ்டாந்தமாகும்.

### இருநூற்றெண்பத்தோராம் வார்த்தை

ஸ்வரூபோபாயபுருஷார்த்த₂விரோதி₄களைச் சரமபர்வமான ப₄ாக₃வதர்களையிட்டு நிருபிப்பது இவ்வார்த்தை. (1) எல்லைநிலமாகை

## இருநூற்றெண்பத்தோராம் வார்த்தை

ஒருவனுக்கு ப₄ாக₃வதஶேஷத்வம் ஸ்வரூபம்; ப₄ாக₃வத ப்ரஸாத₃ம் உபாயம்; ப₄ாக₃வதகைங்கர்யம் உபேயம்; ப₄ாக₃வதாபசாரம் விரோதி₄; ஔபாதி₄க ப₄ாக₃வதவிஷயராக₃மும், நிருபாதி₄கப₄ாக₃வத த்₃வேஷமும் ஒருவனுக்கு நிலைநின்ற தோ₃ஷம்.

## இருநூற்றெண்பத்திரண்டாம் வார்த்தை

பிள்ளை வரந்தரும்பெருமாள்தாஸர் வார்த்தை; - எம்பெருமான் வெறுக்கும், மறக்கும், பொறுக்கும், ஒறுக்கும். ப்ரயோஜநாந்தரபரரைக் கண்டவாறே நம்முடைய ரக்ஷகத்வத்தைப் பறித்துக் கொண்டு போவதே! என்று வெறுக்கும்; தன்னளவில் பண்ணின அபசாரத்தை மறக்கும்; ஆஜ்ஞாதிலங்க₄நத்தைப் பொறுக்கும்; ப₄ாக₃வதாபசாரத்தை ஒறுக்கும்.

---

யாலே, ப₄ாக₃வதர்களுக்கு அடிமைப்பட்டிருப்பதே ஸ்வரூபம், (2) ப₄க₃வத்க்ருபையை விளைக்குமாகையாலே, ப₄ாக₃வதர்களுடைய க்ருபையே உபாயம், (3) எம்பெருமானுக்கு மிக இனியதாகையாலே, ப₄ாக₃வதர்களுக்குச் செய்யும் கைங்கர்யமே உபேயம். (4) எம்பெருமானாலும் மன்னிக்க முடியாததாகையாலே, ப₄ாக₃வதர்களுக்குச் செய்யும் அபசாரமே விரோதி₄. (5) ப₄ாக₃வதர்கள் விஷயத்தில் ஒரு கார்யம் ஆகவேண்டும் என்று அன்பு காட்டுவதும், ஒரு காரணமுமில்லாமல் ப₄ாக₃வதர்களை வெறுப்பதுமே நிலைநின்ற விரோதி₄.

### இருநூற்றெண்பத்திரண்டாம் வார்த்தை

(1) மற்ற பயன்களை வேண்டி எம்பெருமானிடம் ஸாத₄நாநுஷ்டாநம் செய்பவர்களுக்கு, அந்த ஸாத₄னங்களைச் சரியாகச் செய்தால் அப்பயன்களைத் தந்துதீரவேண்டியிருக்கிறது. மோக்ஷத்தைக் கொடுத்து இவனை ரக்ஷிக்கவேணும் என்ற எம்பெருமானின் எண்ணம் ஈடேறுமல் போகிறது. ஆகையால் மற்ற பயன்களைப் பெறுபவர்களைப் பார்க்கும்போது 'என்னுடைய ரக்ஷகத்வத்தை அபஹரித்துக்கொண்டு போகிறுர்களே' என்று வெறுக்கிறுன். (2) தன் விஷயத்தில் பண்ணின அபசாரங்களை, தன்னுடைய த₃யாதி₃ கு₃ணங்களால் மறக்கிறுன். (3) தன் ஆணையை மீறுவதை, தன்னுடைய க்ஷமாகு₃ணத்தால் பொறுக்கிறுன். (4) ப₄ாக₃வதாபசாரம் செய்பவர்களைக் கண்டாலோவெனில், மறக்கவும் பொறுக்கவும்

## இருநூற்றெண்பத்துமூன்றாம் வார்த்தை

a நடாதூராழ்வான் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கையைப் பிடித்துக்கொண்டு போகாநிற்க, நடுவில் திருவீதியிலே b ஒரு திருக்குலத்தில் ஸ்ரீவைஷ்ணவர் அணுகிவர, கைக்கொடுத்துக் கொண்டுபோகிற ஸ்ரீவைஷ்ணவர் அவரை ஜாதி நிரூபணம் பண்ணி, "கடக்கப்போ" என்ன, ஆழ்வான் அத்தைக்கேட்டு மூர்ச்சித்தார் ; மூர்ச்சை தெளிந்தபின்பு அருகுநின்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் 'இதுவென்' என்ன; 'திருக்குலத்திலே திருவவதரித்து c இரண்டாற்றுக்கும் நடுவே வர்த்திக்கப்பெற்ற மஹாநுபாவனோ பறையன்? நெடுங்காலம் ஆத்மாபஹாரம் பண்ணித்திரிந்த நானன்றோ பறையன்' என்று அருளினார்.

## இருநூற்றெண்பத்துநாலாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுக்கு a அடுஞ்சோறு மூன்று, b அடாச் சோறு மூன்று; c அடாச்சோறாவது - அநுகூலரை நெருக்கி ஜீவிக்கையும், ப்ரதிகூலர்பக்கல் ஸாபேக்ஷனாய் ஜீவிக்கையும்,

---

இயலாமல், வெறுப்பதோடும் நில்லாமல், ஒறுப்பதையே (தண்டிப்பதையே) செய்கிறான்.

### இருநூற்றெண்பத்துமூன்றாம் வார்த்தை

a நடாதூராழ்வான்—'வரத விஷ்ணு' என்னும் திருநாமமுள்ளவர். எம்பெருமானாரின் மருமகனார்; நடாதூரம்மாளின் பாட்டனார். b குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்த குலத்தில் பிறந்தும், வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு ஆள் என்று உள் கலந்தவராகையாலே 'திருக்குலத்தார்' என்று திருநாமமிடப்பட்ட குலத்தில் பிறந்த ஸ்ரீவைஷ்ணவர். c இரண்டாற்றுக்கும் நடுவே—திருவரங்கத்திலே. இவ்வார்த்தை நடாதூராழ்வானின் மென்மைமிக்க நெஞ்சையும், நைச்யாநுஸந்தானத்தையும் காட்டுகிறது

### இருநூற்றெண்பத்துநாலாம் வார்த்தை

a,b அறுஞ்சோறு அருச்சோறு என்று தெலுங்குப் பதிப்பிலுள்ளது. அடுஞ்சோறு — சமைந்தசோறு; ஜீர்ணமாகக் கூடிய சோறு என்று தாத்பர்யம். அறுஞ்சோறு என்பது ஜீர்ணமாகும் சோற்றை நேரே குறிக்கும். அடாச்சோறு என்பது சமையாத சோறு என்று பொருள் பட்டு அறாத (ஜீர்ணமாகாத) சோற்றைக் குறிக்கும். அடுஞ்சோறு மூன்றையும் 286-ம் வார்த்தையில் விவரிக்கப் போகிறார். அடாச் சோறு 284, 285 வார்த்தைகளில் விவரிக்கப்படுகிறது. c ஸ்ரீவைஷ்

ஸாத₄நாந்தரபு₃த்₃த்₄யா கைங்கர்யம் பண்ணி ஜீவிக்கையும்; d அநுகூலரை நெருக்குகையாவது - ஸர்வேஶ்வரன் உயிர் நிலையிலே கோலிட்டடித்த மாத்ரம்; "ஆயர் கொழுந்தாய்" "பத்தராவியை" "நாஹமாத்மாநமாஶாஸே" "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" ["நாஹமாத்மாநமாஶாஸே மத்₃ப₄க்தைஸ்ஸாது₄பி₄ர்விநா"] "மம ப்ராணா ஹி பாண்ட₃வா:" என்றுண்டாகையாலே. இவ்வர்த்த₂த்தில் e வடுகநம்பி வார்த்தை; ப₄க₃வத₃பசாரம் - எம்பெருமான் திருமேனியிலே தீங்கு நினைக்கை; ப₄ாக₃வதாபசாரம் - அவன் திருமார்பிலே (திருக்கண்மலரிலே) கோலிட்டடித்தமாத்ரம்; "யே ப்ரபந்நா

---

ணவர்களைத் துன்புறுத்தி அப்படிக் கிடைக்கும் பொருளைக் கொண்டும், அவைஷ்ணவர்களுக்கு அடிமைத் தொழில் புரிந்து கிடைக்கும் பொருளைக்கொண்டும், ப₄க₃வத் கைங்கர்யத்தை வயிறு வளர்க்க வழியாகக்கொண்டு கிடைக்கும் பொருளைக் கொண்டும் வாழ்க்கை நடத்துகை—சமையாத சோறு ஜீர்ணமாகாமல் மனிதனை மரணமடையச் செய்வதுபோலே ஆத்மாவை நசிக்கச் செய்யும் என்று கருத்து. d ஸ்ரீவைஷ்ணவர்களைத் துன்புறுத்துகையாவது - எம்பெருமானுடைய உயிர் நிலையிலே தடியாலடிப்பதையொக்கும். மரத்துக்கு வாட்டம் வந்தால் முதலில் கொழுந்து வாடும், அதுபோல் அடியார்களுக்கு வாட்டம் வந்தால் எம்பெருமான் முதலில் வாடுவானென்பதை "ஆயர் கொழுந்தாய்" [திருவாய் 1-7-3] என்று நம்மாழ்வார் காட்டினார். அடியார்களை உயிராகக் கொண்டவன் எம்பெருமான் என்பதை "பத்தராவியை" [பெரியதிரு 7-10-1, 10-1-8] என்று பெயரிட்டுக் காட்டினார் திருமங்கையாழ்வார். "ஜ்ஞானியானவன் எனக்கே உயிர் என்பது என் ஸித்₃தா₄ந்தம்" [கீ₃தை 7-18] "நல்லோர்களான என் அடியார்களைப் பிரிந்து என் உயிரையும் வேண்டேன் நான்" [ ] "பாண்ட₃வர்கள் எனக்கு ப்ராணனாகவே இருப்பவர்களன்றோ" [பா₄ர-உத்₃யோக₃ 91-27] என்று எம்பெருமானே அருளிச்செய்ததும் இவ்விஷயத்தில் ப்ரமாணம். e இவ்வடுகநம்பி வார்த்தையும் முற்கூறிய விஷயத்தை விவரிக்கிறது. ப₄க₃வத₃பசாரம் எம்பெருமான் திருமேனியில் தீங்கை நினைப்பதையொக்கும். ப₄ாக₃வதாபசாரமோவெனில் அவன் திருமார்பிலோ, திருக்கண்களிலோ தடியால் அடிப்பது போன்றது. "மஹாத்மாக்களான ப்ரபந்நர்கள் எனக்குச் செல்வமான கண்போன்ற

மஹாத்மாநஸ் தே மே நயநஸம்பத₃:" என்றுண்டாகையாலே; f இவ்வர்த்த₂த்திலே வானமாமலையாண்டான் பணிக்கும்படி;- ஸாத்விகரை நெருக்குகையாவது - மிது₂ந போ₄க்₃யமான ஸ்ரீகௌஸ்துப₄த்திலே கரியிட்டுக்கிறின மாத்ரம். g வகுளாப₄ரணஸோமயாஜியார், தெய்வவாரியாண்டானை, எம்பெருமான் இங்கேவந்து அவதரிக்கைக்கு ஹேதுவென்னென்ன; பா₄க₃வதாபசாரம் பொறுமை என்றார்; ஆகையாலே ஸ்ரீவைஷ்ணவர்களை நெருக்க, எம்பெருமான் நெஞ்சுளுக்கும்; h ப்ரதிகூலர்பக்கல் ஸாபேக்ஷதைகையாவது - ராஜமஹிஷி ராஜஸந்நிதி₆யிலே அற்பன் காற்கடையிலே நின்றமாத்ரம்:

## இருநூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை

a த்ரிபு₄வநவீரதே₃வன் ப₄ட்டருடைய a₂ ஆபி₄ஜாத்யங்கண்டு 'நீர் நம்பக்கல் ஒருநாள்வந்து போகீர்' என்று அபேக்ஷிக்க, a₃ 'பள்ளிகொள்ளுகிறவர் கைமறுத்தால் உன்னுடைய வாசலொழிய வேறு போக்குண்டோ' என்றருளினார்: a₄ இவ்

---

வர்கள்'' [ ] என்னும் ப₄க₃வத்₃ வசனம் இவ்விஷயத்தில் ப்ரமாணம். f,g வாக்யங்கள் பா₄க₃வதாபசாரத்தின் கொடுமைகளையே விவரிக்கின்றன. (c) வாக்யத்தில் அடாச்சோருகச் சொல்லப்பட்ட மூன்று அர்த்த₂ங்களில் முதலாவதை f.g வாக்யங்களும், இரண்டாவதை hவாக்யமும் விவரிக்கின்றன.-அவைஷ்ணவர்களுக்கு அடிமைத் தொழில் செய்து ப்ரபந்நன் வாழ்வது—ராஜமஹிஷி ராஜாவின் முன்னிலையிலே ஓர் அற்பனுக்கு அடிமைத் தொழில் செய்வதையொக்கும்.

### இருநூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை

முந்தின வார்த்தையின் (c) வாக்யத்தில் இரண்டாவது மூன்ருவது அர்த்த₂ங்களை விவரிக்கிறது. a இரண்டாவது அர்த்த₂த்தை விவரிக்கிறது. b மூன்ருவது அர்த்த₂த்தை விவரிக்கிறது. a₂ ஆபி₄ஜாத்யம் — நற்குடிப் பிறப்பு. a₃ பெரியபெருமாள் அஞ்சலென்ற கையை மாற்றினல்தான் உன்னைப்போன்ற அரசனுடைய வாசலுக்கு வருவேன். அவர் மாற்றமாட்டாராகையாலே வருவதற்கு இடமில்லை என்று கருத்து. a₄ "ப்ரபந்நன் தன் வாழ்வுக்காக அவைஷ்ணவர்களிடம் சிலவற்றை வேண்டி நிற்பது ஜீவனும்சம் பெற்று வாழும் பதிவ்ரதை வேருருவனைக் கணவனுக ஏற்றுக் கொள்வதுபோலே அழிவுக்கே காரணமாகும்'' என்று முதலியாண்

வர்த்தூத்திலே கந்தாடையாண்டான் பெரியஜீயர்க்கு "ந்யஸ்த ப₄ரனானவன் உடுத்தபுடவைக்கு, ப்ரதிகூலர் பக்கலிலே கஞ்சிப்பசி (சில) வேணடிநிற்கையாவது படிபெற்றுண்ணும் பதிவ்ரதை, மேல் அழிவுக்குப் பரப₄ர்த்ருஸ்வீகாரம பண்ணின மாத்ரம்' என்றருளிச்செய்தார்; b ஸாத₄நபு₃த்₃த்₄யா கைங்கர்ய மாவது - பணிகொள்ளக் கூலியின்றிக்கே பணிசெய்து கூலி வேண்டுகை: இவ்வர்த்தூத்தில் கந்தாடையாண்டான், கோ₃பால ஜீயர்க்கு அருளிச்செய்தவார்த்தை; கைங்கர்யம் பண்ணி ப₃லம் வேண்டுகையாவது - நாடும் ஊருமறிய ஒருவனுக்குக் கைகொடுத்த ஸ்த்ரீயானவள் தன் ப₄ர்த்தாவோடே ராத்ரி ஸம்ஶ்லேஷித்து விடிந்தவாறே அதுக்குக் கூலி தாவென்று அவனை மடிபிடித்து வளைத்த மாத்ரம்; b₂ அதுவென்? கைங் கர்யம் பண்ணுமவனுக்கு ஜீவிக்கவேண்டாவோ? என்ன; கொட்டையிட்டுப் பணிசெய்யாநின்றால், கொட்டின்வாய் தேய்ந்தால் கொட்டுடையவன் இரும்பிட்டுக் கொள்ளுமித்தனை யல்லது, கொட்டு, தானே இரும்பிட்டுக் கொள்ளக்கண்டி லோமே; அப்படியே இவனைக் கைக்கொண்டு பணி கொள்ளு

டான் குமாரரான கந்தாடையாண்டான் ஆழ்வானுக்கும் ப₄ட்டருக் கும் ஶிஷ்யரான பெரியஜீயரென்னும் கூரநாராயண ஜீயருக்கு அருளிச்செய்தார் b வயிற்றுப் பிழைப்புக்காக எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதாவது — 'ஒன்று நூறுயிரமாக்கொடுத்துப் பின்னுமாளுஞ்செய்வன்" [ நாச்-திரு 9-7 ] என்று மேலும் மேலும் எம்பெருமானுக்கும் கொடுத்துக் கைங்கர்யம் செய்யவேண்டும் என்னும் மனப்பான்மையோடு இருக்கவேண்டியிருக்க, அவனுக்குக் கைங்கர்யஞ்செய்து கூலிவாங்கவேண்டும் என்ற மனப்பான்மையோடு இருப்பது மிகத்தாழ்ந்தது என்று கருத்து. கந்தாடையாண்டான் கோபாலஜீயர்க்கு அருளிச்செய்த வார்த்தை இதை விவரிக்கிறது. b₃ முற்கூறிய விஷயத்துக்குமேல் ஏற்படும் ஓர் ஆக்ஷேபத்துக்குப் பரிஹாரத்தை உரைக்கிறது. "கைங்கர்யம் பண்ணுமவனும் உயிர் வாழ்ந்துதானே ஆகவேண்டும். ஆகையால் கைங்கர்யத்துக்குக் கூலி எதிர்பார்ப்பது எப்படித் தவறாகும்?' என்பது ஆக்ஷேபம். இதற்குப் பரிஹாரம் பின்வருமாறு—களைக்கொட்டு முதலான ஆயு த₄ங்களைக்கொண்டு ஒருவன் கார்யங்கொள்ளும்போது, அவ்வாயு த₄த்தில் தேய்மானமேற்பட்டால், அதை ஆயுத₄த்தையுடையவன் சீர்திருத்திக்கொள்ளவேண்டுமேயொழிய ஆயுத₄ம் தன்னைத்தானே சீர்திருத்திக்கொள்ளாது. அதுபோலே ப்ரபந்நனிடம் கைங்கர்யம்

மவனுக்கேயன்றே ஜீவநமிடுகையும் ப₄ரமாயிருப்பது என்று அருளிச்செய்தார்.

## இருநூற்றெண்பத்தாறும் வார்த்தை

உ அடுஞ்சோறுவன - அநுகூலர் ஆத₃ரத்தோடேயிடுமதும், ஶிஷ்யன் இழவாளனாய்க்கொடுக்குமதும், முஷ்டிபுக்கு ஜீவிக்குமதும் ; இவ்வர்த்த₂த்தில் ப்ரபந்நர் அருளிச்செய்யும்படி ;- பே₄ாக்₃யபு₃த்₃த்₄யா கைங்கர்யம்பண்ணி ஜீவிக்குமதும, அநுகூலர் ஆத₃ரத்தோடே கொடுக்குமதும் அவன் திருக்கைச் சிறப்பு; ஶிஷ்யன் கொடுக்குமது கருவூலத்தார் கொடுக்கக் கொள்ளுகை ; முஷ்டி புகுந்தது அவன் பிறந்த ( பிரித்த ) பேரளவிலே தண்டிக்கொண்டமாத்ரம்; அதிலும் பேறிழவிலே ப்ரீதிவிஷாத₃ம் பிறவாதோவென்ன; பெறுவதும் ஒரு முஷ்டி இழப்பதும் ஒரு முஷ்டியாகையாலே, அப்போது உச்சரிக்கிற ப₄க₃வந்நாமத்தோடே ஶமிக்கும் என்று பிள்ளை அருளிச்செய்வர்.

---

கொள்ளும் எம்பெருமானுக்கே ப்ரபந்நனுக்குச் சோறிடும்பொறுப்பே தவிர, ப்ரபந்நன் அதில் எப்பொறுப்பையும் ஏற்பது தகாது என்றபடி.

### இருநூற்றெண்பத்தாறும் வார்த்தை

284-ம் வார்த்தையில் உ 'அடுஞ்சோறு மூன்று' எனப்பட்ட மூன்று சமைந்த சோறுகளாவன:-(1)ஸ்ரீவைஷ்ணவர்கள் அன்போடே கொடுப்பது, (2) ஶிஷ்யன் 'இன்னம் மிகுதியாகக் கொடுக்கமுடியவில்லையே' என்னும் குறையோடே கொடுப்பது, (3) உஞ்ச₂வ்ருத்தியாலே பிடி அரிசிகளைப்பெற்று ஜீவிப்பது.274ம்வார்த்தையில் மூன்றுவதான அன்ன நியமத்தில் முதலாவது மூன்றுவது அர்த்த₂ங்கள் இங்கு விவரிக்கப் பட்டன. இவ்விஷயத்தை மேலே நம்பிள்ளை வார்த்தையைக்கொண்டு விவரிக்கிறார் 'மிக இனிது'எனும் எண்ணத்துடன் ப₄க₂வத்கைங்கர்யம் செய்து அதில் கிடைப்பதும், ஸ்ரீவைஷ்ணவர்கள் அன்போடு கொடுப்பதும் எம்பெருமான் தன் அடியார்களுக்குத் தன் கையால் கொடுப்பதை யொக்கும். ஶிஷ்யன்கொடுப்பது ராஜாக்களுடைய கருவூலத்திலிருந்து கிடைத்த பணம்போலே சிறப்பாயிருக்கும். பிடி அரிசி பெறுவது 'உலகில் பிறந்த ஒரு மனிதனுக்கு வாழ்வதற்கு அத்யாவச்யமான உணவு உண்டு' என்கிற ந்யாயப்படி பெற்றுக்கொண்டதாகும். இப்படிப் பெற்றுக்கொள்வதிலும், பெற்றால் ஆநந்த₃மும் பெறவிட்டால் வருத்தமும் உண்டாகாதோ ? எனில்: பெறுவதோ பெறாமல் போவதோ ஒருபிடியரிசியேயாகையாலே, ஆநந்த₃மோ வருத்தமோ மிகுதியாக ஏற்பட இடமில்லை. உஞ்ச₂வ்ருத்திக்குப்போம்போது சொல்லும் நாராயண ராமாநுஜாதி₃ நாமங்கள் அந்த ப்ரீதியையும் வருத்தத்தையுங்கூட அடக்கிவிடும் என்றபடி.

## இருநூற்றெண்பத்தேழாம் வார்த்தை

போ₄ஜந விரோதி₄யாவது - ஒரு வைஷ்ணவன் ஆத₃ரத்தோடே சோறிடப்புக்கால் உண்ணுமவன் a ஆஹாரஸௌஷ்ட₂வம் நிரூபிக்கையும், இடுமவன் 'இவனுக்கு இது அமையாதோ' என்றிருக்கையும்; b போ₄ஜ்யவிரோதி₄யாவது-இட்டுக் கணக்கெண்ணுஞ்சோறு; c ஸ்வரூபாநுரூபமான போ₄ஜநமாவது - க்₂யாதியைப் பற்றவாதல், பூஜையைப்பற்றவாதல், என்னது நானிடுகிறேனென்கிற போ₄ஜநத்தைத் தவிர்ந்து, (நெய்யமரின்னடிசில்) என்றும், (நல்லதோர்சோறு) என்றும், (உண்ணுஞ்சோறு) என்றும் இவற்றை பு₄ஜிக்கை.

## இருநூற்றெண்பத்தெட்டாம் வார்த்தை

உடையவர் திருமலைக்கு எழுந்தருளுகிறபோது உத்தர நல்லூரிலே எழுந்தருளினவளவிலே வானமாமலை தா₃ஸர் என்று ஒரு a கோ₃பால ஸ்ரீவைஷ்ணவர், பாலமுதுகாய்ச்சிக் கொண்டுவந்து உடையவர்க்குப் பாங்காகப் பரிமாற, உடைய

---

### இருநூற்றெண்பத்தேழாம் வார்த்தை

a ஆஹாரஸௌஷ்ட₂வம் நிரூபிக்கை—'இந்த உணவு சுவையுடன் இருக்கிறதா இல்லையா' என்று ஆராய்கை. b இட்டுக்கணக்கெண்ணும் சோறு—"இவன் இவ்வளவு சோறு உண்டான்; இவ்வளவு நாள் சோறுண்டான்" முதலான நினைவுகளுடன் உணவிடுகை உணவின் இனிமையைக் கெடுக்குமாகையாலே போ₄ஜ்ய விரோதி₄யாகிறது. c 'வருபவர்க்கெல்லாம் விருந்திடுகிறார்' என்னும் புகழுக்காகவோ, 'விருந்துண்பவர்கள் தன்னைப்பூஜிப்பார்கள்' என்னும்நினைவுடனேயோ 'எனக்குச் சொந்தமான உணவை நான் இடுகிறேன்' என்னும் அஹங்காரத்தோடு இடுகிற உணவைக் கொள்ளாமல் "நெய்யமர் இன்னடிசில்" [திருவாய் 6-8-2] "நல்லதோர் சோறு" [திருப்பல்லாண்டு 8] "உண்ணுஞ்சோறு" [திருவாய் 6-7-1] என்று ஆழ்வார்களால் கொண்டாடப்பட்ட உணவைக்கொள்வது ஸ்வரூபத்துக்குத் தக்க போ₄ஜனமாகும்.

### இருநூற்றெண்பத்தெட்டாம் வார்த்தை

a ஆய்க்குலத்தைச் சேர்ந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவர். 'ஏற்கனவே திருமலைக்கு எழுந்தருளும்போது விரும்பி அமுதுசெய்ததால் இப்போதும் பாலைப் பக்குவமாகக் காய்ச்சிக்கொண்டு வந்தேன்' என்று

வர் விரும்பி அமுதுசெய்ய, மீண்டு எழுந்தருளுகிறபோதும் அப்படியே பாங்காகக் கொண்டுவந்து பரிமாற, 'இது நன்று யிருந்ததீ' என்ன; ஸ்ரீவைஷ்ணவர் 'முன்பு விரும்பி அமுது செய்தவாறே, இப்போதும் பாங்காகக் கொண்டுவந்தேன்' என்ன; 'அங்ஙனேயோ?' என்று ஒருநாள் உபவஸித்தருளினார்.

## இருநூற்றெண்பத்தொன்பதாம் வார்த்தை

ஒரு ஸ்ரீவைஷ்ணவரை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அமுது செய்யப்பண்ணும்போது, இழவும், இரப்பும், இறுமாப்பும், துணுக்கமும், சோகமும், வாழ்வும் உண்டாகவேண்டும் என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தருளினார்.

---

இடைக்குல ஸ்ரீவைஷ்ணவர் சொன்னதிலிருந்து தன் பாலைத் தான் கொண்டுவந்து ஸமர்ப்பிப்பதுபோன்ற அஹங்காரம் த்₄வனிக்கையாலே, எம்பெருமானார் தாம் அதை எடுத்துக்கொண்டதுக்கு வருந்தி ஒருநாள் உபவாஸமிருந்தார் என்று தாத்பர்யம்.

### இருநூற்றெண்பத்தொன்பதாம் வார்த்தை

ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மற்றொரு ஸ்ரீவைஷ்ணவரை அமுது செய்யப் பண்ணும்போது விருந்துபடைப்பவர்க்கு ஆறு கு₃ணங்கள் இருக்கவேண்டும் என்பது ஆச்சான்பிள்ளையின் திருவுள்ளம். அவை யாவன — (1) இழவு. அதாவது — 'இந்த ஸ்ரீவைஷ்ணவரின் பெருமைக்குத் தக்கபடி நாம் அமுது படைக்கப்பெற்றிலோம்' என்னும் குறைபாடு. (2) இரப்பு. அதாவது — தான் இவருக்கு அமுது படைப்பதாக எண்ணுமல், ஒரு ஸ்ரீவைஷ்ணவர் நமது குடிசையில் அமுதுண்ணப்பெற்றது நமது பா₄க்₃யமன்றோ; மேலும் அடிக்கடி இது நேரவேண்டுமே என்னும் எண்ணம். (3) இறுமாப்பு. அதாவது—ஸ்ரீவைஷ்ணவர் நம் குடிசையில் அமுதுசெய்யப் பெற்றதால் நமக்கு நிகரில்லை என்னும் ஸாத்விககர்வம். (4) துணுக்கம். அதாவது—அந்த ஸ்ரீவைஷ்ணவருக்குத் தான் இட்ட அமுது பாங்காயிருந்ததோ? இல்லையோ? அமுதுபடைக்கும்போது அபசாரம் ஏதும் நேர்ந்துவிட்டதோ ? என்னும் ப₄யம். (5) சோகம். அதாவது — ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அமுதுபடைக்கும் பா₄க்₃யத்தை இத்தனை நாள் இழந்திருந்தோமே என்னும் வருத்தம். (6) வாழ்வு. அதாவது — "அத்₃ய மே ஸபலம் ஜந்ம" [இப்போதே என்பிறவி பயன்பெற்றது] என்கிறபடியே ஸ்ரீவைஷ்ணவருக்கு அமுதுபடைத்ததாலே தான் வாழ்ச்சி பெற்றதாக நினைத்திருக்கை

## இருநூற்றுத்தொண்ணூறும் வார்த்தை

விளைநகர்ப்பிள்ளை (பிள்ளைநகரிப்பிள்ளை) ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்யப்பண்ணுவர் என்று பட்டர் கேட்டு, 'இதுக்கு அபி₄ப்ராயமறியவேணும்' என்று அவர் திருமாளிகையேற எழுந்தருள, அமுதுசெய்யக் காலமானவாறே 'அகத்துக்கு எழுந்தருளவேண்டும்' என்ன; ப₄ட்டரும் பிள்ளையை யழைத்து, 'வாரீர் பிள்ளாய்! நீர் என்ன நினைத்து அமுது செய்யப்பண்ணுவீர்' என்ன; 'அடியேன் பின்வரும் முதலிகளுக்கு முன்பு எழுந்தருளின முதலிகள் திருப்போனகப் பானை ஒழிச்சுவரென்கிற இது ப்ரயோஜநமாக நினைத்திருப்பன்' என்ன, ப₄ட்டரும் முதலிகள் முகம் பார்த்து ' இச்சொல்லற்ற சோறுண்டாகில் உஜ்ஜீவநம் ' என்று அருளினர்.

---

### இருநூற்றுத்தொண்ணூறும் வார்த்தை

விளைநகர்ப்பிள்ளை அல்லது பிள்ளைநகரிப்பிள்ளை என்பவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு யதேஷ்டமாக விருந்துபடைக்கிறார் என்று கேள்விப்பட்ட ப₄ட்டர் ஒருநாள் அவரிடம் சென்று அவரால் விருந்துக்கு அழைக்கப்பட்டபோது, அவருடைய கருத்தை அறியவேண்டும் என்பதற்காக 'நீர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அமுதுபடைக்கும்போது என்ன நினைத்து அமுதுசெய்யப் பண்ணுவிர் ?' என்று கேட்டார். அதற்குப் பிள்ளை 'அடியேன் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸம்ருத்₃த₄மாக அமுதுசெய்யவேணும் என்று நினைப்பவன்; முதல் பந்தியில் அமரும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அடுத்த பந்திக்கு வருபவர்களுக்கு உணவு இல்லாதபடி நிறைய உண்ணவேண்டும்; ஒவ்வொரு பந்தியிலும் நான் புதிதாக ஏராளமாகச் சமைக்கவேணும் என்று நினைத்திருப்பேன்' என்றார். இது 'ஏராளமாக விருந்திட்டோம்' என்னும் புகழுக்காக இவர் விருந்திடுவதைக் காட்டுகிறது. ஆகையால் ப₄ட்டர் "இவர் ஸ்ரீவைஷ்ணவ ததீ₃யாராத₄னத்தை விசேஷமாகச் செய்தும் இப்படிப் புகழை விரும்பும் சொல்லைச் சொல்லாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்தாராகில் இவருக்கு ஆத்மோஜ்ஜீவனம் ஆகும்" என்று அருளினர்.

### இருநூற்றுத்தொண்ணூற்றோராம் வார்த்தை

a இந்த வாக்யம் ஸ்ரீவசனபூ₄ஷணம் 297-வது சூர்ணையில் விவரிக்கப்பட்டுள்ளது. "மடிதடவாத சோறுவது — முந்துற ஆத₃ரத்தோடே இட்டு, பின்னை ' இதுக்குக் காசு தரலாகாதோ ' என்று

## இருநூற்றுத்தொண்ணூற்றோராம் வார்த்தை

a ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே அமுதுசெய்தது மடிதடவாத சோறென்றிறே; b இச்சொல்லற்ற சோறிறே அது; அச்சோறு உண்ணுஞ்சோறு.

## இருநூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

பிணச்சோறும், மணச்சோறும், விலைச்சோறும், புகழ்ச்சோறும், பொருட்சோறும், எச்சிற்சோறும் இவை ஆறும் த்யாஜ்யம் ; மற்றைச்சோறிறே வைஷ்ணவனுண்ணுஞ்சோறு என்று தீர்த்தங்குடிஜீயர் அருளிச்செய்வர்.

---

மடிச்சீரை ஶோதிக்கைக்காக மடியைப் பிடித்துத் தடவி, உண்டவன் நெஞ்சு உளையும்படி (வருந்தும்படி) பண்ணும் ப்ரயோஜநாந்தரபரர் இடும் சோறு போலன்றிக்கே, உண்டவன் நெஞ்சு உகக்கும்படி அநந்யப்ரயோஜனமான (வேறு பயன்கருதாத) சோறு. இப்படி இருந்துள்ள சோறிறே ...... பாவநத்வபோ₄க்₃யத்வப்ரஶஸ்தமாம்படி ஸ்ரீவிது₃ரர் அவனுக்கு ஸமர்ப்பித்தது' என்னும் மாமுனிகள் வ்யாக்₂யான ஸ்ரீஸூக்தி இங்கு அநுஸந்தி₄க்கத் தக்கது. b முன் வார்த்தையில் புகழுக்காக இடப்படாத சொல்லற்ற சோறு என்று ப₄ட்டர் அருளிச்செய்ததும் இத்தகைய சோறே. இதையே ஆழ்வார். "உண்ணுஞ்சோறு" [திருவாய் 6-7-1] என்று அருளிச்செய்தார்.

### இருநூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

உண்ணுச்சோறுகளை ஆறு வகையாகக்காட்டி, மற்றைச்சோறே உண்ணும் சோறு எனக்காட்டுவது இவ்வார்த்தை. ஆறு வகை உண்ணுச் சோறுகளாவன — (1) பிணச்சோறு - அதாவது — சாவு தீட்டுள்ள வீட்டில் இடப்படும் சோறு. (2) மணச்சோறு-அதாவது— திருமணத்தின்போது பலவிதமான அநாசாரங்களோடு இடப்படும் சோறு. (3) விலைச்சோறு - அதாவது— விலைக்கு விற்கப்படும் சோறு. லாப₄நோக்குடன் சமைக்கப்படுமாகையாலே பல அநாசாரங்களும் கலப்படங்களும் கலந்திருக்கும், (4) புகழ்ச்சோறு - அதாவது—புகழுக்காக இடப்படும் சோறு. அக்காரணத்தினாலேயே விலக்கத்தக்கது. (5) பொருட்சோறு - அதாவது ஒரு ப்ரயோஜனத்தை விரும்பி ஒருவருக்கு இடப்படும் சோறு. இதுவும் விலைச்சோறு போன்றதாகையாலே விலக்கத்தக்கது. (6) எச்சிற்சோறு - அதாவது — மற்ற தெய்வங்களுக்குப் படைத்ததாலேயோ, அவைஷ்ணவர்கள் உண்டதா

## இருநூற்றுத்தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

விஷயப்ராவண்யத்தில் க₃ணிகாஸ்பர்ஶம் வித₄வாஸ்பர்ஶத்தைப் பற்ற யாக₃ஸமாநம்; வித₄வாஸ்பர்ஶம் ப்₃ராஹ்மண ஸ்த்ரீ ஸ்பர்ஶத்தைப்பற்ற யாக₃ஸமாநம்; ப்₃ராஹ்மணீஸ்பர்ஶம் மாத்ரு ஸ்பர்ஶத்தைப் பற்ற யாக₃ஸமாநம்; மாத்ருஸ்பர்ஶம் வைஷ்ணவீ ஸ்பர்ஶத்தைப் பற்ற யாக₃ஸமாநம்.

## இருநூற்றுத்தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

தே₃ஹம் திரள்பொருது; ஸ்வரூபம் தனிபொருது; ப₄க₃வத்₃ விஷயத்துக்கு வெளியும் திரளும் தேட்டமாயிருக்கும்; க்ஷுத்₃ர விஷயத்துக்கு இருளும் தனிமையும் தேட்டமாயிருக்கும்.

---

லேயோ அவர்களுடைய எச்சில் போன்றதாய் மிகுந்திருக்கும் சோறு. இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விலக்கத்தக்கது. இவ்வாறு வகைப்பட்ட சோறிலும் சேராததாய், ஸ்வயம் ப்ரயோஜனமாக இடப்படும் ப₄க₃வத்₃பா₄க₃வத ப்ரஸாத₃மே உண்ணுஞ்சோறு என்று கருத்து.

### இருநூற்றுத்தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

தன் மனைவியல்லாத ஸ்த்ரீயோடு உறவு கொள்வது மிகவும் தாழ்ந்தது. அப்படி உறவு கொள்வதிலும் பாபத்தின் க₄னத்தைப் பார்க்கும்போது ஒன்றுக்குமேல் ஒன்று கொடியதாகப் பல உறவுகளைக் காட்டுகிறது இவ்வார்த்தை. முந்தியது பிந்தியதைக் காட்டிலும் யாக₃ஸமானம் (சிறந்தது) என்று இவ்வாக்யங்கள் இருந்த போதிலும், முந்தியதைக் காட்டிலும் பிந்தியது கொடியது என்று கருத்தைக் கொள்ளவேணும். தொழிலாக இதை ஏற்றுக்கொண்ட த₃ாஸீ ஸம்பே₄ாக₃த்தைக் காட்டிலும் பரபுருஷனைத் தொடத்தகாத வித₄வாஸம்பே₄ாக₃ம் கொடியது. அதைவிட ஒரு ப்₃ராஹ்மணனுக்கு உரிமைப்பட்டிருக்கும் பத்னீ ஸம்பே₄ாக₃ம் கொடியது. அதைவிட தன்னைப் பெற்ற தாயோடு உறவு கொள்வது மிகக்கொடியது. அதைவிட ஒரு வைஷ்ணவனின் பத்னியோடு உறவுகொள்வது மிகமிகக் கொடியது. இதற்குப் பரிஹாரமேயில்லை என்று கருத்து.

### இருநூற்றுத்தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

ஒரு ஸ்த்ரீயும் புருஷனும் உடலைக்கொண்டு இன்பம் அநுப₄விக்கும்போது பலர் கூடிய திரளாயில்லாமல் தனியாயிருக்குமிடம் தேடிப் போகவேணும். ப₄ாக₃வத ஶேஷத்வமாகிற ஆத்மாவின் ஸ்வ

## இருநூற்றுத்தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை

விஷயஸ்பர்ஶம் த்₃விவித₄ம்; அவிலக்ஷண விஷயஸ்பர்ஶமென்றும் விலக்ஷண விஷயஸ்பர்ஶமென்றும்; அவிலக்ஷண விஷயஸ்பர்ஶம் தே₃வதாந்தத்தில் ஜலகார்யம்போலே ப்ராயஶ்சித்தஸாத்₄யம்; விலக்ஷணவிஷயஸ்பர்ஶம் திருநந்த₃வநத்தில் ஜலகார்யம்போலே யாவதா₃த்மப₄ாவி நரகஹேது

## இருநூற்றுத்தொண்ணூற்றாறாம் வார்த்தை

ப₄க₃வத₃நுப₄வம் பண்ணுமவனுக்கு விஷயாநுப₄வத்தில் அந்வயமில்லை; இவ்வர்த்த₂த்தை ஆழ்வார்கள் பலவிடங்களிலும் அருளிச்செய்தார்கள்.

---

ரூபத்தைப் பார்க்கும்போது அது தனிமையைப் பொறுக்காது. ஆகையால் ப₄க₃வத்₃விஷயத்தை அநுப₄விக்கும்போது அடியார் குழாங்களாகிற திரளும், அவர்களோடு கலந்து பரிமாறுகைக்கு வெளியும் (விஸ்தாரமான வெளிச்சமான இடமும்) தேவையாயிருக்கும். இதுக்கு நேர்மாறாக ஆண் பெண் உடலுறவுக்கு இருளும் தனிமையும் தேவையாயிருக்கும்.

### இருநூற்றுத்தொண்ணூற்றைந்தாம் வார்த்தை

பத்னியல்லாத ஸ்த்ரீயோடு உறவுகொள்வது மிகத் தாழ்ந்ததே. ஆனாலும் அதிலும் ஏற்றத்தாழ்வு உண்டு என்று 293ம் வார்த்தையில் ஒருவகையில் காட்டப்பட்டதுபோலே மற்றொருவகையில் காட்டப்படுகிறது இங்கு. அதாவது–அவைஷ்ணவஸ்த்ரீயோடு உறவுகொள்வது இதர தெய்வங்களின் ஆலயத்தில் சிறுநீர் கழிப்பதுபோலே ப்ராயஶ்சித்தத்தால் போக்கிக்கொள்ளத்தக்கது. வைஷ்ணவஸ்த்ரீயோடு உறவுகொள்வது எம்பெருமானுக்குரிய நந்தவனத்தில் சிறுநீர் ழிப்பதுபோலே ஆத்மா உள்ளவரை நரகத்தை அளிப்பதாய் ்ராயஶ்சித்தத்தாலும்போக்கடித்துக்கொள்ளமுடியாதது. இதுகொண்டு இதர ஸ்த்ரீகளிடம் உறவுகொண்டுவிடலாம் என்று பொருள் கொள்ளக்கூடாது. எம்பெருமானை அநுப₄விப்பவனுக்கு இதர ஸ்த்ரீ ஸம்பே₄ாக₃மே கூடாது. விஹிதவிஷயமான தன் மனைவியின் ஸம்பே₄ாக₃மும் விரைவிலே விடத்தக்கது.

### இருநூற்றுத்தொண்ணூற்றாறாம் வார்த்தை

'ஸ்த்ரீஸம்பே₄ாக₃ம் ஸ்ரீவைஷ்ணவனுக்குக் கூடாது' என்பதை ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு விவரிக்கிறது இந்த வார்த்தை.

எங்ஙனேயென்னில்;- * வாசுதேவன் வலையுளகப்படுதல், * மாதரார் கயற்கணென்னும் வலையிலகப்படுதல், * மதுரக் கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத்தோளிலே அகப்படுதல், * சாந் தேந்துமென்முலையார் தடந்தோளிலே அகப்படுதல், * வான வர்க்கு வன்துணையான * அரங்கத்துறையுமின்துணைவனைத் துணையென்றிருத்தல், * அவரவர் பணைமுலை துணையென் றிருத்தல், * அப்பொழுதைக்கப்பொழுதென் ஆராவமுதத் தைப் பாநம் பண்ணுதல், * பாவையர் வாயமுதத்தைப் பாநம்பண்ணுதல், * நால்வேதப்பயனைப்பேணுதல், * மாதரார் வனமுலைப்பயனைப் பேணுதல், ஒன்று இது வாதல்—ஒன்று அதுவாதல் என்று ஏவமாதி3களாலே ப3ஹுவித4மாக அருளிச் செய்தார்கள்.

---

"மாதரார் கயற்கணென்னும் வலையுள் பட்டழுந்துவேனை" [திருமாலை 16] என்னும் வலையில் அகப்படாமல், "வாசுதேவன் வலையுளே—அகப்பட்டேன்" [திருவாய் 5-3-6] என்னும் வலையிலே அகப்படவேணும். "சாந்தேந்து மென்முலையார் தடந்தோள்" [பெரியதிரு 6-3-4] என்னும் தோளிலே அகப்படாமல் "மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத்தோள்" [நாச்-திரு 9-1] என்னும் தோளிலே அகப்படவேணும். "அவரவர் பணைமுலை துணையா" [பெரியதிரு 1-1-2] என்னும் துணையைக்கொள் ளாமல் "வானவர்க்கு வன்துணை அரங்கத்துறையு மின்துணைவன்" [பெரியதிரு 3-7-6] என்னும் துணையைக்கொள்ளவேணும். "பாவையர் வாயமுதமுண்டவாறும்" [பெரியதிரு 1-3-5] என்கிற வாயமுதத்தைப் பருகாமல் "அப்பொழுதைக்கப்பொழுதென் ஆராவமுதமே" [திருவாய் 1-5-4] என்னும் ஆராவமுதத்தைப் பருகவேணும். "மாதரார் வன முலைப்பயனே பேணினேன்" [பெரியதிரு 1-6-1] என்றதை ப்ராப்ய மாகக்கொள்ளாமல் "நான்குவேதப்பயன்" [திருவாய் 3-4-6] என்றதை ப்ராப்யமாகக்கொள்ளவேணும். இங்கு சொன்னவற்றில் அஸ்திரமாய் அல்பமாய் முதலிலெடுக்கப்பட்டதான ஸ்த்ரீஸம்போ4கத்தில் ஈடுபட் டால் ஆத்மநாஶமே ஏற்படும். அநந்தமாய், நித்யமாய், இரண்டா வதாக எடுக்கப்பட்டதான பரமாத்மாநுப4வத்தில் ஈடுபட்டால் ஆத்மா உஜ்ஜீவனமடையும் (உய்வுபெறும்) என்று ஆழ்வார்கள் பலவிதமாக அருளிச்செய்தார்கள்.

## இருநூற்றுத்தொண்ணூற்றேழாம் வார்த்தை

அக்கரைச்சடியார் வார்த்தை; உச்சியம்போதினில் க்ஷுத்து நலியாநின்றதென்று என்பக்கலிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்தால் க்ஷுந்நிவ்ருத்திபண்ணி உகப்பிக்குமோபாதி, ப்ரக்ருதிவ்யாதி₄ நலியாநின்றதென்று என்பக்கலிலே ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் வந்தால் ப்ரக்ருதிவ்யாதி₄யை ப்ரக்ருதியை யிட்டு ஶமிப்பித்தாலாகாதோ? என்ன, நம்பிள்ளை அருளிச் செய்தபடி;— வாரீர், தாய் நெடுங்காலம் மலடுநின்று பெற்ற தொரு பிள்ளை, பித்தேறி உன்பக்கலிலே 'உறிபோட்டுக் கொள்ளுகைக்கு கயிறு தா, கழுத்தை அறுத்துக்கொள்ளு கைக்கு அரிவாள் தா' என்று வந்தால் கொடாதொழிகிறது அவன் ஶரீரநாசத்தை அஞ்சியன்றோ; அவ்வளவும் போராதோ ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய ஸ்வரூபநாஶம் என்று

---

### இருநூற்றுத்தொண்ணூற்றேழாம் வார்த்தை

*அக்கரைச்சடியார் - தா₃ஸித் தொழில் செய்துவந்த பெண்பிள்ளை என்று விளங்குகிறது. அந்த அம்மையார் நம்பிள்ளையிடம் கேட்ட கேள்வியாவது – "உச்சிப்போதில் வெய்யில் கொளுத்தும்போது 'பசிக்கிறது' என்று என்னிடம் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்தால் அவருக்கு உணவிட்டுப் பசியாற்றி அனுப்புவது போலே, 'ஶரீரப் பசியாகிற காமம் என்னைத் துன்புறுத்துகிறது' என்று சொல்லிக்கொண்டு என்னிடம் (இராப்போதில்) ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்தால் என்னுடைய ஶரீரத்தைக்கொடுத்து அவருடைய ஶரீரப்பசியைப் போக்கினுல் தவறென்ன?" என்பது. இதற்கு நம்பிள்ளை அருளிச்செய்திருப்பதாவது — "ஒரு தாய் நெடுங்காலம் பிள்ளையில்லாமலிருந்து தவம் புரிந்து பெற்றதொரு பிள்ளை பைத்தியம் பிடித்துப்போய் உன்னிடம் வந்து 'சுருக்குப்போட்டுக்கொள்வதற்குக் கயிறு தா, கழுத்தை அறுத்துக்கொள்ள அரிவாள் தா' என்று கேட்டால் அவன் ஶரீரம் அழிந்துவிடுமேயென்று நீ அவன் கேட்டதைக் கொடுக்காமலிருப்பாயன்றே. அதுபோலே ஒரு ஸ்ரீவைஷ்ணவன் காமப்பைத்தியம் பிடித்து உன்னிடம் வந்தாலும் அவனுக்கு ஸ்வரூபநாஶம் ஏற்படுமே என்றஞ்சி நீ இணங்காதிருப்பதே தக்கது" என்பது. பசியோடு வருபவனுக்குச் சோறிடும் த்₃ருஷ்டாந்தம் ஸ்வரூபநாஶம் விளைக்கும் இவ்விஷயத்தில் பொருந்தாது என்று கருத்து. இதைக்கேட்ட பிறகு அக்கரைச்சடியார் தம் தொழிலைக் கைவிட்டிருப்பார் என்பது சொல்லாமலேயே விளங்கும்.*

## இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் பத்து முகமாக விரோதி₄க்கும்; அவையாவன — ஸ்வாநர்த்த₂ம், பராநர்த்த₂ம், ஶாஸ்த்ரவிரோத₄ம், ப₄க₃வந்நிக்₃ரஹம், பா₄க₃வதநிக்₃ரஹம், ஆசார்யநிக்₃ரஹம், விரோதி₄வர்த்த₄கத்வம், ஸ்வரூபவிரோத₄ம், உபாயவிரோத₄ம், உபேயவிரோத₄ம், தே₃ஶாந்தராப₄ாவம். தே₃வதாந்தரபரனுக்கு காலாந்தரேணவாகிலும் பா₄க₃வதனாகைக்கு யோக்₃யதையுண்டு; விஷயப்ரவணனுக்கு நரக

---

### இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவன் தகாத ஸ்த்ரீஸம்போ₄க₃த்தில் ஈடுபடுவதால் பத்து வகையான விரோத₄ம் ஏற்படும். (1) இவன் உடல் கெட்டுப் போமாகையாலே இவனுக்கே அநர்த்த₂ம். (2) இவனைப் பார்த்துப் பிறர் கெட்டுப்போவார்களாகையாலே பிறருக்கும், இவனால் கெடுக்கப்படும் ஸ்த்ரீக்கும், உறவினர்களுக்கும் அநர்த்த₂ம். இவ்விரண்டு அநர்த்த₂ங்களும் இம்மையிலேயே காணக்கூடியவை. (3) 'பரதா₃ரக₃மனம் முதலானவை கூடாது. செய்தால் நரகம் வரும்' என்னும் ஶாஸ்த்ரத்தையும் மீறியதாகும். (4) "**ஆஜ்ஞாச்சே₂தீ₃ மம த்₃ரோஹீ**" [சாஸ்த்ர விதி₄களை மீறுகிறவன் எனக்கு த்₃ரோஹி] என்கிறபடியே எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறியதால் எம்பெருமானுடைய கோபமும் ஏற்படும். (5) தகாத செயல்களைச் செய்கையாலே பா₄க₃வதர்களுடைய கோபமும் ஏற்படும். (6) அதே காரணத்தால் ஆசார்யனுடைய கோபமும் ஏற்படும். (7) எம்பெருமானை அடைவதற்குத் தடையான து₃ஷ்ட ஸஹவாஸம் முதலானவற்றையும் வளர்க்கும். "தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை" [திருமாலை 16] என்றது காண்க. (8) இவனுடைய அநந்யபோ₄க₃த்வ ஸ்வரூபத்துக்கு 'ஸ்த்ரீ போ₄கம் இனியது' என்னும் நினைவு தடையாகும். (9) ஸ்த்ரீ போ₄க₃த்துக்காக முயற்சிகளைச் செய்ய வேண்டி வருமாகையாலே எம்பெருமானே உபாயம் என்னும் நினைவுக்கும் தடையாகும். (10) 'எம்பெருமானுடைய கைங்கர்யமே இனியது' என்னும் எண்ணத்திற்கும் முரண்படுமாகையாலே உபேய விரோத₄மும் ஏற்படும். (11) "கடையறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண்கொடானே" [திருவாய் 8-2-8] என்கிறபடியே ஸ்த்ரீ போ₄க₃த்தில் ஈடுபட்டவனுக்குப் பரமபத₃ ப்ராப்தியும் கிட்டாது. "மற்றோர் தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்...ஆடு

மொழிய ப₄லமில்லை; ஆகையாலே ஸ்ரீவைஷ்ணவன் விஷய ப்ரவணனாகையாவது-முதலை முடியோடே விழுங்குமாபோலே— என்று ஆச்சான்பிள்ளை.

## இருநூற்றுத்தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

முமுக்ஷுவுக்கு விஷயப்ராவண்யமும், தே₃வதாந்தர ப₄ஜநமும் ஸமாநம்;- a வெற்றிலையும் சந்த₃நமுமாய்ப்புக்குக் காமனை அர்ச்சிக்கிறத்தோடு, எருக்கும் தும்பையுங்கொண்டு ருத்₃ரனை அர்ச்சிக்கிறத்தோடு வாசியில்லாமையாலே, b தே₃வ தாந்தரந்தான் இதுக்கு ஸத்தை;-c "மாரனார் வரிவெஞ்சிலைக் காட்செய்யும் பாரினார்". தே₃வதாந்தரபரனுக்கு அநந்தர ஜந்மத்திலே வைஷ்ணவனாகைக்கு யோக்₃யதையுண்டு; விஷய பரனுக்கு நரகமொழிய ப₄லமில்லை; ஆகையாலே தே₃வ தாந்தர ப₄ஜநத்திலும் க்ரூரம். d ஸௌசஸாபேக்ஷன் ஸ்நா நம்பண்ணிவருமாபோலேகாண் — விஷயப்ரவணன் ப₄க₃வத்

---

புட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே" [திருவாய் 4-10-7] என்கிறபடியே மற்ற தெய்வங்களை ஆஶ்ரயிப்பவன் பல ஜன்மங் களுக்குப் பிறகாவது ஸ்ரீவைஷ்ணவன் ஆவதற்கு இடமுண்டு. ஸ்த்ரீ போ₄கத்தில் ஈடுபட்டவனுக்கு மேலும் மேலும் அதில் ஈடு பாடே வளருமாகையாலே, எத்தனை ஜன்மமானாலும் நரகமே ப₂லம். ஆகையாலே ஸ்ரீவைஷ்ணவன் தகாத ஸ்த்ரீ போ₄கத்தில் ஈடுபட்டா னாகில் காலைப் பிடித்த முதலை தலைவரை விழுங்குவது போலே அடி யோடு ஸ்வரூப நாஶமே ஏற்படும். இது பெரியவாச்சான் பிள்ளை யின் வார்த்தை.

### இருநூற்றுத்தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

a காமத்தை வளரச்செய்யும் வெற்றிலை, சந்த₃னம் முதலான வற்றை உபகரணங்களாகக் கொண்டு காமாநுப₄வம் செய்வதே காமனை அர்ச்சிப்பதாகும். b தே₃வதாந்தரங்களில் ஒன்றான காமனே இக்காமாநுப₄வ ஸத்தா ஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளுக்குக் காரணம். c"மாரனார் வரிவெஞ்சிலைக் காட்செய்யும் பாரினார்" [பெருமாள்திரு 3-3]. d வ்ருத்₄தி₄ ஆஶௌசம் முதலான தீட்டுக்களை உடையவன் குளித்து விட்டு வந்தாலும் தொடத்தக்கவனல்லன். கோவில்கள் போன்ற இடங்களிலும் நுழையத்தக்கவனல்லன். அதுபோலவே ஸ்த்ரீ விஷ யத்தில் மண்டினவனும் எம்பெருமானிடம் ஈடுபடுவது தகாததும்,

## இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் பத்து முகமாக விரோதி₄க்கும்; அவையாவன—ஸ்வாநர்த்த₂ம், பராநர்த்த₂ம், ஶாஸ்த்ரவிரோத₄ம், ப₄க₃வந்நிக்₃ரஹம், பா₄க₃வதநிக்₃ரஹம், ஆசார்யநிக்₃ரஹம், விரோதி₄வர்த்த₄கத்வம், ஸ்வரூபவிரோத₄ம், உபாயவிரோத₄ம், உபேயவிரோத₄ம், தே₃ஶாந்தராப₄ாவம். தே₃வதாந்தரபரனுக்கு காலாந்தரேணவாகிலும் பா₄க₃வதனுக்கு யோக்₃யதையுண்டு; விஷயப்ரவணனுக்கு நரக

---

**இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை**

ஸ்ரீவைஷ்ணவன் தகாத ஸ்த்ரீஸம்பே₄ாக₃த்தில் ஈடுபடுவதால் பத்து வகையான விரோத₄ம் ஏற்படும். (1) இவன் உடல் கெட்டுப் போமாகையாலே இவனுக்கே அநர்த்த₂ம். (2) இவனைப் பார்த்துப் பிறர் கெட்டுப்போவார்களாகையாலே பிறருக்கும், இவனால் கெடுக்கப்படும் ஸ்த்ரீக்கும், உறவினர்களுக்கும் அநர்த்த₂ம். இவ்விரண்டு அநர்த்த₂ங்களும் இம்மையிலேயே காணக்கூடியவை. (3) 'பரதா₃ரக₃மனம் முதலானவை கூடாது. செய்தால் நரகம் வரும்' என்னும் ஶாஸ்த்ரத்தையும் மீறியதாகும். (4) "**ஆஜ்ஞாச்சே₂தீ₃ மம த்₃ரோஹீ**" [சாஸ்த்ர விதி₄களை மீறுகிறவன் எனக்கு த்₃ரோஹி] என்கிறபடியே எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறியதால் எம்பெருமானுடைய கோபமும் ஏற்படும். (5) தகாத செயல்களைச் செய்கையாலே பா₄க₃வதர்களுடைய கோபமும் ஏற்படும். (6) அதே காரணத்தால் ஆசார்யனுடைய கோபமும் ஏற்படும். (7) எம்பெருமானை அடைவதற்குத் தடையான து₃ஷ்ட ஸஹவாஸம் முதலானவற்றையும் வளர்க்கும். "தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை" [திருமாலை 16] என்றது காண்க. (8) இவனுடைய அநந்யபே₄ாக₃த்வ ஸ்வரூபத்துக்கு 'ஸ்த்ரீ பே₄ாகம் இனியது' என்னும் நினைவு தடையாகும். (9) ஸ்த்ரீ பே₄ாக₃த்துக்காக முயற்சிகளைச் செய்ய வேண்டி வருமாகையாலே எம்பெருமானே உபாயம் என்னும் நினைவுக்கும் தடையாகும். (10) 'எம்பெருமானுடைய கைங்கர்யமே இனியது' என்னும் எண்ணத்திற்கும் முரண்படுமாகையாலே உபேய விரோத₄மும் ஏற்படும். (11) "கடையறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண்கொடானே" [திருவாய் 8-2-8] என்கிறபடியே ஸ்த்ரீ பே₄ாக₃த்தில் ஈடுபட்டவனுக்குப் பரமபத₃ ப்ராப்தியும் கிட்டாது. "மற்றோர் தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்...ஆடு

## முந்நூறும் வார்த்தை

முமுக்ஷுவுக்கு தே₃வதாந்தரப்ராவண்யமும், அர்த்த₂ப்ராவண்யமும், விஷயப்ராவண்யமும் மோக்ஷப்ரதிப₃ந்த₄கம்; அதில் இரண்டு ப்ராவண்யமுண்டானல் காலாந்தரத்திலே ஈடேறலாம்; ஒரு ப்ராவண்யம் ப்ரதிப₃ந்த₄கமாயேவிடும்.

## முந்நூற்ருேராம் வார்த்தை

திருவழுந்தூராளொரு ஸ்த்ரீ, சோழதி₃வாகரர் ஸ்ரீபாத₃த்திலே நல்வார்த்தை கேட்கவேண்டுமென்று வர; அவர் ப்ரக்ருதிமான்கள் சொல்லும் வார்த்தையைச் சொல்ல; 'ஊருகிறத்துக்கு அஞ்சி உள்ளே புகுந்த என்னை உயிர்க்கழுவில் வைத்தீரே' என்று அவள்சொல்ல, பரீக்ஷித்தோங்காண் என்று நல்வார்த்தை சொன்னர். கடக்கத்தப்பிள்ளை—மின்

---

வுடன் ஆசார்யாபி₄மானம் ஏற்பட்டுவிடும். அது ஏற்பட்டவுடன் முற்கூறிய அறுந்தலையான வழிக்கும் அருநரகத்துக்கும் எதிர்த்தட்டான அர்ச்சிராதி₃ மார்க்க₃மும் பரமபத₃மும் ப₂லமாகக் கிடைக்கும்.

### முந்நூறும் வார்த்தை

மோக்ஷமடைய விரும்புகிறவனுக்கு தே₃வதாந்தரங்களில் ஈடுபாடும் பணத்தில் ஈடுபாடும் இருந்தாலும் அந்த ஜன்மத்திலேயே முதிர்ந்த வயஸ்ஸிலாவது அல்லது ஜந்மாந்தரத்திலாவது அந்த ஈடுபாடுகள் நீங்கி மோக்ஷம் ஏற்பட இடமுண்டு. ஸ்த்ரீவிஷயத்தில் மிகுதியான ஈடுபாடு இருந்தால் அது பல ஜன்மங்களுக்குத் தொடர்ந்து ஜன்மாந்தரத்திலும் மோக்ஷமில்லாதபடி செய்துவிடும்.

### முந்நூற்ருேராம் வார்த்தை

திருவழுந்தூரில் வாழ்ந்துவந்த ஒரு ஸ்த்ரீ, "சோழதி₃வாகரர்" என்பவரை ஆசார்யராக வரித்து அவரிடம் நல்வார்த்தை கேட்பதற்காக ஏகாந்தத்தில் வந்தாள். அவர், காமுகர்கள் சொல்லும் வார்த்தையை அவளிடம் சொல்லத் தொடங்கினர். அதற்கு அவள், "துரத்திவரும் (ஸம்ஸாரமாகிற) பாம்புக்கு அஞ்சி உமது வீட்டில் புகுந்தால், நீர் என்னை உயிரோடு கழுவிலே ஏற்றப்பார்க்கிறீரே" என்று கூறினள். அதைக்கேட்ட அவர், "உன் ஶிஷ்யலக்ஷண பரிபூர்த்தியை அறிவதற்காகப் பரீக்ஷித்தேனேயொழிய வேறில்லை" என்று கூறி ஸமாதா₄னப்படுத்தி உபதே₃ஶித்தருளினர். கடக்கத்தப்பிள்ளை என்பவரும்; "மின்னலுக்கஞ்சி மரத்தடியை அடைந்தவர்களை அந்த மரம் இடி

## இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் பத்து முகமாக விரோதிக்கும்; அவையாவன — ஸ்வாநர்த்தம், பராநர்த்தம், ஶாஸ்த்ரவிரோதம், பகவந்நிக்ரஹம், பாகவதநிக்ரஹம், ஆசார்யநிக்ரஹம், விரோதிவர்த்தகத்வம், ஸ்வரூபவிரோதம், உபாயவிரோதம், உபேயவிரோதம், தேஶாந்தராபாவம். தேவதாந்தரபரனுக்கு காலாந்தரேணவாகிலும் பாகவதனாகைக்கு யோக்யதையுண்டு; விஷயப்ரவணனுக்கு நரக

---

### இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவன் தகாத ஸ்த்ரீஸம்போகத்தில் ஈடுபடுவதால் பத்து வகையான விரோதம் ஏற்படும். (1) இவன் உடல் கெட்டுப் போமாகையாலே இவனுக்கே அநர்த்தம். (2) இவனைப் பார்த்துப் பிறர் கெட்டுப்போவார்களாகையாலே பிறருக்கும், இவனால் கெடுக்கப்படும் ஸ்த்ரீக்கும், உறவினர்களுக்கும் அநர்த்தம். இவ்விரண்டு அநர்த்தங்களும் இம்மையிலேயே காணக்கூடியவை. (3) 'பரதாரகமனம் முதலானவை கூடாது. செய்தால் நரகம் வரும்' என்னும் ஶாஸ்த்ரத்தையும் மீறியதாகும். (4) "**ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ**" [சாஸ்த்ர விதிகளை மீறுகிறவன் எனக்கு த்ரோஹி] என்கிறபடியே எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறியதால் எம்பெருமானுடைய கோபமும் ஏற்படும். (5) தகாத செயல்களைச் செய்கையாலே பாகவதர்களுடைய கோபமும் ஏற்படும். (6) அதே காரணத்தால் ஆசார்யனுடைய கோபமும் ஏற்படும். (7) எம்பெருமானை அடைவதற்குத் தடையான துஷ்ட ஸஹவாஸம் முதலானவற்றையும் வளர்க்கும். "தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை" [திருமாலை 16] என்றது காண்க. (8) இவனுடைய அநந்யபோகத்வ ஸ்வரூபத்துக்கு 'ஸ்த்ரீ போகம் இனியது' என்னும் நினைவு தடையாகும். (9) ஸ்த்ரீ போகத்துக்காக முயற்சிகளைச் செய்ய வேண்டி வருமாகையாலே எம்பெருமானே உபாயம் என்னும் நினைவுக்கும் தடையாகும். (10) 'எம்பெருமானுடைய கைங்கர்யமே இனியது' என்னும் எண்ணத்திற்கும் முரண்படுமாகையாலே உபேய விரோதமும் ஏற்படும். (11) "கடையறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண்கொடானே" [திருவாய் 8-2-8] என்கிறபடியே ஸ்த்ரீ போகத்தில் ஈடுபட்டவனுக்குப் பரமபத ப்ராப்தியும் கிட்டாது. "மற்றோர் தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்...ஆடு

## முந்நூற்றுநாலாம் வார்த்தை

சோமாசியாண்டான், "ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் தன்னை உணர்ந்தாலுங்கூடாது; தன் ஸத்தையை உணர்ந்தாலுங்கூடாது; ஸம்ப₃ந்த₄த்தை உணர்ந்தாலுங் கூடாது; ஶரீரத்தை உணர்ந்தாலுங் கூடாது" என்றருளினார்.

## முந்நூற்றஞ்சாம் வார்த்தை

அந்தர்யாமியாய்நின்று ஸத்தையை நோக்கினீர்; a அழுந்திக் கிடந்த நாளிலே கரணங்களைத்தந்தீர்; b அக்கரணங்

---

அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோ₄க்₃யத்வம் எனும் ஆகாரத்ரயமுடைய தன்னை உணர்ந்தாலும் ஸ்த்ரீகளிடம் போ₄க்₃யபு₃த்₃தி₄வைப்பது அநந்யபோ₄க்₃யத்வமாகிற ஸ்வரூபத்துக்கு முரண்படுமாகையாலே ஸ்ரீவைஷ்ணவனுக்குத் தகாது. தன் ஸத்தைக்குக் காரணமான எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வம், ஸர்வவ்யாபகத்வம் முதலான பெருமைகளை உணர்ந்தாலும் எங்குமுள்ளவனும் எல்லாமுணர்ந்தவனுமான அவன் முன்னிலையிலேயே, ஸ்த்ரீவிஷயத்தில் ஈடுபடுவது தகாது என்று விளங்கும். எம்பெருமானுக்கும் மற்ற சேதனர்களுக்கும் உண்டான ப₄ர்த்ருப₄ார்யாஸம்ப₃ந்த₄த்தை உணர்ந்தாலும் எம்பெருமானுக்கு ப₄ார்யைபோலே போ₄க்₃யப் பொருளான ஒரு ஸ்த்ரீயிடம் இவன் போ₄க்₃யபு₃த்₃தி₄வைப்பது பொருந்தாது. "ஊனிடைச் சுவர்வைத்து என்புதூண் நாட்டி உரோமம் வேய்ந்து ஒன்பதுவாசல் தானுடைக் குரம்பை" [பெரிய திரு 1-6-9] என்று அநுஸந்தி₄க்கப்பட்ட ஶரீரத்தின் தாழ்வை அறிந்தாலும் ஒரு ஶரீரத்துக்கு இன்னொரு ஶரீரத்தை உணவாகக்கொள்கிற ஸ்த்ரீபோ₄க₃ம் தகாது" என்று.

### முந்நூற்றைந்தாம் வார்த்தை

இது ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த உபகாரஸ்ம்ருதி என்று தனியாகவும் அச்சிடப்பட்டுள்ளது. அதில் சில பாட₂பே₄த₃ங்கள் உள்ளன. எம்பெருமானைப் பார்த்து அவன் செய்த நன்றிக்குத் தம்மால் கைம்மாறு செய்யமுடியாது என்று விண்ணப்பித்து, தம்முடைய தாழ்வைக் கணிசியாமல் தமக்கு நன்மைகளை மேலும் க்ருபைசெய்தருளவேணும் என்று பிரார்த்தி₂ப்பதாய் அமைந்துள்ளது இவ்வார்த்தை. a ப்ரளயகாலத்தில் அசேதனத்தோடு ஒத்திருந்த நிலையைக் கண்டு இரங்கி உம்மை வணங்குவதற்காக இந்த்₃ரியங்களைத் தந்தீர். b அந்த இந்த்₃ரியங்களைக்கொண்டு நான்

## இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் பத்து முகமாக விரோதிக்கும்; அவையாவன—ஸ்வாநர்த்தம், பராநர்த்தம், ஶாஸ்த்ரவிரோதம், பகவந்நிக்ரஹம், பாகவதநிக்ரஹம், ஆசார்யநிக்ரஹம், விரோதிவர்த்தகத்வம், ஸ்வரூபவிரோதம், உபாயவிரோதம், உபேயவிரோதம், தேஶாந்தராபாவம். தேவதாந்தரபரனுக்கு காலாந்தரேணவாகிலும் பாகவதனுகைக்கு யோக்யதையுண்டு; விஷயப்ரவணனுக்கு நரக

---

### இருநூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவன் தகாத ஸ்த்ரீஸம்போகத்தில் ஈடுபடுவதால் பத்து வகையான விரோதம் ஏற்படும். (1) இவன் உடல் கெட்டுப் போமாகையாலே இவனுக்கே அநர்த்தம். (2) இவனைப் பார்த்துப் பிறர் கெட்டுப்போவார்களாகையாலே பிறருக்கும், இவனால் கெடுக்கப்படும் ஸ்த்ரீக்கும், உறவினர்களுக்கும் அநர்த்தம். இவ்விரண்டு அநர்த்தங்களும் இம்மையிலேயே காணக்கூடியவை. (3) 'பரதாரகமனம் முதலானவை கூடாது. செய்தால் நரகம் வரும்' என்னும் ஶாஸ்த்ரத்தையும் மீறியதாகும். (4) " **ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ** " [சாஸ்த்ர விதிகளை மீறுகிறவன் எனக்கு த்ரோஹி] என்கிறபடியே எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறியதால் எம்பெருமானுடைய கோபமும் ஏற்படும். (5) தகாத செயல்களைச் செய்கையாலே பாகவதர்களுடைய கோபமும் ஏற்படும். (6) அதே காரணத்தால் ஆசார்யனுடைய கோபமும் ஏற்படும். (7) எம்பெருமானை அடைவதற்குத் தடையான துஷ்ட ஸஹவாஸம் முதலானவற்றையும் வளர்க்கும். " தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார் கயற்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை " [திருமாலை 16] என்றது காண்க. (8) இவனுடைய அநந்யபோகத்வ ஸ்வரூபத்துக்கு 'ஸ்த்ரீ போகம் இனியது' என்னும் நினைவு தடையாகும். (9) ஸ்த்ரீ போகத்துக்காக முயற்சிகளைச் செய்ய வேண்டி வருமாகையாலே எம்பெருமானே உபாயம் என்னும் நினைவுக்கும் தடையாகும். (10) 'எம்பெருமானுடைய கைங்கர்யமே இனியது' என்னும் எண்ணத்திற்கும் முரண்படுமாகையாலே உபேய விரோதமும் ஏற்படும். (11) " கடையறப் பாசங்கள் விட்ட பின்னையன்றி அவனவை காண்கொடானே " [திருவாய் 8-2-8] என்கிறபடியே ஸ்த்ரீ போகத்தில் ஈடுபட்டவனுக்குப் பரமபத ப்ராப்தியும் கிட்டாது. "மற்றோர் தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்...ஆடு

ப₃ந்த₄த்தையுங் கழித்தருளினீர், ஸர்வாபராத₄ங்களையும் பொறுத்தருளினீர், அர்ச்சிராதி₃மார்க்க₃த்தையும் பரமபத₃த்தையும் கு₃ணாநுப₄வத்தையும் தந்து யாவதா₃த்மப₄ாவி நித்யகைங்கர்யங் கொண்டருளினீர்; ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரனே! தேவரீர் செய்தருளினபடி என்தான்! என்று நம்பிள்ளை அநுஸந்த₄ாநம்.

## முந்நூற்றேழாம் வார்த்தை

அநந்யப்ரயோஜநனல்லாமையாலே உகப்புக்குப் பாத்ரமல்லேன் ; ஆர்த்தப்ரபந்நனல்லாமையாலே இரக்கத்துக்குப் பாத்ரமல்லேன்;-ப்ராமாதி₃கமல்லாமையாலே க்ஷமைக்குப் பாத்ரமல்லேன்; உபகாரகனென்று உகந்தீர்; அநந்யனென்று இரங்கினீர்; அவர்ஜநீயனென்று பொறுத்தீர்—என்று ஆச்சான்பிள்ளை.

---

### முந்நூற்றாறும் வார்த்தை

a அத்₃வேஷம் ( ப₄க₃வத் ப₄ாக₃வதர்களிடம் வெறுப்பின்மை ), ஆபி₄முக்₂யம் (அவர்களிடம் ஈடுபாடு) முதலான ஆத்மகு₃ணங்களை உண்டாக்கினீர்.

### முந்நூற்றேழாம் வார்த்தை

இது ஆச்சான்பிள்ளையின் நைச்யாநுஸந்த₄ானம். அநாதி₃யாகத் தொடர்ந்து வரும் ஶரீரஸம்ப₃ந்த₄த்தாலே மற்ற ப்ரயோஜனங்களிலும் விருப்பம் நடையாடுகையாலே, அநந்யப்ரயோஜனனல்லாதவனாய், தேவரீருடைய உகப்புக்குப் பாத்திரமல்லாதவனாயிருந்த போதிலும், 'எம்பெருமானார் திருவடி ஸம்ப₃ந்த₄ம் பெற்று ஸதா₃சார்ய பரம்பரை மூலம் வந்த அர்த்த₂ங்களைச் சொல்லிச் சேதனரைத் திருத்தி நமக்கு ஆக்கின உபகாரகன்' என்று உகந்தீர். ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பு ஏற்பட்டமையாலும், ப₄க₃வத்₂விஷயத்தைப் பெற்றாலல்லது த₄ரியாமையாலும் ஆழ்வார்களைப் போலே ஆர்த்தப்ரபத்தியைச் செய்யாமையாலே தேவரீருடைய இரக்கத்துக்குப் பாத்ரமல்லாதவனாயிருந்தபோதிலும் 'நம்மை விட்டால் வேறு க₃தியில்லாதவன் என்று இரங்கினீர். நான் செய்யும் அபசாரங்கள் கவனக் குறைவாகிற ப்ரமாத₃த்தால் ஏற்பட்டதாயிராமல் பு₃த்₃தி₄ பூர்வகமாகச் செய்தவையாயிருக்கையாலே, கவனக் குறைவால் ஏற்பட்ட அபசாரங்களைப் பொறுக்கும் தேவரீருடைய பொறுமைக்குப் பாத்ரமல்லாதவனாயிருந்தபோதிலும் 'ஸதா₃சார்யனை முன்னிட்டுக்கொண்டு நம்மைப் பற்றினவனாகையாலே விலக்கவொண்ணாதவன்' என்று என் அபசாரங்களைப் பொறுத்தீர்.

## முந்நூற்றெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனை ஸ்ரீவைஷ்ணவர்கள் கொண்டாடப் புக்கால் 'ஆசார்யவைப$_4$வமிருக்கும்படியே!' என்றும், 'உடைய வர்கள் செய்யுமதுக்குக் கேள்வியுண்டோ' என்றும், 'அவர்கள் அருளிச்செய்கையாலே உண்டாகக்கடவது' என்றும் நினைக்கக்கடவன்.

## முந்நூற்றொன்பதாம் வார்த்தை

ஓரதி$_4$காரியானவன் ஸம்ஸாரி பரிப$_4$விக்கும்போது அநுஸந்தி$_4$க்கும்படி நாலு வகையாயிருக்கும்: அவையாவன- 'நாயனும் அடியானுமானால், அடியானுக்குப் பிறந்த பரிப$_4$வம் நாயனன்றோ ஏன்றுகொள்வான்' என்று அவன் தலையிலே வைத்து த$_3$ாந்தனாயிருக்கை; இவன் பண்ணின பரிப$_4$வம்

---

### முந்நூற்றெட்டாம் வார்த்தை

ஒரு ஸ்ரீவைஷ்ணவனை மற்றும் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் நேரே கொண்டாடினால், இறுமாப்படையாமல் 'ஆசார்யருடைய வைப$_4$வம் இப்படி அடியேன்பால் வெள்ளமிடுகிறது' என்றும், ''நமக்கு ஸ்வாமிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் நம்மிடமில்லாத பெருமைகளைச் சொன்னாலும் அவர்களைத் தடுக்க நமக்கு உரிமையில்லை'' என்றும், ''மஹாத்மர்க்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் இத்தகைய பெருமைகள் நம்மிடம் இருப்பதாக அருளிச்செய்கையாலே, இப்போது நம்மிடம் இல்லாவிடிலும் இப்பெருமைகள் நமக்குக் காலக்ரமத்தில் உண்டாகிவிடும்'' என்றும் நினைக்கவேண்டும்.

### முந்நூற்றொன்பதாம் வார்த்தை

ஒரு ஸ்ரீவைஷ்ணவன், தன்னை ஒரு ஸம்ஸாரி அவமதிக்கும்போது நாலு வகையாக அநுஸந்தி$_4$க்கவேண்டும். அவையாவன—(1) 'ஒரு ஸ்வாமியும் அவனுடைய அடிமையுமாய் இரண்டுபேர் இருக்கும்போது, அடிமைக்குப் பிறந்த அவமானத்தை ஸ்வாமியல்லவோ ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று ஸ்வாமியான எம்பெருமானே இதற்குக் கவலைப் படவேண்டியவன் என்னும் நினைவுடன் தான் கவலைப்படாமல் அடக்கத்தோடு இருக்கவேண்டும். (2) இவன் பண்ணின அவமானம் தே$_2$ஹத்தைத் தாக்குமா, ஆத்மாவைத் தாக்குமா என் ஆராய்ந்து,

தே₃ஹஸ்பர்ஶியோ ஆத்மஸ்பர்ஶியோவென்று விவேகித்து, ‘ஆத்மா ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபனாகையாலே - இப்பரிப₄வத்திற்கு விஷயமல்லன்; இனி தே₃ஹமிறே பரிப₄வவிஷயம்; இதுதான் அஶுசிகளுக்கெல்லாம் கொள்கலமாகையாலே இதினுடைய தோ₃ஷமெல்லாம் இவனால் சொல்லமுடியாதிறே’ என்று வெறுப்புக் கெட்டிருக்கை. ‘நாம் இத்தே₃ஹத்தில் வாஸனையாலே உபாதே₃யபு₃த்₃தி₄பண்ணிப்போருகையாலே இதினுடைய ஹேயதையை இவன் பரிப₄வோக்தியாலே யுணரப்பெற்றோமே!’ என்று அவன்பக்கலிலே உபகார ஸ்ம்ருதி பண்ணியிருக்கை; ஒரு வைஷ்ணவன் ப்ரக்ருதியைப் பரிப₄வித்தால் ‘இவனுக்கு ஈஶ்வரன் அநர்த்த₂த்தைச் சிந்திக்கிறானோ’ என்று க்ருபைபண்ணி இவ்வநர்த்த₂ம் வாராதபடி திருவடிகளிலே ஶரணம் புகுவான்.

---

“இந்தஅவமானம் ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபமானஆத்மாவைத் தொடாது; தே₃ஹத்தையே தாக்கும்; ஆயினும், தாழ்வுகளுக்கெல்லாம் இருப்பிடமான தே₃ஹத்தின் தோ₃ஷம் முழுவதும் இவனால் சொல்லமுடியாதாகையாலே இவன் சொன்ன தாழ்வு சிறிதே” என்று நினைத்து அவமதித்தவனிடம் த்₃வேஷமில்லாமலிருக்கவேண்டும். (3) “நாம் அநாதி₃காலமாகத் தொடர்ந்துவரும் வாஸனையாலே தே₃ஹத்தில் விருப்பத்தோடிருக்கையாலே, இதற்கு உண்மையில் இருக்கும் தாழ்வை இவனுடைய அவமானப் பேச்சாலேயே உணரப்பெற்றோம். இவனுக்கு என்ன கைம்மாறு செய்வோம்” என்று அவமதித்தவனிடம் நன்றிக்கடன் பட்டிருக்கவேண்டும். (4) ஒரு வைஷ்ணவன் ஶரீரத்தையிட்டுத் தன்னை அவமதித்தால், அவமதிக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவன் “இவனுக்கு எம்பெருமான் ப₄ாக₃வதாபசார ப₂லமாக தண்டனையைக் கொடுத்துவிடப் போகிறானோ?” என்று இரங்கி “அப்படி இவனுக்கு எந்தத் தீங்கும் வராதபடி நோக்கவேணும்” என்று எம்பெருமான் திருவடிகளிலே ஶரணம் புகவேண்டும். “குற்றம் செய்தவர்கள்பக்கல் பொறையும், க்ருபையும், சிரிப்பும், உகப்பும், உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்” [ஸ்ரீவசனபூ₄ஷணம் 365] என்னும் ஸ்ரீவசனபூ₄ஷணசூர்ணையும் அதன் வ்யாக்₂யானமும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. இங்கு நாலாவதில் ‘வைஷ்ணவன்’ என்றிருப்பதற்கும் முதலில் ‘ஸம்ஸாரி’ என்றிருப்பதற்கும் முரண்படாமைக்காக இங்கு சொல்லப்படுமவன் ரூபநாமங்களில் மாத்திரம் வைஷ்ண

## முந்நூற்றுப்பத்தாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவர் பரிப₄வத்தில் அநுஸந்தி₄க்கும்படி:- 'இவர், நம்மைக் கழுத்துக்கு மேலாக உறவுபண்ணிவிடாதே அபி₄மாநித்த இத்தாலே ஶிக்ஷாரூபமாகச் சொல்லப்பெற்றோமே' என்று, 'இவர்க்கு அடிமையான ஸ்வரூபம் உஜ்ஜீவித்தது' என்று க்ருதார்த்த₂னுவான்.

## முந்நூற்றுப்பதிநோராம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவன் ஸ்தோத்ரம் பண்ணினால், நமக்குள்ள கு₃ணங்களைச் சொன்னானென்று உகக்கக்கடவனல்லன்; இல்லாத கு₃ணங்களை ஏறிட்டுச்சொன்னானென்று வெறுக்கக்கடவனல்லன். சீற்றத்துக்கு விஷயமான நம்மைக்குறித்து

---

வனாய் ஸம்ஸாரி ஸ்வபா₄வம் கழியப்பெறாதவனாயிருப்பவன் என்று கொள்ளவேண்டும். அடுத்த வார்த்தையிற்போலே, ஸ்ரீவைஷ்ணவர் என்று குறிப்பிடாமல் 'ஒரு வைஷ்ணவன்' என்று குறிப்பிட்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

### முந்நூற்றுப்பத்தாம் வார்த்தை

ஸத₃ாசார்ய ஸம்ப₃ந்த₄முள்ள ஒரு ஸ்ரீவைஷ்ணவர் நம்மை அவமதித்தால், நாம் பின்வருமாறு அநுஸந்தி₄க்கவேண்டும் — 'நம்முடைய தே₃ஹப₃ந்து₄க்களைப் போலே மனப்பூர்வமாக உறவில்லாமல் கழுத்துக்கு மேலே வாய்வார்த்தையில் மாத்திரம் உறவு பண்ணிவிடாமல், நம்மைத் தம்முடையவனாக இவர் அபி₄மானிக்கையாலே ஆசார்யன் ஶிஷ்யனையும், தகப்பன் பிள்ளையையும் போலே ஹிதபு₃த்₃தி₄யாலே க₂ண்டி₃த்திருக்கிறார். இத்தகைய மஹாநுபா₄வர்க்கு அடிமையான நம் ஸ்வரூபம் இன்றே உய்வுபெற்றது" என்று நினைத்து உகக்கவேணும்.

### முந்நூற்றுப்பதிநோராம் வார்த்தை

ஒரு ஸ்ரீவைஷ்ணவன் நம்மைப் புகழ்ந்தால் "நமக்கு உள்ள கு₃ணங்களைச் சொன்னான்" என்று நாம் உகக்கவும் கூடாது; "இல்லாத கு₃ணங்களை ஏறிட்டுச் சொன்னான்" என்று வெறுக்கவும் கூடாது. "தாழ்வுகள் நிறைந்திருக்கையாலே கோபத்துக்கு இலக்காக வேண்டிய நம்மைக் குறித்து ஒரு ஹேதுவின்றிக்கேயிருக்கப்

நிர்ஹேதுகமாக ப்ரஸாதி₃த்தபடியாலே உகந்து, 'இவர் சொன்ன கு₃ணங்கள் நமக்கு இதுக்கு முன்பு இல்லையாகிலும், இவர் ப்ரஸாத₃த்தாலே மேல் உண்டாகக்கடவது'என்று விஶ்வஸித்திருப்பான்; ஸம்ஸாரி ஸ்தோத்ரம் பண்ணினால் 'அடியானானவனுடைய ஸ்தோத்ரத்துக்கு உகப்பான் நாயனன்றோ' என்று தான் அதில் அந்வயமற்று ஶாந்தனாயிருப்பான்; இவனுடைய ஸ்தோத்ரம் தே₃ஹஸ்பர்ஶியாய்த் தோன்றின போது, 'தே₃ஹத்தில் இக்கு₃ணங்களில்லை; இவன் தன் வாஸனையாலே ப்₄ரமித்தானத்தனை; இக்கு₃ணங்கள் ஆத்மஸ்பர்ஶியன்று' என்றிருப்பான்.

## முந்நூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை

ப₄ட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை;-உ "நீர் ஒருகாலும் உடம்போடுண்டான உறவுக்கு உளைந்து போரு

---

புகழுரைகளை அருளினபடியாலே, இவர் சொன்ன கு₃ணங்கள் நமக்கு இதுக்கு முன்பு இல்லையாகிலும், இவரது அருளாலே இனி மேல் உண்டாகிவிடும்" என்று நம்பிக்கையோடு இருக்கவேண்டும். ஸம்ஸாரியாயிருப்பவன் ஒருவன் நம்மைப் புகழ்ந்தால், "அடிமையைப் பற்றிய புகழுரைகளுக்கு உகக்கவேண்டியவன் ஸ்வாமியன்றோ; ஆகையால் நம்மைப் பற்றிய இப்புகழுரையும் ஸ்வாமியான எம்பெருமானுக்கே சேரக்கடவது" என்று நினைத்துத் தான் அப்புகழுரையால் விகாரமடையாது அடக்கத்தோடு இருக்கவேண்டும். அந்த ஸம்ஸாரியுடைய ஸ்தோத்ரம் தே₃ஹத்தைப் பற்றியதாய்த் தோற்றும்போது "தே₃ஹத்தில் இப்பெருமைகள் இல்லை. இவன் அநாதி₃வாஸனையினாலே மயங்கினான். இப்பெருமைகள் ஆத்மாவைத் தொடமாட்டா" என்று நினைத்திருக்கவேண்டும்.

### முந்நூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை

யௌவன வயஸ்ஸில் ப₄ட்டர் மிகச் சிறந்த ஜ்ஞான ப₄க்திகளையுடையராயிருந்தும், தே₃ஹத்தில் அநாதரவாகிற வைராக்₃யமில்லாமலிருப்பதைப் பார்த்து, அவரைத் திருத்துவதற்காக அவரது ஆசார்யரான எம்பார் அவரோடு நடத்திய ஸம்வாத₃த்தைக் காட்டுகிறது இந்த வார்த்தை. உ ப₄ட்டரைக் குறித்து எம்பாருடைய கேள்வி :—"நீர் தே₃ஹஸம்ப₃ந்த₄த்தை நினைத்து ஒருபோதும்

கிறீரில்லை; இதுக்கடி உற்றுன எம்பெருமான் பக்கலில் உறுதியை உணர்ந்தோ? அன்றியே உம்முடைய பக்கலுண்டான உறுதியை உணர்ந்தோ?" என்று கேட்க; b "அடியேனுக்கு இவையிரண்டுமுண்டோ? உள்ள உறவித்தனையும் உடம்போடுண்டான ஊற்றத்தாலேயன்றோ?" என்று விண்ணப்பஞ்செய்ய, c எம்பாரும் இதுகேட்டு க்ருதார்த்த$_2$ராய், "நீர் இங்ஙனே சொல்லுவானென்? ஆழ்வானோடுண்டான குடல் துடக்காலே அந்தரங்க$_3$மான அர்த்த$_2$ங்களை ஆராயும்படியான ஆகாரங்களையுடையீர்; உடையவராலே உண்டான ஜ்ஞாநமுடையீர்; அதடியாக எங்களோடுண்டான உறவறிவீர்; இப்படியிருக்க, எங்களை நீர் இங்ஙன் உழைப்பிக்கலாமோ? இவ்வாகாரங்களில் உமக்குண்டான உறவுறுதி சொல்லீர்" என்று உறுத்திக்கேட்க, d பட்டர் விண்ணப்பஞ்செய்தபடி;- "என்னுடைய உயிர்க்கு உடைமையாகையன்றோ உறுதியாவது; அங்ஙனன்றியே இவ்வுயிருக்கு ஒரு உறுதியுண்டாகில்

---

வருத்தப்படுவதாகத் தெரியவில்லை, இதற்குக் காரணம் ப$_4$க$_3$வத் ஸம்ப$_3$ந்த$_4$த்தில் உள்ள உறுதியை உணர்ந்தமையோ, அல்லது உம்முடைய ஆத்மாவிடமுள்ள உறுதியை உணர்ந்தமையோ?" என்று b பட்டருடைய பதில்;—"ப$_4$க$_3$வத்ஸம்ப$_3$ந்த$_4$த்தின் உறுதியையோ, ஆத்மாவின் உறுதியையோ அடியேன் உணர்ந்தேனல்லேன்; அநாதி$_3$காலமாக உடம்பிலுண்டான விருப்பத்தாலேயே உடம்பிலே அநாத$_3$ரமில்லாமல் உறவுபூண்டிருக்கிறேன்" என்பது. c இதுகேட்ட எம்பார் சிறிது ஸமாத$_4$ானம் அடைந்து, மேலும் தெளிவுறுத்துவதற்காக மறுபடியும் கேட்கிறார் — "நீர் இப்படிச் சொல்லலாமோ? ஆழ்வான் குமாரராகையாலே ஸூக்ஷ்மமான ஶாஸ்த்ரார்த்த$_2$ங்களை ஆராயும்படியான மேத$_4$ாவிலாஸங்களையுடையவராயிருக்கிறீர். உடையவருடைய கடாக்ஷத்தாலே உமக்கு ஜ்ஞானமுண்டாயிருக்கிறது. அது காரணமாக எங்களை ஆசார்யராகப் பற்றியிருக்கிறீர். இப்படியிருக்க, 'தே$_3$ஹத்தில் எனக்கு இன்னும் பற்று அறவில்லை' என்று கூறி எங்களை வருத்தலாமா. ஜீவாத்ம பரமாத்ம ஜ்ஞானங்களில் உமக்குண்டான உறுதியைச் சொல்லுவீராக" என்று வலியுறுத்திக் கேட்டார். d இதற்கு ப$_4$ட்டருடைய பதில்—"எம்பெருமானுக்கு உடைமையாயிருப்பதே என்னுடைய ஆத்மாவுக்கு உறுதியாகும். இப்படியல்லாமல் என்னுடைய ஆத்மாவுக்குத் தனி உறுதி

அவ்வுயிருக்கு உறுதியுண்டோ? ஆகையால் அவ்வுயிரை உணர்ந்த ஆநந்த₃த்தாலே பிறந்த உறுதியன்றோ உண்டாகி லுள்ளது" என்று விண்ணப்பஞ்செய்ய; e எம்பாரும் "இதி லொரு குறையில்லை; சொன்னபடி அழகிது; ஆனாலும் அவ்விஷய ஸ்பர்ஶத்தை உணர்ந்த ஆநந்த₃த்திலுங்காட்டில் இவ்விஷயத்திலே அநாத₃ராதிஶயங்காணும் அபேக்ஷிதமா யிருப்பது; ஆகையால் உடம்போடுண்டான உறவுக்கு உளைந்துபோரீர்" என்றருளிச்செய்ய, f ப₄ட்டரும், க்லேஶ ஹேதுவான ப்ரக்ருதியை உணர்ந்து ஶோகிக்கத் தொடங் கினார்:—எம்பாரும், 'அருளிச்செய்த கார்யம் ப₂லிப்பதே!' என்று ப்ரீதரானார்.

## முந்நூற்றுப்பதின்மூன்றாம் வார்த்தை

அஜ்ஞனுடைய கு₃ணமும், ஜ்ஞாநவானுடைய [illegible] கு₃ண ஹாநியும் விஶ்வஸிக்கவொண்ணாது: ஒரு மூலஸ்பர்ஶமுள்ள

---

யுண்டாகில் எம்பெருமானுடைய ப்ராப்யத்வ ப்ராபகத்வ ஶேஷித்வாதி₃ களுக்கு உறுதியில்லாமல் போய்விடுமே. ஆகையால் என் ஆத்மா வுக்கு ஏதேனும் உறுதியுண்டு என்றால், எம்பெருமானுடைய ப்ராப்யத்வ ப்ராபகத்வ ஶேஷித்வாதி₃களை உணர்ந்த ஆநந்த₃த்தாலே பிறந்த உறுதியேயுள்ளது" என்று. e இதற்கு எம்பாருடைய பதில்— "இவ்வார்த்தையில் எக்குறையுமில்லை. அழகாகச் சொன்னீர். ஆனா லும், எம்பெருமானோடுள்ள ஸம்ப₃ந்த₄ங்களை உணர்ந்ததாலுண் டான ஆநந்த₃த்தைக் காட்டிலும், தே₃ஹத்தில் மிக்க அநாத₃ரவு காட்டவேண்டியது ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு அவஶ்யம் தேவை. ஆகையால் தே₃ஹஸம்ப₃ந்த₄த்தை நினைத்து நீர் வருத்தத்தையும் அடையவேணும்" என்று. f இதைக் கேட்ட பின்பு ப₄ட்டர் வருத் தத்துக்குக் காரணமான ஶரீரஸம்ப₃ந்த₄த்தை நினைத்து வருந்தத் தொடங்கினார். எம்பாரும் தாம் உபதே₃ஶித்தது பயனுடையதான தைக் கண்டு உகந்தார்.

## முந்நூற்றுப்பதின்மூன்றாம் வார்த்தை

அறிவிலியாயிருப்பவர்கள், ஒரு மூலிகையினுடைய ஸ்பர்ஶத்தாலே இரும்பு பொன்னாகிவிடுமென்று பரிபூர்ணமாக நம்பி, அதற்காக ரஸவாத₃வித்₃யைகளைப் பயின்று மிகவும் நம்பிக்கையோடு அரும்

இரும்பு பொன்னுமென்றிருப்பர்கள்; ப₄க₃வத்ஸ்பர்ஶமுண்டானால் ஸம்ஸாரமற்றது என்றிரார்கள்; த்₃வாரஶேஷிபக்கலிலே துவளக்கடவ இக்கெடுவான் ப்ரத₄ாநஶேஷிபக்கலிலே துவளாமல் இழந்துவிட்டானே.!

## முந்நூற்றுப்பதினாலாம் வார்த்தை

ஒருவனுக்குப் பாரதந்த்ர்யமும், வ்யவஸாயமும், வ்ருத்தியும் வேண்டும்; பௌருஷத்தை ஏறிட்டுக்கொண்டு பாரதந்த்ர்யத்தை அழித்தான்; வ்யாபாரத்தை ஏறிட்டுக்கொண்டு வ்யவஸாயத்தை அழித்தான்; விஷயாந்தராநுவ்ருத்தியை ஏறிட்டுக்கொண்டு வ்ருத்தியை அழித்தான்.

---

பாடுபடுகிறார்கள். இவர்களிடம் நம்பிக்கையாகிற கு₃ணம் இருந்தபோதிலும், இது தகாத விஷயத்தைப் பற்றியதாகையாலே பயனற்றதாகவும் விபரீதமாகவுமாகிறது. அறிவிலிக்குத் தகாதவிஷயத்திலுள்ள இந்த நம்பிக்கைகூட அறிவாளிகளுக்கு எம்பெருமான் விஷயத்தில் இருப்பதில்லை. 'மூலிகையின் ஸ்பர்ஶத்தாலே இரும்பு பொன்னாகும்' என்று அறிவிலி நம்புவதுபோலே, "எம்பெருமானுடைய ஸ்பர்ஶத்தாலே ஸம்ஸாரம் அறுந்துவிடும்" என்று அறிவாளி நம்பத் தயங்குகிறான். ஆகையால் அவனும் பேறு பெறுமற்போகிறான். ரஸவாத₃வித்₃யையைச் சொல்லித்தரும் அமுக்₂யமான ஆசார்யனிடத்தில் அடிபணிந்து அநுவர்த்தித்துப் பாடுபடத் தயங்காத மனிதன், ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄த்தைச் சொல்லித்தரும் முக்₂யமான ஆசார்யனிடத்தில் அடிபணிந்து அநுவர்த்தித்துப் பாடுபடாமல் ஆத்மக்ஷேமத்தை இழந்துவிடுகிறானே. ஈதென்ன உலகியற்கை!

### முந்நூற்றுப்பதினாலாம் வார்த்தை

ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை ஏறிட்டுக்கொண்டு, ப₄க₃வத்₃ப₄ாக₃வத பாரதந்த்ர்யமாகிற தன் ஸ்வரூபத்தைச் சேதனன் அழித்துக்கொள்கிறான். தனது நன்மைக்காகத் தான் முயற்சி செய்வதாகிற வ்யாபாரத்தை ஏறிட்டுக்கொண்டு 'எம்பெருமானே உபாயம்' என்னும் வ்யவஸாயத்தை (உறுதியை) அழித்துக்கொள்கிறான், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் பற்றை ஏறிட்டுக்கொண்டு, ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யமாகிற ஸ்வரூபத்துக்குத் தகுந்த வ்ருத்தியை (தொழிலை) அழித்துக்கொள்கிறான். இப்படி இவற்றை அழித்துக்கொள்ளாமல் இம்மூன்றையும் சேதனன் பெறவேண்டும்.

## முந்நூற்றுப்பதினஞ்சாம் வார்த்தை

ஆத்மஸாக்ஷாத்காரஜ்ஞாநம் பிறவாமையாலே ஸ்வதே₃ஹாத்மாபி₄மாநம் போகிறதில்லை; ப₄க₃வத்பாரதந்த்ர்ய ஸாக்ஷாத்காரஜ்ஞாநம் பிறவாமையாலே ஸ்வஸ்வாதந்த்ர்யம் போகிறதில்லை, ப₄க₃வத₃பே₄க்₃யதாவிஷய ஸாக்ஷாத்கார ஜ்ஞாநம் பிறவாமையாலே விஷயப்ராவண்யம் போகிறதில்லை.

## முந்நூற்றுப்பதினாறும் வார்த்தை

aஉடையவன் உடைமையை முன்னிட்டுக்கொண்டு கிடந்தான்; உடைமை விநியோக₃த்தை முன்னிட்டுக்கொண்டு கிடந்தது; விநியோக₃ம் ப்ரீதியை முன்னிட்டுக்கொண்டு கிடந்தது; ப்ரீதி உபாயத்தை முன்னிட்டுக்கொண்டு கிடந்தது;

---

### முந்நூற்றுப்பதினைந்தாம் வார்த்தை

(1) தன் ஆத்மாவை நேரே அறியாமையாலே, 'தே₃ஹமே ஆத்மா' என்னும் எண்ணம் போவதில்லை. (2) "எம்பெருமானுக்குப் பரதந்த்ரமாயிருப்பது இவ்வாத்மா" என்னும் அறிவு நேரே ஏற்படாமையாலே, தன்னை ஸ்வதந்தரனாக நினைக்கும் எண்ணம் போவதில்லை. (3) எம்பெருமானுடைய இனிமையை நேரே அறியாமையாலே, 'அப்₃த₃ர்தி₂ விஷயங்கள் இனியவை' என்னும் எண்ணம் நீங்குவதில்லை.

### முந்நூற்றுப்பதினாறும் வார்த்தை

a (1) உடைமையில்லாவிடில் உடையவனுக்கு உடைமையையுடையவன் என்னும் பெருமை கிடையாது. (2) உடையவன தன் இஷ்டப்படி தனக்கு வேண்டியவர்களுக்கும் அடிமைப்படுத்தி விநியோகி₃க்கலாம் தன்மையில்லாவிடில் உடைமைக்கு உடைமை என்னும் தன்மை ஸித்₃தி₄க்காது. (3) உடையவன் உடைமையிடத்தில் ப்ரீதிவைக்காவிடில உடையவன் உடைமையை இஷ்டப்படி விநியோக₃ம்கொள்ள மாட்டான்; எம்பெருமானுக்கு உடைமையான ஜீவாத்மாவிடம் ப்ரீதி இல்லாவிடில், அவனை ப₄ாக₃வதசேஷமாக ஆக்கமாட்டான் என்று கருத்து. (4) எம்பெருமானிடம் உபாயத்வம் இல்லாவிடில் சேதனன் விஷயத்தில் முற்கூறிய ப்ரீதி ஏற்படாது. இதைத் திருப்பிச் சொன்னால்—எம்பெருமானிடம் உபாயத்வம் இருப்பதனாலேயே அவனுக்குச் சேதனனிடம் ப்ரீதி உண்டாகிறது; ப்ரீதி இருப்பதனாலேயே ப₄ாக₃வதர்களுக்குச் சேதனனை தன் இஷ்டப்படி அடிமைப்படுத்தி விநியோக₃ம் கொள்கிறான் எம்பெருமான்; இப்படி விநியோக₃ம் கொள்ளுகையாலே சேதனனுக்கு உடைமையாயிருக்கும் தன்மை ஸித்₃தி₄க்கிறது. இப்படி உடைமையாயிருக்கும் தனமை சேதனனிடம் ஏற்பட்டால்தான் எம்பெருமான் உடையவனாகிறான்.

b பரஸ்வரூபத்தை முன்னிட்டுக்கொண்டு கிடக்கில் ஸ்வஸ்வரூபத்தையறிந்திலன்; ஸ்வஸ்வரூபத்தை முன்னிட்டுக் கொண்டு கிடக்கில் ஜீவநத்தை அறிந்திலன்.

## முந்நூற்றுப்பதினேழாம் வார்த்தை

உடையவர் திருக்கண்ணபுரத்துக்கு எழுந்தருளுகிற போது அம்மங்கிக்குப் போய்வருகிறேனென்ன, அம்மங்கி உடையவர்க்கு ப்ரஸாதி₃த்த வார்த்தை;—a அக்நிஜ்வாலையிலகப்படாதேகிடீர், அருநஞ்சு தின்னுதேகிடீர், அஶுசி மிதியாதே கிடீர், அப₃லைகளோடு செறியாதேகிடீர், ஆஸ்திகரோடு செறிந்துபோருங்கிடீரென்று; b இதுக்கு வ்யாக்₂யாநமாக உடையவர் அருளிச்செய்தபடி; - அக்₃நிஜ்வாலையென்கிறது - விரோதி₄களை; விரோதி₄கள் ஸர்ப்பாக்₃நிபோலே; அவர்க

b சேதனன் எம்பெருமானுடைய ஸ்வரூபமான பே₄าக்₃யதையை உணர்ந்தால், தன் ஸ்வரூபமான ததே₃க ரக்ஷ்யத்வத்தை (எம்பெருமாலுலேயே ரக்ஷிக்கப்படும் தன்மையை) மறந்து ப்ராப்ய த்வரையாலே நோன்பு நோற்பது, மடலெடுப்பது, தே₃வதாந்தர ஸமாஶ்ரயணம் முதலான தகாத செயல்களையும் செய்வான். முற்கூறிய தன் ஸ்வரூபத்தில் ஊற்றத்தோடிருந்தால் எம்பெருமானின் இனிமையாகிற தன் உணவை உணராமையாலே ப்ராப்யத்வரையில்லாமலிருக்கிருன்.

### முந்நூற்றுப்பதினேழாம் வார்த்தை

a ஆளவந்தார் ஶிஷ்யரான (303-ம் வார்த்தையில் எடுக்கப்பட்ட) அம்மங்கி என்னுமாசார்யர் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருந்தார். அங்கு உடையவர் எழுந்தருளி அவரிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது அவர் உடையவர்க்கு அருளிய வார்த்தை இந்த முற்பகுதி. (b) அம்மங்கியினுடைய முற்கூறிய வார்த்தைகளுக்கு உடையவர் தம் ஶிஷ்யர்களுக்கு அருளிய விளக்கமிது. (1) **அக்₃னிஜ்வாலையிலகப்படாதேகிடீர்**—பௌ₃ளத்₃த₄ர்கள், ஜைனர்கள் முதலானுர் வேத₃ப₃ாஹ்யர்கள் (வேத₃த்துக்குப் புறம்பானவர்கள்). அத்₃-வைதிகள், ஶைவர்கள் முதலானுர் வேத₃த்துக்கு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டிகள். உடையவர் த₃ர்ஶன ஸ்த₂ாபனத்துக்காக இவர்களோடு வாதாடும்போது பாம்பு அக்₃னி முதலானவற்றேடு

ளாகிறார் - ப₃ாஹ்யகுத்₃ருஷ்டிகள். அருநஞ்சு என்கிறது — ப்ரச்ச₂ந்நவிரோதி₄களை; ப்ரச்ச₂ந்நவிரோதி₄கள் - எலுமிச்சம்பழமும், கருப்பூரமும்போலே; அவர்களாகிறார் - ரூபநாமங்களை ஏறிட்டுக்கொண்டு உள்ளேபுகுந்து பி₄ந்நப்ரதிபத்திகளாயிருக்குமவர்கள். அஶுசியென்கிறது-விரோதி₄களை; விரோதி₄கள் காஷ்ட₂லோஷ்டாதி₃கள்போலே; அவர்களாகிறார் - ஶரீரைகதத்பரரான ஸம்ஸாரிகள். அப₃லைகளென்கிறது - அநுகூலரை; அநுகூலர் கன்னிகைகளைப்போலே; அவர்களாகிறார் - த்யாஜ்யோபாதே₃யங்களைத் தெளியவறியாதவர்கள். ஆஸ்திகரென்கிறது - அநுபே₄ாக்தாக்களை; அநுபே₄ாக்தாக்கள் - காமிநிகளைப்போலே; அவர்களாகிறார்- பூர்ணாதி₄காரிகள்—என்று.

---

பழகுவதுபோலே அவர்களோடு நெருங்கிவிடக் கூடாது என்பது முதல் உபதே₃ஶம். (2) அருநஞ்சு தின்றதேகிடீர் — ஸ்ரீவைஷ்ணவர்களுடைய நாமரூபங்களை த₄ரித்துக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவஸமூஹத்தில் உட்புகுந்து ஶாகஸாரணர்களைப்போலே மறைந்து நின்று ஸ்ரீவைஷ்ணவர்களைக் கெடுப்பவர்கள் அருநஞ்சு எனப்பட்டார்கள். பார்ப்பதற்கு அழகாயிருக்கும் எலுமிச்சம்பழமும் கர்ப்பூரமும் கலந்து உண்டால் உயிரை முடிப்பதுபோலே, பார்ப்பதற்கு வைஷ்ணவர்கள் போலேயிருக்கும் இவர்களோடு கலந்தால் ஆத்மநாஶத்தை விளைத்துவிடுவார்களாகையாலே இவர்கள் அருநஞ்சு எனப்பட்டார்கள். (3) அஶுசி மிதியாதேகிடீர் — ஶரீரத்தை வளர்ப்பதிலேயே ஈடுபட்ட ஸம்ஸாரிகள், மலம் முதலான அஶுசிகளைப் போலவும் வீதியில் கிடக்கும் கட்டை கல் முதலானவற்றைப்போலவும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விலகிச் செல்லவேண்டிய விரோதி₄கள். (4) அப₃லைகளோடு செறியாதேகிடீர்—அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களாயிருந்தபோதிலும், கைக்கொள்ளத்தக்கவைகளையும் கைவிடவேண்டியவைகளையும் தெளிவாக அறியாதவர்கள் பக்குவமாகாத கன்னிகைகளைப் போலே பயனற்றவர்கள். அதனால் அவர்களோடும் நெருங்கிப் பழகக்கூடாது. (5) ஆஸ்திகரோடு செறிந்துபோருங்கிடீர்- ப₄க₃வத்₃பா₄க₃வத விஷயங்களை அநுப₄விக்கத்தக்க பூர்ணாதி₄காரிகள், யௌவனமுடைய புருஷர்களுக்குக் காமினிகளைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அநுப₄விக்கத்தக்கவர்கள். ஆகையால் இவர்களோடு நெருங்கிப் பழகவேண்டும்.

## முந்நூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

**ஈடனுக்கு இழைச்சலிலும் இடும்பையிலும் அச்சம்; ஏறுகையில் அந்வயமில்லை; எடுப்பவனுக்காயிற்று ஏறுகையில் அந்வயமுள்ளது. சங்கிப்பாரும், ஸ்ரீகோஶம் திருடுவாரும், சுவர்ப்புறத்திலே கேட்பாரும், பொய்க்கண்ணீர் விழவிடுவாரும், "ஒக்குமொக்கும்" என்பாரும் உபாதே$_3$யரன்று.**

## முந்நூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

**"விரோதி$_4$க்கு நல்லாரோடே செறியாதே, ப$_3$ந்து$_4$க்களோடே செறி; ப$_4$க$_3$வத்ப்ரப$_4$ாவஞ்சொல்லுவாரோடே செறியாதே, ஸ்வரூப ப்ரப$_4$ாவஞ்சொல்லுவாரோடே செறி" என்று**

---

### முந்நூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

ஈடன் — அர்த்த$_2$ங்களை இடும் (உபதே$_3$ஶிக்கும்) ஆசார்யன். இவன் தகாத ஶிஷ்யர்களோடு இழைந்து விடுவதிலும், அவர்களுடைய தே$_3$ாஷத்திலும் ப$_4$யப்படவேண்டும். ஏற்கனவே தன் ஆசார்ய ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே இவன் எம்பெருமானுக்கு அருகில் ஏறிவிட்டானுகையால் மேலே ஏறவேண்டிய அவஶ்யம் இவனுக்கில்லை. ஆசார்யன் உபதே$_3$ஶிக்கும் அர்த்த$_2$ங்களை எடுப்பவனுகிற ஶிஷ்யனுக்கே மேலே ஏறவேண்டிய அவஶ்யமுள்ளது. கீழ்க்கண்டவர்கள் கைக்கொள்ளத்தகாத ஶிஷ்யர்கள். (1) ஆசார்யன் சொல்லும் அர்த்த$_2$ங்களில் ஐயமுடையவர்கள். (2) க்$_3$ரந்த$_2$ங்களைத் திருடி வாசிக்கும் இயல்புடையவர்கள். (3) ஆசார்யன் திருமுன்பே பணிந்து நின்று கேட்க இசையாமல், சுவருக்குப்பின் மறைந்து நின்று கேட்பவர்கள். (4) மிகவும் ஈடுபாடுடையவர்களைப்போலே ப$_4$ாவனை செய்து பொய்யாகக் கண்ணீர் விடுபவர்கள். (5) ஆசார்யனுக்கு முக$_2$-ஸ்துதியாக அவன் சொல்லும் வார்த்தைகளுக்கெல்லாம் 'மிகப்பொருத்தம் மிகப்பொருத்தம்' என்று சொல்லிக்கொண்டிருப்பவர்கள்.

### முந்நூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விரோதி$_4$களான ப$_3$ாஹ்ய குத்$_3$ருஷ்டிகள், ஸம்ஸாரிகள் முதலானவர்களோடு இணங்கியிருப்பவர்களோடு சேரக்கூடாது. ஆத்மப$_3$ந்து$_4$க்களோடேயே சேரவேண்டும். அவர்களிலும் ப$_4$க$_3$வானுடைய பெருமையை மாத்திரம் சொல்லுகிறவர்களோடு சேராமல், ப$_4$ாக$_3$வதபாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்தின் பெருமையையும், ப$_4$ாக$_3$வதர்களுடைய பெருமைகளையும் சொல்லுகிறவர்களோடு சேரவேண்டும். "சூழாட்பட்டு நின்றீர்களை" [திருப்

ஆச்சான்பிள்ளை. 'வாரீர்' என்கைக்கும், 'வம்மின்' என்கைக்கும் 'பேசுமின்'என்கைக்கும் யோக்₃யரன்று; "ஒட்டோம்" என்கைக்கே யோக்₃யர் கூழாட்கள்.

## முந்நூற்றிருபதாம் வார்த்தை

நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணினுனொருவன், நாட்டாரோடு வார்த்தை சொல்லக்கடவனல்லன்; ஆரோடே சொல்லுவதென்னில்; - நாராயணனுக்கு வார்த்தை சொல்லுதல், நாராயணபரமான நெஞ்சுக்குச் சொல்லுதல், நாராயணபரரோடே சொல்லுதல், நாராயணபரமாக வேண்டுமென்பார்க்குச் சொல்லுதல் செய்யக்கடவன்.

## முந்நூற்றிருபத்தோராம் வார்த்தை

முமுக்ஷுவாய் ப்ரபந்நனுயிருக்குமவனுக்கு அஞ்சுகோடி த்யாஜ்யமாய் மூன்றுகோடி உபாதே₃யமாயிருக்கும்; அதென்

---

பல்லாண்டு 3] என்று பெரியாழ்வாரால் சொல்லப்பட்டவர்களாய், ஒரு பயன்கருதி எம்பெருமானுக்கு ஆட்செய்யும் கூழாட்கள்—"வாரீர்" [திருவாய்மொழி 5-2-2] "வம்மின்" [பெரியதிரு 1-1-7] "பேசுமின்" [பெரியதிரு 1-8-9] என்று கௌ₃ரவமாக வார்த்தை சொல்லுவதற்குத் தகுதியுடையவரன்று; "எங்கள் குழுவினில் புகுதல் ஒட்டோம்" [திருப்பல்லாண்டு-3] என்கைக்கே தகுதியுடையவர்கள்.

**முந்நூற்றிருபதாம் வார்த்தை**

"நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணினமே" [திருவாய் 10-6-2] என்கிறபடியே ஸம்ஸாரிகளோடு தொடர்பற்று நாராயணனை ஆஶ்ரயித்த ஶ்ரீவைஷ்ணவன் ஸம்ஸாரிகளோடு வார்த்தை பேசிப் போதுபோக்கக்கூடாது. பிறகு யாரோடே வார்த்தை சொல்லிப் போதுபோக்குவது? எனில்: நவவித₄ஸம்ப₃ந்த₄முமுடைய நாராயணனேடும், அந்த நாராயணனிடம் ஈடுபட்ட நெஞ்சோடும், அந்த நாராயணனிடம் ஈடுபட்ட நெஞ்சுபோன்ற அந்தரங்க₃ர்களோடும், அந்த நாராயணனிடம் ஈடுபடவேண்டும் என்னும் ஆசையுடையவர்களோடும் வார்த்தை சொல்லிப் போதுபோக்கவேண்டும்.

**முந்நூற்றிருபத்தோராம் வார்த்தை**

ஒரு பதிவ்ரதையான ஸ்த்ரீக்கு ஐந்துவகைப்பட்டவர்கள் கைவிடத் தக்கவர்களாய் மூன்று வகைப்பட்டவர்கள் கைக்கொள்ளத்தக்கவர்களாயிருப்பதுபோலே, மோக்ஷமடையவிரும்பும் ப்ரபந்நனுக்கும் ஐந்து

போலவென்னில்; - பதிவ்ரதையாயிருப்பாளொரு ஸ்த்ரீக்கு அஞ்சுகோடி த்யாஜ்யமாய், மூன்று கோடி உபாதே₃ய மானாற்போலே. அவளுக்கு த்யாஜ்யர் - கன்னிகைகள், வேஶ்யைகள், வேஶ்யாபதிகள், ஒருவனுக்குக் கைக் கொடுத்து வைத்து எழுந்துபோனவள், உள்ளேயிருந்து மயக்குகிறவள்; இனி உபாதே₃யராவார் - மாதாபிதாக்கள், தன்ப₄ர்த்தாவுக்கு அவர்ஜநீயரான ப₃ந்து₄க்கள், தன்னோட்டை பதிவ்ரதைகள். இவனுக்கு த்யாஜ்யர் - ஸம்ஸாரிகள், தே₃வதாந்தரங்கள், தே₃வதாந்தரபரதந்த்ரர்கள், த₃ர்ஶநத்திலே புகுந்து நின்று த₃ர்ஶநாந்தரியாய்ப் போனவர்கள், ரூபநாமங்களையுடையராய் உள்ளே புகுந்து அநந்யப்ரயோஜநரோடே மசக்குப் பரலிட்டுத் திரிகிறவர்கள்; இனி உபாதே₃யர் - ஆசார்யர்கள், ஸ்ரீவைஷ்ணவர்கள், ஸப்₃ரஹ்மசாரிகள்.

---

வகைப்பட்டவர்கள் கைவிடத்தக்கவர்களாய், மூன்று வகைப்பட்டவர்கள் கைக்கொள்ளத்தக்கவர்களாயிருப்பர்கள். *I* இருவருக்கும் கைவிடத் தக்கவர்களாவார்—(1) பதிவ்ரதைக்குக் கன்னிகைகள். ப்ரபந்நனுக்கு கன்னிகைகளைப்போலே பக்குவமடையாத ஸம்ஸாரிகள். (2) பதிவ்ரதைக்கு வேசிகள். ப்ரபந்நனுக்கு வேசிகளைப்போலே ஆத்மாவின் கற்பையிழக்கவைக்கும் மற்ற தெய்வங்கள். (3) பதிவ்ரதைக்கு வேசிகளைக் கைக்கொண்டவர்கள். ப்ரபந்நனுக்கு வேசிகளைப்போன்ற மற்ற தெய்வங்களுக்கு ஆட்செய்பவர்கள். (4) பதிவ்ரதைக்கு ஒருவனைக் கைப்பிடித்து அவனைவிட்டுப் பிரிந்து வாழாவெட்டியாய்ப் போனவள். ப்ரபந்நனுக்கு அவளைப்போலே ஸ்ரீவைஷ்ணவத₃ர்ஶனத்திலேயிருந்து, அதைவிட்டு மற்ற மதங்களைப் பற்றியவர்கள். (5) பதிவ்ரதைக்கு பதிவ்ரதாவேஷம்பூண்டு கணவனோடு இருந்து கணவனுக்கு ஏறுமாறாக நடந்து மயக்குகிறவள். ப்ரபந்நனுக் அவர்களைப்போலவே, ஸ்ரீவைஷ்ணவ ரூபநாமங்களையுடையவராய் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்திலே புகுந்து கூழாட்பட்டு நின்றவர்களாயிருந்தபோதிலும் வாழாட்பட்டு நின்றவர்களைப்போலே வேஷம் போட்டுத் திரிபவர்கள். *II* இருவருக்கும் கைக்கொள்ளத்தக்கவராவார்—(1) பதிவ்ரதைக்குத் தாய்தந்தையர்கள்; ப்ரபந்நனுக்கு தாய்போன்ற திருமந்த்ரத்தை உபதே₃ஶித்த தந்தைபோன்ற ஆசார்யர்கள். (2) பதிவ்ரதைக்குத் தன் கணவனுக்கு நெருங்கியிருக்கும் உறவினர்கள்; ப்ரபந்நனுக்கு எம்பெருமானோடு நெருங்கியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்.

## முந்நூற்றிருபத்திரண்டாம் வார்த்தை

ஒரு வைஷ்ணவனோடே ஸஹவாஸம் பண்ணும்போது அவனுடைய கு$_3$ணதோ$_3$ஷங்களிரண்டும் நிரூபிக்கவேண்டும்; நிரூபிக்கிறது கு$_3$ணங்கண்டு ஸ்துதிக்கவும், தோ$_3$ஷங்கண்டு தூ$_3$ஷிக்கவுமன்று; நாமே செறுகைக்கும், பற்றுகைக்கும் என்று ஆச்சான்பிள்ளை.

## முந்நூற்றிருபத்துமூன்றாம் வார்த்தை

நம்பிள்ளை வார்த்தை; - த்யாஜ்யவிஷயமும், உதா$_3$ஸீநவிஷயமும், அநுக்$_3$ரஹவிஷயமும், அநுப$_4$வவிஷயமும். அதாவது - நாஸ்திகர், ஆஸ்திகநாஸ்திகர், நாஸ்திகஆஸ்திகர், ஆஸ்திகர். நாஸ்திகராவார்-புறம்போடு உள்ளோடு வாசியற நாஸ்திகர்; ஆஸ்திக நாஸ்திகராவார் - புறம்பு ஆஸ்திகரைப் போலேயாய் உள்ளு நாஸ்திகர்; நாஸ்திக ஆஸ்திகராவார் - புறம்பு நாஸ்திகரைப்போலேயாய் உள்ளு ஆஸ்திகர்; ஆஸ்திகராவார் - உள்ளோடு புறம்போடு வாசியற ஆஸ்திகராயிருப்பவர்கள்.

---

*(3) பதிவ்ரதைக்குத் தன்னைப் போன்ற பதிவ்ரதைகள். ப்ரபந்நனுக்குத் தன்னைப் போலே ஆசார்யனிடத்தில் ஆஶ்ரயித்து ப்ரபந்நரானவர்கள்.*

### முந்நூற்றிருபத்திரண்டாம் வார்த்தை

*ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய கு$_3$ணங்களையும் தோ$_3$ஷங்களையும் அவனோடு கூடப்பழகும் மற்றொரு ஸ்ரீவைஷ்ணவன் ஆராய்வது குணங்கண்டு துதிப்பதற்கும் தோ$_3$ஷங்கண்டு நிந்தி$_3$ப்பதற்கும் அன்று; தோ$_3$ஷத்தை நாமே போக்கடிப்பதற்கும் குணத்தைக் கைக்கொள்வதற்குமேயாகும்.*

### முந்நூற்றிருபத்துமூன்றாம் வார்த்தை

*(1) வெளிவேஷத்திலும் மனோபா$_4$வத்திலும் நாஸ்திகர்களாயிருப்பவர்கள் கைவிடத்தக்கவர்கள். (2) வெளிவேஷத்தில் ஆஸ்திகர்களைப் போலே இருந்துகொண்டு மனோபா$_4$வத்தில் நாஸ்திகராயிருந்து வரும் ஆஸ்திகநாஸ்திகர்கள் உபேக்ஷிக்கத்தக்கவர்கள். (3) வெளிவேஷத்தில் நாஸ்திகர்களைப்போலே இருந்துகொண்டு, மனோபா$_4$வத்தில் ஆஸ்திகராயிருக்கும் நாஸ்திக ஆஸ்திகர்கள் அருளோடு நல்வார்த்தைகள் சொல்லித் திருத்தத்தக்கவர்கள். (4) வெளிவேஷத்திலும் மனோபா$_4$வத்திலும் ஆஸ்திகர்களாயிருப்பவர்கள் எப்போதும் அநுப$_4$விக்கத்தக்கவர்கள் என்று கருத்து.*

## முந்நூற்றிருபத்துநாலாம் வார்த்தை

முதலியாண்டான், மிளகாழ்வானுக்கு அருளிச்செய்த வார்த்தை; - கன்னக்கள்ளர் நால்வர், அவர்களைப் பரிஹரித்து வர்த்திக்கவேண்டும். அவர்களாரென்னில்; ஆத்மாபஹாரி, விபூ$_4$த்யபஹாரி, கு$_3$ணித்வபஹாரி, பரத்வாபஹாரி. ஆத்மா பஹாரியாகிறான் - திருமார்பில் கௌஸ்துப$_4$த்தைக் களவு கண்டவன். எங்ஙனேயென்னில்; - ஸ்வதந்த்ரனாயிருக்கை. விபூ$_4$த்யபஹாரியாகிறான் - ஏகாயநன். எங்ஙனேயென்னில்;- மாத்ருஹீநன். கு$_3$ணித்வபஹாரியாகிறான் - மாயாவாதி$_3$ ; எங்ஙனேயென்னில் ;—நிர்க்கு$_3$ணமென்கையாலே. பரத்வாப ஹாரியாகிறான் - ருத்$_3$ரபரத்வ ப்ரமாண நிஷ்ட$_2$ன். இவர்களுக்கு அஜ்ஞாநமும், அந்யத$_2$ாஜ்ஞாநமும், விபரீத ஜ்ஞாநமும் விஞ்சியிருக்கும்.

---

### முந்நூற்றிருபத்துநாலாம் வார்த்தை

பிறர் சொத்துக்களைக் கன்னம்வைத்துக் கொள்ளையிடும் கள்வர்களைப்போலே எம்பெருமானுடைய செல்வங்களை து$_3$ர்வாத$_3$ங்களைச் செய்து அபஹரிக்கும் கள்வர்கள் நால்வர். அவர்களைக்கண்டால் தூரவிலகிச்செல்லவேண்டும். அவர்களாவார்—(1) எம்பெருமானுக்குத் திருமார்பில் ஸ்ரீகௌஸ்துப$_4$மணிபோலே விலைமதிப்பற்ற செல்வமாயிருக்கும் ஆத்மாவை அவனுக்கு சேஷமாயிராமல் தனக்கே உரியது என்னும் ஸ்வஸ்வாதந்த்ர்ய நினைவாலே அபஹரிக்கும் ஆத்மாபஹாரி. "யோऽந்யதா$_2$ ஸந்தமாத்மாநம் அந்யதா$_2$ ப்ரதிபத்$_3$யதே । கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥" [ப$_4$ார - உத்$_3$ 42-35] [எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆத்மாவை, தனக்குரியதாக நினைத்து ஆத்மாவையே அபஹரிக்கும் அக்கள்வனால் செய்யப்படாத குற்றம் எது?] என்று இவன் செய்யும் குற்றத்தின் கொடுமை கூறப்பட்டது. (2) எம்பெருமானுடைய செல்வங்களில் தலையான செல்வமான லோகமாதாவான ஸ்ரீதே$_3$வியை இல்லைசெய்து ப்$_3$ரஹ்மசாரி நாராயணனையே சேஷியாகக்கொள்ளும் ஏகாயநன் எம்பெருமானுடைய விபூ$_4$தியை (செல்வத்தை) அபஹரிப்பவனாகிறான். (3) ஸகல கல்யாண கு$_3$ணங்களும் நிறைந்தவனான நாராயணனை ஒரு கு$_3$ணமும் அற்றவன் என்கையாலே மாயாவாதி$_3$யாகிற அத்$_3$வைதி கு$_3$ணங்களை அபஹரிப்பவனாகிறான். (4) சிவனுக்குப் பரத்வம் கூறும் சைவாக$_3$ம சைவபுராணங்களிலே ஊன்றிநிற்கும் சைவன் எம்பெருமானுடைய பரத்வத்தை அபஹரிப்பவனாகையாலே பரத்வாபஹாரியாகிறான். இவர்கள் அனைவர்க்கும் அஜ்ஞானமும் (ஜ்ஞானமின்மையும்), அந்யதா$_2$ ஜ்ஞானமும் ஸ்வப$_4$ாவங்களைத் தவறாக நினைப்பதும்), விபரீதஜ்ஞானமும் (த$_4$ர்மிஸ்வரூபத்தையே தவறாக நினைப்பதும்)—மிகுதியாயிருக்கும்.

## முந்நூற்றிருபத்தஞ்சாம் வார்த்தை

"ஸ்வரூபநாஶகரோடு செறிகையுமநர்த்த₂ம், ஸ்வரூப வர்த்த₄கரோடு செறியாதிருக்கையும் அநர்த்த₂ம்; என்றும் அஸத்ஸங்க₃தி அநர்த்த₂த்திலே தலைக்கட்டும், ஸத்ஸங்க₃தி ஸதா₃பஶ்யந்தியிலே தலைக்கட்டும்" என்று ஆச்சான்பிள்ளை வார்த்தை.

## முந்நூற்றிருபத்தாறும் வார்த்தை

பெரியதிருநாள் தீர்த்த₂ம் ப்ரஸாதி₃த்துப் பெருமாளெழுந் தருளுகிறபோது எம்பெருமானார் தாமும் தீர்த்த₂மாடி ஸேவித் தெழுந்தருளுகிறவர், பிள்ளை உறங்காவில்லிதா₃ஸர் திருக்கை கொடுத்துவர 'இதென்?' என்று சிலர் விண்ணப்பஞ்செய்ய; a 'ஜந்மம் உயர்ந்திருக்கத் தாழ நின்றோமே என்கிற அபி₄மாந முண்டிறே எல்லார்க்கும் ; அக்கொத்தையுமில்லாதவரிறே யிவர்' என்றருளிச்செய்தருளினார்.

---

### முந்நூற்றிருபத்தஞ்சாம் வார்த்தை

ஸ்வரூபத்தை அழிக்கும் அத்₃வைதிகள், ஶைவர்கள், விஷய ப்ரவணர்கள் முதலானாரோடு நெருங்கிப் பழகுவது இம்மையிலும் தீங்கு விளைத்து,மறுமையிலும் நரகம் முதலானவற்றை விளைத்துவிடும். ஸ்வரூபத்தை வளரச்செய்யும் ஸ்ரீவைஷ்ணவர்களோடு நெருங்கிப் பழகாதிருக்கையும் அப்படியே செய்துவிடும். முற்கூறிய தீயவர்களோடு சேருவது எப்போதும் நரகத்தை விளைத்துவிடும். நல்லவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களோடு சேருவது — "**தத்₃விஷ்ணோ: பரமம்பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:**" [ருக்₃வேத₃ம் அஷ்டக 1-2-7] [விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்] என்று சொல்லப்படும் பரமபத₃த்தையே அளித்துவிடும்.

### முந்நூற்றிருபத்தாறும் வார்த்தை

a "உயர்ந்த ப்₃ராஹ்மணாதி₃ வர்ணங்களில் பிறந்தவர்களுக்கு, சிலர்க்கு அடிமைத் தொழில் செய்வதென்றால் 'உயர்ந்த குலத்தில் பிறந்து இழிதொழில் செய்கிறோமே' என்று குலாபி₄மானமும், அதனால் வரும் தயக்கமும், வருத்தமும் ஏற்படக்கூடும். மற்றவர்களுக்குக் கைங்கர்யம் செய்வதற்கே ஏற்பட்ட ஶூத்₃ரவர்ணத்திலே பிறந்த பிள்ளையுறங்கா வில்லிதா₃ஸருக்கு அந்த அபி₄மானமும், தயக்கமும், வருத்தமும் ஏற்பட இடமில்லை. அதனால் உள்ளத்தால் பரிஶுத்₃த₄ரான அவருடைய ஸ்பர்ஶம் தமக்கும் வர்ணாஶ்ரமாபி₄மானத்தைப் போக்கிப் பரிஶுத்₃தி₄யளிக்கவல்லது" என்று எம்பெருமானார் திருவுள்ளம். இதனாலேயே பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் வேதகப்பொன் (இரும்பைப் பொன்னாக்கும் ஸ்பர்ஶவேதி₄) போன்றவர் என்னும் கருத்தமைந்த 'ராமாநுஜ ஸ்பர்ஶவேதி₄' என்னும் பெயரால் அழைக்கப்பட்டார். ஆறாயிரப்படிகு₃ருபரம்பரை (பக்கம் 236-ல்) இது உள்ளது.

## முந்நூற்றிருபத்தேழாம் வார்த்தை

ப₄ட்டர் நீராடி எழுந்தருளாநிற்க ஒரு ைஶவன் எதிரே வர, அவனுடம்பில் சாம்பல் தம் திருமேனியிலே படிந்தாற் போலேயிருக்க, பின்னையும் போய் நீராடியெழுந்தருளி உள்ளே எழுந்தருளாதே திருமாளிகை வாசலிலே நின்று ஆண்டாளையழைத்து, 'இப்படி பட்டதுக்கு ப்ராயஶ்சித்த மருளிச்செய்யவேண்டும்' என்ன; ஆண்டாளும் நெடும் போது திகைத்துநின்று 'ஸ்ரீ பாத₃தீர்த்த₂த்தையாகிலுங் கொள்ளுமித்தனையன்றோ' என்ன, 'அது சேருமோ?' என்ன, 'உயிர் மாளுமளவில் உயிரைமாறியாகிலும் உயிரை நோக்க வேண்டாவோ?' என்ன, 'ஆகில் திருவுள்ளமானபடி செய்யு மத்தனையன்றோ?' என்ன; அவ்வளவிலே ஆழ்வார் திருவ ரங்கப்பெருமாளரையரை / ஸ்ரீபாத₃ந்தாங்குகிற சொல்லமால் சுட்டார் இங்கே தண்டுவாங்க எழுந்தருள, ஆண்டாள் அவரைக்கண்டு 'தீர்த்த₂ம் வாராநின்றது' என்ன, ப₄ட்டர்

### முந்நூற்றிருபத்தேழாம் வார்த்தை

ஒரு ைஶவனுடைய உடம்பில் சாம்பல் தம்மேல் பட்டதற்கு ப்ராயஶ்சித்தம் அருளிச்செய்ய வேண்டுமென்று ப₄ட்டர் தம் திருத் தாயாரான ஆண்டாளைக் கேட்டார். "உயர்குலாபி₄மானமில்லாத த₃ாஸரான பரமப₄ாக₃வதர் ஒருவரின் ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை ஸ்வீ-கரிப்பதே இதுக்கு ப்ராயஶ்சித்தமாகும்" என்றாள் ஆண்டாள். "அத் தகையவர் அடியேனுக்கு ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் அளிக்க இசையமாட்டா ராகையால் அது கிடைக்குமோ" என்று அதிஶங்கைப்பட்டார் ப₄ட்டர். அதற்கு ஆண்டாள், "ஆத்மநாஶத்தை விளைக்கும் ஒரு தே₃ாஷம் வந்துவிட்டபோது, அதற்கு உயிரைக் கொடுத்தாவது பரிஹாரம் தேடி ஆத்மாவை ரக்ஷிக்கவேண்டாமா? ஆகையால் எப்படியாவது முயன்று அத்தகைய ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் கொள்வீர்" என்று அருளினாள். "இப்படித் திருவுள்ளமாகில் தேவரீர் நியமித்தபடியே செய்கிறேன்" என்றார் ப₄ட்டர். அப்போது ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரைய ருக்கு ஸ்ரீபாத₃ம் தாங்கும் (ப்₃ரஹ்மரத₂ம் எழுந்தருளப்பண்ணும்) ஒரு பரம ப₄ாக₃வதர் அங்கு ஒரு கார்யமாக எழுந்தருள, அவரைக் கண்டு ஆண்டாள் 'தீர்த்த₂ம் வருகின்றது' என்றாள். அதற்கு

/ சரியான பாட₂ம் ஓலைச்சுவடிகளில் காணத்தக்கது.

'நமக்குக் கூடுகிறதோ?' என்ன, 'முற்றூணிட்டுக் கறக்கிலும் பசலுக்குப் பாலன்றோ வேண்டுவது' என்ன, ப$_4$ட்டரும் 'அப்படியே செய்கையன்றோவுள்ளது' என்ன, கலசப்பானையிலே திருமஞ்சனங்கொண்டு ஸ்ரீபாத$_3$த்திலே சொரிந்து தீர்த்த$_2$த்தையும் ப்ரஸாத$_3$ப்பட்டு ப்ரீதரானார்.

## முந்நூற்றிருபத்தெட்டாம் வார்த்தை

ப$_4$ட்டர் அறியில் ஸம்மதியாரென்று ப$_4$ட்டருடைய ஸ்ரீபாத$_3$த்தை வேறே சிலரை யிட்டு விளக்குவித்து ஆண்டாள் ப்ரஸாத$_3$ப்படுவரென்று நஞ்சீயரருளிச்செய்தாரென்று நம் பிள்ளையருளிச்செய்வர்.

## முந்நூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை

a ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வம் ஸர்வஸாத$_4$ாரணமுமாய், சேதநனுக்கு ஸர்வாஸாத$_4$ாரணமுமாயிருக்கும்; b ப$_4$க$_3$வச்சே$_2$ஷவ்ருத்தி ஸர்வஜந ஸாத$_4$ாரணமுமாயிருக்கும்; c ப$_4$ாக$_3$வத ஶேஷத்வமும் ப$_4$ாக$_3$வத கைங்கர்யமும் பரமைகாந்திக்கே அஸாத$_4$ாரணம்.

---

ப$_4$ட்டர் 'நமக்குக் கிடைக்குமோ?' என்று ஐயமுற்றார். 'பசுவிற்கு வயிறு நிறையத் தீனிபோட்டுக் கறந்தாவது குழந்தைக்குப் பால் ஸம்பாதி$_3$த்துத்தானே ஆகவேண்டும். அதுபோல் இவரை அநுவர்த்தித்தாவது ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$ம் கொள்ளும்' என்று ஆண்டாள் நியமிக்க, ப$_4$ட்டரும் அப்படியே செய்து உகந்தார் என்று கருத்து.

### முந்நூற்றிருபத்தெட்டாம் வார்த்தை

இவ்வார்த்தை கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவத்தில் [நமது 2-ம் பதிப்பு பக்கம் 355] விளக்கப்பட்டுள்ளது. அதில் பார்த்துக்கொள்வது.

### முந்நூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை

a இவ்வாக்யத்தின் பிற்பகுதியில் 'ஸர்வ' என்னும் இடத்தில், 'ப$_4$ாக$_3$வதஶேஷத்வம்' என இருக்கவேண்டும்; "எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருப்பது, சேதநாசேதனங்கள் அனைத்துக்கும் பொது; ப$_4$ாக$_3$வதர்களுக்கு அடிமைப்பட்டிருப்பது சேதனர்களுக்கே கைகூடும்" என்று பொருள். b எம்பெருமான் விஷயத்தில் கைங்கர்யம் எல்லாச் சேதனர்களுக்கும் பொதுவாயிருக்கும். c எம்பெருமானுடைய அடியார்

## முந்நூற்றுமுப்பதாம் வார்த்தை

ப4ாக3வதவைப4வம் சொல்லாநிற்கச்செய்தே ஒருவர் ப4க3வத்3விஷயஞ்சொல்ல, 'இப்போது விஶேஷஞ்சொல்லுகிறவிடத்தில் ஸாமாந்யமென்?' என்று ஆச்சான்பிள்ளை.

## முந்நூற்றுமுப்பத்தோராம் வார்த்தை

'மத்3ப4க்தவிஶ்லேஷவிஷயத்தில் ஸத்தையுடனேயிருக்குமவர்கள் மத்3விஷயஶத்ருக்கள்' என்று ஈஶ்வரவாக்யம்; 'மறுவலிடாத ஶப்3த3ாதி3விஷயத்தில் ப்ராவண்யத்தில் விரக்தியும், வளராநிற்பதான ப4ாக3வதவிஷய ப்ராவண்யமுங்காண் வைஷ்ணவ லக்ஷணமாவது' என்று நம்பிள்ளை.

---

விஷயத்தில் ஶேஷத்வமும் கைங்கர்யமும் எம்பெருமானையே ப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்ட பரமைகாந்திகளுக்கே உரியதாயிருக்கும்.

### முந்நூற்றுமுப்பதாம் வார்த்தை

'ப4க3வத்3 வைப4வம் சொல்லுவது வைஷ்ணவர்கள் அவைஷ்ணவர்கள் ஆகிய அனைவருக்கும் பொதுவாகையாலே தாழ்ந்தது' என்றும், 'ப4ாக3வதவைப4வம் சொல்லுவது பரமைகாந்திகளுக்கே உரியதாகையாலே சிறந்தது' என்றும் ஆச்சான்பிள்ளை திருவுள்ளம்.

### முந்நூற்றுமுப்பத்தோராம் வார்த்தை

"என் அடியார்களைப் பிரிந்தால் த4ரிப்புடன் இருப்பவர்கள் எனது ஶத்ருக்கள்" என்பது—"த்3விஷத3ந்நம் ந போ4க்தவ்யம் த்3விஷந்தம் நைவ போ4ஜயேத் । பாண்ட3வாந் த்3விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்ட3வா:॥" [பார-உத் 91-27] [த்3வேஷிப்பவர்களுடைய உணவு உண்ணத்தக்கதன்று. த்3வேஷிப்பவர்களுக்கு உணவளிப்பதும் கூடாது. அரசனே! நீயும் உன்னைச்சேர்ந்த பீ4ஷ்ம த்3ரோணாதி3களும் பாண்ட3வர்களை த்3வேஷிக்கிறீர்கள். பாண்ட3வர்கள் எனக்கு உயிரன்றோ.] என்னும் ப4க3வத்3வாக்யத்தில் பீ4ஷ்மாதி3களையும் ஶத்ருக்களாக எடுத்திருப்பதிலிருந்து விளங்குகிறது. "ஶப்3த3ாதி3விஷய ஈடுபாட்டில் நிலைநின்ற வைராக்3யமும், மேலும்மேலும் வளரும் ப4ாக3வத விஷயத்தில் ஈடுபாடுமே வைஷ்ணவ லக்ஷணம்" என்பது முற்கூறிய எம்பெருமான் திருவுள்ளத்தை அடியொற்றி நம்பிள்ளை அருளிச்செய்தது.

## முந்நூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

a "ஒருவனுக்கு ஒரு வ்யஸநமுண்டானால் அந்த வ்யஸநம் தீரும்படியாக ப்ரஸாதி$_3$க்கவேண்டுமென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவனை அபேக்ஷிக்க; அந்த ஸ்ரீவைஷ்ணவனும் ப்ரஸாதி$_3$க்க, அவனுக்கு அந்த வ்யஸநம் தீரக் காணாநின்றோம், இது ப$_4$க$_3$வச்ச$_2$க்தியாலேயோ, வைஷ்ணவன் ஶக்தியாலேயோ?" என்று பின்பழகிய பெருமாள்ஜீயர் நம்பிள்ளையைக் கேட்க; ப$_4$க$_3$வச்ச$_2$க்தியாலே என்றருளிச்செய்ய; b 'ஆனால் எம்பெருமானை அபேக்ஷிக்க அமையாதோ?' என்ன; 'அமையாது; அவனை ப்ரஸாதி$_3$ப்பித்துக்கொள்ளும் வகை இதுவல்லதில்லை' என்ன; c 'ஒரு வைஷ்ணவன் ப்ரதிஜ்ஞையை எம்பெருமான் முடித்துக்கொடுத்த இடமுண்டோ?' என்ன; "அர்ஜுநனுக்கு ஜயத்$_3$ரத$_2$னுபாதி ப$_3$லமின்றிக்கேயிருக்க, 'நான் அஸ்தமிப்பதுக்குமுன்னே, ஜயத்$_3$ரத$_2$னை வதி$_4$க்கக்கடவேன்' என்று அர்ஜுநன் பண்ணின ப்ரதிஜ்ஞையை ஸர்வேஶ்வரன் முடித்துக்கொடுத்தமை கண்டிலீரோ?" என்றருளினார்.

---

### முந்நூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

a ஸ்ரீவைஷ்ணவனுடைய வாக்கின் ஶக்தியாலே பிறர்க்குத் துன்பங்கள் நீங்குவது எம்பெருமானுடைய ஶக்தியாலா? அந்த வைஷ்ணவனுடைய ஶக்தியாலா? என்பது கேள்வியின் கருத்து. 'எம்பெருமானுடைய ஶக்தியாலே' என்பது அதற்கு பதில். b 'அப்படியானால் அந்த எம்பெருமானையே நேரே பிரார்த்தி$_2$க்கலாமே' என்று இதன்மேல் எழுந்த கேள்வி. "எம்பெருமானை நேரே பிரார்த்தி$_2$ப்பதைக் காட்டிலும், அவனுக்கு மிகவும் இனியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய அருளையும் வாக்கையும் பெற்றால் எம்பெருமான் அந்த வாக்கை அவஶ்யம் தலைக்கட்டிக் கொடுப்பானாகையாலே ஸ்ரீவைஷ்ணவர்களைப் பிரார்த்தி$_2$ப்பதே எம்பெருமானை உகப்பித்துக் கார்யத்தை ஸாதி$_4$த்துக்கொள்ளச் சிறந்தது" என்பது இதற்கு பதில். c 'ஆயுத$_4$மெடுக்கமாட்டேன்' என்ற தன் வார்த்தையையும் பொய்யாக்கிக்கொண்டு திருவாழியாழ்வானைக்கொண்டு ஸூர்யனை மறைத்து 'ஜயத்$_3$ரத$_2$னைக் கொல்லக்கடவேன்' என்ற அர்ஜுனனின் ப்ரதிஜ்ஞையைக் கண்ணன் முடித்துக்கொடுத்தது இவ்விஷயத்தில் த்$_3$ருஷ்டாந்தம் என்று கருத்து.

## முந்நூற்றுமுப்பத்துமூன்ரும் வார்த்தை

a பிள்ளை;-b ப்ரபந்நர்-ஜ்வரமாய் க்லேஶியாநிற்க, பிள்ளை காரியார்த₃ாஸரும், சக்ரபாணிப்பிள்ளானும் அறியவந்த வளவிலே, இடவகையில் உத்தமநம்பி ரக்ஷகனுய் க்லேஶியா நின்ருனென்ன; ப்ரபந்நர், "வர்த்தமாநரோக₃ ஶாந்திரஸ்து" என்று ப்ரஸாதி₃க்க; பிள்ளான் "நீர் க்லேஶியாநிற்க ப்ரஸாதி₃க்கையாவதென்? அது ஶமிக்கையாவதென்?" என்ன; பிராட்டி ராவண ப₄வநத்திலேயிருந்து ராக்ஷஸிக ளாலே க்லேஶப்படுத்தப்பட்டாளென்ஞ, அவள் "ஶீதோ ப₄வ ஹநூமத:" என்ற வாக்யம் ப₂லித்ததில்லையோ? என்று மூதலித்துக் கொடுத்தார்.

---

### முந்நூற்றுமுப்பத்துமூன்ருும் வார்த்தை

a இது நம்பிள்ளை வார்த்தை. b ஒரு ப்ரபந்நர் ஜ்வரம் வந்து வருந்தும்போது, பிள்ளை காரியார்த₃ாஸரும் சக்ரபாணிப்பிள்ளானும் அவரை விசாரிக்க வந்தார்கள். அப்போது பேச்சின் நடுவே அவர்கள் "கோயிலுக்கு ரக்ஷகரான உத்தமநம்பி நோயாலே மிகவும் வருந்து கிருர்" என்று சொன்னுர்கள். அந்த ப்ரபந்நர் "உத்தமநம்பிக்கு இப்போது இருக்கும் நோய் தீரக்கடவது" என்று அருளினுர். அதைக் கேட்ட சக்ரபாணிப்பிள்ளான் "நீர் நோயாலே வருந்தும் போது பிறர் நோயைத் தீர்க்க உமது வாக்குக்கு ஶக்தியுண்டோ? பிறர் நோயை நீக்கும் ஆற்றல் உமது வாக்குக்கு இருந்தால், உமது நோயையே போக்கிக் கொண்டிருக்கலாமே" என்று பொருள் படக்கேட்டார். அதற்கு அந்த ப்ரபந்நர் — "சீதாபிராட்டி அஶோகவனத்திலேயிருந்து ராக்ஷஸிகளாலே துன்புறுத்தப்படும் போது, தனக்கு ரக்ஷகன் எம்பெருமானேயாகையாலும், தன்னைத் தான் ரக்ஷித்துக் கொள்வது தன் ஸ்வரூபத்துக்குத் தகாதாகையா லும் தன் ரக்ஷணத்திலே முயலவில்லை. ஆனுல் பரமப₄ாக₃வதனுன அநுமன் வாலிலே அரக்கர்கள் நெருப்பை வைத்தபோது அதற்குப் பரிஹாரம் தேடவேண்டியது அவஶ்யமாகையாலே 'அக்₃னியே! நீ அநுமனுக்குக் குளிர்ந்திருப்பாயாக' [ரா-ஸு 53-29...32] என்னும் வாக்கை அருளினுள். அது ப₂லித்தது என்று ஶ்ரீராமாயணத்தில் காண்கிருேம். ஆகவே, ஶ்ரீவைஷ்ணவர்களான நாமும் நாமறிந்த ஶ்ரீவைஷ்ணவர்களுக்குத் துன்பம் நேரும்போது 'அது தீரவேணும்' என்னும் வாக்கைச் சொன்னுல், அது அவஶ்யம் ப₂லிக்கும்" என்ற பதில் மூலம் பிரமாணம் காட்டி அர்த்த₂நிஷ்கர்ஷம் செய்தார்.

## முந்நூற்று முப்பத்துநாலாம் வார்த்தை

அநந்தாழ்வான் நோவுசாத்திக்கிடந்தாரென்று கேட்டருளி, திருவேங்கடமுடையான், "அநந்தாழ்வானை அறிந்து வாருங்கோள்" என்று சில ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களை விட்டு அறிவிக்க; 'ஆளிட்டு அந்திதொழுதானோ?' என்ன; திருவேங்கடமுடையான் எழுந்தருளி வாசலிலே வந்துநிற்க; பேசாதேகிடந்தார்; 'அநந்தாழ்வான்! நாம் வரப் பேசாதே கிடந்தாயீ!' என்ன; 'ஒரு ஸ்ரீவைஷ்ணவன் வரப்பேசாதேயிருந்தேனாகிலன்றோ எனக்குக் குறையாவது' என்ன; 'நாம் உம்மை இதினின்றும் போகச்சொல்லில் செய்வதென்?'

---

### முந்நூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை

'அநந்தாழ்வான் நோயால் வருந்துகிறார்' என்று கேள்விப்பட்ட திருவேங்கடமுடையான், அவரை விசாரித்து வருவதற்குச் சில ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களை அனுப்பினான். "ஸந்த்₄யாவந்த₃னத்தைத் தானே செய்யவேண்டியிருக்க, ஓர் ஆள் வைத்து அதைச் செய்வாரைப் போலே, அந்தரங்க₃னை அடியேனை விசாரிக்கத் திருவேங்கடமுடையான் நேரில் வராமல் ஆளிட்டு விசாரிக்கிறானே?" என்று அநந்தாழ்வான் அருளிச்செய்தார். இதை ஏகாங்கிகள்மூலம் கேள்விப்பட்ட திருவேங்கடமுடையான் ஸ்ரீபாத₃ம் தாங்குவார்க்கு அருளப்பாடிட்டுப் புறப்பட்டு, அநந்தாழ்வான் திருமாளிகை வாசலிலே வந்துநின்றான். அதறிந்தும் பேசாதேகிடந்தார் அநந்தாழ்வான். அதைக்கண்டு திருவேங்கடமுடையான் "அநந்தாழ்வான்! நாம் வந்தபின்பும் பேசாமலிருந்தாயே" என்றான். அதற்கு அநந்தாழ்வான், "ஒரு வைஷ்ணவன் வந்தபோது பேசாமலிருந்தால்தான் எனக்குக் குறை. நீர் வந்தபோது பேசாமலிருந்தால் ஒரு குறையுமில்லை" என்று கைங்கர்யத்துக்கு இடையூறாகத் தமக்கு நோயை அளித்த குறைதோற்றச் சொன்னார். அதுகேட்ட திருவேங்கடமுடையான், "நாம் எம்மை இப்படி அவமதிக்கும் உம்மை இந்தத் திருமலையிலிருந்து வெளியே போகச் சொன்னால் என்ன செய்வீர்" என்று இவரைச் சோதிக்கைக்காகக் கேட்டான். அதற்கு அநந்தாழ்வான், "நாம் இருவருமே இந்தத் திருமலைக்கு வந்து சேர்ந்தவர்களே. 'பரன் சென்று சேர் திருவேங்கடம்' [திருவாய் 3-3-8] என்கிறபடியே, நீர் சில நாள் முன்னால் வந்தீர். நான் பிற்பாடு வந்தேன் என்னும் இவ்வளவே வாசி, ஆகையால் இத்திருமலையாழ்வார் அடியேனைப் போகச்சொன்னால் போக

என்ன ; 'நீர் ஒரு கிழமை முற்பட்டீர் இத்தனையன்றே, இருவரும் திருமலையாழ்வாரை ஆஶ்ரயித்தோம் இத்தனையன்றே' என்று அருளிச்செய்தார்.

## முந்நூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை

எம்பெருமான் இடைச்சி கையிலே கட்டுண்டிருந்தபடி- ராஜா அந்த:புரத்திலே மாலையாலே கட்டுண்டிருந்தாற்போலே.

## முந்நூற்றுமுப்பத்தாறும் வார்த்தை

மூன்று வஸ்துவிலே ப₄க₃வத்₃வஸ்து வளருமென்று பிள்ளான் பணிக்கும்;-திருவநந்தாழ்வான் மடியிலும், பெரிய திருவடி திருமுதுகிலும், ஸேனைமுதலியார் திருப்பிரம்பின் கீழும். நாய்ச்சிமாரோடே எம்பெருமான் லீலைகொண்டாடா

---

வேண்டுமேயொழிய நீர் போகச்சொன்னால் போகவேண்டிய அவஶ்ய மில்லை'' என்று அருளிச்செய்தார். பரிபக்வனான பிள்ளையின் பரம ரஸமான வார்த்தையைக் கேட்டுத் தந்தை உகப்பதுபோலே அநந் தாழ்வானின் பரமரஸமான இவ்வார்த்தையைக் கேட்டுத் திருவேங்கட முடையான் உகந்திருப்பான் என்பதில் ஐயமில்லை.

**முந்நூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை**

ஸர்வேஶ்வரனான எம்பெருமான் இடைச்சிகள் கட்டவும் அடிக்கவுமாம்படி இருந்தது — ராஜா அந்தப்புரத்திலே தனது ராணியின் மாலையாலே கட்டுண்டும், கை கால்களாலே அடியுண்டும் அவற்றை பே₄ாக்₃யமாக நினைத்திருப்பதுபோலே—என்று கருத்து.

**முந்நூற்றுமுப்பத்தாறும் வார்த்தை**

எம்பெருமான் நித்யஸூரிகளோடே பரிமாறும்போது தன்னை ஸ்வாமியாகவும் நித்யஸூரிகளைத் தன் அடிமைகளாகவும் நினைத்துப் பரிமாறுவதில்லை. தன்னை ஒரு இளவரசனைப் போலவும், நித்யஸூரிகளை—தன்னை மடியிலும், முதுகிலும் சுமந்து வளர்க்கும் தாய்மார்களைப் போலவும், தன்னை நியமித்து ராஜகார்யங்களில் பு₃த்₃தி₄மதி சொல்லி நடத்திச் செல்லும் மூதறிஞர்களான மந்த்ரிகளைப் போலவும் நினைத்தே பரிமாறுவான் எம்பெருமான். இதையே ''வானிளவரசு'' [பெரியாழ்திரு 3-6 3] என்று அருளினார் பெரியாழ்வார். அந்த நித்ய ஸூரிகளும் எம்பெருமானுடைய திருவுள்ளமறிந்து, இளவரசனை மடியிலும், முதுகிலும் சுமந்து வளர்க்கும் தாய்மார்களைப்போலவும், அவனை நியமிக்கும் மூதறிஞரான மந்த்ரிகளைப்போலவுமே நடந்துகொள்வார்கள். ஓர் இளவரசனைப் போஷித்துக்கொண்டாடி நியமித்து வளர்க்கும் தாய்மார்களைப்போலே, எம்பெருமானைத் திருவநந்தாழ்வான் தன் மடியிலே வைத்துச் சீராட்டி வளர்ப்பார்; பெரிய திருவடியான க₃ருட₃ன் குழந்தையை முதுகில் சுமந்து செல்வது

நிற்க, 'லீலையாலே ஜக₃ந்நிர்வஹணத்தை மறக்கிறானோ' என்று நியமிக்கைக்காக ஸேனைமுதலியார் எழுந்தருளின வாறே, "இந்தாணும் ஐயர்வந்தார்" என்று நாய்ச்சிமார் உள்ளே புக்கருளுவராம்.

## முந்நூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

**ஸ்வஸ்வரூபத்துக்கு ஸீமா ததீ₃யஶேஷத்வம்; பரஸ்வ ரூபத்துக்கு ஸீமா அர்ச்சாவதாரம்; விரோதி₄ஸ்வரூபத்துக்கு ஸீமா அஹங்காரமமகாரங்கள்; உபாய ஸ்வரூபத்துக்கு ஸீமா ப₄க₃வத் க்ருபை; உபேயத்துக்கு ஸீமா ப₄க₃வந்முகோ₂ல் லாஸம்— என்று நம்பிள்ளை.**

---

போலே, எம்பெருமானை முதுகில் சுமந்து சென்று கொண்டாடி வளர்ப்பர். ஸேனை முதலியார் பிரம்பும் கையுமாக நின்று உபாத்தி யாயர் பிள்ளைகளைப் போலே நியமித்து வளர்ப்பார்—என்று பிள்ளான் அருளிச்செய்வராம். எம்பெருமான் நாச்சிமாரோடே விளையாடி லீலா ரஸங்களை அநுப₄விக்கும்போது "லீலையாலே ஜக₃ந்நிர்வாஹத்தை மறந்துவிடப் போகிறானோ" என்று எண்ணி அவனை நினைவுறுத்து வதற்காக ஸேனைமுதலியார் அவ்விடத்துக்கு வந்தவுடன் "இதோ பாருங்காணும். பெரியவர் வந்திருக்கிறார்" என்று அருளிச்செய்து நாச்சிமார்கள் மாமனாரைக் கண்ட மணாட்டுப் பெண்களைப்போலே அடங்கி ஒடுங்கி உள்ளே புகுந்தருளுவார்களாம்.

### முந்நூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

'ஸீமா' என்னும் பத₃ம் 'எல்லை நிலம்' என்னும் பொருளையுடையது. ப₄க₃வானுக்கு ஶேஷமான ஆத்மஸ்வரூபத்துக்கு எல்லைநிலம் அவனடியார்களுக்கு ஶேஷமாயிருக்கை. ஸர்வேஶ்வரனாயிருக்கையாகிற பரஸ்வரூபத்துக்கு எல்லைநிலம் தன்னுடைய ஸ்தி₂திக₃மனஶயனாதி₃களையெல்லாம் அர்ச்சகபராதீ₄னமாக்கியிருக்கும் அர்ச்சாவதாரம். அவித்₃யா (அஜ்ஞானம்), கர்ம, வாஸநா, ருசி, ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ம் என்னும் விரோதி₄ ஸ்வரூபத்துக்கு எல்லைநிலம் — தானல்லாத தே₃ஹத்தைத் தானாக நினைக்கும் அஹங்காரமும், தன்னதல்லாத மனைவி மக்கள் முதலானாரைத் தன்னதாக நினைக்கும் மமகாரமுமாகும். கர்மயோக₃ம், ஜ்ஞானயோக₃ம், ப₄க்தியோக₃ம் முதலான ஸ்வப்ரவ்ருத்திகளை ப்ரத₂மபர்வமாகக்கொண்ட உபாயஸ்வரூபத்துக்கு எல்லை நிலம் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபை. தன் ஆநந்த₃த்தை உத்₃தே₃ஶ்யமாகக் கொண்ட ப₂லங்களை ப்ரத₂மபர்வமாகக் கொண்ட உபேயங்களுக்கு எல்லை நிலம் எம்பெருமானுடைய முக₂ மலர்த்தியையே உபேயமாகக் கொள்கை—என்பது நம்பிள்ளையின் வார்த்தை.

## முந்நூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

கைகேயி ப$_4$க$_3$வத$_3$பசாரம் பண்ணிளேயாகிலும், தன் மகன் என்ருகிலும் ப$_4$ாக$_3$வத ஸ்நேஹமுண்டாகையாலே முக்தையானள்; சக்ரவர்த்தி ப$_4$க$_3$வத்ஸ்நேஹம் பண்ணிஞனேயாகிலும் முக்தஞகிறிலன்.

## முந்நூற்றுமுப்பத்தொன்பதாம் வார்த்தை

அம்மணியாழ்வான் இருநூற்றுக்காதம் ஆறு வந்து ப$_4$ட்டர் ஸ்ரீபாத$_3$த்திலே தண்டனிட்டு, "நெடுமாற்கடிமைக்கு அர்த்த$_2$மருளிச்செய்யவேணும்" என்று அபேக்ஷிக்க; ப$_4$ட்டரும் "எம்பெருமானை அறிகையாவது-அவனுக்கு அரை வயிற்றுப்படி; ததீ$_3$யரை அறிகையாவது-அவனை முழுக்க

---

### முந்நூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

கைகேயி ராமபிரானைக் காட்டுக்கனுப்பி ப$_4$க$_3$வத$_3$பசாரம் பண்ணினளேயானாலும் 'தன் மகன்' என்ருவது பரமப$_4$ாக$_3$வதனை ப$_4$ரதனிடம் அன்புவைக்கையாலே "அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி" [பெருமாள்திரு 10-10] என்கிறபடியே பெருமாளோடுகூட முக்தி அடைந்தாள். த$_3$ஶரத$_2$சக்ரவர்த்தி எம்பெருமானிடம் அன்பு வைத்தபோதிலும், பரமப$_4$ாக$_3$வதர்களான ப$_4$ரதன் முதலானரிடம் அப்படி அன்புவைக்காமையாலே முக்தி அடையாமல் ஸ்வர்க்க$_3$த்தையே அடைந்தான்.

### முந்நூற்றுமுப்பத்தொன்பதாம் வார்த்தை

அம்மணியாழ்வான் என்பவர் நெடுந்தூரம் வழிநடந்து வந்து ப$_4$ட்டர் திருவடிகளிலே தண்டனிட்டு ப$_4$ாக$_3$வத ஶேஷத்வ பாரதந்த்ர்யங்களை நிலைநாட்டும் "நெடுமாற்கடிமை" [திருவாய் 8.10] என்னும் திருவாய்மொழியின் அர்த்த$_2$த்தை அருளிச்செய்யவேணும் என்று பிரார்த்தி$_2$த்தார். ப$_4$ட்டரும் "எம்பெருமானை மாத்திரம் அறிவது அவனை அரைகுறையாக அறிவதேயாகும். சேதன லாப$_4$மாகிற பெரும்பசியையுடைய அவனுக்குத் தன்னைமாத்திரம் அறிவாரைக் கொண்டு பாதிப் பசிதான் தீரும். அவனைமாத்திரம் அறியாமல் அவனடியார்களளவும் அறிவது அவனை முழுவதும் அறிவதாய்,

"அறிகை" என்று அருளிச்செய்ய; "இனி பலவகையாக அருளிச்செய்யில் அடியில் மறப்பேன்" என்று அவர் அது தன்னையே த$_4$ாரகமாகக்கொண்டு போனார்.

## முந்நூற்றுநாற்பதாம் வார்த்தை

a ப$_4$ாக$_3$வதசேஷத்வ விது$_4$ரமான ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வமும், தே$_3$ஹாத்மாபி$_4$மாநம் போலே பொல்லாதென்று முதலியாண்டான்.

b திருமங்கையாழ்வார்க்கு ததீ$_3$யவிஷயத்திலுண்டான ஊற்றம் சொல்லுகிறது; — (நம்பிதன் நல்லமாமலர்ச்சேவடி சென்னியிற்சூடியும் தொழுதும் எழுந்தாடியும்) என்கிற

---

அத்தகையவர்களாலே அவனுடைய முழுப்பசியும் தீரும்" என்று அருளிச்செய்தார். அதைக்கேட்ட அம்மணியாழ்வான் "இவ்வார்த்தையொன்றே அடியேனுக்குப் போதும்—நெடுமாற்கடிமைத் திருவாய்மொழியின் பத$_3$பதா$_3$ர்த்த$_2$ங்களையெல்லாம் பலவகையாக அருளிச்செய்தால் அடியேன் முக்$_2$யமாய் ஸாரமான இதை மறந்துவிடுவேன்" என்று கூறி, இவ்வார்த்தையையே தமக்கு த$_4$ாரகமாகக்கொண்டு தம் ஊருக்குச் சென்றார். இவ்வார்த்தை கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவம் பக்கம் 352ல் விவரிக்கப்பட்டுள்ளது.

### முந்நூற்றுநாற்பதாம் வார்த்தை

a இவ்வாக்யம் தெலுங்குப் பதிப்பில் முந்திய வார்த்தையின் கடைசியில் உள்ளது. "அடியார்களுடைய வைப$_4$வம் அறியாமல் எம்பெருமானுக்கு மாத்திரம் அடிமைப்பட்டிருந்தால் அப்படியிருப்பது ப$_4$ாக$_3$வதாபசாரம் முதலானவற்றை விளைத்து எம்பெருமானுடைய நிக்$_3$ரஹத்துக்குப் பாத்திரமாக்கிவிடுமாகையாலே, அவ்விருப்பு தே$_3$ஹத்தையே ஆத்மாவாக நினைப்பதைப்போலே பொல்லாதது" என்று முதலியாண்டான் அருளிச்செய்வர்.

b இவ்வார்த்தை 'திருமங்கைமன்னன் மடிபிடி ரஹஸ்யம்' என்னும் தலைப்போடு தனி ரஹஸ்யமாகவும் அச்சிடப்பட்டுள்ளது. எம்பெருமான், திருமங்கையாழ்வாரைக்குறித்துப் பல கேள்விகளை மடிபிடித்துக் கேட்க, ஆழ்வாருடைய பதில்களிலே ப$_4$ாக$_3$வத வைப$_4$வமாகிற பரமரஹஸ்யம் வெளிப்பட்டதாகையாலே, இதற்கு 'மடிபிடி ரஹஸ்யம்' என்று பெயர் வந்தது என்று கொள்ளலாம். திருநறையூர் நம்பி

பாசுரத்தைக்கேட்டு, இவர் கால்வாசியறிந்தவராயிருந்தா ரென்று, 'ஆழ்வீர்! திருச்சேறையிலே வாரீர்; உம்முடைய அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டித்தருகிறோம்' என்ன; இவர் திருச்சேறையிலேயெழுந்தருள, இவ்வாழ்வாருடைய அசைந்த வளையத்திலே புழு(னு)கை வழியவார்த்தாற் போலே மாமத லைப்பிரான், தம்முடைய திருவடிகளைக் கொண்டுவந்து வைக்கப்புக, அத்தைப் புறங்கையாலே தட்டி, "உன் பொது நின்ற பொன்னங்கழலோ என்தலைமேலிருப்பது? உன்தாள் தொழுவார்காண்மின் என்தலைமேலார்" என்ன; அத்தைக் கேட்டு லஜ்ஜாவிஷ்டனாய், 'உமக்கு அந்தர்யாமியாயிருந்

---

விஷயமாக நூறு பாசுரம் அருளிச்செய்து இறுதியில் "நம்பிதன் நல்லமாமலர்ச் சேவடிசென்னியில் சூடியும் தொழுதுமெழுந்தாடியும்" [பெரியதிரு 7-3-10] என்று பாடியதைக்கேட்டு "இவர் நம் திருவடியின் (காலின்) பெருமையைப் பாடியதால் நம்மைக் கால்வாசியறிந்தவராகவே இருந்தார்; இவரை நம்மை முழுவதும் அநுப$_4$விக்கப் பண்ண வேணும்" என்று எண்ணி, "ஆழ்வீர்! திருச்சேறைக்கு வாரீர். நீர் விரும்பியபடியே நம்முடைய நல்லமாமலர்ச் சேவடியை உம்சென்னி யிலே சூட்டுவோம்" என்று அருளிச்செய்தான். இவ்வாழ்வாரும் திருச்சேறைக்கு எழுந்தருளினார். திருச்சேறையில் எழுந்தருளி யிருக்கும் மாமதலைப்பிரான், இவ்வாழ்வார் தம் தலையிலே சூடியிருக்கும் அசைந்தாடும் பூமாலையிலே புனுகுத் தைலத்தைப் பரிபூர்ணமாகச் சொரிந்தாற்போலே, தன்னுடைய திருவடிகளைக் கொண்டுவந்து வைக்கப் புகுந்தான். "'நல்ல மாமலர்ச்சேவடி' என்று நாம் இவ னுக்குத் திருவடிபோன்றவர்களான பரமப$_4$ாகவ$_3$தர்களையே கருதி யிருக்க, இவன் தன் திருவடிகளைக் கொண்டுவந்து நம் தலையிலே வைப்பதே" என்று எண்ணி, அத்திருவடிகளைப் புறங்கையாலே தடுத்து "பொதுநின்ற பொன்னங்கழல்" [மூன்-திருவ 88] என்று தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் ஸமமாகஆஶ்ரயிக்கலாம்படியிருக்கும் உன் திருவடிகளோ என்தலைமேலேயிருப்பது? "உன் தாள்தொழுவார் காண்மின் என்தலைமேலாரே" [பெரியதிரு 7-4-1] என்று அருளிச் செய்தார். இதைக்கேட்டு வெட்கமடைந்த எம்பெருமான் ஆழ்வாரைப் பல கேள்விகள் கேட்க, ஒவ்வொரு கேள்விக்கும் ஆழ்வார் பதில் கூறுகிறார். அவற்றை ஸம்வாத$_3$மாகத் தருகிறோம் இனி.

**எம்பெருமான்:**—உமக்கு அந்தர்யாமியாயிருப்பது நாமன்றோ?

தோமே' என்ன, "எம்பெருமான் தாள்தொழுவாரெப்பொழுது மென்மனத்தேயிருக்கின்றுரே" என்ன; 'ஆகிலும்-அர்ச்சாவதாரமாய் ஸுலப₄ஞயிருந்தோமே' என்ன, "கடன்மல்லைத்தல சயநத்துறைவாரைக் கொண்டாடும் நெஞ்சுடையாரவர் எங்கள் குலதெய்வமே" என்ன; 'அவர்கள் எங்கேயுளர் ?' என்ன, "போதோடுபுனல்தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்றுரே" என்று-அவாகள் ஸ்வரூபத்தைச்சொல்ல; "'கண்களாரளவும் நின்று' என்கிறபடியே கண்ணுக்கு இரையிடுகைக்கும், நெஞ்சுக்கு அநுஸந்த₄ாநமாக இரையிடுகைக்கும் நாம் வேணுமே" என்ன, "வண்சேறை எம்பெரு

---

**ஆழ்வார்:**—"எம்பெருமான் தாள்தொழுவார் எப்பொழுதுமென் மனத்தேயிருக்கின்றுரே" [பெரியதிரு 7-4-2] என்று என் மனத்தில் அந்தர்யாமியாயிருப்பது நீ அல்ல. உன் அடியார்களே.

**எம்பெருமான்:**—அப்படியாலுைம், உமக்கு எளியனுன அர்ச்சாவதாரமாய் குலதெய்வமாயிருந்தோமே?

**ஆழ்வார்:**—"கடல்மல்லைத்தலசயனத்துறைவாரைக் கொண்டாடும் நெஞ்சுடையாரவர் எங்கள் குலதெய்வமே" [பெரியதிரு 2-6-4] என்று எனக்குக் குலதெய்வம் நீயல்ல; உன்னைக் கொண்டாடும் அடியார்களே.

**எம்பெருமான்:**—நீர் கொண்டாடுமவர்கள் எவ்விடத்தில் இருக்கிருர்கள் என்பதைப் பார்த்தீரா? இவ்விருள்தருமாஞாலத்திலிருக்குமவர்களைப்போய்க் கொண்டாடுகிறீரே.

**ஆழ்வார்**—"போதோடு புனல்தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்றுரே" [பெரியதிரு 7-4-3] என்று இவ்விருள்தருமாஞாலத்திலிருந்தும் உனக்குத் திருவாராத₄னம் செய்பவர்களே நித்யஸூரிகளைக் காட்டிலும் பெருமை பெற்றவர்கள்.

**எம்பெருமான்:**—"கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே" [பெரியதிரு 7-10-9] என்று நீரே அருளிச்செய்தபடியே உமது கண்ணுக்கு உணவிடுவதற்கும் நெஞ்சுக்கு அநுஸந்தி₄க்கலாம்படி உணவிடுவதற்கும் நாம் வேணுமே?

**ஆழ்வார்:**—"வண்சேறை எம்பெருமானடியார் தம்மைக் கண்டேனுக்கு இது காணீர் என்னெஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறே" [பெரியதிரு 7-4-6] என்று என் கண்ணுக்கும் நெஞ்சுக்கும் உணவு நீயல்ல; உன் அடியார்களே.

மானடியார் தம்மைக் கண்டேனுக்கு இதுகாணீர் என்னெஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறு" என்ன ; "ஆகில் 'ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ:' என்கிறபடியே உமக்கு ரஸாயந ஸேவைக்கு நாம் வேண்டுமே" என்ன, "எம்பெருமான் தாளை நாளும் சிந்திப்பார்க்கென்னுள்ளம் தேனூறி எப்பொழுதும் தித்திக்குமே" என்ன; "ஆகில் உமக்கு உபாயோபேயத்துக்கு நாம் வேணுமே" என்ன, "உபாயத்துக்கு முற்பாடராகையாலும் உபேயத்துக்கு எல்லைநிலமாகையாலும், இருந்த நாளைக்கு உசாத்துணையாகையாலும், 'பேராளன்பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே'" என்ன; "ஆகில் அடியிலே நமக்கு த₃ாஸரென்று புகுந்தீரே" என்ன, "மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்துங்கற்று

---

எம்பெருமான்:—அப்படியானாலும் 'எல்லா நறுமணங்களையும் நற்சுவைகளையும் உடையவன் பரமாத்மா" [ ச₂ாந் 3-14-4 ] என்று உபநிஷத் ஓதியபடியே உமக்கு உறுதியளிக்கும் அமுதரஸமாயிருப்பது நாமல்லவோ?

ஆழ்வார்:—"எம்பெருமான் தாளை நாளும் சிந்திப்பார்க்கென்னுள்ளம் தேனூறி எப்பொழுதும் தித்திக்குமே" [பெரியதிரு 7-4-5] என்று எனக்கு அமுதரஸமாயிருப்பது நீ அல்ல. உன் திருவடிகளைச் சிந்திப்பவர்களே.

எம்பெருமான்:—அப்படியானாலும் உமக்கு உபாயமாகவும் உபேயமாகவும் இருப்பது நாமல்லவோ?

ஆழ்வார்:—நீ உபாயமாம்போது புருஷகாரமாய் நின்று உனக்கும் முற்பட்டிருக்கையாலும், நீ உபேயமாம்போதும் அவ்வுபேயத்துக்கு எல்லைநிலமாய் நின்று இறுதியிலும் உத்₃தே₃ஶ்யராயிருக்கையாலும், இங்கிருக்கும் நாளிலே பேச்சுத் துணையாய் இருக்கையாலே நடுவிலும் உத்₃தே₃ஶ்யராயிருக்கையாலும், "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே" [பெரியதிரு 7-4-4] என்று எனக்கு எப்போதும் உத்₃தே₃ஶ்யர்கள் உன் பேரோதுகிறவர்களேயொழிய நீயல்ல.

எம்பெருமான்:—அப்படியானாலும் எனக்கு அடியவனாகத் தானே முதலில் வந்து புகுந்தீர்?

ஆழ்வார்:—"மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்துங் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கடிமை" [பெரியதிரு 8-10-3]

நானுற்றதும் உன்னடியார்க்கடிமை" என்ன; இவர் நின்ற நிலையில் தமக்குப் பிறந்த ப்ரீத்யதிஶயத்தாலே பின்னையும் அவ்வாழ்வார் திருவுள்ளத்தைச் சோதிக்கைக்காக, "அடியிலே நம்மைக் கவிபாடவென்றிழிந்து நம்மடியார் திறத்திலே மண்டிற்றென் ?" என்ன, "( ராஜபுருஷ: ) என்னுமாபோலே, ஒருவனைக் கவிபாடுமவன் ஊரும் பேரும் தாரும் குடியும் வைத்துக் கவிபாடுமாபோலே சொன்னேனித்தனை ; ததீ$_3$ய விஷயமே உத்$_3$தே$_3$ஶ்யம்" என்ன ; "ஆகிலும் பிரித்துச் சொன்னீரே" என்ன, "ப$_4$ர்த்தாவின் தே$_3$ஹத்தை விரும்பின பதிவ்ரதைக்குக் குற்றமுண்டாகிலிறே தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்தை விரும்பின எனக்குக் குற்றமுண்டாவது ?"

---

என்று உன்னைப்பற்றி எவ்வளவு பேசியிருந்தாலும், உன்னுடைய திருவஷ்டாக்ஷரத்தைக்கற்று அதன் பரமஸாரார்த்த$_2$த்தை நிஷ்கர்ஷித்து நானடிமைப்பட்டது உன் அடியார்க்கேயல்லது உனக்கல்ல.

இப்படி இவர் ப$_4$ாக$_3$வத ஶேஷத்வ பாரதந்த்ர்யத்திலே நிலை நிற்பதைப் பார்த்த எம்பெருமான் இவர் திருவுள்ளத்தை ஶோதி$_4$ப்பதற்காக மேலும் சில கேள்விகள் கேட்கலுற்றான்.

**எம்பெருமான்:**—"வாடினேன் வாடி" [பெரியதிரு 1-1-1] என்று நம்மைக் கவிபாடத் தொடங்கி, இப்போது நம்மைக் கார்கடைக் கொண்டு நம்மடியார் திறத்திலே மண்டி நிற்பது தகுமோ?

**ஆழ்வார்:**—ஒரு ராஜாவுக்கு மிகவும் வேண்டியவனைக் கவிபாடத் தொடங்கியவன் முதலில் அந்த ராஜாவின் பெருமைகளைச் சொல்லி, அதற்குப் பின் ராஜபுருஷனைச் சொல்லுவது போலவும், ஒருவனைக் கவிபாடத் தொடங்கியவன் அவனுடைய ஊர், பேர், அவனுக்குரிய மாலை, அவனுடைய குடி முதலானவற்றைவைத்துக் கவிபாடுவது போலவும், உன்னடியார்களைக் கவிபாடுவதற்காக உன்னையும் சொன்னேனேயொழிய எனக்கு உன் அடியார்களே உத்$_3$தே$_3$ஶ்யர்.

**எம்பெருமான்:**—ஆனாலும் என்னைக் காட்டிலும் என்னடியார்களுக்குச் சிறப்புச் சொன்னீரே. இது குற்றமல்லவா ?

**ஆழ்வார்:**—கணவனின் ஆத்மாவைக் காட்டிலும் தே$_3$ஹத்தை விரும்பின பதிவ்ரதைக்குக் குற்றமுண்டானாலன்றோ உன்னைக் காட்டிலும் உன்னுடைய தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹம்போன்ற உன்னடியார்களை விரும்பின எனக்குக் குற்றமுண்டாவது.

என்று தமக்குத் ததீ₃யவிஷயத்திலுண்டான ஊற்றத்தைச் சொல்ல ஈஶ்வரன் திருவுள்ளமுங்களித்து 'இவ்வாழ்வார்க்குத் தோற்றோம்' என்று, இவர் திறத்திலே மடலெடுக்கும்படியா யிற்று ஈஶ்வரன் திருவுள்ளம்.

## முந்நூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

ஒரு தே₃ஶவிஶேஷத்தேறப்போய் அநுப₄விக்கும் அநுப₄வம் ஸாத்மிக்கைக்காகவும், உபகாரஸ்ம்ருதிக்காகவும், ப்ரபத்தி பண்ணினபோது பரமபத₃த்தேறப்போகில், நச்சுப்பொய்கை

---

இப்படி ஆழ்வார் ப₄ாக₃வதர்கள் விஷயத்தில் தமக்குண்டான ஊற்றத்தைச் சொன்னவுடன் எம்பெருமான் திருவுள்ளம் மிகவுகந்து 'இவ்வாழ்வாருக்குத் தோற்றோம்' என்று எண்ணினான். இவர் அவன் திறத்தில் மடலெடுத்ததுபோலே இவர் திறத்தில் மடலெடுக்கும்படி யான நிலையை எம்பெருமான் திருவுள்ளம் அடைந்தது.

### முந்நூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

'எம்பெருமானே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும், த₄ாரகபோஷக போ₄க்₃யங்கள் எல்லாமாகவும் இருப்பவன்' என்று அறிந்த மஹாத் மாக்களான ஆழ்வார்கள் ஆசார்யர்கள் போன்ற ஆர்த்த ப்ரபந்நர்க ளுக்கும் எம்பெருமான் உடனடியாக மோக்ஷமளிக்காமல் இருப்பதற்குக் காரணங்களைக் காட்டுகிறது இவ்வார்த்தை. அவையாவன:— (1) பரமபத₃த்தில் சென்று அடையும் ப₄க₃வத₃நுப₄வம் இவனுக்குப் பொருந்தவேண்டுமென்றால் இவ்வுலகிலிருக்கும்போதே இவனுக்கு அவ்வநுப₄வத்திற்குத் தோள்தீண்டியான அநுப₄வம் ஏற்பட வேண்டும். அதற்காக எம்பெருமான் இவனை இங்கு சில நாள் வைத் திருக்கிறான். (2) எம்பெருமான் தனக்கு இவ்வுலகிலே அருளிய நன்மைகளைச் சில நாட்களாவது அநுஸந்தி₄த்தால்தான் அங்கும் பரமபுருஷார்த்த₂த்தை அருளுவான் என்னும் மஹாவிஶ்வாஸம் பிறக் கும். இதனாலும் எம்பெருமான் இவனை இங்கு வைத்திருக்கிறான். (3) ஆர்த்த ப்ரபத்தி பண்ணினவுடனே பரமபத₃மளித்துவிட்டால், "ப₄க₃வானை ஶரணமடைந்தால் உடனே சாவுதான்; ஆகையால் இது ஒரு நச்சுப்பொய்கையே (விஷநீர்ப் பொய்கையே)" என்று பயந்து ஸம்ஸாரிகள் ப₄க₃வத்₃விஷயத்தின் அருகிலேயே வர மாட்டார்கள். அதனாலும் எம்பெருமான் 'இந்த தே₃ஹத்துக்குரிய கர்மம் முடியும்போது மோக்ஷமளிப்பது' என்று நியமம் கொண்டி

யென்று ஸம்ஸாரிகள் இத்துறையில் இழிவாரில்லாமையாலும், இவன் ஸம்ஸாரிகளைத் திருத்தவேண்டுகையாலும், ப்ரபந்நனுடைய ஶரீரம் சரமஶரீரமாகையாலும், ஸர்வேஶ்வரனுக்கு அபி₄மதமாகையாலும், இத்தே₃ஶத்தில் ப₄க₃வத₃நுப₄வந்தான் இவனுக்கு அபூர்வமாகையாலும், ஆசைகிளரவும், இவன்தன்னிசைவாலும் இவ்வர்த்த₂ங்களைப் பற்றவாய்த்து ஶரீராவஸாநத்திலே மோக்ஷமாகைக்கு அடி.

## முந்நூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

**கழிந்தநாளைக்கு அநுதபிக்கையும், வருகிற காலத்தைப் பழுதுபோக்காமையுங்காண் வைஷ்ணவத்வமாவது என்று பிள்ளை.**

---

ருக்கிறுன். (4) கிடைத்தற்கரிய மஹாத்மாவான இவனைக்கொண்டு எம்பெருமான் மற்றும் சிலரை ஜ்ஞானிகளாக ஆக்கவிரும்புகிறுன். ஆகையால் அதற்காகவும் இவனை இங்கு வைத்திருக்கிறுன். (5) காமிநியினுடைய அழுக்குகக்கும் காமுகனைப்போலே ப₄ர்த்தாவான தனக்குப் பத்னியைப்போன்ற இந்த மஹாத்மாவின் அழுக்குடம்பையுமுகந்து அதைச் சிலநாள் அநுப₄விக்கைக்காகவும் இவனை எம்பெருமான் இங்கு வைத்திருக்கிறுன். (6) அநாதி₃காலமாக ஸம்ஸாரியாகவிருந்து ஶப்₃த₃ாதி₃ விஷயங்களையே அநுப₄வித்துப்போந்த இந்த மஹாத்மாவுக்கு, இந்த ஜன்மத்தில் ஏற்பட்ட ப₄க₃வத₃நுப₄வம் மிகவும் அபூர்வமாய் இனிதாயிருக்கையால் "அச்சுவைபெறினும் வேண்டேன்" [திருமாலை 2] "இங்கே திரிந்தேற்கிழுக்குற்றென்" [திருவாய் 8-10-4] என்னும்படி பண்ணுகிறது. அந்த இவனுடைய விருப்பத்தையொட்டியும் இவனை எம்பெருமான் இங்கு வைத்திருக்கிறுன். (7) ஆசை கடல்போல் கிளர்ந்தெழாவிட்டால் அஜீர்ணகாலத்தில் சோறுபோலே பரமபத₃த்தில் அநுப₄வம் ரஸிக்காதாகையாலும் ஆசை கிளர்ந்தெழுவதற்காக இவனை இங்கு வைத்திருக்கிறுன். (8) இந்த ப்ரபந்நனும் தான் இவ்வுலகில் தொடங்கின ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யங்கள் நிறைவடைந்த பின்பே பரமபத₃ம் அடைய இசைகின்றுன். அந்த இசைவைக்கருதியும் எம்பெருமான் இவனை இங்கு வைத்திருக்கிறுன். இக்காரணங்களாலேயே ஆர்த்தப்ரபத்தி செய்தாலும் உடனே மோக்ஷமேற்படாமல் சில வருஷங்கள் கழித்து, இவ்வுடல் அழிவதற்குரிய காலம் வரும்போதே மோக்ஷம் ஏற்படுகிறது.

## முந்நூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

a நம்பிள்ளை, நஞ்சீயரை 'தான் தனக்கு வைஷ்ணவத்வமுண்டென்று அறியலாவது எவ்வவஸ்த்தை₂ பிறந்தால்?' என்ன; அர்ச்சாவதாரத்துக்கு உயிருண்டென்று நெஞ்சிற்பட்டவன்றும், ஒரு வைஷ்ணவன்பக்கல் புத்ரத₃ாராதி₃கள் பக்கல் ஸ்நேஹத்தளவாகிலும் ஸ்நேஹம் பிறந்தவன்றும், ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கடுத்து வார்த்தை சொன்னால் தன் நெஞ்சில் a₂ சிவிட்குத் தட்டாமல் பே₄ாக₃ரூபமானவன்றும், b பரத₃ாரபரத்₃ரவ்யங்களில் நசையற்றவன்றும் ஏகாந்தி என்றறியலாம்; ஸ்வத₃ார ஸ்வத்₃ரவ்யங்களில் நசையற்றவன்று பரமைகாந்தி என்றறியலாம் என்று அருளிச்செய்தார்.

---

### முந்நூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

"பழுதே பலபகலும் போயினவென்றஞ்சியழுதேன்" [முதல் திருவ 16] "அன்றுநான்பிறந்திலேன்" [திருச்சந்த 64] என்கிறபடியே ப₄க₃வத₃நுப₄வமில்லாமல் கழித்த நாளைக்கு அநுதாபம் கொள்கையும், "அரவணைமேல் கண்டுதொழுதேன்" [முதல்திருவ16] "பிறந்தபின் மறந்திலேன்" [திருச்சந்த 64] என்கிறபடியே வருகிற காலத்தில் ப₄க₃வத₃நுப₄வத்தையே செய்து பழுதுபோக்காமலிருப்பதுமே வைஷ்ணவத்வம்—என்று நம்பிள்ளை வார்த்தை.

### முந்நூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

a இவ்வார்த்தையில் இப்பகுதி குருபரம்பராப்ரப₄ாவத்தில் பக்கம் 368ல் உள்ளது. அர்த்த₂ம் ஸ்பஷ்டம். a₂ சிவிட்கு — கோபம். b பிறர் மனைவி, பிறர்பொருள் இவற்றில் நெஞ்சு ஈடுபட்டால் அவனுக்கு வைஷ்ணவத்வம் அடியோடு இல்லை என்பது ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் யமகீ₃தை முதலானவற்றில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இவ்விரண்டுமில்லாதவனுக்கே வைஷ்ணவத்வமுண்டு. இந்த வைஷ்ணவத்வமிருந்தாலும் தன் மனைவியிடமும், தன் பொருளிலும் பற்று இருந்ததாகில் அநந்யபே₄ாக்₃யத்வம் இல்லாமையாலே அந்த வைஷ்ணவன் ஏகாந்தியாவானேயொழியப் பரமைகாந்தி ஆகமாட்டான். தன் மனைவியிடமும் தன் பொருளிலும் பற்றறுந்தால் தன்னைத் தானே பரமைகாந்தி என்று அறுதியிட்டுக் கொள்ளலாம்.

## முந்நூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை

பொன்னாச்சியார் வார்த்தை;-பாண்டிய மண்ட$_3$லத்திலே ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய வைஷ்ணவத்வத்தைக் கொண்டாட, "எழுதி அணிந்த வைஷ்ணவத்வமோ, எல்லை நிலத்தில் வைஷ்ணவத்வமோ?" என்று.

## முந்நூற்றுநாற்பத்தஞ்சாம் வார்த்தை

ப$_4$ட்டர் தம்முடைய ஸ்ரீபாத$_3$த்திலே ஸேவிப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவரை, "நீர் அநந்தாழ்வான் ஸ்ரீபாத$_3$த்திலே சென்று 'ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமிருக்கும்படியென்?' என்று கேட்டுவாரும்" என்ன; அவரும், அநந்தாழ்வான் ஸ்ரீபாத$_3$த்திலே செல்ல, அன்று பல ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்கே அமுதுசெய்தருள, அவரும் இடம் பெருமையாலே ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுதுசெய்யுமளவும் பேசாதேயிருக்க, அநந்தாழ்வானும் அவரைப்பார்த்து, "அமுது செய்தருளிற்றில்லையே, நெடும்போதுண்டே இளைப்போடே நிற்கிறது" என்று, அநந்தாழ்வான் தாமும் அவருமாக உள்ளே அமுது செய்தருளி, பின்னை 'எங்குநின்று எழுந்தருளுகிறது?' என்ன; "ப$_4$ட்டர்-அநந்தாழ்வான் ஸ்ரீபாத$_3$த்திலேசென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படியென்னென்று கேட்டு வாவென்று அருளிச்செய்துவிட்டார்"என்ன; ஆகில், a"கொக்குபோலேயிருக்கும்,

---

**முந்நூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை**

பிள்ளையுறங்காவில்லிதா$_3$ஸரின் தேவிகளான பொன்னாச்சியாரிடம் சிலர் பாண்டிய மண்டலத்திலே உள்ள ஒரு ஸ்ரீவைஷ்ணவருடைய வைஷ்ணவத்வத்தைக் கொண்டாடினார்கள். அப்போது அந்த அம்மையார் "அவருடைய வைஷ்ணவத்வம் எழுதியணிந்த வைஷ்ணவத்வமோ? எல்லை நிலத்தில் வைஷ்ணவத்வமோ" என்று கேட்டாள். அதாவது—"பன்னிரு திருமண்காப்புக்களையும் திருமேனியிலே அழகாக எழுதியணிந்துகொண்டு, ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வத ஶேஷத்வபாரதந்த்ர்யமில்லாத வைஷ்ணவத்வமோ, அல்லது எல்லைநிலமான ப$_4$ாக$_3$வத விஷயம் வரையில் ஶேஷத்வபாரதந்த்ர்யங்கள் கொண்ட வைஷ்ணவத்வமோ அவருடைய வைஷ்ணவத்வம்?" எனறு கேட்டாள் என்றபடி.

**முந்நூற்றுநாற்பத்தஞ்சாம் வார்த்தை**

இவ்வார்த்தை கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவம் பக்கம் 356ல் உள்ளது.

a. ஓடுமீன் ஓடி உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு"

கோழிபோலேயிருக்கும், உப்புபோலேயிருக்கும், உம்மைப் போலேயிருக்கும் என்று விண்ணப்பஞ்செய்யும்" என்று அருளிச்செய்தருளினர்.

## முந்நூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

பரஸம்ருத்$_3$த்$_4$யஸஹத்வம், பரஸம்ருத்$_3$தி$_4$ஸஹத்வம், பரஸம்ருத்$_3$தி$_4$ ப்ரயோஜநத்வம், பரஸம்ருத்$_3$த்$_4$யேக ப்ர யோஜநத்வம்.

---

என்கிறபடியே கொக்கானது நீர்க்கரையிலேயே நின்று, அந்நீரி லுள்ள சிறுமீன்களைக் கொத்தியெடுக்காமல், தனக்குரிய இரையான பெரியமீன் வந்தவுடன் அதைக் கொத்தியெடுத்து அதையே பே$_4$ாக்$_3$ய மாக உண்ணும். அதுபோலே ஸ்ரீவைஷ்ணவனும் நீர்வண்ண னிடத்திலேயே நின்று, அவனருளும் அஸார அல்பஸார ஸார ஸாரதரங்களான பயன்களை உபேக்ஷித்து, ப$_4$ாக$_3$வத விஷயத்திலே அவர்களுகக்கும் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்த$_2$ம் ஒன்றையே நீர்வண்ணனிடம் பெற்றுக்கொள்ளுவான். கோழியானது குப்பை களைக் காலாலே கிளறிக்கிளறிப் பார்த்து நெல்மணிகளைப் பொறுக்கி யெடுத்து உயிர்வாழ்வதற்கு உறுப்பாகக்கொள்ளும். அதுபோலே, ஸ்ரீவைஷ்ணவனும் சாஸ்திரங்களைத் துருவித்துருவி ஆராய்ந்து, அஸாரம் தொடங்கி ஸாரதரமீருகவுள்ள பயன்களைப் பெற்றுத்தரும் யாக$_3$ங்கள், கர்மஜ்ஞாநப$_4$க்தியோக$_3$ங்கள், ஸ்வக$_3$தஸ்வீகாரம் ஆகிய உபாயங்களை ஒதுக்கி, ஸாரதமமான பயன்களைப் பெற்றுத்தரும் பரக$_3$தஸ்வீகாரநிஷ்டை$_2$, ப$_4$ாக$_3$வதாபி$_4$மானம், ஆசார்யாபி$_4$மானம் ஆகியவற்றையே பரமபுருஷார்த்த$_2$த்தைப் பெற உறுப்பாகக் கொள் வான். உப்பு மற்ற பத$_3$ார்த்த$_2$ங்களில் மறைந்து கலந்துநின்று அவற்றைப் பரமபே$_4$ாக்$_3$யமாக்கித்தரும். அதுபோலே ஸ்ரீவைஷ்ணவன் "பாண்டி$_3$த்யம் நிர்வித்$_3$ய ப$_3$ால்யேந திஷ்ட$_2$ாஸேத்" [ப்$_3$ருஹ 5-5-1] [ப்$_3$ரஹ்மஜ்ஞானி பாண்டி$_3$த்யத்தை அடைந்து, (அதை மறைத்து) குழந்தைபோல் இருக்கவேண்டும்.] என்கிறபடியே ப$_4$ாக$_3$வதர் திரளிலே தன்னை மறைத்துக்கொண்டு நின்று அத்திரளுக்கு இனிமையை உண்டாக்குவான். ஸ்ரீவைஷ்ணவனுடைய ஓவ்வோராகா ரத்தைத் தனித்தனியே உணர்த்தும் இம்மூன்று லக்ஷணங்களும் ப$_4$ட்டருடைய சிஷ்யரான உம்மிடம் நேரில் காணலாம்படியிருந்தமை யாலே, 'உம்மைப்போலேயிருப்பான்' என்பது பரிபூர்ணமான லக்ஷண மாகிறது என்று கருத்து.

## முந்நூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனாகிறான்-ஸம்ஸாரத்தில் நசையற்று, பரமபத$_3$த்திலே ஆசைபிறந்தவன். இவனுக்குப் பரிஹரிக்க வேண்டுவதென்னென்னில்;-உடம்பில் ருசி விளையாதொழிகையும், உறவு முறையார் பக்கல் ஆசை வளராதொழிகையும், உடம்படியாக உகக்குமவர்களோடு உறவுகொண்டாடாதொழிகையும், லோகம் சிலுகிடாமல் ஒதுங்கி வர்த்திக்கையும், உடம்புக்கு இரைதேடி ஒருவனுக்கு ஏவல்தொழிலை ஒருபடியாலும் செய்யாதொழிகையும், உள்ளத்துக்குள்ளே நிற்கும்

---

**முந்நூற்றுநாற்பத்தாறும் வார்த்தை**

இதில் மேன்மேலே சிறந்த நான்குவித$_4$ அதி$_4$காரிகள் காட்டப்படுகிறார்கள். அவர்களாவார்—(1) பிறர் பெருமை பொறாதவர்கள். இவர்களுக்கு வைஷ்ணவத்வம் அடியோடு இல்லை. மேலேவரும் மூன்று அதி$_4$காரிகளுக்கு மேன்மேலே வைஷ்ணவத்வம் சிறந்துள்ளது. கடைசி அதி$_4$காரியே உத்தமவைஷ்ணவன். (2) பிறர் பெருமையைப் பொறுப்பவர்கள். (3) பிறர் பெருமையையும் தங்களுக்குப் பயனாகக் கொண்டவர்கள். (4) முந்திய அதி$_4$காரியைப் போலே தங்கள் பெருமையோடு பிறர் பெருமையையும் பயனாகக் கொள்ளாமல் பிறர் பெருமையையே பயனாகக்கொள்பவர்கள். இவர்களே தலைசிறந்த வைஷ்ணவர்கள்.

**முந்நூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை**

இந்த வார்த்தை ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தைச் சொல்லிக்கொண்டு, ஸ்ரீவைஷ்ணவன் தவிர்க்கவேண்டியவைகளையும், கைக்கொள்ளவேண்டியவைகளையும் கூறுகின்றது. "ஸம்ஸாரத்தில் ஆசையில்லாமல் பரமபத$_3$த்தில் ஆசைபிறந்தவன்" என்பது ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம். தவிர்க்கவேண்டியவைகளை இவன் தவிர்த்தபின்பும், கைக்கொள்ளவேண்டியவைகளைக் கைக்கொண்ட பின்பும் இவனது தன்மைகள் பின்வருமவை:—(1) உடம்பில் ஈடுபாடு விளையாமலிருக்கை (2) தே$_3$ஹப$_3$ந்து$_4$க்கள் பக்கல் ஆசை வளராதிருக்கை. (3) உடம்பைப் பார்த்துத் தன்னை உகக்கின்றவர்களோடு உறவுகொண்டாடாமல் இருத்தல். (4) உலகினர்க்குத் தன்னால் இடர் ஏற்படாமல் ஒதுங்கி வாழ்கை. (5) உடம்புக்கு இரைதேடுவதற்காக வைஷ்ணவனல்லாத ஒருவன் ஏவிய கார்யங்களை ஒரு சிறிதும் செய்யாமலிருத்தல். (6) உள்ளத்துக்குள்ளே அந்தர்யாமியாய்த் திகழும் எம்பெருமானிடம்

ஒருவன்பக்கல் ஒருபடிப்பட்ட ருசியுண்டாய்ப் போரவும், தலையறுப்புண்டவனையும், தலையறுத்து அத்தாலே சந்தியிலே தலையோடு ஏந்தினவனையும், இவர்களுக்குக் கீழான சந்த்$_3$ராதி$_3$த்யர்களையும் தஞ்சமென்று ஶரணம்புகாதொழிகையும், இவர்களை ஶரீரமாகவும், அடிமையாகவுமுடைய எம்பெருமான்பக்கல் ஆன அடிமை செய்துபோரவும், எம்பெருமானே தஞ்சமென்று ஶரணம் புக்கவர்களைத் தனக்குத் துணையாகவும் உயிராகவும் நினைத்துப்போரவும், இவர்களோடு விளையாடியும் பொல்லாங்கு சொல்லாதொழியவும், இவர்களைப் பொல்லாங்கு சொல்லுவார் உடனே கூடினாராகில் அவர்களை வாயைக்கிழித்தல், தான் செவியைப் புதைத்துக் கொண்டு கடக்கப்போதல் செய்யவும், எம்பெருமான் திருவாசலுக்குள்ளே மயிர் விரித்தல், உமிழ்தல், கால்நீட்டுதல் தொடக்கமானவை வருந்தியும் தவிரவும், ஆபத்துக்களாலே புகுந்து ஒதுங்கவேண்டிற்றாகில் 'அநர்த்த$_2$ப்படாநின்றோமே'

---

ஏகரீதியாக ஈடுபாடுகொள்ளுதல். (7) தலையறுப்புண்டவனான ப்ரமன், அப்பிரமனின் தலையையறுத்து, அவனுடைய ஶாபத்தாலே சந்தியிலே தலையோடு ஏந்திப் பிச்சையெடுத்த ஶிவன், இவர்களுக்குக் கீழான இந்த்$_3$ரன், சந்த்$_3$ரன், ஸூர்யன் முதலான தே$_3$வதைகளைத் தஞ்சமென்று ஶரணம்புகாதிருத்தல். (8) இந்த தே$_3$வதைகளை ஶரீரமாகவும், அடிமைகளாகவுமுடைய எம்பெருமானுக்குத் தன்னாலியன்ற கைங்கர்யங்களைச்செய்து வாழ்தல். (9) எம்பெருமானே தஞ்சமென்று ஶரணம்புகுந்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைத் தனக்குத் துணையாகவும் உயிராகவும் நினைத்திருத்தல். (10) இவர்கள் விஷயத்தில் விளையாட்டாகக்கூட தவறான வார்த்தைகளைச் சொல்லாதிருத்தல். (11) இவர்கள் விஷயத்தில் தவறான வார்த்தைகள் சொல்லுவார் எதிர்ப்பட்டால், ஶக்தியிருந்தால் அவர்கள் வாயை அடக்குதல்; இல்லாவிடில் அவர்கள் வார்த்தை காதில் படாதபடி தன் காதை மூடிக்கொண்டு அவ்விடத்தைவிட்டு வெகுதூரம்போதல் செய்தல். (12) எம்பெருமானுடைய கோயிலுக்குள்ளே தலையை விரித்துக் கொண்டிருப்பது, எச்சில் உமிழ்வது, காலை நீட்டிக்கொண்டிருப்பது முதலான அபசாரச் செயல்களை, ஶ்ரமப்பட்டாவது கைவிடுதல். (13) ஆபத்துக் காலங்களில் மற்ற தெய்வங்களின் கோயில்களிலோ, அவைஷ்ணவர்களின் வீடுகளிலோ புகுந்து

என்று அஞ்சிப் போரவும், இப்படிப்பட்ட போதுபோக்கு ஸம்ஸாரத்திலிருக்கும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு.

## முந்நூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

பட்டரை, ஒருவன் 'தே₃வதாந்தரங்களை வைஷ்ணவர்கள் அநுவர்த்தியாதொழிவானென்?' என்ன; "ப்ரமாண விரோத₄முள்ளவிடத்திலன்றோ ஸந்தே₃ஹமுள்ளது, இங்கு ஸந்தே₃ஹமில்லைகாண்" என்றருளிச்செய்தார்; 'ஆவதென்?' என்ன; - "ஸத்வப்ரசுரரை ரஜஸ்தம:ப்ரசுரர் அநுவர்த்திக்கும தொழிய ஸத்வப்ரசுரர் ரஜஸ்தம:ப்ரசுரரை அநுவர்த்திக்கக் கடவதோ?" என்றருளிச்செய்தார்; "தேஷாமபி நமோ நம:" என்கிறபடியாலே.

---

ஒதுங்கவேண்டிவந்தால், "தகாத கார்யத்தைச் செய்கிறோம்" என்று அஞ்சியிருத்தல். ஸம்ஸாரத்தில் இருக்கும் ஸ்ரீவைஷ்ணவன் இத் தன்மைகளையுடையவனாய் வாழவேண்டும்.

### முந்நூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

கு₃ருபரம்பராப்ரப₄ாவம் 355ம்பக்கத்தில் இவ்வார்த்தை உள்ளது. "ஸ்ரீவைஷ்ணவர்கள் மற்ற தெய்வங்கள் விஷயத்தில் ஏன் தாழநிற்ப தில்லை?" என்று ப₄ட்டரை ஒருவன் கேட்டான். மனிதர்களைக் காட்டிலும் தே₃வர்கள் சிறந்தவர்களாகையாலே மனிதர்கள் தே₃வர்களிடம் தாழநிற்கவேண்டும் என்பது அவனது அபி₄ப்ராயம். இதற்கு ப₄ட்டருடைய பதிலின் கருத்து பின்வருமாறு :— தே₃வர் மனிதர் என்பதொன்றே உயர்வு தாழ்வுகளுக்குக் காரணமாகாது. ஸத்வகு₃ணம் மிக்கவர்கள் மனிதர்களானாலும் உயர்ந்தவர்களே. ரஜஸ்தமோ கு₃ணங்கள் மிகுந்தவர்கள் தே₃வர்களானாலும் தாழ்ந்தவர்களே. ஆகையால் ரஜஸ்தமஸ்ஸுக்கள் நிறைந்தவர்களாகையாலே தாழ்ந்தவர்களான தே₃வர்கள், ஸத்வகு₃ணம் மிக்கவர்களாகையாலே உயர்ந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்தில் தாழநிற்க வேண்டுமேயொழிய ஸ்ரீவைஷ்ணவர்கள் தே₃வர்கள் விஷயத்தில் தாழநிற்பது தகாது. இதனாலேயே "**யஸ் த்வைவம் ப்₃ராஹ்மணோ வித்₃யாத் தஸ்ய தே₃வா அஸந் வஶே**" [புருஷஸூக்தம் 2-5] [எவன் பரமபுருஷனை உன்னை இப்படி ப்ராப்யப்ராபகங்களாக அறிகிறானோ, அவனுக்கு எல்லா தே₃வர்களும் வசப்பட்டிருக்கிறார்கள்] "**ஸர்வேऽஸ்மை தே₃வா: ப₃லிமாவஹந்தி**" [தைத்-ஶீக்ஷா 5] [எல்லா தே₃வர்களும் ப₄க₃வத்₃ப₄க்தனுக்குக் கப்பம் கட்டுகிறார்கள்] என்று உபநிஷத் ஓதிற்று. "**தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமிததேஜஸ: । ப்ரணாமம் யேऽபி குர்வந்தி தேஷாமபி நமோ நம: ॥**" [பா₄ர-சாந்தி

## முந்நூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

a நம்பிள்ளையை, ஒருவன் எம்பெருமானையொழிய தே3வதாந்தரங்களை பூ4ஜிக்கலாகாதென்கிற நீங்கள் நித்ய நைமித்திகாதி3களில் அக்3நீந்த்3ராதி3களை பூ4ஜிப்பானென்? ஆலயத்தில் பூ4ஜியாதொழிவானென்னென்ன; அக்3நி ஹோத்ராதி3களில் அக்3நியை உபாஸித்தும் ஶ்மஶாநாக்3நி களை நிவர்த்தித்தும் போமிருப்போலே. இரண்டிடத்துக்கும் வாசியெங்ஙனே யென்னில்;- நித்யாதி3களில் ப4க3வத் ப்ரகாரபு3த்3த்4யா பண்ணுகிற உபாஸநம் ப4க3வது3பாஸநமே யாக விதி4க்கையாலும், அவற்றினுடைய ப்ரதிஷ்டை2களில் பராபரதத்வப்ர(வ்ய)த்யயம் பண்ணியிருக்கும் தாமஸபுருஷர்க ளாலே வேத3விருத்3த4ாக3ம மந்த்ரப்ரக்ரியையாலே ஸ்வதந் த்ரமாக தே3வதாந்தரங்கள் க்ருதப்ரதிஷ்டி2தமாகையாலும், இவ்விடத்தில் ப4க3வத் ப்ரகாரபு3த்3த்4யா உபாஸிக்க விதி4

46.130] [அளவற்ற தேஜஸ்ஸையுடையவனாய், யஜ்ஞவராஹரூபியா யவதரித்த விஷ்ணுவுக்கு ஒரு நமஸ்காரம் செய்பவர்களுக்கு, இடை விடாமல் நமஸ்காரம் செய்துகொண்டிருக்கவேண்டும்] என்று யமன் கூறினன். இப்படி ப்ரமாணங்களால் ஆத3ரிக்கப்பட்ட இவ்விஷயத்தில் நீ ஸந்தே3ஹப்பட்டுக் கேள்வி கேட்டதே தவறு என்று கருத்து.

### முந்நூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

a இந்த வார்த்தையின் இப்பகுதி கு3ருபரம்பராப்ரபா4வம் 384-385ம் பக்கங்களில் உள்ளது. நம்பிள்ளையருளிய பதிலின் ஸாரம் பின் வருமாறு:-வைதிகர்கள்—நெருப்பு ஒன்றேயானாலும், அக்3நிஹோத்ரம் செய்யும் அக்3நியைக் கைக்கொண்டும், சுடுகாட்டிலுள்ள நெருப்பை விலக்கியும் வாழ்கிறார்கள். அதுபோலே வேத3ம் விதி4த்த வைதி3க கார்யங்களில், மற்ற தெய்வங்களுக்கு அந்தர்யாமியான எம்பெருமானுக்கே அவை சேருவதாக அநுஸந்தி4த்து, அவர்களைக் குறித்து ஹோமம் முதலானவற்றைச் செய்தும், வேத3விருத்3த4மான சைவம், சாக்தம் முதலான ஆக3மங்களைக்கொண்டு எம்பெருமானுக்கு எதிர்த் தட்டாக மற்றொரு தெய்வத்தை ஸ்வதந்த்ரதே3வதையாக ஆக்கி, எம்பெருமானைப் பரிவார தே3வதையாகவே ஆக்கி, அந்தந்த தே3வதைக்குரிய மந்த்ரதந்த்ரங்களாலே வழிபடுமிடமான சிவன் முதலானவர்களுக்கான கோயில்களில் வழிபடுவதை விலக்கியும் பரமவைதி3கர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ்வதும் பொருந்தும். ருத்3ராதி3களைக் குறித்து நித்யநைமித்திக கர்மங்களில் ஹோமம் முதலான

யில்லாமையாலும், தே₃வதாந்தர வர்க்க₃ங்களில் தூ₃ரதோ வர்ஜநீயத்வம் ருத்₃ரனுக்குண்டு: எங்ஙனேயென்னில் ;— ஸத்வஸ்த₂ருக்கு அத்யந்தம் விரோதி₄யான தம:ப்ராசுர்யத்தாலே. நித்யாதி₃களில் போலே ஆலயங்களிலும் ப₄க₃வத் ப்ரகாரபு₃த்₃த்₄யா உபாஸிக்கலாமோவென்ன; "அப்படி உபாஸிக்க விதி₄யில்லாமையாலே ஆகாது, த்யாஜ்யதயா ஜ்ஞாதவ்யங்களான ப₄க₃வத்₃வ்யதிரிக்தவிஷயங்கள் ஸ்வீகாரத்துக்குடலாகவும், உபாதே₃யதயா ஜ்ஞாதவ்யங்களான ப₄க₃வத்₃ விஷயம் த்யாக₃த்துக்குடலாகவும் கடவதோ?"என்று அருளிச் செய்தார். b (தீர்த்தனுலகளந்த சேவடிமேற் பூந்தாமம்) என்கிற பாட்டிலே ப்ரஸ்துதமான தே₃வதாந்தரப₄ஜநம், அர்ஜுநனுக்கு ருத்₃ரன்பக்கலிலே ஓரஸ்த்ரலாப₄த்துக்காக ப₄க₃வந்நியோக₃த்தாலே வேண்டிற்று.

---

வற்றைச் செய்யும்படி வேத₃விதி₄யிருப்பதுபோலே, சிவாலயம் முதலானவற்றில் வழிபடும்படி வேத₃விதி₄யும் இல்லை. மேலும், சிவன் ஸத்வகு₃ணத்துக்கு நேர்மாறான தமோகு₃ணத்தை உடையவனாய், அதை வளர்ப்பதற்காக ஏற்பட்டவனாகையாலே, சிவனும், அவனுடைய குடும்ப₃மும், அவர்களுடைய கோயில்களும் ஸாத்விகர்களுக்கு மிகவும் விலக்கத்தக்கவை. இதைமீறி, "நித்யகர்மங்களிற்போலே, நாங்கள் சிவாலயங்களுக்குச் சென்று சிவனுக்கு அந்தர்யாமியான நாராயணனை உபாஸிக்கிறோமே" என்று கூறிக்கொண்டு அக்கோவில்களுக்குப் போனால், காலக்ரமத்தில் தமோகு₃ணம் வளர்ந்து விஷ்ணுத்₃வேஷமே உண்டாகிவிடும். "வைதி₃ககாரியங்களில் மற்ற தெய்வங்களுக்கு அந்தர்யாமியைக் குறித்து ஹோமாதி₃கள் செய்வதைப்போலே, அத்தெய்வங்களுடைய ஆலயங்களுக்கும், அந்தர்யாமியை வழிபடுவதற்காகச் செல்லலாம்; இது கூடாதென்றால் அதுவும் கூடாது" என்று வாத₃ம் செய்வது — "ஶாஸ்த்ரங்களில் செய்யென்று விதி₄க்கப்பட்டவற்றைச் செய்யாதே; ஶாஸ்த்ரங்களில் செய்யாதே என்று தடுக்கப்பட்டவற்றைச் செய்" என்று விதண்ட₃ாவாத₃ம் செய்வதேயாகும். இதுவே நம்பிள்ளை அருளிய பதிலின் ஸாரம். b இப்படி விஷ்ணு ப₄க்தர்கள் மற்ற தெய்வங்களை ஆஶ்ரயிக்கக் கூடாதென்றால் "தீர்த்தனுலகளந்த" [திருவாய் 2-8-6] என்ற பாசுரத்திலே உணர்த்தப்பட்டதாய், அர்ஜுனன் செய்ததான ஶிவபூஜை எப்படிப் பொருந்தும்? எனில்: அது பரமைகாந்தியல்லாத அர்ஜுனன் பாஶுபதாஸ்த்ரத்தைப் பெறுவதற்காக எம்பெருமானால் நியமிக்கப்பெற்றுச் செய்த பூஜையாகையாலே முரண்பாடில்லாமல் பொருந்துகிறது.

## முந்நூற்றைம்பதாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவத்வமாவது – மூன்று ப்ரகாரமாயிருக்கும். எங்ஙனேயென்னில்; ஸத்காரயோக்$_3$யரென்றும், ஸஹவாஸ யோக்$_3$யரென்றும், ஸத$_3$ாநுப$_4$வயோக்$_3$யரென்றும். ஸத்காரயோக்$_3$யர்-ரூபநாமப்ரத$_4$ாநர், உச்சாரணப்ரத$_4$ாநர், அபி$_4$மானப்ரத$_4$ாநர்; ஸஹவாஸயோக்$_3$யர்-ஜ்ஞானப்ரத$_4$ாநர், அநுஷ்ட$_2$ாநப்ரத$_4$ாநர், அங்கீ$_3$காரப்ரத$_4$ாநர்: ஸத$_3$ாநுப$_4$வ

---

### முந்நூற்றைம்பதாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவர் மூன்றுவகைப்படுவர். (1) ஸத்காரயோக்$_3$யர். (2) ஸஹவாஸயோக்$_3$யர். (3) ஸத$_3$ாநுப$_4$வயோக்$_3$யர். இவர்கள் மேன்மேலே சிறப்புற்றவர்கள். (1) ஸத்காரயோக்$_3$யராவார் – வைஷ்ணவத்தின் முதல்படியிலே நிற்பவர். வைஷ்ணவரென்னும் பெருமையையிட்டு ஸத்காரம் (உபசாரம்) செய்யலாமேயொழிய, அடுத்த அதி$_4$காரிகளைப்போலே கூடிவாழ்வதற்கோ, அதற்கடுத்த உத்தமாதி$_4$காரிகளைப்போலே எப்போதும் அநுப$_4$விப்பதற்கோ தகுதியற்றவர்கள் இவர்கள். இவர்களை எப்படிக் கண்டுபிடிப்பது? எனில்: இவர்கள் வைஷ்ணவரூபநாமங்களை த$_4$ரிப்பதை முக்$_2$யமாகக்கொண்டிருப்பார்களேயொழிய வைஷ்ணவர்களுக்குரிய ஆத்மகு$_3$ணங்களையும் அநுஷ்ட$_2$ானங்களையும் கொண்டிருக்கமாட்டார்கள். திருமந்த்ரம் முதலானவற்றை உச்சரித்துக் கொண்டிருப்பார்களேயொழிய, அவற்றின் அர்த்த$_2$த்தில் ஊன்றிநிற்கமாட்டார்கள். 'நான் வைஷ்ணவன்' என்று க$_3$ர்வங்கொண்டிருப்பார்களேயொழிய வைஷ்ணவர்களுக்கு வேண்டிய அடக்கத்தோடு இருக்கமாட்டார்கள். சுருங்கக் கூறினல் அடுத்த அதி$_4$காரியிடமுள்ள ஜ்ஞானமும், அனுஷ்ட$_2$ானமும், அங்கீ$_3$காரமும், உத்தமாதி$_4$காரியிடம் உள்ள ஆர்த்தியும் அபி$_4$நிவேஶமும் அபி$_4$ருசியும் இவர்களிடம் இராது. (2) ஸஹவாஸயோக்$_3$யராவார்—கூடிப் பழகுவதற்குத் தகுதியுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள். முற்கூறியவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள். 'ஞானம் அனுட்டானமிவை நன்ருகவேயுடைய'வர்கள். ஒரு ஸத$_3$ாசார்யனால் அங்கீ$_3$கரிக்கப்பட்ட பெருமையையுடையவர்கள். ஆகையால் இவர்களோடு கூடிப்பழகுவதால் நன்மையுண்டு. (3) ஸத$_3$ாநுப$_4$வயோக்$_3$யராவார்—"**ஆஹ்லாத$_3$ஶீதநேத்ராம்பு$_3$: புலகீக்ருதகா$_3$த்ரவாந் । ஸதா$_3$பரகு$_3$ணாவிஷ்ட: த்$_3$ரஷ்டவ்யஸ்ஸர்வதே$_3$ஹிபி$_4$: ॥**" [விஷ்ணுதத்வம்]

யோக்₃யர்-ஆர்த்திப்ரத₄ாநர், அபி₄நிவேஶப்ரத₄ாநர், அபி₄ருசிப்ரத₄ாநர் என்று ஆட்கொண்டவில்லிஜீயர்.

## முந்நூற்றைம்பத்தோராம் வார்த்தை

வைஷ்ணவத்வமாவது – தத்வஜ்ஞாநநிஷ்ட₂தை; தத்வஜ்ஞாநந்தான் ஆசார்யவிஷயீகாரலப்₄யம்; ஆசார்ய விஷயீகாரந்தான் தத்வத்தை நாம் அறியவேண்டுமென்னும் அபி₄நிவேஶாதிஶயபூர்வகமாக ப₄ஜநலப்₄யம்; இந்த இச்சை₂க்கு முதலடி ப₄க₃வத்₃ விஷயத்தில் அத்₃வேஷம்; அந்த

---

[ஆநந்த₃க்கண்ணீர் பெருகாநிற்பவராய், உடம்பெங்கும் மயிர்க்கூச்செறியாநிற்பவராய், இதற்குக் காரணமாக எப்போதும் ப₄க₃வத்₃ கு₃ணாநுப₄வம் செய்பவர்களான ஸ்ரீவைஷ்ணவோத்தமர்கள், ஶரீரம் படைத்த அனைவராலும் கண் காது முதலான ஸகலேந்த்₃ரியங்களாலும் எப்போதும் அநுப₄விக்கத்தக்கவர்கள். (உடம்பைப் படைத்த பயன் இவர்களை அநுப₄விப்பதேயென்கை)] என்கிறபடியே முற்கூறிய இருவகையினரைக் காட்டிலும் சிறந்த உத்தம ஸ்ரீவைஷ்ணவர்கள். இவர்கள் ப₄க₃வத்₃ப₄ாக₃வதர்களைப் பிரிந்தால் ஆர்த்தி (வருத்தம்) விஞ்சியிருப்பார்கள். ப₄க₃வத்₃ப₄ாக₃வதர்களோடு கூடிநிற்கவேணும் என்னும் அபி₄நிவேஶம் (பெருவிருப்பம்) மிக்கிருப்பார்கள். ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யங்களைச் செய்வதில் அபி₄ருசி (பெருத்த ஈடுபாடு) உடையவர்களாயிருப்பார்கள். ஆகையால் இவர்கள் உடம்பு படைத்த அனைவராலும் எப்போதும் அநுப₄விக்கத்தக்கவர்கள் என்பது எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களில் ஒருவரான ஆட்கொண்ட வில்லி ஜீயரின் வார்த்தை.

### முந்நூற்றைம்பத்தோராம் வார்த்தை

'கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத:'' [கீ₃தை 7-3] [பல்லாயிரவரில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிறான்] என்கிறபடியே 'எம்பெருமானே ப்ராப்யப்ராபகங்களாயிருப்பவன்' என்னும் உண்மையறிவில் ஊன்றிநிற்கை வைஷ்ணவத்வமாகும். இந்தத் தத்வஜ்ஞானமானது ஸத₃ாசார்யனுடைய கடாக்ஷத்தாலேயே ஏற்படும். ஆசார்யன் கடாக்ஷிப்பதும் — 'உண்மையை நாம் அறியவேண்டும்' என்னும் பேராவலோடு ஸத₃ாசார்யனை ஆஶ்ரயிப்பதால் ஏற்படும். உண்மையையறியவேண்டும் என்னும் விருப்பத்துக்கு முதற்காரணம் எம்பெருமான் விஷயத்தில் த்₃வேஷமின்மை. அதற்குக் காரணம்

அத்$_3$வேஷத்துக்குக்காரணம்-ப$_4$க$_3$வத்கடாக்ஷம்.ப$_4$க$_3$வத்கடா க்ஷத்துக்கு ஹேதுவென்னென்னில் ; - இஸ்ஸம்ஸாரிசேதந னுக்கு அநாதி$_3$யாக எம்பெருமான் பக்கல் த்$_3$வேஷதூ$_3$ஷிதத் வமுண்டாகையாலே அவன் பார்த்தருளுகைக்கீடாக ஒன்று செய்யக்கூடாமையாலே ப$_4$க$_3$வந்நிர்ஹேதுக கடாக்ஷம் ; ஆனல் ஈஶ்வரனுக்கு வைஷம்ய நைர்க்$_4$ருண்யங்கள் வாராதோவென்னில்; - இச்சேதநனுக்கு அஜ்ஞாதமான அநந்ய ப்ரவ்ருத்திகளிலே பிறப்பன சில ஸுக்ருதமடியாகப் பார்த்தருளுகிறுகையாலே வைஷம்யநைர்க்$_4$ருண்யங்கள் வாராது ; இங்ஙனேயிருப்பதொரு ஸுக்ருதமடியாயிருக்க நிர்ஹேதுகமாவானென் ? என்னில் ;—விழவிட்டு மறந்து போன பொருளை எடுத்துக்கொண்டு சென்று கொடுத்தவனை, "நம்மதை நமக்குத் தந்தான்" என்றிராதே, இவன் நமக்குத் தந்தானென்றிருக்கும் க்ருதஜ்ஞனைபோலே, 'தந்தலையில்

---

எம்பெருமானுடைய கடாக்ஷம். அக்கடாக்ஷத்துக்குக் காரணமென்ன வெனில் ? அநாதி$_3$காலமாக எம்பெருமானோடு எதிரிட்டுத்திரியும் இச்சேதனன் அவன் கடாக்ஷத்துக்குறுப்பாக ஒன்று செய்வது கூடா தாகையாலே, அக்கடாக்ஷத்தை நிர்ஹேதுகமானது (காரணமற்றது) என்றே கொள்ளவேண்டும். அப்படியானல் சிலரிடம் ஒருகாரணமு மில்லாமல் இக்கடாக்ஷத்தைச் செய்கிறுன் என்னும் பக்ஷபாதமாகிற வைஷம்யமும், மற்றவர்களிடம் இதைச் செய்வதில்லை என்னும் கருணை யின்மையாகிற நைர்க்$_4$ருண்யமும் எம்பெருமானுக்கு ஏற்படாதோ ? எனில்,—இச்சேதனன் தன்னையறியாமல் ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதவிஷய மாகச் செய்து வைக்கும் யாத்$_3$ருச்சி$_2$கம். ப்ராஸங்கி$_3$கம் முதலான சில புண்யங்களை ஸர்வஜ்ஞனை எம்பெருமான் பார்த்து வைத்தி ருந்து "என் ஊரைச் சொன்னுய், என் பேரைச் சொன்னுய், என் அடியாரை நோக்கினுய்" என்றுற்போலே கணக்கிட்டு அவை காரண மாகக் கடாக்ஷிக்கிறுகையாலே வைஷம்யநைர்க்$_4$ருண்யங்கள் வர மாட்டா. "இப்படி ஏதோவொரு புண்யம் காரணமாயிருக்கும்போது, இதை நிர்ஹேதுகமென்பது எப்படி?" எனில், வழியிலே தொலைத்து விட்டு 'இனி இது நமக்குக் கிடைக்காது' என்று மறந்துபோன பொருளை எடுத்துக்கொண்டு வந்து கொடுத்தவனை, நம்முடைய பொருளை நமக்குத் தந்தான் என்று நினையாமல், 'புதிதாக ஒரு பொருளைத் தந்தான்' என்று நன்றியுடையவன் நினைப்பதுபோலே

ஒன்றுமின்றியிலேயிருக்க எம்பெருமான் பார்த்தருளி ஞன்' என்று க்ருதஜ்ஞனாயிருக்கிற இவ்வதி₄காரி அபி₄ஸந்தி₄ யாலே நிர்ஹேதுகமென்கிறது; இந்த யாத்₃ருச்சி₂கஸுக்ருத மென்கிறதுக்கு அடி ஸௌஹார்த்த₃ம். அவனுக்கு ஸர்வாத்ம விஷயமாக எப்போதுமுண்டாயிருக்க, ஒருத்தனுக்கு ஒரு காலாக யாத்₃ருச்சி₂க ஸுக்ருதத்தையுண்டாக்குவானென்? என்னில்; நெடுங்காலம் அநுப₄வித்துப்போனதொரு பாபம் சுருக்கமொழியத் தொலைந்தவளவிலே இந்த ஸௌஹார்த்த₃ம் இவனுடைய யாத்₃ருச்சி₂க ஸுக்ருதத்துக்கடியாம்; ஜபாகுஸுமச்ச₂ாயை பத₃ார்த்த₂ங்களெல்லாங்கிடக்க, பளிங்கிலே ப்ரதிப₂லிக்குமாபோலே அச்ச₂பாபனான அதி₄காரி பக்கலிலே ஸௌஹார்த்த₃ம் ப₂லிக்கக்கடவது என்று பிள்ளை அருளிச்செய்வர்.

---

'நாமறிய நம்மிடம் ஒரு காரணமுமில்லாமலிருக்கும்போது, எம்பெருமான் கடாக்ஷித்தானே' என்னும் நினைவாலே இவ்வதி₄காரி எம்பெருமானுடைய கடாக்ஷத்தை நிர்ஹேதுகமென்றே நினைக்கத் தட்டில்லை. 'என் ஊரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய்' என்று எம்பெருமான் கணக்கிடுவதற்குக் காரணமான யாத்₃ருச்சி₂கஸுக்ருதம் ஏற்படுவதற்குக் காரணம் என்ன? எனில், எம்பெருமான் தனது ஸௌஹார்த்த₃ம் எனப்படும் நல்லெண்ணத்தாலே இத்தகைய ஸுக்ருதங்கள் தன்னடையே விளையும்படி இவ்விபூ₄தியை ஸ்ருஷ்டி செய்திருப்பதேயாகும். அப்படியானால் அந்த ஸௌஹார்த்த₃மும் அதனால் செய்யப்படும் ஸ்ருஷ்டியும் எல்லா ஆத்மாக்களுக்கும் எப்போதும் பொதுவாயிருக்க, ஒரு மனிதனுக்கு ஒரு சமயத்தில் யாத்₃ருச்சி₂கம் முதலான ஸுக்ருதங்களை உண்டாக்கக் காரணம் என்ன? எனில் இச்சேதனன் நெடுங்காலம் அநுப₄வித்துப் போந்ததொரு பாபம் இவனை நீண்டநாள் மிகவும் வருந்தச் செய்து தொலைந்தபின்பு, அதைக்கண்டு இரங்கிய ஸர்வேஶ்வரன் இவன் விஷயத்தில் அப்போது இத்தகைய ஸுக்ருதங்களை உண்டாக்குகிறான். ஜபாகுஸுமம் என்னும் செம்பருத்திப்பூவின் செம்மைநிறம் மற்ற பொருள்களில் ப்ரதிப₂லிக்காமல் பளிங்கிலே ப்ரதிப₂லிப்பதுபோலே, பெருத்த பாபம் நீங்கிப் பளிங்குபோலிருக்கும் ஓர் அதி₄காரியிடம் எம்பெருமானுடைய ஸௌஹார்த்த₃ம் ப₂லித்து முற்கூறிய ஸுக்ருதம் உண்டாகலாம்—என்பது நம்பிள்ளை வார்த்தை.

## முந்நூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

'ஒருவன் தன்னை வைஷ்ணவனென்று நினைத்திருக்கலாவது எவ்வளவு ஜ்ஞாநம் பிறந்தால்?' என்று பிள்ளை நஞ்சீயரைக்கேட்க; ப₄க₃வத்₃ப₄ாக₃வதவிஷயங்களிலே ஒரு உச்ச்₂ராயங்கண்டால் நெஞ்சு சிவீலென்று இருந்ததில்லையாகில் தன்னை வைஷ்ணவனென்றிருப்பது; சிவீலென்றிருந்ததாகில் நமக்கு எம்பெருமானோடு உறவில்லையாகாதே! ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநம் பிறந்ததில்லை யாகாதே! என்று நினைத்திருப்பது என்றருளினார்.

## முந்நூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

த்₃ருஷ்டத்துக்கு நாக்கு நீட்டாதொழிகையும், அத்₃ருஷ்டத்துக்குக் கைநீட்டாதொழிகையுங்காண் வைஷ்ணவ லக்ஷணம் என்று பிள்ளை.

---

### முந்நூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

எம்பெருமான் விஷயமாகவோ அவனடியார் விஷயமாகவோ ஒரு பெருமையைக் கண்டு அதில் பொறாமை ஏற்படாதிருந்தால் தனக்கு வைஷ்ணவத்வம் உள்ளதென்று அறுதியிடலாம். பொறாமை ஏற்பட்டால் "ஐயோ! நமக்கு எம்பெருமானோடு உறவு இல்லை போயிருக்கிறதே; அவனோடு ஸம்ப₃ந்த₄ஜ்ஞானம் பிறக்கவில்லைபோயிருக்கிறதே!" என்று வருந்தித் திருந்த முயலவேண்டும்—என்று கருத்து.

### முந்நூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

வைஷ்ணவனாயிருப்பவன் இவ்வுலகப் பலன்களுக்கு ஆசைப்படக் கூடாது. பரமபத₃த்தில் ப₄க₃வத்₃ப₄ாக₃வதவிஷயத்தில் பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்கள் செய்வதற்கே ஆசைப்படவேண்டும். அவற்றை ஆசைப்படும்போது, அவற்றுக்கு ஸாத₄னமாக ப₄க்தி முதலான உபாயாந்தரங்களைச் செய்யமுற்பட்டால், அது இச்சேதனனுடைய அத்யந்த பரதந்த்ரஸ்வரூபத்துக்கு முரண்பட்டதாய், ப₄க₃வத்₃ப₄ாக₃வதாநுப₄வகைங்கர்யங்களில் நிலைநின்ற ஸ்வார்த்த₂தையை(சுயநலமனப்பான்மையை) விளைத்து, பரமபத₃த்திலும் ஸ்வார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களை அளித்துவிடும். ஆகையால் வைஷ்ணவனாயிருப்பவன் உபாயாந்தரங்களிலும் கைவைக்கக்கூடாது. ஆக, ப்ரயோஜநாந்தரங்களை ஆசைப்படாமையும், உபாயாந்தரங்களில் ஈடுபடாமையும் வைஷ்ணவ லக்ஷணமென்று நம்பிள்ளை அருளிச்செய்வர். நாக்குநீட்டுதல் — ஆசைப்படுதல். கைநீட்டுதல்—முயற்சி செய்தல்.

## முந்நூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

**ஆச்சான்பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர், "ஸ்ரீவைஷ்ணவத்வமாவது ஸர்வோபாயஶூந்யதையோ, இதரவிஷயவிரக்தியோ, ஸித்₃தோ₄பாயஸ்வீகாரமோ, ப₄க₃வத்ப்ரேமமோ?" என்று கேட்க; "ஸர்வோபாயஶூந்யதை ஸம்ஸாரிக்குமுண்டு; இதரவிஷய விரக்தி க்ஷபணனுக்குமுண்டு; ஸித்₃தோ₄பாய ஸ்வீகாரம் கேவலனுக்கும் உண்டு; ப₄க₃வத்ப்ரேமம் ஏகாயநனுக்குமுண்டு. ஆகையால் இவையித்தனையுமன்று; இவற்றோடேகூட ப₄க₃வத₃நந்யார்ஹஶேஷத்வ ஜ்ஞாநத்தாலே பிறப்பதொரு தா₃ந்திவிஶேஷம். அதாவது—பரபரிப₄வத்தில்**

---

### முந்நூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

*தம்மாலே ஆவது ஒன்றுமில்லாமையாலே ஸம்ஸாரிகளும் இவ்வுலக வாழ்க்கையில் எவ்வித உபாயமும் அற்றவர்களாகவே இருக்கின்றனர். சமணனும் ஶப்₃த₃ாதி₃விஷயங்களில் வைராக்₃யமுடையவனாகவே யிருக்கிறான். கைவல்யமோக்ஷத்தை ஆசைப்படுமவனும், அந்த மோக்ஷத்தைப் பெறுவதற்காக எம்பெருமானையே உபாயமாகப்பற்றுகிறான். ஸ்ரீமந்நாராயணனை ஶேஷியாகக்கொள்ளாமல் எம்பெருமான் ஒருவனையே ஶேஷியாகக்கொண்ட ஏகாயநனுக்கும் எம்பெருமானிடம் அன்பு உண்டு. ஆகையால் இந்தத் தன்மைகள் ஒவ்வொன்றுமோ, எல்லாங்கூடியோ ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமாகமாட்டா. இவற்றோடுகூட மற்றொரு தலைசிறந்த ஜ்ஞானமும் இவனுக்கு இருக்கவேண்டும். 'உலகனைத்தும் பிறர்க்குரியதாயிராமல் எம்பெருமானுக்கே உரியதாயிருக்கிறது' என்னும் அறிவு அது. இந்த அறிவுடையவனை ஸேவித்தாலே அவனுடைய வடிவிலுள்ள அடக்கம் அவனைக் காட்டிக்கொடுத்துவிடும். பிறர் அவனை அவமதிக்கும்போது அவன் நடந்துகொள்ளும் விதத்திலிருந்து அவனை அறியலாம். அதாவது அவன் பிறர் தன்னை அவமதிக்கும்போது, "நம்முடைய பாபப₂லமாக இவன் நம்மை அவமதித்தான்; நம்முடைய பாபங்களில் ஒன்று குறைந்தது" என்று ஸந்தோஷப்படுவான். "எம்பெருமான் இவனைக்கொண்டு ஏதோவொரு நன்மைக்காக அவமதிக்கச் செய்கிறான். இதில் நமக்கு எவ்விதப் பொறுப்புமில்லை" என்று கோபப்படாமலிருப்பான். "நம்முடைய தோ₃ஷத்தை நாம் அநுஸந்தி₄க்கவேண்டியது அவஶ்யம். அதை நாம் செய்வதில்லை. நாம் மறந்த நம்முடைய தோ₃ஷத்தை நமக்கு நினைவூட்டிய இவன் விஷயத்தில் நாம் நன்றிசெலுத்த*

நிர்த்தே₃ாஷாநுஸந்த₄ாநம், நிர்ப்ப₄ரத்வாநுஸந்த₄ாநம், உப காரஸ்ம்ருதி, இரக்கம்" என்று அருளிச்செய்தார்.

## முந்நூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

a ஸ்ரீவைஷ்ணவத்வமாவது—ரூபப்ராத₄ாந்யம், சிஹ்நப்ரா த₄ாந்யம், உக்திப்ராத₄ாந்யம், க்ரியாப்ராத₄ாந்யம், ஸம்ப₃ந்₃த₄ விஶேஷப்ராத₄ாந்யம், த்₄யாநப்ராத₄ாந்யம் இவையொன்று மன்று; ப₄ாவப்ராத₄ாந்யமே ப்ராத₄ாந்யம்.

b நால்வரறிந்த வைஷ்ணவத்வமன்று, நாராயணனறிந்த வைஷ்ணவத்வமே வைஷ்ணவத்வம்: c* "நாடும் நகரமும் நன்கறிய நமோநாராயணாய" என்னவேண்டும்; நாடு வைஷ் ணவனென்று கைவிடவேண்டும்; நக₃ரம் வைஷ்ணவனென்று

---

வேண்டும்" என்று இருப்பான். "நம்மை அவமதித்த இவனிடம் எம்பெருமான் சீறிவிடப்போகிறானே" என்று அஞ்சி, அவமதித்தவ னிடமிரங்கி "சீறியருளாதிருக்கவேண்டும்" என்று எம்பெருமானிடம் பிரார்த்திக்கவேண்டும் என்று கருத்து.

### முந்நூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

a ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு (1) திருமேனியழகு, (2) ஊர்த்₄வ புண்ட்₃ரங்கள், ஶங்க₂சக்ராங்கனம், தாமரை துளசிமணிமாலைகள் ஆகிய அடையாளங்கள், (3) அடியேன் என்பதுபோன்ற வார்த் தைகள், (4) திருவாராத₄னம் முதலான க்ரியைகள், (5) எம்பெரு மானோடு நவவித₄ஸம்ப₃ந்த₄த்தையும் அநுஸந்தி₄ப்பது, (6) எம் பெருமானை எப்போதும் சிந்தித்திருப்பது ஆகிற இந்த லக்ஷணங்க ளெல்லாமுண்டு, ஆனால் இவற்றுக்கு முக்₂யத்வமில்லை "எம்பெரு மானே உபாயோபேயங்களாகவும் த₄ாரகபோஷகபே₄ாக்₃யங்களாக வும் இருப்பவன்; அவனடியார்களே பரமப்ராப்யர்கள்" என்னும் நினைவே வைஷ்ணவனுக்கு முக்₂யமானது. b வெளிவேஷங்களைப் பார்த்து வெளியுலகில் நாலுபேர் வைஷ்ணவன் என்று கொண்டாடு வதினால் மாத்திரம் வைஷ்ணவத்வம் ஸித்₃தி₄த்துவிடாது, அந்தர் யாமியாய், உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறியுமவனான நாராயணன் 'இவன் வைஷ்ணவனே' என்று உகக்கும்படி நடந்து கொண்டால்தான் வைஷ்ணவத்வம் ஸித்₃தி₄க்கும். c "நாடு நகரமும் நன்கறிய நமோநாராயணாய வென்று" [திருப்பல்லாண்டு 4] என்று பெரியாழ்வார் ஒருவன் வைஷ்ணவனாவதற்கு நாடும் நகரமும் நன்க றியும்படி திருமந்த்ரத்தை அநுஸந்தி₄க்கவேண்டுமென்று விதி₄த்தார். 'நாடு' என்றது ஸம்ஸாரிகளை. 'நகரம்' என்றது கலங்காப் பெரு

கைக்கொள்ளவேண்டும். நாடாவது-ஸம்ஸாரம்; நக₃ரமாவது-பரமபத₃மும், உகந்தருளின தி₃வ்யதே₃ஶங்களும், ஜ்ஞாநாதி₄கரான ஸ்ரீவைஷ்ணவர்களும்.

## முந்நூற்றைம்பத்தாறும் வார்த்தை

வடக்குத்திருவீதிப்பிள்ளை ;-அடுக்குக் குலையாத முஷ்டியும் ஆஸ்திக்யங் குலையாத வைஷ்ணவத்வமும்.

## முந்நூற்றைம்பத்தேழாம் வார்த்தை

திருநகரிப்பிள்ளை,—ஆழ்வார்களருளிச்செயலிலே அந்வயமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களைத் தன்னுயிராக நினைத்திருப்பான்; ஆசார்யர்கள் பாசுரங்களிலே அந்வயமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களைத் தன்னுடைய ஸத்தையாக நினைத்திருப்பான்; இரண்டோடும் அந்வயமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களையல்லது ஸ்ரீவைஷ்ணவனென்று அறுதியிடவொண்ணாது.

---

*நகரமான பரமபத₃த்தையும், திருவரங்கப்பெருநகர் முதலான தி₃வ்யதே₃ஶங்களையும், அறிவிற்சிறந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களையும். நாடாகிற ஸம்ஸாரிகள் இவனை வைஷ்ணவன் என்று அறிந்து கைவிடவேண்டும். நகரமாகிற பரமபத₃ம் முதலானவை வைஷ்ணவன் என்று இவனைக் கைக்கொள்ளவேண்டும் என்பது பெரியாழ்வாருடைய முற்கூறிய திருப்பல்லாண்டு பாசுரத்தின் பொருள்.*

### முந்நூற்றைம்பத்தாறும் வார்த்தை

*'எம்பெருமானே உபாயோபேயங்கள் முதலான எல்லாம்' என்னும் பரமாஸ்திக ஸித்₃த₄ாந்தத்தில் தளர்ச்சி ஏற்படாமல் உறுதியுடன் இருக்கும் வைஷ்ணவத்வத்துக்கு—விரல்கள், அடுக்கில் (சேர்த்தியில்) தளர்ச்சி ஏற்படாமல் உறுதியாயிருக்கும் முஷ்டியை த்₃ருஷ்டாந்தமாகக் கூறலாம் என்று வடக்குத் திருவீதிப்பிள்ளை அருளிச்செய்வர்.*

### முந்நூற்றைம்பத்தேழாம் வார்த்தை

*திருநகரிப்பிள்ளையின் வார்த்தையிது. ஆழ்வார்கள் அருளிச்செயல்களை அர்த்த₂த்தோடு அறிந்த ஸ்ரீவைஷ்ணவர்களைத் தன் உயிராக நினைத்திருப்பவனும், அந்த அருளிச்செயல்களைத் தெளிவாக விளக்கும் ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை அர்த்த₂த்தோடு அறிந்த ஸ்ரீவைஷ்ணவர்களைத் தன்னுடைய ஸத்தையாக(வாழ்வாக)நினைத்திருப்பவனே ஸ்ரீவைஷ்ணவன். அருளிச்செயல்களையும், அவற்றை விளக்கும் ஆசார்யஸ்ரீஸூக்திகளையும் அர்த்த₂த்தோடு அநுஸந்தி₄ப்பவர்களுக்கல்லது ஸ்ரீவைஷ்ணவத்வம் ஸித்₃தி₄க்காது என்று கருத்து.*

## முந்நூற்றைம்பத்தெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவர்களென்று இவர்களுக்குப் பேராகைக்கு அடி ஏதென்று கேட்க; "ஸ்ரீமத்புத்ரராகையாலும், ஸ்ரீமாந் பிதாவாகையாலும், ஸ்ரீ புருஷகாரமாகையாலும், ஸ்ரீமாந்வைப$_4$வத்தையறிகையாலும், இவர்கள் ஸ்ரீமத்பத$_3$த்தே பிறக்கையாலும் ஸ்ரீவைஷ்ணவர்களென்று நிரூபகம்"—என்று பெரியகோயில் வள்ளலார் அருளிச்செய்வர்.

## முந்நூற்றைம்பத்தொன்பதாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுடைய தி$_3$நசரிதம்—(1) கு$_3$ருபரம்பரையையும் திருமந்த்ரத்தினுடைய விஶத$_3$ாநுஸந்த$_4$ாநமான த்$_3$வயத்தையும் ஸத$_3$ா அநுஸந்த$_4$ாநம் பண்ணுகை, (2) த்$_3$வயநிஷ்ட$_2$ரான ஸ்ரீவைஷ்ணவர்களோடே ஸஹவாஸம் பண்

---

### முந்நூற்றைம்பத்தெட்டாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவர்கள் என்னும் திருநாமம் எம்பெருமானடியார்களுக்கு ஏற்படுவதற்குப் பின்வரும் காரணங்கள் சொல்லலாம்,—(1) ஸ்ரீமானான எம்பெருமானுக்கு இவர்கள் செல்லப்பிள்ளைகள். (2) ஸ்ரிய:பதியான எம்பெருமான் இவர்களுக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருப்பவன். (3) பிராட்டி இவர்களுக்குப் புருஷகாரமாயிருப்பவள்; இப்படி ஸ்ரீஸம்ப$_3$ந்த$_4$த்தால் வைஷ்ணவர்கள் ஆனவர்கள் என்றபடி. (4) ஸ்ரீமானான எம்பெருமானுடைய பெருமையை அறிந்தவர்கள். (5) "ஸ்ரீமந்நாராயண" என்று தொடங்கும் த்$_3$வயத்தாலே ஜ்ஞானஜன்மமடைந்தவர்கள். இக்காரணங்களாலே இவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். இது எழுபத்துநாலுஸிம்ஹாஸநாதி$_4$பதிகளில் ஒருவரான பெரியகோயில் வள்ளலார் அருளிச்செய்த வார்த்தை.

### முந்நூற்றைம்பத்தொன்பதாம் வார்த்தை

**ஸ்ரீவைஷ்ணவருடைய தினசரிதம்** — ஸ்ரீவைஷ்ணவன் தினந்தோறும் நடந்துகொள்ளவேண்டிய வாழ்க்கை நெறிமுறைகள் பின்வருமாறு:—(1) லக்ஷ்மீநாத$_2$ன் தொடக்கமாக அவரவர் ஆசார்யர்வரையிலுள்ள ஆசார்யபரம்பரையையும், திருவஷ்டாக்ஷரத்தின் பொருளைத் தெளிவாக அநுஸந்தி$_4$க்கும் த்$_3$வயத்தையும் எப்போதும் அநுஸந்தி$_4$க்கவேண்டும். (2) த்$_3$வயத்தின் பொருளிலே ஊன்றிநிற்கும்

ணுகை, (3) அஹங்காரக்₃ரஸ்தரான ஸம்ஸாரிகளோடு அணுகி வர்த்தியாதொழிகை, (4) ஸாத்விகஸமாசார மொழிய நாட்டாருடைய பரிமாற்றங்களை நேராக நிவர்த்திக்கை, (5) உத்₃தே₃ஶ்யரான ஸ்ரீவைஷ்ணவர்களை உதா₃ஸீநம் பண்ணுதொழிகை, (6) த்யாஜ்யரான ஸம்ஸாரிகளை த்₃ருஷ்டமடியாக அநுவர்த்தியாதொழிகை, (7) ஆஸுர ப்ரக்ருதிகளுக்கு அத்₃ருஷ்டவார்த்தை சொல்லாதொழிகை, (8) ஸாது₄பரிக்₃ரஹமும் ஸதா₃சார்யப்ரஸாத₃மும் ஸ்வரூப வர்த்த₄கமென்றிருக்கை, (9) ப₄க₃வத்₃ப₄াக₃வதவிஷயங்களில் அநுகூலவ்ருத்தியை தே₃ஹயாத்ராஶேஷமாக்காதொழிகை, (10) ஸ்துதிநிந்தை₃களில் அவிக்ருதனாயிருக்கை, (11) ஸ்வதே₃ாஷத₃ர்ஶநம் பண்ணுகை, (12) ஸ்வப்ரஶம்ஸை பண்ணுதொழிகை, (13) ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்

---

ஸ்ரீவைஷ்ணவர்களோடு கூடி வாழவேண்டும். (3) நான், எனது என்னும் அஹங்காரமமகாரங்கள் நிறைந்த ஸம்ஸாரிகளோடு சேர்ந்து வாழாதிருக்கவேண்டும். (4) ஸாத்விகர்களோடு கலந்து பரிமாறுவதொழிய, மற்ற லௌகிகர்களோடு கலந்து பரிமாறுவதை அடியோடு விடவேண்டும். (5) பரமப்ராப்யர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை அலட்சியம் செய்யாதிருக்கவேண்டும். (6) கைவிடத்தக்கவர்களான ஸம்ஸாரிகள் விஷயத்தில், அவர்கள்மூலம் கிடைக்கும் பணம், புகழ், கௌ₃ரவம் இவைகளைக் கருதி அவர்களுக்கு இனிய கார்யங்களைச் செய்யாமலிருக்கவேண்டும். (7) எம்பெருமானையும் அவனடியார்களையும் வெறுக்கும் அஸுரஸ்வப₄ாவமுடையவர்களுக்கு (அவர்களிடம் ஏதோவொன்றைக் கருதி) அவர்களுக்கு மறுமையில் நன்மை ஏற்பட வழி சொல்லாமல் இருக்கவேண்டும். (8) "நல்லார் நம்மைக் கைக்கொள்வதும், நல்ல ஆசார்யனுடைய அருளும் நம்முடைய ஶேஷத்வ பாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபத்தை வளர்க்கும்" என்று நினைத்திருக்கவேண்டும். (9) எம்பெருமான் விஷயத்திலும் அவனடியார் விஷயத்திலும் செய்யும் கைங்கர்யங்களுக்குக் கூலி வாங்கி, அதுகொண்டு வாழ்க்கை நடத்தாதிருக்கவேண்டும். (10) பிறர் நம்மைத் துதிக்கும்போது பெருமிதமடையாமலும், நிந்தி₃க்கும்போது வருத்தமடையாமலும் இருக்கவேண்டும். (11) தன்னுடைய தே₃ாஷங்களைத் தான் சிந்திக்கவேண்டும். (12) தன்னைத்தான் புகழ்ந்து பேசாமலிருக்கவேண்டும். (13) 'தன் ஸ்வாதந்த்ர்யம் நீங்கப்பெற்று

ருத்திபூர்வகமான ப$_4$க$_3$வத்பாரதந்த்ர்ய பராகாஷ்டை$_2$ ப$_4$ாக$_3$வதபாரதந்த்ர்யமென்றிருக்கை, (14) இவ்வோ அர்த்த$_2$ங்களை அநுஸந்தி$_4$த்து உண்டான அம்ஶத்துக்கு உபாயபூ$_4$தனை எம்பெருமான் பக்கலிலே உபகாரஸ்ம்ருதிபண்ணுகை, (15) இல்லாத அம்ஶத்துக்கு அநுதாபபூர்வகமாக ஈஶ்வரனை இரக்கை, (16) இவ்வர்த்த$_2$நிஷ்டை$_2$ தனக்குண்டானபோது, நிஷ்டை$_2$யில்லாத வேஷத$_4$ாரிகளை நெஞ்சாலே நெகிழ நினையாதே ப$_4$க$_3$வத் ப்ரப$_4$ாவத்தையிட்டு ஆத$_3$ரிக்கை. "நிர்த்தே$_3$ாஷம் வித்$_3$தி$_4$ தம் ஜந்தும் ப்ரப$_4$ாவாத் பரமாத்மந:". இவ்வர்த்த$_2$நிஷ்டை$_2$தான் ப$_4$க$_3$வத்ப்ரஸாத$_3$த்தாலே ப$_2$லிக்குமத்தனையல்லது ஸ்வயத்நத்தால் வருமதன்று; " அக்ரூரமாலாகாராதீ$_3$ந் பரமப$_4$ாக$_3$வதாந் க்ருத்வா "

---

எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாயிருப்பதின் எல்லைநிலம் அவனடியார்களுக்குப் பரதந்த்ரனாயிருக்கையே' என்று நினைத்திருக்கவேண்டும். (14) இத்தகைய அர்த்த$_2$ங்களை அநுஸந்தி$_4$த்ததினால் நமக்கு ஏற்பட்ட சிறப்புகள் நம்மால் வந்தவை என்று நினையாமல், 'உபாயமாயிருக்கும் எம்பெருமானால் வந்தவை' என்று நினைத்து அவனிடம் நன்றி பாராட்டவேண்டும். (15) முற்கூறிய பெருமைகளில் தன்னிடம் இல்லாதவற்றை நினைத்து 'இவை நம்மிடமில்லையே' என்று அநுதாபங்கொண்டு, 'இவற்றை அடியேனுக்கு அருளவேணும்' என்று எம்பெருமானை யாசிக்கவேணும். (16)இவ்வர்த்த$_2$ங்களில் தான் ஊன்றியிருப்பது தனக்கே தெளிவாகத் தெரிந்தாலும், இவற்றில் ஊன்றியிராதவர்களாய், வைஷ்ணவரூபநாமங்களை த$_4$ரித்திருப்பவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைத் தன் நெஞ்சாலே குறைவாக நினையாமல், எம்பெருமானுடைய ஸம்ப$_3$ந்த$_4$த்தின் பெருமையைப் பார்த்து அவர்களை ஆதரிக்கவேணும். "து$_3$ராசாரோऽபி ஸர்வாஶீ க்ருதக்$_4$நோ நாஸ்திக: புரா | ஸமாஶ்ரயேதா$_3$தி$_3$தே$_3$வம் ஶ்ரத்$_3$த$_4$யா ஶரணம் யதி$_3$ || நிர்தே$_3$ாஷம் வித்$_3$தி$_4$ தம் ஜந்தும் ப்ரப$_4$ாவாத் பரமாத்மந: ||" [ஸாத்வத 16-23] [தீய ஒழுக்கங்களையுடையவனாய், எதையுமுண்பவனாய், செய்ந்நன்றி கொன்றவனாய், நாஸ்திகனாய் அநாதி$_3$காலமிருந்தாலும் ஆதி$_3$தே$_3$வனான எம்பெருமானை ஶ்ரத்$_3$தை$_4$யோடு ஶரணமடைந்தானாகில், பரமாத்மாவின் பெருமையாலே தே$_3$ாஷமற்றவன் என்று அவனை அறிவாய்] என்றது இவ்விஷயத்தில் ப்ரமாணம். இவ்வர்த்த$_2$ங்களில் ஊன்றிநிற்பது எம்பெருமான் அருளாலே ஏற்படுமேயொழிய, தன் முயற்சியால் ஏற்படாது. " அக்ரூரமாலாகாராதீ$_3$ந் பரமப$_4$ாக$_3$வதாந்

என்று ப்ரமாணம் ; இவ்வோ அர்த்த$_2$ங்கள் தங்களுக்குறுப்பாக அதி$_4$கரிக்குமவையல்லது பிறர்க்குச் சொல்லுகைக்குக் கற்குமவையன்று.

## முந்நூற்றறுபதாம் வார்த்தை

பெருமாளெழுந்தருளாநிற்கத் திருவடித்தொழப் புறப்பட்டருளி, நஞ்சீயர்—திருமேனியில் திருநாமங்களின்றியிலே யிருந்தபடியைப் பார்த்து, 'ப$_4$ர்த்தாவின் முன்பே தாலி கட்டாமல் நின்ற ஸ்த்ரீயைப்போலேயிராநின்றது ; திருமண் கொண்டுவாருங்கோள்' என்றருளினார்.

## முந்நூற்றறுபத்தோராம் வார்த்தை

ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவனுக்கு ஶரீரவிஶ்லேஷத்தளவும் மஹாப$_4$யமும் மஹாவிஶ்வாஸமும் அநுவர்த்திக்கைக்குக் காரணம் - தன்னைப் பார்த்தபோதெல்லாம் மஹாப$_4$யமும், எம்பெருமானைப் பார்த்தபோதெல்லாம் மஹாவிஶ்வாஸமும். இரண்டுக்கும் மஹத்தையாவது - தன்னை அநுஸந்தி$_4$த்த போது ஸம்ஸாரத்திலே யிருந்தானாகவும் இங்கேயிருந்தானே

---

க்ருத்வா " [கீ$_3$தாப$_4$ாஷ்யம் அவதாரிகை] [அக்ரூரர், மாலாகாரர் முதலானவர்களைப் பரமப$_4$ாக$_3$வதர்களாகச்செய்து] என்று ப$_4$ாஷ்யகாரர் அருளியது இவ்விஷயத்தில் ப்ரமாணம். இந்த அர்த்த$_2$ங்களைத் தாங்கள் இவற்றில் ஊன்றிநிற்கைக்காகக் கற்கவேண்டுமேயொழிய, தாங்கள் ஊன்றிநிற்பதற்குமுன் பிறர்க்கு உபதே$_3$ஶிப்பதற்காகக் கற்பது கூடாது.

### முந்நூற்றறுபதாம் வார்த்தை

இவ்வார்த்தையின் பொருள் தெளிவாயுள்ளது. பதிவ்ரதைக்குத் தாலிபோலே ஸ்ரீவைஷ்ணவனுக்குப் பன்னிரு திருமண்காப்புகள் முக்$_2$யம் என்று இவ்வார்த்தை உணர்த்துகிறது.

### முந்நூற்றறுபத்தோராம் வார்த்தை

இவ்வார்த்தையின் பொருள் தெளிவாயுள்ளது. அநாதி$_3$காலமாக ஸம்ஸாரத்தில் அழுந்தியிருந்த தன்னை நினைக்கும்போது பெரும் ப$_4$யமும், நிர்ஹேதுகக்ருபையோடுகூடிய எம்பெருமானை அநுஸந்தி$_4$த்தபோது " நாம் பரமபத$_3$மடைவது நிஶ்சயமே " என்னும்

யாகிலும் எம்பெருமானை அநுஸந்தி₄த்தபோது பரமபத₃த்திலே யிருந்தானாகவும் நினைத்திருக்கை.

## முந்நூற்றறுபத்திரண்டாம் வார்த்தை

ஸ்வரூபத்தில் தெளிவும், உபாயத்தில் துணிவும், உபேயத்தில் த்வரையும் அதி₄காரிக்ருத்யமென்று பிள்ளை.

## முந்நூற்றறுபத்துமூன்றாம் வார்த்தை

a ஸம்ப₄ாஷண ஸம்ப₃ந்த₄ம், போ₄ஜநஸம்ப₃ந்த₄ம், அத்₃ருஷ்டஸம்ப₃ந்த₄ம், த்₃ருஷ்ட ஸம்ப₃ந்த₄ம் - இவை பார்த்துச் செய்யவேண்டும். b தானிடும் தண்டனுக்கு உகந்

---

பெருநம்பிக்கையும் ஸ்வரூபஜ்ஞானமுண்டானவனுக்கு இவ்வுலகில் இருக்கும்வரை மாறிமாறி ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும் என்று கருத்து.

**முந்நூற்றறுபத்திரண்டாம் வார்த்தை**

எம்பெருமானுக்கு அத்யந்தபரதந்த்ரமாயிருப்பது ஜீவாத்ம ஸ்வரூபம் என்னும் ப்ரணவார்த்த₂த்தில் தெளிவு இருக்கவேண்டும். 'நம்மை நாமோ, பிறரோ ரக்ஷிக்கமுடியாதாகையாலே எல்லாவிதமான உறவுமுடைய எம்பெருமானே நம்மைக் கடைத்தேற்றும் உபாயம்' என்னும் நம: பத₃ார்த்த₂த்தில் துணிவு இருக்கவேண்டும். 'ஸ்ரீமந் நாராயணனுக்குக் கைங்கர்யம் செய்வதே பரமபுருஷார்த்த₂ம்; அதைப் பெற்றாலல்லது நமக்கு வாழ்வு இல்லை' என்னும் 'நாராயணாய' என்னும் பத₃த்தின் பொருளை அநுஸந்தி₄ப்பதால் கைங்கர்யத்தைப் பெறவேணும் என்னும் த்வரையும் (வேக₃மும்) ப்ரபந்நாதி₄காரிக்கு அவஶ்யம் இருக்கவேண்டும்—என்று நம்பிள்ளை வார்த்தை.

**முந்நூற்றறுபத்துமூன்றாம் வார்த்தை**

a ஸ்ரீவைஷ்ணவர்கள் சில தொடர்புகளை ஆராய்ந்து கொள்ள வேண்டும். அவையாவன — (1) இன்னாரோடு பேச்சுவைத்துக் கொள்வது என்னும் தொடர்பு. (2) இன்னாரிடம் உணவுகொள்வது என்னும் தொடர்பு. (3) இன்னாரை ஆசார்யனாகக்கொள்வது என்னும் ஸம்ப₃ந்த₄ம். (4) இன்னாரிடம் இவ்வுலகப் பயன்களைப் பெறுவது என்னும் தொடர்பு. அதி₄காரிகளை ஆராய்ந்து தக்கவர்களிடமே ப்ரபந்நன் இத்தொடர்புகளைக் கொள்ளவேண்டும். b நாம் ஒரு

திடவும், தன்னையிடுந்தண்டனுக்குக் குழைந்துபோரவும், தன் ஸத்தையை அழிய மாறியாகிலும் தண்டன் கைக் கொள்ள வல்லனாகையும் அதி₄காரி க்ருத்யம்,

## முந்நூற்றறுபத்துநாலாம் வார்த்தை

மலைநாட்டிலே ஒருவனுடனே மூவராய் ஸ்ரீராமாயணம் வாசித்தார்கள்; அவர்களில் முதலதி₄கரித்தவனை அழைத்து உனக்கு இதில் ப்ரதிபந்நார்த்த₂மேதென்று கேட்க, 'சக்ரவர்த்தித்திருமகன் பித்ருவசநபரிபாலநம் பண்ணுகை யாலே மாத்ருபித்ருஶுஶ்ரூஷை த₄ர்மமென்று தோற்றிற்று' என்ன; 'நீ அத்தைச்செய்' என்றான்; இருவராவானைக் கேட்க;-'சக்ரவர்த்தித் திருமகனாய் ஶரீரபரிக்₃ரஹம் பண்ணி னாலும் உடம்பெடுக்கை பொல்லாதாயிருந்தது; ஆகையால் இவ்வுடம்பை அகற்றும்வகை விசாரிக்கவேண்டும்' என்றான்;

---

*ஸ்ரீவைஷ்ணவருக்கு தண்டனிடும்போது 'இத்தகைய அதி₄காரிக்கு தண்டனிடும் பேறு பெற்றோமே' என்று உகந்து தண்டனிடவேண்டும். ஒரு ஸ்ரீவைஷ்ணவர் தன்னை தண்டனிடும்போது "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" "அடியேன் சிறியஞானத்தன்" என்று தன் பணிவைக் காட்டவேண்டும். பணிவைக்காட்டி அவர்களிடம் தண்டனுக்கு முதலில் இசையாதிருக்கவேண்டும். நிர்ப்ப₃ந்த₄மாக அவர்கள் தண்டனிட்டால் தன்னுடைய ஶேஷத்வஸ்வரூபத்துக்குக் குறைவு ஏற்பட்டாலும், பாரதந்த்ர்யத்தை நினைத்து 'அவர்கள் இஷ்டப்படி நடந்துகொள்வதே நமக்குத் தக்கது' என்று அந்த தண்டனையை ஏற்றுக்கொள்ளவும் வேண்டும். இது ப்ரபந்நாதி₄காரி இருக்க வேண்டிய முறை.*

**முந்நூற்றறுபத்துநாலாம் வார்த்தை**

*திருப்பாவை ஆறாயிரப்படி வ்யாக்₂யானத்தில் இவ்வைதிஹ்யம் திருவனந்தபுரத்தில் நடந்ததாக எடுக்கப்பட்டுள்ளது. இதன் பொருள் தெளிவாயிருக்கிறது. ஸ்ரீராமாயணம் கேட்டவர்களில் முதலாமவன் "மாத்ருபித்ருஶுஶ்ரூஷை ஸ்ரீராமாயணஸாரம்" என்று கருதினான். இரண்டாமவன் "ஶரீரமெடுத்துப் பிறப்பது பொல்லாதது; ஆகையால் அதை அகற்றும் வழியை ஆராய வேண்டும்" என்பதை ஸ்ரீராமாயணதாத்பர்யமாகக் கருதினான்; இவை ஸ்ரீராமாயணத்தில் முக்₂யதாத்பர்யமல்லாமையாலே ஆசார்யன்*

'ஆகில் நீ தத்₃விமோசநோபாயத்தைப் பண்ணு' என்றான்; மூவராவானைக் கேட்க, உ "நம்முடைய புண்மருந்துகளால் ஒரு பசையில்லை; 'ராவணன்தானேயாகிலும் அவனை விடில் த₄ரியேன்' என்ற சக்ரவர்த்தித் திருமகன் க்ருபையுண்டாகில் பிழைக்கலாமல்லது பிழைக்கவிரகில்லை" என்றான்; 'ஆகில் நீ உள்ளதனையும் ஸ்ரீராமாயணத்தைப் பரிசயி' என்றான்.

## முந்நூற்றறுபத்தஞ்சாம் வார்த்தை

வீரஸுந்த₃ரனுக்குப் பயப்பட்டு எம்பாரடிமையான ஜக₃ந்நாத₂ ப்₃ரஹ்மராயருடைய வேஶ்யை மட₂த்திலே வந்திருக்க, இவளை அவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு ப₄யத்தாலே உடையவர், 'எம்பாரே! இவளை இங்கு

---

அந்தந்த த₄ர்மங்களை அவர்களை அநுஷ்டி₂க்கச் சொல்லிவிட்டான். மூன்றுமவன் "சக்ரவர்த்தித் திருமகன் கருணையுண்டாலொழிய எவராலும் பிழைக்க வழியில்லை" என்று ஸ்ரீராமாயணத்தின் பரம ஸாரத்தை அறுதியிட்டுச் சொல்லுகையாலே, அவனையே ஆசார்யன் ஆயுளுள்ளவளவும் ஸ்ரீராமாயணத்தை ப்ரவசனம் செய்யச் சொல்லி நியமித்தான். ஸ்ரீராமாயணத்தின் பரமஸாரமான இவ்வர்த்த₂த்தை க்₃ரஹிக்காதவர்கள் ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்யத் தகுதியற்ற வர்கள் என்று கருத்து. உ இவ்வாக்யத்தின் கருத்தாவது:- ஸம்ஸார மாகிற புண்ணுக்கு நமது முயற்சியாலே மருந்திடவொண்ணாது; "யதி₃ வா ராவண: ஸ்வயம்" [ரா-யு 18-34] என்று "இங்கு வந்தி ருப்பவன் விபீ₄ஷணனாயிராமல், ராவணன்தானேயாயிருந்தாலும் இவனை அழைத்து வா; இவனைவிட்டு நான் உயிர்த₄ரிக்கமாட்டேன்" என்ற பெருமாளுடைய க்ருபையொன்றே நாம் உஜ்ஜீவிக்க வழியாகும் என்கை.

### முந்நூற்றறுபத்தஞ்சாம் வார்த்தை

வீரஸுந்த₃ரன் என்னும் சிற்றரசன் எம்பாருடைய சீடரான ஜக₃ந்நாத₂ப்₃ரஹ்மராயருடைய வேஶ்யையை (தா₃ஸியை) தன் வஶப் படவேண்டும் என்று நிர்ப்ப₃ந்தி₄த்து வந்தான். அவள் அவனுக்கு பயந்து ஆசார்யரான எம்பாருடைய மட₂த்தில் தஞ்சம் புகுந்தாள். 'இவள் எங்குபோனாலும் இவளை விடமாட்டேன்' என்று வீரஸுந்த₃ரன் சொன்னதைக் கேள்விப்பட்ட உடையவர் 'அவனால் மட₂த்துக்கு ஏதாவது தீங்குவருமோ' என்று ப₄யப்பட்டு, அவளை

நின்றும் போகவிடவேண்டும்' என்ன, எம்பாரும், "ப$_4$யார்த்தையான இவனை ரக்ஷிக்கவே த$_4$ர்மம்தானே ரக்ஷிக்கும்; எம்பெருமான் ரக்ஷகனென்னுமிடம். ஆஸ்த்ரீப$_3$ாலமும் அறியுமே; அவனே ரக்ஷகனென்கிற அவத$_4$ாரணமறிகைக்கன்றோ ஆசார்யஸேவை பண்ணுகிறது" என்று விண்ணப்பஞ் செய்தார்.

## முந்நூற்றறுபத்தாறும் வார்த்தை

வீரசிக$_2$ாமணிப்பல்லவராயர், ப$_4$ட்டரை, "ராஜகார்யஞ் செய்கையாலே ஸ்ரீவைஷ்ணவர்களை அநுவர்த்தித்து நல் வார்த்தை கேட்கப்போகிறதில்லை; அடியேனுக்குத் தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அருளிச்செய்யவேண்டும்" என்ன, "கடற்கரைவெளியை நினைத்திரும்" என்றருளினர்; பல்லவராயரும் தெரியாமையாலே கையைப் பிசைந்துநிற்க;

---

வெளியேபோகச் சொல்லவேண்டுமென்று எம்பாரிடம் நியமித்தார். அப்போது எம்பார் சொன்ன பதிலாவது — "ப$_4$யத்தாலே தஞ்சம் புகுந்த இவனை ரக்ஷித்தால் அந்த ஆஶ்ரிதரக்ஷணத$_4$ர்மமே நமது மட$_2$த்தை ரக்ஷிக்கும். எம்பெருமானே அனைவர்க்கும் ரக்ஷகன் என்னும் விஷயம் தேவரீர் ஸம்ப$_3$ந்த$_4$ம்பெற்ற பெண்களும் குழந்தைகளுங்கூட அறிவார்களே. எம்பெருமான் ஒருவனே ரக்ஷகன் என்கிற ஏகாரப்பொருளையறிவதற்கன்றோ சிஷ்யர்கள் ஆசார்யர்களை ஆஶ்ரயித்திருப்பது. மட$_2$த்துக்குத் தீங்குவருமோ என்று அஸ்த$_2$ாநே ப$_4$யஶங்கை பண்ணவேண்டா" என்று.

### முந்நூற்றறுபத்தாறும் வார்த்தை

வீரஶிக$_2$ாமணிப் பல்லவராயர் என்னும் சிற்றரசர் ப$_4$ட்டரையடைந்து "அடியேன் ராஜகார்யத்தில் ஈடுபட்டிருப்பதால், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஶுஶ்ரூஷைசெய்து நல்வார்த்தைகள் கேட்பதற்கு அவகாஶமில்லாமலிருக்கிறது. ஆகையால் அடியேனுக்குத் தஞ்சமாயிருக்கும் ஒருவாக்யம் சொல்லவேண்டும்" என்று பிரார்த்தி$_2$த்தார். அதைக்கேட்ட ப$_4$ட்டர் "கடற்கரை வெளியை நினைத்திரும்" என்ற வாக்யத்தை அருளிச்செய்தார். பல்லவராயர் இதன் பொருள் தெரியாமையாலே, கையைப் பிசைந்து (தயங்கி) நின்றார். அப்போது ப$_4$ட்டர் இவ்வாக்யத்தின் பொருளைப் பின்வருமாறு விவரித்தார்—

"கடற்கரைவெளியிலே ஓர் அம்ருதக்கடல்போலே விட்டுக் கொண்டிருக்க, எதிர்க்கரையிலே பிணந்தின்னிப்பையல் ராவணன் விட்டிருக்க, எழுபது வெள்ளம் ஸேனை உணர்ந்து கொண்டு பெருமாளைக்குறிக்கொண்டு நோக்காநிற்க,ப்ரக்ருதி மான்களாகையாலே கண் துரங்கிக் காலோய்ந்து கைசோர்ந்த அளவிலே, பெருமாள் தாமும் தம்பியருமாக முதுகிலே ஆனவஞுழிகையைக் கட்டிக் கையிலே தெரிந்து பெருக்கிப் பிடித்த அம்பும் தாமுமாக, சில அண்ட$_3$ஜங்கள் முட்டையிட்டு நோக்குமாபோலே எழுபதுவெள்ளஞ்சேனையும் சூழ நடையாடும் மதிள்போலே சாரிகையாக வந்த சக்ரவர்த்தித்திருமகனுடைய கையும் வில்லும் தஞ்சமென்று ஸுக$_2$மேயிரும்" என்றருளினர்.

## முந்நூற்றறுபத்தேழாம் வார்த்தை

த$_3$ர்ம நரஹஸ்ய மிருக்கும்படி;-உறங்குகிறபோது நம்மை நோக்குகிறவன் உணர்ந்தாலும் நம்மை நோக்குமென்று கந்தாடையாண்டான்.

---

"கடற்கரை வெளியிலே, ஓரமுதக் கடல்போலே ஸ்ரீராமபிரான் வாநர ஸேனையோடு தங்கியிருந்தார். எதிர்க்கரையிலே பிணந்தின்னிப் பையலான ராவணன் ராக்ஷஸஸேனையோடு போர்க்கு ஸித்$_3$த$_4$மா யிருந்தான். எழுபது வெள்ளம் வாநரஸேனையும் பகல்வேளையில் விழித்திருக்கும்போது பெருமாளிடம் பரிவாலே 'அவர்க்கு என் வருகிறதோ ?' என்று ப$_4$யந்து அவரை ஜாக்$_3$ரதையாக ரக்ஷித்து வந்தார்கள். இரவு வேளையில் தே$_3$ஹத$_4$ர்மத்தாலே கண் தூங்கிக் கால் ஓய்ந்து, கைசோர்ந்து கிடந்தார்கள் அவர்கள் அனைவரும். அப்போது பெருமாளும் இளையபெருமாளும் முதுகிலே அம்பறுத் தூணியைக் கட்டிக் கையிலே பொறுக்கியெடுத்த கூர்மையான அம்புகளைப் பிடித்துக்கொண்டு, சில பறவைகள் தாங்கள் இட்ட முட்டையைச் சுற்றிச் சுற்றிவந்து ரக்ஷிப்பதுபோலே, எழுபது வெள்ளம் வாநரஸேனையையும் சுற்றிச்சுற்றிச் சாரிகையாக வலம்வந்து நடமாடும் மதிள்போலே ஸஞ்சரித்து ரக்ஷித்தனர் ; அந்தச் சக்ரவர்த்தித் திருமகனுடைய கையும், அதிலே பிடித்த அம்பும் நமக்குத் தஞ்சம் என்று நினைத்துக் கவலையற்று வாழ்வீராக" என்று அருளினர்.

## முந்நூற்றறுபத்தெட்டாம் வார்த்தை

கடக்கத்தபிள்ளையைக் கடக்கத்தானொரு ப்₃ராஹ்மணன் 'உமக்கு தே₃ஹயாத்ரை நடக்கிறபடியென்?' என்று கேட்க; "ஸ்வரக்ஷண விஷயமாக சித்திரை மாஸத்திலே மூக்குநீர் முன்னடியிலே விழ ஏற்றமிறைக்கிற உனக்கு இடுகிற எம்பெருமான் ந்யஸ்தப₄ரனாய் அணையிலே சார்(ய்)ந்து கிடக்கிற எனக்கு இடச் சொல்லவேண்டுமோ?" என்றார்.

---

### முந்நூற்றறுபத்தேழாம் வார்த்தை

உறங்குகிறபோது விஷஜந்துக்கள் நம்மைத் தீண்டாமலும், இடி முதலானவை தலையில் விழாமலும் நம்மை ரக்ஷிக்கும் எம்பெருமான் விழித்திருக்கும்போதும் நம்மை ரக்ஷிப்பான் என்று நினைத்து, உறங்குகிறபோது கவலையற்று உறங்குவதுபோலே விழித்திருக்கும்போதும் 'நமக்கு ரக்ஷகர் யார்' என்னும் கவலையில்லாமல் வாழவேண்டும். இதுவே நமது த₃ர்ஶனத்தின் ஸாரமான ரஹஸ்யம் என்பது முதலியாண்டான் குமாரரான கந்தாடையாண்டானின் வார்த்தை.

### முந்நூற்றறுபத்தெட்டாம் வார்த்தை

கடக்கம் என்னும் ஊரிலுள்ள ஸ்ரீவைஷ்ணவரான கடக்கத்த பிள்ளையை அவ்வூரைச் சேர்ந்த ஒரு ப்₃ராஹ்மணன் "நீர் ஒரு வேலையும் செய்யாமல் இருக்கிறீரே. உமக்கு எப்படி ஜீவனம் நடக்கிறது" என்று கேட்டான். அதற்குப் பிள்ளை சொன்ன பதிலாவது— "நீர் உமது முயற்சியையே தஞ்சமாகக்கொண்டு கடுங்கோடை காலத்தில் மூக்குநீர் முன்னடியிலே விழும்படியாக ஏற்றமிறைத்து ஜீவனத்துக்குப் பாடுபடுகிறீர். இவ்வளவு பாடுபட்டாலும் எம்பெருமான் அருளில்லாவிடில் உமது பயிர் விளையாது. ஆகையால் உமக்கும் படியளப்பவன் அவனே. அவனை முழுவதும் நம்பாமல் உமது முயற்சியையும் நம்பும் உமக்குக் கூடப் படியளக்கும் அவன், அவனையே நம்பி, என்னைத் தேடிவருகிறவர்களுக்கு 'அவனே ரக்ஷகன்' என்று நல்வார்த்தை சொல்லிக்கொண்டு வாசல் திண்ணையில் சாய்மணையில் சாய்ந்துகிடக்கிற எனக்குப் படியளப்பானென் பதைச் சொல்லவும் வேண்டுமோ?" என்பது.

### முந்நூற்றறுபத்தொன்பதாம் வார்த்தை

ஒரு ப்₃ராஹ்மணன் கூறையிலிருந்து விழுந்துவிட்டான். அப்போது சிறியாச்சான் என்னும் ஸ்ரீவைஷ்ணவர் அங்கேயெழுந்த

## முந்நூற்றறுபத்தொன்பதாம வார்த்தை

ஒரு ப்$_3$ராஹ்மணன் இறப்பில்நின்றும் விழ, அவ்வளவிலே சிறியாச்சான் அங்கேற எழுந்தருள, ப்$_3$ராஹ்மணன், 'ஆச்சான்! பெருமாள் என்னைத் தள்ளினபடி கண்டீரே' என்ன, "அங்ஙனன்றுகாண், 'கர்மத்தாலே நாம் விழுந்தோம்; பெருமாளெடுத்தார்' என்று நினைத்திராய்" என்றருளினார்.

## முந்நூற்றெழுபதாம வார்த்தை

a ஒருநாள் திருவீதியிலே ப$_4$ட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களும் திரளாக எழுந்தருளியிருந்து ப$_4$க$_3$வத்$_3$கு$_3$ணம் நடவாநிற்க, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், 'நாம் பண்ணின ஸுக்ருதம் கண்டதே! இப்படியிருக்கப்பெற்றோமே!' என்ன; சிறியாச்சான்

ருளினார். அவரைப் பார்த்த ப்$_3$ராஹமணன அடிபட்ட மயக்கத்தாலே "ஆசசான! பெருமாள் என்னைத் தள்ளிவிட்டார் பார்த்தீரா" என்றான். அதற்கு ஆச்சான் "அப்படி நினைக்காதீர். 'முன்செய்த தீவினையாலே கீழே விழுந்தோம். பெருமாள் தம் கருணையாலே பூ$_4$மியில் இருந்து தாங்கி, கைகால் முறியாதபடி எழுந்திருக்கச்செய்து காப்பாற்றினார்' என்று நினைத்திரும்" என்று அருளினார்.

### முந்நூற்றெழுபதாம் வார்த்தை

a இப்பகுதி ஆறாயிரப்படி குருபரம்பராப்ரப$_4$ாவம் 357ம் பக்கத்தில் வந்துள்ளது. இங்கு 'ப$_4$க$_3$வத்$_3$கு$_3$ணம் நடவாநிற்க' என்றது அங்கு 'ப$_4$க$_3$வத்$_3$கல்யாணகு$_3$ணாநுஸந்த$_4$ானம் நடவாநிற்க' என்றுள்ளது. இப்பகுதியின் கருத்து—"இத்தால் உஜ்ஜிஜீவயிஷுவான ஈஶ்வரனிருக்க, ஆநுகூல்யங்களுக்கு ஸுக்ருதம் அடியெனகை ஸ்வரூபநாஶம் எனறபடி" என்று விவரிக்கப்பட்டுள்ளது. இதன் பொருளாவது — அஜ்ஞாதமாகவும், ஆநுஷங்கி$_3$கமாகவும, ப்ராஸங்கி$_3$கமாகவும சில ஸுக்ருதங்கள் ஜீவன் பண்ணியிருப்பவற்றைக் கணக்கிட்டு அவற்றை மேன்மேலே வளர்த்து இந்த ஜீவனை உய்விப்பதற்கு எம்பெருமான் அநாதி$_3$காலமாகப் பாடுபட்டுக்கொண்டிருக்குமபோது, நமக்கு எம்பெருமானிடமுள்ள ஈடுபாட்டுக்கு இந்தப் புணயங்களைக் காரணமாகச் சொல்லுவது எம்பெருமான் விஷயத்தில் செய்ந்நன்றிகொன்ற குற்றத்தின்பாற்படுமாகையாலே நம் ஸ்வரூபத்தை அழித்துவிடும் என்றபடி. 'ஸுக்ருத தே$_3$வா உண்டாவதே!' என்று சிறியாச்சான் அருளியது "பரமசேதனனுய் தே$_3$வாதி$_3$தே$_3$வனுன

**எழுந்திருந்து "இதுநெடுநாள் பெருமாள் ரக்ஷகர் என்று ஶிக்ஷித்தோம்; இப்போது ஒரு ஸுக்ருததே₃வருண்டாவதே!" என்றார்; b எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கையும் ஸ்வரூபமன்று; எம்பெருமான் ரக்ஷ்யமென்றிருக்கையும் ஸ்வரூபமன்று; எங்ஙனேயென்னில்; - ரக்ஷகனென்றிருந்தானாகில் அநந்யார்ஹ ஶேஷத்வத்துக்குச் சேராது; ரக்ஷ்யமென்றிருந்தானாகில் ஸ்வஸ்வாமி ஸம்ப₃ந்த₄த்துக்குச் சேராது.**

---

எம்பெருமான் நமக்கு ரக்ஷகன் என்று இவ்வளவு நாளாக நமக்கு ஆசார்யர்கள் கற்பித்திருக்க, இப்போது இவர் அசேதனமாய் கணத்தில் அழிவதான நம்முடைய செயலாகிற ஸுக்ருதத்தை ஒரு தெய்வம் போலே ரக்ஷகமாகச் சொல்லுவதே!" என்னும் கருத்துடையது. b முன் பகுதியை மேலெழுந்த வாரியாகக் காண்பார் சிலர் எம்பெருமான் எப்போதும் நாம் விரும்புகிறவற்றைக் கொடுத்து நம்மை ரக்ஷித்துக்கொண்டிருப்பான் என்று நினைக்கக்கூடும். இப்படி நினைப்பது நம்முடைய அநந்யார்ஹஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்குப் பொருந்தாது. ஸ்வாமியாயிருப்பவன் உகப்பது, கோபிப்பது, பரிசளிப்பது, த₃ண்டி₃ப்பது முதலான எதைச்செய்தாலும் தா₃ஸபூ₄தனாயிருப்பவன் கலங்காமல் அதை ஏற்றுக்கொள்வதே அவனுக்கு ஸ்வரூபமாகும். கோபிக்கும்போதும் த₃ண்டி₃க்கும்போதும் கலங்கி ஸ்வாமியை வெறுத்தானாகில், அநந்யார்ஹஶேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்கு முரண்படும். ஆகையால் கோபிப்பது, த₃ண்டி₃ப்பது முதலானவையும் நமக்கு ப்ரியமாயில்லாவிடிலும் முடிவில் நன்மையையே செய்து ஹிதமாயிருக்குமாகையாலே அவையும் ரக்ஷணத்தின்பாற்படும் என்று எண்ணவேண்டும். ரக்ஷகனை எம்பெருமானைப் பரிவாலே ரக்ஷ்யமாக எண்ணி அவனுக்கு மங்க₃ளாஶாஸனம் செய்வது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமாயினும் எம்பெருமானை எப்போதும் ரக்ஷ்யப்பொருளாகவே நினைத்துவிடக்கூடாது. ப்ரேமத₃ஶையில் பரிவு எனப்படும் ப்ரேமம் ஏற்படும்போது ரக்ஷகனை அவனை ரக்ஷ்யமாகக் கலங்கி மங்க₃ளாஶாஸனம் செய்தாலும், ஜ்ஞானத₃ஶையில் அவனை ஸர்வரக்ஷகனென்று உணரவும் வேண்டும். இப்படி உணரவில்லையென்றால் 'எம்பெருமான் ஸ்வாமி; நாம் அவனால் ரக்ஷிக்கப்படும் உடைமை' என்னும் ஸம்ப₃ந்த₄த்தோடு பொருந்தாது. ஆக ஜ்ஞானத₃ஶையும், ப்ரேமத₃ஶையும் மாறிமாறி நடக்கவேணும் என்று கருத்து. பெரியாழ்வார்க்குப் போலே சிலர்க்கு ப்ரேமத₃ஶை விஞ்சியும், மற்ற ஆழ்வார்களுக்குப் போலே சிலர்க்கு ஜ்ஞானத₃ஶை விஞ்சியுமிருக்கும் என்று கண்டுகொள்வது.

## முந்நூற்றெழுபத்தோராம் வார்த்தை

எம்பெருமான் ஸாபேக்ஷன்; பிராட்டியும் ஆசார்யனும் ப்ரபந்நர்களும் ஸாபேக்ஷநிரபேக்ஷர்கள்,

## முந்நூற்றெழுபத்திரண்டாம் வார்த்தை

ஆழ்வான் காலத்திலே ஸந்த்4யாவந்த3நம் பண்ண எழுந்தருளாநிற்க, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அருளிச்செயல் த்4வநியைக் கேட்டுக்கொண்டு நிற்க, கூட எழுந்தருளினவர்கள் 'அநுஷ்டா2நத்துக்குக் காலம் தப்புகிறதே' என்ன, 'ஸந்த்4யாவந்த3ந வைகல்யம் பிறந்தால் ப்ராயஶ்சித்தம் பண்ணிக்கொள்ளலாம்; ப4க3வத3நுப4வ வைகல்யம் பிறந்தால் ப்ராயஶ்சித்த ஸாத்4யமன்று' என்றருளினார்.

---

### முந்நூற்றெழுபத்தோராம் வார்த்தை

(உபாயாந்தரநிரபேக்ஷனென்று ப்ரஸித்3தி4பெற்ற) எம்பெருமான் ரக்ஷிக்கும்போது ரக்ஷிக்கத்தக்க ஓர் அதி4காரியையும், அவ்வதி4காரியைத் தன்னிடம் சேரவிடும் புருஷகாரபூ4தர்களையும் அபேக்ஷிக்கிறானாகையாலே ஸாபேக்ஷனாகிறான். புருஷகாரபூ4தர்களான பிராட்டியும் ஆசார்யனும் புருஷகாரம் செய்யும்போது அதி4காரியை அபேக்ஷிக்கிறார்களாகையாலே ஸாபேக்ஷர்களாகவும் இருக்கிறார்கள். மற்றொரு புருஷகாரத்தை அபேக்ஷியாமையாலே நிரபேக்ஷர்களாகவுமிருக்கிறார்கள். ஆக அவர்கள் ஸாபேக்ஷநிரபேக்ஷர்கள். ப்ரபந்நர்கள் தங்களை ரக்ஷிப்பதற்கு உபாயமான எம்பெருமானையும் புருஷகாரபூ4தர்களான பிராட்டியையும் ஆசார்யர்களையும் எதிர்பார்க்கிறார்களாகையாலே ஸாபேக்ஷர்களுமாகிறார்கள்; வேறெவரையும், தமது முயற்சியையும் எதிர்பார்ப்பதில்லையாகையாலே நிரபேக்ஷர்களாகவுமிருக்கிறார்கள். ஆக அவர்களும் ஸாபேக்ஷநிரபேக்ஷர்கள் ஆகிறார்கள்.

### முந்நூற்றெழுபத்திரண்டாம் வார்த்தை

கூரத்தாழ்வான் ஒரு ஸமயத்திலே ஸரியான காலத்தில் ஸந்த்4யாவந்த3னம் செய்யச் சென்றுகொண்டிருந்தார். அப்போது வழியில் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அருளிச்செயல் அநுஸந்தா4னம் செய்துகொண்டிருந்தார்கள். அதில் ஈடுபட்டு நெடுநேரம் அநுப4வித்துக்கொண்டு நின்றுவிட்டார் ஆழ்வான். அப்போது ஆழ்வானோடு கூடவந்தவர்கள் 'ஸந்த்4யாவந்த3னத்துக்குக் காலம் தப்புகிறதே' என்று நினைவுபடுத்தினார்கள். அப்போது ஆழ்வான் "ஸந்த்4யாவந்த3னத்துக்குச் சிறிது குறைவு ஏற்பட்டாலும் ப்ராயஶ்

## முந்நூற்றெழுபத்துமூன்றாம் வார்த்தை

முதலியாண்டான் திருவாய்மொழி ஓதுகிறபோது, உடையவரெழுந்தருளியிருந்து ஒருபாட்டுச்சந்தையிட்ட அளவிலே இதினுடைய அர்த்த$_2$ாநுஸந்த$_4$ாநத்தாலே பரவசரானார்.

## முந்நூற்றெழுபத்துநாலாம் வார்த்தை

'ஆழ்வார்கள் மடலூர்ந்தும், நோன்புநோற்றும், தூதுவிட்டும் ஸ்வாமிக்கு அஸஹ்யமாம்படி செய்கை ஸ்வரூப விருத்$_3$த$_4$மன்றோ?' என்று எம்பாரை முதலிகள் கேட்க, எம்பாரும் "இவர்கள் செய்வதென்? ஜ்ஞாநம் தலைமண்டையிடும்படி அவனுடைய ஸௌந்த$_3$ர்யம் இப்படிச் செய்யுமாகில், அது அவன் ஸௌந்த$_3$ர்யத்தின் குற்றமன்றோ? எங்ஙனே

---

*சித்தம் செய்துகொள்ளலாம். அருளிச்செயலைக்கொண்டு எம்பெருமானை அநுப$_4$விப்பதில் குறைவு ஏற்பட்டால் அதை எந்த ப்ராயச்சித்தத்தாலும் நிறைவுபடுத்தமுடியாதே" என்று அருளிச்செய்தார்.*

### முந்நூற்றெழுபத்துமூன்றாம் வார்த்தை

*முதலியாண்டானுக்குத் திருவாய்மொழியை ஓதுவிக்கும்போது ஒரு பாட்டின் அர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து எம்பெருமானார் "காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல்சோர்ந்து நடுங்கிக் குரல் மேலுமெழா மயிர்க்கூச்சுமறா என தோள்களும் வீழ்வொழியா மாலுகளா நிற்குமென்மனனே" [பெரியாழ்திரு 5-3-5] என்கிற ரீதியில் பரவசமானதைக் குறிக்கிறது இந்த வார்த்தை.*

### முந்நூற்றெழுபத்துநாலாம் வார்த்தை

*இவ்வார்த்தையில் கேள்வியின்பொருள் தெளிவாயுள்ளது. பதிலின் கருத்து பின்வருமாறு—ஆழ்வார்களின் ஜ்ஞானமானது முற்றி ப்ரேமமாகப் பரிணமித்து அதனால் எம்பெருமானை வழியல்லாவழியிலாகிலும் சென்று பெற்றுவிடவேண்டும் என்னும் த்வரைவிளைந்து, மடலூர்தல், நோன்புநோற்றல், தூதுவிடுதல் முதலான ஸ்வரூபவிருத்$_3$த$_4$மான கார்யங்களில் ஈடுபடும்படி எம்பெருமானுடைய ஸௌந்த$_3$ர்யம் இவர்களை ஆக்கிவிடுகிறது. இது அவனுடைய ஸௌந்த$_3$ர்யத்தின் குற்றமேயொழிய இவர்களுடைய குற்றமல்ல. இதற்கு ஸ்ரீராமாயணத்தில் ஒரு த்$_3$ருஷ்டாந்தமுண்டு, அதாவது — 'ராமனுக்குப் பட்டாபி$_4$ஷேகம் செய்யப்போகிறேன்' என்று சொல்லத் தொடங்கியவுடன் அயோத்$_4$யாவாஸிகள் அதைப் பேராதரவோடு ஆமோதி$_3$த்*

யென்னில்;-சக்ரவர்த்தி 'வாய்திறப்பதற்கு முன்னே நீங்களெல்லாரும் பெருமாளைத் திருவபி$_4$ஷேகம் பண்ணவேண்டுமென்பானென்? என்பக்கல் குறையுண்டோ?' என்ன, நாங்கள் செய்வதென்? 'ப$_3$ஹவோ ந்ருப! கல்யாண கு$_3$ணா: புத்ரஸ்ய ஸந்தி தே। கு$_3$ணாந் கு$_3$ணவதோ தே$_3$வ! தே$_3$வகல்பஸ்ய தீ$_4$மத:॥' என்று இப்படிப்பட்ட பிள்ளையைப் பெற்ற உன் குறையன்றோ என்றார்கள்" என்றருளிச்செய்தார்.

## முந்நூற்றெழுபத்தஞ்சாம் வார்த்தை

சோமாசியாண்டான் — அகளங்கநாட்டாழ்வான் காலத்திலே ஒரு இடையன் பால் களவுகண்டானென்று கட்டியடிக்க, பிள்ளை அத்தைக்கேட்டு மோஹித்துவிழுந்தாராம்.

## முந்நூற்றெழுபத்தாறும் வார்த்தை

முலைகளிலையான யுவதியைப்போலே காணும் ஊமையல்லாத வைஷ்ணவன் அருளிச்செயலில் அந்வயியாதொழிகை என்று ஆச்சான்பிள்ளை.

---

தார்கள். அதைக்கண்டு, 'நான் வாய்திறப்பதற்குமுன் நீங்கள் எல்லோரும் ராமனுக்குப் பட்டாபி$_4$ஷேகம் செய்யவேண்டுமென்று முழங்குகிறீர்களே; என் ஆட்சியில் ஏதேனும் குறையுண்டோ' என்று கேட்டான் த$_3$ஶரத$_2$ன். அதற்கு அவர்கள் "'அரசனே! உன்னுடைய பிள்ளைக்குப் பல கல்யாண கு$_3$ணங்கள் உள்ளன. தே$_3$வனைப் போன்றவனும், பேரறிவாளனும், கு$_3$ணங்களுக்கெல்லாம் கொள்கலமான அவனுடைய கு$_3$ணங்களைச் சொல்வோம் கேட்பாயாக' [ரா-அ 2-26, 27] என்று இப்படிப்பட்ட கு$_3$ணஶாலியான பிள்ளையை நீ பெற்றதே குற்றம்; (இது தவிர வேறு குற்றம் உன்னிடமில்லை)" என்றது இவ்விடத்தில் த்$_3$ருஷ்டாந்தம்.

**முந்நூற்றெழுபத்தஞ்சாம் வார்த்தை**

களவுகண்ட ஓர் இடையனைக் கட்டியடித்தவுடன் களவுகண்ட கண்ணன் யஶோதை$_3$யால் கட்டுண்டு அடிபட்டது நினைவுக்கு வந்து சோமாசியாண்டான் மோஹித்து விழுந்தார் என்று கருத்து.

**முந்நூற்றெழுபத்தாறும் வார்த்தை**

ஊமையாயிருந்தால் அருளிச்செயலில் அந்வயிக்க முடியாது. அவனைக் குற்றஞ்சொல்லிப் பயனில்லை. ஊமையாயில்லாமலுமிருந்து, அருளிச்செயலில் அந்வயிக்கத் தகுதியுடைய வைஷ்ணவனாகவும்,

## முந்நூற்றெழுபத்தேழாம் வார்த்தை

**எம்பெருமான் க்ருஷ்ணனாய் வந்து அவதரித்தாப்போலே வேத$_3$ங்களும் திருவாய்மொழியாய் வந்து அவதரித்தன.**

## முந்நூற்றெழுபத்தெட்டாம் வார்த்தை

**பெரியநம்பியும் திருக்கோட்டியூர்நம்பியும் திருமாலையாண்டானுங்கூடி ஸ்ரீசந்த்$_3$ரபுஷ்கரிணிக்கரையிலே திருப்புன்னைக் கீழே எழுந்தருளியிருந்து, தங்களாசார்யரான ஆளவந்தார் எழுந்தருளியிருக்கும்படியையும் அவரருளிச்செய்தருளின நல்வார்த்தைகளையும் நினைத்து அநுப$_4$வித்துக்கொண்டு மிகவும் ஹ்ருஷ்டராய் a ஆநந்த$_3$மக்$_3$நராய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிறவளவிலே, b திருவரங்கச்செல்வர் ப$_3$லி ப்ரஸாதி$_3$ப்பதாக எழுந்தருளிப் புறப்பட, இவர்களுடைய c ஸமாதி$_4$ப$_4$ங்க$_3$ம்பிறந்து எழுந்திருந்து தண்டனிட வேண்டுகையாலே, "கூட்டங்கலைக்கியார் வந்தார், இற்றைக்கு மேல்பட ஸ்ரீப$_3$லியெம்பெருமானெழுந்தருளாத கோயிலிலே இருக்கக்கடவோம்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொண்டார்கள்.**

---

பிறந்து, ஒருவன் அருளிச்செயலில் அந்வயிக்காமலிருந்தானாகில், முலைகளற்ற யுவதியைப்போலே ப$_4$ர்த்தாவான எம்பெருமானுக்கு அநுப$_4$விக்கத் தகாதவனாகிவிடுவான் என்று கருத்து.

### முந்நூற்றெழுபத்தேழாம் வார்த்தை

இவ்வார்த்தை "அத$_2$வா வேத$_3$வேத்$_3$ய ந்யாயத்தாலே" என்று தொடங்கி "வேத$_3$த்தை த்$_3$ராவிட$_3$மாகச் செய்தாரென்னும்" என்று முடிவடையும் 70-வது ஆசார்யஹ்ருத$_3$ய சூர்ணையிலும் அதன் வ்யாக்$_2$யானத்திலும் விரிவாக விளக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

### முந்நூற்றெழுபத்தெட்டாம் வார்த்தை

வார்த்தையின் பொருள் தெளிவாயிருப்பதால் சில அரும்பத$_3$ங்களுக்கு மாத்திரம் பொருள் உரைப்போம். **a** ஆநந்த$_3$மக்$_3$நர்—இன்பத்தில் மூழ்கியவர்கள். **b** திருவரங்கச் செல்வர்—ப$_3$லிஸாதிக்கும் பெருமாள். **c** ஸமாதி$_4$ப$_4$ங்க$_3$ம்—ப$_4$க$_3$வத்$_3$பா$_4$க$_3$வதாசார்யாநுப$_4$வத்துக்குத் தடை. இப்படி மஹாத்மாக்களான இவர்களுக்குத் தடையாயிருப்பதைப் பார்த்து, திருவரங்கச்செல்வர் தன்னை ப$_3$லிஸாதிக்க ந்தருளச்செய்துகொண்டு போகவேண்டாம் என்று நியமித்து தாகவும் அந்த நியமனம் இன்றளவும் நடப்பதாகவும் கூறுவர்.

## முந்நூற்றெழுபத்தொன்பதாம் வார்த்தை

அந்தர்யாமி அறியாதே அர்ச்சாவதாரத்திலே ஈடுபாட ளுகையாவது - ஏகாந்தத்திலே ப₄ர்த்தாவைப் பருஷித்துப் பரிஹரிப்பதாய், ஓலக்கத்தே கொண்டாடும் பதிவ்ரதையைப் போலேயும், திருப்பள்ளியறை இருட்டிக்கிடக்கத் திருவீதி யிலே அணிவிளக்கேற்றுமாபோலேயும், திருப்பள்ளியறை புல்லெழுந்திருக்கத் திருவீதி சோதித்து அலங்கரிக்குமா போலேயுமிருப்பதொன்று.

## முந்நூற்றெண்பதாம் வார்த்தை

ஶாஸ்த்ரவிருத்₃த₄ங்களான து₃ர்விஷயங்களிலே ஸக்த ளுகையும், ஶாஸ்த்ரங்களுக்கு அவிருத்₃த₄ங்களான ஸதா₃ சாராதி₃களில் விரக்தனுகையும், ஶாஸ்த்ரவிஹிதமுமாய் ஸ்வரூபாநுகூலமுமான அர்ச்சாவதாரங்களிலே அஸக்த

---

### முந்நூற்றெழுபத்தொன்பதாம் வார்த்தை

அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் நம் நெஞ்சிலே அந்தர்யாமியாகவும் எழுந்தருளியிருக்கிறுன் என்றறியாமல் அர்ச்சாவதாரத்தில் ஈடுபாடுகொள்வது — ஒரு பதிவ்ரதையானவள் தனியே இருக்கும்போது கணவரிடம் கடுஞ்சொல் கூறி விலகிநின்று, ஸபை₄யில் கொண்டாடுவதுபோலவும், படுக்கையறை அலங்கோலமாக இருட்டிக்கிடக்கும்போது திருவீதியிலே நீர் தெளித்துக் கோலமிட்டு அலங்கரித்து அணிவிளக்கு ஏற்றிவைப்பதுபோலவும் இருக்கிறது என்று கருத்து. அர்ச்சாவதாராநுப₄வத்தோடு அந்தர்யாமியின் அநுப₄வமும் வேண்டும் என்றபடி.

### முந்நூற்றெண்பதாம் வார்த்தை

நம்முடைய ஸ்வரூபத்தைப் பற்றிய உண்மையறிவுக்குப் பொருந்த நாம் நடந்துகொள்ளவேண்டிய நடைமுறைகளுக்கு முரண்பட்டிருப் பவை மூன்று. அவையாவன — (1) ஶாஸ்த்ரங்களில் நிஷேதி₄க்கப் பட்ட பொய், சூது, கொலை, களவு முதலான தீய ஒழுக்கங்களில் ஈடுபடுகை. (2) ஶாஸ்த்ரங்களில் தள்ளப்படாமலிருப்பவையும், விதி₄க்கப்பட்டவையுமான நல்லோர்களுடைய நல்லொழுக்கங்களில் ஈடுபடாதிருக்கை. (3) ஶாஸ்த்ரங்களில் விதி₄க்கப்பட்டதாய் ஸ்வ

ஞுகையும் இம்மூன்றும் ஸ்வரூபயாத₂ாத்ம்ய ஜ்ஞாநாநு கூலமான நித்யப்ரவ்ருத்திகளுக்கு விருத்₃த₄ங்களாயிருக்கும்.

## முந்நூற்றெண்பத்தோராம் வார்த்தை

வைஷ்ணவனுக்கு a வஸ்தவ்யம் ஜ்ஞாநார்த்த₂மாக ஓரா சார்யன் ஸந்நிதி₄யிலே b ஒதுங்கி வர்த்தித்தல், அதுவும் மாட்டாஞுகில், விலக்ஷணனுயிருப்பானொரு ஸ்ரீவைஷ்ணவன் திருமாளிகையிலே b ஒதுங்கி வர்த்தித்தல், அதுவும் மாட் டாஞுகில் மௌநியாய்க்கொண்டு c ஒரு திருமுற்றத்திலே ஆனவளவு கைங்கர்யம்பண்ணி b ஒதுங்கி வர்த்தித்தல்.

## முந்நூற்றெண்பத்திரண்டாம் வார்த்தை

நம்பி திருவழுதிவளநாடுதாஸர்க்கும் பிள்ளை திருநறை யூரரையருக்கும் ப₄ட்டரருளிச்செய்த வார்த்தை:—உகந்த ருளின நிலங்களிலே பொய்யேயாகிலும் புக்குப் புறப்பட்டுத் திரியவமையும் ; அந்திமத₃ஶையிலே கார்யகரமாம்.

---

ரூபத்துக்குப் பொருந்தியதான அர்ச்சாவதாரங்களில் ஈடுபாட்டைக் கொள்ளாதவனுயிருக்கை.

### முந்நூற்றெண்பத்தோராம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவன் வாழவேண்டிய முறையை அறிவிக்கும் இவ் வார்த்தையின் பொருள் தெளிவாயிருக்கையாலே சில அரும்பதங்க ளுக்குப் பொருள் விளக்கப்படுகிறது. a வஸ்தவ்யம்—வாழவேண்டிய இடம். b ஒதுங்கி வர்த்தித்தல் — ஆஶ்ரயித்து வாழ்தல். c ஒரு திருமுற்றம்— எம்பெருமானுடைய ஒரு கோயில்.

### முந்நூற்றெண்பத்திரண்டாம் வார்த்தை

எம்பெருமானுடைய திருக்கோயில்களில் உண்மையான ஈடுபாடு இல்லாமலிருந்தாலும், அவற்றில் அடிக்கடி புகுந்து புறப்பட்டுத் திரிவது நல்லது. "பொய்யே கைம்மைசொல்லிப் புறமே புறமேயாடி மெய்யே பெற்றொழிந்தேன்" [ திருவாய் 5-1-1 ] என்கிற ரீதியிலே கடைசிக் காலத்தில் பரமபுருஷார்த்த₂த்தையே பெறச் செய்துவிடும் என்று கருத்து.

## முந்நூற்றெண்பத்துமூன்றாம் வார்த்தை

எம்பெருமானுக்கில்லாததொன்றாய், அவனைப் பெறுகைக்குப் பெருவிலையாயிருக்குமது அஞ்ஜலியேயிறே; க$_3$ருட$_3$ முத்$_3$ரைக்கு விஷம் தீருமாபோலே, "அஞ்ஜலி: பரமா முத்$_3$ரா" என்கிறபடியே இம்முத்$_3$ரையாலே அநாத்$_3$யபராத$_4$மும் நசித்து எல்லாம் அகப்படும் — என்று.

## முந்நூற்றெண்பத்துநாலாம் வார்த்தை

அநந்தாழ்வான் போசலராஜ்யத்துக்கு எழுந்தருளுகிற போது கட்டுப்ரஸாத$_3$ம் கட்டிக்கொண்டுபோய் ஒரு இடத்திலே அவிழ்த்தவாறே அடைய எறும்பாயிருந்தது ; இத்தைக் கண்டு அநந்தாழ்வான் ப$_4$யப்பட்டு, " a'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' என்றருளிச்செய்தவரிலே சிலராய் வர்த்திப்பர்கள் ; இப்படியே கொண்டுபோய்த் திருமலையிலே வைத்துவாருங்கோள்" என்றருளிச்செய்தார்.

---

### முந்நூற்றெண்பத்துமூன்றாம் வார்த்தை

அஞ்ஜலி முத்$_3$ரையின் பெருமையைத் தெரிவிப்பது இவ்வார்த்தை. க$_3$ருட$_3$முத்$_3$ரையைக் காட்டினால் விஷம் தீருவதை ப்ரத்யக்ஷமாகக் காண்பதுபோலே, அஞ்ஜலி முத்$_3$ரையை எம்பெருமான் திருமுன்பே காட்டினால் அநாதி$_3$காலமாகச் செய்துவந்த வினைகளெல்லாம் தீர்ந்து எல்லாப் பயன்களும் கிடைக்கும். "அஞ்ஜலி: பரமா முத்$_3$ரா க்ஷிப்ரம் தே$_3$வப்ரஸாதி$_3$நீ" [விஷ்ணுத$_4$ர்மோத்தரம் 3-33-115] [விரைவில் தே$_3$வனை எம்பெருமானை உகப்பிப்பதாயிருக்கும் மேலான முத்$_3$ரையாயிருப்பது அஞ்ஜலி] என்பது இவ்விஷயத்தில் ப்ரமாணம். இது எம்பெருமானைப் பெறுவதற்குத் தலைசிறந்த ஸாத$_4$னமாயிருப்பது. ஸ்வாமியாயிருப்பதால் எம்பெருமான் தன்னுடைய இஷ்டஸித்$_3$தி$_4$க்கு இதைக் கைக்கொள்ளமுடியாது என்று கருத்து.

### முந்நூற்றெண்பத்துநாலாம் வார்த்தை

இவ்வார்த்தை கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவத்தில் பக்கம் 275 இல் வந்துள்ளது. பொருள் தெளிவாயிருக்கிறது. a "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே" [பெருமாள்திரு 4-10]

## முந்நூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை

அநந்தாழ்வான், மூன்று ஸம்வத்ஸரமாக வாதமாய்க் கிடக்க, ஸ்ரீ பாத₃த்துக்குப் பரிவராயிருப்பார் சிலர், "திருவேங்கடமுடையான் செய்தருளுகிறதென்!" என்று வெறுக்க, "திருவேங்கடமுடையான் ஹிதமல்லது செய்யான்" என்றருளிச்செய்தார்.

## முந்நூற்றெண்பத்தாறும் வார்த்தை

அநந்தாழ்வான் திருநந்த₃வநத்துக்கு மண்சுமவாநிற்க, பிள்ளைகளிலே ஒருவன் சென்று கூடையை வாங்க, 'நான் இத்தைவிடில் இளைப்பன்; நீ இத்தைத் தொடில் இளைப்புதி' என்றவளவிலே, 'இளைப்பாகாது' என்று பின்னையும் வாங்க, 'ஆனால் நான் ஜீவிக்கிற ஜீவநத்தை வாங்கவேணுமோ; நீயும் வேணுமாகில் ஒரு கூடையை வாங்கிச் சுமக்க மாட்டாயோ?' என்றருளிச்செய்தார்.

---

### முந்நூற்றெண்பத்தஞ்சாம் வார்த்தை

இதன்பொருள் தெளிவாயிருக்கிறது.

### முந்நூற்றெண்பத்தாறும் வார்த்தை

இது கு₃ருபரம்பராப்ரப₄ாவம் பக்கம் 274 இல் உள்ளது. அநந்தாழ்வான் திருநந்தவன கைங்கர்யத்துக்காக மண் சுமந்துகொண்டு போகும்போது வயது முதிர்ந்த இவரை இக்கார்யம் செய்யவிடலாகாது என்று கருதிய அவருடைய பிள்ளைகள் அல்லது ஶிஷ்யர்களிலே ஒருவன் அந்தக் கூடையைத் தன்னிடம் கொடுக்கச்சொல்ல, "எனக்கு ப₄க₃வத்கைங்கர்யமே உணவாகையாலே நான் இதைச் செய்யாவிட்டால் இளைத்துவிடுவேன். ஸாத₄ாரண உணவை உணவாகக்கொண்ட சிறுவனை நீ இந்த ப₄ாரத்தைச் சுமந்தால் இளைத்து விடுவாய்" என்று அநந்தாழ்வான் கூற, 'எனக்கும் கைங்கர்யத்தில் ஆசையிருக்கையாலே இளைக்கமாட்டேன்'என்று கூறி அவன் அநந்தாழ்வானுடைய கூடையை வாங்கப்புக, "அதற்கு என்னுடைய உணவை ஏன் பறிக்கிறாய்; நீ ஒரு கூடையைக் கொண்டுவந்து மண் சுமந்து கைங்கர்யம் செய்வாயாக" என்று அநந்தாழ்வான் அருளிச்செய்தார் என்றபடி.

## முந்நூற்றெண்பத்தேழாம் வார்த்தை

அநந்தாழ்வான் திருநந்த₃வநத்தில் திருமண்டபத்திலே யிருந்து திருமாலை கட்டாநிற்க, திருவேங்கட முடையான் அருள்பாடிட, இவரும் பேசாதேயிருந்து திருமாலையும் கட்டிக்கொண்டு பின்பு கோயிலுக்குள் புக்கவாறே, 'நான் அழைக்க வாராவிட்டதென்?' என்று திருவுள்ளமாக, a 'தேவரீரைக்கொண்டு கார்யமென் கருமுகைமொட்டு வெடியாநிற்க?' என்ன, ஆனால் "நாம் உம்மை இங்கு நின்று போகச் சொன்னோமாகில் செய்வதென் ?" என்ன, "b பரன் சென்றுசேர் திருவேங்கடமாமலையன்றோ ? தேவரீரன்றோ வந்தேறிகள்; இவ்விடம் தேவரீரை ஆஶ்ரயித்தவர்களதன்றோ" என்றார்,

## முந்நூற்றெண்பத்தெட்டாம் வார்த்தை

அநந்தாழ்வான் a திருப்படலிகையிலே திருமாலையைச் சேர்த்துக்கொண்டு உள்ளேபுக்கு, b கைப்புடையிலேநின்று அருள்பாடு என்றவாறே திருத்திரையைநீக்கித் திருமாலையை நீட்டி, c கையை மறித்துப்போருவர்.

---

**முந்நூற்றெண்பத்தேழாம் வார்த்தை**

இவ்வார்த்தை கு₃ருபரம்பராப்ரப₄ாவம் 275 ம் பக்கத்தில் வந்துள்ளது. a மாலை கட்டுவதற்குள்ள மொட்டுகள் மலருவதற்குமுன் மாலையைக் கட்டிவிடவேண்டும். அந்த சமயத்தில் நீரே அழைத்தாலும் உம்முடைய கைங்கர்யத்துக்குத் தடையாகையாலே வரமாட்டேன். b "பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை" [திருவாய் 3-3-8]

**முந்நூற்றெண்பத்தெட்டாம் வார்த்தை**

a திருப்படலிகையிலே — திருப்பூக்குடலையிலே. b கைப்புடை — த்₃வாரபாலகர்கள் இருக்குமிடம். c கையை மறித்து — "நைந்து சோர்ந்து கைம்மறித்துநின்றனரே" [பெரியாழ்வார்-திரு 3-6-6] என்கிறபடியே 'தன் கையில் ஶக்தியில்லை' என்பது தோற்றக் கையைத் திருப்பிக்கொள்வர் என்றபடி. மாலைகட்டும் கைங்கர்யம் அவன் தானே செய்வித்துக் கொண்டானேயொழியத் தாம் செய்ததன்று என்று கருத்து.

## முந்நூற்றெண்பத்தொன்பதாம் வார்த்தை

பீ$_4$ஷ்மர் ஜ்ஞாநாதி$_4$கராயிருக்க ப$_4$க$_3$வத்பரிக்$_3$ருஹீத பக்ஷப்ரதிபக்ஷத்திலேநின்று க்ருஷ்ணன் திருமேனியிலேயகப் பட அம்பு படும்படியான செயல்கூடிற்று, ராஜாக்களைப் பணிக்கன் சிரமஞ்செய்விக்கும்போது நினைத்தவிடத்திலே தட்டுகை ப்ராப்தமாமாபோலே, ஏவம்வித$_4$ரும் ஸர்வேஶ்வர னுடைய லீலாரஸாதீ$_4$நஸங்கல்பாந்தர்க்க$_3$தர்.

## முந்நூற்றுத்தொண்ணூறும் வார்த்தை

ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வான் ஐஶ்வர்யார்த்தி$_2$யோ, அநந்யப்ர யோஜநனோ? என்னில்; அஸ்மத$_3$ாதி$_3$கள் ப்ரபந்நராய் வைத்தே ஶரீராவஸாநத்தளவும் ஸ்த்ர்யந்நபாநாதி$_3$க

---

### முந்நூற்றெண்பத்தொன்பதாம் வார்த்தை

பீ$_4$ஷ்மர் சிறந்த உபாஸகஜ்ஞானியாய், ப$_4$க்தராய், விரக்தரா யிருந்தபோதிலும் எம்பெருமான் கைக்கொண்ட பாண்ட$_3$வ பக்ஷத் துக்கு எதிர்ப்பக்ஷமான து$_3$ர்யோத$_4$நபக்ஷத்திலே நின்று, கண்ணன் திருமேனியிலும் தைக்கும்படி அம்பெய்தார். இதைக் கண்ணனும் அநுமதித்திருந்தான். இது எப்படிப்பொருந்தும்? எனில்: ராஜாக்களை உடம்பு பிடித்துவிடுபவர்கள் வலி தீருவதற்காகத் தாங்கள் நினைத்த விடத்திலெல்லாம் அடித்துப் பிடித்துவிடுவதுபோலும், அதை அந்த ராஜாக்கள் அநுமதித்திருப்பதுபோலும் பீ$_4$ஷ்மருடைய இச்செயலுமா கிறது. கண்ணனும் தன்னுடைய லீலாரஸத்துக்கு உறுப்பாக இதை அனுமதித்திருந்தான்.

### முந்நூற்றுத்தொண்ணூறும் வார்த்தை

"ராஜ்யம் ப்ரார்த்த$_2$யமாநஸ்து பு$_3$த்$_3$தி$_4$பூர்வமிஹாக$_3$த:" [ரா-யு 17-65] [மனப்பூர்வகமாக ராஜ்யத்தை விரும்புகிறவனாகவே விபீ$_4$ஷணன் இங்கு வந்துள்ளான்] என்று அனுமனும், "ராஜ்ய காங்க்ஷீ ச ராக்ஷஸ:" [ரா-யு 18-13] [அரக்கனான விபீ$_4$ஷணன் ராஜ்யத்தை விரும்புகிறவனாகவும் இருக்கிறான்] என்று ஸ்ரீராமபிரானும் விபீ$_4$ஷணனைக் குறித்துச் சொல்லுகையாலே, விபீ$_4$ஷணன் ஐஶ்வர் யார்த்தி$_2$ என்று தோன்றுகிறது. உற்றார், உறவினர், செல்வம் முதலிய எல்லாவற்றையும் விட்டு ஸ்ரீராமபிரானை ஶரணம் புகுகை யாலே, வேறுபயன் கருதாத அநந்யப்ரயோஜனன் என்றும் தோன்று

**ளோடேயிருக்கிருப்போலே அநந்யப்ரயோஜநனுயே அதி₄காராவஸாநத்தளவும் ஐஶ்வர்யாநுப₄வம் பண்ணுகிருன்.**

## முந்நூற்றுத்தொண்ணூற்ருேராம் வார்த்தை

**எம்பெருமான் சிலரைப் போவென்னும்; சிலரை வாவென்னும்; சிலரைப் போது என்னும். ப்ரயோஜநாந்தர நிஷ்ட₂ரைப் ப₂லத்தைக்கொடுத்துப் போவென்னும்; கர்மஜ்ஞாந நிஷ்ட₂ரைக் கர்மங் கழித்தவாறே வாவென்னும்; அநந்ய ப்ரயோஜநரைப் போது என்னும். இந்த தே₃ஶத்தில் ஒரு அநந்யப்ரயோஜநரை உண்டென்றிருந்தோமோ? உண்டாகில்**

---

கிறது. இவ்விரண்டும் கூடுமோ? எனில்: நம்மைப் போன்றவர்கள் மோக்ஷத்தை விரும்பி ஶரணம்புகுந்தவர்களாயிருந்தபோதிலும், இந்த ஶரீரம் முடியும்வரையில் கொண்ட பெண்டிரையும் உண்ணும் சோறு பருகுநீர் முதலானவற்றையும் போ₄க்₃யமாகக் கொள்வதுபோலே விபீ₄ஷணுழ்வானும் வேறு பயன் கருதாத அநந்யப்ரயோஜனனுனலும் தானிருக்கும் வரையில் பெருமாள் அளித்த லங்கைஶ்வர்யத்தையும் அநுப₄விக்கிருன் என்று கொள்ளவேணும்.

### முந்நூற்றுத்தொண்ணூற்ருேராம் வார்த்தை

இவ்வார்த்தை முதலியாண்டான் குமாரரான கந்தாடையாண்டான் ப₄ட்டருக்கு அருளிச்செய்தது. மற்ற பயன்களை விரும்புகிறவர்கள் அப்பயன்களைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானைவிட்டு அகல வந்தவர்களாகையால், எம்பெருமான் அவர்களுக்கு அப்பயனைக் கொடுத்து, 'போ' என்பான். 'மோக்ஷத்தில் தனக்கு ஆநந்த₃ம் வேணும்' என்னும் எண்ணத்தாலே கர்மம், ஜ்ஞானம், ப₄க்தி முதலான தன் முயற்சிகளில் ஈடுபடும் உபாயாந்தரநிஷ்ட₂னைத் திருத்துவதற்காக 'ஶேஷத்வாநுஸந்த₄ானம், ஜீவபரர்களைப் பற்றிய உண்மையறிவு, த்ரிவித₄பரித்யாக₃ங்கள், ஶரணுக₃தி முதலானவற்றை அங்க₃மாகக்கொண்ட உபாயாந்தரங்களை அநுஷ்டி₂த்து ப்ராரப்₃த₄கர்மம் கழிந்த பிறகு வா' என்பான். எம்பெருமானையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் கொண்ட ஸித்₃தே₄ாபாயநிஷ்ட₂னை "போதுவீர் போதுமினே" [திருப்பாவை 1] என்ற ஆண்டாளைப்போலே . 'உடனேயே வாருங்கள்' என்று கைநீட்டி வரவேற்பான் எம்பெருமான். இந்த லீலாவிபூ₄தியில் ஓர் அநந்ய ப்ரயோஜனனைக் கண்டுபிடிப்பது மிகவும் அரிது. "ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:" [கீ₃தை 7-19] [அத்தகைய மஹாத்மாவான ஜ்ஞானி

அங்கே கண்டுகொள்ளுகிறோம்: எங்ஙனேயென்னில்;-ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் எம்பெருமானென்றால் விச்வஸிப்பாரில்லை, விச்வஸித்தால் க்ருதஜ்ஞராயிருப்பாரில்லை, க்ருதஜ்ஞராகப் பெற்றதாகில் ப₄க₃வத்கைங்கர்யம் விரஸமாயிருக்கும்; இவை மூன்றுங் கூடிற்றாகிலும் ராக₃த்₃வே- ஷோபஹதராகையாலே ப₄ாக₃வதகைங்கர்யத்துக்குஇசையார்கள், அதுவுங்கூடிற்றாகில் ஆசார்யனுடைய தே₃ஹயாத்ரையைக்கண்டு நெகிழநினைப்பர்கள், இதுவுங்கூடிற்றாகில் தங்களை ஸாக்ஷாத்₃த₄ராக நினைப்பர்கள்; ஆகையாலே, ப₄க₃வத்₃கு₃ணஞ்சொல்லுகைக்கும் கேட்கைக்கும் இவ்விடத்தில் ஆளில்லை காணும் — என்று கந்தாடையாண்டான், ப₄ட்டருக்கு ஸரஸ்வதீ ப₄ண்டா₃ரத்திலே எழுந்தருளியிருந்து பணித்த வார்த்தை.

---

மிகவும் கிடைத்தற்கரியவன்] "மாம் து வேத₃ ந கஶ்சந" [கீ₃தை 7-26] [என்னை உள்ளபடி அறிந்தவன் ஒருவனுமேயில்லை] என்று அவனே அருளிச்செய்தானன்றோ. ஆகையால், அத்தகையவர்களை நித்யவிபூ₄தியிலேயே காணலாம். இவ்வுலகில் 'ப்ராப்ய ப்ராபகங்கள் எம்பெருமான் ஒருவனே' என்றால் நம்புவார் எவருமில்லை. நம்புவார் சிலர் உண்டானாலும், எம்பெருமான் நமக்கு அநாதி₃காலமாகச் செய்துவரும் நன்மைகளை உணர்ந்து நன்றி காட்டுகிறவர்கள் இல்லை; நன்றி காட்டுவார் இருந்தாலும் ப₄க₃வத் கைங்கர்யத்தில் சுவையறிவார் எவருமில்லை. முற்கூறிய நம்பிக்கை, நன்றிகாட்டுதல், கைங்கர்யச்சுவை ஆகிய மூன்றும் சேர்ந்திருந்தாலும், ராக₃த்₃வேஷங்களாலே மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெருமைகளை இசைவாரில்லாமையாலே ப₄ாக₃வத கைங்கர்யத்துக்கு இசைவார் எவருமில்லை. அதுவும் கூடினாலும் ஆசார்யன் வாழ்க்கை நடத்துவதைப் பார்த்து 'இவரும் நம்மைப்போல் ஒரு மனிதர் தானே' என்று நினைப்பவர்களாகவே அனைவரும் இருக்கிறார்கள். அப்படி நினைக்காமலிருக்கையாகிற சிறப்புக் கூடினாலும், தன்னை எல்லா நற்குணங்கள் உடையவனாகவும் தீயகுணங்கள் இல்லாதவனாகவும் நினைக்கிறார்களேயொழிய "அடியேன் சிறிய ஞானத்தன்" [திருவாய் 1-5-7] "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" [திருவாய் 3-3-4] என்ற ஆழ்வாரைப்போலே மனப்பூர்வகமாகத் தம் தாழ்வுகளை அநுஸந்தி₄க்கையாகிற ஆகிஞ்சந்யாநுஸந்த₄ானம் செய்வார் எவருமில்லை. ஆகையால் இவ்விபூ₄தியில் எம்பெருமானுடைய கு₃ணங்களைச் சொல்லுவதற்கும் கேட்பதற்கும் எவருமில்லை என்று கருத்து.

## முந்நூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை

திருமாலையாண்டா னருளிச்செய்யும்படி :-நாம் ப$_4$க$_3$வத்$_3$ விஷயம் சொல்லுகிறேமென்றால் ஸம்ஸாரத்தில் ஆளில்லை; அதெங்ஙனேயென்னில் :-ஒரு பாக்கைப்புதைத்து அது உரு வாந்தனையும் செல்லத் தலையாலே எருச்சுமந்து ரக்ஷித்து அதி னருகே கூரைகட்டி, பதினாருட்டைக்காலம் காத்துக்கிடந்தால் கடைவழி ஒரு கொட்டைப்பாக்காயிற்றுக் கிடைப்பது; அது போலன்றிக்கே, இழக்கிறது ஹேயமான ஸம்ஸாரத்தை, பெறுகிறது - விலக்ஷணமான பரமபத$_3$த்தை; இதுக்குடலாக ஒரு வார்த்தை அருளிச்செய்த ஆசார்யன் திருவடிகளிலே ஒருகாலும் க்ருதஜ்ஞராகாத ஸம்ஸாரிகளுக்கு நாம் எத்தைச் சொல்லுவது ? என்று வெறுத்தார்.

## முந்நூற்றுத்தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை

அவதாரமிருக்கும்படி என் ? என்று நம்பிள்ளையை முதலிகள் கேட்க ; 'மெய் வெளுத்து நாக்கு வற்றியிருக்கும்' என்ன: அதென்னென்ன; "அதி$_4$காரி பெருமையாலே மெய்

---

**முந்நூற்றுத்தொண்ணூற்றிரண்டாம் வார்த்தை**

"ஒரு பாக்கு மரத்தைப் பயிரிடுவதற்குப் பதினாருண்டு காலம் பாடுபட்டு மரத்தை உருவாக்கிய பின்பும், பெறும் ப$_2$லன் மிக அல்பமாயிருக்கிறது. மிகத் தாழ்ந்ததான இஸ்ஸம்ஸாரத்தைப் போக்கி மிகச் சிறந்ததான பரமபத$_3$த்தைத் தருவதற்கு உறுப்பாக த்$_3$வயத்தை அருளிச்செய்த ஆசார்யன் திருவடிகளில் எப்போதுமே நன்றியில்லாத ஸம்ஸாரிகளுக்கு எதைச் சொல்லி என்ன பயன் விளையப்போகிறது ?" என்று எம்பெருமானாரின் ஆசார்யர்களுள் ஒருவ ரான திருமாலையாண்டான் வெறுத்து அருளிச்செய்த வார்த்தை இது.

**முந்நூற்றுத்தொண்ணூற்றுமூன்றும் வார்த்தை**

"சூழ்ந்தடியார் வேண்டினக்கால்" [பெரியதிருவந்தாதி 17]என்ற பாசுரத்தின் ஓர் அர்த்த$_2$ம் இவ்வார்த்தையில் விவரிக்கப்படுகிறது. "ஸ மஹாத்மா ஸுது$_3$ர்லப$_4$:" [கீ$_3$தை 7-19] [அந்த மஹாத்மா மிகவும் கிடைத்தற்கரியவன்] "மாம் து வேத$_3$ ந கஶ்சந" [கீ$_3$தை

வெளுத்திருக்கும்; பெற்றால் ப்ரயோஜநாந்தரபரராகையாலே மயிர்பட்ட சோறென்று நாக்குவற்றியிருக்கும்'' என்றருளிச் செய்தார்.

## முந்நூற்றுத்தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

ஆளவந்தார், ஒருநாள் பெருமாளைத் திருவடித்தொழ வென்று உள்ளே புகுராநிற்க, ஒருத்தி அநந்யப்ரயோஜநரைப் போலே கண்ணுங்கண்ணீரும், a கழுத்துங்கப்படமுமாய் ப்ர த$_3$க்ஷிணம் பண்ணாநிற்க, உள்ளுப்புகுராதே புறம்பே நின்றருளி, 'b ப்ரயோஜநாந்தரபரையானவள் புறப்பட்டாளோ?' என்று கேட்டருள, 'இதுக்கு c நித$_3$ாநமென்?' என்று விண்ணப்பஞ் செய்ய; "பெருமாள் ஸந்நிதி$_4$யேயாகிலும் ப்ரயோஜநாந்தர பரரோட்டைச் சேர்த்திக்கு, d அதி$_4$காரிவிரோத$_4$ம் பிறந்து e ப$_2$லவிரோத$_4$மும் பிறக்குங்காண்'' என்றருளிச்செய்தார்.

---

7-26] [என்னை உள்ளபடி ஒருவனும் அறிவதில்லை] என்கிற படியே தன்னை உள்ளபடியறியும் ஜ்ஞானியாகிற உணவைப் பெரு மையாலே உண்ணுதவன் போலே அவதார எம்பெருமான் உடம்பு வெளுத்திருப்பான். கிடைக்கும் ஓரிரு அதி$_4$காரிகளும் ஐஶ்வர்ய கைவல்யங்களாகிற மற்ற பயன்களை விரும்புகிறவர்களாகையாலே மயிர்பட்ட சோற்றை உண்டவனைப்போலே நாக்கு வற்றியிருப்பான்.

### முந்நூற்றுத்தொண்ணூற்றுநாலாம் வார்த்தை

a கப்படம்—சேலை. கழுத்தும் கப்படமும் என்றது சேலையால் கழுத்தைப் போர்த்துக்கொண்டு அடக்கமாய் வருவதைக் குறிக் கிறது. b இவள் இப்படி கண்ணுங்கண்ணீரும் கழுத்துங்கப்படமுமா யிருந்தபோதிலும் வேறு பயனைக் கருதி ப்ரத$_3$க்ஷிணம் வருபவளாகை யாலே பெருமாள் கோவிலிலும் இவளோடு ஸஹவாஸம் கூடாது என்று ஆளவந்தார் திருவுள்ளம். c நித$_3$ாநம்—காரணம். d அதி$_4$காரி விரோ த$_4$ம்—அவள் ப்ரயோஜநாந்தரபரை, நாம் அநந்யப்ரயோஜனர்கள் என் னும் முரண்பாடு. e ப$_2$லவிரோத$_4$ம்—அவளுக்கு ஐஶ்வர்யம் முதலான மற்றவை ப$_2$லம், நமக்கு எம்பெருமானே ப$_2$லம் என்னும் முரண் பாடு. இத்தகையவர்களுடன் சேர்ந்தால் பரிஶுத்$_3$த$_4$மானவர்களுக்கும் அவர்களுடைய தோ$_3$ஷம் தட்டும் என்று கருத்து.

## முந்நூற்றுத்தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை

**தே₃ஹாத்மவிவேகம், பரமாத்மவிவேகம், த்ரிமூர்த்தி ஸாம்யவிவேகம், புருஷார்த்த₂புருஷார்த்த₂விவேகம், விரோத்₄யவிரோதி₄விவேகம், உபாயாநுபாயவிவேகம், வைஷ்ணவாவைஷ்ணவவிவேகம், து₃ஷ்கரஸுகரவிவேகம், ஆசாராநாசாரவிவேகம், ஶிஷ்யாசார்யவிவேகம் இவைகள் ஒருவனுக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யங்கள்.**

---

### முந்நூற்றுத்தொண்ணூற்றஞ்சாம் வார்த்தை

ஒருவனுக்கு அவஶ்யம் அறியவேண்டியவை பின்வருமாறு — (1) ஜட₃மாய் (தானே ப்ரகாஶியாததாய்), அல்பமாய், அஸ்தி₂ரமான தே₃ஹத்தைக் காட்டிலும் ஜ்ஞானமாய் (தானே ப்ரகாஶிப்பதாய்), நித்யமாய், அளவற்ற ஜ்ஞாநாநந்த₃ங்களை ஸ்வரூபமாகவுடையதான ஆத்மா வேறுபட்டது என்னும் பகுத்தறிவு. (2) இவ்விரண்டைக் காட்டிலும் சிறந்ததாய், விபு₄வாய், தலைசிறந்த ஜ்ஞாநாநந்த₃மயமாய், ஶேஷியாய், காரணமாயிருப்பவன் பரமாத்மா என்னும் பகுத்தறிவு. (3) 'ப்₃ரஹ்மவிஷ்ணுருத்₃ரர்கள் மும்மூர்த்திகள்' என்று மும்மூர்த்திகளில் ஒருவனாக வழங்கலாம்படி விஷ்ணுமூர்த்தியாக அவதரித்திருந்த போதிலும், மற்ற இருமூர்த்திகளுக்கும் ஸ்ருஷ்டிஸ்தி₂தி ஸம்ஹாரங்களைச் செய்யும் நாராயணனே அவ்விரு மூர்த்திகளுக்குமிடையே விஷ்ணுமூர்த்தியாக அவதரித்திருக்கிறான் என்று உணரும் பகுத்தறிவு. (4) எம்பெருமானுக்கே ஆட்செய்வதே புருஷார்த்த₂ம், மற்றவையெல்லாம் புருஷார்த்த₂மல்லாதவை என்னும் பகுத்தறிவு. (5) அவித்₃யை (அஜ்ஞானம்), கர்மம் (புண்யபாபங்கள்), வாஸனை, ருசி, தே₃ஹ ஸம்ப₃ந்த₄ம், ப₄க₃வத்₃ப₄าக₃வதாஸஹ்யாபசாரங்கள் முதலானவை பரமபுருஷார்த்த₂த்தை அடைவதற்குத் தடை என்றும், எம்பெருமானே ப்ராப்யப்ராபகங்களாயிருக்கிறான் என்னும் அறிவு அத்தடைகளை நீக்கிவிடும் என்றும் பகுத்தறிவது. (6) எம்பெருமானே இயல்வான உபாயமாயிருப்பவன். தன் முயற்சியாயிருக்கும் கர்மஜ்ஞானப₄க்திகள் முதலான மற்ற உபாயங்கள் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் ஏற்பட்ட செயற்கையான உபாயங்களாகையால் தலைசிறந்த புருஷார்த்த₂த்துக்கு உபாயமாகமாட்டா என்னும் பகுத்தறிவு. (7) எம்பெருமானையே ப்ராப்யமாகக்கொண்டவர்கள் வைஷ்ணவர்கள். அவனையே ப்ராபகமாகவும் கொண்டவர்கள் பரமைகாந்தி வைஷ்ணவர்கள். எம்பெருமானையொழிந்த மற்ற பயன்களை விரும்புபவர்கள் அவைஷ்ணவர்கள் என்னும் பகுத்தறிவு. (8) உபாயாந்தரங்களைக்கொண்டு

## முந்நூற்றுத்தொண்ணூற்றுரும் வார்த்தை

**முமுக்ஷுவாய் ப்ரபந்நனுன அதி₄காரிக்கு ஜ்ஞாதவ்ய மான அர்த்த₂ம் நாலு. ப்ராப்யவிஷயமும், ப்ராபகவிஷயமும், ஆசார்யவிஷயமும்,பே₄ாஜனவிஷயமும். ப்ராப்யவிஷயமாவது-ஶரீரஸம்ப₃ந்த₄மற்று அர்ச்சிராதி₃மார்க்க₃த்தாலே போய் பரமபத₃த்திலே சென்று,அங்குண்டான ப₄க₃வத₃நுப₄வப்ரீதியாலே பிறக்கும் கைங்கர்யம்; இதில் அத்₄யவஸாயமாவது-கைங்கர்யத்தையொழிந்த த₄ர்மார்த்த₂காமங்களிலும், மோக்ஷத்தில் கைவல்யம் முதலாகவுள்ள புருஷார்த்த₂ாந்தரங்களிலும் கால் தாழாதே இக்கைங்கர்யமே பரமப்ராப்யமென்றிருக்கை. ப்ராபகவிஷயமாவது - ஸௌலப்₄யாதி₃கு₃ணவிஶிஷ்டனுமாய்,**

---

அவனை அடைவது செயற்கரியது; அவனைக்கொண்டே அவனை அடைவது மிக எளியது என்னும் பகுத்தறிவு. (9) 'மேலையார் செய்வனகள்' [ திருப்பாவை 26 ] என்கிறபடியே நம்முடைய பூர்வாசார்யர்கள் அநுஷ்டி₂த்தவை நல்லொழுக்கம், மற்றவை தீய ஒழுக்கம் என்னும் பகுத்தறிவு. (10) மாணிக்கமாலை, ஸ்ரீவசனபூ₄ஷணம் முதலான க்₃ரந்த₂ங்களில் சொல்லப்பட்ட ஶிஷ்யாசார்ய லக்ஷணங்களைப் பகுத்தறிவது.

### முந்நூற்றுத்தொண்ணூற்றுரும் வார்த்தை

மோக்ஷத்தை விரும்பி ப்ரபந்நனுயிருக்குமவன் (1) ப்ராப்யம், (2) ப்ராபகம், (3) ஆசார்யன், (4) பே₄ாஜனம் என்னும் நாலு விஷயத்தைப்பற்றி ஸாமாந்யாகாரத்தையும், அத்₄யவஸாயம் எனப்படும் விஶேஷாகாரத்தையும் தெரிந்துகொள்ளவேண்டும். (1) ப்ராப்யம்—ஸாமாந்யாகாரம் - ஶரீரஸம்ப₃ந்த₄ம் நீங்கப்பெற்று அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தாலே பரமபத₃மடைந்து அங்கு எம்பெருமானை அநுப₄விப்பதால் ஏற்படும் ப்ரீதியாலே உண்டாகும் கைங்கர்யமே ப்ராப்யம் என்றறிகை; இதில் விஶேஷாகாரம்-இந்தக் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்த₂த்திலும் வேறுபட்ட த₄ர்மார்த்த₂காமங்களாகிற மூன்று புருஷார்த்த₂ங்களிலும், (1) கைவல்யம், (2) எம்பெருமானை அநுப₄வித்துத் தான் ஆநந்த₃மடைவது, (3) எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்து தான் ஆநந்த₃மடைவது முதலான ஸ்வரூபத்துக்குத் தகாத மோக்ஷங்களிலும் ஈடுபடாமல், எம்பெருமானுகப்புக்கேயான கைங்கர்யத்தைப் பரமப்ராப்யமாகக் கொண்டிருக்கை. (2) ப்ராபகம்—ஸாமாந்யாகாரம் - ஸௌலப்₄யம், ஸௌஶீல்யம் முதலான கு₃ணங்க

விக்$_3$ரஹ விஶிஷ்டனுமாயுள்ள ஈஶ்வரன்; இதில் அத்$_4$யவஸாயமாவது-பிராட்டி புருஷகாரமாக அவனே உபாயமென்று அறுதியிட்டு, உபாயாந்தரங்களான கர்மஜ்ஞாநப$_4$க்திகளில் கால்தாழாதேயிருக்கை. ஆசார்யவிஷயமாவது - இவ்வுபாய ஸ்வீகாரம் பண்ணினவன் ஶரீராவஸாநத்தளவும் மநோவாக் காயங்களிஞல் அநுகூலித்து வர்த்திக்கை; அதாவது-உகந்தருளின நிலங்களிலும், அர்ச்சாவதார ப்ரேமமுடைய ஸ்ரீவைஷ்ணவர் பக்கலிலும் த்ரிவித$_4$கரணத்தாலும் ப்ராதிகூல்யம் தவிருகை; இதில் அத்$_4$யவஸாயமாவது - இப்படி வர்த்திக்குமிடத்தில் க்$_2$யாதிலாப$_4$பூஜைகளைப் பற்றவாதல்; ப$_4$க$_3$வத்ப்ராப்திக்கு ஸாத$_4$நமென்ருதல் செய்யாதே, ஸ்வயம் ப்ரயோஜந மென்றிருக்கை. போ$_4$ஜனவிஷயமாவது-ந்யாயார்ஜித த்$_3$ரவ்யத்தாலே த$_3$ாஹம்போமளவே என்று ஜீவிக்கை; இதில் அத்$_4$யவஸாயமாவது - அநுகூலரை நெருக்கியாதல், ப்ரதிகூலரை அபேக்ஷித்தாதல், அமுதுபடி த்$_3$ரவ்யத்தை

---

ளோடு கூடினவனுய், தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்தோடு கூடின ஈஶ்வரனே உபாயம் என்று அறிகை; இதில் விஶேஷாகாரம்-பிராட்டி புருஷகாரமாக எம்பெருமானே உபாயமாகிருன் என்று உறுதிபூண்டு தன் முயற்சியாலாகும் உபாயங்களான கர்ம ஜ்ஞான ப$_4$க்தியோக$_3$ங்கள் முதலானவற்றில் ஈடுபடாமலிருக்கை. (3) ஆசார்யன்—ஸாமாந்யாகாரம்-இப்படி எம்பெருமானையே உபாயமாகப்பற்றி இந்த ஶரீரம் விடும் வரையில் மனம், வாக், காயம் என்னும் முக்கரணங்களாலும் அர்ச்சாவதாரஸ்த$_2$லங்களிலும் அவற்றில் ஈடுபாடுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலும் எதிரிடாமலிருக்குமவனே ஆசார்யன் என்று அறிகை; இதில் விஶேஷாகாரம் - இப்படி வாழும் ஆசார்யன் புகழ், பொருள், பூஜை ஆகியவற்றுக்காகவோ, எம்பெருமானை அடைவதற்கு ஸாத$_4$னமென்று நினைத்தோ ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதகைங்கர்யங்களில் ஈடுபடாமல் ஸ்வயம்ப்ரயோஜனமென்று நினைத்து அவற்றில் ஈடுபடுமவனுய் இருக்கவேண்டும் என்று அறிகை. (4) போ$_4$ஜனம்—ஸாமாந்யாகாரம்-ந்யாயவழியில் ஸம்பாதி$_3$த்த பொருளைக்கொண்டு பசித் துன்பம் போமளவுக்கு உண்பதே உணவு என்று அறிகை; இதில் விஶேஷாகாரம்-எம்பெருமானது அடியார்களைத் துன்புறுத்தியோ, அவன் அடியாரல்லாதாரை வேண்டிப்பெற்ருே, எம்பெருமானுக்குச் சேரவேண்டிய

யாதல் ஜீவநமாக்காதே, உடம்பை வருத்தியாதல், அயா சிதமாகவாதல் வந்த த்₃ரவ்யத்தைக்கொண்டு தே₃ஹ யாத்ரை நடத்துகை.

## முந்நூற்றுத்தொண்ணூற்றேழாம் வார்த்தை

நம்பிள்ளை ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்திருப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் பிணங்கி ஒருவரையொருவர் மடிபிடித்துக்கொண்டு செல்ல, 'அதுக்கடியென்?' என்று பிள்ளை கேட்டருள, ஆச்சான்பிள்ளை, "இத்தனை நாளாக ஸேவித்து நின்றதில் தேங்கின அர்த்த₂மிதுவென்று காட்ட-வந்தார்கள்" என்ன, மேல் பிள்ளை அருளிச்செய்தபடி; 'பொல்லாங்கு! கோமூத்தவன்பாடே போகாதே நம்பாடே வந்தார்கள்' என்றருளினார்.

## முந்நூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

ஸர்ப்பாஸ்யக₃தமான மண்டூ₃கத்தினுடைய ஆர்த்த நாத₃த்தைக்கேட்டு ஆழ்வான் மோஹித்தார் என்று பிள்ளை

---

அமுதுபடியைத் திருடியோ உடம்புவளர்க்காமல் 'மெய்வருத்திக் கைசெய்துய்ம்மினோ' [திருவாய் 3-9-6] என்கிறபடியே உடம்பு நோவ உழைத்தோ, பிச்சையெடுக்காமல் பிறர் தரும் பொருளைக் கொண்டோ உண்டு வாழ்க்கை நடத்தவேண்டும் என்று அறிகை.

### முந்நூற்றுத்தொண்ணூற்றேழாம் வார்த்தை

நம்பிள்ளை ஶிஷ்யர்கள் இருவர் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொண்டு நம்பிள்ளையிடம் பரிஹாரம் கேட்கச் சென்றார்கள். அதைக் கண்ட நம்பிள்ளை 'இவர்கள் ஏன் இப்படி சண்டை செய்கிறார்கள்?' என்று கேட்டருள, அதற்கு அங்கிருந்த பெரியவாச்சான் பிள்ளை 'இத்தனை நாள் ஸ்வாமி திருவடிகளை ஆஶ்ரயித்திருந்ததில் தங்களிடம் ஸாரமாகப் படிந்த அர்த்த₂ம் இதுதான்' என்று காட்ட வந்தார்கள் என்று பரிஹாஸமாகவுரைத்து அவர்களை ஶிக்ஷித்தார். அப்போது நம்பிள்ளை அருளிச்செய்தது—"சண்டைக்குப் பரிஹாரம் தேடுவதற்கு ந்யாயாதி₄பதியிடம் போக வேண்டியிருக்க நம்மிடம் வந்தது பொல்லாங்கன்றோ" ' என்று.

### முந்நூற்றுத்தொண்ணூற்றெட்டாம் வார்த்தை

'பாம்பின் வாயிலகப்பட்ட தவளையின் கூக்குரலைக் கேட்ட கூரத்தாழ்வான் மயக்கம் அடைந்தார்' என்ற செய்தியை நம்பிள்ளை

அருளிச்செய்தார்; இத்தால்-பரது$_3$:க்க$_2$ாஸஹிஷ்ணுத்வமும், பரஸம்ருத்$_3$த்$_4$யேக ப்ரயோஜநத்வமும் வைஷ்ணவனுக்கு ஸ்வப$_4$ாவம் என்றபடி.

## முந்நூற்றுத்தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை

பிள்ளை திருவழுதி நாட்டரையர்க்கு அந்திமத$_3$சையிலே ஒரு க்லேசமுண்டாயிற்று; சுற்றிலிருந்த முதலிகள் அந்யோந்யம் முகம்பார்த்தார்கள்; இவர் அத்தைத் திருவுள்ளத்திலே கோலி, 'வாரீகோள்முதலிகாள்! ஸம்ஸாரிகளிழவுக்கு நொந்தோங்காணுங்கோள், அவர்களில் நமக்கு அல்பமாய்த்து வாசி; எங்ஙனேயென்னில்;-நாம் இடுவது ஒரு தண்டன், பண்ணுவது ஒரு ப்ரபத்தி, இழப்பது ஸம்ஸாரம், பெறுவது பரமபத$_3$ம்; இத்தை அறியாதே அத$_4$:பதிக்கிறார்களே! என்று க்லேசமாயிற்றுக் காணுங்கோள்' என்ன; இவர்களும் க்ருதார்த்த$_2$ரானார்கள்.

---

அருளிச்செய்தார். இதிலிருந்து 'பிறர் துன்பங்கண்டு பொறுக்காமலிருப்பதும், பிறர் நன்மையையே தனக்குப் பயனாகக் கொள்ளுகையும் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு இயற்கையாயிருக்க வேண்டும்' என்று விளங்குகிறது.

**முந்நூற்றுத்தொண்ணூற்றொன்பதாம் வார்த்தை**

திருவழுதி நாட்டரையர் என்பவர் கடைசிக் காலத்தில் தம் வருத்தத்துக்குக் காரணத்தை ஶிஷ்யர்களுக்குச் சொன்ன வார்த்தை இது. அதாவது—"நாம் ஆசார்யனை ஆஶ்ரயிக்கும்போது அவனைக் குறித்து ஒரு தண்டனிடுகிறோம். எம்பெருமானைக் குறித்து த்$_3$வயோச்சாரணரூபமான ஒரு ப்ரபத்தியைச் செய்கிறோம். இந்த அல்ப கார்யத்தைச் செய்வதாலே ஸம்ஸாரமாகிற பெருந்துன்பமே நமக்கு நீங்குகிறது. பரமபத$_3$மான பரம புருஷார்த்த$_2$மே நமக்குக் கிடைக்கிறது. இதையறிந்து இச்சிறு கார்யத்தைச் செய்யாமல் ஸம்ஸாரிகள் இந்த ஸம்ஸாரமாகிற வெந்நரகத்திலே அழுந்திக் கிடக்கிறார்களே என்று வருந்துகிறேன்" என்று தம் வருத்தத்துக்குக் காரணத்தை அருளிச்செய்தார்அவர். கடைசிக்காலத்தில் இவருடைய வருத்தத்துக்குக் காரணம் தெரியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்த அவருடைய ஶிஷ்யர்கள் காரணம் உணரப்பெற்று த்ருப்தி அடைந்தார்கள்.

## நானூறாம் வார்த்தை

வீரஸுந்த$_3$ரப்$_3$ரஹ்மராயன் காலத்திலே ப$_4$ட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, வீரஸுந்த$_3$ரன் பட்டானென்று பிள்ளைப் பிள்ளையாழ்வான் ஆண்டாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, போர க்லேஶித்தார்; 'ப$_4$ட்டரைக் கோயிலிலிருக்கவுங்கூட வொண்ணாதபடி பண்ணின இவன் பட்டானென்றதுக்கு இதுவென்?' என்ன; 'பிள்ளையோடுண்டான விரோத$_4$த்தாலே அத்$_3$ருஷ்டத்தை இழந்தான்; சில நாளிருந்து த்$_3$ருஷ்டஸுக$_2$மாகிலும் அநுப$_4$விக்கிறானே என்றிருந்தோம், அதுவுங்கூட இழந்தானாகாதே! என்று க்லேஶமாயிற்று' என்று அருளிச்செய்தார்.

---

### நானூறாம் வார்த்தை

கூரத்தாழ்வான் சிஷ்யனான வீரஸுந்த$_3$ரப்$_3$ரஹ்மராயன் ஒரு மதிள் கட்டும்போது ஆழ்வான் ஶிஷ்யரான பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகைக்கு இடையூறு செய்தமையால் மனவருத்தம் கொண்டு ப$_4$ட்டர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளிவிட்டார். அங்கே பல வருடங்கள் வாழ்ந்திருந்தார். அதற்கிடையில் வீரஸுந்த$_3$ரன் இறந்து விட்டான் என்று பிள்ளைப்பிள்ளையாழ்வான் ப$_4$ட்டருடைய தாயாரான ஆண்டாளிடம் விண்ணப்பித்தபோது ஆண்டாள் மிகவும் வருந்தினாள். அப்போது பிள்ளைப்பிள்ளையாழ்வான் 'ப$_4$ட்டரை ஸ்ரீரங்க$_3$த்தில் இருக்கவும் முடியாதபடி விரட்டின அந்தப் பாபி இறந்ததற்கு வருந்துவானேன்' என்று கேட்டார். அதற்கு ஆண்டாள் ''ப$_4$ட்டரிடம் அபசாரப் படுகையாலே மறுமையில் நற்க$_3$தியை இழந்தான். ஏதோ இவ்வுலகில் சில வருடங்கள் இருந்து அரசாட்சியையாவது அநுப$_4$வித்துக் கொண்டிருக்கட்டும் என்று நினைத்தேன். அதுவும் இல்லாமல் போய்விட்டதே என்று வருந்துகிறேன்" என்று அருளிச்செய்தாள். இதன் விவரணம் கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவம் பக்கம் 351-இல் வந்துள்ளது. '' 'ஆழ்வான் திருவடிகளில் ஸம்ப$_3$ந்த$_4$முடையது ஒரு ஆத்மா இப்படி தட்டுப்பட்டுப்போவதே! என்று இத்தை நினைத்து என் வயிறு எரிகிறபடி உங்களொருவர்க்கும் தெரிகிறதில்லை' என்று ஆண்டாள் அருளிச்செய்தாள்; குற்றஞ்செய்தவர்கள் பக்கலிலுமகப்பட ஹிதபரராய் த$_3$யார்த்$_3$ரசித்தராய்ப் போருவது ஆழ்வான் ஸம்ப$_3$ந்த$_4$முடையவர்களுக்கே உள்ளதொன்றிறே." என்னும் கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவ ஸ்ரீஸூக்திகள் மிகவும் குறிக்கொள்ளத்தக்கவை.

## நானூற்றோராம் வார்த்தை

**நம்பிள்ளை திருவுள்ளத்திலே அபேக்ஷை நடக்கும்படியையும், அநபேக்ஷை நடக்கும்படியையும் வடக்குத் திருவீதிப்பிள்ளை அருளிச்செய்யும்படி; அபேக்ஷை நடப்பது:- அஹங்கார நிரஸநத்திலும், அவிவேக நிரஸநத்திலும்; அநபேக்ஷை நடப்பது - ஆத்ம ஜ்ஞாநத்திலும், ஆத்மலாப₄த்திலும், ப₄க₃வல்லாப₄த்திலும்; ஆத்மஜ்ஞாநமாவது - ஜ்ஞாநாநந்த₃ ஸாக்ஷாத்காரம்; ஆத்மலாப₄மாவது - தத்ப்ரதிப₃ந்த₄க நிவ்ருத்தி; ப₄க₃வல்லாப₄மாவது - ஸ்வயத்நஸாத்₄யமுமாய் ஸ்வக₃தமுமான ப₄க₃வத₃நுப₄வத்தை.**

---

### நானூற்றோராம் வார்த்தை

நம்பிள்ளை திருவுள்ளத்திலே எந்தெந்த விஷயங்களை அபேக்ஷித்திருப்பார், எந்தெந்த விஷயங்களில் அபேக்ஷையில்லாமலிருப்பார் எனபதை விவரிக்கிறது இவ்வார்த்தை. இது ஈட்டை ஏடுபடுத்திய வடக்குத்திருவீதிப்பிள்ளையின வார்த்தை. I அபேக்ஷித்திருக்கும் (பெற விரும்பியிருக்கும்) விஷயங்களாவன—(1) தே₃ஹமே ஆத்மா என்னும் அஹங்காரம் போகவேணும். (2) ஆத்மாவை ஸ்வதந்த்ரனாகவும் அந்யஶேஷனாகவும் நினைக்கும் அவிவேகமும், பரமாத்மாவை ஸ்ரிய:பதியான நாராயணனைக் காட்டிலும் வேறொருவனாகவும், கு₃ணமற்றவனாகவும், விபூ₄தியற்றவனாகவும், ஜீவாத்மாவைக் காட்டிலும் வேறுபடாதவனாகவும் நினைக்கும் அவிவேகங்களும் நீங்கவேணும். II அபேக்ஷையிலலாமல் (பெறவிருப்பமில்லாமல்) இருக்கும் விஷயங்களாவன — (1) ஆத்மாவின் ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபத்தை நேராகக் காண்கிற ஆத்மஜ்ஞானம். (2) அதற்குத் தடையாயிருக்கும் பூர்வ கர்மங்கள் நீங்குவதின் மூலம் அவ்வாத்மாநுப₄வத்தை நித்யமாகப் பெறுவதாகிற கைவல்யமோக்ஷம். (3) மோக்ஷத்தில் எம்பெருமானை அநுப₄விப்பதாலுண்டாகும் ஆநந்த₃த்தை விரும்பினால், அவ்விருப்பம் தன் முயற்சியான உபாயாந்தரங்களிலே மூட்டி, பரமபத₃த்திலும் எம்பெருமான் விஷயத்தில் ஸ்வார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களாகிற அப்ராப்தமோக்ஷத்தை விளைத்துவிடுமாகையாலே ஸ்வார்த்த₂மான அந்த ப₄க₃வத₃நுப₄வ விஷயத்திலும் அநபேக்ஷையாகிற விருப்பமின்மையே நம்பிள்ளை திருவுள்ளத்தில் நடக்கும் என்று கருத்து.

## நானூற்றிரண்டாம் வார்த்தை

எம்பெருமானார் எம்பாரை நோக்கி, 'ஸ்ரீகோ₃விந்த₃ப் பெருமாளே! எம்பெருமான் எளியனென்று பலபடியாலுஞ் சொன்னோமே' என்ன; "இப்படி எளியனாகில் 'நமக்கென்?' என்று எல்லாரும் உபேக்ஷிக்கைக்கு உடலாமித்தனையன்றோ" என்ன, 'இப்படியிருக்கிற அவனைக் காணவேண்டும் என்னும் ஆசையுள்ளது உமக்கொருவர்க்குமன்றோ' என்றருளினார்.

## நானூற்றுமூன்றாம் வார்த்தை

a "எளிவரும் இயல்வினன் நிலைவரம்பில பலபிறப்பாயொளிவரும்" என்கிறவிடமருளிச்செய்யாநிற்க, 'இப்படி கு₃ணவானாயிருக்கிற அவனை ஸாக்ஷாத்கரிக்க விரகில்லையோ?' என்று மணக்கால் நம்பியை ஆளவந்தார் கேட்டருள; 'எனக்கு ஶேஷத்வாநுஸந்த₄ாநமே அமையும்; நீர் b அப்பன் பாடே செல்லும்' என்ன, இவரும் அங்கே செல்ல, அவரும் காலங்குறித்துவிட, இவரும் திருவநந்தபுரத்துக்கு எழுந்தருளி அங்கே அக்காலத்தை நினைத்து "b அப்பன்பக்கலேறப் போக ஒரு புஷ்பகம் பெற்றிலோமே!" என்று க்லேஶிக்க, பெருமாளும், 'நாம்செய்தபடி காணுமிது; ஶேஷத்வஜ்ஞாநமேயமையும்' என்றருளினார்.

---

**நானூற்றிரண்டாம் வார்த்தை**

எம்பெருமானாருக்கும் எம்பாருக்கும் நடந்த இந்த ஸம்வாத₃ம் எம்பாருடைய பரமப₄க்தியை எம்பெருமானாரே கொண்டாடுவதாயிருக்கிறது.

**நானூற்றுமூன்றாம் வார்த்தை**

*இவ்வார்த்தை கு₃ருபரம்பரை நூலில் [பக்கம் 137] விவரிக்கப்பட்டுள்ளது. a 'எளிவரும் இயல்வினன்' [திருவாய் 1-3-2] b அப்பன்— நாத₂முனிகளின் ஶிஷ்யராய், அவரிடமிருந்து ப₄க்தியோக₃த்தை உபதே₃ஶம் பெற்றவரான குருகைக்காவலப்பன். c ப₄க்தியோக₃த்தை அநுஷ்டி₂த்துத் தன்னை நேரே கண்டால் தன்னை அநுப₄விப்பதில் ஸ்வார்த்த₂தை உண்டாகிவிடுமாகையாலே, அப்பன் குறித்த காலத்தை ஆளவந்தார் மறக்கும்படிசெய்து, 'ஆத்மாவின் ஶேஷத்வபாரதந்த்ர்ய ஜ்ஞானமே பரமபத₃த்தில் பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்களை விளைத்துவிடுமாகையாலே அதுவே போதும்' என்று பெருமாள் அருளினார் என்று கருத்து.*

## நானூற்றுநாலாம் வார்த்தை

பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் 'தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அருளிச்செய்யவேணும்' என்ன; "முமுக்ஷுவான அதி₄காரிக்கு அநுஸந்தே₄யம்: — ஸ்வரூபம் பரதந்த்ரம்; விரோதி₁ ப்ரப₃லம், புருஷார்த்த₂ம் அந்யஸாத்₄யமன்று; பரிஹார்யம் தே₃வதாந்தரப₄ஜநமும், ப₄ாக₃வதாபசாரமுமாகிற படுகுழிகள்" என்றருளினார்.

## நானூற்றஞ்சாம் வார்த்தை

துறையறிந்திழிந்து, முகமறிந்து கோத்து, விலையறிந்து பரிமாறி, நினைவறிந்து அடிமைசெய்யவேண்டும்.

---

### நானூற்றுநாலாம் வார்த்தை

ஸ்ரீவைஷ்ணவனுக்குத் தஞ்சமாயிருக்கும் நினைவுகள் பின்வருமாறு—(1 தன்) ரக்ஷணத்துக்குத் தனக்குத் தகுதியில்லாதபடி ஆத்ம ஸ்வரூபம் அசித்தைப் போலே அத்யந்த பரதந்த்ரமாயிருப்பது; (2) பரம புருஷார்த்த₂த்தைப் பெறுவதற்குத் தடையாயிருக்கும் *I* அவித்₃யை (அஜ்ஞானம்) *II* கர்மம்—(புண்யபாபங்கள்), *III* வாஸனை, *IV* ருசி, *V* தே₃ஹஸம்ப₃ந்த₄ம் என்பவை அநாதி₃யாயிருக்கையாலே வலிமை மிக்கவை; (3) பரமபுருஷார்த்த₂மான பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்கள் நிர்ஹேதுகக்ருபையையுடைய எம்பெருமானாலேயே அருளப்படுபவையே யொழிய, தன்னாலோ பிறராலோ ஸாதி₄க்கப்படுவனவன்று. (4) இவன் மற்றொரு தெய்வத்தை ஆஶ்ரயிப்பதும், ப₄ாக₃வதாபசாரமுமாகிற படுகுழிகளில் விழாமலிருந்தால் போதும்; முற்கூறிய ஸ்வரூபவிரோதி₄ புருஷார்த்த₂ஜ்ஞானம் தன்னடையே பரமபுருஷார்த்த₂த்தை விளைத்து விடுமென்று கருத்து. இது நம்பிள்ளை வார்த்தை.

### நானூற்றஞ்சாம் வார்த்தை

முத்துக்குளிப்பவர்கள் முத்துப்படும் துறையையறிந்து இறங்கி முத்துக்களை எடுப்பார்கள். முத்துக்களின் முகமறிந்து அவற்றை மாலையாகக் கோப்பார்கள். அந்த மாலைகளின் விலையறிந்து தாழ்வுள்ள மாலைகளைத் தக்க விலைக்கு விற்பார்கள். தாழ்வு சிறிதுமில்லாமையாலே விலைமதிப்பற்ற மாலைகளைத் தமது ஸ்வாமிகளான அரசர் முதலானோர்க்கு அணிவித்து அவர்களது உகப்புக்கண்டு உகப்பார்கள். அதுபோலவே ஸாத்விகர்களான மஹாசார்யர்களும்

## நானூறறுரும வாரததை

ஜஞாநதததுககிலககு ஆசார்யகுு3ணம, அஜஞாநதததுக் கிலககு ஆசாரயதேே3ாஷம, ஶகதிககிலககு ஆசாரய கைஙகாயம், அஶகதிககிலககு நிஷித3த4ாநுஷட2ாநம.

## நானூறறேழாம வாரததை

நமபிளளே திருவெளளறை தேனகொளசோலே த3ாஸா திருமாளிகையிலே ஏழுநதருளி அவருடைய திருமாளிகையிலே

---

ஶாஸ்தராாத்த2ஙகளாகிற முததுககள் நிறைநத ஶாஸதரக கடலக ளிலே துறையறிநது இறஙகி, நலல ஶாஸதராாதத2ஙகளாகிற முததுக களே எடுதது, தததவதரயம, அாதத2பஞசகம, நவவித4ஸமப3நத4ம, புருஷாாதத2தரயம எனறு வகைபபடுததி முததுமாலேகளபோலே கோதது, ஐஶவாயம கைவலயம முதலான தாழநத முததுமாலேகளேப பகவமிலலாதவாகளுககு ஆசாரய ஶுஶரூஷை முதலானவறறைப பெறறுககொணடு கொடுதது, பரமபுருஷாாதத2மாகிற சிறநத முத்துமாலேயைப பரமஸாதவிகாகளுககு ஸவயம ப்ரயோஜனமாக அளிதது, விலேமதிபபறற முததுமாலே போன்றதான ப4க3வத3 ப4ாக3வதகைஙகாயததை ஸவாமிகளான ப4ாக3வதாகளுககு அவாகள உகபபையே பயனுககொண்டு ஒனறு நூறுயிரமாககொடுபபாகள அவாகள நினேவறிநது அடிமை செயவாகள எனறு கருதது

### நானூற்றுரும் வார்த்தை

ஆசாாயருடைய நறகுணஙகளேயே நாம அறியவேணடும ஆசாாயருடைய பரகருதிவாஸனேயால உளள தே3ாஷஙகளே நாம் காணுககணணிடடிருககவேணும நமககு ஶகதி உளளவரையில ஆசாாயனுகநத கைஙகாயம செயயவேணும, வேத3ஶாஸதரஙகளில விலககபபடடிருபபதைச செயவதில ஶகதியறறு இருககவேணும எனறு கருதது இவவாாததை ஸ்ரீவசனபூ4ஷணம 299ம சூாணேயில வநதுளளது

### நானூற்றேழாம் வார்த்தை

ஸமஸாரததில ஐஶவாயததைக கொணடு அடையும இனபம் மூனறு வகைபபடும-(1) இவவினபததைத தனககு எனறு நினேதது அநுப4விப்பது இதனுல இவனுககு ஆதம நாஶமே ஏறபடுமாகை

ஐஶ்வர்யத்தைக்கண்டு ப்ரீதராயிருக்க, 'இதுக்கு அடியென்?' என்று யதிராஜதா$_3$ஸர் பிள்ளையைக் கேட்க; நம்பிள்ளை — "இஸ்ஸம்ஸாரஸுக$_2$ந்தான் மூன்றுபடியாயிருக்கும்; இஸ்ஸுக$_2$த்தைத் தனக்கென்றும், தனக்கும் எம்பெருமானுக்கு மென்றும், எம்பெருமானுக்கேயென்றும் நினைக்கைகாண்: தனக்கென்கை நரகாநுப$_4$வஸத்$_3$ருஶம்; தனக்கும் எம்பெருமானுக்கும் என்கை ஸ்வர்க்க$_3$ாநுப$_4$வஸத்$_3$ருஶம்; எம்பெருமானுக்கேயென்கை பரமபத$_3$ாநுப$_4$வஸத்$_3$ருஶம்."

## நானூற்றிரட்டாம் வார்த்தை

"ஸ்வாப$_4$ாவிகமான ஶேஷத்வத்தை விட்டு, ஔபாதி$_4$கமான பௌருஷத்தை ஏறிட்டுக்கொள்ளுகிறவித்தனையிறே" என்று ஆச்சான்பிள்ளை.

---

யாலே, இது நரகாநுப$_4$வத்தை ஒத்தது. (2)ஐஶ்வர்யத்தைத் தனக்கும் எம்பெருமானுக்குமென்று நினைத்து அநுப$_4$விப்பது; சிறுதுளி விஷம் கலந்த பாற்குடம் போலே, தனக்கென்னும் அஹங்காரம் கலந்திருக்கையாலே, "ஸ்வர்க்கே$_3$ऽபி பாதபீ$_4$தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" [வி.பு 6-5-50] [புண்யம் குறையக் குறைய என்றைக்கு ஸ்வர்க்க$_3$த்தை விட்டுக் கீழே விழுந்துவிடுவோமோ என்ற ப$_4$யம் மிகுந்துவருகையாலே, ஸ்வர்க்க$_3$ஸுக$_2$மும் இல்லாததுபோலே ஆகிவிடுகிறது] எனப்பட்ட ஸ்வர்க்க$_3$ஸுக$_2$ம் போன்றது. (3) எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்குமே என்று எண்ணிச் செல்வத்தைப் பயன்படுத்துவது ஆத்மாவை உய்விப்பதாகையாலே, குறை சிறிதுமில்லாமல் பரமபத$_3$த்தில் பரார்த்த$_2$ாநுப$_4$வ கைங்கர்யங்களையடைவதையொத்தது. செல்வத்தை அப்படிப் பயன்படுத்தியவராகையாலே, திருவெள்ளறை தேன்கொண்சோலை தா$_3$ஸர் திருமாளிகைச் செல்வத்தைக் கண்டு நம்பிள்ளை உகந்தார் என்று கருத்து.

### நானூற்றிரட்டாம் வார்த்தை

ஸம்ஸாரிகள் — குறிப்பாக ஆண்பிள்ளைகள் தமக்கு இயல்வான ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வத்தைக் கைவிட்டு, ஶரீர ஸம்ப$_3$ந்த$_4$த்தால் செயற்கையாக வரும் ஆண்மையாகிற ஸ்வாதந்த்ர்யத்தை ஏறிட்டுக்கொண்டு அநர்த்த$_2$ப்படுகிறார்கள் என்று பெரியவாச்சான்பிள்ளையின் கருத்து.

## நானூற்றொன்பதாம் வார்த்தை

**அந்நஸாங்கர்யம், ஜ்ஞாநஸாங்கர்யம், காலஸாங்கர்யம், தே₃ஶஸாங்கர்யம், பே₄ாக₃ஸாங்கர்யம் இவை த்யாஜ்யம்.**

## நானூற்றுப்பத்தாம் வார்த்தை

**நடுவிற்றிருவீதிப்பிள்ளை; - ஸம்ஸாரிகள் தே₃ாஷத்தைத் தன் அஶக்தியாலே காணுதிருக்கக்கடவன்; ஸாத்விகருடைய**

---

### நானூற்றொன்பதாம் வார்த்தை

(1) அந்நஸாங்கர்யம்—எம்பெருமான் அமுதுசெய்த ப்ரஸாத₃த்தோடு அவன் அமுதுசெய்யாத உணவையும் கலந்து உண்பது. (2) ஜ்ஞானஸாங்கர்யம் — ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அருளியிருக்கும் தெளிந்த அர்த்த₂ங்களோடு, பின்புள்ளார் மயங்கிச் சொல்லியிருக்கும் அர்த்த₂ங்களையும் கலந்து அறிகை. (3) காலஸாங்கர்யம்—ப₄க₃வத்₃ப₄ாக₃வதகைங்கர்யங்களுக்கு உறுப்பாகச் சிறிது காலத்தையும், அவற்றுக்கு உறுப்பில்லாமல் பல பொழுதையும் கழிக்கை. (4) தே₃ஶஸாங்கர்யம்—எம்பெருமானும் அவனடியார்களும் உகந்தருளின நிலங்களிலே போதுபோக்குவதோடு, அவர்கள் உகக்காத இடங்களிலும் போதுபோக்குகை. (5) பே₄ாக₃ஸாங்கர்யம்—எம்பெருமானும் அவனடியார்களுமே உகந்த கைங்கர்யங்களைச் செய்வதோடு தன் உகப்புக்காகவும் சில கார்யங்களைச்செய்கை. இந்த ஐந்து ஸாங்கர்யங்களும் (கலப்படங்களும்) கைவிடத்தக்கவை.

### நானூற்றுப்பத்தாம் வார்த்தை

உத்தமாதி₄காரி இருக்கவேண்டிய முறைகளை நம்பிள்ளையின் ஶிஷ்யரான நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் பின்வருமாறு அருளிச் செய்கிறார்:—(1) ஸம்ஸாரிகளுடைய அளவற்ற தே₃ாஷத்தைக்கண்டு பரிஹரிக்கும் ஶக்தி இவனுக்கு இல்லையாகையாலே ஸம்ஸாரிகளின் தே₃ாஷத்தைக் காணலாகாது. (2) "து₃ராசாரோऽபி ஸர்வாஶீ க்ருதக்₄நோ நாஸ்திக: புரா। ஸமாஶ்ரயேத₃ாதி₃தே₃வம் ஶ்ரத்₃த₄யா ஶரணம் யதி₃ ॥ நிர்த்தே₃ாஷம் வித்₃தி₄ தம் ஜந்தும் ப்ரப₄ாவாத் பரமாத்மந:॥"[ஸாத்வத16-23,24] [தாழ்ந்த ஒழுக்கத்தையுடையவனாய், எதையும் உண்பவனாய், செய்ந்நன்றி கொன்றவனாய், நாஸ்திகனாய் நீண்டநாள் இருந்தவனானாலும், ஆதி₃தே₃வனான ஸ்ரீமந்நாராயணனை ஶ்ரத்₃தை₄யோடு ஶரணம்புகுந்துவிட்டானாகில், பரமாத்மாவின் பெருமையாலே தே₃ாஷங்கள் இல்லாதவன் என்று அவனையறிவாய்]

தே₃ஹத்தை இவர்களுடைய ஶக்தியாலே காணுதிருக்கக் கடவன் ; ப₃த்₃த₄லோகத்தில் விலக்ஷணஜ்ஞானத்துக்கு விச்சே₂த₃மின்றிக்கேயிருக்கையாவது - ஔஷத₄ப₃லத்தாலே அக்₃நியை ஏந்தியிருக்குமாபோலே. ஜ்ஞானத்துக்கு அவித்₃யாஸம்ப₃ந்த₄நிவ்ருத்திபூர்வகமான அப்ராக்ருத தே₃ஶ ப்ரவேஶத்திலும், அவித்₃யாஸம்ப₃ந்த₄த்தில் ஆர்த்தி அத்யந்தாபேக்ஷிதம்.

## நானூற்றுப்பதினோராம் வார்த்தை

ஆச்சான்பிள்ளை — ஸித்₃தோ₄பாயஜ்ஞ ப்ரபந்நனுக்கு அஞ்சு ஸ்பர்ஶம் பரிஹார்யம் ; அவையாவன-ஶைவஸ்பர்ஶம், மாயாவாத₃ஸ்பர்ஶம், ஏகாயநஸ்பர்ஶம், உபாயாந்தரஸ்பர்ஶம், விஷயாந்தர ஸ்பர்ஶம்: இவை ஐந்தும் ஐந்து

---

என்கிறபடியே ஸாத்விகர்களான ப்ரபந்நருடைய தே₃ஹத்தை— பரமாத்மாவை அண்டைகொண்ட ப₃லம் அவர்களிடம் இருக்கை யாலே இவன் காணலாகாது. (3) இந்த லீலாவிபூ₄தியில் தலை சிறந்த ஜ்ஞானத்தை இடைவிடாமல் பெற்றிருக்கையாவது — தக்க மருந்துகளைப் பயன்படுத்திய ப₃லத்தாலே அக்₃நியை ஏந்தியிருப்பதை யொக்கும். (4) அப்ராக்ருததே₃ஶத்தில் போய்ச்சேரவேணும் என்னும் விருப்பமாகிற அறிவும் ஒருவனுக்கு வேணும் ; இந்த ஸம்ஸார மண்ட₃லத்திலுள்ள அஜ்ஞான ஸம்ப₃ந்த₄த்திலிருந்து நீங்கப் பெறவேணும் என்னும் ஆர்த்திரூபமான அறிவும் அவனுக்கு வேணும். முந்திய அறிவு இருந்தாலும் பிந்திய ஆர்த்திரூபமான அறிவு இல்லாவிடில் இந்த ஸம்ஸாரத்திலேயே சிறிதுநாள் இருக்கலா மென்னும் எண்ணம் தோன்றிவிடக் கூடும். ஆகவே முந்திய அறிவைக்காட்டிலும் பிந்திய அறிவே அனைவருக்கும் மிகவும் வேண்டியது என்று கருத்து.

### நானூற்றுப்பதினோராம் வார்த்தை

எம்பெருமானையே உபாயமாகப் பற்றின ப்ரபந்நனுக்கு விலக்கத் தக்கவை ஐந்து ஸ்பர்ஶங்களென்றும், அவைகளில் ஶைவ ஸ்பர்ஶம் ஏற்பட்டால் எம்பெருமான் எல்லாத்தேவர்களுக்கும் மேலானவன் என்று அநுஸந்தி₄க்கவேண்டுமென்றும், மாயாவாதி₃யான அத்₃வைதியின் ஸ்பர்ஶம் ஏற்பட்டால் எம்பெருமான் எல்லாக் கல்யாண கு₃ணங்

அநுஸந்த₄ானத்தாலே போம். எம்பெருமானுடைய ஸர்வஸ்மாத் பரத்வத்தை அநுஸந்தி₄க்க ஶைவஸ்பர்ஶம் போம்; ஸமஸ்த கல்யாணகு₃ணங்களை அநுஸந்தி₄க்க மாயாவாத₃ ஸ்பர்ஶம் அறும்; ஶ்ரிய:பதித்வத்தை அநுஸந்தி₄க்க ஏகாயந ஸ்பர்ஶம் அறும்; உபாய பூர்த்தியை அநுஸந்தி₄க்க உபாயாந்தரஸ்பர்ஶம் அறும்; தி₃வ்ய மங்க₃ளவிக்₃ரஹத்தை அநுஸந்தி₄க்க விஷயாநதர ஸ்பர்ஶம் அறும்.

## நானூற்றுப்பன்னிரண்டாம் வார்தனதை

a முமுக்ஷுவாய் ப்ரபந்நனானவனுக்கு ஸர்வப்ரகார ரக்ஷகனான ஸர்வேஶ்வரன் விஷயமாகவும், அநாதி₃காலார்ஜித பாபத்தைப் போக்கக்கடவளான பிராட்டி விஷயமாகவும்,

களையுடையவன் என்று அநுஸந்தி₄க்கவேண்டுமென்றும், பிராட்டியை ஶேஷியாக ஒப்புக்கொள்ளாத ஏகாயநனின் ஸ்பர்ஶம் ஏற்பட்டால், எமபெருமான பிராட்டியோடு கூடியிருப்பவன் என்று அநுஸந்தி₄க்கவேண்டுமென்றும், உபாயாந்தரஸ்பர்ஶம் ஏற்பட்டால் ஸித்₃தே₄ாபாயமான் எம்பெருமானே வேறெதையும் எதிர்பாராமல் பரம புருஷார்த்த₂த்தை அளிப்பவன என்னும் உபாயபூர்த்தியை அநுஸந்தி₄க்கவேணடுமென்றும், விஷயாந்தரங்களின ஸ்பர்ஶம் ஏற்பட்டால் பரம போ₄க்₃யமான ப₄க₃வத்₃தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தை அநுஸந்தி₄க்கவேண்டும் என்றும் கருத்து.

### நானூற்றுப்பன்னிரண்டாம் வார்த்தை

a இவ்வார்த்தையில் சொல்லப்படும் ஏழு அநுஸந்த₄ானங்களாவன — (1) ஸர்வேஶ்வரவிஷயம். தே₃ஹமே ஆத்மா என்னும் நம்முடைய நினைவுபோவதற்கும், தே₃ஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவானது எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டது என்று நமக்கு விளங்குவதற்கும், 'அப்படி அடிமைப்பட்டிருக்கும்போது நம்மை நாம் ரக்ஷித்துக்கொள்ளவும் தகுதியில்லாதபடி பாரதந்த்ர்யத்தின் எல்லையிலே நிற்பவர்கள் நாம்' என்று அறிவதற்கும், இப்படி பரதந்த்ரனாயிருக்கும் நமக்கு ஸ்வரூபத்துக்குத் தகுந்த புருஷார்த்த₂மான பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யங்கள் ஏற்படுவதற்கும், இந்தப் புருஷார்த்த₂த்துக்குத் தடையான அஹங்காரமமகாரங்கள் நீங்குவதற்கும் எம்பெருமான் ஒருவனே உபாயம் என்று எல்லாப்படியாலும் ரக்ஷிக்குமவனான ஸர்வேஶ்வரனை அநுஸந்தி₄க்கவேண்டும்.

மஹோபகாரகனான ஆசார்யன் விஷயமாகவும், உத்$_3$தே$_3$ஶ்யரான ஶ்ரீவைஷ்ணவர்கள் விஷயமாகவும், த்யாஜ்யரான ஸம்ஸாரிகள்விஷயமாகவும், ஸ்வஶரீரவிஷயமாகவும், ஶரீரஸம்ப$_3$ந்தி$_4$கள் விஷயமாகவும் பிறக்கும்அநுஸந்தா$_4$நம்;-தே$_3$ஹாத்மாபி$_4$மாந நிவ்ருத்திக்கும், தே$_3$ஹாத்$_3$வ்யதிரிக்தனான ஆத்மாவினுடையஅநந்யார்ஹஶேஷத்வ ப்ரகாஶத்துக்கும்,ஶேஷபூ$_4$தனுக்கு ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யத்தினுடைய எல்லைக்கும், இப்படி பரதந்த்ரனானவனுக்கு ஸ்வரூபப்ராப்தமான புருஷார்த்த$_2$ஸித்$_3$தி$_4$க்கும், இப்புருஷார்த்த$_2$த்துக்கு இடைச்சுவரான அஹங்காரமமகார நிவ்ருத்திக்கும் அவனே உபாயமென்று,ஸர்வப்ரகாரரக்ஷகனான ஸர்வேஶ்வரனை அநுஸந்தி$_4$ப்பது; இப்படி ரக்ஷகனான ஈஶ்வரனுடைய கழற்றவொண்ணாத ஸ்வாதந்த்ர்யத்தைத் தலைசாயப்பண்ணி, இவ்வதி$_4$காரியுடைய அபராத$_4$ம் அவன் ஹ்ருத$_3$யத்திலே படாதபடிபண்ணி, அவனுடைய ஶீலாதி$_3$ஸ்வபா$_4$வங்களை ப்ரகாஶிப்பித்து ரக்ஷிக்குமென்று பிராட்டியை அநுஸந்தி$_4$ப்பது ; இம்மிது$_2$நத்தோடு கழற்றவொண்ணாத ஸம்ப$_3$ந்த$_4$த்தையும், இஸ்ஸம்ப$_3$ந்த$_4$த்துக்கு அநுரூபமாய், ஸ்வரூபாநுரூபமான

---

(2) **பிராட்டிவிஷயம்.** இப்படி ரக்ஷிக்கும் எம்பெருமானுடையதாய், அவனாலும் கழற்றமுடியாததான ஸ்வாதந்த்ர்யத்தை அமுங்கியிருக்கும்படி பண்ணி, ஶரணமடைபவனுடைய குற்றங்கள் அவன் நெஞ்சில் படாதபடி பண்ணி, ஸ்வாதந்த்ர்யத்தாலே அமுங்கியிருக்கும் ஸௌஶீல்யம் (நீர்மை), ஸௌலப்$_4$யம் (எளிமை), வாத்ஸல்யம் (குற்றங்களையும் கு$_3$ணங்களாகக்கொள்ளும் தன்மை), ஸ்வாமித்வம் (உடையவனாயிருக்கும் தன்மை) என்னும் எம்பெருமான் தன்மைகளை வெளிப்படுத்தி, சேதனன் அநாதி$_3$காலமாகச் சேர்த்துவைத்திருக்கும் பாபங்களை எம்பெருமானைப் பொறுக்கச்செய்து ரக்ஷிப்பவள் பெரியபிராட்டியார் என்று அநுஸந்தி$_4$க்கவேண்டும். (3) **ஆசார்யவிஷயம்.** இப்படி பிராட்டியும் பெருமாளுமான மிது$_2$னத்தோடு சேதனனுக்கு ஒழிக்கவொண்ணாத தொடர்பையும், இந்தத் தொடர்புக்குப் பொருத்தமானதாய், சேதன ஸ்வரூபத்துக்கும் தகுந்ததான ஜ்ஞானத்தையும்

ஜ்ஞாநவர்த்த$_4$கனென்று ஆசார்யனை அநுஸந்தி$_4$ப்பது; ஸஹவாஸயோக்$_3$யரென்றும், ப்ராப்யாந்தர்க்க$_3$தரென்றும் ஸ்ரீவைஷ்ணவர்களை அநுஸந்தி$_4$ப்பது; ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ விரோதி$_4$களென்றும், பா$_4$க$_3$வதஸம்ஶ்லேஷவிரோதி$_4$களென்றும் ஸம்ஸாரிகளை அநுஸந்தி$_4$ப்பது; ப$_4$க$_3$வத்$_3$ஜ்ஞாநவிரோதி$_4$யென்றும், விபரீதஜ்ஞாநத்திலே அந்வயிப்பிக்குமென்றும், தன் பக்கலிலே போ$_4$க்$_3$யபு$_3$த்$_3$தி$_4$யைப் பிறப்பிக்குமென்றும் ஶரீரத்தை அநுஸந்தி$_4$ப்பது; ப$_4$க$_3$வத்ப்ராவண்ய விரோதி$_4$களென்றும், அர்த்த$_2$காமாபி$_4$மாநங்களை வர்த்தி$_4$ப்பிப்பார்களென்றும் ஶரீரஸம்ப$_3$ந்தி$_4$களை அநுஸந்தி$_4$ப்பது. b ந்யாயார்ஜிதமான த$_4$நத்தாலே க்ஷுந்நிவ்ருத்திமாத்ரத்திலே பர்யாப்தனாய்ப்போருவது; இப்படிப்பட்ட ஆத்மகு$_3$ணங்கள் ஆசார்யகடாக்ஷத்தாலும் எம்பெருமான் விஷயீ

---

வளர்த்துப் பேருபகாரம் புரிபவன் என்று ஆசார்யனை அநுஸந்தி$_4$க்க வேணும். (4) **ஸ்ரீவைஷ்ணவவிஷயம்.** இவ்விபூ$_4$தியில் ஸஹவாஸத்துக்கு (கூடிவாழ்வதற்குத்) தக்கவர்களாய், இங்கும் அங்கும் நமக்குப் ப்ராப்யத்தின் எல்லைநிலமாயிருப்பவர்களாய் உள்ளவர்கள் என்று ஸ்ரீவைஷ்ணவர்களை அநுஸந்தி$_4$க்கவேண்டும். (5) **ஸம்ஸாரிகள் விஷயம்.** எம்பெருமானை அநுப$_4$விப்பதற்குத் தடையாயிருப்பவர்கள் என்றும், அவன் அடியார்களோடு கூடியிருப்பதற்குத் தடையாயிருப்பவர்கள் என்றும் அதனாலேயே விலக்கத்தக்கவர்களென்றும் ஸம்ஸாரிகளை அநுஸந்தி$_4$க்கவேண்டும். (6) **ஸ்வஶரீரவிஷயம்.** எம்பெருமானை அறிவதற்குத் தடையாயிருப்பது என்றும், விபரீதஜ்ஞானத்தை விளைத்துவிடக்கூடியது என்றும், தன்னையுடைய ஆத்மாவுக்குத் தன்னையே இனியதாகக் காட்டிவிடும் என்றும் தன் ஶரீரத்தை அநுஸந்தி$_4$க்கவேண்டும். (7) **ஶரீரஸம்ப$_3$ந்தி$_4$கள்விஷயம்.** எம்பெருமானிடம் ஈடுபடுவதற்குத் தடையாயிருப்பவர்கள் என்றும், பொருள், இன்பம் என்னும் புருஷார்த்த$_2$ங்கள் விஷயமாக சுயநலமனப்பான்மையை வளர்த்துவிடுவார்களென்றும் ஶரீரஸம்ப$_3$ந்தி$_4$களான கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவரை நினைக்கவேண்டும். b ஸ்ரீவைஷ்ணவனுடைய ஒழுக்கங்களாவன:— (1) நியாயவழியில் ஈட்டிய பொருளைக்கொண்டு பசியைப் போக்கிக்கொள்ளுமளவோடு திருப்தியடையவேண்டும். (2) இதுபோன்ற நற்குணங்கள் ஆசார்யனுடைய கடாக்ஷத்தாலும் அதற்கு மூலமான எம்பெருமானுடைய

காரத்தாலும் உண்டாகக்கடவதாகையாலே, ஆசார்ய விஷயத்தில் க்ருதஜ்ஞதையும், எம்பெருமான் விஷயத்தில் ரக்ஷகத்வ ப்ரதிபத்தியும் ஸர்வகாலமும் நடையாடவும்; கரணத்ரயத்தாலும் ப₄க₃வத்₃ப₄าக₃வத விஷயங்களிலே ஸ்வரூபப்ராப்த கைங்கர்யம் பண்ணவும்; உபகாரகனான ஆசார்யனுக்கு ஸத்₃ருஶஸத்காரமில்லாமையாலே "என்னைத் தீமனங்கெடுத்தாய் உனக்கென்செய்கேன்" என்றும் அநுஸந்தி₄க்கவும்.

## நானூற்றுப்பதின்மூன்றும் வார்த்தை

எம்பெருமானார் ஸ்ரீபாத₃த்திலே ஸம்ப₃ந்த₄முடைய முமுக்ஷுக்களுடைய காலக்ஷேபத்துக்கும் பரமபத₃ப்ராப்திக்கும் ஸாத₄நம் ஈஶ்வரன்க்ருபை என்கிற ப்ரதிபத்தி நழுவாதொழிகையும், அநாதி₃கால வாஸிதபாபநிவ்ருத்திக்கு ஸாத₄நம் பெரியபிராட்டியாருடைய விஶேஷ கடாக்ஷம் என்

---

விஷயீகாரத்தாலுமே உண்டாகக்கூடியவையாகையாலே, ஆசார்ய விஷயத்தில் நன்றியையும் எம்பெருமான் விஷயத்தில் ரக்ஷகன் என்னும் எண்ணத்தையும் எல்லாக் காலத்திலும் கொள்ளவேண்டும். (3) மனோவாக்காயங்களாகிற முக்கரணத்தாலும் எம்பெருமான் விஷயத்திலும் அவனடியார் விஷயத்திலும் நம் ஸ்வரூபத்துக்குத் தக்கதான கைங்கர்யம் செய்யவேண்டும். (4) பேருபகாரம் புரிந்த ஆசார்யன் விஷயத்தில் தக்க கைம்மாறு இல்லாமையாலே "என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கேன்" [திருவாய் 2-7-8] என்று அநுஸந்தி₄க்கவேண்டும்.

**நானூற்றுப்பதின்மூன்றும் வார்த்தை**

எம்பெருமானார் திருவடி ஸம்ப₃ந்த₄முடைய முமுக்ஷுக்களுடைய காலக்ஷேபத்துக்கும், பரமபத₃ப்ராப்திக்கும் உறுப்பாக அவர்களிடம் இருக்கவேண்டிய தன்மைகளைச் சொல்லுகிறது இவ்வார்த்தை. அவையாவன — (1) பரமபுருஷார்த்த₂ஸாத₄னம் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையே என்கிற நினைவு நழுவாமலிருக்கை. (2) அநாதி₃காலமாக வாஸனாப₃லத்தாலே தொடர்ந்துவரும் நம்முடைய பாபங்கள் போவதற்கு நம்மை அருளாலேயும் எம்பெருமானை அழகாலேயும் திருத்தும் பெரியபிராட்டியாருடைய விஶேஷகடாக்ஷமே ஸாத₄னம் என்று நினைத்திருக்கை. (3) இந்த அர்த்த₂த்தை உப

றிருக்கையும், இவ்வர்த்த₂ம் உபதே₃ஶிக்கும் ஆசார்ய விஷயத்தில் ப்ரத்யுபகார நிரபேக்ஷோபகாரஸ்ம்ருதி கண்ணழிவற உண்டாகையும், இவ்வர்த்த₂த்தோடு ஸம்ப₃ந்த₄முடைய ஶ்ரீவைஷ்ணவர்களளவில் தனக்கு ஶிஷ்யத்வமாகிற முறை தப்பாதிருக்கையும், தே₃வதாந்தரஸ்பர்ஶத்தை தூ₃ரதோ வர்ஜநீயமாக்குகையும், உத்₃தே₃ஶ்யரான ஶ்ரீவைஷ்ணவர் விஷயத்தில், த்யாஜ்யமான அர்த்த₂காமம் நிமித்தமாக நெஞ்சு தவறாமல் அநுவர்த்திக்கையும், இவ்வதி₄காரிக்கு ஶரீரபாதத்தளவும் ஸ்வரூபாநுரூபமான க்ருத்யம் ப₄க₃வத்₃ ப₄ாக₃வதவிஷயத்தில் பண்ணும் அநுகூலவ்ருத்தி மாறாதொழிகையும், ஈஶ்வரனையும், பிராட்டியையும், ஆசார்யனையும், உத்₃தே₃ஶ்யரான ஶ்ரீவைஷ்ணவர்களையுமொழிய அல்லாத விஷயத்தில் நிஸ்ப்ருஹனாகையும்.

## நானூற்றுப்பதிநாலாம் வார்த்தை

விஷயம் வகுத்த விஷயமானாலும், ஆற்றாமை கரை புரண்டாலும், உபாயம் ப்ரப₃லோபாயமானாலும், ஸ்வஶக்தி

---

தே₃ஶிக்கும் ஆசார்யன்விஷயத்தில் "கைம்மாறு கருதாமல் இப்படிச் சிறந்த அர்த்த₂ங்களை உபதே₃ஶிப்பதே!" என்னும் நன்றியறிவு குறைவற உண்டாகை. (4) இவ்வர்த்த₂த்தை உணர்ந்த ஶ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்தில் தன்னை ஶிஷ்யனாக நினைத்து அதற்குத் தக்கபடி நடந்துகொள்ளுகை. (5) மற்றதெய்வங்களோடு தொடர்பை வெகுதூ₃ரத்தில் விலக்கிவைக்கை. (6) நமக்குப் பரமப்ராப்யர்களான ஶ்ரீவைஷ்ணவர்கள்விஷயத்தில், நாம் விடவேண்டிய அர்த்த₂காம (பொருள் இன்பம்) புருஷார்த்த₂ங்கள் விஷயமாக நம் நெஞ்சு தவறிப்போகாமலும், அவர்கள் நெஞ்சு கன்றாமலும் அவர்களைப் பின்பற்றியிருக்கை. (7) தன் உடல் விழுமளவும் தன் ஸ்வரூபத்துக்குத் தக்க செயலான ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யத்தை இடைவிடாமல் செய்கை. (8) எம்பெருமானையும், பிராட்டியையும், ஆசார்யனையும், பரமப்ராப்யர்களான ஶ்ரீவைஷ்ணவர்களையும் தவிர மற்ற விஷயங்களில் ஆசையற்றிருக்கை.

**நானூற்றுப்பதிநாலாம் வார்த்தை**

ஸீதாபிராட்டியைத் தன் முதுகிலேற்றி ராமபிரானிடம் அழைத்துச் செல்கிறேன் என்று திருவடி (அநுமன்) பிராட்டியிடம் பிரார்த்தி₂த்த

அதி₄காரமாலுலும், ஸ்வரூபாநுரூபமான உபாயத்தாலல்லது பெறக்கடவோமன்றென்கிற அத்₄யவஸாயத்தைச் சொல்லு கிறது—"தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" என்றிருக்கும் இருப்பு.

## நானூற்றுப்பதினஞ்சாம் வார்த்தை

ஆசார்யவிஷயீகாரமோ, ஸ்ரீவைஷ்ணவாங்கீ₃காரமோ, ப₄க₃வத்₃ ப₄ாக₃வதவிஷயத்தில் கைங்கர்யமோ, தன்னுடைய அநுஸந்த₄ாநமோ, ஸம்ஸாரநிவ்ருத்திக்கும் பரமபத₃ ப்ராப் திக்கும் ஹேது? என்னில், இவை நாலுமன்று, அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்திக்கும் ஈஶ்வரன் க்ருபை யென்கிற ப்ரதிபத்தி நழுவாதொழிகை. ஆசார்யவிஷயீகாரம் அஜ்ஞாநத்தைப்போக்கி வெளிச்செறிப்பிக்கும்; ஸ்ரீவைஷ்ண

---

போது "ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரப₃லார்த்த₃ந: | மாம் நயேத்₃யதி₃ காகுத்ஸ்த₂: தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத் ||" [ரா-ஸு 39-30] [எதிரிகளின் ஸைன்யத்தைக் கலக்கவல்லவரான ராமபிரான் தன் அம்புகளால் லங்கையைக் கலங்கச்செய்து என்னை அழைத்துச் செல்வாராகில் அதுவே அவருக்குத் தக்கது] என்று அருளிச்செய்த பிராட்டியின் உபாயாத்₄யவஸாயம் நம்மால் பின்பற்றத் தக்கது. ராமபிரானைப் பெறுவது ஸ்வரூபத்துக்குத் தகுந்தவிஷயம். அவனைப் பெறவேண்டும் என்னும் ஆற்றாமையும் பிராட்டிக்குக் கரை புரண்டு உள்ளது. பிராட்டியை அழைத்துச்செல்ல உறுதியளித்த உபாயமான அநுமனும் வலிமைமிக்கவன். பிராட்டிக்கு எதிர்த்து வரும் அஸுர அரக்கர்களை எரிக்கக்கூடிய ஶக்தியாகிற அதி₄காரமு முண்டு. இப்படியிருந்தபோதிலும் தன் ஸ்வரூபத்துக்குத் தக்க உபாயமான எம்பெருமானே தன்னை ரக்ஷிக்கவேணும் என்னும் உறுதி யைச் சொல்லுகிறது முற்கூறிய ஶ்லோகம் என்று கருத்து.

### நானூற்றுப்பதினஞ்சாம் வார்த்தை

'ஸம்ஸாரமாகிற அநிஷ்டம் நீங்கி, பரமபத₃மடைதலாகிற இஷ்டம் கிடைப்பதற்கு எம்பெருமான் க்ருபையே உபாயம்' என்னும் நினைவு நழுவாமலிருந்தால் அந்த அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் தன்னடையே ஸித்₃தி₄க்கும். ஆசார்யகடாக்ஷம் இவனுடைய அஜ் ஞானத்தைப்போக்கி ஜ்ஞானத்தை உண்டாக்குவதை மாத்திரம் செய்கையாலே உபாயமாகாது. ஸ்ரீவைஷ்ணவர்கள் இவனை அங்கீ₃

வாங்கீ$_3$காரம் ஸத்துக்கள் ஸத்கரிக்கப்பண்ணும்; ப$_4$க$_3$வத்$_3$ ப$_4$ாக$_3$வத விஷயத்தில் கைங்கர்யமும் தன்னுடைய அநுஸந்த$_4$ாநமும் காலக்ஷேபம்.

## நானூற்றுப்பதினாறும் வார்த்தை

ரக்ஷகனுடைய ரக்ஷகத்வம் ஆளிட்டுச் செய்விக்கையாவது-அவனுடைய ஸ்வாமித்வத்துக்குக் கொத்தை; ஶேஷபூ$_4$தனுடைய ஶேஷவ்ருத்தி ஆளிட்டுச் செய்விக்கையாவது-இவனுடைய ஶேஷத்வத்துக்குக்கொத்தை. கொத்தையாக வேண்டுவானென்னென்னில்;- இருவருக்கும் இரண்டும் ஸ்வரூபமாகையாலே.

## நானூற்றுப்பதினேழாம் வார்த்தை

ப$_4$ட்டர், ப்ரபந்நரை அழைத்தருளி, 'உம்மை எல்லாரும் ப்ரபந்நரென்றுநின்றூர்கள், ப்ரபந்நலக்ஷணமிருக்கும்படியென் ?' என்று கேட்க;-அர்த்த$_4$ராத்ரியிலே தனிவழிபோகாநிற்க, து$_3$ஷ்டம்ருக$_3$ங்களாலே மிடைந்ததொரு காட்டிலே முன்னடி தோற்றுதபடி மருண்டு வர்ஷமும் இடியுமுண்டாய்க்

---

கரிப்பது நல்லவர்கள் இவனை உபசரிப்பதற்கே ஹேதுவாகுமாகையால் அதுவும் உபாயமாகாது. ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதவிஷயத்தில் பண்ணும் கைங்கர்யமும், இந்த ஜீவனுடைய ஸ்வரூபாநுஸந்த$_4$ானமும் காலக்ஷேபத்துக்கே உறுப்பாகையால் உபாயமாகமாட்டா என்று கருத்து.

**நானூற்றுப்பதினாறும் வார்த்தை**

ரக்ஷகனான எம்பெருமானுக்கு ரக்ஷகத்வம் ஸ்வரூபமாகையாலே அவன் ஓர் ஆளிட்டு ரக்ஷிக்கச் செய்வது தகாது. ஶேஷபூ$_4$தனான இந்த ஜீவனுக்கு ஶேஷத்வம் ஸ்வரூபமாகையாலே அவன் ஶேஷவ்ருத்தியாகிற கைங்கர்யத்தை ஓர் ஆளிட்டுச் செய்விப்பது தகாது.

**நானூற்றுப்பதினேழாம் வார்த்தை**

ப்ரபந்நர் என்று ப்ரஸித்$_3$த$_4$ரான ஒருவர் ப$_4$ட்டரால் நியமிக்கப்பெற்று, ப்ரபந்நலக்ஷணத்தைத் அருளிச்செய்கிறூர் இவ்வார்த்தையில். நள்ளிரவுவேளை. தனிவழியிலே போகிறுன். போகுமிடமோ து$_3$ஷ்டம்ருக$_3$ங்கள் நிறைந்திருக்கும் காடு. முன்னடிதோற்றுதபடி இருண்டு

கண்ணுக்குள்ளே கொள்ளியை வீசினாற்போலே மின்னிக் கொண்டு வாராநிற்க, அவ்வவஸ்தை₂யில் திருநாமோச்சாரணம் பண்ணுதொழிகை ப்ரபந்நலக்ஷணம் என்றருளினார்.

## நானூற்றுப்பதினெட்டாம் வார்த்தை

திருவேங்கடயாத்ரையாக எழுந்தருளாநிற்க, காட்டிலே ஒருநாளை விடுதியிலே நீராட எழுந்தருளாநிற்க, ஸ்ரீபாத₃த்திலே விஷந்தீண்ட, பரிவராயிருப்பார்கண்டு 'எங்கே விஷந் தீண்டிற்று?' என்ன, 'பொய் ; அந்தச் செடியிலே' என்ன, அவர்களும் லஜ்ஜாவிஷ்டராய்ப்போக, இத்தை அநந்தாழ்வான் கேட்டருளி ப்ரபந்நர் எழுந்தருளினவாறே 'நீர் என் நினைத்து விஷந்தீர்க்கவேண்டாதிருந்தீர்?' என்ன, ப்ரபந்நரும், " 'கடித்த பாம்பு ப₃லவானாகில் விரஜையிலே தீர்த்த₂மாடி ஸ்ரீவைகுண்ட₂ நாத₂னை ஸேவிக்கிறோம், கடியுண்ட பாம்பு ப₃லவானாகில் திருக்கோனேரியிலே தீர்த்த₂மாடி திருவேங்கடமுடையானை ஸேவிக்கிறோம்' என்று நினைத்திருந்தேன்" என்று விண்ணப்பஞ்செய்தார்.

## நானூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

ஒரு விஶேஷதி₃வஸத்திலே பெரிய திருமண்டபத்திலே பெருமாளும் நாய்ச்சிமாரும் புறப்பட்டருளி இருந்து திருத்திரையிட்டு ஏகாந்தமாயிராநிற்க, ப₄ட்டர் திருவடித்தொழவென்று எழுந்தருளித் திருத்திரையை வாங்கினவாறே பெரு

---

*கிடக்கிறது. மழை மிகுதியாகப் பொழிகிறது. இடி முழங்குகிறது. மின்னல் கண்ணைப் பறிக்கிறது. அந்த நிலையிலும் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்வதற்காக எவன் திருநாமஸங்கீர்த்தனங்கூடச் செய்யாமலிருக்கிறானோ அவனே ப்ரபந்நன் என்று கருத்து.*

**நானூற்றுப்பதினெட்டாம் வார்த்தை**

கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் அநந்தாழ்வான் விஷயமாக [பக்கம் 275] சொல்லப்படும் ஐதிஹ்யம் இங்கு அநந்தாழ்வானுக்கு ப்ரபந்நர் சொன்னதாக வந்துள்ளது. 'கடியுண்ட பாம்பு' என்று தே₃ஹத்தைக் குறிக்கிறது. அநந்தாழ்வான் வ்ருத்தாந்தம் பிறகு ஏற்பட்டிருக்கலாம்.

மாள் முனிந்து புறப்படவிடத் திருவுள்ளமாக, இவர் புறப் பட்டவளவிலே 'அவனை அழையுங்கோள்' என்று திருவுள்ள மாக, 'அருள்பாடு' என்றவளவிலே இவரும் வந்து திரு வடித்தொழ, 'நாம் புறப்படச் சொன்னபோது என்ன நினைந் திருந்தாய்' என்று கேட்டருள, பெருமாளும் நாய்ச்சிமாரு மாக நினைத்திருந்தேனென்ன, நம்மை முன்பு என்ன நினைத் திருப்பதென்று கேட்டருள, முன்பு ஆழ்வாரும் ஆண்டாளு மாக நினைத்திருப்பனென்ன; 'நம்மாணையே, நம்மை முன்பு போலே நினைத்திரு' என்று திருவுள்ளமாயருளினார்.

## நானூற்றிருபதாம் வார்த்தை

வைஷ்ணவத்வமாவது - வைஷம்யஜ்ஞாநம். அதாவது— வாசியறிகை. கு₃ருக்களுக்கும் ஸத்₃கு₃ருவுக்குமுள்ளவாசி யும், தே₃வதாந்தரங்களுக்கும் பரதே₃வதைக்குமுள்ள வாசி யும், மந்த்ராந்தரத்துக்கும் மந்த்ரரத்நத்துக்குமுள்ள வாசியும், தே₃ஹத்துக்கும் ஆத்மாவுக்குமுள்ள வாசியும், உபாஸக னுக்கும் ப்ரபந்நனுக்குமுள்ள வாசியும், ஸாத₄நாந்தரங்க ளுக்கும் ஸித்₃த₄ஸாத₄நத்துக்குமுள்ள வாசியும், பரத் வத்துக்கும் அர்ச்சாவதாரத்துக்குமுள்ள வாசியும், ஸம் ஸாரிகளுக்கும் வைஷ்ணவனுக்குமுள்ள வாசியும், ஆத்மா வுக்கும் ஈஶ்வரனுக்குமுள்ள வாசியும், புருஷார்த்த₂ாந்தரங்க ளுக்கும் பரமபுருஷார்த்த₂த்துக்குமுள்ள வாசியும் அறிகை.

---

### நானூற்றுப்பத்தொன்பதாம் வார்த்தை

கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் [ பக்கம் 235ல் ] இவ்வைதிஹ்யம் வந்துள்ளது. தெளிவாயுள்ளது.

### நானூற்றிருபதாம் வார்த்தை

பல பொருள்களுக்கிடையே வாசியறிகையே வைஷ்ணவத்வமாவது. வாசியறியவேண்டிய பொருள்களாவன—(1) அக்ஷராப்₄யாஸம் செய் வித்தவன் முதல் ரஹஸ்யத்ரயமொழிந்த மற்ற ப₄க₃வந்மந்த்ரங்களை உபதே₃ஶித்தவன் ஈறாக லௌகிகவைதி₃கஜ்ஞானங்களை அளித்த கு₃ருக்கள் (ஆசார்யர்கள்) இவனுக்கு ஸம்ஸாரத்தைப் பூண்கட்டு பவர்களாய் அஜ்ஞானத்தை (ஜ்ஞானமின்மை, அந்யதா₂ஜ்ஞானம், விபரீதஜ்ஞானம் ஆகியவற்றை) அளிப்பவர்களாயிருப்பார்கள்.

அதாவது, கு₃ருக்களாகிறார் - ஸம்ஸாரப்ரவர்த்தகருமாய், அஜ்ஞாநப்ரத₃ருமாயிருப்பார்களென்றும், ஸத்₃கு₃ருவாகிறான்-ஸம்ஸாரநிவர்த்தகனுமாய், ஜ்ஞாநப்ரத₃னுமாயிருக்குமென்று மறிகை; தே₃வதாந்தரங்கள் அஜ்ஞராய், அஶக்தராயிருப் பர்களென்றும், பரதே₃வதை ஸர்வஜ்ஞனுமாய், ஸர்வ ஶக்தியுமாயிருக்குமென்றுமறிகை; மந்த்ராந்தரங்கள் ப்ரயோஜ நாந்தர ப்ரவர்த்தகமுமாய், ஸ்வாதந்த்ர்ய ப்ரவர்த்தகமுமா யிருக்குமென்றும், மந்த்ரரத்நம் புருஷார்த்த₂ ப்ரவர்த்தகமு மாய், பாரதந்த்ர்ய ப்ரகாஶகமுமாயிருக்குமென்றும் அறிகை; தே₃ஹம் ஜட₃மாய் பரிணாமியாயிருக்குமென்றும், ஆத்மா ஜ்ஞாநாநந்த₃முமாய் ஏகரூபமாயிருக்குமென்றும் அறிகை; உபாஸகனுக்கு ஆநுகூல்யஸ்ய ஸங்கல்பமும், ப்ராதிகூல் யஸ்ய வர்ஜனமும் வேண்டும்; ப்ரபந்நனுக்கு "அபராத₄நா மாலய: அகிஞ்சந:"என்றிருக்கவேண்டும் என்றறிகை; ஸாத₄

ரஹஸ்யத்ரயத்தை உபதே₃ஶித்த ஸத்₃கு₃ரு ஸம்ஸாரத்தைப் போக்கடிப் பவனாய் ஜ்ஞானத்தை அளிப்பவனாயிருப்பான். (2) மற்ற தெய்வங்கள் ஜ்ஞானத்திலும் குறைந்தவர்களாய், ஶக்தியிலும் குறைந்தவர்களாயிருப் பர்கள். பரதெய்வமான எம்பெருமான் எல்லாமறிந்தவனாய், எல்லாம் வல்லவனாயிருப்பான். (3) ரஹஸ்யத்ரயமொழிந்த மற்ற மந்த்ரங்கள் பரம புருஷார்த்த₂மொழிந்த மற்ற பயன்களை யளிப்பவையாய், ஜீவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தைப் பூண்கட்டுகின்றவையாயிருக்கும். மந்த்ரரத்ன மான த்₃வயமும், அதற்கு மூலமான திருவஷ்டாக்ஷரமும், அதற்கு விவரணமான சரமஶ்லோகமும் பரமபுருஷார்த்த₂த்தை அளிப்பதாய், ஜீவனுடைய பாரதந்த்ர்யத்தை வெளிப்படுத்துவதாயிருக்கும். (4) தே₃ஹம் தானே ப்ரகாஶிக்காத ஜட₃ப்பொருளாய், விகாரத்தையுடைய தாயிருக்கும். ஆத்மா ஜ்ஞானாநந்த₃ஸ்வரூபமாய், ஒருபடிப்பட்டதா யிருக்கும். (5) உபாஸகனாகிற ப₄க்திநிஷ்ட₂னுக்கு—எம்பெருமானுக்கு அனுகூலனாயிருக்கவேணும் எனும் ஆநுகூல்யஸங்கல்பமும், ப்ரதிகூலனா யிராமையாகிற ப்ராதிகூல்யவர்ஜநமும் முக்₂யமான அங்க₃ங்கள். ப்ர பந்நனுக்கு இவை தன்னடையே ஏற்படும் ஸம்ப₄ாவிதஸ்வப₄ாவங்கள்; "அஹமஸ்ம்யபராத₄ாநாமாலயோऽகிஞ்சநோऽக₃தி: ||" [நான் குற்றங் களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன்; என்னை ரக்ஷித்துக்கொள்ள

நாந்தரம் ஸாத்$_4$யமுமாய் ஸாபாயமுமாயிருக்குமென்றும், ஸித்$_3$த$_4$ஸாத$_4$நம் ஸித்$_3$த$_4$முமாய் நிரபாயமுமாயிருக்குமென்றும் அறிகை; பரத்வம் ஸ்வதந்த்ரமுமாய் து$_3$ர்லப$_4$முமாயிருக்குமென்றும், அர்ச்சாவதாரம் ஸுலப$_4$முமாய் ஆஶ்ரித பராதீ$_4$நமுமாயிருக்குமென்றும் அறிகை; ஸம்ஸாரிகள் அநாசாரப்ரவர்த்தகருமாய் து$_3$ர்மாநப்ரத$_3$ர்களுமாயிருப்பர்களென்றும், ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆசாரப்ரவர்த்தகருமாய் து$_3$ர்மாந நிவர்த்தகருமாயிருப்பார்களென்றும் அறிகை; ஆத்மா வ்யாப்யமுமாய் ஶேஷமுமாயிருக்குமென்றும், ஈஶ்வரன் வ்யாபகனுமாய் ஶேஷியுமாயிருக்குமென்றும் அறிகை; புருஷார்த்த$_2$ாந்தரம் அல்பமுமாய் அஸ்தி$_2$ரமுமாயிருக்குமென்றும், புருஷார்த்த$_2$ம்

---

ஒரு கைம்முதலுமற்றவன்; வேறு புகலுமில்லாதவன்] என்கிறபடியே தன்னுடைய ஆகிஞ்சன்யம் அநந்யக$_3$தித்வம் ஆகியவற்றை அநுஸந்தி$_4$ப்பது ப்ரபந்நனுக்கு முக்$_2$யம். (6) ப$_4$க்தி முதலான மற்ற ஸாத$_4$னங்கள், சேதனனுடைய முயற்சியினுல் ஸாதி$_4$க்கப்படுவனவாய் செயற்கரியனவாயிருக்கையாலே நழுவுவதற்கு இடமுள்ளனவாயிருக்கையாலும், ஸ்வரூபத்துக்குத் தகாத ஸ்வார்த்த$_2$ாநுப$_4$வ கைங்கர்யங்களை விளைக்குமவையாகையாலும் அபாயத்தோடு கூடியவையாயிருக்கும். ஸித்$_3$தே$_4$ாபாயமான எம்பெருமான், நம்மால் ஸாதி$_4$க்கவேண்டாதபடி ஸித்$_3$த$_4$னுய், அடைய எளியவனுயிருக்கையாலும், பரமபுருஷார்த்த$_2$மான பரார்த்த$_2$ாநுப$_4$வகைங்கர்யங்களை நிர்ஹேதுக க்ருபையாலே அளிக்குமவனுகையாலும் அபாயமற்ற உபயமாயிருப்பான். (7) எம்பெருமானுடைய பரநிலை ஸ்வதந்த்ரமாய் அடைவதற்கரியதாயிருக்கும். அர்ச்சாவதாரநிலை "அர்ச்சகபராதீ$_4$நாகி$_2$லாத்மஸ்தி$_2$தி:" [ர-ஸ்த 2-71] என்கிறபடியே தன்னுடைய எல்லா வ்யாபாரங்களும் அடியார்களுக்குப் பராதீ$_4$னமாய் அடைவதற்கு எளிதாயிருக்கும். (8) ஸம்ஸாரிகள், இவனுக்கு அநாசாரத்தைப் பழக்குகிறவர்களாய், அஹங்காரத்தை அளிக்குமவர்களாயிருப்பார்கள். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆசாரத்தைப் பழக்குகிறவர்களாய், அஹங்காரத்தை நீக்குமவர்களாயிருப்பார்கள். (9) ஆத்மா எம்பெருமானுல் வ்யாபிக்கப்படுமவனுய், அவனுக்கு ஶேஷமாயிருப்பான். எம்பெருமான் அனைத்தையும் வ்யாபிப்பவனுய் ஶேஷியாயிருப்பான். (10) கைங்கர்யமொழிந்த மற்ற புருஷார்த்த$_2$ங்களில்—ஐஶ்வர்யம் அல்பமாய் நிலைநில்லாததாயிருக்கும்; கைவல்யம் நித்யமாயிருந்தபோதிலும் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வத்தைக் காட்டி

நித்யமுமாய் நிரதிஶயமுமாயிருக்குமென்றும் அறிகையாகிற இது வைஷம்யஜ்ஞாநமாவது.

## நானூற்றிருபத்தோராம் வார்த்தை

ஸ்வரூபாநுகூலமான ரக்ஷகத்வம், ஸ்வரூபாநுகூலமான ஶேஷத்வம், ஸ்வரூபாநுகூலமான ஸேவை, ஸ்வரூபாநுகூலமான ஸஹவாஸம், ஸ்வரூபாநுகூலமான காலக்ஷேபம், ஸ்வரூபாநுகூலமான இருப்பு, ஸ்வரூபாநுகூலமான பரிக்$_3$ரஹம், ஸ்வரூபாநுகூலமான பே$_4$ாஜநம், ஸ்வரூபாநுகூலமான அத்$_4$யவஸாயம், ஸ்வரூபாநுகூலமான அபேக்ஷை என்கிற இவை பத்தும் ஒருவனுக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யமாகக்கடவது.

a ஸ்வரூபாநுகூலமான ரக்ஷகத்வமாவது—தே$_3$ஶரக்ஷகனென்றும், தே$_3$ஹரக்ஷகனென்றும், பத$_3$ார்த்த$_2$ ரக்ஷகனென்றும், பௌருஷ ரக்ஷகனென்றும் சொல்லுகிற ரக்ஷகத்வங்களைத்தவிர்ந்து, தே$_3$ஶ நிவர்த்தகனென்றும், தே$_3$ஹ நிவர்த்தகனென்றும், விஷயநிவர்த்தகனென்றும், பாப நிவர்த்தகனென்றும் பற்றுகை. அதாவது—b (கொடுஉலகம்) என்றஞ்சினவாறே c கலியுகமொன்று மின்றிக்கே தன்னடி

---

லும் அல்பமாயிருக்கும் ; பரமபுருஷார்த்த$_2$மான ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ கைங்கர்யங்களோவெனில் நித்யமுமாய் தனக்குமேலொன்றில்லாததாயிருக்கும். இவ்வளவு வாசிகளாகிற வைஷம்யங்களை அறிவதே வைஷ்ணவத்வமாகும்.

**நானூற்றிருபத்தோராம் வார்த்தை**

a தே$_3$ஶத்தை ரக்ஷிப்பவன் தே$_3$ஹத்தை ரக்ஷிப்பவன் முதலான ப்ரஸித்$_3$தி$_4$களைப்பற்ற அரசன் மருத்துவன் மற்ற தெய்வங்கள் முதலானுரை ரக்ஷகர்களாக நினையாமல், லீலாவிபூ$_4$தியிலிருந்தே நம்மைக் கைதூக்கி எடுக்கக்கூடியவனுய், ஸ்தூ$_2$லஸூக்ஷ்மதே$_3$ஹங்களைப் போக்கடிக்கக்கூடியவனுய், ஶப்$_3$த$_3$ாதி$_3$விஷயங்கள் நலியாமல் அவற்றிலிருந்து நம்மை எடுக்கக்கூடியவனுய், நமன்தமர் நம்மை நலியாமல் பாபத்திலிருந்து நம்மை விடுவிப்பவனுயிருக்கும் எம்பெருமானைப் பற்ற வேண்டும் என்று கருத்து. b [திருவாய் 4.9.7] c [திருவாய் 5-2.11]

யார்க்கருள் செய்யும் ; d (பொல்லா ஆக்கை) என்றஞ்சின வாறே, e செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் ; f (ஐவரறுத்துத்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்) என்ற வாறே g அடியரைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடான்; h (நமன்தமர்செய்யும் வேதனைக்கொடுங்கி நடுங்கினேன்) என்றவாறே, i நமன்தமரென்தமரை வினவப் பெறுவாரல ரென்னும். j (அடியார்படுதுயராயின எல்லாம் நிலந்தரஞ் செய்யும்) என்னக்கடவதிறே. 1.

ஸ்வரூபாநுகூலமான ஶேஷத்வமாவது - இதர ஶேஷ மென்றும், க்$_3$ருஹஶேஷமென்றும், பித்ருஶேஷமென்றும், தே$_3$வதாந்தரஶேஷமென்றும் சொல்லுகிற k ஆப$_4$ாஸ ஶேஷத்வங்களைத் தவிர்ந்து, ஸர்வேஶ்வரனே த$_4$ாரகனென் றும், வ்யாபகனென்றும், ஶரீரியென்றும், ஶேஷியென்றும் பற்றுகை. அதாவது l "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்ன லாலறிகின்றிலேன்" என்றும், m "உன்னைவிட்டெங்ஙனே தரிக்கேன்" என்றும், n " என்னுடை வாழ்நாள் " என்றும், o "அடியரோர்க்ககலலாமே" என்றும் இருக்கை. 2.

ஸ்வரூபாநுகூலமான ஸேவையாவது-சேதநாந்தரஸேவை யையும், தே$_3$வதாந்தரஸேவையையும், ப$_4$க$_3$வத்ஸேவையை யும், p த்$_3$ருஷ்டப்ரயோஜநத்துக்காக ஸேவிக்கையையும், qஅத்$_3$ருஷ்டத்துக்கு ஹேதுவென்று ஸேவிக்கிற ஸேவையையும் தவிர்ந்து, ஸ்வரூபப்ரயுக்தமென்று ஸேவிக்கை. அதாவது- r ' சேவியேனுன்னையல்லால்" என்றும், s "உன்னைச்சேவித்து"

---

d [திருவாய்3-2-3] e [திருவாய் 1-5-7] f [பெரியதிரு 7-7-7] g [திருவாய் 1-7-2] h [பெரியதிரு 1-6-3] i [பெரியதிரு 10-6-5] j [பெரியதிரு 1-1-9] k ஆப$_4$ாஸஶேஷத்வம் - உண்மையான (இயல்வான) ஶேஷ-த்வத்திற்கு எதிர்த்தட்டான செயற்கையான ஶேஷத்வம். l [திருவாய் 10-10-3] m [திருவாய் 7-2-1] n [பெரியதிரு 1-1-6] o [திருமாலை 20] p த்$_3$ருஷ்டப்ரயோஜனம்-இவ்வுலகில் கண்காணக் கிடைக்கும் பயன்க ளான பணம் முதலானவை. q அத்$_3$ருஷ்டத்துக்கு ஹேது-மறுமையில் ஸ்வர்க்க$_3$ம் முதலான தாழ்ந்த பயன்களுக்குக்காரணம். r [திருமாலை35]

நித்யமுமாய் நிரதிஶயமுமாயிருக்குமென்றும் அறிகையாகிற இது வைஷம்யஜ்ஞாநமாவது.

## நானூற்றிருபத்தோராம் வார்த்தை

ஸ்வரூபாநுகூலமான ரக்ஷகத்வம், ஸ்வரூபாநுகூலமான ஶேஷத்வம், ஸ்வரூபாநுகூலமான ஸேவை, ஸ்வரூபாநுகூலமான ஸஹவாஸம், ஸ்வரூபாநுகூலமான காலக்ஷேபம், ஸ்வரூபாநுகூலமான இருப்பு, ஸ்வரூபாநுகூலமான பரிக்$_3$ரஹம், ஸ்வரூபாநுகூலமான பே$_4$ாஜநம், ஸ்வரூபாநுகூலமான அத்$_4$யவஸாயம், ஸ்வரூபாநுகூலமான அபேக்ஷை என்கிற இவை பத்தும் ஒருவனுக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யமாகக்கடவது.

a ஸ்வரூபாநுகூலமான ரக்ஷகத்வமாவது—தே$_3$ஶரக்ஷகனென்றும், தே$_3$ஹரக்ஷகனென்றும், பதா$_3$ர்த்த$_2$ ரக்ஷகனென்றும், பௌருஷ ரக்ஷகனென்றும் சொல்லுகிற ரக்ஷகத்வங்களைத்தவிர்ந்து, தே$_3$ஶநிவர்த்தகனென்றும், தே$_3$ஹநிவர்த்தகனென்றும், விஷயநிவர்த்தகனென்றும், பாபநிவர்த்தகனென்றும் பற்றுகை. அதாவது—b (கொடுஉலகம்) என்றஞ்சினவாறே c கலியுகமொன்று மின்றிக்கே தன்னடி

லும் அல்பமாயிருக்கும்; பரமபுருஷார்த்த$_2$மான ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ கைங்கர்யங்களோவெனில் நித்யமுமாய் தனக்குமேலொன்றில்லாததாயிருக்கும். இவ்வளவு வாசிகளாகிற வைஷம்யங்களை அறிவதே வைஷ்ணவத்வமாகும்.

**நானூற்றிருபத்தோராம் வார்த்தை**

a தே$_3$ஶத்தை ரக்ஷிப்பவன் தே$_3$ஹத்தை ரக்ஷிப்பவன் முதலான ப்ரஸித்$_3$தி$_4$களைப்பற்ற அரசன் மருத்துவன் மற்ற தெய்வங்கள் முதலானுரை ரக்ஷகர்களாக நினையாமல், லீலாவிபூ$_4$தியிலிருந்தே நம்மைக் கை தூக்கி எடுக்கக்கூடியவனுய், ஸ்தூ$_2$லஸூக்ஷ்மதே$_3$ஹங்களைப் போக்கடிக்கக்கூடியவனுய், ஶப்$_3$த$_3$ாதி$_3$விஷயங்கள் நலியாமல் அவற்றிலிருந்து நம்மை எடுக்கக்கூடியவனுய், நமன்தமர் நம்மை நலியாமல் பாபத்திலிருந்து நம்மை விடுவிப்பவனுயிருக்கும் எம்பெருமானைப் பற்ற வேண்டும் என்று கருத்து. b [திருவாய் 4.9.7] c [திருவாய் 5-2-11]

புண்யக்ஷேத்ரவாஸமும் யோக்₃யதைக்கு உறுப்பென்றும் இருக்கிற இருப்பைத் தவிர்ந்து, தே₃ஶத்திலே ப்ரேமம் பிறக்கைக்கென்றும், தே₃ஶிகனை நித்யஸேவை பண்ணவாமென்றும், தே₃ஶவர்த்த₄கரான ஸாத்விகரோடே கலந்து பரிமாறுகைக்கென்றும், விபரீதங்கள் புகுராத இடமென்றுமிருக்கை, அதாவது - e "தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கி" என்றும், f "அதனுட்கண்ணு" என்றும், g "கற்றூர்சேர்கண்ணபுரம்" என்றும், h "விளைந்த தானியமும் இராக்கதர் மீது கொள்ளகிலார்கள்" என்றுமிருக்கை. 6.

ஸ்வரூபாநுகூலமான பரிக்₃ரஹமாவது - அநுகூலரை நெருக்கி ஸ்வீகரிக்கையும், ப்ரதிகூலர்பக்கல் ஸாபேக்ஷனாய் ஸ்வீகரிக்கையும், i ஸ்வரூப ப்ரயுக்தமானவற்றை பதா₃ர்த்த₂ங்களுக்கு உறுப்பாக்கி ஸ்வீகரிக்கையும், அமுதுபடி சாத்துப்படிக்கு அர்ஹமானவற்றையும் பரிக்₃ரஹிக்கை தவிர்ந்து, j க்ருஷி பண்ணுதல், k முஷ்டிபுகுதல், l ஶிஷ்யன் ப்ரீதியாலே தருமத்தையாதல், m ஸாத்விகர் திருவுள்ள ப்ரஸந்நத்தாலே தருமத்தையாதல் பரிக்₃ரஹிக்கை. அதாவது – $j_2$ (மெய் வருத்திக் கைசெய்துய்ம்மினோ) $k_2$ (பிச்சை புக்காகிலும் எம்

---

நீங்குவதற்கு உறுப்பான இடமென்றும், தன் ஜாதியைச் சேர்ந்தவர்கள், உறவுமுறையாரோடு பிரியப்பொருமல் கூடிவாழ்வதற்கு உறுப்பான இடமென்றும், நமக்கு மோக்ஷமடைவதற்குத் தகுதியை விளைக்கும் புண்யக்ஷேத்ரங்களாகிற இடமென்றும் இருக்கிற இருப்பைத் தவிர்ந்து, எம்பெருமான் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் தி₃வ்யதே₃ஶங்களில் அன்பு உண்டாவதற்கும், ஆசார்யனுக்கு எப்போதும் கைங்கர்யம் பண்ணுவதற்கும், தி₃வ்யதே₃ஶத்துக்குச் சிறப்பைச் செய்யும் ஸாத்விகர்களோடு கலந்து பரிமாறுவதற்கும் உறுப்பென்றும், ப₄க₃வத்₃ப₄க₃வதாஸஹ்யாபசாரங்கள் முதலான விபரீதங்கள் உட்புகாத இடமென்றும் ஓரிடத்திலிருப்பதே ஸ்வரூபாநுகூலமான இருப்பாவது. e [பெரியதிரு 1-1-6] f [திருவாய் 9-6-7] g [பெரியதிரு 8-10-5] h [பெரியாழ்திரு 4-4-8] i ஸ்வரூபத்துக்குத் தக்கவையான அருளிச்செயல் ஸேவை முதலானவற்றைப் பணத்துக்கு உறுப்பாக்கி ஸ்வீகரிக்கை. j, k, l, m ஆகியவற்றுக்கு $j_2$, $k_2$, $l_2$, $m_2$ ஆகியவை முறையே ப்ரமாணங்கள். $j_2$ [திருவாய் 3-9-6] $k_2$ [பெரியாழ்திரு 4-6-3] $l_2$ "ஶரீரமர்த்த₂ம் ப்ராணஞ்ச ஸத்₃கு₃ருப்₄யோ

பிரான் திருநாமமே நச்சுமின்) $l_2$ (ஶரீரமர்த்த₂ம் ப்ராணஞ்ச) $m_2$ (வருவிருந்தை அளித்திருப்பார்) என்கிறவர்களுடைய பத₃ார்த்த₂ங்களை ஸ்வீகரிக்கை. 7.

ஸ்வரூபாநுகூலமான போ₄ஜநமாவது - க்₂யாதியைப் பற்றவாதல், பூஜையைப்பற்றவாதல், 'என்னது நானிடுகிறேன்' என்றுதல் இடுகிற போ₄ஜநத்தைத் தவிர்ந்து, n (நெய்யமரின்னடிசில்) என்றும், o (நல்லதோர் சோறு) என்றும், p (மாற்றிலி சோறு) என்றும், q(உண்ணுஞ்சோறு) என்றும் சொல்லுகிறவற்றை பு₄ஜிக்கை. 8.

r ஸ்வரூபாநுகூலமான அத்₄யவஸாயமாவது - இவ்வருகுண்டான ரக்ஷகஸ்வீகாரங்களன்றியே, ஸ்வரூப விரோதி₄ நிவ்ருத்தி பூர்வகமான புருஷார்த்த₂த்தைத் தருமென்கிற விஶ்வாஸம். அதாவது s (களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்) என்றும், t (நீதாராய் பறை) என்றும், u (உன்னலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்) என்றும், v ( நின்னருளே புரிந்திருந்தேன் ) என்றும் இருக்கை.

ஸ்வரூபாநுகூலமான அபேக்ஷையாவது - புத்ரபஶ்வந்நாதி₃ பத₃ார்த்த₂த்தையும், ஸ்வர்க்கை₃ஶ்வர்யபுருஷார்த்த₂த்தையும், கைவல்ய புருஷார்த்த₂த்தையும், ப₄க₃வத₃நுப₄வத்தைத் தனக்கினிதென்று பு₄ஜிக்கிற பத₃ார்த்த₂ங்களையும் த்விர்ந்து, w (மாகவைகுந்தம் காண்பதற்கு என் மனம்

---

நிவேத₃யேத்" [உடல் பொருள் ஆவிகளை நல்லாசிரியர் பொருட்டு ஸமர்ப்பிக்கவேண்டும்.] $m_2$ [பெரியாழ்-திரு 4-8-2] n [திருவாய் 6-8-2] o [திருப்பல்லாண்டு 8] p [பெரியாழ்-திரு 4-4-10] q [திருவாய் 6-7-1] r எம்பெருமானையொழிந்த மற்றுள்ளாரை ரக்ஷகராக ஏற்கையன்றியே, ஸ்வரூபத்துக்குத் தடையைப்போக்கி, பரமபுருஷார்த்த₂த்தை எம்பெருமானே தருவான் என்னும் நம்பிக்கையோடிருக்கை ஸ்வரூபாநுகூலமான அத்₄யவஸாயம் ( உறுதி ) ஆகும். s [திருவாய் 5-8-8] t [திருப்பாவை 28] u [திருவாய் 5-8-3] v [பெரியாழ்-திரு 5-4-1]

ஏகமெண்ணும்) என்றும், x (அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்றுகொலோ) என்றும், y (காண்பதென்ஞ் ஞான்றுகொலோ) என்றும், z (வழுவிலா அடிமைசெய்ய வேண்டும்) என்றும்அபேக்ஷிக்கை—என்றுஆச்சான்பிள்ளை.10.

## நானூற்றிருபத்திரண்டாம் வார்த்தை

தெண்மை, திறமை, சதிர், இளிம்பு இவை நாலும் ஒரு அதி₄காரிக்கு அவஶ்யம் அநுஸந்தே₄யம். தெண்மை யாவது - தத்வத்ரய விஷயஜ்ஞாநமும், ப்ராப்யப்ராபக விஷய ஜ்ஞாநமும். திறமையாவது - உபாயாத்₄யவஸாயஜ்ஞாநம். சதிராவது - நெஞ்சில் நினைத்ததொழிய வாக்கு(வாயால்) சொல்லுகை. அதாவது - ஸம்ஸாரத்திலேயிருக்கும் நாள் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தை நினைத்திருக்கும்படி; தன் க்₃ரு-ஹத்திலே ராஜமநுஷ்யன் வந்துவிட்டு ஆள்விட்டு நலியா நின்றால், தனக்கு அவ்விருப்பில் நசையாலே போகமாட்டான்;

---

w [திருவாய் 9-3-7] x [திருவாய் 2-3-10] y [திருவாய் 5-9-5]
z [திருவாய் 3-3-1]. இது பெரியவாச்சான்பிள்ளை வார்த்தை.

### நானூற்றிருபத்திரண்டாம் வார்த்தை

தெண்மை (தெளிவு), திறமை, சதிர் (சாதுர்யம்), இளிம்பு (எளிமை) எனும் இந்த நாலும் ப்ரபந்நனுக்கு அவச்யம் ஆராய்ந்து கைக்கொள்ளவேண்டிய கு₃ணங்கள். (1) தெண்மையாவது - தத்வ த்ரயவிஷயமாகவும், ப்ராப்யப்ராபகவிஷயமாகவும் தெளிந்த அறிவு. (2) திறமையாவது - எம்பெருமானே உபாயமென்னும் உறுதி. (3) சதிராவது - நெஞ்சில் நினைத்தவற்றையெல்லாம் சொல்லாமல் எது சொல்லத் தக்கதோ அதை மாத்திரம் வாயால் சொல்லும் சாதுர்யம். இந்தச் சாதுர்யத்தை இந்த ஸம்ஸாரமண்ட₃லத்தில் இருக்கும்வரை யில் ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄த்தால் ஏற்படும் உறவினர்களிடம் இவன் காட்டவேண்டும். இதற்கு ஒரு த்₃ருஷ்டாந்தம் காணலாம். ஒரு க்₃ருஹஸ்த₂ன் வீட்டிற்கு வரிவசூலிப்பது முதலான கார்யங்க ளுக்காக ஸேவகர்களோடு ராஜமநுஷ்யன் வந்து ஸேவகர்களைக் கொண்டு க்₃ருஹஸ்த₂னை ப₄யமுறுத்துவது முதலானவற்றைச் செய்யும்போது, வீட்டைவிட்டு ஓடிவிடக்கூடிய வைராக்₃யமில்லாமை யாலும், பற்றினாலும் க்₃ருஹஸ்த₂ன் வீட்டைவிட்டும் போகமாட்டான்.

ராஜமநுஷ்யனுகையாலே புறப்படவிடமாட்டான், இனியுள்ளது அகவாயில் அவன் போகைக்குத் திருவிளக்கு ப்ரதிப₂லியா நிற்கப் புறவாயிலே ப்ரீதிவசநம் பண்ணுமாபோலே, ப்ரக்ருதி ப₃ந்து₄க்களும் நாராயணன் வரவிடவந்தவர்களாகை யாலே—இவர்களளவில் "யதா₂ பரக₃தா நாரீ" என்றும், "பத்₃மபத்ரமிவாம்ப₄ஸி" என்றும், "கண்டதோடு பட்ட தல்லால்" என்றுமிருக்குமத்தனையல்லது - வேறுசெய்யலாவ தில்லை; இளிம்பாவது-உத்₃தே₃ஶ்யர் சொன்னவார்த்தைக்கு உடன்படுகை.

## நானூற்றிருபத்துமூன்றும் வார்த்தை

ப₄க₃வத்ஸந்நிதி₄யில் "அபராத₄ நாமாலய: அகிஞ்சந:" என்று அநுஸந்தி₄ப்பான்; ஆசார்யன் ஸந்நிதி₄யில் அஜ்

---

ராஜமநுஷ்யனுகையாலே வந்தவனை விரட்டவும் க்₃ருஹஸ்த₂னுக்கு வல்லமையில்லை. ஆகையால் ராஜமநுஷ்யன் போவதற்கு என்ன வழி செய்யலாமென்று நெஞ்சிலே நினைவுகள் ஓடியபோதிலும் வெளிப்படை யாக அவனுக்கு நல்வார்த்தை சொல்லி உபசரிப்பதுபோலே, நாரண னுல் அனுப்பப்பட்ட ப்ராக்ருத ப₃ந்து₄க்களான உறவினர்களிடமும் இவன் நடந்துகொள்ளவேணும். இவர்களை விட்டு விலகினுல் ப₄க₃வத்₃ப₄ாக₃வதகைங்கர்யத்துக்குறுப்பாக இவன் வாழ்வதும் அரிதாகிவிடும் ராஜமனுஷ்யர்களைப்போலே நாராயணனுல் பிணைக்கப் பட்ட உறவினர்களாகையாலே அவர்களை விரட்டி உறவறுத்துக் கொள்வதும் தகாது. ஆகையால் அவர்கள் விஷயத்தில் "தாமரை யிலைத் தண்ணீர்போல்" "கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்று யாதுமில்லை" [திருவாய் 9-1-1] என்கிறபடியே பட்டும் படாதும் இருந்து முடிந்தவரையில் ப₄க₃வத்₃ப₄ாக₃வத கைங்கர்யத்துக்கு உறுப்பாக்கவேணும். (4) இளிம்பாவது—தனக்கு வேண்டியவர்க ளான ஸ்ரீவைஷ்ணவர்கள் சொன்ன வார்த்தைக்கு உடன்படுகையாகிற எளிமை.

**நானூற்றிருபத்துமூன்றும் வார்த்தை**

ப்ரபந்நன், எம்பெருமான் திருமுன்பே அவனை உபாயமாகப் பற்றும்போது "அஹமஸ்ம்யபராத₄நாமாலய: அகிஞ்சந அக₃தி:"

ஞதையையும் ஆர்த்தியையும் அநுஸந்தி₄ப்பான்; ஸ்ரீவைஷ்ண வர்கள் ஸந்நிதி₄யில் தன்னுடைய ஶேஷத்வத்தையும் பார தந்த்ர்யத்தையும் அநுஸந்தி₄ப்பான்; ஸம்ஸாரிகள் நடுவே தனக்கு இனிமையையும் பூர்த்தியையும் அநுஸந்தி₄ப்பான். "அமர்யாத₃:" a கண்டவா திரிதந்தேன்; "க்ஷுத்₃ர:" b அற்ப சாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன்; "சலமதி:" c நின்ற வாநில்லா நெஞ்சினையுடையேன்; "அஸூயாப்ரஸவபூ₄:" d தீவிளி விளிவன் வாளா; "க்ருதக்₄ந:" e செய்ந்நன்றி குன்றேல்மின்; "து₃ர்மாநீ" f சதிரமென்று தம்மைத்தாமே சம்மதித்து; "ஸ்மரபரவஶ:" g மாரனார் வரிவெஞ்சிலைக்காட் செய்யும் பாரினூர்; "வஞ்சநபர:" h சூதனாய்க்கள்வனாகி; "ந்ருஶம்ஸ:" i கொன்றேன் பல்லுயிரை; "பாபிஷ்ட₂:" j ஒப்பிலாத்தீவினையேன்; "கத₂மஹமித:" k என் நான்

[அஹிர் 37-30] [நான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன். உன்னைப் பெறுவதற்குக் கைம்முதல் எதுவுமில்லாதவன். வேறுபுகலு மற்றவன்] என்று தன்னுடைய வெறுமையை அநுஸந்தி₄க்கவேணும். இதையே ஆளவந்தார் "அமர்யாத₃:" என்று தொடங்கும் ஸ்தோத்ர ரத்ன [62] ஶ்லோகத்தில் அநுஸந்தி₄த்தார். இந்த வார்த்தையின் கடைசியில் அந்த ஶ்லோகத்தின் ஒவ்வொரு பத₃த்திற்கும் நேரான அருளிச்செயல் பாசுரங்கள் கொடுக்கப்படுகின்றன. ஆசார்யன் திருமுன்பே தன்னுடைய அறிவின்மையையும், ஸம்ஸாரத்தைவிட்டு நீங்குவதிலும் எம்பெருமானைப்பெறுவதிலும் தனக்குள்ள த்வரையையும் விண்ணப்பிக்கவேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமுன்பே அவர்களுக்குச் சிறப்பளிப்பதற்காகவே தான் ஏற்பட்டவன் என்று தன்னுடைய ஶேஷத்வத்தையும், அவர்கள் இட்ட வழக்காயிருப்பவன் என்று தன் பாரதந்த்ர்யத்தையும் அநுஸந்தி₄க்கவேண்டும். ப₄க₃வத்₃விஷயத்தில் ஈடுபாடில்லாத ஸம்ஸாரிகள் நடுவில் வாழும்போது, அதில் ஈடுபாடிருக்கையாலே தனக்குள்ள இனிமையையும், நிறைவையும் அநுஸந்தி₄க்க வேண்டும். இனி "அமர்யாத₃:" முதலான ஸ்தோத்ரரத்ன [62] ஶ்லோகத்தின் பத₃ங்களுக்கு நேரான அருளிச்செயல்கள் பின்வருமாறு.
a [பெரியதிரு 1-1-5] b [திருவாய் 3-2-6] c [பெரியதிரு 1-1-4] d [திருமாலை 30] e [பெரியதிரு 11.6-1] f [திருவாய் 9-1.5] g [பெருமாள் திரு 3-3] h [திருமாலை 16] i [பெரியதிரு 1-9-3] j [திருவாய் 7-9.4] k [திருவாய்5-8-3] l [நாச்-திரு 5.4] m [திருவாய் 6-10-6].

செய்கேன்; "து₃:க்க ஜலதே₄ரபாராது₃த்தீர்ண:" l துன்பக் கடல்புக்கு வைகுந்தனென்பதோர் தோணிபெறுதுழல்கின்றேன்; "தவ பரிசரேயம் சரணயோ:" m உன்னடிக்களடியேன் மேவுவதே.

## நானூற்றிருபத்துநாலாம் வார்த்தை

ஈஶ்வரனளவில் உத்தாரகத்வ ப்ரதிபத்தியும், ஆசார்யனளவில் உபகாரகத்வ ப்ரதிபத்தியும், ஸ்ரீவைஷ்ணவர்களளவில் உத்₃தே₃ஶ்ய ப்ரதிபத்தியும், உபாயத்தளவில் அத்₄யவஸாய ப்ரதிபத்தியும், உபேயத்தளவில் த்வராப்ரதிபத்தியும், ஶரீரத்தளவில் விரோதி₄ப்ரதிபத்தியும், ஶரீரஸம்ப₃ந்தி₄களளவில் பிரிவுகாரர் ப்ரதிபத்தியும், இதரரான ஸம்ஸாரிகளளவில் வழிபறிகாரர் ப்ரதிபத்தியும், ஐஶ்வர்யத்தளவில் அக்₃நி ப்ரதிபத்தியும், விஷயத்தளவில் இடி ப்ரதிபத்தியுமாகிற இப்பத்து ப்ரதிபத்தியும் ஒரு அதி₄காரிக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யமாகக் கடவது என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்ததாகத் திருநகரிப்பிள்ளை அருளிச்செய்வர்.

---

**நானூற்றிருபத்துநாலாம் வார்த்தை**

ப்ரபந்நாதி₄காரிக்கு அவஶ்யம் அறியவேண்டியவைகளாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த ப்ரதிபத்திகளாவன—(1) எம்பெருமானே நம்மை ஸம்ஸாரத்திலிருந்து கைதூக்கிவிடுபவன் என்னும் நினைவு. (2) ஆசார்யனே எம்பெருமானை நமக்கு உபகரித்தவன் என்னும் நினைவு. (3) ஸ்ரீவைஷ்ணவர்களே நமக்கு மிகவும் வேண்டியவர்கள் என்னும் நினைவு. (4) எம்பெருமானே உபாயம் என்பதில் உறுதியாயிருக்கவேண்டும் என்னும் நினைவு. (5) எம்பெருமானுகந்த கைங்கர்யத்தைப் பெறுவதில் த்வரை (வேக₃ம்) உடையோமாக வேணும் என்னும் நினைவு. (6) ஶரீரம் எம்பெருமானைப் பெறுவதற்குத் தடை என்னும் நினைவு. (7) தே₃ஹப₃ந்து₄க்கள் எம்பெருமானை விட்டு நம்மைப் பிரிக்கவந்தவர்கள் என்னும் நினைவு. (8) மற்ற ஸம்ஸாரிகள் நம்முடைய ப₄க₃வத₃நுப₄வகைங்கர்யச் செல்வத்தைக் கொள்ளையடிக்கவந்தவர்கள் என்னும் நினைவு. (9) செல்வம் நெருப்பைப்போலே தீங்கை விளைப்பது என்னும் நினைவு. (10) ஶப்₃த₃ாதி₃விஷயங்கள் இடிபோலே நம்முடைய ஸ்வரூபநாஶத்தை

இவற்றில் ஈ*ஶ்*வரனளவில் உத்தாரகத்வ ப்ரதிபத்தி யாவது - a"ஆவிக்கோர் பற்றுக்கொம்பு" என்றும், b"என்னுடைவாணுள்" என்றும், c"ஆவியை அரங்கமாலை" என்றும், d"உன்னைவிட்டு - எங்ஙனே தரிக்கேன்" என்றுமிருக்கை. ஆசார்யனளவில் உபகாரகத்வ ப்ரதிபத்தியாவது- e "என்னைத்தீமனங்கெடுத்தாய் உனக்கென் செய்கேன்" என்றும், f"மருவித்தொழும் மனமே தந்தாய்" என்றும், g"தேவு மற்றறியேன்" என்றும், h "மிக்கவேதியர் வேதத்தினுட் பொருள் நிற்கப்பாடி என்னெஞ்சுள் நிறுத்தினுன்" என்றும், i "ஒண்டமிழ்ச்சடகோபனருளையே - எண்டிசையுமறிய இயம்புகேன்" என்றுமிருக்கை. ஸ்ரீவைஷ்ணவர்களளவில் உத்$_3$தே$_3$*ஶ்*யப்ரதிபத்தியாவது - j"சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்றும், k"போதோடு புனல் தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்ருர்" என்றும், l"எத்தனையுங் கண்குளிரக் காணப்பெற்ற இருநிலத்தார்க்கிமையவர் நேரொவ்வார் தாமே" என்றும், m"பயிலுந் திருவுடையார் யவரேலும் அவர்கண்டீர் பயிலும் பிறப்பிடைதோறெம்மை யாளும் பரமர்" என்றுமிருக்கை. உபாயத்தளவில் அத்$_4$யவஸாயப்ரதிபத்தியாவது-n"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றும், o "என் நான் செய்கேன் யாரே களைகண் என்னை யென்செய்கின்ருய், உன்னலல்லால் யாவராலும் ஒன்றுங்குறைவேண்டேன்" என்றும், p "நல்லானருளல்லால்" என்றும், q "நின்னருளே

---

*விளைப்பவை என்னும் நினைவு. இந்தப் பத்து நினைவுகளுக்கும் பொருத்தமான அருளிச்செயல் சந்தைகள் வார்த்தையின் பின்பகுதியில் கொடுக்கப்படுகின்றன. அவ்வருளிச்செயல்களின் ஆகரங்கள் பின்வருமாறு :—*

a [*திருவாய்* 10-10-3] b [*பெரியதிரு* 1-1-6] c [*திருக்குறு* 12] d [*திருவாய்* 7-2-1] e [*திருவாய்* 2-7-8] f [*திருவாய்* 2-7-7] g [*கண்ணிநுண்* 2] h [*கண்ணிநுண்* 9] i [*கண்ணிநுண்* 7] j [*திருவிரு* 79] k [*பெரியதிரு* 7-4-3] l [*பெருமாள்திரு* 10-5] m [*திருவாய்* 3-7-1] n [*திருவாய்* 5-8-8] o [*திருவாய்* 5-8-3]

புரிந்திருந்தே னினியென் திருக்குறிப்பே" என்று மிருக்கை. உபேயத்தளவில் த்வராப்ரதிபத்தியாவது-r "மாகவைகுந்தங் காண்பதற்கு என் மனம் ஏகமெண்ணும் இராப்பகலின்றியே" என்றும், s"அடியேற்கு வானுலகம் தெளிந்தே என்றெய்துவது" என்றும், t "அடியார்கள் குழாங்களை-உடன் கூடுவதென்றுகொலோ" என்றும், u "வழுவிலா அடிமைசெய்ய வேண்டுநாம்" என்றுமிருக்கை. ஶரீரத்தளவில் விரோதி$_4$ ப்ரதிபத்தியாவது-v "பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல்" என்றும், w " பொல்லாவாக்கை " என்றும், x " ஆக்கைவிடும்பொழுதெண்ணே " என்றும், y" மங்கவொட்டு" என்றும், z " மேம்பொருள் " என்றுமிருக்கை. ஶரீரஸம்ப$_3$ந்தி$_4$களளவில் பிரிவுகாரர் ப்ரதிபத்தியாவது - a"தாயே நோயே தந்தையே நோயே" என்றும், b"பெற்றருஞ் சுற்றமுமென்றிவைபேணேன் நான்" என்றும், c "பிறிந்தேன் பெற்றமக்கள் பெண்டிரென்றிவர் பின்னுதவாதறிந்தேன்" என்றுமிருக்கை. இதரரான ஸம்ஸாரிகளளவில் வழிபறிகாரர் ப்ரதிபத்தியாவது-d"நீசர்" என்றும், e "தொழும்பர்" என்றும், f "பூமி பாரங்கள்" என்றுமிருக்கை. ஐஶ்வர்யத்தளவில் அக்$_3$நி ப்ரதிபத்தியாவது - g "வீழ்பொருட்கிரங்கி" என்றும் h"பெருஞ்செல்வம் நெருப்பு" என்றும், i"ஆண்டார் வையமெல்லாமரசாகி முன்னாண்டவரே மாண்டாரென்று வந்தார்" என்றுமிருக்கை. விஷயத்தளவில் இடிப்ரதிபத்தியாவது-j"புலனைந்து மேயும் பொறி" என்றும், k"சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்பவெள்ளத்து ஆழ்ந்தேன், அருநரகத்தழுந்தும் பயன் படைத்தேன்" என்றும்,

p [முதல்திருவ 15] q [பெரியாழ்திரு 5-4-1] r [திருவாய் 9-3-7]
s [பெரியதிரு 6-3-8] t [திருவாய் 2-3-10] u [திருவாய் 3-3-1]
v [பெரியதிரு 11-8-3] w [திருவாய் 3-2-3] x [திருவாய் 1-2-9]
y [திருவாய் 10-7-10] z [திருமாலை 38] a [பெரியதிரு 1-9-1]
b [பெரியதிரு 8-10-5] c [பெரியதிரு 6-2-4] d [திருச்சந்த 66]
e [திருமாலை 5] f [பெரியாழ்-திரு 4-4-5] g [பெரியதிரு 1-1-4]
h [திருவாய் 4-9-4] i [பெரியதிரு 6-2-5] j [திருவாய் 2-8-4]

l "பொறுத்துக்கொண்டிருந்தாற் பொறுக்கொணப்போகமே நுகர்வான் புகுந்து - ஐவரறுத்துத்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்" என்றும், m "கடியார் காளையரைவர்புகுந்து காவல் செய்த அக்காவலைப் பிழைத்துக் குடிபோந்துன்னடிக்கீழ் வந்து புகுந்தேன்" என்றும், n "கோவாய் ஐவரென்மெய்க்குடியேறிக் கூறைசோறிவைதாவென்று குமைத்துப் போகார், நானவரைப் பொறுக்ககிலேன் புனிதா புட்கொடியாய் நெடுமாலே தீவாய்நாகணையிற்றுயில்வானே திருமாலே இனிச்செய்வதொன்றறியேன்" என்றுமிருக்கை.

உத்தாரகப்ரதிபத்தியை o உயர்வறவுயர்நலம் தொடக்கமானவற்றிலும், உபகாரகத்வப்ரதிபத்தியை p தூதுகள் நாலிலும், உத்₃தே₃ஶ்யப்ரதிபத்தியை q பயிலுஞ்சுடரொளி r நெடுமாற்கடிமை தொடக்கமானவற்றிலும், அத்₄யவஸாயப்ரதிபத்தியை s நோற்றநோன்பு t ஆராவமுது தொடக்கமானவற்றிலும், த்வரா ப்ரதிபத்தியை u முனியே நான்முகன் தொடக்கமானவற்றிலும், விரோதி₄ப்ரதிபத்தியை v முந்நீர் ஞாலம் தொடக்கமானவற்றிலும், பிரிவுகாரர்ப்ரதிபத்தியை w கொண்டபெண்டிரிலும், வழிபறிகாரர்ப்ரதிபத்தியை x நண்ணாதார் முறுவலிலும், அக்₃நிப்ரதிபத்தியை y ஒருநாயகத்திலும், இடிப்ரதிபத்தியை z உண்ணிலாவியவிலும், ப்ரத₂மாசார்யரான நம்மாழ்வார் விஶேஷித்தருளிச் செய்தாராகையாலே, இப்பத்து ப்ரதிபத்தியும் ஓரதி₄காரிக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யமாகக்கடவது என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்ததாகத் திருநகரிப்பிள்ளை யருளிச்செய்வர்.

---

k *[பெரியதிரு 6-3-4]* l *[பெரியதிரு 7-7-7]* m *[பெரியதிரு 7-7-8]* n*[பெரியதிரு7-7-9]* o*[திருவாய் 1-1-1]* p"*அஞ்சிறைய*" *[திருவாய் 1-4]* "*வைகல்*" *[திருவாய் 6-1]* "*பொன்னுலகாளீரோ*" *[திருவாய் 6-8]* "*ஏங்கானலகம்*"*[திருவாய்9-7]* q*[திருவாய்3-7-1]* r*[திருவாய் 8-10-1]* s *[திருவாய் 5-7-1]* t *[திருவாய் 5-8-1]* u *[திருவாய் 10-10-1]* v *[திருவாய் 3-2-1]* w *[திருவாய் 9-1-1]* x *[திருவாய் 4-9-1]* y *[திருவாய் 4-1-1]* z *[திருவாய் 7-1-1]*.

## நானூற்றிருபத்தைந்தாம் வார்த்தை

a ஓரதி$_4$காரிக்கு த்யாஜ்யோபாதே$_3$யங்களென்று இரண்டு. அவையாவன ப்ரக்ருதிப்ராக்ருதரும், ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதரும்; த்யாஜ்யமாவது த்யாஜ்யப்ரதிபத்தி; உபாதே$_3$யமாவது உபாதே$_3$யப்ரதிபத்தி. ப்ரதிபத்தியாவது-பெருததிலே செல்லாமை, பெற்றதில் ப்ரீதியின்றிக்கே யொழிகை, இழந்தத்தில் க்லேஶமின்றிக்கேயொழிகை, வழியல்லாவழியாலே ஆர்ஜியாதொழிகையாகிற இவை. b "இவையன்றே நல்ல இவையன்றேதீய" என்றும், c "உளதென்றிறுமாவார்" என்றும், d "இன்பங்கள் மொய்த்திடினும் கனியார்" என்றும், e "உண்டில்லை யென்று தளர்தலதனருகுஞ்சாரார்" என்றும், d "துயரங்கள் முந்திலும் முனியார்" என்றும், f "கூறைசோறிவை வேண்டுவதில்லை" என்றும் இத்யாதி$_3$களாலே, த்யாஜ்யப்ரதிபத்தி சொல்லிற்று; g "எங்கேகாண்கேன்" என்றும், h "காணுமாறருளாய்" என்றும், i "காண்பதெஞ்ஞான்றுகொலோ" என்றும்,

---

### நானூற்றிருபத்தைந்தாம் வார்த்தை

a கைவிடத்தக்கது என்னும் நினைவு ப்ரக்ருதிவிஷயத்திலும் ப்ராக்ருதமான (ப்ரக்ருதியிலிருந்துண்டான) ஶரீரேந்த்$_3$ரியங்கள் விஷயத்திலும், கைக்கொள்ளத்தக்கது என்னும் நினைவு எம்பெருமான் விஷயத்திலும் அவனடியார்கள் விஷயத்திலும் ஓர் அதி$_4$காரிக்கு ஏற்படவேண்டும். ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதர்கள் விஷயமான அநுப$_4$வத்தைப் பெருவிடில் த$_4$ரியாமை உபாதே$_3$ய ப்ரதிபத்தியில் சேர்ந்தது. (1) ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் கர்மவஶத்தால் பெற்றிருக்கும் அம்ஶத்தில் ப்ரீதியின்றியிருக்கை. (2) பெற்று இழந்ததில் துன்பமின்றியிருக்கை. (3) வழியில்லாவழியாலே புதிதாக ஒன்றைத் தேடாதிருக்கை என்னும் மூன்றும் த்யாஜ்யப்ரதிபத்தியில் சேர்ந்தது. இந்த மூன்றுக்கும் எதிர்த்தட்டாக ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதவிஷயத்தில் (1) பெற்ற அம்ஶத்தில் ப்ரீதியோடிருக்கை. (2) பெற்று இழந்ததில் துன்புறுகை, (3) வழியல்லாவழியிலாவது பெறமுயலுகை என்னும் மூன்றும் உபாதே$_3$ய ப்ரதிபத்தியில் சேரும். இனி இவற்றை விளக்கும் பாசுரங்கள் கொடுக்கப்படுகின்றன. அவற்றின் ஆகரங்கள் பின்வருமாறு:—

b [பெரியதிருவ 3] c [இரண்டாம்திருவ 45] d [இராமானுசநூற் 17, e [இரண்டாம்திருவ 45] f [பெரியாழ்திரு 5-1-4] g [திருவாய் 8.5-11,

j "கண்டுகொண்டு" என்றும், k "கண்டேன் கமலமலர்ப் பாதம்" என்றும், l "திகழக்கிடந்தமை கண்டேன்" என்றும், m "என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்" என்றும், n "கூட்டுண்டு நீங்கினான்" என்றும், o "எம்மைப்பணியறியா வீட்டீர்" என்றும்; p "உருக்காட்டாதே யொளிப்பாயோ" என்றும், q "தாம் தம்மைக்கொண்டகல்தல் தகவன்று" என்றும், r "யாம் மடலூர்ந்தும்" என்றும், s "குதிரியாய் மடலூர்தும்" என்றும், t "அறிவிழந்து எனை நாளையம்" என்றும், u "எங்குச்சென்றாகிலுங்கண்டு" என்றும் இத்யாதி$_3$களாலே பெறுததில் செல்லாமை பிறக்கையும், பெற்றதில் ப்ரீதி பிறக்கையும், இழந்ததில் க்லேஶமிருக்கையும், வழியல்லா வழியேயாகிலும் பெறவேண்டுமென்றிருக்கையுமாகிற உபாதே$_3$ய ப்ரதிபத்தி சொல்லிற்று.

## நானூற்றிருபத்தாறும் வார்த்தை

ஒரு குலஸ்த்ரீக்கு பாதிவ்ரத்யஹானியென்றும், ஸ்த்ரீத்வ ஹானியென்றும், ப$_3$ந்து$_4$ஹானியென்றும் மூன்றுண்டு; இவளுக்கு இவை பரிஹார்யமானவோபாதி அதி$_4$காரிக்கும் இவை பரிஹார்யம். அதி$_4$காரிக்குப் பாதிவ்ரத்யஹானி யாவது - த்$_3$ருஷ்டார்த்த$_2$மாக இதரரை அநுவர்த்திக்கை;

---

h [திருவாய் 8-1-2] i [திருவாய் 5-9-6] j [திருவாய் 9-4-9] k [திருவாய் 10-4-9] l [திருவாய் 5-8-1] m [பெரியதிருமடல் 73] n [திருவாய் 9-5-6] o [பெரியதிரு 4-9-7] p [திருவாய் 6-9-5] q [திருவாய் 9-7-9] r [திருவாய் 5-3-10] s [திருவாய் 5-3-9] t [திருவாய் 5-3-1] u [திருவாய் 6-8-5].

### நானூற்றிருபத்தாறும் வார்த்தை

(1) ஒரு குலஸ்த்ரீயானவள் மற்றொரு புருஷனிடமிருந்து பொன், பொருள் முதலானவற்றைப் பெறுவது அவளுடைய கற்புக்குக் குறையாவதுபோலே ப்ரபந்நனுக்கும் பொன், பொருள் முதலானவற்றுக்காக மற்ற தெய்வங்களை ஆஶ்ரயிப்பது மறந்தும் புறந்தொழாமலிருக்கவேண்டிய அவனுடைய கற்புக்குக் குறையாகும்.

ஸ்த்ரீத்வஹாநியாவது - த்$_3$ருஷ்டத்தை ஈச்வரன் பக்கலிலே அபேக்ஷிக்கை; ப$_3$ந்து$_4$ஹாநியாவது - த்$_3$ருஷ்டத்தில் இல்லாமையை ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சொல்லுகை.

## நானூற்றிருபத்தேழாம் வார்த்தை

௧ அதி$_4$காரிக்கு, ரூபம், நாமம், உக்தி, வ்ருத்தி, பு$_3$த்$_3$தி$_4$ என்கிற இவை அஞ்சும் வேண்டும். இவற்றில் பு$_3$த்$_3$தி$_4$யே ப்ரத$_4$ாநம்; அதில்லையாகில் மற்றை நாலும்

---

(2) அந்தக் குலஸ்த்ரீயானவள் தான் கணவனுக்குப் பத்னியாக நடந்து கொள்வதற்குக் கைம்மாருக, தன் கணவனிடம், பொன், புடவை முதலானவற்றைக்கேட்பது அவளுடைய பெண்மைக்குக் குறையாவது போலே, எம்பெருமானை நோக்கும்போது ஸ்த்ரீப்ராயனுய் பரதந்த்ரனுன இவனுக்கும் எம்பெருமானிடம் பணம் முதலானவற்றை யாசிப்பது இவனுடைய பாரதந்த்ர்யமாகிற பெண்மைக்குக் குறையாகும். (3) அந்தக் குலஸ்த்ரீ தனக்குப் பொன் புடவை முதலானவை இல்லை என்று தன் உறவினர்களிடம் சொல்லுவதால் அவர்களோடு உறவை இழப்பதுபோலே, இவனும் தன்னுடைய ஆத்மப$_3$ந்து$_4$க்களான ஸ்ரீவைஷ்ணவர்களிடம் தனக்குப் பணம் முதலானவையில்லை என்று சொல்லுவதால் அவர்களை இழப்பான். ஆக, குலஸ்த்ரீயைப் போலே ப்ரபந்நனும் இம்மூன்று விஷயங்களிலும் ஜாக்$_3$ரதையாயிருக்கவேணும் என்று கருத்து.

### நானூற்றிருபத்தேழாம் வார்த்தை

௧ ப்ரபந்நனுன ஓர் அதி$_4$காரிக்கு ஊர்த்$_4$வபுண்ட்$_3$ரம், ஶங்க$_2$ சக்ரலாஞ்ச$_2$னம், துளசிதாமரை மணி மாலைகள் முதலான ஸ்ரீவைஷ்ணவனுக்குரிய ரூபங்கள், த$_3$ாஸ்யநாமம், அடியேன் முதலான வார்த்தைகள், ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதகைங்கர்யங்களாகிற வ்ருத்தி, ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வதவிஷயத்தில் ஈடுபட்ட அறிவு என்கிற ஐந்தும் வேண்டும். இவற்றில் ஐந்தாவதான அறிவே முக்கியமானது. இது இல்லாவிட்டால் முதல் நான்கும் இருந்தும் இல்லாததாகும். அதனுலேயே ஆழ்வார்கள் அதினுடைய முக்$_2$யத்வத்தைப் பின்வரும் பாசுரங்களில் பேசினுர்கள். அவற்றில் முதல் எட்டுப் பாசுரங்களில் அறிவில்லையென்றுல் இவனுக்கு அநர்த்த$_2$மே என்னும் விஷயத்தை அருளினுர்கள். அடுத்த எட்டுப் பாசுரங்களில் அறிவுக்குப்பிறப்பிடமான நெஞ்சு அநுகூலமாயிருந்தால் இவன்

அஸத்கல்பம் ; ஆகையிறே ஆழ்வார்களும் அதிலே உறைக் கைக்கடி. எங்ஙனேயென்னில் ; b (சித்தமுஞ்செவ்வை நில்லாது) என்றும், c ( நெஞ்சமே நீயும் பாங்கல்லையே ) என்றும், d (சிந்தித்தறியாதார்) என்றும், e (நின்றவாநில்லா நெஞ்சு) என்றும், f (மறந்தேன் - இறந்தேன்) என்றும், g (உணர்வொன்றில்லா) என்றும், h (மனத்திலோர் தூய்மை யில்லை) என்றும், i (உள்ளமே-ஒன்று நீயுணரமாட்டாய்) என்றும், இது அவிதே₄யமானல் அநர்த்த₂ம் என்னும் ஆகாரத்தை அருளிச்செய்தார்கள். j (உள்ளிலுமுள்ளந்தடிக்கும்) என்றும், k (உய்த்துணர்வென்னுமொளிகொள் விளக்கேற்றி) என்றும், l (நினைக்குங்கால்) என்றும், m (சிந்தையைச் செந்நிறுத்தி) என்றும், n(தொழுமின் தூயமனத்தராய்)என்றும், o(கூடுமன முடையீர்) என்றும், p(பாடுமனமுடைப்பத்தருள்ளீர்) என்றும், q (சிந்தித்திருப்பார்[பேற்கு?]) என்றும் சொல்லுகையாலே- இது அநுகூலித்தால் உத்தாரகம் என்னுமிடத்தை அருளிச் செய்தார்கள்.இப்படிஅநுகூலித்த நெஞ்சுடையவனை ஈஶ்வரன் விஶ்லேஷிக்கமாட்டான் என்னுமிடத்தைச் சொல்லுகிறது— r ( மாசற்றார் மனத்துளான் ) என்றும், s (நெஞ்சத்துப் பேராதுநிற்கும் பெருமான்) என்றும், t (சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பு) என்றும், u (அந்தாமத்தன்பு செய்தென்னுவி சேரம்மான்) என்றும், v (நெஞ்சமே நீணக ராகவிருந்த) என்றும், w (வந்துனதடியேன் மனம்புகுந்தாய்)

---

உயர்க₃திக்குச் செல்வான் என்று அருளினார்கள். கடைசி ஒன்பது பாசுரங்களில் இத்தகைய நெஞ்சையும் அறிவையுமுடையவனை எம்பெருமான் ஒருகாலும் பிரியமாட்டான் என்று அருளினார்கள். இவ் விருபத்தைந்து பாசுரங்களின் ஆகரங்கள் வருமாறு:—

b [திருக்குறும் 10] c [திருவாய் 5-4-2] d [பெரிய திரு 11-7-8]
e [பெரிய திரு 1-1-4] f [பெரிய திரு 6-2-2] g [திருமாலை 34]
h [திருமாலை 30] i [திருமாலை 24] j [பெரிய திருவ 76]
k [மூன்றாந்திருவ 94] l [மூன்றாந் திருவ 81] m [திருவாய் 5-2-6]
n [திருவாய் 3-6-7] o [திருப்பல் 4] p [திருப்பல் 4]
q [நான்-திருவ 65] r [திருமாலை 22] s [மூன்றாந் திருவ 81]
t [பெரிய திரு 2-5-1] u [திருவாய் 2-5-1] v [திருவாய் 3-8-2]

என்றும், x (வந்தாயென்மனம் புகுந்தாய்) என்றும், y(உள்ளம் புகுந்தவொருவர்) என்றும், z(நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என்னெஞ்சுள்) என்றும் சொல்லுகையாலே-அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களை ஈஶ்வரன் விஶ்லேஷிக்கமாட்டான் என்னுமிடத்தைச் சொல்லிற்று.

## நானூற்றிருபத்தெட்டாம் வார்த்தை

(1) தானறுகை. (2) சைதந்யமறுகை, (3) ஸாராந்தரமறுகை. (4) வேறறுகை. (5) வ்யாபாரமறுகை. (6) விஷயாந்தரமறுகை என்று ஸ்ரீவகுளாப$_4$ரணத$_3$ாஸர் பிள்ளை வார்த்தை.

a தானறுகையாவது - b ( யானும் தானாயொழிந்தான் ) என்றும், c ( யானும் நீதானே ) என்றும், d (யானே நீ) என்றும், e ( தானேயாகிநிறைந்து ) என்றும், f (தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்) என்றும் இருக்கை ; g சைதந்யமறுகையாவது - h (செய்த்தலையெழு நாற்றுப்போல்) என்றும், i (கடைத்தலையிருந்து) என்றும், j (படியாய்க்கிடந்து) என்றும், k(பூம்பட்டாம் புல்கு மணையாம்) என்றும் இருக்கை;l ஸாராந்தரமறுகையாவது-m"அஹமந்நம்" என்றும், n ( உண்டிட்டாயினியுண்டொழியாய் ) என்றும்,

---

w [பெரிய திரு 3-5-1] x பெரிய திரு [1-10-9] y [பெரிய திரு 5-2-3] z [திருச்சந்த 65]

**நானூற்றிருபத்தெட்டாம் வார்த்தை**

a தானறுகை - எம்பெருமானைக் காட்டிலும் தான் வேறுபட்டவன் என்று நினையாமல் அவன் ப்ரகாரியாகவும் தான் ப்ரகாரமாகவும் இருப்பவன் என்று அறிகை. b [திருவாய் 8-8-4] c [திருவாய் 8-1-9] d [திருவாய் 2-9-9] e [திருவாய் 10-7-2] f [திருவாய் 2-3-1] g சைதன்யமறுகை—தான் கர்த்தா போ$_4$க்தா என்னும் நினைவு நீங்கப் பெறுகை. h [பெரியாழ் திரு 3-7-9] i [திருமாலை 38] j [பெருமாள் திரு 4-9] k [முதல் திருவ 53] l ஸாராந்தரமறுகை — எம்பெருமானுடைய முகமலர்த்தி தவிர வேறொரு ஸாரமுண்டு என்னும் நினைவு நீங்கப்பெறுகை. m [தைத்திரீயம்] n ]திருவாய் 10-10-6] o [திரு-

o (உருவமுமாருயிருமுடனேயுண்டான்) என்றும், p (என்னெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகி நிறைந்தான்) என்றும், q (தான் என்னை முற்றப்பருகினான்) என்றும் இருக்கை. r வேறறுகையாவது–s (நானுன்னையன்றி இலேன் கண்டாய் நாரணனே நீயென்னையன்றியிலை) என்றும், t (உறவேல் நமக்கிங்கொழிக்கவொழியாது என்றும் இருக்கை. u "மண்ணீரை ஒரு பாத்ரத்திலே யெடுத்துத் தேற்றினால் மண்ணானது கீழேபடிந்து தெளிந்த நீரானது மேலே நிற்குமாபோலே, அஜ்ஞாநமிஶ்ரமான ஶரீரத்திலேயிருக்கிற ஆத்மாவை ஆசார்யனாகிற மஹோபகாரகன் திருமந்த்ரமாகிற தேற்றாம்பரலாலே தேற்ற அஜ்ஞாநம்பதிந்து ஜ்ஞாநம் ப்ரகாசிக்கும்; தெளிந்த ஜலத்தைப் பாத்ராந்தரத்திலே சேர்க்குந்தனையும் கைபட்டபோதெல்லாம் கலங்குமாபோலே கலங்கும் என்றஞ்சி, கலங்காமல் நோக்குவானொருவன் கண்வட்டத்திலே வர்த்திக்கை ஸ்வரூபம்" என்று அருளிச்செய்தார்,

---

வாய் 9-6-5] p [திருவாய் 10-7-1] q [திருவாய் 9-6-10] r வேறறுகை — எம்பெருமானோடு ஸம்ப$_3$ந்த$_4$மில்லாதவன் தான் என்னும் நினைவு அறுகை. s [நான் திருவ 7] t [திருப்பாவை 28] u மண் கலந்த நீரை ஒரு பாத்திரத்திலே எடுத்துத் தேற்றாங்கொட்டையைக் கொண்டு தெளிவுபடுத்தினால், மண் கீழே படிந்து தெளிந்த நீர் மேலே நிற்கும். அதுபோலே ஶரீரத்திலிருக்கையாலே அஜ்ஞானத்தோடு கலந்திருக்கும் ஜ்ஞானமுடைய ஆத்மாவை ஆசார்யனாகிற பேருபகாரி திருமந்த்ரமாகிற தேற்றாங்கொட்டையால் தெளிவுபடுத்தினால், அஜ்ஞானம் வெளிப்படாமல் சாய்ந்து ஜ்ஞானம் வெளிப்படையாகத் தெரியும்படி ஒளிவிடும். த்$_3$ருஷ்டாந்தத்தில் தெளிந்த ஜலத்தை மற்றொரு பாத்திரத்தில் சேர்க்கும் வரையில் கை பட்டபோதெல்லாம் நீர்கலங்குவது போலே, இந்தத் திருமந்த்ரோபதே$_3$ஶம் பெற்றவனும் அது பெறாதவர்களோடு சேர்ந்தால் கலங்கி விடுவான் என்றஞ்சி, கலங்காமல் பாதுகாக்கும் திருமந்த்ரார்த்த$_2$நிஷ்ட$_2$னொருவனுடைய கண்பார்வையில் இவன் வாழ்வது கலங்காமைக்கு உறுப்பு. (5) வ்யாபாரமறுகை—தன் பேற்றுக்காகத் தான் முயல்வதில் நின்றும் நீங்குகை. (6) விஷயாந்தரமறுகை—எம்பெருமானுடைய முக மலர்த்திக்கேயான அநுப$_4$வ கைங்கர்யங்களைத் தவிர மற்ற விஷயங்களில் ருசி நீங்கப்பெறுகை. இவ்விரண்டும் ஸ்பஷ்டமாகையாலே வார்த்தையில் விவரணமில்லை.

## நானூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை

ஸர்வேச்வரனுடைய ஆகாரத்ரயமாவது—மேன்மையும், நீர்மையும், வடிவழகும். அதாவது—a (முன்னை அமரர் முதல்வன் வண்டுவராபதி மன்னன் மணிவண்ணன்) என்றும், b (மணியை வானவர் கண்ணனைத் தன்னதோரணியை) என்றும், c (கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை அமுதை) என்றும், d (அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினை) என்றும், e (பச்சைமாமலைபோல்மேனி-அமரரேறே ஆயர்தங்கொழுந்தே) என்றும் f (மீதிட்டுப்பச்சைமேனி மிகப் பகைப்ப - கைதொழக்கிடந்த - பூவுலகளந்த) என்றும் இத்யாதி$_3$களாலே அநுஸந்தி$_4$ப்பான்.

## நானூற்றுமுப்பதாம் வார்த்தை

சேதநனுடைய பர்வத்ரயம். அதாவது—a (தீர்த்தனுக்கற்றபின் மற்றோர் சரணில்லையென்றெண்ணித் தீர்த்தனுக்கே தீர்த்த மனத்தனனாகி) என்றும், b (தலைவணக்கிக் கைகூப்பி யேத்தவல்லார்) என்றும், c (தாளுந்தடக்கையுங் கூப்பிப்

---

**நானூற்றிருபத்தொன்பதாம் வார்த்தை**

a [திருவாய் 5-3-5] b [திருவாய் 1-10-11] c [திருவாய் 5-1-5] d [அமலனாதிபிரான் 10] e [திருமாலை 2] f [திருவாசிரியம் 1] — இவ்வார்த்தையில் இந்த ப்ரமாணம் ஒவ்வொன்றிலும், எம்பெருமானுடைய முக்$_2$யமான ஆகாரங்களாகிற மேன்மை, நீர்மை, வடிவழகு என்னும் மூன்றும் சேர்ந்த பசுங்கூட்டு ஆழ்வார்களால் அநுஸந்தி$_4$க்கப்பட்டுள்ளது.

**நானூற்றுமுப்பதாம் வார்த்தை**

அடுத்த வார்த்தையின் கடைசியில்(447a)பர்வத்ரயமென்னும் பத$_3$ம் (1) ஸ்வரூபவிரோதி$_4$ நிவ்ருத்தி (2) ஸாத$_4$னவிரோதி$_4$ நிவ்ருத்தி (3) ப்ராப்யவிரோதி$_4$ நிவ்ருத்தி என்று விவரிக்கப்பட்டுள்ளது. சேதனனுக்கு அவஶ்யமான இந்த மூன்று பர்வங்களையும் (நிலைகளையும்) இவ்வார்த்தையில் எடுக்கப்படும் ஒவ்வொரு (ஆழ்வார்களின்) பாசுரமும் காட்டுகிறது. அவற்றின் ஆகரங்கள் பின்வருமாறு:— a [திருவாய் 7-10-11] b [பெருமாள் திரு 10.5] c [திருவாய் 3-7-2] d [திருவாய் 7-2-1] e [பெரிய திரு 8-10-9] f [திருமாலை 38]

பணியுமவர்) என்றும், d (கங்குலும் பகலும் கண்டுயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும், சங்குசக்கரங்களென்று கைகூப்பும் தாமரைக்கண்ணென்றே தளரும்) என்றும், e (நாட்டினாய் என்னை உனக்குமுன் தொண்டாக மாட்டினேனத்தனையே கொண்டென் வல்வினையை, பாட்டினால் உன்னை என்னெஞ்சத் திருந்தமை காட்டினாய்) என்றும், f (மெய்ம்மையை மிகவுணர்ந்து ஆம்பரிசறிந்துகொண்டு-உன்கடைத் தலையிருந்து) என்றும் இத்யாதி$_3$களாலே சேதநனுடைய பர்வத்ரயத்தை அநுஸந்தி$_4$ப்பான்.

## நானூற்றுமுப்பத்தோராம் வார்த்தை

அநாதி$_3$யான கர்மப்ரவாஹத்தாலே சதுர்வித$_4$ஶரீரங்களிலும் ப்ரவேஶித்து சதுர்த்த$_3$ஶபு$_4$வநங்களிலும் தட்டித் திரிகிற சேதநரை, ஈஶ்வரன் தன்னைப் பெறுகைக்குறுப்பாக a த்ரிவித$_4$ஶரீரங்களை த்யஜிப்பித்து, மநுஷ்யஜந்மத்திலேயாக்கி, b கரணத்ரயத்தாலும் c காலத்ரயத்திலும் d கர்மத்ரயத்திலே அந்வயிப்பித்து, e அசித்த்ரயத்துக்கு அவ்வருகானவன், f கு$_3$ணத்ரயத்தாலே க்ஷுத்$_3$ரனாய் g ஆஶாத்ரயத்தாலே அலமந்து, h அபராத$_4$த்ரயத்தை ஆர்ஜித்து, i ஈஷணாத்ரயத்தாலே அடிபட்டு, j தத்வத்ரயத்தை அறியாதே, k தாபத்ரயத்தாலே தப்தனான இவனை, l தே$_3$வதாத்ரயத்துக்கு ஶேஷியாய் m மஹிஷீத்ரயத்துக்கு வல்லப$_4$னாய் n ஆத்மத்ரயத்தை ஆளுமவனாய் o த்ரிவித$_4$பரிச்சே$_2$த$_3$ரஹிதனாய், p த்ரிவித$_4$காரணவஸ்துவான ஸ்ரீமான் $p_2$ கடாக்ஷித்து,

---

**நானூற்றுமுப்பத்தோராம் வார்த்தை**

*அநாதி$_3$காலமாக ஸம்ஸாரியாயிருக்கும் ஜீவன் எம்பெருமான் அருளாலே பரமபுருஷார்த்த$_2$மான மோக்ஷத்தைப் பெறுவதை இவ்வார்த்தையில் முதல் பாரா பலபடியாக விவரிக்கிறது. அடுத்த பாரா அதிலுள்ள ஒவ்வொருபடியையும் விவரிக்கிறது. விவரண விவரணிகளுக்கு a, b, c என்று ஒரே குறிகள் கொடுக்கப்பட்டுள்ளன. எல்லாமே மூன்றாக வகைப்படுத்தப்பட்டிருப்பது இவ்வார்த்தைக்கு அலங்காரமாயிருக்கிறது. இனி இக்குறியீடுகளுக்கு உரிய*

q விரோதி₄த்ரயத்தை விடுவிக்கக்கோலி, r ஸுக்ருதத்ரயத்தைத் தொடுமானமாக்கி, s ஆநுகூல்யத்ரயத்திலே அந்வயிப்பித்து, t அநுவர்த்தநத்ரயத்துக்கு ஆளாக்கி, u அதி₄கார த்ரயத்தையுடைய ஆசார்யோபதே₃ஶமான v மந்த்ரத்ரயத்தாலே மாசறுத்து, w பத₃த்ரயத்தை அறிவிப்பித்து, x ஜ்ஞாந த்ரயத்திலே நாட்டிவைத்து, y ஶங்காத்ரயத்தைத் தவிர்ப்பித்து, z ஆகாரத்ரயத்திலே அந்வயிப்பித்து, a பர்வத்ரயத்தாலே பே₄ாக₃மாக்கி, b லோகத்ரயத்தை உபேக்ஷிப்பித்து, c பாத₃த்ரயத்திலே கொண்டுபோய், d ஸாம்யத்ரயத்தை ஸம்பந்நமாக்கி, e புன்மைத்ரயமற்ற பே₄ாக₃த்தை பு₄ஜிப்பிக்கும்,

a த்ரிவித₄ஶரீரமாவது-தே₃வதிர்யக்ஸ்த₂ாவர ஶரீரங்கள்; b கரணத்ரயமாவது-மநோவாக்காயங்கள்; c காலத்ரயமாவது-பூ₄தப₄விஷ்யத்₃வர்த்தமாநங்கள் ; d கர்மத்ரயமாவது-நினைக்கையும் சொல்லுகையும் செய்கையும்; d₂ நினைக்கையாவது-பரஸம்ருத்₃த்₄யஸஹத்வமும், பராநர்த்த₂ சிந்தனையும், பர தே₃ாஷப்ரதிபத்தியும், ஸ்வயாத்ராநிரூபணமும். d₃ சொல்லுகையாவது குடிமுடியும்படி தே₃ாஷஞ்சொல்லுகையும், ஸ்வம் அறுதி கொள்ளும்படி கோட்சொல்லுகையும், இதர சரிதங்களைச்

பத₃ங்கள் எளிய நடையில் விவரிக்கப்படுகின்றன. a தே₃வர், திர்யக் (பசு பக்ஷிகள்), ஸ்த₂ாவரம் ஆகிய மூன்று ஶரீரங்களில் முதலாவது புண்யப₂லாநுப₄வத்துக்கும், மற்ற இரண்டும் பாபப₂லாநுப₄வத்துக்கும் ஏற்பட்டதாகையாலே அவற்றை விடவைத்து மோக்ஷ சிந்தைக்கு மிகவும் பாங்கான மனுஷ்யஶரீரத்தை அடைவிக்கிறான் எம்பெருமான். b மனம், மொழி, மெய் என்னும் மூக்கரணங்கள். c சென்றகாலம், வருங்காலம், நிகழ்காலம் என்னும் மூவகைக்காலங்கள். d மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களின் கார்யமான நினைக்கை, சொல்லுகை, செய்கை. d₂ நினைக்கை-பிறர் மினுக்கம் பொறுமையும், பிறர்க்குத் தீங்கு நினைக்கையும், பிறர் குற்றங்களைக் காண்கையும், தன் தே₃ஹயாத்ரையையே சிந்திக்கையும். d₃ சொல்லுகை ஒரு சொல்லிலே ஒரு குலமே அழியும்படி குற்றம் சொல்லுகையும், உடைமை அற்றுப்போம்படி கோள் சொல்லுகையும், எம்பெரு

சொல்லுகையும், பொய்சொல்லுகையும். $d_4$ செய்கையாவது-பரஹிம்ஸையும், பரத்₃ரவ்யாபஹாரமும், e அசித்த்ரயமாவது-வ்யக்தமும், அவ்யக்தமும், காலமும்: f கு₃ணத்ரயமாவது-ஸாத்விக ராஜஸ தாமஸம்; g ஆசாத்ரயமாவது-அஹங்கார யுக்த ப்ராவண்யமும், அர்த்த₂ப்ராவண்யமும், விஷயப்ராவண்யமும், அதாவது-$g_2$ (வென்றியே வேண்டி வீழ்பொருட்கிரங்கி வேற்கணார் கலவியே கருதி) என்கிற இவை; h அபராத₄த்ரயமாவது - ப₄க₃வத₃பசாரமும், பா₄க₃வதாபசாரமும், அஸஹ்யாபசாரமும், i ஈஷணாத்ரயமாவது - அர்த்தே₂ஷணை தா₃ரேஷணை புத்ரேஷணைகள்; j தத்வ த்ரயமாவது-சித்தும், அசித்தும், ஈஶ்வரனும்; k தாபத்ரய மாவது-ஆத்₄யாத்மிகம், ஆதி₄தை₃விகம், ஆதி₄பௌ₄திகம்;

---

மான் தவிர மற்றவர்களின் சரிதங்களைச் சொல்லுகையும், பொய்சொல்லுகையும், $d_4$ செய்கை-பிறர்க்குத் தீங்குசெய்வதும், பிறர் பொருளைத் திருடுவதும். e மூலப்ரக்ருதியாகிற அவ்யக்தம், அதன் கார்யமான வ்யக்தமான அசித்தத்வங்கள், காலம் என்னும் மூன்று வகையான அசித்துக்கு அப்பாற்பட்டவனை சேதனன். f ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று மூன்று ப்ரக்ருதி கு₃ணங்களாலும் அவற்றால் விளையும் கு₃ணங்களாலும் மிகத் தாழ்ந்தவனாகிவிடுகிறான் ஜீவன். g வெற்றி, புகழ் முதலான அஹங்காரத்தை விளைக்கும் ஆசைகள், பொருளிலாசை, பெண்ணாசை என்ற மூன்று வகைப்பட்ட ஆசைகளினாலே துன்புறுகிறான் ஜீவன். $g_2$ [பெரியதிரு 1-1-4] h எம்பெருமான் திறத்தில் அபசாரம், அவனடியார்கள் திறத்து அபசாரம், அவர்கள் இருவர் திறத்திலும் காரணமில்லாமலே அபசாரப்படுமதாகிற மூன்று வகைப்பட்ட அபசாரங்களையும் அநாதி₃காலமாகச் சேர்த்து வைத்திருக்கிறான் இவன். i பொருள் மனைவி பிள்ளைகளிடம் பாசத்தாலே அடிபட்டுக் கிடக்கிறானிவன். j சித், அசித், ஈஶ்வரன் என்னும் மூன்று தத்வங்களை அறியாமலிருக்கிறான். k ஆத்₄யாத்மிகம் (ஆத்மாவெனப்படும் சரீரத்தில் உண்டாகும் நோய் முதலானவை) ஆதி₄தை₃விகம் (தெய்வச்செயலான இடி முதலானவற்றால் ஏற்படுமவை.) ஆதி₄பௌ₄திகம் (பஞ்ச பூ₄தங்களாலேற்படுமவை) என்னும் மூன்று வகையான தாபங்களாலே துன்புறுகிறான். 'இதுவரை ஜீவன் இருக்கும் இருப்பு விவரிக்கப்பட்டது. இனி எம்பெருமானுடைய பெருமை விவரிக்கப்படுகிறது.

l தே₃வதாத்ரயமாவது - l₂ "வானவர் தம்மையாளுமவன்" இத்யாதி₃கள். m மஹிஷீத்ரயமாவது - m₂ ஒரு மகளாயர் மடந்தை ஒருத்தி நிலமகள் மற்றைத்திருமகள். n ஆத்மத்ரயமாவது - நித்யர், முக்தர், ப₃த்₃த₄ர்; o த்ரிவித₄பரிச்சே₂த₃ ரஹிதனுவது - காலத்தாலும் தே₃ஶத்தாலும் வஸ்துக்களாலும் பரிச்சே₂தி₃க்கப்போகாதொழிகை; p த்ரிவித₄காரண வஸ்துவாவது - நிமித்தோபாத₃ாநஸஹகாரி காரணமாகை; p₂ விஶேஷ கடாக்ஷமாவது - ஸௌஹார்த்த₃ம்; q விரோதி₄ த்ரயமாவது - ஸ்வஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும், தே₃ஹாத்மாபி₄மாநமும்; r ஸுக்ருதத்ரயமாவது-ஆநுஷங்கி₃கம், ப்ராஸங்கி₃கம், யாத்₃ருச்சி₂கம், s ஆநுகூல்யத்ரயமா

---

l பிரமன், உருத்திரன், இந்திரன் என்னும் மூன்று தேவர் தலைவர்களுக்கும் ஸ்வாமியாயிருப்பவன் எம்பெருமான். l₂ [திருவாய் 3-6-4] m ஸ்ரீ பூ₄மி நீளாதே₃விகளாகிற மூன்று ப்ரத₄ான மஹிஷிகளுக்கு இனியவனுயிருக்கிருன் எம்பெருமான். m₂[பெரியதிரு 3-3-9] n ப₃த்₃த₄ர், முக்தர், நித்யர் என்னும் மூன்றுவகைப்பட்ட ஜீவர்களை ஆளுகின்ற வனுயிருப்பவன் எம்பெருமான். o காலத்தால் அளவுபட்டிருக்கை, தே₃ஶத்தால் அளவுபட்டிருக்கை, வஸ்துவால் அளவுபட்டிருக்கை என்னும் மூன்றுவித₄மான அளவுகளுமில்லாதவனுய், எல்லாக் காலத்திலும் எல்லா தே₃ஶத்திலும் எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாய், ஒப்புயர்வற்ற பொருளாயிருப்பவன். p குடத்துக்குக் குயவன் போலே உலகுக்கு நிமித்தகாரணமாகவும், மண்போலே உபாத₃ான காரணமாகவும், த₃ண்ட₃சக்கரங்கள்போலே ஸஹகாரிகாரணமாகவுமிருப்பவன். p₂ இத்தகைய எம்பெருமான் முற்கூறிய சேதனன் விஷயத்தில் இயற்கையான நட்புக்கொண்டவனுயிருக்கையாலே இவனுக்குப் பிறக்கும்போது மோக்ஷத்தைப் பெறுவதற்குறுப்பான ஒரு கடாக்ஷத்தைச் செய்கிருன். q தனக்குத் தானே தலைவன் என்னும் ஸ்வஸ்வாதந்த்ர்யம், பிரமன் உருத்திரன் முதலானுர்க்குத் தான் அடிமைப் பட்டவன் என்னும் அந்யஶேஷத்வம், தே₃ஹமே தான் என்னும் தே₃ஹாத்மாபி₄மானம் என்னும் மூன்று தடைகளை விடுவிக்க முற்படுகிருன் எம்பெருமான். r ஸ்ரீவசனபூ₄ஷணம் 381ம் சூர்ணையின் வ்யாக்₂யானத்தில் விவரிக்கப்பட்ட ஆநுஷங்கி₃கம், ப்ராஸங்கி₃கம், யாத்₃ருச்சி₂கம் என்னும் மூன்றுவகைப்பட்ட இவனறியாத புண்யங்களை

வது - அத்$_3$வேஷமும், ஆபி$_4$முக்$_2$யமும், ஸத்ஸம்ப$_4$ாஷண மும்; t அநுவர்த்தநத்ரயமாவது - "ஶரீரமர்த்த$_2$ம் ப்ராணஞ்ச ஸத்$_3$கு$_3$ருப்$_4$யோ நிவேத$_3$யேத்" u அதி$_4$காரத்ரயமாவது - "ப$_3$ஹுஶ்ருதாநாம் வ்ருத்$_3$த$_4$ாநாம் ப்$_3$ராஹ்மணாநாம் உபாஸிதா" என்கிறபடியே - அறியக்கற்றுவல்லாராகை; v மந்த்ர த்ரயமாவது - ஶாஸ்த்ரருசிபரிக்$_3$ருஹீதமும், ஶரண்யருசி பரிக்$_3$ருஹீதமும், ஆசார்யருசிபரிக்$_3$ருஹீதமும்; w பத$_3$த்ரய மாவது - அந்யஶேஷத்வ நிவ்ருத்தியும், அந்யோபாய நிவ்ருத்தியும், ப்ரயோஜநாந்தர நிவ்ருத்தியும் பண்ணிக் கொடுக்குமது; x ஜ்ஞாநத்ரயமாவது - ஸ்வஜ்ஞாநம், ப்ரா

---

இவனுக்குள்ளதாகக் கணக்கிடுகிறான் எம்பெருமான். s தன்னிடம் அத்$_3$வேஷமின்மை, ஆபி$_4$முக்$_2$யம் (ஈடுபாடு), நல்லோர்களோடு பேசிப் போதுபோக்குகை என்னும் மூன்றுவகைப்பட்ட ஆநுகூல்யங்களை இவனுக்கு உண்டாகச் செய்கிறான் எம்பெருமான். t "ஶரீரத்தையும், பொருளையும், உயிரையும் நல்லாசிரியரின் பொருட்டு ஸமர்ப்பிக்க வேண்டும்" என்று சொல்லப்பட்ட ஶரீரஸமர்ப்பணம், அர்த்த$_2$ஸமர்ப்பணம், ப்ராணஸமர்ப்பணம் என்னும் மூன்றுவகைப்பட்ட ஆசார்யாநுவர்த்தனத்தை இவனுக்கு ஏற்படும்படி செய்கிறான் எம்பெருமான். u,v "நல்ல கேள்விஞானமுடையவர்களாய் வயதுமுதிர்ந்தவர்களாய் வேத$_3$ார்த்த$_2$மறிந்தவர்களான பெரியோர்களை உபாஸிக்கிறவன்" [ரா-அ 2-33] என்கிறபடியே மூவகைப்பட்ட அதி$_4$காரத்தை (தகுதியை) உடையவனாய், அறியக்கற்று வல்லவனான ஆசார்யனின் உபதே$_3$ஶமான ரஹஸ்யத்ரயமந்த்ரோபதே$_3$ஶத்தாலே இவனுடைய நெஞ்சிலுள்ள அழுக்கையறுக்கிறான் எம்பெருமான். v மூன்று மந்த்ரங்களாவன—(1) ஶாஸ்த்ரங்களில் மிகவும் ஆத$_3$ரிக்கப்பட்ட திருமந்த்ரம். (2) ஶரண்யனான கீ$_3$தாசார்யன் மிகவும் விரும்பி வெளியிட்ட சரமஶ்லோகம். (3) நம் ஆசார்யர்கள் மிகவும் விரும்பி எப்போதும் அநுஸந்தி$_4$க்கும் த்$_3$வயம் என்னும் ரஹஸ்யத்ரயமந்த்ரங்கள். w திருவஷ்டாக்ஷரத்தின் மூன்று பத$_3$ங்கள்; அவையாவன-(1) ஜீவன் எம்பெருமானையொழிந்த மற்றெவருக்கும் உரியவனாயிராதவன் என்று அறிவிக்கும் ப்ரணவம். (2) எம்பெருமானையொழிய வேறெதையும் உபாயமாகக் கொள்ளத் தகாதவன் என்று அறிவிக்கும் நமஶ்ஶப்$_3$த$_3$ம். (3) அவன் முகமலர்த்திக்கேயான கைங்கர்யமொழிய வேறொன்றும் இவனுக்குப் பயனன்று என்று விளக்கும் 'நாராயணாய' என்னும் பத$_3$ம். ஆக மூன்று பத$_3$ங்கள்; இம்மூன்று பத$_3$ங்களையும் எம்பெருமான் ஜீவனுக்கு ஆசார்யன் மூலமாக அறிவிப்பிக்கிறான். x இப்பத$_3$ங்

பகஜ்ஞாநம், ப்ராப்யஜ்ஞாநம்; y ஸங்காத்ரயமாவது-விரோதி₄ பூ₄யஸ்தையும், ப்ராப்யப்ராசுர்யமும், உபாயலகு₄த்வமும்; z ஆகாரத்ரயமாவது - ஈஸ்வரனுடைய மேன்மையும், நீர்மையும், வடிவழகும் ; அதாவது z₂ "முன்னையமரர் முதல்வன் வண்டுவராபதி மன்னன் மணிவண்ணன்" a பர்வத்ரயமாவது - ஸ்வரூபவிரோதி₄ நிவ்ருத்தியும், ஸாத₄நவிரோதி₄ நிவ்ருத்தியும், ப்ராப்யவிரோதி₄ நிவ்ருத்தியும், b லோகத்ரயமாவது-பூ₄ம்யந்தரிக்ஷஸ்வர்க்க₃ம் ;-c பாத₃த்ரயமாவது-த்ரிபாத்₃ விபூ₄தி; d ஸாம்யத்ரயமாவது-ரூபஸாம்யம், கு₃ணஸாம்யம், பே₄ாக₃ஸாம்யம்; e புன்மைத்ரயமாவது-அல்பம், அஸ்தி₂ரம், அபே₄ாக்₃யம்; அறுகையாவது-இவையின்றியிலேயொழிகை.

---

களின் மூலம். ஜீவஸ்வரூபத்தைப் பற்றியும் உபாயத்தைப் பற்றியும் உபேயத்தைப்பற்றியும் ஜ்ஞானத்தை உறுதியாக உண்டாக்குகிறான். y (1) அநாதி₃காலமாகச் சேர்ந்திருக்கும் புண்யபாபங்கள் எளிதில் அழியுமோ ? (2) தலைசிறந்த பரமபுருஷார்த்த₂ம் இத்தனை எளிதில் கிடைக்குமோ ? (3) ப்ரபத்தியாகிற மிக எளிய உபாயத்தால் மிகச் சிறந்த பயனை அடையமுடியுமோ ? என்னும் மூன்று ஐயத்தையும் போக்குகிறான் எம்பெருமான். z (தன்னுடைய) மேன்மை, நீர்மை, வடிவழகு என்னும் மூன்று முக்₂யமான தன்மைகளிலே ஈடுபடுத்துகிறான் எம்பெருமான். z₂ [திருவாய் 5-3.6] 429-ம் வார்த்தையில் எடுக்கப்பட்ட மற்ற பாசுரங்களும் காண்க. a பத₃த்ரயத்திலும் (w) சொல்லப்பட்ட மூன்றுவகைப்பட்ட விரோதி₄களையும் படிப்படியாகப் போக்கித் தன்னை அநுப₄விக்கையாகிற பே₄ாக₃த்தைக்கொடுக்கிறான் எம்பெருமான். b பூ₄மி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்க₃ம் என்னும் மூன்று உலகங்களிலும் ஜீவனுக்கு ஆசையில்லாமல் செய்கிறான். c த்ரிபாத்₃ விபூ₄தி என்னும் பரமபத₃த்துக்கு இவனை அழைத்துச் செல்கிறான். d ரூபம், கு₃ணம், பே₄ாக₃ம் என்னும் மூன்றிலும் இவனைத் தன்னையொத்தவனாக்குகிறான் எம்பெருமான். e மிகத் தாழ்ந்ததாயிருக்கை, நிலையற்றதாயிருக்கை, இனிமையற்றதாயிருக்கை என்னும் மூன்று குற்றங்களுமில்லாத பரமபுருஷார்த்த₂த்தைப் பரமபத₃த்திலே இந்த ஜீவனை அநுப₄விக்கச் செய்கிறான் எம்பெருமான்.

### நானூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

இவ்வார்த்தையில் எம்பெருமான் நமக்குச்செய்யும் நன்மைகளைத் தொகுத்துக் காட்டுகிறார் ஆச்சான்பிள்ளை. அவற்றில் எம்பெருமான்

## நானூற்றுமுப்பத்திரண்டாம் வார்த்தை

ஸங்க$_3$த்தைக்கழித்து ஈஷணையைக்கழித்து பா$_3$ல்யத்தைக்கழித்து யௌவநத்தைக்கழித்து ஜரையைக்கழித்து மரணத்தைக்கழித்து நரகத்தைக்கழித்து அவித்$_3$யையைக் கழித்து கர்மத்தைக்கழித்து வாஸநையைக்கழித்து தாபத்ரயத்தைக்கழித்து ஸூக்ஷ்மத்ரயத்தைக்கழித்து, விரஜைக்கு அக்கரைப்படுத்தி, லோகப்ராப்தியையுண்டாக்கி, ரூபப் ராப்தியையுண்டாக்கி, ஸமீபப்ராப்தியையுண்டாக்கி, ஸாயுஜ்யத்தையுண்டாக்கி, ஜ்ஞாநத்தையுண்டாக்கி, ப$_3$லத்தையுண்டாக்கி, ஐஶ்வர்யத்தையுண்டாக்கி, வீர்யத்தையுண்டாக்கி, ஶக்தியையுண்டாக்கி, தேஜஸ்ஸையுண்டாக்கி, விக்$_3$ரஹாநுப$_4$வத்தையுண்டாக்கி, கைங்கர்யத்தையுண்டாக்கி, இவன் கைங்கர்யத்தைக்கண்டு அவனுகந்தால் அவனுகந்தபடிகண்டு உகக்கை ஶேஷத்வத்துக்கு ப்ரயோஜநம் என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தார்.

---

*ஜீவனுக்குக் கழிக்குமவை சில. அவையாவன:— (1) ஸங்க$_3$ம் (விஷயங்களில் பற்று). (2) ஈஷணை. வார்த்தை 431 i காண்க. (3) பா$_3$ல்யம், யௌவநம், கிழத்தனம், மரணம் என்னும் சரீரநிலைகள். (4) பாபப$_2$லமான நரகம். (5) அவித்$_3$யை (அஜ்ஞானம்). (6) கர்மம் (புண்யபாபங்கள்). (7) வாஸனை. (8) தாபத்ரயம் (வார்த்தை 431 k காண்க.) (9) பூ$_4$தஸூக்ஷ்மம், இந்த்$_3$ரியங்கள், ப்ராணன் என்னும் ஸூக்ஷ்மத்ரயம். இனி எம்பெருமான் செய்யும் சேமங்கள் பின்வருமாறு:— (1) பிராக்ருதலோகங்களுக்கு எல்லையான விரஜையைத் தாண்டுவிக்கிறான். (2) பரமபத$_3$த்தைஅடைவிக்கிறான் இது ஸாலோக்யம். (3) தன்னைப் போன்ற அப்ராக்ருதரூபத்தை உண்டாக்குகிறான். இது ஸாரூப்யம். (4) தனக்கு அருகில் நம்மை வைத்துக்கொள்கிறான். இது ஸாமீப்யம். (5) தன்னையொத்த கு$_3$ணங்களை உடையவராக நம்மை ஆக்குகிறான். இது ஸாயுஜ்யம். ( இதன் விவரணம் பின்வரும் சேமங்கள் ). (6) ஜ்ஞாநம். (7) ப$_3$லம். (8) ஐஶ்வர்யம். (9) வீர்யம். (10) ஶக்தி, (11) தேஜஸ் என்னும் ஷட்$_3$கு$_3$ணங்களை உண்டாக்குகிறான். (12) தன் தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்தை அநுப$_4$விக்கச் செய்கிறான். (13) தனக்குக் கைங்கர்யம் செய்யும்படி செய்கிறான். (14) அக்கைங்கர்யத்தைக் கண்டு உகக்கிறான். இப்படி ஶேஷிக்கு ஏற்படும் உகப்*

## நானூற்றுமுப்பத்துமூன்றாம் வார்த்தை

ஶ்ரிய:பதியாகிற காளமேக₄த்தினின்றும்-ஸௌஹார்த்த₃மென்கிறதொரு பாட்டமழை விழுந்து, க்ருபையாகிற நிலத்திலே ஜீவனாகிற ஓஷதி₄முளைத்து, ஆசார்யனாகிற இப்பிதாவுக்கு இரக்கமென்கிற ஸங்க₃த்தாலே ஜ்ஞாநமென்கிற மாதாவின் பக்கலிலே சேர்ந்து ஜீவாத்மாவாகிற பெண்பிள்ளை பிறக்க, ருசியாகிற ஜீவநத்தையிட்டு வளர்த்துக்கொண்டு போந்து, விவேகமாகிற பக்வம் பிறந்தவாறே பரமஶேஷிகளாகிற ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளைச்சேர்த்து, எம்பெருமானாகிற வரன் கையிலே ஸ்வரூபஜ்ஞாநமென்கிற த₄ாரையை வார்த்துக் கொடுக்க, அவனும் ஶேஷத்வமாகிற மந்த்ரவாஸஸ்ஸையுடுத்தி, ஶேஷவ்ருத்தியாகிற மாங்க₃ல்யஸூத்ரத்தைக்கட்டி,

---

பைக் கண்டு தானும் உகக்கை ஶேஷபூ₄தனான ஜீவனுடைய ஶேஷத்வத்துக்குப் பயனாகும்.

### நானூற்றுமுப்பத்துமூன்றாம் வார்த்தை

ஆத்மவிவாஹத்தை வர்ணிப்பது இவ்வார்த்தை. ஆசார்ய ஹ்ருத₃யம் 121ம் சூர்ணை இதே ரீதியில் அமைந்தது. ஸ்வர்க்க₃த்தை அநுப₄வித்து, புண்யம் முடிந்தவுடன் மேக₄த்தின் மூலமாக ஜீவன் பயிரில் சேர்ந்து, ஒரு புருஷ ஶரீரத்தில் சேர்ந்து, அதற்குப்பின் தாயின் கருப்பையில் சேர்ந்து, அதன்பிறகு குழந்தையாகப் பிறக்கிறான் என்பது பஞ்சாக்₃நிவித்₃யையில் கண்ட முறை. அதுபோலே ஸ்ரீமந்நாராயணனாகிற கார்மேக₄த்திலிருந்து ஸௌஹார்த்த₃ம் (எல்லாவுயிர்களிடத்தும் நட்பு) என்கிறதொரு பாட்டம் மழைவிழுந்து க்ருபையாகிற நிலத்திலே ஜீவனாகிற பயிர்முளைத்து, ஆசார்யன் என்னும் பிதாவுக்கு இரக்கமென்கிற புணர்ச்சியாலே ஜ்ஞானமென்கிற தாயோடு சேர்த்தியேற்பட்டு ஜீவாத்மாவாகிற பெண்பிள்ளை பிறக்கிறாள். அவளை ஆசார்யனாகிற தந்தை ருசியாகிற உணவையிட்டு வளர்த்துக்கொண்டுவந்து விவேகமாகிற பக்வம் பிறந்தபின்பு பரமஶேஷிகளாகிற ஸ்ரீவைஷ்ணவர்களாகிற தோழிகளோடு கூட்டி, எம்பெருமானாகிற மணமகன் கையிலே ஸ்வரூபஜ்ஞானமாகிற நீரை வார்த்துக் கந்யகாத₃ானமாகக் கொடுக்கிறான். எம்பெருமானாகிற மணமகனும் ஜீவனாகிற இம்மணப்பெண்ணுக்கு ஶேஷத்வமாகிற மந்திரக்கோடியையுடுத்தச்செய்து, ஶேஷனுக்குரிய செயலான கைங்கர்ய

ரூபநாமங்களென்கிற ஆப₄ரணங்களைப்பூட்டி, கையைப் பிடித்துக்கொண்டுபோந்து அத்₄யவஸாயமென்கிற ஆஸநத்திலேகொண்டிருத்தி, ப்ராபகஜ்ஞாநமென்பதொரு அக்₃நியை வளர்த்து, இதரோபாயத்யாக₃மென்கிற ஸமிதை₄களையிட்டு ஸித்₃தே₄ாபாய ஸ்வீகாரமென்கிற ப்ரத₄ாநாஹுதியைப் பண்ணி, மூலமந்த்ரத்தாலே ஜயாதி₃ஹோமங்களைப்பண்ணி ஶாஸ்த்ரங்களாகிற பொரியைச்சிதறி, ஸம்ப₃ந்த₄ஜ்ஞாநமாகிற பூர்ணாஹுதியாலே ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄ங்களை நிஶ்ஶேஷமாக்கி, நிர்ப்ப₄ரத்வாநுஸந்த₄ாநம் பண்ணி, பூர்வாசார்யர்களாகிற ப₃ந்து₄க்களை முன்னிலையாக்கி, மாதா பிதாக்களிருவரும் சேரவிருந்து காட்டிக்கொடுக்க, ஆழ்வார்களீரச்சொல்லாகிற மூ(அ?)ப்போடே சேரவிட,வாத்ஸல்யாதி₃ கு₃ணயுக்தனாய் அவனும் ப₄ர்த்தாவான ஆகாரம் குலையாதபடி அணைத்து நோக்கிக்கொண்டுபோந்து த்வரையாகிற பர்வம் விளைந்தவாறே அவனும் தன் ப்ரத₄ாநமஹிஷியுங்கூட அந்த:

---

மாகிற தாலியைக் கட்டி, வைஷ்ணவ ரூபநாமங்களென்கிற ஆப₄ரணங்களைப் பூட்டிக் கையைப்பிடித்து அழைத்துக்கொண்டுவந்து ஸ்வரூபத்தில் உறுதியாகிற ஆஸனத்திலே இருக்கச்செய்து, உபாயமாகிற தன்னை(எம்பெருமானை)ப் பற்றிய அறிவாகிற அக்₃னியை வளர்த்து, மற்ற உபாயங்களைக் கைவிடுகையாகிற ஸமித்துக்களையிட்டு ஸித்₃தே₄ாபாயமாகிற தன்னை இம்மணமகள் பற்றுவதாகிற முக்₂யமான ஆஹுதியைப்பண்ணி, மூலமந்த்ரமாகிற திருவஷ்டாக்ஷரத்தாலே ஜயாதி₃ஹோமங்களைப்பண்ணி, ஶாஸ்த்ரங்களாகிற பொரியைச் சிதறி லாஜஹோமம் செய்து, ஸம்ப₃ந்த₄ஜ்ஞானமாகிற பூர்ணாஹுதியாலே தன்னையடையத்தடைகளை அடியோடு நீக்கி, ஜீவனாகிற மணமகளைக் கவலையற்றவளாகச் செய்து, பூர்வாசார்யர்களாகிற உறவினர்கள் முன்னிலையிலே ஜ்ஞானமாகிற தாய் ஆசார்யனாகிற தந்தைஆகிய இருவரும் சேர்ந்திருந்து கையைப்பிடித்துக்கொடுக்க, ஆழ்வார்களின் ஈரச்சொல்லாகிற நீரோடே சேரவிட, வாத்ஸல்யம் முதலான கு₃ணங்களோடு கூடின மணமகனான எம்பெருமானும் ப₄ர்த்தாவான தன் தன்மைக்குத் தக்கபடி ப₄ார்யையான இந்த ஜீவனாகிற மணமகளை அணைத்து ரக்ஷித்துக்கொண்டுபோந்து, த்வரையாகிற நிலை விளைந்தவுடன் மணமகனான எம்பெருமான், தன் ப்ரத₄ானமஹிஷியான பெரியபிராட்டியாரோடு கூட அந்தப்புரக்கட்டிலான

புரக்கட்டிலிலே கொடுபோய், அந்தமில்பேரின்பத்தடியராகிற ப₃ந்து₄க்களோடே சேர்ந்து, ஹர்ஷப்ரகர்ஷத்தோடே ஆத₃ரிக்க, ப்ரீதிவெள்ளமாகிற படுக்கையிலேகொண்டேற, விஷய வைலக்ஷண்யமாகிற பே₄ாகே₃ாபகரணங்களோடே, ஸகல வித₄ கைங்கர்யங்களாகிற அநுப₄வத்தோடேமூட்ட, ஆநந்த₃மாகிற பெருக்காற்றிலே ஆழங்காற்பட்டு, "நம:" என்பது, "போற்றி" என்பது, "ஜிதம்" என்பது, "பல்லாண்டு" என்பதாகாநிற்கும்.

## நானூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை

ப₄க₃வத்₃விஷயம் "அப்பொழுதைக்கப்பொழுதென்னுராவமுதமே" என்றார்;-"பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய்பிரகிருதி மானுங்கார மனங்கள்" என்கிறபடியே - இருபத்துநால்வரேறின ஆக₃ாரத்திலே, "மார்வமென்பதோர்கோயிலமைத்து மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி" என்கிறபடியே நடுவிற்றிருமுற்றத்திலே இருபத்தறுவராவானை உகந்தருளப்பண்ணி, அநந்

---

ஆதி₃ஶேஷ ஶயனத்துக்கு அழைத்துப்போய், "அந்தமில்பேரின்பத்தடியர்" [திருவாய் 10-9-11] என்கிற உறவினர்களோடே சேர்ந்து ஆநந்த₃ மிகுதியோடு ஆதரிக்க, அன்பு வெள்ளமாகிற படுக்கையிலே இம்மணமகளைக்கொண்டு ஏறி, விஷயச் சிறப்பாகிற பே₄ாகே₃ாபகரணங்களோடு கூட ஸகலவித₄ கைங்கர்யங்களாகிற அநுப₄வத்திலே மூட்ட, ஆநந்த₃மாகிற பெருக்காற்றிலே குடைந்தாடி, நம:, போற்றி, ஜிதம், பல்லாண்டு என்னும் மங்களாஶாஸன ஶப்₃த₃ங்களைப்பாடிக் கொண்டிருக்கிறாள் மணமகளாகிற இந்த ஜீவன்.

**நானூற்றுமுப்பத்துநாலாம் வார்த்தை**

ஜீவன் செய்யவேண்டிய அந்தர்யாம்யாராத₄னத்தைக் காட்டுகிறது இவ்வார்த்தை. நம்மாழ்வார் "அப்பொழுதைக்கப்பொழுதென் ஆராவமுதமே" [திருவாய் 2-5-4] என்று அருளியது இவ்வந்தர்யாமியையே. இனி இந்த அந்தர்யாம்யாராத₄ன ப்ரக்ரியை விவரிக்கப்படுகிறது. "பொங்கைம்புலனும்" [திருவாய் 10-7-10] என்கிறபடியே இருபத்துநாலு தத்துவங்களைக்கொண்டு கட்டப்பெற்ற ஶரீரமாகிற பெருங்கோயிலிலே "மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னும் தெய்வத்தைநாட்டி" [பெரியாழ்திரு 4-5-3] எனப்பட்ட மார்பாகிற க₃ர்ப்ப₄க்₃ருஹத்திலே இருபத்தாருவது தத்துவமான எம்பெருமானை ப்ரதிஷ்டை₂செய்து வேறெவருக்கும் உரியவனுயிராமல்,

யார்ஹறுய் - அநந்யஶரணறுய், அநந்யபே₄ாக₃றுய், ஜ்ஞா நாநந்தி₃யான இருபத்தைவரான ஆத்மா திருவாராத₄நம் பண்ணும் நம்பியார்க்கும் பரத்வமெட்டாது, வ்யூஹம் கால் கடியார்க்கு, அவதாரம் அக்காலத்திலுள்ளார்க்கு, அர்ச்சாவ தாரம் உகந்தருளின நிலங்களிலே எப்போதும் திருவடிகளைப் பிடித்திருக்கவொண்ணுது, இவனுக்கு எப்போதுமொக்கப் பற்றலாவது - அந்தர்யாமித்வமேயிறே. இவனையே குறித்து நிற்கிறவிடமிறே அவ்விடம்; அல்லாதவிடங்களிற்காட்டில் அவன் அதிப்ராவண்யம் பண்ணுநிற்பதும் இங்கேயிறே. எங்ஙனேயென்னில்; - "அந்தாமத்தன்புசெய்தென்னுவிசேரம் மான்" என்றும், "பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட் டோடி வந்தென் மனக்கடலில் வாழவல்ல மாயமணுள நம்பி" என்றும், "வில்லாளன் நெஞ்சத்துளன்" என்றும், "கண்ணன் மனத்துள்ளே நிற்கவும்" என்றும், "திருமாலிருஞ்சோலைப் பொருப்பேயுறைகின்ற பிரான் இன்று வந்து இருப்பேனென் றென்னெஞ்சு நிறையப் புகுந்தான்" என்றும், "நிற்பது மிருப்பதும் கிடப்பதும் என்னெஞ்சுளே" என்றும்.

---

வேறெந்த உபாயமுமில்லாமல், வேறொரு பே₄ாக₃முமில்லாமல் ஜ்ஞானநந்த₃ஸ்வரூபத்தை உடையவனை இருபத்தைந்தாம் தத்வ மான ஆத்மா நம்பியாராகிற அர்ச்சகராயிருந்து திருவாராத₄னம் செய்யவேண்டும். இவ்வர்ச்சகருக்குப் பரத்வமாகிற பரவாஸுதே₃வ நிலை எட்டாது, வாஸுதே₃வன், ஸங்கர்ஷணன், ப்ரத்₃யும்நன், அநிருத்₃த₄னென்னும் வ்யூஹநிலையும் அங்கு செல்லக்கூடிய கால் வலிமையுள்ளவர்களுக்கே எட்டும். ராமன், க்ருஷ்ணன் முதலான விப₄வாவதாரங்கள் அக்காலத்திலுள்ளார்க்கே பயன்படும். அர்ச்சா வதாரமான உகந்தருளின நிலங்களிலே எப்போதும் கைங்கர்யம் செய்வது இயலாது. ஆகையால் இவனுக்கு ஸத₃ாஸர்வகாலமும் பற்றக்கூடியது அந்தர்யாமி நிலையேயாகும். இவனைத் திருத்துவதற் காகவே நிற்கிறவிடமன்றோ அந்நிலை. பரம், வ்யூஹம் முதலான மற்ற விடங்களில் இருந்துகொண்டு எம்பெருமான் ஜீவனிடம் பண்ணும் அன்பைக் காட்டிலும் மிகுதியான அன்பை இவ்வந்தர்யாமி நிலையி லிருந்துகொண்டே அதி₄கமாகப்பொழிகிறுன். இதைப் பின்வரும் அருளிச்செயல்கள் தெளிவுபடுத்துகின்றன. (1) [திருவாய் 2-5-1] (2)[பெரியாழ்திரு 5-4-9] (3)[நான்திருவ 85] (4)[பெரியதிரு 11-3-7] (5) [திருவாய் 10-8-6] (6) [திருச்சந்த 65]

இங்கிருக்குமிடத்தில் தானொருவனுமேயோ ? என்னில்:- "அரவிந்தப்பாவையுந்தானும் அகம்படி வந்து புகுந்து"என்கிற படியே நாய்ச்சிமாரோடும் ஸர்வபரிகரத்தோடும் கூடியிருக்கிற இவனை இந்நம்பியார் திருவாராத₄நம் பண்ணும்படி:- "ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்த₂ாய" என்கிறபடியே ஸத்வோத்தர காலத்திலே பிறந்து, "ஆத்மநோ ஹிதம்" என்கிற நன்ஞானத்துறைபடிந்தாடி, அத்துறையிலே ஒரு குடம் திருமஞ்சநத்தை யெடுத்து, கு₃ருபரம்பராநுஸந்த₄ாநத்தாலே கோயிலிலே வந்து அந்யஶேஷத்வநிவ்ருத்தி பூர்வகமான அநந்யார்ஹஶேஷத்வாநுஸந்த₄ாநத்தாலே தண்டனிட்டு, உய்த்துணர்வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி, அநந்யஶரணத்வாநுஸந்த₄ாநமாகிற திருவிளக்கை எழத்

---

இந்த அந்தர்யாமி நிலையில் எம்பெருமான் தனியாக எழுந்தருளியிருக்கிறானோ? எனில் "அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும் அரவிந்தப் பாவையும் தானும் அகம்படிவந்து புகுந்து" [பெரியாழ் திரு 5-2-10] என்கிறபடியே நாய்ச்சிமாரோடும் ஆதி₃ஶேஷன் முதலான பரிஜனங்களோடும் கூடியேயிருக்கிறான். இந்த எம்பெருமானை இந்த ஜீவனாகிற அர்ச்சகன் தினந்தோறும் திருவாராத₄னம் பண்ணும் ப்ரகாரம் இனி விவரிக்கப்படுகிறது. "ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்த₂ாய சிந்தயேத்" என்கிறபடியே "சிற்றஞ்சிறுகாலே" [திருப்பாவை 29] எனப்படும் ப்₃ராஹ்ம முஹூர்த்தமாகிற ஸத்வகு₃ணம் நிறைந்த காலத்திலே விழிப்படைந்து எம்பெருமானைப் பற்றிய சிந்தனையாகிற பிறவியை அடையவேண்டும். முற்கூறிய ப்ரமாணத்தில் "ஆத்மநோ ஹிதம் சிந்தயேத்" என்று 'தனக்கு ஹிதத்தைச் சிந்திக்கவேண்டும்' என்று கூறியிருக்கையாலே "காலை நன்ஞானத்துறைபடிந்தாடி" [திருவிருத்தம் 93] என்று ஆழ்வார் அருளியபடியே, ஹிதசிந்தனமாகிற நன்ஞானத்துறையிலே ஸ்நானம் பண்ணவேண்டும். அந்தத் துறையிலிருந்து ஒரு குடம் திருமஞ்சனத்தை (ஹிதசிந்தனத்தை) எடுத்து கு₃ருபரம்பரையை அநுஸந்தி₄த்துக்கொண்டு அந்தர்யாமி எம்பெருமானுடைய கோயிலிலே மானஸிகமாக வந்து "வேறெவர்க்கும் அடியேன் அடிமைப்பட்டவன் அல்லன். எம்பெருமானுக்கே உரியேனாவேன்"என்னும் அநுஸந்த₄ானமாகிற தீ₃ர்க்க₄த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்து "உய்த்துணர்வென்னும் ஒளிகொள்விளக்கேற்றி" [மூன்-திருவ 94] என்கிறபடியே "எம்பெருமான் ஒருவனே நாம் உய்வதற்கு உபாயம்" என்னும் அநுஸந்த₄ானமாகிற

தூண்டி, அநந்யபோ$_4$க$_3$த்வாநுஸந்தா$_4$நத்தாலே ப்ரயோஜநாந்தரமாகிற துராலை விலக்கிவிட்டு, ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாநாநுஸந்தா$_4$நத்தாலே திருவடி விளக்கி, "அன்பினால் ஞானநீர்கொண்டாட்டுவன் அடியனேனே" என்கிற படியே திருமஞ்சநஞ்செய்து, "வான்பட்டாடையுமஃதே" என்கிறபடியே வாசிகாநுஸந்தா$_4$நத்தாலே திருப்பரியட்டஞ்சாத்தி, "பூசுஞ்சாந்தென்னெஞ்சமே" என்கிறபடியே மாநஸாநுஸந்தா$_4$நத்தாலே சாத்துப்படிசாத்தி, "தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே" என்கிற புரையற்ற அஞ்ஜலியாலே திருவாப$_4$ரணஞ்சாத்தி, "நாடாத மலர்" என்றும், "விண்டுவாடா மலர்" என்றும், "இன மலரெட்டுமிட்டு" என்றும், "கந்தமாமலரெட்டுமிட்டு" என்றும் சொல்லுகிற ஆநுகூல்யத்தாலே திருமாலைசாத்தி, "பூவிற்புகையும் விளக்குஞ்சாந்தமும் நீரும்மலிந்து மேவித்

---

ஞானச்சுடர் விளக்கை ஏற்றி, 'எம்பெருமானொருவனே போ$_4$க்$_3$யம்' என்னும் அநுஸந்தா$_4$னத்தாலே மற்ற பயன்களாகிற கோதான பகுதியை விலக்கிவிட்டு அந்த ஒளி விளக்கை நன்கு ஒளிவிடும்படி தூண்டிவிடவேண்டும். எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள உறவு பற்றிய அநுஸந்தா$_4$னத்தாலே அவனுக்குத் திருவடி விளக்கவேண்டும். " அன்பினால் ஞானநீர்கொண்டு ஆட்டுவன் அடியனேனே " [திருக்குறுந்தாண்டகம் 15] என்கிறபடியே ப$_4$க்தியாகிற ஞானநீரைக் கொண்டு திருமஞ்சனம் செய்யவேண்டும். " வாசகஞ்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே " [திருவாய் 4-3-2] என்கிறபடியே, வாயாரத்துதிக்கையாகிற வஸ்த்ரத்தை எம்பெருமானுக்குச் சாத்தவேண்டும். " பூசுஞ்சாந்தென் நெஞ்சமே " [திருவாய் 4-3.2] என்கிறபடியே நெஞ்சாலே அநுஸந்தி$_4$க்கையாகிற சந்தனத்தைச் சாத்தவேண்டும். " தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே ' [திருவாய் 4-3-2] என்கிறபடியே ஒரு பயனை எதிர்பாராத அஞ்ஜலியாகிற திருவாப$_4$ரணத்தைச் சாத்தவேண்டும். " நாடாத மலர் " [ திருவாய் 1 4 9] " விண்டுவாடா மலர் " [திருவாய் 9-10-3] "இனமலரெட்டுமிட்டு"[பெரியதிரு 1-2-7] "கந்தமாமலரெட்டுமிட்டு" [பெரியதிரு 3-5-6] என்று சொல்லுகிற ப$_4$க$_3$வதா$_3$நுகூல்யமாகிற வாடாத திருமாலையைச் சாத்தவேண்டும். "பூவிற்புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து மேவித்தொழு

தொழுமடியார்" என்கிற அநுஸந்த₄ாநத்தாலே தூ₄பங் கண்டருளப்பண்ணி, "மாடுவிடாதென்மனன், பாடுமென்நா- ஆடும் எனங்கம்" என்கிறபடியே ப₄க்திப்ரேரிதமான ந்ருத்த கீ₃தவாத்₃யங்கண்டருளப்பண்ணி, கர்த்ருத்வநிவ்ருத்திபூர்வக மான அநுஸந்த₄ாநத்தாலே "அஹமந்நம்" என்கிற படியே அவனுக்கு பே₄ாக்₃யமாக்கி, "அஹமந்நாத₃:" என் கிறபடியே தானும் பு₄ஜித்து, "எம்பெருமான் தாள்தொழுவா ரெப்பொழுதும் என்மனத்தேயிருக்கின்றூரே" என்கிறபடியே இப்படி உணர்த்தின ஆசார்யன் விஷயத்திலே க்ருதஜ்ஞ தாநுஸந்த₄ாநத்தோடே தலைக்கட்டுகை. இருபத்துநால்வ ரிலே அஞ்சுபேர் க்₃ராமணிகள். இவ்வைவரோடும் கூடா தாரைஶ்வர்யம் இது; இவ்வைவரோடும் கூடினூர் இமையாத கண் பறியுண்டுவிடுவார்கள்.

---

மடியாரும் பகவரும் மிக்கதுலகே" [திருவாய் 5-2-9] என்கிற பாசுரத்தை அநுஸந்தி₄ப்பதாகிற தூ₄பத்தை ஸமர்ப்பிக்கவேண்டும், "மாடுவிடாதென்மனன்; பாடுமென்நா; ஆடுமென் அங்கம்" [திருவாய் 1-6-3] என்கிறபடியே எம்பெருமானிடம் அன்பினுல் செய்யப்படும் நாட்டியம், பாட்டு, வாத்₃யம் வாசித்தல் ஆகியவற்றைக் கண்டருளப் பண்ண வேண்டும். "இவற்றையெல்லாம் நாம் செய்தோமல்லோம்" என்னும் அநுஸந்த₄ானத்தாலே "அஹமந்நம்" [தை-ப்₄ருகு₃ 10-6] [நான் எம் பெருமானுக்கு அன்னம்போல் பே₄ாக்₃யம் ஆனவன்] என்கிறபடியே எம்பெருமானுக்குத் தன்னை பே₄ாக்₃யமாக்கவேண்டும். "அஹமந்நாத₃:" [தை-ப்₄ரு₃கு 10-6] [என்னை உண்டு (அநுப₄வித்து) உகக்கும் எம் பெருமாளுகிற உணவை உண்பவன் நான்] என்கிறபடியே தன்னை அநுப₄வித்து உகக்கும் எம்பெருமானைத் தானும் அநுப₄விக்கவேண்டும். "எம்பெருமான் தாள்தொழுவார் எப்பொழுதும் என் மனத்தேயிருக்கின் றூரே" [பெரியதிரு 7-4-2] என்கிற பாசுரத்தை அநுஸந்தி₄த்து, இந்தத் திருவாராத₄நக்ரமத்தை நமக்குக் காட்டிய ஆசார்யவிஷயத்தில் நன்றி பாராட்டி, திருவாராத₄னத்தைப் பூர்த்திசெய்யவேண்டும். இருபத்துநாலு அசேதன தத்வங்களிலே மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஜ்ஞானேந்த்₃ரியங்களும் அனைவரையும் படாதபாடு படுத்தும் கிராம அதி₄காரிகளைப் போன்றவர்கள். இந்த ஐவருக்கு வசப்படாதவர்களுக்கு இந்த அந்தர்யாமி ஆராத₄நமாகிற செல்வம் கிட்டும். இவ்வைவர்க்கு வசப்பட்டவர்கள் "இமையாதகண்" [முதல்-திருவ 32] எனப்படும் ஞானக் கண்ணைப் பறிகொடுத்து விடுவார்கள்.

## நானூற்றுமுப்பத்தஞ்சாம் வார்த்தை

நம்மாழ்வார் அறிவுகலங்கினபோதோடு, அறிவுநடையாடினபோதோடு, a அஹங்காரம் தலைமண்டையிட்டபோதோடு, அநுவர்த்தநத்தோடு வாசியற மிது,நமல்லது வாய்திறக்க அறியார். எங்ஙனேயென்னில்-அறிவுகலங்கினபோது, b "சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்" என்பர்; அறிவு நடையாடினபோது, c "திருமால்! நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள், எம்பெருமான் தன்மையை யாரறிகிற்பார்" என்பர்; அஹங்காரம் தலைமண்டையிட்டபோது, d "திருமால் தலைக்கொண்ட நங்கட்கெங்கேவரும் தீவினை" என்பர்; அநுவர்த்தநத்தில் e "அடிமை செய்வார் திருமாலுக்கே" என்பர்.

## நானூற்றுமுப்பத்தாறும் வார்த்தை

திருமங்கையாழ்வாரை ஈஶ்வரன் ஆக்கலாம் விரகேதென்று பார்த்தவிடத்து, "இவர் விஷயாந்தர ப்ரவணராகையாலே இவர் பக்கல் ஶாஸ்த்ரம் ஜீவியாதாயிருந்தது; இவர் விஷயாந்தரங்களிலே வந்தால், 'இது விலக்ஷணம், இது அவிலக்ஷணம்' என்றறிகிற உள்மானம் புறமானம் அறிவாரொருத்தராயிருந்தார் என்கிற இதுவே பற்றுசாக நம்மை விஷயமாக்கினால் மீட்கக்கூடும்" என்று தன்வடிவைக் காட்ட, அதிலே அதிப்ரவணராய், அர்ச்சாவதாரத்துக்கு அவ்வருகு ஒன்றும் அறியாதபடியானார்.

---

**நானூற்றுமுப்பத்தைந்தாம் வார்த்தை**

a அஹங்காரம் — $ப_4க_3வத்_3$ஸம்$ப_3ந்த_4$த்தால் ஏற்படும் ஸாத்விகாஹங்காரம். b [திருவாய் 9-8-10] c [திருவாய் 8-3-9] d [திருவிருத்தம் 87] e [திருவாய் 6-5-11]

**நானூற்றுமுப்பத்தாறும் வார்த்தை**

திருமங்கையாழ்வார், இதர விஷயங்களில் பரமரஸிகராயிருந்து அவற்றில் ஏற்றத்தாழ்வுகளை அறிந்து மண்டுகிறவராயிருந்தபடியாலே, அந்த ரஸிகத்வத்தையே பற்றுசாகக்கொண்டு இவரைத்திருத்த நினைத்த எம்பெருமான், ஒப்பற்ற தன் வடிவழகைக் காட்ட, அதிலே மிகவும் ஈடுபட்டு, அர்ச்சாவதாரம் தவிர வேறொன்றை அறியாதவராக ஆனார் என்று கருத்து.

## நானூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை

நம்மாழ்வாரை ஈஶ்வரன் ஸ்வரூபத்தைக் காட்டி அங்கீ₃கரித்தான். அவருக்கு எல்லாம் பரத்வத்திலேயாயிருக்கும்: இவர்க்கு எல்லாம் அர்ச்சாவதாரத்திலேயாயிருக்கும். எங்ஙனேயென்னில்; அவர் தொழுவது a கண்ணன்விண்ணூரை; இவர்தொழுவது b கண்ணபுரந் தொழுதாளென்றும்; அவர் தூதுவிடுவது c "வீசுஞ்சிறகால் பறத்திர் விண்ணுடு நுங்கட்கெளிது" என்றும்; இவர் தூதுவிடுவது d "செங்கால மடநாராயின்றேசென்று திருக்கண்ணபுரம்புக்கு" என்றும்; அவர் மடலெடுப்பது e "சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான் றன்னை-குதிரியாய் மடலூர்தும்" என்றும்; இவர் மடலெடுப்பது f "சீரார்கணபுரம்...ஊராய வெல்லாம் ஒழியாமே... ஊராதொழியேன்" என்றும்; அவர் வளையிழப்பது-g விண்ணூர் தொழவே சரிகின்றது சங்கம்" என்றும்; இவர் வளையிழப்பது h "திருக்கண்ண புரத்துறையும் வரையெடுத்த பெருமானுக்கிழந்தேனென் வரிவளை" என்றும்; அவரெண்ணுவது i "மாகவைகுந்தம் காண்பதற்கென்மனம் ஏகமெண்ணும்" என்றும்; இவரெண்ணுவது-j "கண்ணபுரந்தொழும் கார்க்கடல் வண்ணர்மேல் எண்ணம்" என்றும்; அவர் விரும்புவது k "அந்தமில் பேரின்பத்தடியோடிருந்தமை" என்றும்; இவர் அந்தரங்க₃ம் l "காட்டினாய் கண்ணபுரத்துறையம்மானே" என்றும்; அவர்க்கு ஜ்ஞாநப்ரத₃ன் m "ஏனத்துருவாயிடந்தபிரான்"; இவர்க்கு ஜ்ஞாநப்ரத₃ன் n வயலாலிமண

---

**நானூற்றுமுப்பத்தேழாம் வார்த்தை**

நம்மாழ்வாருக்கும் திருமங்கையாழ்வாருக்குமுள்ள வேறுபாட்டை விளக்குகிறது இவ்வார்த்தை. நம்மாழ்வாருக்குப் பரத்வத்திலேயுள்ள ஈடுபாடு திருமங்கையாழ்வாருக்கு அர்ச்சாவதாரத்தில் உண்டு என்றபடி. a [திருவிருத்தம் 47 ] b பெரியதிரு 8-2-1] c [திருவிருத்தம் 54] d [திருநெடு 27] e [திருவாய் 5-3 9] f [சிறியதிருமடல்72-77] g [திருவிருத்தம் 47] h [பெரியதிரு 8-3-1] i [திருவாய் 9-3.7] j [பெரியதிரு 8-2-4] k [திருவாய் 10-9-11] l [பெரியதிரு 8-10-9] m [திருவிருத்தம் 99] n [பெரியதிரு 3.6-2] o [திருவா

வாளன்; அவருக்கு ேஶஷி o "ஒருமாதெய்வம் மற்றுடை யமோ யாமே" என்கிற ஜக$_3$த்காரணவஸ்து; இவர்க்கு ேஶஷி p "அரங்கநகரப்பா! துணியேனினி நின்னருளல்ல தெனக்கு" என்றும்; அவர்க்கு உபாயம் q "அந்நலனுடை யொருவனை நணுகினம் நாமே" என்றும், இவர்க்கு உபாயம் r "குறுங்குடிக்கே யென்னை உய்த்திடுமின்" என்றும்.

## நானூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

திருவடிகள்—ேஶஷியுமாய் உபாயமுமாய், உபேயமுமாய், ப$_3$ாத$_4$கமுமாய், ஸர்வரக்ஷகமுமாயிருக்கும். எங்ஙனே யென்னில்; a "துயரறு சுடரடி தொழுதெழென் மனனே" என்கையாலே - ேஶஷித்வம் சொல்லிற்று; b "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்கையாலே - உபாயத்வம் சொல்லிற்று; c "கோலமாமென் சென்னிக்குன் கமலமன்ன குரைகழலே" என்கையாலே-உபேயத்வம் சொல்லிற்று, d "அழித்தாயுன் திருவடியால்" என்கையாலே - ப$_3$ாத$_4$கத்வம் சொல்லிற்று; e "ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன்" என்கையாலே-ஸர்வரக்ஷகத்வம் சொல்லிற்று.

திருமேனியும்—ருசிஜநகமுமாய், உபாயமுமாய், உபேயமுமாய், ேஶஷியுமாய், ப$_3$ாத$_4$கமுமாயிருக்கும். எங்ஙனே யென்னில்;-f "காரார் திருமேனி கண்டதுவே காரணமா"

---

சிரியம் 7] p [பெரியதிரு 11-8.8] q [திருவாய் 1-1-3] r [பெரிய திரு 9-5].

**நானூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை**

எம்பெருமானுடைய திருவடிகளுக்குள்ள ேஶஷித்வம், உபாயத்வம், உபேயத்வம், ப$_3$ாத$_4$கத்வம், ஸர்வரக்ஷகத்வம் என்னும் பெருமைகளையும், திருமேனிக்குள்ள ருசிஜனகத்வம், உபாயத்வம், உபேயத்வம், ேஶஷித்வம், ப$_3$ாத$_4$கத்வம் ஆகிய பெருமைகளையும், திருவத$_4$ரத்துக்குள்ள த$_4$ாரகத்வம், ப்ராப்யத்வம், போ$_4$க்$_3$யத்வம், ப$_3$ாத$_4$கத்வம் என்னும் பெருமைகளையும், திருக்கண்களுக்குள்ள ரக்ஷகத்வம், ேஶஷித்வம், உபாயத்வம், ப$_3$ாத$_4$கத்வம் என்னும் பெருமைகளையும் அருளிச்செயல் சந்தைகளைக்காட்டி நிரூபிப்பது இந்த வார்த்தை. a [திருவாய் 1-1-1] b [திருவாய் 5-7-10] c [திருவாய் 4-3 6] d [திருவாய் 6-2-9] e [திருவாய் 5-3-3]

என்கையாலே - ருசிஜநகத்வம் சொல்லிற்று; g "வண்ண மருள்கொள்" என்கையாலே - உபாயத்வம் சொல்லிற்று; h "காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி" என்கையாலே - உபேயத்வம் சொல்லிற்று ; i "எம்மண்ணல் வண்ணமேயன்றி வாய் உரையாது" என்கையாலே-ஶேஷித்வம் சொல்லிற்று; j "சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர் திருவாகம் எம்மாவியீரும்" என்கையாலே ப$_3$ாத$_4$கத்வம் சொல்லிற்று.

திருவத$_4$ரமும்—த$_4$ாரகமுமாய்,/(ஶேஷியுமாய்,)ப்ராப்யமுமாய், பே$_4$ாக$_3$யமுமாய், ப$_3$ாத$_4$கமுமாயிருக்கும். எங்ஙனேயென்னில்; k "அமுதவாயிலூறிய நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கி இளைப்பை நீக்கீரே" என்கையாலே-த$_4$ாரகத்வம் சொல்லிற்று ; l "பவளவாய் முறுவலும் காண்போம் தோழீ" என்கையாலே - ப்ராப்யத்வம் சொல்லிற்று ; m "கனியிருந்தனைய செவ்வாய்" என்கையாலே-பே$_4$ாக்$_3$யத்வம் சொல்லிற்று ; n "முறுவல் எனதாவியடும்" என்கையாலே - ப$_3$ாத$_4$கத்வம் சொல்லிற்று.

திருக்கண்களும்—ரக்ஷகமுமாய், ஶேஷியுமாய், உபாயமுமாய், உபேயமுமாய், ப$_3$ாத$_4$கமுமாயிருக்கும். எங்ஙனேயென்னில்;-o "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" என்கையாலே-ரக்ஷகத்வம் சொல்லிற்று; p "அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை" என்கையாலே - ஶேஷித்வம் சொல்லிற்று ; q "அமலங்களாக விழிக்கும்" என்கையாலே - உபாயத்வம் சொல்லிற்று ; r "தாமரைக்கண்களுக்கற்றுத் தீர்ந்து" என்கையாலே - உபேயத்வம் சொல்லிற்று; s "தாமரைக்கண்கள் கொண்டீர்தியாலோ" என்கையாலே - ப$_3$ாத$_4$கத்வம் சொல்லிற்று.

f [சிறியதிருமடல் 55] g [திருவாய் 6-10 3] h [திருவாய் 5 3-4] i [பெரியதிரு 7-3-7] j [திருவாய் 9 9-6] k [நாச்.திரு 13-4] l [பெரியாழ்திரு 3-4-6] m [திருமாலை 18] n [திருவாய் 7-7-5] o [பெரியதிரு 7-1-9] p [திருவாய்6-7-10] q [திருவாய் 1-9-9] r [திருவாய்7-3-3] s [திருவாய் 10-3-1] / விவரணமில்லாமையால் இது ப்ரக்ஷிப்தம்.

வாளன்; அவருக்கு ஶேஷி o "ஒருமாதெய்வம் மற்றுடையமோ யாமே" என்கிற ஜகத்காரணவஸ்து; இவர்க்கு ஶேஷி p "அரங்கநகரப்பா! துணியேனினி நின்னருளல்லதெனக்கு" என்றும்; அவர்க்கு உபாயம் q "அந்நலனுடையொருவனை நணுகினம் நாமே" என்றும், இவர்க்கு உபாயம் r "குறுங்குடிக்கே யென்னை உய்த்திடுமின்" என்றும்.

## நானூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை

திருவடிகள்—ஶேஷியுமாய் உபாயமுமாய், உபேயமுமாய், பாதகமுமாய், ஸர்வரக்ஷகமுமாயிருக்கும். எங்ஙனேயென்னில்; a "துயரறு சுடரடி தொழுதெழென் மனனே" என்கையாலே - ஶேஷித்வம் சொல்லிற்று; b "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்கையாலே - உபாயத்வம் சொல்லிற்று; c "கோலமாமென் சென்னிக்குன் கமலமன்ன குரைகழலே" என்கையாலே-உபேயத்வம் சொல்லிற்று, d "அழித்தாயுன் திருவடியால்" என்கையாலே - பாதகத்வம் சொல்லிற்று; e "ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன்" என்கையாலே-ஸர்வரக்ஷகத்வம் சொல்லிற்று.

திருமேனியும்—ருசிஜநகமுமாய், உபாயமுமாய், உபேயமுமாய், ஶேஷியுமாய், பாதகமுமாயிருக்கும். எங்ஙனேயென்னில்;-f "காரார் திருமேனி கண்டதுவே காரணமா"

சிரியம் 7] p [பெரியதிரு 11-8-8] q [திருவாய் 1-1-3] r [பெரியதிரு 9-5].

**நானூற்றுமுப்பத்தெட்டாம் வார்த்தை**

எம்பெருமானுடைய திருவடிகளுக்குள்ள ஶேஷித்வம், உபாயத்வம், உபேயத்வம், பாதகத்வம், ஸர்வரக்ஷகத்வம் என்னும் பெருமைகளையும், திருமேனிக்குள்ள ருசிஜனகத்வம், உபாயத்வம், உபேயத்வம், ஶேஷித்வம், பாதகத்வம் ஆகிய பெருமைகளையும், திருவதரத்துக்குள்ள தாரகத்வம், ப்ராப்யத்வம், போக்யத்வம், பாதகத்வம் என்னும் பெருமைகளையும், திருக்கண்களுக்குள்ள ரக்ஷகத்வம், ஶேஷித்வம், உபாயத்வம், பாதகத்வம் என்னும் பெருமைகளையும் அருளிச்செயல் சந்தைகளைக்காட்டி நிரூபிப்பது இந்த வார்த்தை. a [திருவாய் 1-1-1] b [திருவாய் 5-7-10] c [திருவாய் 4-3 6] d [திருவாய் 6-2-9] e [திருவாய் 5-3-3]

## நானூற்றுநாற்பதாம் வார்த்தை

a "பச்சைமாமலைபோல் மேனி" என்றது - ஒருத்தரிட்டு ஆகாதொழிகையும், எல்லாவற்றிலும் பெருத்திருக்கையும், தானே எல்லாவற்றையும் த₄ரித்திருக்கவற்றாயிருக்கையும், இதிலே அந்வயித்தால் எங்கும் தெரியும்படியாயிருக்கையும், ஒருத்தரால் பேர்க்கப்போகாதாயிருக்கையும், இதிலே அந்வயித்தார்க்கு - ஸகல பே₄ாக₃ங்களும் இதுக்குள்ளே உண்டாயிருக்கையும், க₃த்யாக₃தியின்றியிலே இருக்கையும், அஞ்சினான் புகலிடமாயிருக்கையும்.

b "கடலேயுமொப்பார்" என்கிறது-எல்லாவற்றையும் வளைத்துக்கொண்டிருக்கையும், கண்ணுக்கிலக்காயிருக்கச்செய்தே ஆழமும் அகலமும் அளவிடவொண்ணாதாயிருக்கையும், உயிரற்றவற்றை உட்கொள்ளாதொழிகையும், ஸ்வஶக்தி

---

**நானூற்றுநாற்பதாம் வார்த்தை**

a "பச்சைமாமலைபோல்மேனி" [திருமாலை 2] என்று எம்பெருமான் திருமேனிக்கு உபமானமிட்டது—(1) ஒருவராலும் செய்யப்படாததாயிருக்கை, (2) எல்லாவற்றைக் காட்டிலும் பெருத்திருக்கை, (3) தானே எல்லாவற்றையும் த₄ரிக்கவல்லதாயிருக்கை, (4) இத்திருமேனியோடு தொடர்புகொண்டால் குன்றிலிட்ட விளக்குப்போலே எங்கும் தெரியும்படி இருக்கை, (5) எவராலும் பேர்க்கமுடியாததாயிருக்கை, (6) இதிலே தொடர்பு கொண்டவர்களுக்கு இதற்குள்ளேயே எல்லா இன்பங்களும் உண்டாயிருக்கை, (7) போதல் வருதல் இல்லாமல் நிலையாயிருக்கை, (8) அஞ்சுகிறவர்களுக்கெல்லாம் (ஸுக்₃ரீவனைப்போலே) போய்ச்சேருமிடமாயிருக்கை என்னும் மலைகளுக்குள்ள பெருமைகள் திருமேனிக்கும் உண்டு என்று காட்டுகிறது என்று கருத்து.

b "கடலேயுமொப்பார்" [பெரிய திரு 2-8-8] முதலான இடங்களில் எம்பெருமான் திருமேனிக்குக் கடலை உபமானமிட்டது—(1) எல்லாப் பொருள்களையும் சூழ்ந்து கொண்டிருக்கை, (2) கண்ணால் காணலாம்படி இருந்தபோதிலும் ஆழமும் (கா₃ம்பீ₄ர்யமும்) அகலமும் (பெருமையும்) அளவிடமுடியாததாயிருக்கை, 3. உயிர்போன

யாலே உள்ளுப்போகவொண்ணாதொழிகையும், தான் அள்ளி விநியோக₃ம் கொள்ளவொண்ணாதொழிகையும் ஒன்றின் வாயாலே விநியோக₃ங்கொள்ளலாயிருக்கையும், த₃ர்ஶ நீயமாயிருக்கையும்.

c "கார்முகில்" என்கிறது - த₃ர்ஶநமாத்ரத்தாலே தாப ஶாந்தியைப் பண்ணுகையும், எங்குமொக்க வர்ஷிக்கு மிடத்தில் தான் ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதொழி கையும், கொண்டவன் ப்ரத்யுபகாரம் தேடாதொழிகையும், ஒருபடிப்பட உபகரிக்கப்பெறுமையாலே உடம்பு வெளுக்கையும்.

d "எண்ணும் பொன்னுருவாய்" என்றது-நித்யமாயிருக்கை யாலும், ஸகலராலும் கௌ₃ரவிக்கப்படுவதொன்றாகையா லும், உரையுண்டாகையாலும், உண்டென்ன உயிர்நிற்கை

---

(அறிவில்லாத) பொருள்களை உள்ளே கொள்ளாததாயிருக்கை, 4. மஹாஶக்தி உள்ளவர்களும் தன் ஶக்தியாலே உள்ளே புக முடியாததாயிருக்கை, 5. எவராலும் தானாக அள்ளிப் பருகமுடியாத தாயிருக்கை, மேக₄த்தின்(ஆசார்யர்களின்) மூலமாகவே அநுப₄விக்கத் தக்கதாயிருக்கை, 6. அழகாயிருக்கை என்னும் கடலுக்குள்ள பெருமை கள் திருமேனிக்கும் உண்டு என்று காட்டுகிறது.

c "கார்முகில்" [திருவாய் 2-3-7] முதலான இடங்களில் எம் பெருமானுடைய திருமேனிக்குக் காளமேக₄த்தை உபமானமிட்டது— 1. கண்டவுடன் களைப்பை ஆற்றுகை, 2. அனைவர்க்கும் கைம்மாறு கருதாமல் விருப்பங்களைப் பொழிகை, 3. இதைப் பயன்படுத்திக் கொண்டவர்களும் ஒரு கைம்மாறு தேடவேண்டாதொழிகை, 4. நீடித்து உபகரிக்க இயலாவிடில் உடம்பு வெளுக்கை என்னும் காளமேக₄த்துக்குள்ள பெருமைகள் திருமேனிக்கும் உண்டு என்று காட்டுகிறது.

d "எண்ணும் பொன்னுருவாய்" [திருநெடு 1] முதலான இடங்களில் எம்பெருமானுடைய திருமேனிக்குப் பொன்னை உபமான மிட்டது—1. காரணமாகையாலே நித்யமாயிருக்கை, 2. அனைவரா லும் மதிக்கப்படுவதாயிருக்கை, 3. உரைக்க உரைக்க மாற்றுக் குறையாமலிருக்கை, 4. உடையவனை உயிர் த₄ரிக்கச் செய்கை,

யாலும், இது கைப்பட்டவன் நினைத்தபடி பண்ணலாயிருக்கை யாலும், அவனுக்கு அபி₄மதங்களெல்லாம் கொடுக்க வற்றாகையாலும், அலங்காரமாயிருக்கையாலும், ஆபத்துக்கு உதவுகையாலும், இது கைப்பட்டவனை "ஶ்ரீமாந்" என்கையாலும், இது கைப்பட்டவன் ஸகலராலும் ஸேவ்ய மாநனாயிருக்கையாலும் சொல்லுகிறது.

e "அந்தி மூன்றும் அனலோம்பும்" என்றது-காமாக்₃நி, கோபாக்₃நி, ஜாட₂ராக்₃நி. f "விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்கிறது - வெட்டிவாளிலும் சிரமன்வாள் கனத்திருக்கு மென்றபடி.

---

5. இதைப் பெற்றவன் நினைத்தபடி (*ஆப₄ரணம் முதலானவையாக) அழித்துப் பண்ணலாம்படியிருக்கை, 6. உடையவனுக்கு விரும்பியதை யெல்லாம் கொடுக்க வல்லதாயிருக்கை, 7. அலங்காரமாயிருக்கை, 8. ஆபத்துக்கு உதவுகை, 9. இதை உடையவனை 'ஶ்ரீமான்' என்று புகழும்படியிருக்கை, 10. இதையுடையவன் அனைவராலும் ஸேவிக்கப்படுமவனாயிருக்கை என்னும் பொன்னுக்குள்ள பெருமைகள் திருமேனிக்கும் உண்டு என்று காட்டுகிறது.

e "அந்திமூன்றும் அனலோம்பும்" [பெரியதிரு 7-5-1] என்னும் சந்தைக்கு ஸ்வாபதே₃ஶார்த்த₂மாவது—" 1. காமம் என்னும் நெருப்பு, 2. கோபமென்னும் நெருப்பு, 3. ஜாட₂ராக்₃னியினால் ஏற்படும் பசியாகிற நெருப்பு ஆகிய மூன்று அக்₃னிகளையும் எல்லாக் காலத்திலும் அடக்குகிறவர்கள்" என்று.

f "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே" [திருவிருத்தம் 79] என்று நம்மாழ்வார், நித்யஸூரிகளைக் காட்டிலும் இவ்வுலகத்தில் இருந்துகொண்டு எம்பெருமானையே தொழுகிறவர்கள் சிறந்தவர்கள் என்று அருளிச்செய்தார். இதற்கு ஒரு த்₃ருஷ்டாந்தம் இங்கு கூறப்படுகிறது. நித்யஸூரிகளுடைய புறந்தொழாமை எவரையும் திருத்துவதற்குப் பயன்படாதாகையாலே, வேலையில்லாமல் கிடக்கும் வெட்டிவாளை ஒத்தவர்கள் அவர்கள். இவ்வுலகில் உள்ளவர்களுடைய மறந்தும் புறந்தொழாமை பலரைத் திருத்துவதற்குப் பயன்படுகின்றதாகையாலே வேலை செய்யும் (சிரமம் செய்யும்) சிரமன் வாளையொத்தவர்கள் இவர்கள், வெட்டி வாளைக்

---

*எம்பெருமான் விஷயத்தில் பரநிலைமாறி தூதன், ஸாரதி முதலிய இழிதொழில்களையும் செய்பவனுக்குகை.

g "என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்றது- அணுக$_3$தமான பாபம் விபு$_4$க$_3$தமான க்ருபைக்கு எதிர் நிற்குமோ?

h நம்பிள்ளை ப்$_3$ரஹ்மதே$_3$ஶத்திலே எழுந்தருளி யிருக்கச்செய்தே பெரியகோயில் வள்ளலார் காணவர, "குலந்தரும்" என்கிற பாட்டில்-முதல்பத$_3$த்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்யவேணுமென்று பிள்ளையைக் கேட்க, "முரட்டுத் திருப்பதியானுன உன்னை நம்பூர்குலத்துக்கு ஶேஷமாக்கின குலம் தரும்" என்று விண்ணப்பஞ்செய்தார்.

i "என் முடிவுகாணுதே என்னுள்கலந்தானை" என்னு டைய ஸத்தாஹாநி காணும்படிக்கீடான க்ருபாஹாநி

---

காட்டிலும் சிரமன் வாளுக்கு மதிப்பு அதிகமாயிருப்பது போலே நித்யஸூரிகளைக் காட்டிலும் இவ்வுலகில் சீதனையே தொழுவார்க்கு மதிப்பு அதிகம் என்று கருத்து.

g "என் பிழைந்தாள் திருவடியின் தகவினுக்கு" [திருவாய் 1.4-7] என்னும் சந்தையில் "எம்பெருமானுடைய கிருபைக்கும் பொறுக்கவொண்ணுதபடி இவள் என்ன பிழையைச் செய்துவிட்டாள்" என்று அருளிச்செய்தார் நம்மாழ்வார். அணுவான ஜீவன் செய்த பாபம் விபு$_4$வான எம்பெருமானிடமுள்ள கிருபையாலே மன்னிக்க முடியாததாகுமோ? என்று கருத்து.

h ப்$_3$ரஹ்மதே$_3$ஶத்திலே நம்பிள்ளை எழுந்தருளியிருக்கும்போது அவருடைய ஶிஷ்யரான பெரியகோயில் வள்ளலார் அவரிடம் "குலந்தரும்" [பெரியதிரு 1.1-9] என்னும் சந்தைக்குப் பொருள் கேட்க, "முரட்டுத் திருப்பதியான (தலைமைபெற்ற தி$_3$வ்யதே$_3$ஶமான) பெரியகோயிலில் காணியாட்சியுள்ள உன்னை, அப்ரஸித்$_3$த$_4$மான நம்பூ ரில் பிறந்தவனுய் "ஊரிலேன் காணியில்லை" என்னும்படியிருக்கும் எனக்கு ஶேஷமாக்கினது திருவஷ்டாக்ஷரமன்றோ; ஆகையால் அஹங் காரத்தை விளைக்கும் ஹேதுக்களால் ஏற்படும் பண்டைக்குலங்களைத் தவிர்த்து, தொண்டக்குலத்தையுடையவனும்படி செய்யும் என்பதே இதன்பொருள்" என்று அருளிச்செய்தார்.

i "என்முடிவு காணுதே என்னுள் கலந்தானை" [திருவாய் 2.5 8] என்னும் சந்தைக்குக் கருத்துக்கள் பின்வருமாறு:— 1. "ஆடியாடி" என்னும் திருவாய்மொழியில் அவனைப் பிரிந்த துன்பத்தாலே நான்

அவனுக்கில்லாமையாலே என்னை அங்கீ₃கரித்தான் ; தொடங்கின உபாயம் முடிவதற்கு முன்னே என்னுள் கலந்தான். வறுத்த பயறுபோலே ஆத்மாநுப₄வத்தளவிலே நின்று முடியாதபடி என்னுள் கலந்தான் ; என் அஹங்காரம் பாராதே குலங்கொண்டே பரிக்₃ரஹித்தான் ; அபரிச்சே₂த்₃யனை தன்னை நான் பு₄ஜிக்குமாபோலே அணுஸ்வரூபனை என்னை பு₄ஜித்தான்.

j "நானுவிதநரகம் புகும் பாவம் - நானே செய்தேன்" (தேந விநா த்ருணக்₃ரமபி ந சலதி) நீசெய்து என்னைச் சொல்லலாமோ ? என்பார் ; அடாப்பழியிடுகிறூர்களத்தனை

முடியப்புக, அதைக் காணக்கூடிய கருணையின்மை அவனுக்கு இல்லாமையாலே என்னோடு கலந்தான். 2. என்னைத் திருத்துவதற்காக அநாதிகாலமாகத் தொடங்கிப் பண்ணின ஸ்ருஷ்டி அவதாரம் முதலான முயற்சிகளாகிற உபாயாநுஷ்ட₂ானம் முடிவதற்கு முன்னே "இவர் கைநழுவிப்போய்விட்டால் என்செய்வது" என்னும் பதற்றத்தாலே என்னோடு புரையறக் கலந்தான். 3. வறுத்தபயிறு முளைக்காது; அதுபோலே ஜீவன் ஆத்மாநுப₄வமாகிற கைவல்ய மோக்ஷத்தை அடைந்துவிட்டால் மறுபடியும் எம்பெருமானை அடைய முடியாது. அப்படி கைவல்யமோக்ஷத்தை அடைந்து நான் ஸ்வரூப நாசத்தையடையாதபடி என்னோடு கலந்தான். 4. ஆத்மாவை முடிக்கும் அஹங்காரத்தை முடிவு என்னலாம்; என்னுடைய அஹங்காரத்தைக் கணிசியாமல், சுரங்கத்திலிருந்து மணியை எடுப்பவர்கள் அழுக்கோடே மணியைக் கைக்கொள்வதுபோலே என் அஹங்காரத்தோடேயே என்னைக் கைக்கொண்டான். 5. முடிவு என்னும் பத₃ம் அணுவாய் அல்பமாயிருக்கும் தன்மையைக் கூறுகிறது; அளவற்ற தன்னை நான் அநுப₄விப்பதுபோலே அணுவான என்னைத் தான் அநுப₄வித்தான்.

j "நானே நானுவித நரகம்புகும் பாவஞ்செய்தேன்" [பெரியதிரு 1 9-2] என்னும் அருளிச்செயல்சந்தைக்கு ஓர் அபூர்வார்த்த₂ம் சொல்லப்படுகிறது. "நானே செய்தேன்?" என்று கேள்விக்குறியை வைத்துக்கொண்டு இவ்வளவு பாபங்களையும் நானுசெய்தேன் ? "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்று உலகமெல்லாம் சொல்லும் செய்வித்தவனுகிற நீயேயன்றோ காரணம். நீ செய்வித்துவிட்டு

யன்றோ; நான் செய்ததென்? தேவாங்கு சேற்றிலே விழுமாபோலே அவனுக்கு ஸ்ப்ருஹணீயமான வஸ்து இப்படி படுவதே! [நானே செய்தேன்] அஹங்காரமொன்றாலும் செய்தேன்.

## நானூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

a "குளப்படியிலே தேங்கினால் குருவி குடித்துப்போம், வீராணத்தேரியிலே தேங்கினால் நாடு விளையும்" என்றருளிச் செய்தார் நாத₂முநிகள்; இவ்வர்த்த₂த்தை உய்யக்கொண்டா

---

என்மேல் அடாப்பழியிடலாமோ? தே₃வர்களுக்குப் பிரியமான தேவாங்கு சேற்றிலே விழுவதுபோலே எம்பெருமானுக்கு ஸ்ரீகௌஸ்துப₄ம்போலே இனியதான இந்த ஆத்மவஸ்து நானாவித நரகம்புகும் பாவம்செய்வதே என்று கருத்து. அல்லது "நானு செய்தேன் என் அஹங்காரம் செய்தது" என்றும் கொள்ளலாம்.

### நானூற்றுநாற்பத்தோராம் வார்த்தை

இந்த வார்த்தையில் பல ஸூத்ரங்கள் உள்ளன. சிலவற்றுக்குப் பொருள் விளங்கவில்லை. தெரிவித்தால் தலையல்லால் கைம்மாறிலோமே. தெரிந்த ஸூத்ரங்களுக்குப் பொருள் எழுதுகிறோம். a நம்மாழ்வாரிடம் யோக₃த₃சையிலே திருவாய்மொழி கேட்கும்போது "பொலிக பொலிக" [திருவாய் 5-2] என்னும் திருவாய்மொழியில் தம்மால் உணர்த்தப்பட்ட ப₄விஷ்யத₃ாசார்யரான எம்பெருமானாரைப் பற்றி நாத₂முனிகளுக்கு அருளிச்செய்து அவருடைய விக்₃ரஹத்தையும் அருளி "உம்முடைய பேரனைக்கொண்டு கடாக்ஷிக்கச் செய்து ஸகலார்த்த₂ங்களும் அவருக்குப் போய்ச்சேரும்படி ஏற்பாடு செய்யவேண்டும்" என்று அருளினார் நம்மாழ்வார். இவ்விஷயம் நாயனாராச்சான்பிள்ளையருளிய சரமோபாயநிர்ணயத்தில் உள்ளது. இவ்விஷயத்தை நாத₂முனிகள் அடிக்கடி "குளப்படியிலே......நாடு விளையும்" என்னும் வார்த்தையாலே உணர்த்திக்கொண்டிருப்பாராம். இதன் கருத்தாவது—ஒரு மாட்டின் குளம்பின் அடியிலே தேங்கும்போது மழை நீர் சில குருவிகள் குடிப்பதற்கே பயன்படும். அதே மழைநீர் வீரநாராயணபுரத்து (வீராணத்து) ஏரியிலே தேங்கினால் நாட்டிலுள்ள வயல்களெல்லாம் விளைந்து நாடே வாழும். அது போலே எம்பெருமானாருக்கு முன் வரையிலுள்ள ஆசார்யர்களால் ஒருசில ஶிஷ்யர்களுக்கே பயன்படும் அதே அர்த்த₂ங்கள் எம்பெருமானாரிடம் வந்து சேரும்போது உலகனைத்துக்கும் பயன்படும் என்

ருக்கு அருளிச்செய்தார்; உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிக்கு அருளிச்செய்தார்; மணக்கால்நம்பியும் ஆளவந்தார்க்குப் பச்சையிட்டார்; b 'இம்மஹாநுப₄ாவன் இத்த₃ர்ஶநத்திலே புகுந்தாநுகிலோ' என்றார் - ஆளவந்தார்; c 'ஆளவந்தார்க்கு எம்பெருமானார் ஏகலவ்யனன்றோ' என்றார் - எம்பார்; d 'வித்தாகுங்காய் பிஞ்சிலேதெரியும்' என்றார் பெரிய (திருமலை) நம்பி; e 'இதொரு திருவவதாரமோ?' என்றார் திருமாலையாண்டான்; f 'உன்னோடு வருகிறவன் நித்யஸூரிகளிலே

---

பது. இவ்விஷயங்களும் இவ்வார்த்தையும் நாத₂முனிகளிடமிருந்து உய்யக்கொண்டாருக்கும், உய்யக்கொண்டாரிடமிருந்து மணக்கால் நம்பிக்கும், மணக்கால் நம்பியிடமிருந்து அவரால் தூதுவளைக் கீரையைப் பச்சையிட்டு வஶீகரிக்கப்பட்ட ஆளவந்தாருக்கும், ஆளவந்தாரிடமிருந்து அவரது ஐந்து ஶிஷ்யர்கள் மூலமாக எம்பெருமானார்க்கும் வந்து சேர்ந்து, இவ்வார்த்தையின் கருத்தறிந்த எம்பெருமானார் எழுபத்துநாலு மதத்துகளுள்ள வீராணத்தேரியாகத் தம்மை நாத₂முனிகள் திருவுள்ளம் பற்றியதை அடியொற்றி எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளைத் தமக்கு ப்ரத₄ாந ஶிஷ்யர்களாக அமைத்தார் என்றும் பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்கள் கூறும். b இம்மஹாநுப₄ாவன் - எம்பெருமானார். எம்பெருமானார் யாத₃வப்ரகாஶனிடம் படித்துக்கொண்டிருந்தபோது இவரே நாத₂முனிகள் திருவுள்ளம்பற்றிய ப₄விஷ்யதா₃சார்யர் என்று அறுதியிட்டு ஆளவந்தார் அருளிச்செய்த வார்த்தை இது. c நேரில் வில்வித்தை பயிலாமல் கு₃ருப₄க்தியாலேயே த்₃ரோணருடைய அர்ச்சையை முன் வைத்துக்கொண்டு அவருக்குத் தெரிந்த வில்வித்தை முழுவதையும் கற்ற ஏகலவ்யனைப்போலே, நேரில் ஒரு வார்த்தையும் பேசாவிடிலும் ஆளவந்தார் அறிந்ததனைத்தையும் அவருடைய பத₃ாம்பே₄ாருஹ (திருவடித் தாமரை)த்₄யானத்தாலே எம்பெருமானார் அறிவர்என்று கருத்து. எம்பெருமானாரே தம்மை ஆளவந்தாருக்கு ஏகலவ்யனாக அருளிச்செய்தார் என்று பல பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களில் உள்ளது. d பல மரங்களுக்கு மூலகாரணமாயிருக்கும் விதைக் காயைப் பிஞ்சிலேயே கண்டுபிடித்துவிடலாம். அதுபோலே உலகம் வாழவந்தவர் எம்பெருமானார் என்பதை அவருடைய சிறு வயஸ்ஸிலேயே நாங்கள் கண்டுவிட்டோமென்று கருத்து. e தாம் ஆளவந்தாரிடம் கேளாத அர்த்த₂ங்களையும், ஆளவந்தார் திருவுள்ளமறிந்து எம்பெருமானார் அருளிச்செய்கிறார் என்று திருக்கோட்டியூர் நம்பி மூலமாக அறிந்து திருமாலையாண்டான் அவரை ஒரு அவதார புருஷராக அறுதியிட்டார் என்று கருத்து. f ராஜகுமாரியின்மேல் ஏறியிருந்த ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸை யாத₃வப்ரகாஶன் விரட்டச்சென்ற

ஒருவன்' என்றது - ப்₃ரஹ்ம ரக்ஷஸ்ஸு; g 'என்னுடைய திரு வநந்தபுரம் எதிரேவந்தது' என்றார்-தெய்வவாரியாண்டான்; h 'ஊர்புக்குவருகிறேன்' என்றார் - திருக்கோட்டியூர்நம்பி ; i 'பெருமாளே சரணமென்னக்கண்டிலோம், ஆளவந்தாரே சரணமென்னக்கண்டிலோம், நாமென்செய்யக்கடவோம்?' என்றார் - பெரியநம்பி ; j 'என்னுடைய ஸர்வஸ்வத்தை யும் வாங்கிக்கொள்ளவோ இப்படி செய்கிறதென்றார் - ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் ; k வைத்த கையி லும் வாங்கின கை தஞ்சம் என்றார் - அம்மங்கி ; l "ஸர்வம் ப₃லவத: பத்₂யம்" என்றார் - முதலியாண்டான் ;

---

போது, எம்பெருமானரை நெஞ்சில்கொண்டு அந்த ப்₃ரஹ்மரக்ஷஸ் சொன்ன வார்த்தையிது. g இந்த ஐதிஹ்யம் ஆருயிரப்படி கு₃ருபரம் பராப்ரப₄ாவத்தில் (பக்கம் 138,139) யமுனைத்துறைவர் வைப₄வத்தின் கடைசியில் காணப்படுகிறது. அங்கே கண்டுகொள்வது. h எம் பெருமானிருக்குமிடமே ஊர் (உத்₃தே₃ஶ்யபூ₄மி) என்று திருக்கோட்டி யூர் நம்பியின் திருவுள்ளம். i எம்பெருமானுருடைய ப்ரத₄ான ஆசார்ய ரான பெரியநம்பி உலகனைத்தும்'எம்பெருமானர் திருவடிகளே ஶரணம்' என்று சொல்லுவதைப் பார்த்து, "இப்பெருமை பெருமாளுக்கும் ஆள வந்தாருக்குங்கூட இல்லை. இது ஒரு மனுஷ்யயத்னத்தை மீறிய ப₄க₃வத்ஸங்கல்பத்தால் ஏற்பட்ட பெருமை" என்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்த வார்த்தை இது. j இவ்விஷயம் ஆருயிரப்படியில் பக்கம் 287,288-இல் திருவரங்கப் பெருமாள் அரையர் எம்பெருமானு ருடைய வைப₄வத்தை வெளியிட்ட ப்ரகரணத்தில் உள்ளது. அங்கே கண்டு கொள்வது. k 'வைத்து அஞ்சல் என்ற கை'யாகிற நம்பெரு மாளுடைய கையைக் காட்டிலும், அவரிடம் உப₄யவிபூ₄திச் செல்வத் தையும் வாங்கின கையாகிற எம்பெருமானுருடைய கையே தஞ்சம் என்று கருத்து. l 'ப₃லமுடையவனுக்கு அபத்₂யமான ஆஹாரமும் பத்₂யமாகும்' என்று இந்த ப்ரமாணத்துக்குப் பொருள். இது எம்பெரு மானரைப்பற்றி முதலியாண்டான் அருளிச்செய்தது. "த்₃ருஷ்டோ த₄ர்மவ்யதிக்ரம: ஸாஹஸம் ச பூர்வேஷாம்; தேஷாம் தேஜோ விஶேஷேண ப்ரத்யவாயோ ந வித்₃யதே" [கெ₃ளதமத₄ர்ம 1-3, 4] [பூர்வர்களான பெரியவர்கள் சில ஸமயங்களில் த₄ர்மத்துக்கு மாறுபட்ட கார்யங்களையும் ஸாஹஸமான கார்யங்களையும் செய்திருப்பதைக் காண் கிறோம்.மிகுதியான தேஜஸ் உண்டாகையாலே அவர்களுக்குஅவை தவ றில்லை] என்ற ஸ்ம்ருதி வசனமும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. ஆபத் துக்காலத்தில் வெள்ளை சாத்திக்கொண்டு எழுந்தருளியது போன்ற எம்பெருமானுருடைய கார்யத்தைப்பற்றியதாய் இது இருக்கலாம்.

m பிதற்றென்றே இருந்தேன் என்றார் - கூரத்தாழ்வான்; n அன்னக்(கே)கடும் தீர்ந்ததென்றார் - அருளாளப்பெருமாளெம்பெருமானார்; o அததீட்டை யாருக்குச் சொல்லுவேன்? என்றார் - வங்கிபுரத்து நம்பி; p பார்த்திட்டேனாகில் செய்வதென்? என்றார் - பிள்ளையுறங்காவில்லிதாஸர்; q அருளிச்செய்த வார்த்தையும் பொய்யோ? என்றார் - பொன்

---

m "புலையறமாகி" [திருமாலை-7] என்னும் பாசுரத்தின் வ்யாக்யானத்தில் ஆழ்வான் 'இஷ்டஸித்$_3$தி$_4$' என்றொரு புறமதநூல் வாசிப்பதைக் கேட்டிருந்ததாகவும் அவருடைய திருத்தகப்பனாரான ஆழ்வார் அதற்குப் ப்ராயச்சித்தமாக ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$ம் ஸாதித்ததாகவும் ஓர் ஐதிஹ்யம் எடுக்கப்பட்டுள்ளது; இவ்வைதிஹ்யத்தில் "நீ அந்த இஷ்டஸித்$_3$தி$_4$யை என் நினைத்திருந்தாய்?" என்று ஆழ்வார் கேட்க, "பிதற்றென்றே இருந்தேன்" என்று ஆழ்வான் பதில் உரைத்திருக்கக்கூடும். n "எந்த எம்பெருமானார் மட$_2$ம்" என்று வழிப்போக்கர்கள் சிலர் கேட்பதைச் செவியுற்று "லோகாசார்யரான எம்பெருமானுக்குப் போட்டியாக நாமும் ஒரு எம்பெருமானாராவதா" என்று துணுக்குற்று, அருளாளப்பெருமாள் தம் மட$_2$த்தை இடித்துவிட்டு எம்பெருமானார் மட$_2$த்திலேயே வாழத்தொடங்கினார் என்னும் ஐதிஹ்யம் கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவாதி$_3$களில் ஸுப்ரஸித்$_3$த$_4$ம். ஏற்கனவே எம்பெருமானார் மோக்ஷப்ரஸாத$_3$ம் கிடையாமலிருந்த அந்நக்கேடும் அவர் மட$_2$த்திலேயே வாழத்தொடங்கியதிலிருந்து தீர்ந்தது என்று அவர் அருளிச்செய்த வார்த்தையாயிருக்கலாம். 'அன்னக்கடு' என்று பாடமானால் விஷாந்நம் என்று பொருள்படும். o பொருள் விளங்கவில்லை. p பொன்னாச்சியாருடைய கண்ணழகிலே பிள்ளையுறங்காவில்லித$_3$ாஸர் மிகவும் ஈடுபட்டிருப்பதைப் பார்த்த எம்பெருமானார் "இதைவிடச் சிறந்த கண்ணைக்காட்டினால் இதைவிட்டு அதில் ஈடுபடுவீரா" என்று த$_3$ாஸரைக் கேட்க "இதைவிடச் சிறந்த கண்ணைப் பார்த்திட்டேனாகில் செய்வதென்? அவச்யம் ஈடுபடுவேன்" என்று பதில் சொன்ன வார்த்தையேயிது. q எம்பெருமானார் நியமனத்தினால் பொன்னாச்சியார் உடம்பிலுள்ள நகைகளை ஸ்ரீராமாநுஜ ஶிஷ்யர்கள் கழற்றும்போது அவர்கள் திருவுள்ளக்கருத்தைப் பின்சென்று தூங்குவதுபோலேயிருந்து, ஒருபுறம் நகைகளைக் கழற்றியவுடன் மறுபுறம் புரண்டுகொடுக்க, இவள் விழித்துக்கொண்டுவிட்டாள் என்று நினைத்து ஶிஷ்யர்கள் ஓடிவிட, இதுபற்றிச் செவியுற்ற பிள்ளையுறங்காவில்லித$_3$ாஸருக்கும் பொன்னாச்சியாருக்கும் நடந்த ஸம்வாதமிது. "'ப$_4$ாக$_3$வதர்களின் திருவுள்ளத்தைப் பின்சென்று நடக்கவேணும்' என்று தேவரீர் அடியேனுக்கு ஏற்கனவே அருளிச்செய்த வார்த்தையின்படி

ஞுச்சியார் ; r பூஞாரச்செப்பாயிருந்திலையீ! என்றார் - பிள்ளை யுறங்காவில்லிதா₃ஸர். s நஞ்ஜீயருக்கு விசேஷகடாக்ஷம் மூன்றுண்டு.

t நானவர்க்கு நல்லேனென்றார் - வடுகநம்பி ; u விஷத்₃ருஷ்டியான பாம்பைப்பிடித்துக்கொண்டு ஆட்டாநின்றீர் என்றார் - அநந்தாழ்வான்; v தொண்டனூர் நம்பி பின்னாட்டியாகப் பெற்றிலேனென்றார்-கொல்லிகாவலதா₃ஸர்; wபாய்ந்த பாய்ச்சலே தஞ்சமென்றிருந்தேன் என்றார் ஆட்கொண்டவில்லிஜீயர் ; x நெருப்பெழுந்து தாக்கினபோது ஒன்றுண்டோ? என்றார் - கணியனூர் சிறியாச்சான் ; y நான் காண்கிற களவுக்கு இதொரு களவோ? என்றார் - திருப்பாவை பாடினார்; z ஆண்டாள் சாத்தின திருவாப₄ரணமோ,

---

தானே நடந்தேன். இப்போது கோபிக்கிறீரே; அவ்வார்த்தை பொய்யோ?'' என்றாள் பொன்னாச்சியார். r அதற்குப் பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் ''இந்த ஸமயத்தில் நீ பாரதந்த்ர்யத்தைத்தானே காட்டியிருக்கவேண்டும். ஆப₄ரணங்களை இட்டுவைத்த செப்புப்போலே இருந்திருக்கவேண்டாமா ? அப்படியிருந்திருந்தால் ப₄ாக₃வதர்களுடைய திருவுள்ளக்கருத்து முழுவதும் நிறைவேறியிருக்குமே. நீ ஸ்வாதந்த்ர்யத்தைக் காட்டியதால்தானே அவர்கள் பாதி விருப்பம் நிறைவேறியதோடு திரும்பும்படி ஆயிற்று'' என்று பதில் கூறினார். s எம்பெருமானார் வேதா₃ந்தியைத் திருத்தவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி ப₄ட்டருக்கு நியமித்தது முதலாவதான எம்பெருமானாருடைய விசேஷ கடாக்ஷம். யாத்ராவாஸி ப்₃ராஹ்மணன் மூலமாக ப₄ட்டர் வேதா₃ந்திக்குச் செய்திகள் அனுப்பியது இரண்டாவது விசேஷ கடாக்ஷம். நேரில் சென்று வாத₃பி₄க்ஷையை யாசித்து அவரை பட்டர் திருத்தியது மூன்றாவது விசேஷ கடாக்ஷம்.

t வடுகநம்பியை 'நீர் எம்பெருமானை உபேக்ஷிக்கிறீரே' என்று சிலர் கேட்க '' 'தேவுமற்றறியேன்' என்றிருந்த மதுரகவியாழ்வாரைப் போலே நான் எம்பெருமானாருக்கு நல்லேன் ஆகையாலே எம்பெருமானைக் காற்கடைக் கொள்வதில் குறையில்லை'' என்று வடுகநம்பி அருளிச்செய்தார். u முதல் a வரையில் சரித்திரங்கள் விளங்கவில்லை. y திருடனைச் சிலர் அடிக்க, ''நான் செய்யும் ஆத்மாபஹாரத்திருட்டுக்கு ஒப்பிடும்போது இவன் செய்யும் திருட்டு ஒரு திருட்டாகுமா' என்று திருப்பாவை பாடினார் என்னும் பெரியவர் கூறியதாயிருக்கலாம். b இந்த வார்த்தை 303ம் வார்த்தையிலும் வந்துள்ளது.

களைந்த திருவாப₄ரணமோ உள்ளிருக்கிறது? என்றார் - தேவ ராஜப்பிள்ளை ; a த்ரிவித₄ ப்ரவ்ருத்தியை நிவர்த்திக்க லாமோ? என்றார் - திருவரங்கத்தாழ்வார்; b "ப்ரஜைகள் நட மாடுகிற வாசலிலே பாம்பைப் பிடித்துவிடுவாரைப்போலே இவருக்கு நான் ஹிதஞ்சொன்னேன் ; இதென்னாய் விளை கிறதோ?" என்று, "உடலைக்காட்டி வெருட்டாதே உயிரைக் காட்டி அகப்படுத்திக்கொடு போகப்பார்" என்றருளிச்செய் தார் - அம்மங்கிக்கு ஆளவந்தார்.

## எம்பார், பட்டருக்கருளிச்செய்த பத்துவார்த்தை

ஸ்ரீவைஷ்ணவலக்ஷணம் இருக்கும்படியென் ? என்று ப₄ட்டர் எம்பாரைக்கேட்க, ஸகலவேத₃ ஶாஸ்த்ரங்களாலே அறுதியிட்ட அர்த்த₂த்தைப் பத்துவார்த்தையாலே ப₄ட்டருக்கு எம்பார் அருளிச்செய்தார். இப்பத்து வார்த்தையினுடைய வரலாறு சொல்லுகிறது; - a பெரியபெருமாளாகிற பெருங்கட லிலே ஆழ்வாராகிற காளமேக₄ம் படிந்து, க்ருபையாகிற அம்ருதஜலத்தைப் பாநம்பண்ணி, நாத₂முனியாகிற மஹா மேருவிலே வர்ஷித்து, பூர்வாசார்யர்களாகிற அருவிகளாலே போந்து, எம்பெருமானாராகிற ஏரியிலே தேங்கி, நம் ஆசார்யர்களாகிற மதகுகளாலே புறப்பட்டு, ஸம்ஸாரமாகிற

---

**எம்பார் பட்டருக்கு அருளிச்செய்த பத்து வார்த்தை**

a லக்ஷ்மீநாத₂ாக்₂ய ஸிந்தௌ₄ ஶட₂ரிபுஜலத₃: ப்ராப்ய காருண்ய நீரம், நாத₂ாத்₃ராவப்₄யஷிஞ்சத் தத₃நு ரகு₄வராம்போ₄ஜசக்ஷுர் ஜ₂ராப்₄யாம் | க₃த்வா தாம் யாமுநாக்₂யாம் ஸரிதம் அத₂ யதீந்த்₃ராக்₂யபத்₃மாகரேந்த்₃ரம், ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவ ஹதி ப₃ஹுதா₄ தே₃ஶிகேந்த்₃ர ப்₄ரமௌகை₄: || [லக்ஷ்மீ நாதனா கிற கடலில் நம்மாழ்வாராகிற காளமேகம் கருணை நீரை முகந்து நாத₂ முனிகளாகிற மலையிலே பொழிந்தது. அதற்குப்பின் உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிகளாகிற அருவிகளாலே யாமுனாசார்யர்(ஆளவந்தார்) ஆகிற பெரிய ஆற்றையடைந்து, அதற்குப்பின் (ஐந்து ஆசார்யர் களாகிற கால்வாய்களாலே) யதிராஜராகிற ஏரியை அடைந்து, எழுபத்திரண்டு ஸிம்ஹாஸநாதிபதிகளாகிற மதகுகளாலே உயிர்

கழனிக்கு ஏறிப்பாய்கிறது; இனி b எத்தினுலிடர்க்கடல் கிடக்கிருய்; அதன்றியே $b_2$ ப்ரக்ருத்யந்தத்தில் எம்பெருமான் திருவடிகளைப் பெறலாமன்ருே என்கிறது.

முதல் வார்த்தை; - c "காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்தடியேன்" என்றும், d "கங்குலும் பகலும் கண்துயிலறியாள்" என்றும், e "பக்கம் நோக்கி நின்றலந்தேன் பாவியேன் காண்கின்றிலேன்" என்றும், f "ப்ரபந்நஸ் சாதகோ யத்₃வத்" என்றுமிருக்கை. 1.

இரண்டாம் வார்த்தை; - அப்பேறும் அவனுலே பெறவேணும் என்றிருக்கை. அதாவது - g "உன்னுலல்லால் யாவராலும் ஒன்றுங் குறை வேண்டேன்" என்றும், h "உனக்குப் பணிசெய்திருக்கும் தவமுடையேன்" என்றும், i "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றும், j "எனதாருயிர் அவன் கையதே" என்றும், k "இனியுன் திருவருளாலன்றிக் காப்பரிதால்" என்றும், l "சேமம் செங்கோனருளே" என்றும், m "செய்த்தலை யெழுநாற்றுப்போல் அவன் செய்வனசெய்து கொள்ள" என்றுமிருக்கை. 2.

மூன்ரும் வார்த்தை; - இப்பேறுபெற்று வாழ நினைத்திருப்பார் தே₃வதாந்தர ப₄ஜநம் பண்ணுதொழிவர். அதாவது - n "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றும், o "தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து நின்தாளிணைக்கீழ்வாழ்ச்சி" என்றும், p "கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால்

களாகிற பயிரின் பொருட்டுப் பலவாறு பாய்கிறது அந்நீர்] என்று எம்பார் அருளிய ஸ்லோகம் இங்கு அநுப₄விக்கத்தக்கது. b [திருச்சந்த 115] $b_2$ ப்ரக்ருத்யந்தத்தில்–ஶரீரத்தின் முடிவில். c [திருவாய் 8 5-2] d [திருவாய் 7-2-1] e [திருவாய் 4-7-10] f [ப்ரபந்நன் சாதகம்போலே எம்பெருமானின் கருணை நீரை எதிர்பார்த்திருப்பவன்] என்பது இப்ரமாணத்தின் பொருள். g [திருவாய் 5-8-3] h [பெரியாழ் திரு 5-3-3] i [திருவாய் 2-9-9] j [திருவாய் 9-5-3] k [திருவிருத்தம் 62] l [திருவிருத்தம் 27] m [பெரியாழ்திரு 3-7-9] n [நான் திருவ 68] o [திருவாய் 3-2-4] p [திருவாய்6-9-1] q [பெரு

வாராய்'' என்றும். q ''கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும் கொண்டானை யல்லாலறியாக் குலமகள்போல்'' என்றுமிருக்கை, தன் ப₄ர்த்தாவோடே தான் வாழவில்லை யாகிலும் பிறர்முகம் பாராதவளையிறே பதிவ்ரதை என்பது. 3.

நாலாம் வார்த்தை; - தே₃வதாந்தர ப₄ஜநம் பண்ணு மவரோட்டை ஸஹவாஸம் வருந்தியும் கைவிடுவான். அதாவது - r '' எண்ணுதேயிருப்பாரை இறைப்பொழுது மெண்ணேம்'' என்றும், s ''எண்ணாத மானிடத்தை யெண்ணுதபோதெல்லாம் இனியவாறே'' என்றும், t ''சடைத் தேவர்தம் துவக்கைப் பாராதொழிவதே!'' என்றும், u''பரந் த₄ாமத்தைப் பற்றுவதே'' என்றும் - v ஸத்தான சாந்துக்குச் சுண்ணும்பு விரோதி₄யாமாபோலேயும், w ஸ்த₂ாலீஸம் ஸர்க்க₃த்தாலே ஜலத்துக்கு உஷ்ணம் ப்ரவேஸிக்குமா போலேயும், x ''ப்ராக்ருதாந்நம் த்யஜேத்'' y''தஸ்ய ப்ரக்ருதி லக்ஷணம்'' z ''த்₃விஷத₃ந்நம ந பே₄ாக்தவ்யம் த்₃விஷந்தம் நைவ பே₄ாஜயேத்। பாண்ட₃வாந் த்₃விஷஸே ராஜந்! மம

மாள் திரு 5-2] r [பெரிய திரு 2-6-1] s [பெரிய திரு 11-6-7]
t '' சடைமுடியையுடைய ஶிவன் க்ஷுத்₃ர புருஷார்த்த₂ங்களைக் கொடுப்பதனுல் ஏற்படும் ஆகர்ஷணத்தை அலட்சியப்படுத்துவதே! '' என்னுமிது முன்னேர் வார்த்தை. u'பரந்த₄ாமத்தைப் (பரமபத₃த்தைப்) பற்றுவதே' என்னுமிதுவும் முன்னேர் வார்த்தை. v நல்ல சந்தனத் துக்குச் சுண்ணும்பு விரோதியாவது போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தே₃வதாந்தரபரர்கள் விரோதி₄கள். w ஜலத்தை நேரே நெருப்பால் சூடாக்க முடியாதபோதிலும் ஒரு பாத்திரத்தில் இட்டால் நெருப்பு ஜலத்தைச் சூடாக்குவது போலே, தே₃வதாந்தரங்கள் ஸ்ரீவைஷ்ணவர் களை நேரே ஒன்றும் செய்யமுடியாவிடிலும் தம் ப₄க்தர்களோடு தொடர்பு ஏற்படுத்தித் தம்மிடம் ஈடுபாட்டை விளைத்துவிடுவர் என்று கருத்து. x ப்ராக்ருதர்களுடைய அந்நத்தையும் விலக்கவேண்டும் என்பது இதன் பொருள். y பூர்ணஶ்லோகம் கண்டவிடத்தில் பொருள் கண்டுகொள்வது. z [மஹாப₄ாரதம் உத் 91-27] ''த்₃வேஷியின் அந்நம் உண்ணத்தகாதது. த்₃வேஷிக்கு ஒருபோதும் உணவளிக்கக் கூடாது. அரசனே ! நீ பாண்ட₃வர்களை த்₃வேஷிக்கிருய்.

ப்ராணா ஹி பாண்ட₃வா:॥" என்று ஸர்வஶக்திதானே அநாத₃ரிக்கையாலே ஸர்வதா₂ நமக்கும் அநாத₃ரணீயம். 4.

அஞ்சாம் வார்த்தை:- உகந்தருளின தி₃வ்யதே₃ஶங்களிலே வர்த்திப்பான். அதாவது—A "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்றும், B "அற்றபற்றர் சுற்றிவாழுமந்தணீரரங்கம்" என்றும், C "வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்" என்றும், D "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே" என்றும். பிள்ளை திருநறையூரரையர், ப₄ட்டர் ஸ்ரீபாத₃த்திலே சென்று தண்டனிட்டு 'அடியேனுக்குத் தஞ்சமாக இருப்பதொரு வார்த்தையருளிச் செய்யவேணும்' என்ன; "பொய்யேயாகிலும் உகந்தருளின தி₃வ்யதே₃ஶங்களிலே புக்குப் புறப்பட்டீராகில் அந்திமத₃ஶையிலே கார்யகரமாம்" என்றருளிச் செய்தார். 5.

ஆறும் வார்த்தை:-அநுகூலஸங்கல்பனுயிருக்கை. அதாவது E "தெருடியாகில் நெஞ்சே வணங்கு திண்ணமறி" என்றும், F "ஸக்ருதே₃வ ப்ரபந்நாய" என்றும், G "ஸக்ருத்க்ருதோऽஞ்ஜலி:" என்றும் H இச்சா₂மாத்ரமே அமையுமென்றிருக்கை. 6.

ஏழாம் வார்த்தை :-ப்ராதிகூல்யத்தை வருந்தியும் கைவிடுவான். அதாவது I ப₄க₃வத₃பசார பா₄க₃வதாபசார அஸஹ்யாபசாரரூப நாநாவித₄ாநந்தாபசாரத்துக்கும் அடி

---

எனக்குப் பாண்ட₃வர்கள் உயிரன்றோ" என்பது கண்ணன் து₃ர்யோத₄னனைப் பார்த்துச் சொன்ன வார்த்தை. A [நாச் திரு 11-5] B [திருச்சந்த 52] C [நாச் திரு 8-9] D [பெருமாள் திரு 4-10] E [திருவாய் 2 7-10] F ஸ்ரீராமசரமஶ்லோகம் [ரா-யு 18-33] G [ ஸ்தோ ர-28 ] அஞ்ஜலியின் பெருமையை ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னத்தில் அருளிய ஶ்லோகத்தின் பகுதி. H நம் நன்மைக்கு நாம் முயற்சி செய்யவேண்டா. பரமபுருஷார்த்த₂த்தை எம்பெருமானிடமிருந்தே பெறவேணும் என்னும் இச்சை₂யே போதுமானது என்று கருத்து. I எம்பெருமானிடம் அபசாரம், அவனடியார்களிடம் அபசாரம், இருவர் திறத்திலும் ஒரு காரணமில்லாமல் அபசாரப்

யாய், த்யாஜ்யமான அர்த்த₂காமங்கள் நிமித்தமாக ப₄க₃வத், ப₄ாக₃வத விஷயங்களிலே சிவிட்கென்றிருக்குமாகில் அத்தை வருந்தியும் கைவிடுவான். 7.

எட்டாம் வார்த்தை; - ஆழ்வார்கள் ஈரச்சொல்லாலே நெஞ்சை நெகிழ்க்கை. அதாவது J "மிண்டர் பாய்ந்துண்ணுஞ் சோற்றை விலக்கி நாய்க்கிடுமின் நீரே" என்றும். K "பூமிபாரங்களுண்ணுஞ் சோற்றினை வாங்கிப் புல்லைத்திணிமினே" என்றும், L "எண்ணக்கண்டவிரல்களா லிறைப் பொழுதும் எண்ணகிலாதுபோய் உண்ணக்கண்ட தம் ஊத்தை வாய்க்குக் கவளமுந்துகின்றார்கள்" என்றும், M "உண்ணு நாள் பசியாவதொன்றில்லை ஓவாதே நமோநாரணாவென்று எண்ணுநாளும், இருக்கெசுச் சாமவேத நாண்மலர்கொண்டுனபாதம் நண்ணுநாள், அவை தத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினிநாள்" என்றும், N "தரித்திருந்தேனாகவே தாராகணப்போர், விரித்துரைத்த வெந்நாகத்துன்னைத் தெரித்தெழுதி, வாசித்துங்கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன்போது" என்றும், O "நகரமருள் புரிந்து நான்முகற்குப் பூமேல், பகர மறை பயந்த பண்பன், பெயரினையே, புந்தியாற்சிந்தியாதோதியுருவெண்ணும், அந்தியாலாம்பயனங்கென்?" என்றுமிருக்கை, 8.

ஒன்பதாம் வார்த்தை; - ஆழ்வார்களீரச்சொல்லாலே நெஞ்சை நெகிழ்க்கும் ஸத்துக்களோடே ஸஹவாஸம் பண்ணுவான். அதாவது-P "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்"

---

படுவதாகிற அஸஹ்யாபசாரம் என்று மூன்று வகைப்பட்டிருக்கும் பலவித₄மான கணக்கற்ற அபசாரங்களுக்கும் காரணமாயிருப்பதொன்றுண்டு. அதாவது பொருள் நிமித்தமாகவோ காமம் காரணமாகவோ ப₄க₃வத்₃ப₄ாக₃வத விஷயங்களில் மனோவிகாரமடைவதே அது. இதை மிகமுயன்று கைவிடவேண்டும் என்று கருத்து.

J [திருமாலை 14] K [பெரியாழ் திரு 4-4-5] L [பெரியாழ் திரு 4-4-3] M [பெரியாழ் திரு 5-1-6] N [நான் திருவ 63] O [முதல் திருவ 33] P [திருப்பல்லாண்டு 3] Q [திருவாய் 5-2-2] R [திருப்பாவை 15]

என்றும், Q "தொண்டீரெல்லீரும்வாரீர்" என்றும், R "எல்லாரும் போந்தாரோ" என்றும், S "அணியரங்கன் திருமுற்றத்தடியார்தங்கள் இன்பமிகு பெருங்குழுவு கண்டு" என்றும், T "அவனடியார் நனிமாக் கலவியின்பமே நாளும் வாய்க்க" U "அவனடியார்" V "திருவுடைமன்னர்" என்றும், W "வேறுக ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்" என்றும், X "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவது என்றுகொலோ" என்றும், Y " அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை " என்றும், Z "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே"என்றுமிருக்கை. 'ஆழ்வீர்! உமக்கு இவர்களோட்டை ஸம்ப₃ந்த₄ம் ஓரளவின்றியிலே யிருந்தத்!' என்ன; 'என் செய்கேன், உபாயத்துக்கு முற்பாடராகையாலும், உபேயத்துக்கு எல்லைநிலமாகையாலும், இருந்தநாளைக்கு உசாத்துணையாகையாலும் (பிரிகிலேன்)' என்றார். 9.

பத்தாம் வார்த்தை; - ஆசார்யன் திறத்தில் செய்த அடிமையை மறந்து, செய்யப்பெறாத அடிமைக்கு இழவு பாடனுயிருப்பான். அதாவது-உ ஆசார்யன் திருவுள்ளத்தைப் பின்சென்ற அநந்தாழ்வானைப் போலவும் எம்பாரைப்போலவும், ஆசார்யன் அநாத₃ரம் அநர்த்த₂கரமென்று தன்னைத் தாழவிட்டு அடிமைசெய்த எச்சானைப்போலவுமிருக்கை. 10.

S [பெருமாள் திரு 1-10] T [திருவாய் 8-10-7] U [திருவாய் 8-10-3] V [திருவாய் 4.4-8] W [நான் திருவ 18] X [திருவாய் 2-3-10] Y [திருவாய் 10-9-11] Z [பெரிய திரு 7-4-4] இதன் பொருள்— "ஆழ்வீர்" என்று தொடங்கி ஆழ்வாருக்கும் பெருமாளுக்கும் ஸம்வாத₃மாக அருளிச்செய்யப்படுகிறது. எம்பெருமான் உபாயமாகும் போது ப₄ாக₃வதர்கள் புருஷகாரபூ₄தர்களாயிருந்து அவனுக்கு முற்படுகையாலும், அவன் உபேயமாம்போது இவர்கள் அதற்கு எல்லை நிலமாயிருக்கையாலும், இந்த லீலாவிபூ₄தியிலிருக்கும்போது போது போக்குவதற்குத் துணையாயிருக்கையாலும் அவர்கள் விஷயத்திலேஅளவற்ற ஈடுபாட்டைக்கொண்டு " பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே " என்று அருளிச்செய்தார் என்று கருத்து.

இப்பத்து வார்த்தையும் அருளிச்செய்த ஆசார்யன்விஷயத்தில் க்ருதஜ்ஞனாயிருப்பான்; இப்பத்து வார்த்தையையும் ஒருரு நெஞ்சிலே பட அநுஸந்தி₄ப்பான்; இப்பத்து வார்த்தையில் ஒன்று குறைந்தால் தன் ஆநுகூல்யம் அரைவயிறும் என்றிருப்பான். இப்படி அறுதியிட்டிருப்பார்க்கு b வைகுந்த மாநகர் மற்றது கையதுவே.

## நஞ்சீயரருளிச்செய்த நாலு வார்த்தை

அஜ்ஞாந ஸமயத்திலும், ஜ்ஞாநஸமயத்திலும், ஜ்ஞாநம் பக்வமான ஸமயத்திலும், ஜ்ஞாந ப₂லமான ப₄க₃வத்ப்ராப்தி ஸமயத்திலும், மாதாபிதாக்களோடு, ரூபநாமங்களோடு, பே₄ாஜநாதி₃களோடு, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளோடு, விதி₄நிஷேத₄ங்களோடு, தே₃ஶவாஸங்களோடு, ப₃ந்து₄வர்க்க₃த்தோடு, ஐஶ்வர்யாதி₃களோடு, ப்ரார்த்த₂னைகளோடு வாசியற பே₄தி₃த்திருக்கும்.

முதலடியான அஜ்ஞானஸமயத்தில், விவேகம் ஸஞ்சரியாமையாலும், a "ஶரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:" என்

---

a பத்தாம் வார்த்தையில் எம்பெருமானார் திருவுள்ளத்தை அநுஸரித்து அநந்தாழ்வான் திருமலையில் கைங்கர்யம் செய்ததையும், எம்பார் ப₄ட்டரை ஶிஷ்யராக்கிக் கொண்டதையும், பருத்திக்கொல்லையம்மாளை அலக்ஷ்யம் செய்ததுகண்டு எம்பெருமானார் தம்மை அநாத₃ரித்துவிட, அந்த அபசாரம் போகும்படி யஜ்ஞேஶராகிற எச்சான் தம்மைத் தாழவிட்டு அடிமை செய்ததையும் நினைக்கிறார்.
b [திருவாய் 4-10-11]

**நஞ்ஜீயர் அருளிச்செய்த நாலு வார்த்தை**

ஒரு சேதனனுக்கு 1. அஜ்ஞான ஸமயத்திலும், 2. ஜ்ஞான ஸமயத்திலும், 3. ஜ்ஞானம் நிறைவடையும் ஸமயத்திலும், 4. ஜ்ஞான ப₂லமாக எம்பெருமானை அடையும் ஸமயத்திலும் மாதாபிதாக்கள் முதலானவை எவை என்பது இந்நாலு வார்த்தையில் விவரிக்கப்படுகிறது.

a [ஆபஸ்தம்ப₃த₄ர்ம 1-1-1-18] [மாதாபிதாக்கள் ஶரீரத்தையே உண்டாக்குகிறார்கள். ஆசார்யனைப்போலே ஆத்மாவுக்கு ஒரு புதுப்பிறவியை

கிறபடியே கேவலஶரீரத்தைப் பெற்றவர்களையே மாதா பிதாக்களாக அபி$_4$மாநித்து அவர்களிட்ட பேரும், அவர்கள் நியமித்த ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும், அவர்களை அநுவர்த்தித்து அத்தாலே வந்தேறின ரூபநாமங்களும், அவர்கள் விரும்பின ப$_3$ந்து$_4$வர்க்க$_3$ங்களும், அவர்கள் வம்ஶாபி$_4$மாநமும், ஐஶ்வர்யமும், அவர்கள் கற்பித்த ஸம்ஸார வர்த்த$_4$கமாயிருப்பன சில ப்ரார்த்த$_2$னைகளுமாய், ஸம்ஸாரத்தில் என்னை விஞ்சினாரில்லையென்று தன்னை b ஸமாப்$_4$யதி$_4$கத$_3$ரித்$_3$ரனாக அபி$_4$மானித்து மேனாணித்துஇறுமாந்திருக்கும். 1.

ஜ்ஞாநம் பிறந்த ஸமயத்தில்—"cஅஞ்சு சேராக்கையான கேவல ஶரீரமன்று; d ப்ரக்ருதே:பரனாய், பஞ்சவிம்ஶகனாய், ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶனாய், ஏகரூபனாய், ஜ்ஞாநாநந்தை$_3$கஸ்வரூபனாய், அச்சே$_2$த்$_3$யனாய், அதா$_3$ஹ்யனாய், அக்லேத்$_3$யனாய், அஶோஷ்யனாய், நித்யனாய், ஜநநமரணாதி$_3$களின்றிக்கேயிருப்பானொரு ஆத்மாவுண்டு, வேத$_3$ஶாஸ்த்ரங்களுமுண்டு, புண்யபாபங்களுமுண்டு, வர்ணாஶ்ரமங்களுமுண்டு; e கீழ்நின்ற நிலைகள் பாபவிகாரத்தாலே ப்$_4$ரமித்ததித்தனை" என்றுணர்ந்து நெகிழ்ந்து, f"ஸ ஹி வித்$_3$யாதஸ்

---

உண்டாக்குவதில்லை] என்பது இப்ரமாணத்தின் பொருள். b ஸமாப்$_4$யதி$_4$கத$_3$ரித்$_3$ரன் - ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன்.

c [பெரியதிரு 9-7-8] d ஶரீரத்தைக் காட்டிலும் மேலானவனாய், அசேதனமான இருபத்துநாலு தத்வங்களுக்கு மேற்பட்ட இருபத்தைந்தாவதான சேதனதத்வமாய், தனக்குத் தானே ப்ரகாஶிப்பவனாய், ஒருபடிப்பட்டவனாய், ஜ்ஞாநாநந்த$_3$ங்களையே ஸ்வரூபநிரூபககு$_3$ணங்களாகக் கொண்டவனாய், வெட்டவோ, எரிக்கவோ, நனைக்கவோ, உலர்த்தவோ முடியாத ஸ்வரூபத்தை உடையவனாய், என்றுமிருப்பவனாய், பிறப்பு இறப்பு கிழத்தனம் முதலானவையற்றவனாய் இருக்கும் ஒரு ஆத்மா இந்த ஶரீரத்துக்குள் உண்டு. e அறிவு பிறப்பதற்குமுன் ஆத்மா வேத$_3$ஶாஸ்த்ரங்கள், புண்யபாபங்கள், வர்ணாஶ்ரமங்கள் இல்லை என்று நினைத்தது பாபத்தாலே ஏற்பட்ட மயக்கமேயாகும். f [ஆசார்யனேயன்றோ ஶிஷ்யனை ப்$_3$ரஹ்மவித்$_3$யை

தம் ஜநயதி'' என்கிறபடியே வேத₃ஶாஸ்த்ரத்தை மாதா வாகவும், ஶாஸ்த்ரப்ரத₃ாநம் பண்ணினவனையே பிதா வாகவும் அபி₄மாநித்து, அந்த ஶாஸ்த்ரம் விதி₄த்தபடியே பே₄ாஜநாதி₃களும், ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும், விதி₄ நிஷேத₄ங்களும், வேத₃ஶாஸ்த்ரம் போமவர்களையே ப₃ந்து₄க்களாகவும், அந்த ஶாஸ்த்ராபி₄மாநத்தாலே வந்தேறின ரூபநாமங்களும் ஶாஸ்த்ராப்₄யாஸம் பண்ணலான தே₃ஶமாய், ஶாஸ்த்ரத்தை ஐஶ்வர்யமாகவும் ப்ரார்த்த₂னைகளாகவும் அபி₄மாநித்து, g ஆத்மாபி₄மாநங்களில் 'என்னை விஞ்சினாரில்லை' என்று தன்னை ஸமாப்₄யதி₄கத₃ரித்₃ரனாக அபி₄மாநித்து, மேனாணித்து இறுமாந்திருக்கும். 2.

ஜ்ஞாநம் பக்வமான ஸமயத்தில்—ஸகல ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்துபார்த்தால் ஆத்மாவினுடைய ஸ்வாதந்த்ர்யம் விநாஶமென்றும், ஈஶ்வரஸ்வாதந்த்ர்யம் இவனைக் கரையேற்றுமென்னுமிடமும், h''பதிம் விஶ்வஸ்ய'' i''ஆத்மதா₃ஸ்யம் ஹரேःஸ்வாம்யம்'' இத்யாதி₃ப்ரமாணங்களாலும், j''ஆலோட்₃ய ஸர்வஶாஸ்த்ராணி'' என்று ப்ரமாணங்கள் சொல்லுகை

---

யின் மூலம் புதுப்பிறவியை எடுக்கவைக்கிறான்.] [ஆபஸ்தம்ப₃த₄ர்ம 1.1-1.16] g அஜ்ஞான த₃ஶையின்போது தே₃ஹாத்மப்₄ரமம்; ஜ்ஞானம் பிறந்தபோது ஸ்வதந்த்ராத்மப்₄ரமம் (ஆத்மா ஸ்வதந்த்ரன் என்னும் மயக்கம்).

h [உலகனைத்துக்கும் பதியாயிருப்பவன் நாராயணன்] [தை-நா11] என்பது இப்ரமாணத்தின் பொருள். i ''ஸ்வோஜ்ஜீவநேச்ச₂ா யதி₃ தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி₃। ஆத்மதா₃ஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபா₄வஞ்ச ஸதா₃ ஸ்மர ॥'' [விஷ்ணுதத்வம்] [நீ உஜ்ஜீவிக்கவேண்டுமென்று எண்ணினாயாகில், உன்னுடைய ஸத்தையில் உனக்கு விருப்பமிருந்ததாகில், ஆத்மாவின் உடைமையாயிருக்கும் தன்மையையும், எம்பெருமானின் உடையவனாயிருக்கும் தன்மையையும், இவ்விரு தன்மைகள் இயல்வானவை என்பதையும் எப்போதும் நினைப்பாயாக] என்பது இப்ரமாணத்தின் பொருள். j ''ஆலோட்₃ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புநः புநः। இத₃மேகம் ஸுநிஷ்-

யாலும், கீழ்நின்ற நிலைகளையடைய நெகிழ்ந்து, k தத்வ த்ரயவிஷய ஜ்ஞாநத்தையும், தத்வத்₃வயவிஷய வைராக்₃ யத்தையும், தத்வைகவிஷய ப₄க்தியையுமுடையனாய், தத்வ ஹிதங்களை அறியும்போது, l கைப்பறி பறித்தும், m கிடந்தானை கண்டேறியும் அல்லாமையாலே, லோகத்திலே n அர்த்த₂காமோபஹதனன்றியிலே வேத₃ஶாஸ்த்ர நித₃ாநஜ்ஞாநனாய், லோகபரிக்₃ரஹமுடையனாயிருந்துள்ள ஆசார்யன் ஸ்ரீபாத₃த்திலே சென்று கண்ணுங் கண்ணீருமாய், கீழ் தே₃ஹாத்மாபி₄மாநியாயும் o கேவலாத்மாபி₄மாநியாயும் தான் பட்ட அநர்த்த₂மெல்லாம் நேராக விண்ணப்பஞ்செய்ய, ஆசார்யனும் தன் நிரவதி₄க க்ருபையாலே இவன் கண்ணீரைத் துடைத்து, p இரண்டு பங்குக்கு

---

பந்நம் த்₄யேயோ நாராயணஸ்ஸத₃ா ||[ப₄ார ஆநு 178-11] [எல்லா ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து மறுபடியும் மறுபடியும் விசாரித்த போதிலும் நாராயணன் ஒருவனே த்₄யானிக்கத்தக்கவன் என்பது ஒன்றே அசைக்கமுடியாதபடி தேறும்] என்பது இப்ரமாணத்தின் பொருள். k சித், அசித், ஈஶ்வரன் என்ற மூன்று தத்வங்களையறிந்து, சேதனம், அசேதனம் ஆகிய இரண்டு தத்வங்களையும் ப்ராப்யமாக நினையாமல், பரதத்வமான ஈஶ்வரனிடமே ப₄க்தியைச் செலுத்த வேண்டும் என்று கருத்து. l கைப்பறி பறித்தல்-தன் க்ஷேமத்துக்காகத் தான் முயல்வது, m கிடந்தானை கண்டேறுதல் - படுத்திருக்கும் யானையின்மேல் (பாகனைத் துணைகொள்ளாமல்) தானே ஏறுவது போல், ஆசார்யனைத் துணைகொள்ளாமல், தானே ஏடுபார்த்து ஶாஸ்த்ரார்த்த₂ங்களைத் தெரிந்து கொள்ளுதல். ஆசார்யனானவன் இவ்விரண்டு குற்றங்களுமற்றவனாய், எம்பெருமானையே ரக்ஷகனாக உறுதிகொண்டவனாகவும், ஒரு ஸத₃ாசார்யன் மூலமாக ஶாஸ்த்ரார்த்த₂ங்களை அறிந்தவனாகவும் இருக்கவேண்டும் என்று கருத்து. n நாலு புருஷார்த்த₂ங்களில் த₄ர்மமோக்ஷங்களிலே ஈடுபட்டு, அர்த்த₂ காமங்களுக்கு வசப்படாமல், வேத₃ஶாஸ்த்ரங்களில் அஸாரம், அல்பஸாரம், ஸாரம், ஸாரதரம் ஆகியவற்றைக் கைவிட்டு ஸாரதமத்தைக் கைக்கொள்ளவேண்டியதுக்கு உறுப்பாக அவற்றை நன்கு ஆராய்ந்து அறிந்தவனாகவும், நல்லோர்களால் ஆஶ்ரயிக்கப்பட்டவனாகவும் ஆசார்யன் இருக்கவேண்டும் என்று கருத்து. o கேவலாத்மாபி₄மானி-தன் ஆத்மாவைத் தானே அநுப₄விக்கையாகிற கைவல்ய மோக்ஷத்தில் ஆசையுடையவன். p உலகத்திலே ஒரு நிலத்தில் இரண்டு பகுதிகளுக்கு உரிமையுள்ளவர்கள் எந்தெந்தப் பகுதி

ஒருகையோலைபோலே ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கும், ஆத்ம பாரதந்த்ர்யத்துக்கும் வாசகமாய். இவ்வாத்மாவுக்கும் எம்பெருமானுக்கும் உண்டான ஒழிக்கவொழியாத ஸம்ப₃ந்த₄த்துக்கு, q எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்க₃ள ஸூத்ரமுண்டென்று பெரிய திருமந்த்ரத்தை ஆசார்யன் தன் இரக்கத்தாலே அருளிச்செய்து. ஸ்வரூபத்தில் உணர்ச்சியோடு ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியோடு ஈஶவரனைப் பேணிக்கொண்டு வர்த்தியென்று அருளிச்செய்தருளினால், தான் கீழ்நின்ற நிலைகளை நெகிழ்ந்து, r "பெற்றார் பெற்றொழிந்தார்" என்றும், s "பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ" என்றும், t "பெற்றாருஞ்சுற்றமு மென்றிவை பேணேன் நான்" என்றும், u "தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும் நோயே பட்டொழிந்தேன்" என்றும் சொல்லுகிறபடியே - திருமந்த்ரத்தையே மாதாவாகவும் ஆசார்யனையே பிதாவாகவும் அபி₄மாநித்து, ஆசார்யன் திருவுள்ளமான ரூபநாமங்களும் v பே₄ாஜநாதி₃களும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் விதி₄நிஷேத₄ங்களும், ஆசார்யன் விரும்பி வர்த்திக்கும் தே₃ஶமே தி₃வ்யதே₃ஶமாகவும், ஆசார்யன் திருவுள்ளத்தாலே ஸஹவாஸயோக்₃யராகக் கற்பித்த பரமஸத்வநிஷ்ட₂ரான ஸ்ரீவைஷ்ணவர்களே ப₃ந்து₄க்களாகவும், அவர்கள் தங்களுக்கு ஐஶ்வர்யமாக அபி₄மாநித்திருக்கும் ஆசார்ய கைங்கர்யமே தனக்கு ஐஶ்வர்யமாகவும், தத்கைங்கர்யத்தின்மேல் உண்டான ப்ரார்த்த₂னையே

---

யார்யாருக்கு என்பதை ஒரு கையோலையிலே எழுதி இருவரும் கையெழுத்திட்டு அதை இருவரும் வைத்துக்கொள்வர்கள். அதுபோல் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும் ஆத்மபாரதந்த்ர்யத்தையும் உறுதிப்படுத்தும் கையோலையாயிருப்பது திருவஷ்டாக்ஷரமந்த்ரம் என்று கருத்து. q முமுக்ஷுப்படி [ஸூ 113] இவ்விடத்தில் வ்யாக்₂யானத்துடன் அநுஸந்தி₄க்கத் தக்கது. r [பெரியதிரு 8-9-7] s [பெரிய திருவ 5] t [பெரியதிரு 8-10-5] u [பெரியதிரு 1-9-1] v "மாறன் கலை உணவாகப் பெற்றோம்" [ஆர்த்தி 55] என்கிறபடியே அருளிச்செயல் முதலானவையும் ஸாத்விகாஹாரமும் உணவு என்று

தனக்கு தே₃ஹயாத்ரையாகவும் நினைத்து, w "குலங்களாய ஈரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன் - நின்னிலங்கு பாத மன்றி மற்றோர் பற்றிலேன்" என்றும், x "கற்றிலேன் கலைகள் - நற்றுணையாகப் பற்றினேனடியேன்" என்றும், y "போதெல்லாம் போதுகொண்டுன் பொன்னடி புனையமாட் டேன் - ஏதிலேனரங்கர்க்கெல்லே" என்றும், z "நாட்டா ரோடியல்வொழிந்து" என்றும், a "நாட்டுமானிடத்தோ டெனக்கரிது" என்றும் சொல்லுகிறபடியே - தன் வேறுபாடு தோன்ற இந்நிலத்தில் பொருந்தாமையும், பொருந்தும் நிலத்தில் புகப்பெருமையும் வடிவிலே தோன்றும்படி, நிர்மலனாய் மோக்ஷப்ரத₃னான எம்பெருமானைக் கிட்டி வாழு மளவும் ஜ்ஞாநப்ரத₃னான ஆசார்யன் நிழலிலே ஒதுங்கி அவர் ப்ரீதிக்கு வர்த்த₄கனாய் இருந்தவிடம் அறியாமலிருக்கும். 3.

b ஜ்ஞாநப₂லமான ப₄க₃வத்ப்ராப்தி ஸமயத்தில் தான் கீழ்நின்ற நிலைகளையடைய நெகிழ்ந்து, ஆசார்யன் கட்டின ஸ்வரூபாநுப₃ந்தி₄யான மங்க₃ளஸூத்ரத்தில் அர்த்த₂ாநு ஸந்த₄ாநத்துடனே வர்த்தியாநிற்கச்செய்தேயும் c ப₄க₃வத் ஸ்வரூப திரோத₄ாநகரியாய், விபரீத ஜ்ஞாநஜநநியான ஶரீரஸம்ப₃ந்த₄த்தை ருசிவாஸனைகளோடே விட்டு, d ஆற் றிலே குளித்துக் கரையேறிப் e புக்ககத்தில் உற்றாரலங்கரிக்கப் போய், வருத்த தே₃ஶத்திலே முகம்பழகிய திரளிலே சென்று புகுந்து, தனக்கென்ன வொரு ரூபநாமங்களாதல், பே₄ாஜந

கருத்து. w [திருச்சந்த 90] x [பெரியதிரு 1-1-8] y [திருமாலை 26] z [திருவாய் 10-6-2] a [பெரியாழ் திரு 5-1-5]

b எம்பெருமானை அடையும் காலம் கிட்டினபோது இவனுடைய மாதாபிதாக்கள் முதலானவை இருக்கும்படியைச் சொல்லுகிறது இனி. c [ஶரணாக₃திக₃த்₃யம் 12] எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை மறைப்பதாய், விபரீதஜ்ஞானத்தை உண்டாக்குவதான ப்ராக்ருத ஶரீரஸம்ப₃ந்த₄ம். d ஆற்றிலே-விரஜையிலே. e புக்ககத்தில் உற்றார்- 'பஞ்சஶதாந்யப்ஸரஸாம்'' என்று கௌஷீதக்யுபனிஷத்திலும் "மதிமுக மடந்தையர்" [திருவாய் 10-9-10] என்று ஆழ்வாராலும் நிர்தே₃ஶிக் கப்பட்ட நித்யஸூரிகள் புக்ககமாகிற ஸ்ரீவைகுண்ட₂த்தில் உறவின

ஶயநாதி₃களாதல், ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாதல், விதி₄ நிஷேத₄ங்களாதல், தே₃ஶவாஸமாதல், ப₃ந்து₄க்களாதல், ஐஶ்வர்யமாதல், ப்ரார்த்த₂னைகளாதலின்றிக்கே, f "அஹ மந்நம்" என்னுதல், g சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி நிற்றல், h "ஸதா₃ பஶ்யந்தி" என்று வைத்தகண் வாங்காதே பார்த்திருத்தல், i "ச₂ாயா வா ஸத்வமநுக₃ச்சே₂த்" என்கிறபடியே ச₂ாயாவத் பரதந்த்ரனாய் வர்த்தித்தல் செய்வது எப்போதோ? என்று த்வரை நடந்து செல்லுகை. இவ் வர்த்த₂ம் ஓராசார்யன் அங்கீ₃கரித்த முமுக்ஷுவுக்கு நாள் தோறும் ஆராயவேண்டுவதொன்று. j எங்ஙனேயென்னில்;- ஒருவன் ஒரு கந்யகையை ஒரு மந்த்ரஸம்ப₃ந்த₄த்தாலே கைப்பிடித்தால், பூர்வாவஸ்தை₂யின் நிலைகளடைய நெகிழ்ந்து ப₄ர்த்தாவினுடைய அபி₄மாநத்திலே ஒதுங்கினாற் போலேயும், அநுபநீதனானவன் ஒரு மந்த்ரஸம்ப₃ந்த₄த் தாலே ஶிக₂ாயஜ்ஞோபவீதங்களை த₄ரித்தால் த்₃விஜ னென்று பேராகிறுப்போலேயும், யஜ்ஞத்தில் ஒருவன் தீ₃க்ஷித்தால் பூர்வாவஸ்தை₂யின் நிலைகளடைய நெகிழ்ந்து அவப்₄ருதஸ்நாநத்தளவும் யஜமாநவேஷத்துக்குத் தக்க அநுஷ்டா₂நமாகிறுப்போலேயும், ஸந்யாஸி கீழ்நின்ற நிலை களையடைய நெகிழ்ந்து ஆஶ்ரமத்துக்கு உசிதமான வர்த்த நத்தோடே வர்த்திக்கிறுப்போலேயும், இந்த ஜீவந்முக்தனான முமுக்ஷுவும் கீழ்நின்ற நிலைகளையடைய நெகிழ்ந்து ப₄க₃வத்

---

ராகக் கூறப்படுகிறார்கள். f [தைத்திரீயப்₄ருகு₃வல்லி 10-6] "நான் எம்பெருமானுக்கு பே₄াக்₃யப்பொருள்" என்று பொருள். g [திரு விருத்தம்21] h [ருக்-அஷ்டக1-2-7] [விஷ்ணுவின் பரமபத₃த்தை நித்ய முக்தர்கள் எப்போதும் காண்கிறார்கள்] i "தத்₃யதா₂ தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் ச₂ாயா வா ஸத்வமநுக₃ச்சே₂த் தத₂ாப்ரகாரம் யேந யேந த₄ாதா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி ||" [பரமஸம்ஹிதை] [இளங்கன்றையுடைய பசு தன் கன்றை யும், கன்று தன் தாய்ப்பசுவையும், நிழல் அசையும் பொருளையும் பின் தொடர்வதுபோல் பரம்பொருளைப் பின்தொடர்கிறான் முக்தாத்மா] j இப்படி ஒவ்வொரு ஸமயத்தில் இத்தகைய மாற்றங்கள் நிகழும் என்பதற்கு 1. கன்னிகை ஒருவனை ப₄ர்த்தாவாகக் கைப்பிடிப்பது. 2. உபநயனம் செய்துகொண்டு ப்₃ரஹ்மசாரியாவது. 3. யாக₃த்தில்

கைங்கர்யமொன்றிலுமே நிரதனாய் வர்த்திக்கிறது எப்போதோ? என்று தன்னெஞ்சை யுருக்கித் தன் வேறுபாடு தோன்ற வர்த்திக்கையே முமுக்ஷுக்ருத்யம் என்று நஞ்சீயர் அருளிச்செய்தார். 4.

## நானூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை

முமுக்ஷுவாய் ப்ரபந்நனானவன் தன்னைச் சிறையனாகவும், பெருங்கடல் பட்டானாகவும், அந்த$_4$கனாகவும், விஷத$_3$ஷ்டனாகவும் அநுஸந்தி$_4$ப்பான். அநுஸந்தி$_4$க்கும்படியெங்ஙனே ? என்னில் ;- தே$_3$ஹம் சிறைக்கூடாகவும், தே$_3$ஹாநுப$_3$ந்தி$_4$களான ப$_4$ார்யாபுத்ராதி$_3$கள் சிறைக்கூட்டராகவும், அஹங்காரமமகாராதி$_3$கள் வளையலாகவும், நாசமானபாசம் நாலியாகவும், அவிவேகம் மூட்டாணியாகவும், இந்த்$_3$ரியங்கள் பிரிவாளராகவும், விஷயங்கள் பிரியலாகவும், மநஸ்ஸு மேல்தண்டலாகவும், தான் சிறையனாகவும், எம்பெருமான் விமோசகனாகவும் அநுஸந்தி$_4$ப்பான். 1.

---

*தீ$_3$க்ஷை உடையவனாவது. 4. முன் ஆஶ்ரமத்தை விட்டு ஸந்யாஸியாவது என்னும் நாலு த்$_3$ருஷ்டாந்தங்கள் கொடுக்கப்படுகின்றன.*

**நானூற்றுநாற்பத்திரண்டாம் வார்த்தை**

ப்ரபந்நன்—(1) சிறைப்பட்டவனாகவும், (2) பெருங்கடலில் அகப்பட்டவனாகவும், (3) குருடனாகவும், (4) விஷஜந்துவால் தீண்டப்பட்டவனாகவும் தன்னை அநுஸந்தி$_4$க்கவேணும் என்னும் அர்த்த$_2$த்தை நாலுவாக்யங்களில் தெரிவிக்கிறது இவ்வார்த்தை.

(1) தன்னைச் சிறைப்பட்டவனாக அநுஸந்தி$_4$க்கும்போது, தே$_3$ஹத்தை சிறைக்கூடமாகவும், தே$_3$ஹப$_3$ந்து$_4$க்களான மனைவி மக்கள் முதலானோரைத் தன்னைப்போலே சிறையில் அடைபட்டிருப்பவர்களாகவும், அஹங்காரம் மமகாரம் முதலானவற்றை, கையில் போட்டிருக்கும் விலங்குக் காப்பாகவும், "நாசமான பாசம்" [பெரிய திரு 1-3-8] என்று சொல்லப்படும் ஸ்த்ரீப்ராவண்யத்தை அந்த விலங்குகளை இணைத்திருக்கும் நாலியாகவும், விவேகமின்மையை (பகுத்தறிவின்மையை) காப்பையும் நாலியையும் இணைத்திருக்கும் மூட்டாணியாகவும், இந்த்$_3$ரியங்கள், ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயங்கள், மனஸ்ஸு ஆகியவற்றை - பிரிவாளர், பிரியல், மேல்தண்டல் எனப்படும் சிறை அதி$_4$காரிகளாகவும், தன்னை இத்தகைய சிறையிலகப்பட்டவனாகவும், எம்பெருமானைச் சிறையிலிருந்து விடுவிப்பவனாகவும் அநுஸந்தி$_4$க்கவேண்டும்.

ஸம்ஸாரம் ஸமுத்₃ரமாகவும், ஆசை பெருநீராகவும், மநோவிகாரம் வாயுக்ஷோப₄மாகவும், அநுராக₃ம் பெருஞ் சுழியாகவும், அஹங்காரமமகாராதி₃கள் க்₃ராஹஸங்க₄ங் களாகவும், ஆத்₄யாத்மிகாதி₃கள் அலையொழுங்காகவும், உடம்பு ஒழுகலோடமாகவும், தத்₃ரக்ஷணாதி₃கள் வன்பார மாகவும், தான் பெருங்கடற்பட்டானாகவும், எம்பெருமான் உத்தாரகனாகவும் அநுஸந்தி₄ப்பான். 2.

மநஸ்ஸு கண்ணாகவும், ஜ்ஞாநம் பார்வையாகவும், காமம் காசமாகவும், லோப₄ம் காமிநியாகவும், உப பே₄ாக₃ம் புருஷார்த்த₂மாகவும், அக்ருத்யகரணம் வழியாக

---

(2) தன்னைக் கடலில் அகப்பட்டவனாக அநுஸந்தி₄க்கும்போது— ஸம்ஸாரத்தைக் கடலாகவும், ஆசையை அதிலுள்ள பெருநீராகவும், மனத்தின் விகாரத்தை, கடல்நீரைப் பொங்கவைக்கும் புயற்காற் றாகவும், பெண்டிரிடம் ஈடுபாட்டை அக்கடலிலுள்ள பெருஞ்சுழி யாகவும், அஹங்காரம் மமகாரம் முதலானவற்றை முதலை திமிங்கிலம் போன்று இவனைக் கடலுள் இழுக்கும் ஐந்துக்களாகவும், ஆத்₄யாத் மிகம், ஆதி₄பெ₄ளதிகம், ஆதி₄தை₃விகம் என்னும் மூன்று தாபங் களை அலைவரிசைகளாகவும், உடம்பை—கடலைக்கடப்பதற்கு இவன் பற்றியிருக்கும் ஒழுகலோடமாகவும், உடம்பை ரக்ஷிப்பது போஷிப் பது முதலானவற்றை—அந்த ஓடத்தில் ஏற்றியிருக்கும் பெரிய ப₄ார மாகவும், தன்னை இத்தகைய பெருங்கடலில் அகப்பட்டவனாகவும், எம்பெருமானை இக்கடலிலிருந்து தன்னைத் தாண்டச்செய்பவனாகவும் அநுஸந்தி₄க்கவேண்டும்.

(3) தன்னைக் குருடனாக அநுஸந்தி₄க்கும்போது — மனத்தை பார்க்கும்சக்தியற்ற கண்ணாகவும், ஜ்ஞானத்தை இவன் இழந்து விட்ட பார்வையாகவும், காமத்தை இவன் குருடனானதற்குக் காரண மான காசநோயாகவும், பேராசையை இவன் தீயவழி நடப்பதற்குக் காரணமான காமிநியாகவும், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களை அநுப₄விப் பதை அக்காமிநியிடம் இவன் அநுப₄விக்கும் காமபுருஷார்த்த₂மாக வும், செய்யத்தகாதவற்றைச் செய்வதை இவன் நடக்கும் வழியாகவும், இவனுடைய அஜ்ஞானத்தை முன்னுள்ள வஸ்துக்களின்மேல் மோதிக்கொள்ளாமல் அவற்றைக் காட்டித்தரும் கோலாகவும், நரகத்தை

வும், அஜ்ஞாநம் கோல்காட்டாகவும், நரகம் படுகுழியாக வும், தான் அந்த₄கனாகவும், எம்பெருமான் ஊன்றுகோலா கவும் அநுஸந்தி₄ப்பான். 3.

ஸம்ஸாரம் செடியாகவும், உடம்பு புற்றாகவும், இந்த்₃ ரியங்கள் விவரங்களாகவும், விஷயங்கள் பாம்பாகவும், அவற்றின் சேர்த்தி விஷமாகவும், அவற்றின் ஸந்நிதி₄ த₃ம்ஶமாகவும், அநுப₄வம் வ்யாப்தியாகவும், மோஹம் மூர்ச்சை₂யாகவும், தான் விஷத₃ஷ்டனாகவும், எம்பெருமான் தீர்மருந்தாகவும் அநுஸந்தி₄ப்பான். 4.

## நானூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை

ப்ரபந்நஸ்வரூபமிருக்கும்படி;— நம் மனிச்சர்க்கு த்₃வய மொழிந்த அநுஸந்த₄ாநமெல்லாம் கடலோசை மாத்ரம் என்று நஞ்சீயரருளிச்செய்ததாகப் பிள்ளையருளிச்செய்வர்.

---

இவன் ஸம்ஸாரம் படுகுழியாகவும், தன்னை இத்தகைய குருடனாகவும் எம்பெருமானை அப்படுகுழியில் விழாமல் தடுத்து, தன்னை நல்வழிப் படுத்தும் ஊன்றுகோலாகவும் அநுஸந்தி₄க்கவேணும்.

(4) தன்னைப் பாம்பால் தீண்டப்பட்டவனாக அநுஸந்தி₄க்கும் போது—ஸம்ஸாரத்தைப் புதராகவும், தன் உடம்பைப் பாம்பு வாழும் புற்றாகவும், அதிலுள்ள இந்த்₃ரியங்களைப் புற்றிலுள்ள த்₃வாரங்க ளாகவும், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைத் தன்னைக்கடிக்கும் பாம்பாகவும், அவற்றின் சேர்த்தியைப் பாம்பின் விஷமாகவும், அவை எப்போதும் தன் முன்னிலிருப்பதைப் பாம்புக் கடியாகவும், அவற்றை அநுப₄விப் பதை விஷம் உடம்புமுழுவதும் ஏறுவதாகவும், விஷயாநுப₄வத் தால் உண்டாகும் மயக்கத்தை விஷமேறியவன அடையும் மூர்ச்சை₂ யாகவும், தன்னை இத்தகைய விஷஜந்துவால் தீண்டப்பெற்றவனாக வும், எம்பெருமானை "தீர்மருந்து" [திருவாய் 7-1-4] எனப்படும் விஷத்தை முறிக்கும் மருந்தாகவும் அநுஸந்தி₄க்கவேண்டும்.

**நானூற்றுநாற்பத்துமூன்றும் வார்த்தை**

ப்ரபந்நர்களான எம்பெருமானார்த₃ர்ஶனஸ்த₂ர்களுக்கு த்₃வ யாநுஸந்த₄ானம் தவிர்ந்த மற்ற மந்த்ராநுஸந்த₄ானம் அனைத்தும் கடலோசைபோலே பயனற்றது என்று கருத்து.

## நானூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை

a எல்லாம் வேண்டுவதும் ப்ரபந்நனுக்கு, ஒன்றும் வேண்டாததும் ப்ரபந்நனுக்கு, படுக்கை சேர்த்திக்கு முன்பு இவையெல்லாம் வேண்டும், படுக்கையிலேறினால் இவையெல்லாம் மிகை, b பிணங்கிடக்க மணம் செய்ய வொண்ணுதாப்போலேகாண் இவ்வுடம்பு கிடக்க வருத்த கைங்கர்யம் விளையாதபடி. c ஆயிட்டு எம்பெருமானைப் பெறுகைக்கு இவ்வுடம்பேயல்ல விரோத₄ம், தான் செய்யும் நன்மைகளும் விரோத₄ம். d எங்ஙனேயெனில்:-அழகுக்கிட்ட

---

**நானூற்றுநாற்பத்துநாலாம் வார்த்தை**

a ஒரு ஸ்த்ரீக்குத் தன் ப₄ர்த்தாவுக்கு இனியதான ஆப₄ரணங்கள், சட்டை முதலான எல்லாமே ஸம்ஶ்லேஷத₃ஶைக்கு முன் வரையில் வேண்டியதாகவேயிருக்கும். ஆனால் ஸம்ஶ்லேஷத்தின்போது அதுக்குத் தடையாயிருக்கும் இவை தேவையில்லாதவையாகவே இருக்கும். அதுபோலவே ப்ரபந்நனுக்கும் ஶேஷத்வம் முதலான ஆத்மகு₃ணங்கள் எம்பெருமானுக்கு இனியவையாய்,பரமபத₃த்தில் திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் ஏறுவதற்கு முன் வரையில் வேண்டியவையாயிருக்கும். படுக்கையில் ஏறி எம்பெருமானை ஸம்ஶ்லேஷிக்கும்போது அவன் நம்மிடம் தாழநின்று பரிமாறுவான். அப்போது நாம் நைச்யம் பா₄வித்து நம்முடைய ஶேஷத்வத்தை நிலைநிறுத்தப் பார்ப்பது அவனுடைய போ₄க₃த்துக்குத் தடையாயிருக்கும். ஆகையால் ஶேஷத்வம் நைச்யம்பா₄விக்கை முதலானவை அந்த த₃ஶையில் ப்ரபந்நனுக்குத் தேவையில்லாதவையாகவே இருக்கும். b முன் வாக்கியங்களில் சொன்ன நிலை இந்த லீலாவிபூ₄தியிலே இருக்கும் போதே விளையாதோ? எனில்: பிணம் கிடக்கும்போது மணமபுரிய முடியாததுபோலே, பிணம்போன்ற இவ்வுடம்போடு கூடியிருக்கும் போது எம்பெருமானோடு பரிபூர்ண ஸம்ஶ்லேஷமாகிற மணமும், அதனால் ஏற்படும் ஸ்வரூபப்ராப்த கைங்கர்யமும் விளையமாட்டா. c இதுவரை சொன்ன விஷயங்களிலிருந்து உபேயத₃ஶையில் எம்பெருமானோடு பூர்ணஸம்ஶ்லேஷம் ஏற்படுவதற்கு இவ்வுடம்பு மாத்திரம் தடையல்ல; தன் ஶேஷத்வத்தை நினைத்து இருப்பது முதலான தனக்குத் தான் செய்யும் நன்மைகளும் தடையாகின்றன என்று விளங்குகிறது. d எங்ஙனே ? என்னில்: இவ்விஷயத்தில் நாயகநாயகிகளின் ஸம்ஶ்லேஷத்தில் பரிமாற்றம் த்₃ருஷ்டாந்தமாகக்

**சட்டை அணைக்கைக்கு விரோதி₄யாமாபோலே; முன்பு பூ₄ஷணத்தை அநுப₄விக்கவேணும். ஸம்ப₃ந்த₄ம் ஸம்பாத்₃யமன்று; தடை விடுகை ஸம்பாத்₃யம். அதாவது - ப₄க₃வத் ப்ராப்திக்கு விரோதி₄யான இச்சா₂ப்ரவ்ருத்திகளைச் சொன்னபடி.**

## நானூற்றுநாற்பத்தஞ்சாம் வார்த்தை

**ஆழ்வான் எம்பெருமானரை, "ப்ரபத்தி என்பட்டிருக்கும்?" என்று கேட்க;-"அது கர்மாதி₃களை விட்டல்லதான் இருப்பது. ஒன்றில் ஆயிரமில்லை; ஆயிரத்தில் ஒன்றுண்டு; குளப்படியில் கடலில்லை. கடலிலே குளப்படியுண்டு; ஆகையாலே எல்லாம்**

---

காட்டப்படுகிறது. ஸம்ஶ்லேஷத்துக்கு முன்பு நாயகன் நாயகியின் பூ₄ஷணங்களை அநுப₄விப்பானேயொழிய ஸம்ஶ்லேஷத்தின்போது அவை தடையாகவே இருக்கும் என்று கருத்து. இவ்விடத்தில் ஸ்ரீவசநபூ₄ஷணம் 160, 161, 162 சூர்ணைகளும் அவற்றின் வ்யாக்₂யானங்களும் அநுஸந்தி₄க்கத்தக்கவை. சேதனன் பரமாத்மாவைப் பெறுகைக்கு ஸம்ப₃ந்த₄ஜ்ஞானமும், தனக்காகத் தான் முயல்வதாகிற தடை விடுப்டுவதுமே சேதனனால் ஸம்பாதிக்கத்தக்கது. சேதனனுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள ஶேஷஶேஷிபா₄வ ஸம்ப₃ந்த₄ம் நித்யமாகையாலே ஸம்பாதிக்கத்தக்கதன்று. அதை அறிகையே வேண்டுவது. அதை உள்ளபடி உணர்ந்தால் தன்னை ரக்ஷித்துக் கொள்ளத் தான் முயல்வதாகிற தடை தன்னடையே விடுபடும். எம்பெருமானை ஜீவன் அடைவதற்கு இவனுடைய சில இச்சா₂ப்ரவ்ருத்திகள் தடையாயிருக்கின்றன. அவையாவன — எம்பெருமானுகந்த கைங்கர்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட புருஷார்த்த₂ங்களை விரும்புவதும், அவற்றுக்காகத் தான் முயல்வதும். ஸம்ப₃ந்த₄ ஜ்ஞானத்தினால் இந்த இச்சா₂ப்ரவ்ருத்திகள் நீங்கினால் ப₄க₃வத் ப்ராப்தி தன்னடையே கிடைக்கும் என்று கருத்து.

### நானூற்றுநாற்பத்தைந்தாம் வார்த்தை

கர்மம், ஜ்ஞானம், ப₄க்தி இம்மூன்றும் ஸாத₄னம் என்னும் ஆகாரத்தில் ப்ரபந்நனுக்குக் கைவிடத்தக்கவையாயிருந்தபோதிலும், வேறு ஆகாரத்தில் இம்மூன்றும் ப்ரபந்நனுக்கும் உண்டு என்று எம்பெருமானர் ஆழ்வானுக்கு அருளிச்செய்த வார்த்தை இது.

ப்ரபத்தியிலே உண்டு" என்றருளிச்செய்தார். அதில் இவை கண்டபடி எங்ஙனே? என்னில்;- ராஜகுமாரன் கர்ப்பூரநிகரத்தை வாயிலேயிட்டுப் பல்லாலே அசைக்குமாபோலே, த்$_3$வயத்தை உச்சரிக்கை-கர்மம்; அவன் அதின் ரஸத்தைப் பாநம்பண்ணுமாபோலே இடைவிடாதே அநுஸந்தி$_4$க்கை-ஜ்ஞாநம்; அவன் அந்த ரஸத்தாலே தன்னை மறந்திருக்குமாபோலே இவனும் அதின் அர்த்த$_2$ாநுஸந்த$_4$ாநத்தாலே ரஸாதி$_4$ஶயிதனுய்த் தன்னை மறந்திருக்குமது-ப$_4$க்தி; / அத்தாலும் ப்ரபந்நனுடைய அநுஷ்ட$_2$ாநமிருக்கும்படி பிறந்துடையவளுடைய ஒப்பனை போலேயும், ராஜகுமாரன் கர்ப்பூரநிகரத்தை வாயிலிட்டு நீரை நாக்காலே போக்குமாபோலேயும், ப்ரபந்நனுக்கு த்$_3$வயார்த்த$_2$ாநுஸந்த$_4$ாநமொழிய தே$_3$ஹயாத்ரை செல்லாது.

## நானூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

நஞ்சீயர், ப$_4$ட்டரை "ப்ரபத்தியாவது - ஜ்ஞாநவிஶேஷமோ, க்ரியாவிஶேஷமோ? என்று கேட்க; வஸ்து விஶேஷமென்றருளிச்செய்தார்.

---

ராஜகுமாரன் பச்சைக்கர்ப்பூரக்கட்டியை வாயிலேயிட்டுப் பல்லாலே மெல்லுவதுபோலே, பரமபே$_4$ாக்$_3$யமான த்$_3$வயத்தை உச்சரிப்பது என்னும் ஆகாரத்தில் ப்ரபந்நனுக்குக் கர்மம் உண்டு. அவன் அந்தக் கர்ப்பூர ரஸத்தைப் பருகி, அதின் இனிமையை அநுஸந்தி$_4$ப்பது போலே த்$_3$வயத்தின் அர்த்த$_2$த்தை இடைவிடாமல் அநுஸந்தி$_4$ப்பது என்னும் ஆகாரத்தில் ப்ரபந்நனுக்கு ஜ்ஞாநம் உண்டு. அவன் அக்கர்ப்பூரரஸத்தின் இனிமையால் தன்னை மறந்திருப்பதுபோலே த்$_3$வயார்த்த$_2$ாநுஸந்த$_4$ாநத்தாலே மிகவும் ஆநந்த$_3$ம் அடைந்து தன்னை மறந்திருக்கையாகிற ப$_4$க்தியும் ப்ரபந்நனுக்கு உண்டு. இவ்விஷயம் முமுக்ஷுப்படி சூர்ணை 270, 271ல் வேறொரு வகையில் நிரூபிக்கப்பட்டது இங்கு அநுஸந்தி$_4$க்கத்தக்கது. ராஜகுமாரன் எல்லாக் காலத்திலும், பச்சைக்கர்ப்பூரக்கட்டியை வாயிலே இட்டு அதன் ரஸத்தை நாவால் விழுங்கிக்கொண்டேயிருப்பதுபோலே, ப்ரபந்நனுக்கும் த்$_3$வயத்தின் அர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்துக் கொண்டே இல்லாவிடில் வாழ்க்கை நடத்தமுடியாது.

---

/ இங்கு பாடப் பிறழ்வு இருக்கலாம்.

## நானூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

**திருமந்த்ரம் விலைப்பால், த்₃வயம் முலைப்பால்.**

## நானூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

**a நம்முடைய த்₃வயமிருக்கும்படி; கரைகட்டின காவேரியும் கரைகட்டாக் காவேரியுமாய், அப்படி இறங்குந்துறையுமாயிருக்கும், அவையெவையென்னில்;-பரமபத₃ம் கரைகட்டாக் காவேரி; ராமக்ருஷ்ணாதி₃விப₄வம் கரைகட்டின காவேரி; அப்படி இறங்குந்துறை திருமந்தரமும் த்₃வயமும்.**

---

### நானூற்றுநாற்பத்தாறும் வார்த்தை

*'எம்பெருமானே உபாயம்' என்னும் ஜ்ஞானமாயிருக்கும் ப்ரபத்தி உபாயமா? எம்பெருமானுடைய திருவடிகளில் தன் ப₄ாரத்தை ஸமர்ப்பிப்பதாகிற (ப₄ரஸமர்ப்பணமாகிற) க்ரியாரூபமான ப்ரபத்தி உபாயமா? என்று நஞ்சீயர் ப₄ட்டரைக் கேட்க, "இரண்டுமே உபாயமன்று. எம்பெருமானாகிற பரவஸ்துவே உபாயம்" என்று அருளிச்செய்தார் ப₄ட்டர் என்று கருத்து. 'உபாய'மென்ற பொருளில் ப்ரபத்தி ஶப்₃த₃த்தை வழங்கினால் அதற்கு எம்பெருமானே அர்த்த₂மாவான் என்று கருத்து.*

### நானூற்றுநாற்பத்தேழாம் வார்த்தை

*திருமந்த்ரம் ஶாஸ்த்ரங்களிலிருந்து கிடைப்பதாகையால் கடையிலிருந்து கிடைக்கும் விலைப்பால் போன்றது. த்₃வயம் தாய்போல் பரிவுடைய ஆசார்யனுடைய உபதே₃ஶத்திலிருந்து கிடைப்பதால் தாயின் முலைப்பால்போல் பரமஹிதமாயிருக்கும் என்று கருத்து.*

### நானூற்றுநாற்பத்தெட்டாம் வார்த்தை

*a த்₃வயத்தையும், அதற்கு ஸங்க்₃ரஹமான திருமந்த்ரத்தையும், கரைகட்டாக்காவேரிபோலே அளவிறந்ததான பரமபத₃த்துக்கும், கரைகட்டின காவேரிபோலே காலவரம்புக்குட்பட்ட ராமன், கிருஷ்ணன் முதலான விப₄வாவதாரங்களுக்கும் படித்துறையாக நிரூபிப்பது இந்த வார்த்தை.*

*b இப்படிப்பட்ட பரம்பொருளைக் காண்பது எப்படி? எனில்: குழந்தைபோலே திருவநந்தாழ்வாலே திருமடியில் வைத்து லாலநம் செய்யப்படுமவனாகவும், பெரியதிருவடியாலே முதுகிலே சுமக்கப்*

b இங்ஙனொத்தவனைக் காண்பதெங்ஙனே யென்னில்;— திருவநந்தாழ்வான் திருமடியிலும், பெரியதிருவடி முதுகிலும், ஸேனைமுதலியார் திருப்பிரம்பின்கீழும் இருப்பவனிறே நமக்கு ப்ராப்யன்.

## நானூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

திருமந்த்ரம் திருமுகப்பாசுரம்; அருளிச்செயல் படியெடுப்பு.

## நானூற்றைம்பதாம் வார்த்தை

a 'ப₄க₃வச்சே₂ஷமாய்வைத்து அகன்றுபோன ஆத்மாவை எம்பெருமானோடே சேர்க்கைக்குப் பற்றுசாகப் பிராட்டியுளள்' என்று அத்₄யவஸித்திருக்கை. தொண்டனூர் நம்பி தம்முடைய அந்திமத₃ஶையிலே மருதூர்நம்பி நடக்க; "இவ்வாத்மா எம்பெருமானைப் பற்றிக் கரைமரஞ்சேரும்படி ஒருவார்த்தை சொல்லவல்லையே?" என்று கேட்க; "எம்பெரு

---

படுமவனாகவும், பிரம்பும் கையுமான ஸேனைமுதலியா (விஷ்வக்ஸேன)ராலே, ஆசிரியரால் மாணவன்போலே பாதுகாக்கப்படுமவனாகவும் இருப்பவன் என்றும், இப்படிக் காண எளிய இவனே நமக்கு ப்ராப்யன் என்றும் கருத்து. "வானிளவரசு வைகுந்தக்குட்டன்" [பெரியாழ்திரு 3-6-3] எனும் பாசுரத்திலும் இவ்வர்த்த₂ம் உணர்த்தப்பட்டது.

### நானூற்றுநாற்பத்தொன்பதாம் வார்த்தை

திருமந்த்ரம் ப₃த₃ரிகாஶ்ரமத்திலே நாராயணனாலேயே அருளிச்செய்யப்பட்டதாகையாலே திருமுகப்பாசுரமாகும். அருளிச்செயல் முழுவதும் அதற்கு வ்யாக்₂யானம் போன்றுள்ளது.

### நானூற்றைம்பதாம் வார்த்தை

a அநாதி₃காலமாக எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தும் அகன்றிருந்த இவ்வாத்மாவை எம்பெருமானோடே சேரவைப்பதற்குப் புருஷகாரபூ₄தையான பிராட்டி இருக்கிறாள் என்று உறுதிபூண்டிருக்கையே ஜீவன் செய்யவேண்டியது என்னும் அர்த்த₂த்தை ஐதிஹ்யத்தைக் காட்டி நிரூபிக்கிறது இவ்வார்த்தை. தொண்டனூர் நம்பியினுடைய அந்திம காலத்தில் மருதூர்நம்பி எழுந்தருள, தொண்டனூர் நம்பி அவரிடம் தமக்கு உய்யும்வகையொன்றைக்கேட்க, 'அஞ்ஜலிரூப

மானுக்கு இல்லாததுமாய் இவ்வாத்மாவுக்கு உள்ளதொன்று மாய், எம்பெருமானைப் பெறுகைக்குப் பொருள்விலையுந்தானே யாயிருப்பதொரு அஞ்சலியேகாண்" என்றருளிச்செய்தார். அதெங்ஙனேயென்னில்;-அடித்துப் பறிக்கும் த₃சையிலே ஓரறிமுகம் பெற்றாற்போலேயும், க₃ருட₃முத்₃ரைக்கு விஷம் தீருமாப்போலேயும், நமக்குப் புருஷகாரபூ₄தையான பிராட்டி உளள் என்று அத்₄யவஸித்திருக்கையே வேண்டுவது. b இவ் வதி₄காரிக்கு ப்ரக்ருதியுடனிருக்கும் நாள் இத்தனையும் நினைத் திருக்கவேண்டும்படி யெங்ஙனேயென்னில்; "எம்பெருமானும் நித்யன், ஆத்மாவும் நித்யம்; ஆயிருக்க இது இற்றை வரை இழப்பதே!" என்று இழவுபட்டிருக்கையும்,

---

மான காயிகப்ரபத்தியே அது' என்று மருதூர்நம்பி அருளிச்செய்தார். இந்த அஞ்ஜலியைப் பரமாத்மா ஒருவரைக்குறித்துச் செய்யமுடியாது. நாம் அவனைக் குறித்துச் செய்யக்கூடியது இது. "அம் ஜலயதி இதி அஞ்ஜலி:" [அகாரவாச்யனான எம்பெருமானை நீர்போலே உருக்குகிற தாகையால் 'அஞ்ஜலி'எனப்படுகிறது] என்னும் வ்யுத்பத்தியின்படி எம் பெருமானைப் பெறுகைக்கு எளிய உபாயமாயிருப்பது அஞ்ஜலி. தன் கையில் ஒன்றுமில்லை என்பதைக் காட்டுவதாயிருப்பதாலே காயிகப்ர பத்தியாகவேயிருப்பது அஞ்ஜலி என்று கருத்து. இந்த அஞ்ஜலியையும் பிராட்டியைப் புருஷகாரமாக வரித்துச்செய்யவேண்டும். வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் நம்மிடம் உள்ளதையெல்லாம் அடித்துப் பறிக்கும் காலத்தில், அவர்களை விரட்டவல்ல ஒரு துணைவன் அங்கு வந்தது போலவும், பாம்பு கடிக்கப்பெற்றவனுடைய விஷம் க₃ருட₃முத்₃ரையால் தீருவதுபோலவும், புருஷகாரபூ₄தையான பிராட்டி ஸன்னிதி₄யாலே நமக்குப் பேறுதப்பாமற்கிடைக்கும். ஓர் அஞ்ஜலிமாத்ரத்திலே எம் பெருமான் தன்னை நிர்ஹேதுகமாக அளிப்பான் என்று உறுதி பூண்டிருப்பதே இவன் செய்யவேண்டுவது. தொண்டனூர்நம்பியும் மருதூர்நம்பியும் எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களாய் அவரால் நியமிக்கப்பெற்ற ஸிம்ஹாஸநாதி₄பதிகளாய் அவருக்குப் பின் அருளாளப்பெருமாள் எம்பெருமானார் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்கள். b ப்ரபந்நன் இவ்வுலகில் இருக்கும் வரையில் எண்ணியிருக்க வேண்டும் அர்த்த₂ங்களைச் சொல்லுகிறது இவ்வாக்யம். அவை யாவன:— (1) 'எம்பெருமானும் நித்யனாய், நாமும் நித்யவஸ்துவா யிருந்தும் இவ்வளவுநாள் எம்பெருமானை நாம் அநுப₄விக்கா மல் இருந்தோமே' என்று வருத்தப்பட்டுக்கொண்டிருக்கவேண்டும்.

"நெடுங்காலம் இழப்பித்த உடம்போடே எம்பெருமான் தன்னை ரக்ஷகனென்று அநுஸந்தி₄க்கவைப்பதே!" என்றிருக்கையும், "இற்றைவரை இழப்பித்த உடம்பிருந்தது இன்னமிழக்கிலோ?" என்று ப₄யம்பிறந்திருக்கையும், பெறுகைக்கு நாம் பண்ணுவதொரு நற்றமுண்டோ இழக்கைக்கு ப₄யப்பட, இரண்டும் அவனே ஆனபின்பு? தன்னை அநுஸந்தி₄த்துத் தளருகையும், அவனை அநுஸந்தி₄த்துப் பெறும் தேற்றமும் இவ்வாகாரத்₃வயமும் ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ம் அறுமளவும் இப்படி அநுஸந்தி₄க்குமவன் அதி₄காரியாகிறான். இவ்வதி₄காரிக்கு உபாயத்துக்குச் செய்யவேண்டுவதொன்றுமில்லை; c த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்தை அநுஸந்தி₄த்தால் துரும்புநறுக்க ப்ராப்தியில்லை; உத்தரக₂ண்ட₃த்தை அநுஸந்தி₄த்தால் தலைசொரிய அவஸரமில்லை. dஜ்ஞாநப்ரத₃ன் ஆசார்யன்; ஜ்ஞாநவர்த்த₄கர் ஸ்ரீவைஷ்ணவர்கள்; ஜ்ஞாநவிஷயம் எம்பெருமான்; ஜ்ஞாநப₂லம் ப₄க₃வத்கைங்கர்யம்; ப₂லத்தின் இனிமை பா₄க₃வத கைங்கர்யம்.

---

(2) "நெடுங்காலம் நம்மை எம்பெருமானை விட்டுப்பிரித்த இவ்வுடம்போடு இருந்தபோதிலும், எம்பெருமான் இப்போது தன்னை ரக்ஷகன் என்று நாம் நினைக்கும்படி செய்துவிட்டானே!" என்று ஆச்சர்யப்பட்டுக்கொண்டிருக்கவேண்டும். (3) "அநாதி₃காலம் தொடங்கி இன்றுவரை நம்மை எம்பெருமானிடமிருந்து பிரித்த உடம்பு இன்னமும் இருக்கிறதே; இனியும் இது அவனை இழக்கச்செய்துவிடுமோ" என்று பயந்துகொண்டிருக்கவேண்டும். (4) "நாம் ஒரு நல்ல காரியம் செய்து அவனைப் பெற்றிருந்தாலன்றோ மறுபடியும், அவனை நாம் இழந்து விடுவோமோ?' என்று பயப்பட இடமுண்டு. அநாதி₃காலமாக இழந்திருக்கச் செய்தவனும், இன்று பெறச்செய்தவனும் அவனேயன்றோ" என்று பயம் தேறியுமிருக்கவேண்டும். இப்படி நம்மை அநுஸந்தி₄த்து பயப்படுவதும், அவனை அநுஸந்தி₄த்துத் தேறுவதும் இவ்வுடம்போடு இருக்கும் வரையிலும் தொடர்ந்துகொண்டேயிருக்கும். இந்த நாலு அநுஸந்த₄ானமுமுள்ளவனே ப்ரபந்நாதி₄காரியாகிறான். இவன் எம்பெருமானை அடைவதற்கு ஒன்றும் செய்யவேண்டியதில்லை - c 107வது வார்த்தையில் c, d, வாக்யங்களைப்பார்க்கவும். d. இவ்வார்த்தை தெலுங்குப் பதிப்பில் மாத்திரம் காணப்படுகிறது. பரஸ்வரூபஜ்ஞானத்தை அளிப்பவன் ஆசார்யன்; அந்த ஜ்ஞானத்தை வளர்ப்பவர்கள்

## உடையவர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்த பத்து வார்த்தை

உடையவர் பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் விஷயமாக முதலியாண்டானுக்குப் பணித்த பத்து வார்த்தை. முதலியாண்டான், உள்ளம் விம்மிப் புறம்பொசிந்து உடையவர் ஸ்ரீபாத₃த்திலே தண்டனிட்டு, "நமக்கும் நம் முதலிகளுக்கும் முள்ள தன்னேற்றம் அருளிச்செய்யவேணும்" என்ன; உடையவரும், 'நாமே உமக்குச் சொல்லவேணுமென்றிருப்பதொரு அர்த்த₂த்தை நீர்தாமே கேட்டீரே' என்று ப்ரீதராய், ஸகல வேத₃ஶாஸ்த்ரங்களிலும் இதிஹாஸபுராணங்களிலும் உள்ளதைப் பொறுக்கிச் சேர்த்து, நம் ஆழ்வார்கள் அருளிச்செயல்களிலும் சொல்லப்பட்ட கு₃ஹ்யமாயிருப்பதொரு அர்த்த₂த்தை உடையவர் முதலியாண்டானுக்கு இப் பத்து வார்த்தையாலே அருளிச்செய்கிறார்.

இதில் முதல் வார்த்தை — நமக்கும் நம் முதலிகளுக்கு முள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்;- நாம நாடு

ஸ்ரீவைஷ்ணவர்கள்; அவ்வறிவுக்கு விஷயமாயிருப்பவன் எம்பெருமான்; அவ்வறிவின் ப₂லம் எம்பெருமானைக் குறித்த கைங்கர்யம்; அந்தப் ப₂லமாகிற கைங்கர்யம் ரஸிப்பது—பா₄க₃வதகைங்கர்யம் வரையில் சென்ற பின்பே என்று கருத்து.

### உடையவர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்த பத்து வார்த்தை

"ஆசார்யஸ்தா₂னத்தில் இருப்பவர்களாய், வேத₃த்தில் அதி₄காரமுள்ளவர்களான பூணூல் சாதிய நமக்கும், ஶிஷ்யர்களாகவே இருப்பவர்களாய, வேத₃த்தில் அதி₄காரமில்லாதவர்களான பிள்ளை யுறங்காவில்லிதா₃ஸர் போன்ற பூணூல் சாத்தாத முதலிகளுக்கும் உள்ள வாசியை (ஏற்றத்தாழ்வை) அருளிச்செய்யவேணும் என்று முதலியாண்டான் எம்பெருமானாரைக்கேட்க, பத்து வார்த்தை எம்பெருமானார் அருளிச்செய்கிறார் இவ்வார்த்தையில். அவையாவன:—

(1) ஆசார்யர்கள் உலகைத் திருத்துவதற்காக உலகில் உழல வேண்டியிருக்கிறது. சாத்தாத முதலிகளுக்கு இந்தக் கடமையில் லாமையாலே "நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணி

பரிக்₃ரஹிக்கைக்காகச் செய்வுதோம்; அவர்கள் நாட்டா ரோடியல்வொழிந்து நாரணனை நண்ணியிருப்பர்கள். 1.

இரண்டாம் வார்த்தை — திருப்பதிகளுக்கும் கோயில் திருமலை பெருமாள்கோயிலுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனே யென்னில்;-நாம் தெப்பக்கையரைப்போலே இரண்டையும் விடோம்; அவர்கள் ஸாரஜ்ஞராய்க்கொண்டு விட்டத்தி லிருப்பாரைப்போலே முதலடியிலே நிற்பர்கள். 2.

மூன்றும் வார்த்தை — ஆழ்வார்களுக்கும் பெரியாழ் வார்க்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனே யென்னில்;-நாம் கலக்கங்களும் தேற்றமுமாய்ப் போருவுதோம்; அவர்கள் கலக்க மில்லா நற்றவர்களாய், பல்லாண்டு கூறியிருப்பர்கள். 3.

---

னம்மே" [ திருவாய 10-6-2 ] என்கிறபடியே நாட்டாரோடுழலாமல் நாரணனையே பற்றியிருக்கும் பெருமையுண்டு.

(2) தெப்பத்தை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் நீந்துகிறவர்களைப்போலே நாம் ப்ரத₄ானக்ஷேத்ர மொன்றிலே வாழ்ந்து நிர்ப்ப₄ரராயிராமல் "மாமலராள் புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும்" [இராமாநுச 60] புக்கு நிற்போம். அவர்கள் கோயில், திருமலை, பெருமாள்கோயில் போன்ற ப்ரத₄ான க்ஷேத்ரமொன்றில் ஈடுபட்டு, படகின் மேல் விட்டத்திலே இருப்பவர்களைப்போலே நிர்ப்ப₄ரராயிருப்பர்கள். (தெப்பக்கையர், விட்டத்திலிருப்பார் என்னும் பத₃ங்களின் விவரணம் ஆசார்யஹ்ருத₃யம் சூர்ணை 19-ன் வ்யாக்₂யானத்தில் காண்க.)

(3) ப₄க₃வத₃நுப₄வத்தில் த்வரையாலே எம்பெருமானையும் அவனடியாரையும் வெறுத்து வார்த்தை சொல்லுவது, மடலெடுப்பது, நோன்புநோற்பது முதலான அதிப்ரவ்ருத்திகளைக் கலங்கின த₃சையிலே செய்பவர்களாய், தேறினபோது மங்க₃ளாஶாஸன பரராயிருப்பவர்களான மற்ற ஆழ்வார்களைப்போலே நாம் 'கலக்கங் களும் தேற்றமுமாய்' [ திருவாய் 6-3-2 ] இருப்போம். சாத்தாத முதலிகள் பெரியாழ்வாரைப்போலே 'கலக்கமில்லா நற்றவமுனிவர்' [திருவாய் 8-3-10] என்னும் பெருமையையுடையவர்களாய்"பல்லாண்டு கூறுதுமே" "பல்லாண்டு கூறுவனே" [திருப்பல்லாண்டு 3, 11] என்று மங்க₃ளாஶாஸனபரராயிருப்பர்கள்.

நாலாம் வார்த்தை — அந்தரத்துக்கும் (கரைக்கும்)? கடலுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்;- நாம் ஸம்ஸாரமாகிற கடலிலும் மழையிலும் பெருங்காற்றிலும் அவற்றிலுள்ள லாப$_4$ச்சே$_2$த$_3$ங்களாலும் ஸோகஹர்ஷங்களைப் பண்ணுநிற்புதோம்; அவர்கள் இரண்டிலும் "தளர்தல தனருகுஞ்சாரார்" "தருதுயரந்தடாயேல்" என்கிற திருமொழிப்படியே நிற்பர்கள். 4.

அஞ்சாம் வார்த்தை — அணுவுக்கும், மஹாமேருவுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனே யென்னில்;-நாம் ஸமப$_3$ந்த$_4$மும் குடிகோ$_3$த்ரமும் ஸூத்ரமுமாகப் பண்ணுவுதோம்; அவர்கள் ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாநாநுஷ்ட$_2$ாநமே குடிகே$_3$ாத்ர ஸூத்ரமென்றிருப்பர்கள். 5.

ஆறும் வார்த்தை—கரும்புக்கும் கண்டுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்;- நாம் வேத$_3$மாகிற கரும்

---

(4) "ஆவாரார் துணையென்று அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய்" [திருவாய் 5-1-9] போல் ஸம்ஸாரமாகிற கடலிலும் மழையிலும் பெருங்காற்றிலும் அலைப்புண்டு, ஸம்ஸாரத்திலுள்ள லாப$_4$ நஷ்டங்களில் இன்பதுன்பங்களை அடைகின்றோம் நாம். அவர்கள் கரையிலே நங்கூரம் பாய்ச்சப்பெற்று நிலையாயிருக்கும் கப்பல்போலே லாப$_4$ நஷ்டங்களில் இன்பதுன்பங்களை அடையாதவர்களாய் "உளதென்றிறுமாவார் உண்டில்லையென்று தளர்தல் அதனருகும் சாரார்" [இர-திருவ 45] "தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை" [பெரு-திரு 5-1] என்கிறபடியே எம்பெருமானாகிற கரையைப்பற்றி நிலையாயிருப்பர்கள்.

(5) நாம் பண்டைக்குலமான ப்$_3$ராஹ்மண்யத்தைப் பற்றி நின்று, குடி, கோ$_3$த்ரம், ஸூத்ரம் முதலானவற்றில் உழல்கின்றோம்; அவர்கள் தொண்டக்குலத்துக்குரிய ஜீவபரஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞானத்தையும், அதற்குரிய அநுஷ்ட$_2$ானத்தையுமே குடி, கோ$_3$த்ரம், ஸூத்ரம் முதலான அனைத்துமாகக் கொண்டிருப்பர்கள்.

(6) 'மறையாய நால்வேத'மாகையாலே சக்கை கலந்ததான வேத$_3$மாகிற கரும்பைக் கடித்து,பல்முறிவதுபோலே அர்த்த$_2$நிஷ்கர்ஷம்

யைக்கடித்துப் பல்லு முறிவுதோம்; அவர்கள் ஸாரத்$_3$வயமாகிற கண்டைக கடித்து இன்புறுவர்கள். 6.

ஏழாம் வார்த்தை—மண்ணுக்கும் விண்ணுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்;- நாம் "மண்ணுளென்னைப் பெற்றாலென்செய்யா" என்றும், "அருவித்தின்றிட அஞ்சி நினனடைந்தேன்" என்றும், "பல நீ காட்டிப் படுப்பாயோ" என்றும், "திருமாலே! இனிச்செய்வதொன்றறியேன்" என்றும் ப$_4$யப்பட்டுக் கலங்காநிற்புதோம்; அவர்கள் "இங்கே திரிந்தேற்கிழுக்குற்றென்?" என்றும், "வானுயரின்பமெய்திலென?" என்றும், "நம்புவார்பதி வைகுந்தங் காண்மின்" என்றும், "செய்ந்தலையெழு நாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள" என்றுமிருப்பர்கள். 7.

எட்டாம் வார்த்தை — இரவுக்கும் பகலுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்;-நாம் வேத$_3$மாகிற அந்த$_4$

---

செய்வதில் கஷ்டப்படுகிறோம். அவர்கள் ஸகலவேத$_3$ஸாரமான த்$_3$வயமாகிற கற்கண்டைச் சுவைத்து இன்புறுகிறார்கள்.

(7) நமக்கும், அவர்களுக்கும்—மண்ணாகிற லீலாவிபூ$_4$திக்கும் விண்ணாகிற நித்யவிபூ$_4$திக்கும் உள்ள வாசி உண்டு. நாம் "மண்ணுள் என்னைப்பெற்றால்" [திருவாய் 7-1-6] என்றும் "அருவித்தின்றிட" [பெரியதிரு 7.7.1] என்றும், "ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம் பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ" [திருவாய் 6 9-9] என்றும் "திருமாலே! இனிச் செய்வதொன்றறியேன்" [பெரியதிரு 7-7 9] என்றும் இந்த லீலாவிபூ$_4$தியிலுள்ளாரைப்போலே பயப்பட்டுக் கலங்கியிருப்போம். அவர்கள் "இங்கே திரிந்தேற்கிழுக்குற்றென்" [திருவாய் 8 10-4] என்றும், "வானுயரின்பம் எய்திலென் மற்றை நரகமே எய்திலென்?" [திருவாய் 8-1-9] என்றும், "நம்புவார் பதிவைகுந்தம் காண்மினே" [கண்ணிநுண் 11] என்றும் 'செய்த்தலை எழு நாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள" [பெரியாழ் திரு 3 7-9] என்றும் சொல்லுகிறபடியே நித்யவிபூ$_4$தியில் இருப்பவர்களைப்போலே ப$_4$யமும் கலக்கமும் இல்லாமலிருப்பர்கள்.

(8) நாம் பொருள் உணர்வரிய வேத$_3$மாகிற இருட்டிலே தடவித் தடுமாறிநிற்கிறோம். அவர்கள் அவன் *பேராயிரமுமோதின [பெரிய

காரத்திலே தடுமாறாநிற்புதோம்; அவர்கள் இராமானுஜன் பேரா யிரமுமோதின விளக்கொளியாலே, மாதவன் தன் துணையா நடந்து, மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினிற் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் வழியே நடப்பர்கள். 8.

ஒன்பதாம் வார்த்தை — ரஹஸ்யநத்துக்கும் பாஷாணைத்துக்கு முள்ள தன்னேற்றம். எங்ஙனேயெனில்;- நாம் "மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம் மட நெஞ்சமே" என்று - அந்திதோறும் மந்திரத்தைச் சொல்லா நிற்புதோம்; அவர்கள் "அந்தியாலாம் பயன் அங்கென்?" என்று-மந்த்ரரத்நத்தைச் சிந்திப்பர்கள். 9.

பத்தாம் வார்த்தை—பதிவ்ரதைக்கும் பரநாரிக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்; நாம் ஆக்₃நேயாதி₃ களுக்கு ஶேஷமாயிருப்புதோம்; அவர்கள் அவனுக்கே ஶேஷ மென்று, அவனையொழிந்தவர்களுக்கு ஶேஷமன்றென்றுஅறுதி யிட்டிருப்பர்கள். இது இருவர்களுக்குமுள்ள தன்னேற்றம். 10.

---

திரு 1-5-10] இராமானுசன் நாமங்களாகிற விளக்கொளியாலே *மாதவன் தன் துணையா நடந்து [பெரியதிரு 3-7-4] *மாயனன்று ஐவர் தெய்வத் தேரினில் செப்பிய கீதையின் செம்மைப்பொருள் [இராமாநுச68] வழி யிலே (சரமஶ்லோக மார்க்க₃த்திலே) தடுமாற்றமில்லாமல் நடப்பர்கள்.

(9) "மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே" [திருநெடு 4] என்கிற ரீதியிலே இரண்டு ஸந்த்₄யா காலங்களிலும் க₃ாயத்ரீ மந்த்ரத்தை ஜபித்துக் கொண் டிருப்போம் நாம். அவர்கள் "பெயரினையே புந்தியால் சிந்தியாது ஓதியுருவெண்ணும் அந்தியாலாம் பயனங்கென்?" [முதல்திருவ 33] என்கிறபடியே பயனற்ற க₃ாயத்ரீ ஜபத்தில் ஈடுபடாமல், அமுதம் போன்ற மந்த்ரரத்னமாகிற த்₃வயத்தைச் சிந்திப்பர்கள்.

(10) நாம் அக்₃நீந்த்₃ராதி₃ தே₃வர்களுக்கு அந்தர்யாமியான எம்பெருமானை ஆராதி₄க்கும் வைதி₃க கர்மங்களைப் பற்றியிருக்கை யாலே, வெளிப்பார்வைக்குப் பாதிவ்ரத்யம் இல்லாத ஸ்த்ரீபோல் தோற்றமளிப்போம். அவர்களுக்கு இக்குறையுமில்லை. "அவனுக்கே அடிமைப்பட்டது நம் ஆத்மா; மற்றவர்களுக்கு அடிமைப்பட்டதன்று" என்று உறுதிபூண்டிருப்பார்கள்.

இந்தத் தன்னேற்றந்தான் பெருமாள்பக்கலிலும், நம்பெருமாள்பக்கலிலும், அப்பன்பக்கலிலும், பெரியநம்பி பக்கலிலும் காணலாம். இதின் ஏற்றந்தான் நமக்கும் உமக்கும் பெரியோர்களுக்கும் நித்யாநுஸந்த₄ாநமென்று உடையவர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்தார்; முதலியாண்டானும் "அடியேன் இத்தனை காலம் அபசாரம் பண்ணிப்போந்தேன்; இனிச்செய்யவடுப்பதென்?" என்று விண்ணப்பஞ்செய்ய; "ஶரணாக₃தனான முமுக்ஷுவுக்கு இப்பத்து வார்த்தையும் நெஞ்சிலே பட்டவனாறு திருவடிகள் ஸித்₃தி₄க்கும்" என்று உடையவர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்தார்.

## நானூற்றைம்பத்தோராம் வார்த்தை

"முமுக்ஷுவாய் ப்ரபந்நனுயிருக்குமவனுக்கு இருக்கும் நாளைக்குக் காலக்ஷேப ப்ரகாரமிருக்கும்படி யெங்ஙனே?" என்று உடையவர் திருவடிகளிலே விழுந்து முதலியாண்டான் விண்ணப்பஞ்செய்ய; "கு₃ருபாம்பாராபூர்வகமாக த்₃வயத்தை

---

இந்த ஏற்றங்கள ப்₃ராஹ்மணரல்லாத ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கிறது என்று திருவுள்ளம்பற்றியே பெருமாளாகிற ஸ்ரீராமபிரான் ரிஷிகளைக்காட்டிலும் குஹப்பெருமாளிடமும் வாநர முதலிகளிடமும் விபீ₄ஷணாழ்வானிடமும் ஈடுபட்டார். நம்பெருமாள் லோகஸாரங்க₃ மஹாமுனியைக்காட்டிலும் திருப்பாணாழ்வாரிடம் ஈடுபட்டார். திருமலையப்பன் முடிமன்னனான தொண்டைமான் சக்கரவர்த்தியைக் காட்டிலும், குயவரான குறும்பறுத்த நம்பியிடம் ஈடுபட்டார். பெரியநம்பி ப்₃ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்களுடைய விரோத₄த்தையும் பொருட்படுத்தாமல் மாறனேரிநம்பிக்கு ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் செய்தருளினர். ஆகையால் ப்₃ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தப் பத்து வார்த்தையையும் அநுஸந்தி₄த்தால் சாத்தாத முதலிகளின் பெருமையை அறிவார்களாகையாலே அவர்களிடம் அபசாரம் ஏற்படாது; எம்பெருமான் திருவடிகள் எளிதில் கிட்டும்—என்று எம்பெருமானர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்தார்.

## நானூற்றைம்பத்தொன்றும் வார்த்தை

a ஸ்ரீமந்நாராயண ஶப்₃த₃ங்கள் இரண்டு க₂ண்ட₃ங்களிலுமிருக்கையால் பெரியபிராட்டியும் பெருமாளும், நாரஶப்₃த₃த்துக்கு அர்த்த₂

அநுஸந்த₄ாநம் பண்ணுவான்; a உபா₄யவிபூ₄திநாத₂ரும் ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனும் நாய்ச்சிமாரும் நித்யஸூரிகளும் கூட எழுந்தருளியிருக்கும் பீட₂க்கட்டாயிருக்கும் த்₃வயம்; பெரியபெருமாள் திருவடிகளைப் பார்த்தவாறே, b "பொதுநின்ற பொன்னங்கழல்" என்கிறபடியே ஸர்வாத்ம ஸாத₄ாரணமாயிருக்கும்; c பெரியபெருமாள் அப₄யஹஸ்தத்தைப் பார்த்தவாறே அநந்யஶரணரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே அஸாத₄ாரணமாயிருக்கும்; d பெரியபெருமாள் திருமுகமண்ட₃லத்தைப் பார்த்தவாறே நித்யஸூரிகளுக்கே அஸாத₄ாரணமாயிருக்கும்; e ப்ராப்யபரமான திருமந்த்ரத்தை—பெரியபெருமாள் திருவடிகளிலே அநுஸந்த₄ாநம் பண்ணுவான்; ப்ராபகபரமான சரமஶ்லோகத்தை—பெரியபெருமாள் அப₄யஹஸ்தத்திலே அநுஸந்த₄ாநம் பண்ணுவான்; இரண்டுங்கூடி போ₄க₃ரூபமான த்₃வயத்தைப் பெரியபெருமாள் திருமுகமண்ட₃லத்திலே அநுஸந்த₄ாநம் பண்ணுவான்."

---

மான மற்ற நாய்ச்சிமார்களும் நித்யஸூரிகளும் எழுந்தருளியிருக்கும் கட்டுக்கோப்புடைய பீட₂மாயிருக்கும் த்₃வயம் என்று கருத்து. b "பொது நின்ற பொன்னங்கழல்" [மூன்றாந்திருவ 88] c. "ஸம்ஸார து₃:க்க₂த்தைக்கண்டு அஞ்சேல்" என்று அப₄யஹஸ்தத்தால் அப₄யமளிப்பது எம்பெருமானையே உபாயமாகக் கொண்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே என்று கருத்து. d முறுவலோடு கூடிய திருப்பவளத்தை அநுப₄விக்கத் தகுதியுடையவர்கள் நித்யஸூரிகளே என்று கருத்து. e முடிவிலுள்ள 'ஆய' என்னும் சதுர்த்தி₂யாலே ப்ராப்யமான கைங்கர்யத்தைக் காட்டுகையாலே ப்ராப்யத்தை ப்ரத₄ானமாகக்கொண்ட திருமந்த்ரத்தை—கைங்கர்யம் செய்யவேண்டிய திருவடிகளிலே அநுஸந்த₄ானம் செய்யவேண்டும். "மாமேகம் ஶரணம வ்ரஜ" என்று முதலில் தன்னையே உபாயமாகக் காட்டி, 'மாஶுச:' என்று முடிவில் அப₄யமளிக்கையாலே, எம்பெருமானுடைய ப்ராபகத்வத்தை ப்ரத₄ானமாகக்கொண்ட சரமஶ்லோகத்தை—அப₄யமளிக்கும் அப₄யஹஸ்தத்திலே அநுஸந்த₄ானம் செய்யவேண்டும். இரண்டு க₂ண்ட₃ங்களால் ப்ராபகத்தையும் ப்ராப்யத்தையும் காட்டுகையாலே, இரண்டையும் முக்₂யமாகக்கொண்டதாய், அநுஸந்த₄ான ரஹஸ்யமாகையாலே போ₄க₃ரூபமான த்₃வயத்தைப் பரமபோ₄க்₃யமான திருமுகமண்ட₃லத்திலே அநுஸந்த₄ானம் செய்யவேண்டும்.

## நானூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை

a மத்ஸ்யத்தின் வடிவெல்லாம் ஜலமயமாயிருக்குமா போலே இவள் அவன் ரூபாதி$_3$களுக்கு நிரூபகபூ$_4$தை யாகையாலே, ஸ்ரீமான் அவயவமெல்லாம் ஸ்ரீமயமாயிருக்கும். b (ஶ்ரிஞ்-ஸேவாயாம்) என்கிற த$_4$ாத்வர்த்த$_2$ ப்ரகாஶகமாய், புருஷகாரஸ்வரூபமான "ஸ்ரீ" என்கிற திருநாமத்தைப் பெரிய பெருமாள் திருநன்மார்பிலே அநுஸந்த$_4$ானம் பண்ணுவான்; (மந்) என்று-இப்புருஷகாரம் நித்யமென்று அநுஸந்த$_4$ாநம் பண்ணுவான்; (நாராயண) என்று-ஆஶ்ரயணஸௌகர்யா பாத$_3$கங்களான வாத்ஸல்யாதி$_3$ கு$_3$ணங்களையும், ஆஶ்ரித கார்யாபாத$_3$கங்களான ஜ்ஞானஶக்த்யாதி$_3$ கு$_3$ணங்களையு முடையவனென்று அநுஸந்த$_4$ாநம்பண்ணுவான்; (சரணௌ) என்று-பெரியபெருமாள் திருவடிகளை அநுஸந்த$_4$ானம் பண்ணுவான்; (ஶரணம்) என்று ஶரண்யரான பெரிய பெருமாள் அப$_4$யஹஸ்தத்திலே அநுஸந்த$_4$ாநம் பண்ணுவான்; (ப்ரபத்$_3$யே) என்று-ப்ரபத்தாவான தன்னுடைய ஸ்வரூபாநு ரூபம் ஸ்வீகாரமென்று அநுஸந்த$_4$ாநம் பண்ணுவான்;

c (ஸ்ரீமதே, நாராயண) என்கிற பத$_3$ங்களை-ஸ்வாமினி யாய், அவனுக்கு வல்லபை$_4$யாய், ப்ராப்யையாய், கைங்கர்ய

---

**நானூற்றைம்பத்திரண்டாம் வார்த்தை**

a எம்பெருமானுடைய ஸ்வரூபத்துக்கும் ஐந்து நிலைகளிலுமுள்ள எல்லா ரூபங்களுக்கும் மற்ற பொருள்களைக் காட்டிலும் வேறு பாட்டை நிரூபித்துத் தருகின்றவளாகையாலே, ஶ்ரிய:பதியின் ஸ்வ ரூபரூபங்கள் முழுவதும் பிராட்டியால் நிறைந்திருக்கும். மீனின் வடிவம் முழுவதும் நீர் நிறைந்திருப்பது இதற்கு த்$_3$ருஷ்டாந்தம். b 'ஶ்ரிஞ்-ஸேவாயாம்' என்கிற த$_4$ாது ஸ்ரீதே$_3$வி எம்பெருமானை ஆஶ்ரயித்திருப்பவள் என்று காட்டுகிறதாகையாலே அந்தத் திரு நாமத்தைப் பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கும் திருமார்பில் அநுஸந்தி$_4$க்கவேண்டும். இந்தப் பாராவில் மற்றவை தெளிவு.

c ஸ்ரீமதே, நாராயண என்கிற பத$_3$ங்களை—அவற்றுக்கு அர்த்த$_2$ மான 1.பெரியபிராட்டியார் 2.கைங்கர்யம்கொள்ளும் எம்பெருமானுடைய

வர்த்த4கையாய், ப4க3வந்முகோ2ல்லாஸஜநகையாய், தத்ப்ரீத்யநுப4வைகயாத்ரையாயிருக்கிற பெரியபிராட்டியாரோடே, ஶேஷத்வகார்யமான கைங்கர்ய ப்ரதிஸம்ப3ந்தி4யாயிருக்கிறவனுடைய தா4ரகத்வ வ்யாபகத்வ நியந்த்ருத்வ ஸ்வரூபமென்ன, ஸ்வரூபகு3ணங்களான ஜ்ஞாநப3லாதி3களென்ன, அதில்நின்றும் இழிந்த வாத்ஸல்யாதி3களென்ன, தத்தத்ஸ்வரூபகு3ண ப்ரகாஶகமான பஞ்சோபநிஷண்மய விக்3ரஹங்களென்ன, விக்3ரஹகு3ணங்களான ஸௌந்த3ர்ய ஸௌகுமார்யாதி3களென்ன, ஆஶ்ரித விரோதி4 விஷயமான ஶௌர்யாதி3களென்ன, தி3வ்யமங்க3ளவிக்3ரஹ ப்ரகாஶகமான தி3வ்யாப4ரணங்களென்ன, தத3நுப4வவிரோதி4 நிவர்த்தகமான தி3வ்யாயுத4ங்களென்ன, இவற்றுக்கு அநுரூபமான ஸ்ரீவைகுண்ட2 தி3வ்யநக3ரியில் தி3வ்யமண்டபத்திலே மற்ற தி3வ்ய மஹிஷிகளோடே தி3வ்யபரிஜநபரிச்ச2த3ங்கள் ஸேவிக்க ஸ்வாமித்வப்ரகாஶகமாக எழுந்தருளியிருக்கிற இருப்பிலே அநுஸந்தா4நம் பண்ணுவான்; (ஆய)

---

தா4ரகமாய், வ்யாபகமாய், நியந்தாவான ஸ்வரூபம் 3. ஸ்வரூபத்தின் முக்2யகு3ணங்களான ஜ்ஞான ப3ல ஐஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜஸ்ஸுக்கள் 4. அந்த கு3ணங்களையிட்டு நோக்கும்போது அப்ரதா4னமாகையாலும் ஜ்ஞானவிகாரமாகையாலும் அவ்வாறு கு3ணங்களிலிருந்து பிறந்தவை எனத்தக்க வாத்ஸல்யம் முதலான மற்ற கு3ணங்கள் 5. அந்தந்த கு3ணங்களை வெளிப்படுத்தும் தி3வ்யமங்க3ளவிக்3ரஹங்கள் 6. அந்த விக்3ரஹங்களின் கு3ணங்களானஸௌந்த3ர்யம் (அழகு) ஸௌகுமார்யம் (மென்மை) முதலானவை 7. அடியார்களின் விரோதி4கள் விஷயத்தில் காட்டப்படும் ஶௌர்யம் வீர்யம் முதலான தி3வ்யாத்ம கு3ணங்கள் 8. தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தை ஒளிவிடச்செய்யும் தி3வ்யாப4ரணங்கள் 9. முற்கூறியவற்றை அநுப4விப்பதற்கு விரோதி4களாயிருக்கும் அஸுரராக்ஷஸர்களை அழிக்கும் தி3வ்யாயுத4ங்கள் ஆகியவற்றிற்குப் பொருத்தமான ஸ்ரீவைகுண்ட2 தி3வ்யநக3ரத்திலே திருமாமணி மண்டபத்தில் பூ4மி நீளா முதலான மற்ற தி3வ்ய மஹிஷிகளோடு அநந்தக3ருட3விஷ்வக்ஸேனாதி3 பரிஜனங்கள் ச2த்ர சாமராதி3 பரிச்ச2த3ங்களைக்கொண்டு ஸேவிக்க, தானே உப4ய விபூ4திநாயகன் என்பது தோற்ற எழுந்தருளியிருக்கும் பரநிலையிலே

என்று - அவன் d அரசமர்ந்தானுகையாலே ஶேஷியாகை யாலும், இவன் d அடிசூடுமரசாகையாலே ஶேஷமாகை யாலும், ஸர்வவித₄ ஶேஷவ்ருத்திகளையும் பண்ணப் பெறு வேனாகவேணுமென்று அநுஸந்த₄ாநம் பண்ணுவான்; e(நம:) என்று — f (த்₃வ்யக்ஷரஸ்து ப₄வேந்ம்ருத்யு:) என்றும், g (மமேதி த்₃வ்யக்ஷரோ ம்ருத்யு:) என்றும், h (யானே என் றனதே யென்றிருந்தேன்) என்றும் சொல்லப்படுகிற. (ம:) என்கிற ஷஷ்ட்₂யந்தபத₃த்தை, f (த்ர்யக்ஷரம் ப்₃ரஹ்மண: பத₃ம்) என்றும், g (ந மமேதி ச ஶாஶ்வதம்) என்றும், h (யானே நீ என்னுடைமையும் நீயே) என்றுஞ் சொல்லுகிற நகாரார்த்த₂ப₃லத்தாலே நிஷேதி₄த்து, i (தனக்கேயாக) என்கிறபடியே-இத்தலையில் நினைவை அழியமாறி, அத்தலை யில் நினைவே நினைவாம்படிபண்ணி, கீழ்ச்சொன்ன ஸகல ஶேஷவ்ருத்திகளையும் கொண்டருளவேணுமென்று பெரிய பெருமாள் திருமுகமண்ட₃லத்தைப் பார்த்து அநுஸந்த₄ாநம் பண்ணுவான்—என்றருளிச்செய்தார்.

## நானூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

முமுக்ஷுவாய் ப்ரபந்நனாயிருக்குமவனுக்கு அறிய வேண்டும் அர்த்த₂ம் நாலுண்டு; இதில் அத்₄யவஸாயமா

---

அநுஸந்த₄ானம் பண்ணவேண்டும். d "அரசமர்ந்தான் அடிசூடு மரசையல்லால்" [பெரு-திரு 10-7] e 'நம:' என்னும் பத₃த்தின் அர்த்த₂த்தை-பெரியபெருமாள் திருமுகமண்ட₃லத்தைப் பார்த்து அநு ஸந்த₄ானம் பண்ணவேண்டும் என்று இந்த வாக்யத்தின் கருத்து. f" 'மம' என்னும் இரண்டு அக்ஷரங்கள் ஸம்ஸாரகாரணங்கள். 'ந மம' என்னும் மூன்று அக்ஷரங்கள் பரமபத₃த்தைக் கொடுக்கும்" என்று இப்ரமாணத்தின் பொருள். g" 'மம' என்னும் இரண்டு அக்ஷரங்கள் ஸம்ஸாரகாரணம்; 'ந மம' என்னும் மூன்று அக்ஷரங்கள் நிலையான மோக்ஷத்தை அளிப்பவை" என்று இந்த ப்ரமாணத்தின் பொருள். h "யானே என்றனதே என்றிருந்தேன் யானே நீ என்னுடைமையும் நீயே" [திருவாய் 2-9-9] i " தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" [திருவாய் 2-9-4].

யிருப்பனவும் நாலுண்டு. அவை எவையென்னில்; ப்ராப்யமும் ப்ராப்யாத்$_4$யவஸாயமும், ப்ராபகமும் ப்ராபகாத்$_4$யவஸாயமும், ஆசாரமும் ஆசாராத்$_4$யவஸாயமும், பே$_4$ாஜநமும் பே$_4$ாஜநாத$_4$யவஸாயமும். இதில் ப்ராப்யமாவது - அவித்$_3$யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப$_3$ந்த$_4$ நிவ்ருத்தி பூர்வகமாக அர்ச்சிராதி$_3$ மார்க்க$_3$ததாலே - ஒரு தே$_3$ஶவிஶேஷத்திலேபோய், அங்குண்டான பரிபூர்ணமான ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ ப்ரீதியாலே பிறக்கும் கைங்கர்யம். இதில் அத்$_4$யவஸாயமாவது - கைங்கர்யத்தையொழிந்துள்ள த$_4$ர்மார்த்த$_2$ங்களிலும், மோக்ஷத்தில் கைவல்யம் முதலாயுள்ள புருஷார்த்த$_2$ங்களிலும் அபே$_4$க்$_3$ஷதாபு$_3$த்$_3$தி$_4$பூர்வகமாக இக்கைங்கர்யமே பரமப்ராப்யமென்றிருக்கை; இதில் ப்ராபகமாவது - ஸௌலப்$_4$யாதி$_3$கல்யாணகு$_3$ணவிஶிஷ்டனுமாய், விக்$_3$ரஹவிஶிஷ்டனுமாயிருந்துள்ள ஈஶ்வரன்; இதில் அத்$_4$யவஸாயமாவது - பெரியபிராட்டியார் புருஷகாரத்தாலே

---

## நானூற்றைம்பத்துமூன்றும் வார்த்தை

ப்ரபந்நனை முமுக்ஷு (1) ப்ராப்யம், (2) ப்ராபகம், (3) ஆசாரம், (4) பே$_4$ாஜனம் ஆகிய நாலுவிஷயங்களையும், ஒவ்வொன்றிலும் அத்$_4$யவஸாயம் எனப்படும் உறுதிப்பாட்டையும் அறியவேண்டும் என்று விதி$_4$க்கிறது இந்த வார்த்தை. அவையாவன—(1) ப்ராப்யமாவது-அஜ்ஞானம், கர்மம், வாஸனை, ருசி, தே$_3$ஹஸம்ப$_3$ந்த$_4$ம் ஆகிய தடைகள் நீங்கப்பெற்று அர்ச்சிராதி$_3$மார்க்க$_3$த்தாலே பரமபத$_3$த்துக்குச் சென்று, அங்கு எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுப$_4$விப்பதால் ஏற்படும் உகப்பாலே விளையும் அவனுகந்த கைங்கர்யம். இதில் அத்$_4$யவஸாயமாவது—த$_4$ர்மம் அர்த்த$_2$ம் என்னும் புருஷார்த்த$_2$ங்களிலும், மோக்ஷத்திலும் கைவல்யம், ஸ்வார்த்த$_2$ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ கைங்கர்யங்கள் ஆகியவற்றிலும் ''இவை இனியவை அன்று; ஸ்வரூபத்துக்குத் தகாதவை'' என்னும் எண்ணத்தோடு பரார்த்த$_2$ாநுப$_4$வ கைங்கர்யமே பரமப்ராப்யம் என்று நினைத்திருக்கை. (2) ப்ராபகமாவது - ஸௌலப்$_4$யம் முதலான ஆஶ்ரயணஸௌகர்யாபாத$_3$க கு$_3$ணங்களோடும், ஜ்ஞானம் ஶக்தி முதலான ஆஶ்ரிதகார்யாபாத$_3$க கு$_3$ணங்களோடும் கூடியவனாய், தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹத்தை உடையவனான ஸர்வேஶ்வரன்; இதில் அத்$_4$யவஸாயமாவது—பெரியபிராட்டி

அவன்தானே உபாயமென்று உபாயாந்தரங்களான கர்ம ஜ்ஞாநப$_4$க்திகளில் கால்தாழாதே இவ்வுபாயமே நிரபேக்ஷோபாயமென்றிருக்கை. இதில் ஆசாரமாவது-உபாயஸ்வீகாரம் பண்ணினவன் யாவத$_3$ாயுஷம் மநோவாக்காயங்களாலும் ஸ்வரூபாநுகூலமாக வர்த்திக்கும் வர்த்தநம். அதாவது - பரவ்யூஹவிப$_4$வாதி$_3$களிற் காட்டில் அர்ச்சாவதாரத்தின் நீர்மையிலே அதிப்ரவணரான ஸ்ரீவைஷ்ணவர்கள்பக்கல் அநுகூலவ்ருத்திகளைப் பண்ணுகையும், ப்ரதிகூலங்களைத் தவிர்ந்து வர்த்திக்கையும்; இதில் அத்$_4$யவஸாயமாவது-கீழ்ச்சொன்ன அநுகூலவ்ருத்திகளைப் பண்ணுகையும், ப்ரதிகூலங்களைத் தவிருகையும் செய்யுமிடத்து, க்$_2$யாதிலாப$_4$ பூஜைகளைப் பற்றவும், த்$_3$ருஷ்டப்ரயோஜநார்த்த$_2$மாகவும் ப$_4$க$_4$வத்ப்ராப்திக்கு ஸாத$_4$நமாகவும் ப்ரதிபத்தி பண்ணிச் செய்யாதே இவ்வாசாரமே ஸ்வயம்ப்ரயோஜநமென்றிருக்கை; இதில் போ$_4$ஜநமாவது - ந்யாயார்ஜிதமான த்$_3$ரவ்யத்தைக்கொண்டு குக்ஷிபூர்த்தியிலே அந்வயியாதே க்ஷுந்நிவ்ருத்தி மாத்ரமே ப்ரயோஜநமாக ஜீவிக்கும் ஜீவநம்; இதில் அத்$_4$யவஸாயமாவது - அநுகூலரை நெருக்கி ஜீவிக்

யார் புருஷகாரத்தாலே அவனே உபாயமாகிறுகையாலே கர்மம், ஜ்ஞானம், ப$_4$க்தி முதலான மற்ற உபாயங்களில் இழியாமல், எம்பெருமானே வேறெதையும் எதிர்பாராத உபாயமாயிருப்பவன் என்று நினைத்திருக்கை. (3) ஆசாரமாவது - இப்படி எம்பெருமானையே உபாயமாகப் பற்றினவன் இவ்வுலகில் இருக்கும்வரையில பரம், வ்யூஹம், விப$_4$வம், அந்தர்யாமி என்னும் நிலைகளைக் காட்டிலும் அர்ச்சாவதாரத்தின் நீர்மையில் மிகவும் ஈடுபட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்தில் அநுகூலமான கார்யத்தைச் செய்கையும், ப்ரதிகூலமான கார்யங்களைச் செய்யாமலிருப்பதும். இதில் அத்$_4$யவஸாயமாவது—இதைச் செய்யும்போது, புகழுக்காகவோ, லாப$_4$த்துக்காகவோ, பிறர் கொண்டாடுவதற்காகவோ, இம்மை மறுமைப் பயன்களுக்கு ஸாத$_4$னமாகவோ எண்ணிச்செய்யாமல் இந்த ஆசாரமே ஸ்வயம்ப்ரயோஜனம் என்று நினைத்திருக்கை. (4) போ$_4$ஜநமாவது—நியாயமாக ஸம்பாதி$_3$த்த பணம் முதலானவற்றைக்கொண்டு, வயிற்றை நிரப்புவதையே குறிக்கோளாகக் கொள்ளாமல் பசியைப் போக்குமளவுக்கு உண்ணும் உணவு.

கும் ஜீவநமென்ன, ப்ரதிகூலர்பக்கல் ஸாபேக்ஷனாய் ஜீவிக்கும் ஜீவநமென்ன, அமுதுபடி சாத்துப்படிகளுக்கு அர்ஹமான த்₃ரவ்யங்களிலே ஸாபேக்ஷனாய் ஜீவிக்கும் ஜீவநமென்ன இவற்றில் கால்தாழாதே, ந்யாயார்ஜிதமான த்₃ரவ்யத்தைக்கொண்டு தே₃ஹயாத்ரை நடத்துகை ப்ரபந்நக்ருத்யம்.

## நானூற்றைம்பத்துநாலாம் வார்த்தை

ஸ்வரூபத்தில் உணர்த்தியும், ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியும், ப்ராப்யத்தில் த்வரையும், ப்ராபகத்தில் அத்₄யவஸாயமும், விரோதி₄யில் ப₄யமும், உத்₃தே₃ஶ்ய விஷயத்தில் கௌ₃ரவமும், உபகார விஷயத்தில் க்ருதஜ்ஞதையும், உத்தாரக விஷயத்தில் ப்ரதிபத்தியும். ஸ்வரூபத்திலுணர்த்தியாவது — a-"கண்ணபுர மொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்குரியேனோ" என்றிருக்கை. ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியாவது—b - "என் நான் செய்கேன் யாரே களைகண் என்னை என்செய்கின்றாய் ?" என்றிருக்கை; ப்ராப்யத்தில் த்வரையாவது- c - " மாக வைகுந்தங் காண்பதற்கென்மனம் ஏகமெண்ணும் " என்றிருக்கை ; ப்ராபகத்தில் அத்₄யவஸாயமாவது-d "களைவாய் துன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை; விரோதி₄யில் ப₄யமாவது- e " பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல் " என்றிருக்கை; உத்₃தே₃ஶ்யவிஷயத்தில் கௌ₃ரவமாவது—f "அவனடியார் சிறுமாமனிசராய் என்னையாண்டார் இங்கே திரிய — உறுமோ பாவியேனுக்கு " என்றிருக்கை ; உபகாரவிஷ

---

*இதில் அத்₄யவஸாயமாவது — ஸ்ரீவைஷ்ணவர்களை ஶ்ரமப்படுத்தி உண்பது, அவைஷ்ணவர்களிடம் பொருள்பெற்று உண்பது, எம்பெருமானுக்குரிய பொருள்களைக் கைப்பற்றி உண்பது ஆகியவற்றைச் செய்யாமல் நியாயமான வழியில் ஸம்பாதி₃த்த பொருள்களைக் கொண்டு வாழ்க்கையை நடத்துகை.*

**நானூற்றைம்பத்துநாலாம் வார்த்தை**

a [பெரியதிரு 8-9-3] b [திருவாய் 5-8-3] c [திருவாய் 9-3-7]
d [திருவாய் 5-8-8] e [பெரியதிரு 11-8-3] f [திருவாய் 8-10-3]

யத்தில் க்ருதஜ்ஞதையாவது - g "என்னை மனங்கெடுத்தாய்" h "மருவித்தொழும் மனமே தந்தாய்" i "உனக்கென்செய்கேன்" என்றிருக்கை; உத்தாரக விஷயத்தில் ப்ரதிபத்தியாவது - j " ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன் " என்றிருக்கை.

k ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனைப்பற்ற ஜீவாத்மாக்களுக்கு அத்யந்த பாரதந்த்ர்ய ஶேஷத்வங்கள் ஸ்வரூபமென்று ஸதா₃சார்யோபதே₃ஶமுக₂த்தாலே ஸகல வேத₃ ஸங்க்₃ரஹமான ஸ்ரீமத₃ஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்திலே ப்ரத₂ம மத்₄யம பத₃ங்களாலே தெளிய அறிந்து ஸ்வரக்ஷணத்தில் ஶக்தியும் ப்ராப்தியுமில்லாமையாலே, மந்த்ரரத்நமென்கிற திருநாமத்தையுடைத்தான த்₃வயத்தின் உத்தரவாக்யத்தால் ப்ரதிபாதி₃க்கப்பட்ட பரமபுருஷார்த்த₂ ஸித்₃தி₄க்கு, அதில் பூர்வவாக்யத்தால் ப்ரதிபாதி₃க்கப்பட்ட ஸித்₃தே₄பாய பூர்ணனான ஶ்ரிய:பதி திருவடிகளையே உபாயமாக வுடையவனான அதி₄காரிக்கு ஸ்வவிஶேஷணமான ஸக்ருத்ப்ரபத்திக்கு மேற்பட அபேக்ஷிதமாயிருப்பதொன்றில்லாமையாலே, கீ₃தோபநிஷதா₃சார்யன் த்யாஜ்யதயா அகர்த்தவ்யமாக விதி₄த்த அஷ்டாங்க₃யோக₃யுக்தமான கர்மயோக₃மும், தது₃பாய

g [திருவாய் 2-7-8] h [திருவாய் 2-7-7] i [திருவாய் 2-7-8]
j [திருவாய் 10-10-3]

k திருவஷ்டாக்ஷரத்தின் முதல் பத₃த்தால் ஶேஷத்வமும், இரண்டாவது பத₃த்தால் பாரதந்த்ர்யமும் அறிவிக்கப்படுகின்றன. ஆகையால் சேதனன் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்ள ஶக்தியுமில்லை தகுதியுமில்லை. த்₃வயத்தின் உத்தரவாக்யத்தால் சொல்லப்பட்ட பரார்த்த₂ாநுப₄வகைங்கர்யமாகிற பரமபுருஷார்த்த₂த்தைப்பெறுவதற்கு, அதன் பூர்வவாக்யத்தால் சொல்லப்பட்ட ஸித்₃தே₄பாயமான ஶ்ரிய:பதியின் திருவடிகளே உபாயமாகும். ஆசார்யன் த்₃வயத்தை உபதே₃ஶிக்கும்போது அதைத் திருப்பிச் சொல்லி அத்திருவடிகளைப் பற்றுவதற்குமேல் இவன் செய்யவேண்டியது ஒன்றில்லை. ஆகையால் கீ₃தாசார்யன் சரமஶ்லோகத்தில் கைவிடத்தக்கவையாக விதி₄த்த அஷ்டாங்க₃யோக₃த்தோடு கூடிய கர்மயோக₃மும், அதனால் ஏற்படும் ஜ்ஞானயோக₃மும், அதனால் ஏற்படும் ப₄க்தியோக₃மும், இவையனைத்துக்கும் அங்க₃மாய்

மான ஜ்ஞாநயோக₃மும், தது₃பாயமான ப₄க்தியோக₃மும், எல்லாவற்றிலும் அங்க₃த்வேந அநுவர்த்திக்கக் கடவதான வர்ணாஶ்ரமயோக்₃யதாபாத₃க த₄ர்மங்களும் (த்யாஜ்யம்); "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்று உபாதே₃யதயா கர்த்தவ்யமாக விதி₄த்த ஷட₃ங்க₃யோக₃யுக்தமான ந்யாஸவித்₃யையே அதி₄காரமாயிருக்கும்.

## நானூற்றைம்பத்தஞ்சாம் வார்த்தை

ப்ரபந்நனுக்குக் கீழ்ச்சொன்ன உபாயத்தில் ப்ரவ்ருத்தி ஸ்வரூபவிரோதி₄; உபேயத்தில் நிவ்ருத்தி ப்ராப்யருசி விரோதி₄; இவ்விரண்டர்த்த₂த்துக்கும் நித₃ர்ஶநபூ₄தர்: — ஸ்வரக்ஷணக்ஷமராயிருக்கச்செய்தேயும் தன்னுடைய ஸ்வரூப பாரதந்த்ர்யத்தை முன்னிட்டுக்கொண்டு அஶோக வநிகையிலே எழுந்தருளியிருந்த பிராட்டியும், பெருமாள் நில்லென்னச்செய்தேயும் தம்முடைய செல்லாமையைக் காட்டிப் பின்தொடர்ந்து அடிமைசெய்த இளையபெருமாளும்.

இவற்றை அநுஷ்டி₂க்கத் தகுதியைத்தரும் ஸந்த்₄யாவந்த₃நம் முதலிய வர்ணாஶ்ரமத₄ர்மங்களும் இவனால் உபாயபு₃த்₃தி₄யோடு அநுஷ்டி₂க்கத் தகாதவை. சரமஶ்லோகத்தில் 'என்னை ஒருவனையே ஶரணமாகப்பற்று' என்று கைக்கொள்ளத் தக்கதாகையாலே செய்யத்தக்கதாக விதி₄க்கப்பட்டதாய், (1) ஆநுகூல்ய ஸங்கல்பம், (2)ப்ராதிகூல்யங்களை விலக்கியிருக்கை, (3) நம்மை அவன் ரக்ஷிப்பான் என்றும் நம்பிக்கை, (4) அவனை உபாயமாகவேணும் என்று வரிக்கை. (5) தன் ஆத்மாவை அவனிடம் ஸமர்ப்பிக்கை. (6) தன் கையில் எதுவுமில்லை என்று அநுஸந்தி₄க்கை என்னும் ஆறு அம்ஸங்களையுடைய ஶரணாக₃தியே எம்பெருமானை அடைவிப்பதற்கு அதி₄காரிவிஶேஷணமாயிருக்கும்.

## நானூற்றைம்பத்தைந்தாம் வார்த்தை

ப்ரபந்நனுக்குத் தன் ரக்ஷணத்துக்குத் தான் முயல்வது ஸ்வரூபத்துக்கு விரோதி₄. அஶோகவநிகையிலிருந்த பிராட்டி "தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" [ரா-ஸு 39-30] [என்னை ரக்ஷிப்பது ராமபிரானுக்கே தக்கது.] என்று இவ்விரோதி₄ தன்னிடம் இல்லாமையைக் காட்டினாள். கைங்கர்யத்தினின்றும் நீங்குவது ப்ராப்யருசிக்கு விரோதி₄. பெருமாள் 'அயோத்தியிலேயே இரு' என்று சொல்லியும் நிர்ப்ப₃ந்தி₄த்து வனத்துக்குப் பின்தொடர்ந்துவந்து அடிமைசெய்த இளையபெருமாள் இவ்விரோதி₄ தன்னிடமில்லாமையைக் காட்டினார்.

த்₃வயத்தில் பூர்வக₂ண்ட₃த்தை அநுஸந்தி₄த்தால் - ஸ்வ ரக்ஷண நிமித்தமாக விலங்கிக்கிடந்த துரும்பு எடுக்க ப்ராப்தியில்லை ; உத்தரக₂ண்ட₃த்தை அநுஸந்தி₄த்தால் மடலெடுத்துப் புறப்படாதிருக்க ப்ராப்தியில்லை. இவ் விரண்டு க₂ண்ட₃த்திலும் உண்டான அர்த்த₂ாநுஸந்த₄ாநத் தாலே - முமுக்ஷுத்வாதி₄கார விருத்₃த₄மான காம்யகர்மங்க ளும், ஸாமாந்யஶாஸ்த்ரத்தால் ப்ரதிபாதி₃க்கப்பட்ட த்₃வாத₃ ஶ(வர்ஷ)ாஷ்ட(க)ாதி₃ ப்ராயஶ்சித்தாதி₃களும், அபசாரத்ர யங்களும், ஏவம்வித₄மான ஶாஸ்த்ராநுஷ்ட₂ாநங்களடைய லஜ்ஜாபுரஸ்ஸரமாக ஸ்வரூபேண விட்டு, அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகையான இஷ்டப்ராப்திக்கு ஸித்₃தே₄ாபாயத்தை ஸ்வீ கரித்து, தத₃நந்தரம் தன்னைப் பார்த்து நிர்ப்ப₄ரனுமாய், ஸித்₃தே₄ாபாயபூ₄தனுமான ஶ்ரிய:பதியைப் பார்த்து நிர்ப் ப₄ரனுமாய், நிஸ்ஸம்ஶயனுமாய், "காலம் போகாநின்றது, கர்மம் க்ஷயியாநின்றது, பரமப்ராப்யம் குறுகாநின்றது" என்று மேலே பெறப்புகுகிற பேற்றைப்பார்த்து ஹ்ருஷ்ட

---

த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃த்தில் சொல்லப்பட்ட ஶ்ரீமந்நாராயணனின் திருவடிகளாகிற உபாயத்தை அநுஸந்தி₄த்தால் தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ள அருகிலிருக்கும் துரும்பை எடுப்பதற்கும் தகுதி யில்லை. உத்தரக₂ண்ட₃த்தில் சொல்லப்பட்ட கைங்கர்யத்தின் இனிமையை அநுஸந்தி₄த்தால் அதைப்பெறுவதற்காக மடலெடுப்பது முதலான தகாத கார்யங்களைச் செய்யாமலிருக்கவும் முடியாது. இவ் விரண்டு க₂ண்ட₃த்திலுமுள்ள அர்த்த₂ங்களை அநுஸந்தி₄த்தால் முமுக்ஷுவானவன்—(1) காம்யகர்மங்கள் (2) ஸாமான்யத₄ர்மஶாஸ்த்ரங் களில் சொல்லப்பட்ட ப்ராயஶ்சித்தம் முதலானவை (3) ப₄க₃வத்₃ ப₄ாக₃வதாஸஹ்யாபசாரங்கள் (4) மற்றும் உள்ள வேறு ப₂லனைக் கொடுக்கக்கூடிய கர்மங்கள் ஆகியவற்றை, இவற்றில் ஏற்கனவே ஈடுபட்டிருந்ததற்கு லஜ்ஜையோடுகூட அடியோடு விட்டு, தனக்கு அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டத்தைத் தருவதற்கு ஸித்₃தே₄ாபாயத் தையே பற்றியுள்ள தன்னைப் பார்த்தும், ஸித்₃தே₄ாபாயமான எம் பெருமானைப் பார்த்தும், "நாம் செய்யவேண்டியது இனி ஒன்று மில்லை. நமக்குப் பேறு தப்பாது. காலம் செல்லச்செல்ல நம் கர்மம் கழிந்து பரமப்ராப்யம் நெருங்குகின்றது" என்று பெறப்

மநாவாய் இப்ரதிப₃ந்த₄கத்தோடேயிருக்கும் நாளும் ப₄க₃வத்₃விஷயத்திலும் ப₄ாக₃வதவிஷயத்திலும் ஸ்வரூபாநுகூலமாக உபாயபு₃த்₃தி₄யின்றியிலே அஹங்காரமமகார ரஹிதனாய், ஸ்வயம்ப்ரயோஜநமாகக் கைங்கர்யங்களைப்பண்ணியிருக்குமவன் முக்தப்ராயன்.

## நானூற்றைம்பத்தாறும் வார்த்தை

அகி₂லஜக₃த்₃தி₄தாநுஶாஸநமான வேத₃த்திலும், வேதே₃ாபப்₃ரும்ஹணங்களாக ப்ரவ்ருத்தங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலும் அவிகீ₃தமாக ப்ரஸித்₃த₄மாய், ஸர்வேஶ்வரனுடைய ஸ்வம்மாய், ஸர்வாத்மாக்களுக்கும் ஆபத்₃த₄நமாயிருந்துள்ள உபாயோபேயங்களை ப்ரதிபாதி₃க்கையாலே த்₃வயமென்னும் திருநாமத்தையுடைத்தாயிருந்துள்ள வாக்யத்₃வயம் பத்து அர்த்த₂த்தை ப்ரதிபாதி₃க்கிறது.

ஶ்ரிய:பதித்வமும், நாராயணத்வமும், நாராயணனுடைய ஸர்வலோகஶரண்யமான சரணாரவிந்த₃யுக₃ளமும், அதினுடைய ப்ராபகத்வமும், தத்₃கோ₃சரமாய் சேதநக₃தமாயிருந்துள்ள ப்ரார்த்த₂நாக₃ர்ப்ப₄விஸ்ரம்ப₄மும், லக்ஷ்மீதத்₃வல்லப₄ர்களுடைய நிகி₂லாத்ம நித்ய கைங்கர்ய ப்ரத₄ாநார்த்த₂மான நித்யஸம்ப₃ந்த₄மும், கைங்கர்ய ப்ரதி

---

போகிற பேற்றைப் பார்த்தும் ஆநந்த₃முடையவனாய், ஶரீரமாகிற தடையோடு கூடியிருக்கும் சிறிதுகாலத்திலும் அஹங்காரமமகாரமில்லாமல், ஸ்வயம்ப்ரயோஜனமாக ஸ்வரூபப்ராப்தமான ப₄க₃வத்₃பா₄க₃வத கைங்கர்யங்களைச்செய்து அவற்றில் உபாயபு₃த்₃தி₄யுமில்லாமல் வாழ்வானுகையால் இவ்வுலகில் இருக்கும்போதே பெரும்பாலும் முக்தியடைந்தவன் என்றே எண்ணத்தக்கவன்.

**நானூற்றைம்பத்தாறும் வார்த்தை**

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த அஷ்டாத₃ஶரஹஸ்ய க்₃ரந்த₂ங்களில் ஒன்றான 'ஸாரஸங்க்₃ரஹம்' என்ற ரஹஸ்யக்₃ரந்த₂மே சில சொல்வேறுபாடுகளுடன் இவ்வார்த்தையாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

ஸம்ப$_3$ந்தி$_4$யான ஈஶ்வரனுடைய நிரதிஶயபே$_4$ாக்$_3$யதை யும், ஸர்வஸ்வாமித்வமும், நித்யகைங்கர்யமும், கைங்கர்ய ப்ரதிப$_3$ந்த$_4$க நிஶ்ஶேஷ நிப$_3$ர்ஹணமுமாகிற அர்த்த$_2$ விஶேஷங்கள்; ஈத்$_3$ருஶார்த்த$_2$ விஶேஷப்ரகாஶகமான மந்த்ரவிஶேஷத்தினுடைய விவரணரூபமாய், அபௌருஷேய மாயிருந்துள்ள திருவாய்மொழியில் பத்துப்பத்தாலும் இப் பத்து அர்த்த$_2$த்தையும் பூர்வாசார்யர்கள் அடைவே சேர்த்து அநுஸந்தி$_4$த்துக்கொண்டுபோருவர்கள்.

இதில் முதற்பத்தால்—a "மலர்மகள் விரும்பும் நம் அரும் பெறலடிகள்" என்றும், b "மலராள் மைந்தன்" என்றும், c "திருமகளார் தனிக்கேள்வன்" என்றும், d "திருவின் மணாளனென்னுடைச் சூழலுளான்" என்றும், e "பூமகளார் தனிக்கேள்வன்" என்றும், f "மைந்தனைமலராள் மணவாளனை" என்றும் - ஶ்ரிய:பதித்வம் ப்ரதிபாதி$_3$தமாய்த்து.

இரண்டாம் பத்தால் — g "எம்பெருமான் நாரணற்கு" என்றும், h "எம்பிரானெம்மான் நாராயணனாலே" என்றும்,

---

த்$_3$வயமஹாமந்த்ரம் 1 ஶ்ரீமத், 2 நாராயண, 3 சரணௌ, 4 ஶரணம், 5 ப்ரபத்$_3$யே, 6 ஶ்ரீமதே, 7 நாராயண, 8 ஆய, 9 நம:, என்னும் ஒன்பது பிரிவுகளையுடையது. இது எல்லா உலகுக்கும் நன்மையை நியமிக்கும் வேத$_3$த்தில் கட$_2$வல்லியிலும், வேத$_3$த்தை விளக்கவந்த ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் முதலான வற்றில் பல இடங்களிலும் ஏகரூபமாகப் புகழ்பெற்றது. இதுவே ஈஶ்வரனுக்குப் பெரிய ஐஶ்வர்யமாயிருப்பது. எல்லா ஆத்மாக்க ளுக்கும் ஸம்ஸாரமாகிற பேராபத்தைக் கடக்க உதவும் பெருந்தன மாயிருப்பது. உபாயத்தையும் உபேயத்தையும் இரண்டு வாக்யங்க ளாலும் உபதே$_3$ஶிக்கையாலே த்$_3$வயம் என்னும் திருநாமத்தைப் பெற்றுள்ளது. முற்கூறிய ஒன்பது பகுதிகளாலே பத்துஅர்த்த$_2$ங்களை விளக்குகிறது. அவையாவன:—

1. ஶ்ரீமத்—ஶ்ரீதே$_3$விக்குப் பதியாயிருப்பவன் பரமாத்மா. (1)

---

a [திருவாய் 1-3-1] b [1-5.9] c [1-6-9] d [1-9-1] e [1-9-3] f [1-10-4] g [2-1-7] h [2-7-1]

i "நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்" என்றும் — நாராயணத்வம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

மூன்றும் பத்தால் — j "நாண்மலராமடித்தாமரை" என்றும், k "அங்கதிரடியன்" என்றும், l "அவன் பாதபங்கயம்" என்றும், m "அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல்" என்றும், n "மூவுலகுந்தொழுதேத்துஞ் சீரடியான்" என்றும் — நாராயணனுடைய ஸர்வலோக ஶரண்யமான சரணாரவிந்த₃யுக₃ளம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

நாலாம் பத்தால்—o "இலங்கைநகர் அம்பெரியுய்த்தவர்" என்றும், p "வல்வினை தீர்க்குங் கண்ணனை" என்றும், q "தொல்வினைதீர" என்றும், r "வெய்யநோய்கள் முழுதும் வியன்ஞாலத்து வீய" என்றும், s "மேவிநின்று தொழுவார் வினைபோக மேவும்" என்றும், t "பிறந்துஞ் செததும் நின்றிடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்" என்றும், u "நோயே மூப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய" என்றும், v "வேட்கையெல்லாம் விடுத்து - கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை" என்றும், w "அஃதேயுய்யப்புகுமாறு" என்றும், x "உய்வுபாயம் மற்றின்மைதேறி" என்றும்— அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் ஹேதுவான ப்ராபகத்வம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

---

2. நாராயண—அவன் நாராயணன் என்னும் தனிப் பெயரை உடையவன். (2)

3. சரணை ள—அந்த நாராயணனுக்கு எல்லா உலகுக்கும் புகலாயிருக்கும் இருதிருவடித்தாமரைகள் உள. (3)

4. ஶரணம்—அந்த திருவடித்தாமரைகள் மோக்ஷோபாயமாயிருப்பவை. (4)

---

i [2-7-2] j [3-3-9] k [3-4-3] l [3-6-4] m [3-6-10] n [3-8-1] o [4-2-8] p,q [4-4-11] r [4-5-2] s [4-5-4] t [4-7-7] u [4-9-7] v [4-9-9] w [4-1-11] x [4-3-11]

அஞ்சாம் பத்தால் — y "தமியேனுக்கருளாய்" என்றும், z "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்றும், a "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றுங் குறை வேண்டேன்" என்றும், b "அவனை உயிருண்டான் கழல்களவையே சரணாகக்கொண்ட" என்றும், c "நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்" என்றும், d "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும், e "நாடொறுமேகசிந்தையனாய்" என்றும் — ப்ரார்த்த₂நாக₃ர்ப்ப₄விஸ்ரம்ப₄ம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

ஆறும் பத்தால் — f "திருமாமகளிருந்தாம் மலிந்திருந்து" என்றும், g "அடிமைசெய்வார் திருமாலுக்கே" என்றும், h "ஒசிந்தவொண்மலராள்கொழுநன்" என்றும், i "என்திருமார்வற்கு"என்றும், j"கோலத்திருமாமகளோடுன்னைக் கூடாதே" என்றும்—கைங்கர்ய ப்ரார்த்த₂நாக₃ர்ப்ப₄மான நித்யஸம்ப₃ந்த₄ம் ப்ரதிபாதி₃தமாய்த்து.

ஏழாம் பத்தால் — k "கன்னலேயமுதே" என்றும், l "திருமாலின்சீர், இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனோ?"

5. ப்ரபத்₃யே—அந்தத் திருவடித்தாமரையிணை விஷயமாக 'அதுவே உபாயமாகவேணும்' என்னும் ப்ரார்த்த₂னையை உள்ளடக்கிய மஹாவிஶ்வாஸம் சேதநனுக்கு இருக்கவேண்டும். (5)

6. ஸ்ரீமதே—லக்ஷ்மி, அவளுக்கு இனியவனான எம்பெருமான் ஆகிய இருவர் விஷயமாகவும் எல்லா ஆத்மாக்களும், 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமைசெய்யவேண்டும்' [திருவாய் 3-3-1] என்று ப்ரார்த்தி₂ப்பதற்கு உறுப்பாக அவ்விருவரும் என்றும் சேர்ந்திருக்கிறார்கள். (6)

7-1. நாராயண—கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் ஸர்வேஶ்வரன் கல்யாணகு₃ணங்களுக்குக் கொள்கலமாயிருக்கிறானாகையாலே எல்லையற்ற இனிமையுடையவனாயிருக்கிறான். (7-1)

y [5-7-2] z [5-7-10] a [5-8-3] b [5-8-11] c [5-9-11] d,e [5-10-11] f [6-5-8] g [6-5-11] h [6-7-8] i [6-8-10] j [6-9-3] k [7-1-2] l [7-9-9]

என்றும, m "ஏழுலகை இன்பம்பயக்க" என்றும் — கைங்கர்ய ப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$யான ஈஶ்வரனுடைய நிரதிஶய பே$_4$ாக்$_3$யதை ப்ரதிபாதி$_3$தமாய்த்து.

எட்டாம் பத்தால் — n "அடியனேன் பெரியவம்மான்" என்றும், o "விண்ணவர்கோன் நங்கள்கோனை" என்றும், p "அமர்ந்தநாதனை" என்றும், q "மூவுலகாளி" என்றும், r "நேர்பட்ட நிறைமூவுலகுக்கும் நாயகன்" என்றும் — ஸர்வ ஸ்வாமித்வம் ப்ரதிபாதி$_3$தமாய்த்து.

ஒன்பதாம் பத்தால் — s "பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு நின்கோயில் சீய்த்து" என்றும், t "நின்தீர்த்தவடிமைக்குற்றேவல்" என்றும், u "தொடர்ந்து குற்றேவல்செய்து" என்றும், v "கொடுவினையேனும் பிடிக்க" என்றும், w "உறுவதிதுவென்றுனக் காட்பட்டு" என்றும், x "ஆட்கொள்வானொத்து" என்றும், y "நானும் மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன்" என்றும் - நித்யகைங்கர்யம் ப்ரதிபாதி$_3$தமாய்த்து.

பத்தாம் பத்தால் — z "துயர்கெடுங்கடிது" என்றும், a "கெடுமிடராயவெல்லாம்" என்றும், b "எழுமையும் ஏதஞ்சாரா" என்றும், c "இப்பிறப்பறுக்கும்" என்றும், d "உன்றன்திருவுள்ளம் இடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க

---

7-2. *நரஸமூஹங்களாகிற அனைவருக்கும் ஸ்வாமியாகவும் இருக்கிருன் நாராயணன்.* (8)

8. ஆய—*ஸ்ரீமந்நாராயணனின் திருவடிகளில் என்றும் கைங்கர்யம் செய்வதே சேதனனுக்கு ப்ராப்யமாகும்.* (9)

9. ம:—"*அந்தக் கைங்கர்யம் என் ஆநந்த$_3$த்துக்காக" என்னும் நினைவாகிற தடை சேதனனுக்கு அடியோடு நீங்கவேண்டும்.* (10)

---

m [7-10-1] n [8-1-3] o [8-2-2] p [8-4-10] q [8.9-5] r [8-9-11] s [9-2-1] t [9-2-2] u [9-2-3] v [9-2-10] w [9-4-4] x [9-6-7] y [9-8-4] z [10-1-7] a [10-2-1] b [10-2-2] c [10-2-5] d [10-3-9]

இன்புறுதும் எம்பெண்மையாற்றோம்'' என்றும் e ''பிணி யொன்றுஞ்சாரா'' என்றும், f ''பிறவித்துயர் கடிந்தோம்'' என்றும், g ''விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்'' என்றும் h ''அமராவினைகளே'' என்றும், i ''கடுநரகம் புகலொழித்த'' என்றும், j ''தடுமாற்றவினைகள் தவிர்த்தான்'' என்றும், k ''பிறவிகெடுத்தேன்'' என்றும் ''அந்தி தொழுஞ்சொல்லுப்பெற்றேன்'' என்றும், m ''அவாவற்று வீடுபெற்ற'' என்றும் — கைங்கர்ய ப்ரதிப$_3$ந்த$_4$க நிஶ்ஶேஷ நிப$_3$ர்ஹணம் ப்ரதிபாதி$_3$தமாய்த்து.

இப்படி ஶ்ரிய:பதித்வ ப்ரமுக$_2$ங்களாய், கைங்கர்ய ப்ரதிப$_3$ந்த$_4$க நிஶ்ஶேஷநிப$_3$ர்ஹணபர்யந்தங்களாயிருந்துள்ள உபாதே$_3$யார்த்த$_2$ங்களை ப்ரதிபாதி$_3$க்கக்கடவதாயிருந்துள்ள வாக்யத்$_3$வயமும், திருவாய்மொழியும் — ப$_4$க$_3$வச்சரணார்த்தி$_2$களாய் ப்ரபத்த்யுபாயபரராயிருக்கும் அதி$_4$காரிகளுக்குக் காலக்ஷேபஹேதுவாகவும் ஈஶ்வரப்ரீணநார்த்த$_2$மாகவும் யாவச்ச$_2$ரீரபாதம் அநுஸந்தே$_4$யம்.

---

இப்படி த்$_3$வயத்தின் ஒன்பது பகுதிகளாலே விளக்கப்படும் பத்து அர்த்த$_2$ங்களையும் த்$_3$வயவிவரணமாகையாலே தீ$_3$ர்க்க$_4$ சரணாக$_3$தி என்று பெயர்பெற்றதாய் ''முந்தையாயிரம்'' [திருவாய் 6-5-11] என்கையாலே அபௌருஷேயமாயிருப்பதான திருவாய்மொழியில் பத்துப் பத்தாலும் நம்மாழ்வார் விவரித்தருளினர் என்று பூர்வாசார்யர்கள் அநுஸந்தி$_4$ப்பர்கள்.

இவ்வண்ணமாக ஶ்ரிய:பதித்வம் தொடக்கமாய், கைங்கர்யத்துக்குத் தடையாயிருப்பவை அடியோடு நீங்குதல் ஈறாக உள்ள அறிய வேண்டும் அர்த்த$_2$ங்களை அறிவிக்கின்றவையான இரண்டு வாக்யம் கொண்ட த்$_3$வயமும், திருவாய்மொழியும் — எம்பெருமான் திருவடிகளைப் பெறவிரும்பியிருப்பவர்களாய் எம்பெருமானையே உபாயமாகக் கொண்ட ப்ரபந்நர்களுக்கு, இவ்வுலகில் காலக்ஷேபத்துக்கு உறுப்பாகவும் எம்பெருமானை உகப்பிப்பதற்காகவும் இவ்வுடல் விழும் வரையில் அநுஸந்தி$_4$க்கத்தக்கவை.

---

e [10-4-7] f [10.4.3] g [10.4.9] h [10.5.9] i [10.6-11]
j [10 8.5] k [10-8-3] l [10.8.7] m [10.10.11]

## ஆளவந்தார், தம்முடைய சரமத₃சையிலே முதலிகளுக்கு அருளிச்செய்த வார்த்தைகள்.

ஆளவந்தார், திருமேனியிலே நோவுசாத்தியெழுந் தருளியிராநிற்கச்செய்தே, a திருவரங்கப்பெருமாள் புருஷகார மாகத் திருக்கோட்டியூர்நம்பியும், பெரியநம்பியும், ஆள வந்தார் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து, "அடியோங்க ளுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்த₂ம் ப்ரஸாதி₃த்தருள வேணும்" என்ன; ஆளவந்தாரும் முதலிகளிருவரையும் திருவுள்ளம்பற்றி - உங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்த₂ம் இது ; - b"கோயிலாழ்வாரே உங்களுக்கு உயிர் நிலை, உங்களுக்குத் தஞ்சம் என்று பு₃த்₃தி₄பண்ணிப்போருங் கோள்" என்றும், "பெரியபெருமாள் திருவடிக்கீழே வீணை யுங் கையுமாய் ஸேவித்திருக்கிற திருப்பாணாழ்வார் விக்₃ர ஹத்தைப் பாத₃ாதி₃கேசாந்தமாக ஸேவித்துக்கொண்டு போருங்கோள்" என்றும் திருவுள்ளமாக; a திருவரங்கப் பெருமாள் முதலான இம்முதலிகளும் அப்படியே திருவுள்ளம் பற்றியிருக்கிறவளவிலே, ஆளவந்தார், மீளவும் a திரு வரங்கப்பெருமாளையும் முதலிகளிருவரையும் திருவுள்ளம் பற்றி, இதுக்கு ப்ரமாணமாகத் c திருமலையாழ்வார் உயிர்நிலை யறிந்துபோரும் குறும்பறுத்தநம்பியையும், பேரருளாளப் பெருமாள் உயிர்நிலையறிந்துபோரும் திருக்கச்சிநம்பியையும், பெருமாள் உயிர்நிலையறிந்துபோரும் திருப்பாணாழ்வாரையும், திருப்பாணாழ்வார் உயிர்நிலையறிந்துபோரும் a திருவரங்கப் பெருமாளையும் காட்டியருளி, ஆழ்வார் திருவரங்கப்பெருமா ளரையரைப்பார்த்து, "நீர் d பெருமாள் உயிர்நிலையறிந்து ஸேவிக்கிற விக்₃ரஹமே அடியேனுக்கு உபாயோபேயமென்று பு₃த்₃தி₄பண்ணிப் போருவன்" என்று அருளிச்செய்ய ;

**ஆளவந்தார் தம்முடைய சரமத₃சையிலே முதலிகளுக்கு அருளிச்செய்த வார்த்தைகள்**

இவ்வார்த்தைகள் ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம் 153-ம் பக்கம் முதற்கொண்டு 159-ம் பக்கம் வரையில் வந்துள்ளன. சில முன்பின்னாக மாறியிருக்கிறது.

a திருவரங்கப்பெருமாள், ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்திலே b ண்டன் ஸமர்ப்பித்து "தேவரீர் நித்யவிபூ₄தியிலே பரம பத₃நாத₂னை ஸேவித்து e இமையாதகண்ணராய்க்கொண்டு போரத் திருவுள்ளம்பற்றியருளிற்றே" என்று விண்ணப்பஞ் செய்ய; ஆளவந்தாரும் இவரைக் குறித்து, f "நீர் பர ஸம்ருத்₃தி₄க்கு உகந்து அத்₄யவஸித்திரும்" என்ன; இவரும் திருவுள்ளம்பற்றியிருக்கிற அளவிலே – ஆளவந்தா ரும் முதலிகளிருவரையும் திருவுள்ளம்பற்றி "g ஒருவன் ப்ரபந்நனால் ப₄க₃வத₃தீ₄நமான ஆத்மயாத்ரையிலும் கர்மாதீ₄நமான தே₃ஹயாத்ரையிலும் அந்வயமுண்டென் றிருந்தானாகில் ஆத்மஸமர்ப்பணமும் குலைந்து நாஸ்திகனாய் விடும்; ஆகையாலே உப₄ய யாத்ரையிலும் அந்வயமில்லை. நாராயணனுக்கு நைரந்தர்யவேஷம்—தம்பக்கல் பேற்றுக்கு (நம:) என்னுதவர்களையும், /'வானவர்நாட்டையும் நீ கண்டு கொள்' என்பதொரு ஔத₃ார்யவிசேஷமுண்டு; நாரங்க ளுக்கு நைரந்தர்யவேஷம் — *'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று - தம் பேற்றுக்கு த்வரிக்கையும் ஸ்வரூப ஹாநி; எம்பெருமான் ரக்ஷ்யனென்றிருக்கையும் ஸ்வரூப ஹாநி; அப்படியிருந்தானாகில் அநந்யார்ஹசேஷத்வத்துக் கும் ஸ்வஸ்வாமி ஸம்ப₃ந்த₄த்துக்கும் சேராது" என்று அருளிச்செய்ய;

---

a ஆளவந்தார் திருக்குமாரரான திருவரங்கப்பெருமாள் அரையர். b திருவாராத₄னப்பெருமாள். c திருவேங்கடமுடையானுக்கு அந்த ரங்க₃ராய் அவருக்கு தினந்தோறும் சட்டிபானை செய்யும் தம் தொழில் முடிவடையும்போது மண்ணாலே ஒருபூவைச் சாத்திவந்த குயவரான குறும்பறுத்தநம்பி. d பெரியபெருமாளுக்கு அந்தரங்க₃ ராய் வீணையும் கையுமாய் நின்று ஸேவிக்கும் திருப்பாணாழ்வார். e முதல்திருவ 32 f எனது பிரிவு குறித்துக் கலங்காமல் நான் பெறப்போகும் பரமபத₃மாகிற பேற்றுக்கு உகந்து உறுதியோடு இரும். g ப்ரபந்நனை ஆத்மாவின் நன்மை எம்பெருமானுக்கு அதீ₄னமானது. அவனது இவ்வுலக வாழ்வு கர்மத்துக்கு அதீ₄ன மானது. ஆகையால் இவ்விரண்டைப்பற்றியும் ப்ரபந்நன் கவலைப்

 / திருவாய் 3.9-9. * திருப்பாவை 1.

இவர்கள் மீளவும் ஸ்ரீபாத₃த்திலே தண்டன் ஸமர்ப்பித்து, "அடியோங்களுக்குப் பற்றுமுபாயமேது" என்று கேட்க; ஆளவந்தாரும், h "நீங்கள் என்னை பு₃த்₃தி₄பண்ணிப் போருங்கோள் என்கை அடியேனுக்கு ஸ்வரூபஹானி, 'எம்பெருமான் தாள்தொழுவாரெப்பொழுதும என்மனத்தே யிருக்கின்றார்' என்று இதுவே உஙகளுககு உபாயோபேயமென்று பு₃த்₃தி₄ பண்ணிப்போருஙகோள்' என்று அருளிச்செய்ய; முதலிகளும திருவுள்ளத்திலே முசித்திருக்கிறவளவிலே, ஆளவந்தாரும் இவர்களைக்கண்டு i "நீங்கள் முசிக்கவேண்டா, உஙகளுக்குத் திருமந்த்ரார்த்த₂ம் போ₄க₃மண்டபம்; சரமஶ்லோகார்த்த₂ம் புஷ்பமண்டபம், த்₃வயார்த்த₂ம த்யாக₃ மண்டபம்; இதுக்கு ப்ரமாதாக்கள் திருக்கச்சிநம்பி முதலானர்" என்று அருளிச்செய்தார்.

இத்தைத் திருவரங்கப்பெருமாள் திருவுள்ளம்பற்றி, j "தேவரீர் அவதாரம் தீர்த்த₂ம் ப்ரஸாதி₃த்துப் போமளவில் க்ரிமிகீடாதி₃களுக்கோரழிவு வந்தால் சேதமில்லை" என்று

---

பட்டால ப்ரபத்தி நிஷ்டை₂ குலைந்து நாஸ்திகனாகிவிடுவான். ஆகவே இரண்டைப்பற்றியும் கவலையில்லாமல் இருக்கவேண்டும். h "நீங்கள் என்னை உபாயமாக நினையுங்கள்" எனறு கூறுவது ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் அடியவனாக நினைத்திருக்கும் என் ஸ்வரூபத்துக்குக் குறைவாகும். ஆகையால் என்னைப்போலவும், "எம்பெருமான் தாள்தொழுவார் எப்பொழுதும் என்மனத்தே இருக்கின்றாரே" [பெரியதிரு 7-4-2] என்ற திருமங்கையாழ்வாரைப் போலவும் நீங்களும் ப₄க₃வதர்களுடைய திருவடிகளையே உபாயமாகக் கொள்ளுங்கள். i நீங்கள் வருந்தவேண்டா; திருவரங்கமாகிற போ₄க₃மண்டபத்தை, திருப்பாணாழ்வாரைப்போலே திருமந்த்ரார்த்த₂மாகக் கொள்ளுங்கள். திருவேங்கடமாகிற புஷ்பமண்டபத்தை, குறும்பறுத்தநம்பியைப்போலே சரமஶ்லோகார்த்த₂மாகக் கொள்ளுங்கள். பெருமாள்கோயிலாகிற த்யாக₃மண்டபத்தை, திருக்கச்சிநம்பியைப்போலே த்₃வயார்த்த₂மாகக் கொள்ளுங்கள். புஷ்பத்யாக₃போ₄க₃மண்டபங்கள், அவற்றுக்கு ப்ரமாதாக்களான குறும்பறுத்தநம்பி முதலானார்பற்றி ஆசார்யஹ்ருத₃யம் [சூர்ணை 85] வ்யாக்₂யானத்தில் காணத்தக்கது. j "தேவரீர் இவ்வுலகைவிட்டுப்

அருளிச்செய்ய; k இவ்வார்த்தையை முதலிகள் திருவுள்ளம் பற்றி. "ஆளவந்தார் வியோக₃த்திலே நாம் ஆத்மத்யாக₃ம் பண்ணக்கடவோம்" என்று நிஶ்சயித்திருக்கிறவளவிலே பெரியபெருமாள் திருவோலக்கத்திலே இவ்விஶேஷம் பிறக்க, பெரியபெருமாள் திருவுள்ளம்பற்றி, திருவரங்கப்பெருமாளரையர், திருக்கோட்டியூர்நம்பி, பெரியநம்பி முதலாக அருள்பாடிட்டு, "ஆளவந்தார் திருமேனிக்கு ஒருவாட்டமுண்டாயிற்றதாகில் நீங்கள் வியோக₃ம் பண்ணில் நம்மாணை" என்று ஆஜ்ஞாபித்து, திருவரங்கப்பெருமாள் திருக்கையிலே இவர்களைக் காட்டிக்கொடுத்தருள, இவரும் அவர்களைக் கைப்பற்றி ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்திலே சென்று இவ்விஶேஷத்தை விண்ணப்பஞ்செய்ய, அவரும் இத்தைக்கேட்டு l "நம்பேற்றுக்கு ஸஹியாதவர்கள், பெரியபெருமாள் இரண்டாற்றுக்கும் நடுவே திருவாராத₄நங்கொண்டருள ஸஹியாதவர்கள்" என்றருளிச்செய்து, "என்னுடைய வியோக₃த்தில் அவிவேகம் பண்ணினிகோளாகில், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி முதலாக, பெரியபெருமாள் நாதமுனிகள் சடகோபன் திருவுள்ளத்தை மறுத்தவர்களாவுதிகோள்" என்று தம்முடைய தி₃வ்யாஜ்ஞையிட்டு இவர்களும் திருவுள்ளம் நேர்(நொ)ந்திருக்கிறவளவிலே ஆளவந்தாரும், m "ப₄க₃வத்₃ப₄าக₃வத விஷயங்களில் தரமிடாதே ப₄க₃வத்₃விஷயத்திலே நோக்கானவன், கு₃ருபரம்பரை முதலாகத் திருவாராத₄நம் பண்ணு

பிரிந்துபோகும்போது, புழு பூச்சிகள் போன்ற நாங்கள் அழிந்துபோவதால் குறையொன்றுமில்லை" என்று அருளிச்செய்ய, k "ஆளவந்தாரும் அவ்வார்த்தையைக் கேட்டு, பராக்கடித்து ப்ரத்யுத்தரம் அருளிச்செய்யாமலிருக்க" என்பது இவ்விடத்தில் கு₃ருபரம்பரா ப்ரப₄ாவத்தில் அதி₄கபாட₂ம். l நாம் பெறப்போகிற பரமபத₃மாகிற பேற்றைப் பொறுக்கமாட்டாமல் வருந்துகிறவர்கள் ஸ்ரீரங்கநாத₂ன் திருவாராத₄னத்தைப் பொறுக்காதவர்களையொப்பர். m ப₄ாக₃வதர்களை ப₄க₃வானைப்போலே நினைப்பவன் எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் பண்ணும்போது, கு₃ருபரம்பரையை

மாபோலே ப₄ாக₃வத விஷயத்திலே தன் ஸத்தை மாண்டு ஆசார்யவிக்₃ரஹத்தை அநுஸந்தி₄த்துத் தீர்த்த₂ங்கொண்டு போருகையும், அவர்களும தீர்த்த₂ங்கொடுக்குமளவில் அர்த்த₂காமபரவஶரன்றிக்கே தன்னுசார்யனை நோக்கி கு₃ருபரம்பராபூர்வகமாக த்₃வயத்தை அநுஸந்தி₄த்துக் கொண்டு கொடுக்கையும் இருவர்க்கும உபாதே₃யம்; ஜ்ஞாநாதி₄கவிஷயமுமாய ஸமூஹமுமாயச் சென்றவளவிலே இருவரும் அர்த்த₂காம பரவஶராய், ப்ராக்ருத ஶரீரத்திலே நோக்காய், ஸமூஹத்திலே சென்ற முதலிகளை இகழ்ந்து திருவுள்ளங்கன்றுமாகில், ஆசார்யனேயாகிலும இவர்களுக்குத் தீர்த்த₂ம உபாதே₃யமன்று" என்றருளிச்செய்தார்.

இவர்களும் திருவுள்ளம்பற்றியிருக்கிறவளவிலே ஆள வந்தாரும் முதலிகளைப்பார்த்து, ṇ "உங்களுக்குச் சரமார்த்த₂ம பெரியபெருமாள் திருக்குழற்கற்றையிலே ஒரு கருமுகை வெடிக்கையும், ஆசார்யவிஷயத்தில் ப்ரத₂ம த₃ஶை மத₄யமத₃ஶையில் நின்றும் சரமத₃ஶையை அநு

முன்னிட்டுக்கொண்டே திருவாராத₄னம பண்ணுவதைக் காண்கிறோம். ப₄ாக₃வதர்களிடம தீர்த்த₂ம கொள்ளும்போது தன பெருமையை நினையாமல் ப₄ாக₃வதர்களை ஆசார்யன திருமேனியாகவே அநுஸந்தி₄த்துத் தீர்த்த₂ம கொள்ளவேண்டும தீர்த்த₂ம் கொடுப்பவர்களும அர்த்த₂காமபுருஷார்த்த₂ங்களைக் குறிக்கோளாகக் கொள்ளாமல், தம் ஆசார்யன தீர்த்த₂ம் கொடுப்பதாக அநுஸந்தி₄த்து குருபரம்பரையை முன்னிட்டுக்கொண்டு த்₃வயாநுஸந்த₄ானத்துடன தீர்த்தம் கொடுக்கவேண்டும். ஜ்ஞானத்தில சிறந்தவர்கள் நிறைந்த ப₄ாக₃வத ஸமூஹத்தில தீர்த்த₂ம் கொண்டு கொடுக்கும் போது அர்த்த₂காமங்களில ஈடுபாட்டாலும, அவர்களுடைய ப்ராக்ருத ஶரீரங்களில் உள்ள குற்றங்களில் கண்செலுத்துவதாலும அந்த ப₄ாக₃வதர்களைத் தீர்த்த₂ம் கொடுப்பவனே, கொள்பவனே இகழ்ந்து அதனால அவர்கள் திருவுள்ளம் கன்றுமாகில், இப்படிச் செய்தவன் ஆசார்யனேயாகிலும் அவனுடைய தீர்த்த₂ம் ஶிஷ்யர்களுக்கும் கைக்கொள்ளத்தக்கதன்று. ṇ "உங்களுக்குச் சரமார்த்த₂ம் பெரிய பெருமாள் திருவடிகளிலே ஒரு கருமுகை முகிழ் வெடிக்கவும், ஆசார்யவிஷயத்தில் ப்ரத₂மமத்₄யமத₃ஶைகளைச் சரமத₃ஶையாக

ஸந்தி₄த்துப்போருகையும் உத்தாரகப்ரபத்தி" என்று அருளிச்செய்து, திருவரங்கப்பெருமாள் ஸ்ரீபாத₃த்திலே தண்டன் ஸமர்ப்பித்து, திருக்கோட்டியூர் நம்பியையும் பெரியநம்பியையும் திருமலை நம்பியையும் அவர்திருக்கை யிலே காட்டிக்கொடுத்தருள, அவரும் கைப்பற்றி "நீங்கள் அவிவேகம் பண்ணினிகோளாகில் உங்களுக்கு தே₃ஶ விஶேஷமின்றிக்கே நித்யஸூரிகள் திரளிலும் புகுரப்பெறுதே இழப்புதிகோள்" என்று அருளிச்செய்ய; ஆளவந்தாரும் இச்செய்தியைக்கேட்டுத் திருவுள்ளமுகந்து "உங்களுக்குத் திருவரங்கப்பெருமாளரையருடைய விக்₃ரஹமே உபாயோ பேயம்" என்று பு₃த்₃தி₄பண்ணியிருங்கோள் என்று அருளிச் செய்ய;

இவர்களும் அப்படியே பு₃த்₃தி₄பண்ணினபின்பு o திரு மேனியிலே நோவுவாடி, திருமாளிகையிலே திருவரங்கப் பெருமாள் முதலான முதலிகளுடன் நீராடித்திரளவிருக்க, பெரியபெருமாளுக்கு அமுதுபடி சாத்துப்படி குறைவறுத்து, அங்குள்ள சேனைமறையோர், புண்டரீகர் முதலான அனைத்துக்கொத்தையும் திரள்விலக்கி, சுற்றுக்கோயில் களுக்கும் அமுதுபடி சாத்துப்படி குறைவறுத்து, பெரிய பெருமாளைப் பெரிய திருமஞ்சநம்பண்ணி சாத்துப்படி சாத்தி, அங்குள்ள முதலிகள் அனைத்துக்கொத்தும் வந்து ஸேவிக்க, பெரிய பெருமாளும் அமுதுசெய்தருளி நினை வறத் திருவோலக்கத்தேற எழுந்தருளித் திருவரங்கப் பெருமாளரையர்க்கு அருள்பாடிட, அவரும் ஸேவிக்கிற விடமொழிய p சூழ்விசும்பணிமுகில் ஸேவிக்க, திருவோலக்க மடைய இதென்னென்று விஸ்மயப்பட, பெரியபெருமாள்

அநுஸந்தி₄த்துப் போருகையும் உத்தாரகப்ரதிபத்தி" என்று கு₃ரு பரம்பராப்ரபா₄வத்தில் பாட₂ம் காண்கிறது. கருமுகை முகிழ்வெடிக்க வைக்கையாவது - புஷ்பத்தைச் சாத்துகை. o (திருமேனியிலே நோவு வாடி) "ஆளவந்தார் திருமேனியில் நோவாறி ஆரோக்₃யமுண் டாய்" என்று கு₃ருபரம்பராப்ரபா₄வ பாட₂ம். p திருவாய் 10-9.

திருநெற்றிமாலை நழுவிவிழ, q நம்பியார் எடுத்து ப்ர ஸாதி₃க்கிறோமென்று இருக்கிறவளவிலே, திருவரங்கப் பெருமாள் சடக்கெனவெடுத்து ஆளவந்தாருக்கு ப்ரஸாதி₃த் தருள, அவரும் திருவுள்ளமுகந்து நிற்க, திருவடிககீழ் நின்றவரும் 'உம்முடைய நினைவு ஸித்₃தி₄த்ததே!' என்ன, பெரியபெருமாள் விடைகொடுத்தருள, திருமாளிகையிலே சென்று திருவரங்கப்பெருமாளரையர், திருக்கோட்டியூர்நம்பி முதலான முதலிகளைத் தீர்த்த₂ங்கொண்டு அமுதுசெய்யப் பண்ணி தண்டன் ஸமர்ப்பித்து, 'ஸர்வாபசாரங்களையும் பொறுத்தருள வேண்டும்' என்று க்ஷாமணம் பண்ணிக் கொண்டு எழுந்திராதிருக்க, திருவரங்கப்பெருமாளரையரும், 'உமக்குண்டோ அபசாரம்' என்று எடுக்க எழுந்திருந்து பின்பு அமுதுசெய்து இவர்களுக்கு நல்வார்த்தை அருளிச் செய்ய, இவர்களும் 'பெருமாள் திருவுள்ளமேதோ?' என்று தங்களிலே சிந்தித்திருக்கிறவளவிலே பேரருளாளப்பெருமா ளுடைய r அயன்கண்ட வைகாசித் திருநாளில் அவப்₄ரு தஸ்₃வஸத்தினன்று ஆளவந்தாரும் நீராடி, பெரியபெரு மாளைத் திருவடித்தொழச்சென்று s உத்தமஸந்தி₄யும் அமுது செய்து திருத்திரை நீக்கினவளவிலே தண்டன் ஸமர்ப் பித்து, பாத₃ாதி₃கேஶமாகவும் கேஶாதி₃பாத₃மாகவும் பெரியபெருமாளை ஸேவித்து, திருவடிக்கீழ்த் திருப்பாணாழ்வா ரையும் அநுப₄வித்து, t அஶங்கிதமாகச் சடகோபன் ஸாதி₃க்கப்பெற்று, திருப்பதியார் திருத்தளிகை ப்ரஸாத₃ம் ப்ரஸாதி₃த்து விடைகொடுத்தருள, முதலிகளும் திருமாளி கையிலே சென்று, மீளவும் முதலிகளைத் தீர்த்த₂ங்கொண்டு அமுதுசெய்யப்பண்ணி முஹூர்த்தமிட்டு, வைகாசிமாஸம் ஆறுந்தேதியிலே ஶ்ரவண நக்ஷத்ரத்திலே அபி₄ஜிந் முஹூர்த்தத்திலே முதலிகள் ஶேஷத்தை அங்கீ₃கரித்து,

q நம்பியார் - அர்ச்சகர். r பிரமன் ஏற்படுத்திய வைஶாக₂ப்₃ரஹ்மோத்ஸவம். "வையங்கண்ட வைகாசித் திருநாள்" என்றும் கூறு கிறார்கள். s பெரிய அவஸரம். t எதிர்பாராமல்.

ஆழ்வார்களை ஶரணம்புக்கு, ஆசார்யர்கள் முதலிகள் ஸ்த₂ாநத்தார் முதலானவர்களை அழைப்பித்து க்ஷமை பண்ணிக்கொண்டருள; அவர்கள் 'பெரியபெருமாளுக்கு ஒரு அபசாரமுண்டாகிலன்றோ உமக்கபசாரமுண்டாவது' என்ன; திருவரங்கப்பெருமாளரையர் முதலானவர்களை அங்குள்ள முதலிகள் கையிலே காட்டிக்கொடுத்தருளி, ஸ்த₂ாநத்தாரைப் பார்த்து, "பெரியபெருமாள் திருவாராத₄நம், திருமந்த்ரபுஷ்பம் காலகாலத்திலே நடத்திக்கொண்டு போருங்கோள், ஆசார்யர்கள், முதலிகள், தே₃ஶாந்தரிகள் முதலானுரை அரவணைத்துக்கொண்டு போருங்கோள்" என்று காட்டிக்கொடுத்தருள; அவர்களும் அப்படியே ஆகிறதென்று அங்கீ₃கரித்து, "இது புதுமையாயிருந்தது. இதேதோ?" என்று விடைகொண்டுபோக;

## ஆளவந்தார் திருநாடலங்கரித்ததும் அவருடைய விமலசரம விக்₃ரஹத்தைத் திருப்பள்ளிப் படுத்த க்ரமமும்

பின்பு பத்₃மாஸநத்திலே யோகக₃மாக எழுந்தருளியிருந்து, மணக்கால்நம்பியை த்₄யாநித்து அவர் திருவடிகளைத் தம்முடைய கண்ணிலும் நெஞ்சிலும் திருமுடியிலும் வைத்துக்கொண்டு, அவர் திருவடி நிலைகளைத் தம்முடைய முன்னே எழுந்தருளப்பண்ணி வைத்துக்கொண்டு u ப்₃ரஹ்ம வல்லி, ப்₄ருகு₃வல்லி, புருஷஸூக்தம். v அர்ச்சிராதி₃, w சூழ்விசும்பணிமுகில் முதலாக முதலிகள் ஸேவிக்க,

---

**ஆளவந்தார் திருநாடலங்கரித்ததும் அவருடைய விமலசரமவிக்₃ரஹத்தைத் திருப்பள்ளிப் படுத்த க்ரமமும்.**

இது 159 பக்கம் கடைசிமுதல் 163ம் பக்கம் வரை ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் வந்துள்ளது. சொற்றொடர்கள் சில முன்பின்னாக மாறியிருக்கின்றன.

u தைத்திரீய ஆநந்த₃வல்லி. v அர்ச்சிராதி₃க₃தியைச் சொல்லும் வேத₃வாக்யங்கள். w திருவாய் 10-9. x பெருக்கி நீர் தெளித்து.

திருச்சங்கு பரிமாற, ஸகல வாத்3யங்களும் முழங்க, ப்3ரஹ்மரந்த்4ரத்தாலே ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருள, திருவரங்கப்பெருமாளரையர் முதலாக எல்லாரும் வேரற்ற மரம்போலே கே4ாஷித்துக்கொண்டு விழுந்து ஶோகிக்க, அங்குள்ளார் இவர்களை ஆற்றி நம்பியைப் பார்த்து, 'முன் நடக்கும் க்ரமத்தைச் செய்தருள' என்ன; தா3ஸிகள் திருவாசலிலே x திருவலகிட்டுத் திருநீர்விட்டு ஸ்த2ல ஶுத்3தி4 பண்ணித் y திருப்பிண்டியிட்டு z திருக்காவணமிட்டுக் கோடித்து, த3ர்ப்ப4மாலைகட்டி, செங்கழுநீர் மாலைகட்டி,பல பட்டுக்களாலே திருமேற்கட்டுக்கட்டி திருக்காவணத்தின் நாலுவாசலிலும் கதளித்தாறுகளுடன் கமுகின் கன்றும்நட்டு, a பல ப2லங்கள் நாற்றி, நாலு வாசலிலும் கொடியாடைகட்டிச் சித்ரபடாங்கள் வைத்து, தெற்கு மேற்கு கிழக்கு வடக்கு வாசல்களிலே b பலாஶாஶ்வதத2 க2ாதி3ரௌது3ம்பரதோரணம் நாட்டி, த்3ரோண வ்ரீஹியைச் சொரிந்து பரப்பி நடுவே பூர்ணகும்ப4ம்வைத்து, நாலுகோடியிலும் பூர்ணகும்ப4ங்களை வைத்து, த்3வாத3ஶ கலசங்களை நிறைத்து, கேசவாதி3யாக வைத்து, பூர்ண கும்ப4த்துக்குக் குஶத3ர்ப்பை4 தூ3ர்வை விஷ்ணுக்ராந்தி புஷ்பாதி3களிட்டு, கு3ருபரம்பராபூர்வகமாக த்3வயாநுஸந்த4ாநத்துடன் கும்ப4கலஶார்ச்சநம் பண்ணி, த்3வாத3ஶ நாமத்தாலே அந்தக் கலஶஸ்நாநம் பண்ணி வைத்து, பின்பு பஞ்சாம்ருத ஸ்நாநம் பண்ணிவைத்து, பின்பு ஈஶாந்யமான ஸங்கர்ஷண கும்ப4மொழிந்த நாலு கும்ப4ங்களைக்கொண்டு ஸ்ரீபுருஷஸூக்தத்தாலே திருமஞ்சனம் பண்ணிவைத்து, முதலிகளைத் தீர்த்த2ங்கொண்டு சுருளமுது பரிமாறி வேண்டிக்கொண்டு அவர்களை வலம்வந்து வாசல் முன்னில் c ஹேமக்ருத ஸ்த2ண்டி3லத்தின் மேலே த்3ரோண

---

y கோலமிட்டு. z பந்தல்போட்டு. a பலவகைப் பழங்களைத் தொங்க விட்டு. b புரசு, அரசு, கருங்காலி, அத்தி ஆகியவற்றைக்கொண்டு தோரணம் நாட்டி, பதக்குநெல்லைக்கொட்டிப்பரப்பி. c "கே3ாமயக்ருத ஸ்த2லத்தின்மேலே" என்று கு3ருபரம்பராப்ரப4ாவ பாட2ம்.

வ்ரீஹி பரப்பி, d உலூகலமுஸலங்களை மந்த்ரஸ்நாநம் பண்ணி, வஸ்த்ரவேஷ்டநம் பண்ணி, அந்த உலூகலத்தை ஸ்தண்டிலோபரிக்ருத வ்ரீஹியின் மேலே வைத்து, அதிலே e ஹரித்ராநிக்ஷேபம்பண்ணி, ஸூத்ததமாலாலங்க்ருதைகளாய், சக்ரமுத்ராமுத்ரிதைகளாய், வைஷ்ணவிகளான விஷ்ணு தாஸிகள் த்ரிவிக்ரமன் திருவீதியை வலம்வந்து, திருவாசலில் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்துக்கு தண்டன் ஸமர்ப்பித்து, ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஜ்ஞையைக்கொண்டு நடுவே வந்து நவவஸ்த்ரவேஷ்டிதமேருதைவத்யமான அந்த முஸலத்தைக்கொண்டு த்வாதஸநாமோச்சாரணம்பண்ணித் திருச்சூர்ணமிடிக்க; திருவரங்கப்பெருமாளரையர், f நம்பி முதலான முதலிகள் g ஸ்தண்டிலமத்யஸ்தமாய் நவகண்டையான ப்ருதிவ்யாகாரமாக உல்லேகநம் பண்ணின அந்த வ்ரீஹ்யுபரிஸ்தாபிதமாய் பூமிதைவத்யமானஉலூகலத்(உல்லேகநத்)தின் அஷ்டதிக்குக்களிலும், திவ்யசூர்ண திவ்ய தைலதிவ்யாநுலேபந திவ்யமால்ய திவ்யலாஜ திவ்ய துக்தததிவ்யததி திவ்யஜல பூர்ணங்களாய், ஸூத்த தந்துவேஷ்டிதங்களாய், தர்ப்ப பவித்ராஸ்வத்தபத்ர பவித்ரிதங்களான அஷ்டகலஸங்களை த்வயாநுஸந்தாநத்துடனே ஸ்தாபித்து, பரமாகாஸதைவத்யமான h நவஸூர்ப்பத்திலே திவ்யநக்ஷத்ர தைவத்யமான i நிஸ்துஷநவலாஜத்தை

d உரலையும் உலக்கையையும். e மஞ்சளை வைத்து. f இங்கு நம்பி என்றது திருக்கோட்டியூர் நம்பி ஆகவுமாம். குருபரம்பராப்ரபாவத்தில் குறிக்கப்பட்ட (ஆளவந்தார் குமாரரான) பிள்ளைக்கரசு நம்பியாகவுமாம். g தரைக்கு நடுவே பரப்பப்பட்ட நெல்லில் ஒன்பது கண்டங்களோடு கூடிய பூமியின் உருவத்தை எழுதி அதன்மேல் உள்ளதாய், பூமியை தேவதையாகக் கொண்டதான உரலின் எட்டு திக்குகளிலும் 1 ஸ்ரீசூர்ணம், 2 தைலம், 3 பூசப்படும் சந்தனம், 4 மாலை, 5 பொரி, 6 பால், 7 தயிர், 8 நீர் ஆகியவற்றால் நிறைந்தவையாய், வெள்ளை நூலால் சுற்றப்பட்டவையாய், தர்ப்பம், பவித்ரம், அரசிலை ஆகியவற்றால் பரிஸுத்தி பெற்றவையான எட்டு கலஸங்களை த்வயாநுஸந்தானத்துடன் ஸ்தாபித்து. h புதுமுறம். i உமி

நிறைத்து, பூர்வதி$_3$க்கிலே வைத்து ஸ்ரீவைஷ்ணவர்களை ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$ங்கொண்டு அந்த ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$ம் நிறைந்த கும்ப$_4$த்தை மேற்கே வைத்து, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸமர்ப்பணீயமான த்$_3$ரவ்யத்தின் கிழியை வடவருகே வைத்து, பெருமாள் சாத்தக்களைந்து வரவிட்டருளின திருமாலை பரிவ(ய)ட்ட ப்ரஸாத$_3$ங்களைப் |பொற்றளிகையுடன் தென்னருகே வைத்து;

ஆளவந்தாரை தண்டன் ஸமர்ப்பித்து, k விமலசரம விக்$_3$ரஹத்தை நெஞ்சிலும் கண்ணிலும் தேக்கிக்கொண்டு சூழவெழுந்தருளியிருந்து, கண்ணிநுண்சிறுத்தாம்பும் திருப்பல்லாண்டும் சூழ்விசும்பணிமுகிலும் திருவரங்கப்பெருமாளரையர் இசையுடன்பாட, பின்பு இயலாகவும் அநுஸந்தி$_4$த்து, தி$_3$வ்ய கீ$_3$தந்ருத்தவாத்$_3$யத்துடன் திருவீதியிலே இயலாகத் திருவிருத்தம் அநுஸந்தி$_4$த்துக்கொண்டு வலம் வந்து, திருமாளிகை வாசலிலே இயல்சாத்தி, தி$_3$வ்ய தைல தி$_3$வ்யசூர்ண தி$_3$வ்யமால்யாதி$_3$களையும் பெருமாள் திருமஞ்சநம் பண்ணி சாத்திக் களைந்து வரவிட்ட பட்டுப் பரிவ(ய)ட்டத்தையும் ஆளவந்தாருக்குச் சாத்திஅலங்கரித்து, ஆளவந்தார் திருமேனியிலே சாத்தி, தத்ப்ரஸாத$_3$மாய் ஶேஷித்த எண்ணெய் ஸ்ரீசூர்ணப்ரஸாத$_3$ங்களெல்லாம் திருவரங்கப்பெருமாளரையர், நம்பி முதலானோர் ப்ரஸாத$_3$ப் பட்டு, அப்போதையிருப்பை அகவாயிலே ஶோப$_4$ாஶ்ரயமாகத் தேக்கிக்கொண்டு ஸ்ரீபாத$_3$த்திலே விழுந்து திருவடிகளைத் திருக்கண்ணிலும் திருமார்புகளிலும் திருமுடிகளிலும் த$_4$ரித்துக்கொண்டு l அவர் ப்ரபத்தியை அநுஸந்தி$_4$த்து, திருமிடறு தழுதழுப்பத் திருமேனிகள் வாட, l$_2$ திருமுத்து வீழ, திருமூச்சு(மூக்கு) வெப்படிக்க, ஆசார்ய விஶ்லேஷா ஸஹிஷ்ணுக்களாய், ஆர்த்தராய், பரவஶராக; மற்றும்

---

யற்ற புதுப்பொரி. | தங்கத்தட்டு. k குற்றமற்றதான ஆளவந்தாரின் சரம திருமேனி. l "ஸ்ரீமத்$_3$ யாமுநசரணௌ ஶரணம் ப்ரபத்$_3$யே ஸ்ரீமதே யாமுநாய நம:" என்பது ஆளவந்தார் ப்ரபத்தி. l$_2$ கண்ணீர்.

அங்குள்ள முதலிகள் வந்து இவர்கள் திருக்கண்களைத் துடைத்து ஆஶ்வஸிப்பித்துத் தேற்ற, வ(மெ)ன்மையிலே மெள்ளப்பாடாறித் தேறிநின்று m பீட,யாநத்திலே ஆளவந்தாரை ஏறியருளப்பண்ணி m$_{2}$ அநுஸந்த$_{4}$ாநத்துடன் ஸ்ரீபாதந்தாங்கிக்கொண்டு திருச்சங்கு பரிமாற, தி$_{3}$வ்ய வாத்$_{3}$யங்கள் எங்கும் முழங்க, வேத$_{3}$பாராயணம் பண்ண, இயலருளிச்செய்ய, நடைபாவாடையிட, கரும்பும் குடமுமேந்த, பொரியும் புஷ்பமுமெங்குஞ் சிதறி, திருப்பதியில் ஸுமங்க$_{3}$லிகள் மங்க$_{3}$ளதீ$_{3}$பமேந்தி முன்னேசெல்ல, இருபக்கமும் சாமரமிரட்டிக்க, n வெள்ளைவட்டமிட, த$_{3}$ர்ஶநத்தில் ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருளினரென்று ஒற்றைத் திருச்சின்னம் பரிமாற, திருவீதிகள்தோறும் வலம்வந்து, திருக்கரம்பன் துறைக்கு எழுந்தருளுவித்துக் கொண்டுபோய், ஒழிந்த ஸங்கர்ஷண கும்ப$_{4}$ பூர்ண ஜலங்கொண்டு m$_{2}$ அநுஸந்த$_{4}$ாநத்துடன் தி$_{3}$வ்யஸ்த$_{2}$லஶுத்$_{3}$தி$_{4}$ பண்ணி, யதிஸம்ஸ்காரவித்$_{4}$யுக்தமான படிகளடங்கச் செய்து, o க$_{2}$நித்துப் பள்ளிப்படுத்துகிறவளவிலே, இளையாழ்வார் ஆளவந்தாரை ஸேவிக்கவேணுமென்னும் பேராசையோடே பெருமாள்கோயில்நின்றும் வந்து ஆளவந்தாரைத் திருமேனியுடன் ஸேவிக்கப் பெற்றிலேனென்று அந்தச் சரமவிக்$_{3}$ரஹத்தை ஸேவித்து 'இவ்வளவாகிலும் பெற்றேனே' என்று அந்த விக்$_{3}$ரஹத்தை த்$_{4}$யாநவிஷயமாக்கிக்கொண்டு, 'ஆளவந்தார்க்கு நான் ஏகலவ்யன்' என்று p "யத்பத$_{3}$ாம் பே$_{4}$ாருஹத்$_{4}$யாந" என்று ஆளவந்தாருடைய சரணகமல த$_{4}$யாந தத்பரராய்க்கொண்டு பெருமாள்கோயிலுக்கு மீண்டு எழுந்தருளினர் என்று அருளிச்செய்வர்கள்.

---

m ப்$_{3}$ரஹ்மரத$_{2}$ம். m$_{2}$ "அவர் ப்ரபத்தியின்" என்று சேர்த்துக்கொள்க. n வெள்ளை வஸ்த்ரம் வட்டமாகச்சுழல "த$_{3}$ர்ஶன ஸ்த$_{2}$ாபகரான ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளினர்" என்று ஒற்றைத் திருச்சின்னம் ஊத. o பள்ளம் வெட்டி, p "யத் பத$_{3}$ாம்பே$_{4}$ாருஹத்$_{4}$யாந வித்$_{4}$வஸ்தாஶேஷகல்மஷ:। வஸ்துதாம் உபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம்॥" [எவருடைய திருவடித்தாமரையை த்$_{4}$யானிப்பதால் எல்லாக் குற்றங்களும் நீங்கப்பெற்று அடியேன் ஒரு பொருளானேனோ அத்தகைய யாமுநாசார்யரை வணங்குகிறேன்.] இது கீ$_{3}$தாப$_{4}$ாஷ்யத்தின் தொடக்

q சரமோபதேஶம், சரமநியமந, சரமதஶாநுவர்த்தந விஶேஷ, சரமகாலப்ரபோதந, சரமகாலவயாவ்ருத்த ஸங்கமநங்களாகிற சரமதஶாஜ்ஞாநாநுஷ்டாநகரமசாதுர்ய மூள்ளது பரமாசார்யரான இவர்க்கேயிறே.

பிள்ளைபழகியபெருமாள் ஜீயர் திருவடிகளே ஶரணம்.

வார்த்தாமாலை ஸம்பூர்ணம்.

---

கத்தில் எம்பெருமானர் பொறித்து வைத்திருக்கும் ஆளவந்தார் தனியன். q 1 ஶிஷ்யர்களுககுக் கடைசியில உபதேஶம் செய்தது. 2 அவர்களுக்குக் கடைசியில் நியமனஙகளைச் செய்தது. 3 சரமதஶையில் பாகவதர்களிடம் ஸ்ரீபாததீர்த்தமும் கொண்டது, அபசாரக்ஷாமண ப்ரார்த்தனை முதலானவை. 4 சரமதஶையில் தெளிநத அறிவோடிருத்தல். 5 கடைசி காலததில் விலக்ஷணமான ரீதியில் ஆநந்தத்துடன் திருநாடடுக்கு எழுநதருளுதல் எனனும் சரமதஶாஜ்ஞானம் அதற்குரிய அநுஷ்டானம் ஆகியவற்றில சிறப்புள்ளது பரமாசார்யரான ஆளவநதாருக்கேயாகும்.

ஸுதர்ஶன பதராதபனை

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி தாஸன இயறறிய வார்ததாமாலை அருமபத விவரணம நிறைவுறறது.

